பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

# சீறாப்புராணம்.

எட்டையாபுரத்திராஜசமஸ்தான வித்வான்
உமறுப்புலவரவர்களாற்
செய்யப்பட்டது.

---

காயற்பட்டணம்
ஷைகப்துல்காதிர் நயினார்லெப்பை
ஆலிம்புலவரவர்கள் பரிசோதித் தச்சிட்ட
பிரதிக்கிணங்க
கண்ணகுமதுமகுதூமுகம்மதுப்
புலவரவர்களாற் பார்வையிடப்பட்டதை

சென்னை, திருவல்லிக்கேணி,
மொ. அ. ஷாஹுல் ஹமீது லெப்பை
அவர்களால்.

தனது,
ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1929.

இதன் விலை] ரூ. 3.12.0



பிஸ்மில்லாஹிர்.

# சீறாப்புராணம்.

## முதலாவது

## விலாதத்துக்காண்டம்.

காப்பு.

திருவுருவாயுணருருவாயறிவினொடுதெளிவிடத்துஞ்சிந்தியாத [பாவு
அருவுருவாயுருவுருவாயகம்புறமுந்தன்னியலாவடங்காவின்பத்
தொருவுருவாயின்மையினிலுண்மையினைத்தோற்றுவிக்குமொளியா
மருவுருவாய்வளர்காவன்முதலவனைப்பணிந்துள்ளிவாழ்த்துவாமே.

### கடவுள் வாழ்த்து.

திருவினுந் திருவாய்ப்பொருளினும் பொருளாய்த் தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த, மருவினு மருவாயணுவினுக் கணுவாய் மதித்திடாப் பேரொளியனைத்தும், பொருவினும் பொருவாவடிவினும் வடிவாய்த் பூதலத்துறைந்த பல்லுயிரின், கருவினுங்கருவாய்ப் பெருந்தலம்புரந்த கருத்தனைப் பொருத்துதல்கருத்தே. (1)

சிறந்த மெய்ப்பொருளை யழிவிலாமணியைத் தெரிந்துமுக்காலமுமுணர்ந்து, துறந்தவரி தயாசனத்திருந்தவனைத் தொடரின்ப துன்பமற்றவனைப், பிறந்த பல்லுயிரின் மனத்தளவுறைந்து பிறப்பிறப்பென்றில்லாதவனை, மறந்தவர் சுவர்க்கப் பதியையு மறந்துமண்ணினின் மதிமறந்தவரே. (2)

இருவிழி சிவந்து கனற்பொறி தெறிப்ப வெடுத்தகைக் கதையினுலுறக்கி, வருமவரெதிர்நின்றொரு மொழிகேட்ப மறுமொழிகொடுத்திடவறியேன், றருமமும் பொறையுமறிவுமற்றறிந் தூன்றன்னையு மென்னையுமறியப் பெருவரந்தருவாயாதி நாயகனே பேதியாச்சோதி மாமுதலே. (3)

கடலினை மலையைக்கதிர்மதி யுடுவைக் ககனமற்றறுஷொடுகுறு சைப், புடவியைச்சுவனப் பதியினையமரர் பொருந்திட மடுக்கடுக்க வையை, வடிவுறத்தனது பேரொளியதனால் வகுத்துவெவ்வேறென வமைத்தே, யுடலினுக்குயிராயுயிரினுக் குடலாயுறைந்த மெய்ப்பொரு ளினைப் புகல்வாம், (4)

வேறு.

அருமறைதெரிந்து நீதிநெறி முறைநடந்து தீனிவ்வகிலதல மெங்குமீறவே, யொருகவிகைகொண்டு மாறுபடுமவரை வென்று நாலுமுறுபுகழ் சிறந்த வாழ்வுளோர், திருவொளிவெனும் ஹபீபு நபி முகம்மதன்றுவானர் சிரமிசைநடந்துசோர்வுறு, விருசரண நம்பினோர் கள் வரிசைகணிறைந்த பேர்களெவரினு முயர்ந்தபேர்களே. (5)

வேறு.

கவியாலுரைத்த புகழ்பெறுவார் மிகுத்தகவியடைவார் கலக்க மறவே, செவியார மெய்ப்பொருளை யறிவார்மனத்தி னுறுசெயல் கேடகற்றிவிடுவார், புவியாரமொய்த்த நெறிமறை நாலினுக்குமொரு பொரியாயுதித்தவடிவார், நவியார்சுவர்க்கபதி நபினார்பதத்துணையை நடுநாவில் வைத்தவர்களே. (6)

வேறு.

ஆதிதன்கிருபைதாங்கியகிலமீதாசுவைகித்
தீதிலாச்சோதிபோலத்தீன் பயிர்விளக்கஞ்செய்தே
மூதறிவுடையானமுறுசலீன்களையெந்நாளும்
போதரவுடனேபோற்றிப்புந்தியின்மகிழ்ச்சிசெய்வாம். (7)

வேறு.

தாராதரத்தையேமேலகவிக்கவேதாடாண்மைபெற்றநபினார்
போராயுதிக்கவேவானோருரைக்கலேபேறுய்விளக்குமுரவோ
ராராய்வின்மிக்கபேர் னூறாயிரத்துநாலாறாயிரத்துநபிமார்
மாராயமிக்கபேர்வாயாரவைத்தபேர்வாழ்வார்சுவர்க்கபதியே. (8)

வேறு.

புரசைக்கடககரிகணிரைதட்டறக்குபிரர்புவியைப்படக்கடவியே
சாகுற்றநற்பதவிவழியிற்புகுத்தியுயர்தலைமைக்குவைத்தபெரியோர்

பிரசத்துளித்திவலைசிதறிக்கிடக்குமிருபிணையற்புயத்துநயினு
ராசுக்குவைத்தநெறிவரிசைக்குமிக்கதுரையபுபக்கரைபுகலுவாம். 9

வேறு.

அமரி லெதிர்த்தோர்க ளாவி யெமதிசையைத் தேடியோட வடரு
மடற்சூரவீரவேள், மமதைகெடச்சாதி நீதிமுறைமைதனக்காக வோது
மகனை வதைத்தொரொருமலே, திமிரபகைப் பானுமேனி கருகிவிடப்
பார்வையேவு தெரிமறையிற் காரணிகனு, ருமறுதிருத்தானை நாளுமன
தினினைத் தோதுவோர் தம்முரிய தவப்பேறு மீறுமே. 10

வேறு.

விதுமாறவொளிவானவதனுதிநபிநாவில்விளைவானதிருவேதமே
பதிவாகவொருசேகரமதாகநிலமீதுபயிராகவுரைதூவினோர் [வோ
சதுமாமறையினோர்கள்பெரியோர்கள்சிறியோர்கடமதாவியெனவாழு
ருதுமானையொருகாலுமறவாமலிருகாலுமுளமீதுநினைவாமரோ. 11

வேறு.

படிகிடுகிடென நாகமுடிநெறுநெறென வாரிபடுதிரையளறதாக
வே, வடவரையசையவான முகடுடைபடவருதமழைமுகிலசிதறியோட
வே, யடையலாகெடிகள்கோடி பிடிபடுபடலதூளியலரியினுடலின்மூழ்
கவே, நடமிடுகடினவாசிமிசை வருசமரசூரநராபுலியலியை யோதுவாம்
நலிவறவுலகநீதிநெறிமுறைபெருகநாளுநமருபிரியகாவலா
யொலிகடலுலகமீதுதெரிதரவரியநீனுமுறுகதிருமையமாகவே
மலிபுகழரசாசியமிராகஸ்தநறைகுலாவுமறைநபிமருகராகிவா
ழலிதிருமதலைபானவசனுசைனுபயபாதமனுதினமனதிலோதுவாம். 13

வேறு.

ஆலகாயிவாக்போலுமாகொடீரமாகிய
காலகேள்விதானடாதகாரணீகாளவே
தாலமீதிலாகிதூதர்சாரமேவுவாழ்வினோர்
நாலொடாறுபேர்கள்பாதநாவினுளுமோதுவாம். 14

வேறு.

ஆதமீன்றமனுநீதியாண்டமுறையாலுமோங்குபுகழாகினோர்
ஆதாரங்கடவுணுவிலாய்ந்தமறைதூவிநான்குமத்ஹபாகினோர்
நீதவான்களூறுபோதவான்கள்குருநேர்மையாந்தகைமையாகினோர்
வேதவான்களெனுநாலிமாம்கள்பதமேலுமியாம்புகலவேணுமே. 15

வேறு.

உரமுறுதீன்பாரெல்லாமொளிரவேவிளக்கஞ்செய்யும்
தூரமுறுமவுலியாவாய்த்தோன்றினபேர்க்குமேலாம
வரமுறுமுகியித்தீன்செம்மலரடிபிரண்டுமென்றன்
சிரமிசையிருத்திவாழ்த்திச்செந்தமிழ்ப்பனுவல்செய்வேன். 16

நம்மையாளுடையான்வேதநபிதிருவசனந்தீனோர்
சம்மதித்திடப்பாரெல்லாந்தழைக்கவேவிளக்கஞ்செய்தோ
ரிம்மையுமறுமையும்பேறிலங்கியஸதக்கத்துல்லா
செம்மலரடியிரண்டுஞ்சிந்தையிலிருத்தினேனே. 17

வேறு.

திக்கனைத்திலும்பாரினுந்தீனினுஞ்செங்கோல்
புக்கநன்னெறித்திகரிமன்னவர்கண்முன்பொருந்தத்
தக்ககூலியுஞ்செம்துணவறிகிலான்சரிபோன்
மிக்கசெநதமிழ்ப்புலவர்முனியான்விளம்புவதே. 18

படித்தலத்தெழுகடல்குலகிரிநிலைபதற
வெடுத்துவீசியசண்டமாருதத்தினுக்கெதிரே
மிடித்துநொந்தசிற்றெறும்பெருமூச்சுவிட்டதுபோல்
வடித்தசெந்தமிழ்ப்புலவர்முனியான்சொலுமாறே. 19

அடியடித்தொழும்வழுவலால்விதிவிலக்கறியேன்
படிபடித்தசெஞ்சொற்புலவோர்முனம்பகர்ந்த
விடிபிடித்திடுமாரவாரத்தினுக்கெதிரோர்
நொடிநொடிப்பதுபோலுமொத்திருந்ததென்னூலே. 20

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

# நாட்டுப்படலம்.

தருங்கொடைநபினார்கீர்த்திசகமெலாம்பரந்துமிஞ்சி
நெருங்கியேவிசும்பிலண்டமுகடுறநிறைந்தவேபோ
லிருங்கணவெள்ளைமேகமிரைபசுங்கடல்வீழ்ந்துண்டோர்
கருங்கடலெழுந்ததென்னக்ககனிடைசெறிந்துமீண்ட. (1)

வேறு.

அகிலமெங்கணுந்திடுக்கிடவாய்திறந்ததிர்ந்து
மிகுமழைக்குலமடிக்கடிவிழிப்பபோன்மின்னிக்
ககனமெண்டிசையடங்கலும்பரந்துகாலூன்றிச்
சிகரபூதரமறைதரச்சொரிந்தனசெருமி. (2)

அதிருமாமழைத்துளியிடையிடையணியணியாய்
முதிருமிந்திரகோபமுமாலியுமுதிரந்த
கதிர்செய்முத்தமுமாணிக்கராசியுங்கலந்தே
யுதிரும்வண்ணமொத்திருந்தனகிரியொருங்கொருங்கே. (3)

பம்மியெங்கணும்பொழிதருசாரல்வாய்ப்பட்டுக்
கம்பினத்தகடுறக்கொடுகியகுளிர்கலக்க
மும்மதக்கரிகளுமரிகளுமுரணறவே
சம்மதித்தொருபுடைகிடப்பனவெனச்சாரும். (4)

தநதிமான்மரையணில்கொடுவரிதகருடும்பு
மநதிசிங்களங்கவரிமாவழுங்குதேவாங்கு
முநதுமானமதமெண்குசெநநாய்பணிமுண்மா
நத்திமிஞ்சியவிலங்கினங்கொடுகிமெய்நடுங்கும். (5)

வேங்கைசந்தனஞ்சண்பகம்நெல்லிவேய்தான்றி
கோங்கசோகுதேக்காசிணிபாடலங்குறிஞ்சி
நாங்குகாரகில்குங்குமமிலவுநாரத்தை
தாங்கும்வேரறவரையோடுவரையிடைசாய்க்கும். (6)

விலங்கினங்கடங்குலத்தொடுங்குழுவொடும்வெருட்டிக்
கலங்குமஞ்சிறைப்பறவைகளனைத்தையுங்கலைத்தே
யிலங்குபைங்கனிசிதறிடத்தருக்களையிடறி
நலங்கொள்பைங்கதிரக்கிரியிடைசரிந்ததுநாரம். (7)

வேறு.

வரிவிழிச்செவ்வாய்க்குறத்தியரிதனு
மனையையுந்தினை னயயும்வாரிப்
புரிநரம்பிசையாழ்தொண்டகப்
பறையும்பொடிபடத்துறுகலின்மோதி
விரிதலைக்குறவர்குழாத்தொடும்
வெருட்டிவிளைந்தமுக்கனிசதகோடி
சரிதரவீழ்த்திமரதகக்கிரணத்
தடவரைபருவிகொண்டிறங்கும் (8)

மலையெனுமாசன்புயங்களைத்தழுவி
மகிழ்ச்சிசெய்தவனுழைச்சிறந்த
நிலைகெழுபென்னுமுராகசைம்
மணியுநித்தில ராசியுங் கவர்ந்து
தொலைவிலாப் பண்டமனைத்தையும்
வாரிச் சுருட்டியே யெல்லை விட்டகலும்
விலைமகள் போன்றுப் பலபல
முகமாய் வெள்ளரு வித்திரள்சாயும். (9)

வேறு.

தாதுகுத்து வண் டார்த்தெழத் தருத்தலை தடவி
வீதிவாய் நுரைதரவருபா கெழவீசிக்
காதுமாகளிறென நதிகழைக் கடங்காது
மோதிக்கா விறைலெறியே யனையிட முறிக்கும். (10)

பரந்தவெண்ணுரைத்துகிலுடுத்துகிலுத்தறற்குழல்பாப்பி
விரைந்துபாய்கயல்விழியெனத்திரைக்கரம்வீசிக்
சுரந்தபுற்புதத்தனத்துடன் சுழியுந்திதோற்றப்
பொறுந்துமானதிவிளங்கிழைமகளிரைப்போலும். 11

கிடந்தசந்தனங்காரகில்கிளைமணிகரிக்கோ
டுடைந்தமுத்தம்வெண்டந்தமுச்சுடரொளியொதுங்கக்
கடந்தசெம்மணிப்பையுடன்கொடுகடலேற
நடந்தவாணிகரொத்ததுசெழுங்கழைநதியே. 12

வே று.

இத்தகைக்குறிஞ்சிநிலத்திணைக்கடந்தே
யெரிதழற்பாலையிற்புகுந்து
மைத்தடங்கூந்தற்கருவிழிச்செவ்வா
யெயிற்றியர்வயிறலைத்தேங்கக்
கைத்தலத்தேந்துகுழந்தையுஞ்சிறுரும்
வேடர்தங்கணத்தொடும்வெருட்டி
முத்தணிசிறப்பவிருகரைகொழித்து
முல்லையிற்புகுந்துசலிலம். 13

பாறயிர்நறுநெய்க்கலத்தொடுங்கலக்கிப்
பட்டியுங்குட்டியுஞ்சிதறிச்
சூறையிட்டுதறிநெய்முடைகமழுஞ்
சுரிகுழற்றெருறுவியருடுத்த
கூறையுங்குழலுங்குடக்கையுந்தடுக்குங்
கொண்டெடுத்தவர்நிரைசாய்த்து
வேறரையரைப்போற்பெருவளங்கவர்ந்து
மருதத்திற்பாந்ததுவெள்ளம். 14

வே று.

கன்னன்மானதிவெண்டிரை நுரைகரைபுரளத்
தென்னிலைப்பகுப்பாகியகாலெலாஞ்செருமி
யன்னமென்சிறைப்பெடையொடுங்குடம்பைவிட்டகலத்
துன்னுமேரியுந்தடங்களுநிறைந்தது தோயம். 15

அலையெறந்திரைகடலெனவருநதியதனைத்
தொலைவின்மள்ளர்கள்குளந்தோறுய்புகுத்தியதோற்றங்
கொலைமதக்கரிகுழுவினைவயவராய்க்கொடுபோய்
நிலைதரித்திடப்படுசூழ்படுத்தவைநிகர்க்கும். 16

தடமுமேரியும்வாவியுங்களினியுஞ்சலசக்
கிடங்குமெங்கணுநிறைதரப்பெருகுகிலாலங்
குடம்மையின்பலபேதமாகியசதகோடி
யுடம்புதோறினுமுயிர்நின்றநிலையினையொக்கும், 17

வேறு.

ஏரியையுடைத்துக்குளங்கரைதகர்த்தே
  யிடிபடவணையினைமுறித்துச்
சேரியுட்பரந்துகொல்லையுட்புகுந்து
  செழுங்கருப்பாலையைச்சாய்த்து
வேரியஞ்சலசக்கழனியையுழக்கி
  விரிதலையரம்பையைத்தள்ளி
வாரியிற்செந்துபனை யெலாநிரப்பி
  மட்டிலாமலிந்ததுவணமே 18

வேறு.

அலையெறிந்திருகரைவழியொழுகுகம்பலையுங்
கலையும்வெள்ளனஞ்சிறைவிரித்தசைத்தகம்பலையு
மலைதிறந்தனமதகின்வாய்வழிந்தகம்பலையும்
சிலைதரித்தபேரொலிபெரும்படையொலிசிறக்கும். 19

முறைமுறைக்கிணைப்பறையொலிகடலெனமுழங்க
நிறையுஞ்சேரிவிட்டெழுந்தனருபவர்கணெருங்கிச்
செறிகடக்களிறினமெனவயின்வயின்றிரண்டு
மறிபுனற்கரைமிடங்தொறுஞ்செறிந்தனர்மலிந்தே. 20

மட்டு வாய்வயி றூரவுண் டெண்ணிலா மள்ளர்
கொட்டு வாங்கியே யிருபுயங் குலுங்கிடக் காண்கள்
வெட்டு வார்சிலர் மென்கரத் தேந்தியே வரம்பு
கட்டு வாரடைப் பார்திசை தொறுங்கணக் கிலையே. (21)

வேறு.

தெரிபொறி முசட்டுக் கவட்டடி யலவன் சிதைந்திடக் கமடமுள் ளாழ்ந்த, வரிவளை நெரிய வலம்புரிக் குலத்தின் வயிற்றிடை கொழுமு கந் தாக்கி, விரிகதிர்த் தரள மணிபல வுகுப்ப வெருண்மத கவையடிப் பேழ்வாய், நிரைநெறி மருப்புக் கரும்பக டிணக்கி நீள்வய லெங்கணு முழுதார். (22)

முள்ளரைப் பசுந்தாள் வட்டிலை கமல முகையுடைந் தொழுந் தேன் றெறிப்பக், கள்ளவிழ் குவளை யொருபுறஞ் சரியக் கடிமலர்க் குமுதமு மடிய, மள்ளர்காற் சேற்றி லிடறிய பதும மணியின மலரா

யெழுப்ப, வெள்ளநீர் பரப்பு கழனிக டோறு மென்கருஞ் சேறுசெய்தனரே. (23)

சுந்தரப் பொறியஞ் சிறையறு காலே ழிசையளி தொகுதியிற் கூடி, மந்தர மனைய தருவின்மேல் வீழ்ந்து வாய்விட முழங்கிய வோதை, கொங்தெறி கமலங் குமுதஞ்செங் கழுநீர் குடியொடு மடிந்தன வினிமே, லந்தர மலது வேறிட மிலையென் றழுகுரன் மயங்குவ போலும். (24)

சுரும்பின மிருந்து தேனுண்டு தெவுட்டிச் சுருதிசெய் பன்மலர் சிறந்த, விரும்படி கிடங்கிற் கிடந்துழைச் செறிந்த வெருமையின் கவைமடிப் பருஉத்தா, ணிரம்பிடப் பதிந்த சஞ்சலத் தாள நீணிலா வெறிப்பது நிறைந்த, கரும்பொறிக் கவைநாத் துளையெயிற் றரவு கவ்விய கதிர்மதி போலும். (25)

கலன்பல வணிந்து தொண்டியுண் டெழுந்து கதிரவன் றனைக்கை யாற்றொழுது, குலநதரு தெய்வ வணக்கமுஞ் செய்து குழுவுட னுழுநர்கள் கூண்டு, நிலந்தனை வாழ்த்தி வலக்கரங் குலுக்கி நென்முளை சிதறிய தோற்றம், பொலன்பல சிறப்பு விடனற நெருங்கிப் பொன்மழை பொழிவது போன்றும். (26)

படர்மருப் பெருமைக் குடம்புரை செருத்தற் பருமுலைக் கண்டிறந் தொழுகி, நடைவழி சொரியு மமுதமும் வாழை நறுங்கனி யுகுத்தசெந் தேனு, முடைபடு பனசப் பசுங்கனிச் சுளையி லூற்றிருந் தோடிய தேனுங், கடிமலர் போர்த்த வரம்பினைத் தகர்த்துக் கழனியிற் பரந்துபாய்ந துடைக்கும். (27)

அருமறை நெறியும் வணக்கமுங் கொடையு மனபுமா தரவுநல் லறிவுந், தருமமும் பொறையு மிரக்கமுங் குணமுந் தயவுஞ்சீ ரொழுக்கமு முடையோர், பெருகிய செல்வக் குடியொடு கிளையும் பெருத்தினி திருந்துவாழ் வனபோன், மருமலர்ப் பழனக் காடெலா நெருங்கி வளர்ந்தது நெட்டிலை நாற்றே. (28)

கோதற வெழுந்த நாற்றினைப் பறித்துக் குவித்திடு முடியிட
[illegible]த்துத், தீதுறுங் கருங்கட் செய்யவாய் வெண்பற் சிற்றிடைக் கடை
வாரிப், பூதரமனைய சுணங்கணி முலையிற் புள்ளியிற் சேதகம்
ப்ப, வாதரம் பெருகி நிரைநிரை வடிவா யணியணி நாற்றினை
(29)

கையினிற் செறிந்த முடியினைச் சிதறிக் கடைசியர் காங்கொடாட்
டொழுங்காய்ச், செய்யினிற் பதிப்பத் துளிகருஞ்சேறு தெறித்திடுஞ்
செழுமுகச் செவ்வி, துய்யவெண் டிரைப்பாய் சுருட்டிமே லெறியுந்
தொடுகடன் முகட்டிடை யெழுந்து, வையகஞ் சிறப்ப வருமுழுமதியு
மறுவுமொத் திருந்தன மாதோ. (30)

பனைமதுத் தேக்கி யிருவிழி சேப்பப் பைங்கழை நிகர்த்த தோள
சைய, வனநடை சிதையச் சேவடி பெயர்த்திட் டள்ளலஞ் சேற்றிடை
நடுவோர், சினமத கரிக்கோ டெனுமுலைத் தடத்திற் சேதகந் தெறிப்
பது திரண்ட, வனசமென் முகையிற் பொறிவரி யறுகால் வண்டுமொ
ய்த் திருப்பது போலும். (31)

முற்றிழை கிடந்த முலைக்குவ டசைய முகிறவழ் கருங்குழ னெகி
ழச், சிற்றிடை யொசிய மதிமுகம் வெயர்ப்பச் சேற்றிடை நாற்றினை
நடுவோர், பற்றுமென் கரத்திற் கரும்பொனின் கடகம் பசியநெற் பயி
ரொளி பாய, மற்றெனை யுரைபப விரிகதிர் பரப்பு மரகதக் கடகமொத்
திருந்த. (32)

வெறிமது வருந்தி மரகதக் கோவை மெனபிடர் கிடந்து நண்
டசையக், கறுவிய மனத்தோ டினத்தொடு மிகலிக் கடைசியர் களிப்
பொடு தவளச், சிறுநகை தரளப் பவளமெல் லிதழிற் செழுமலர்க் கை
விரற் குவித்துக், குறிகுரற் குரவை கூன்பிடர்ப் பேழ்வாய்க் குடவளைக்
குரவையோ டிகலும். (33)

கூந்தலம் பிடிமா மென்னடை பயிலுங் குடமுலைக் கடைசியர்
செழுங்கைக், காந்தண்மெல் விரற்குங் கடுவரி விழிக்குங் கடைந்
திணைக் கியகணைக் காற்குஞ், சேர்ந்தினைபொருவா தினமென வெருவிச்
செங்கயல் வரிவராற் கெளிறு, பாய்ந்தயல் போய வனத்திடை யொளி
துப் பங்கமெப் படப்பயப் படுமே. (3

குருகின மிரியப் புள்ளினம் பதறக் கொக்கினம் வெருவிட
வெகினம், விரிமலர்க் கமலப் பாயல்விட் டகல மென்சிறைப் பெடை
யனந் துடிப்பச், சொரிமதுத் துளித்துக் குவளைவாய் சிதறச் சுருட்டி
வால் வுசைத்திடத் துள்ளி, வரிவராற் பகடுவளைநில வெறிக்கு மடைக்
தலை கிடந்துழைச் செறியும். ([illegible])

வரிசையிற் செறிந்த நீரைபசுஞ் சாலி வளர்கிளைக் கிளையெ
கிளைத்துப், பெருகுசூன் முதிர்ந்தன முரமு துறைந்து பிடர்குனி

குலை சேர்ந்து, சொரிகதிர்ப் பவள நிறம்பல படைத்துச் சுடர்மணி முத்
தினந் தெறிப்பத், தரையினிற் படிந்தே யருட்கடை சுரந்த தருவினம்
வெருவிடக் கிடக்கும். (36)

கொத்தலர் சூடியரைத்துகி லிறுக்கிக் குடமதுக் கைமடுத் தரு
ந்தி, மைத்தவழ் கனகக் கிரிப்புயந் திரண்ட மள்ளர்கள் வனப்பினுக்
குடைந்த, சித்தசன் கரவாட் பறித்ததை வளைத்த செயலெனப் பிளை
வெண்பிறைவாட், கைத்தலத் தேந்திக் கழனியிற் புகுந்து கதிரரிந் தரி
நிரை யிடுவார். (37)

திருந்திய வரியைக் கொடுங்கையிற் கிடத்தித் திரைசெய்து சும்
மையிற் சேர்த்துக், கருத்தடங் கூந்தற் செவ்வரி வேற்கட்கடைசியர்
குழாத்தொடுந் திரண்டு, விறிந்தசெங்கமலக் கரம்பல வருந்த விசித்
திறுக்கியசுமை யேந்திப், பொருந்திய வரப்பி னெறிகடைக்கதலிப் புலி
யடி குலைதலை சாய்க்கும். (38)

அசைந்தசிற் றிடைமென கொடிவருந் திடநீளணிவட மார்பிடை
புரளப், பசுங்கிளிப் பரிவேள் படையெனத் திரண்ட கடைசியர் சுமை
யெலாம் பரப்பி, யிசைந்திட நிறைத்துக் குவித்த நெற்போர்க ளெங்
கணு மிலங்கிய தோற்றம், விசும்பினைத் தடவ வரசத கோடி வீற்றி
ருந் தனவெனச் சிறக்கும். (39)

கார்த்தடக் களிற்றின் வனப்பினை யழித்த கருங்கடா வினம்பல
வினைத்துப், போர்த்தலை திறந்து திரித்துவை நீத்துப் பொன்னிறச்
செந்நெலைக் குவித்துச், சேர்த்திடுஞ் சகடந் தொறுந்தொறு மியற்றித்
திரண்மனை வயின்வயின் செறிப்பா, ரார்த்தபே ரோதையினமணி
கொழிக்கு மறைதிரைக் கடலினைப் பொருவும். (40)

செந்நெலிற் பெருக்கின் கனைகிரற் சகடந் திசைதொறு மலிந்தன
செறுக்குங், கன்னலங் கழனி புகுந்தறுத் தடைந்த களமர்க ளொலி
குரற் செருக்குந், துன்னுபூங் கமுக சிதறுசெம் பழுக்காய் சுமப்பவர்
கம்பலைச் செருக்கு, மன்னவன் வருதைத் துரையபுல் காசீம் வளம
னைச் செருக்குமொத் திருக்கும். (41)

வேறு.

கால வட்டவாய் முளரியி லூறுகள் ளருந்திக்
கோல வட்டவஞ் சிறையளி குழுவுடன் பாடுஞ்
சோலை வட்டவாய் மயிலினஞ் சூழ்ந்துகார் நீல
வால வட்டமொத் திருந்தமென் சிறைவிரித் தாடும். (42)

அரக்கெறிந்தசெவ் வாம்பல்வா யணியிழை மடவார்
நெருக்கி யிட்டகாற் சிறம்பொலி விசும்புரநிமிர
விருக்கும் வாவியுட் பெடையன மிடர்கொலென் றிரங்கித்
தருக் கிழந்துதன சேவல்வாய்த் தொனியெனத் தயங்கும். (43)

நலங்கொடாமரை முகமலர் தாநறுங் குவளை
விலங்கி வள்ளையில் விழியெனக் கிடப்பமெல் லரும்பு
துலங்கு மென்முலை தோன்றிடப் பச்சிலைத் துகில் போர்த்
திலங்கும் வாவிக ளணியிழை மகளிரொத திருநத. (44)

நிரைந்த சண்பகம் பாடலந் தடக்கரை நிரம்பச்
சொரிந்த பன்மலா வரியளி தோற்ற
மெரிந்தி லங்குபொற் கரையினை யிரும்பினு லிறுகப்
பரிந் தறைந்தசுள் ளாணியின் புறமெனப் பரந்த. (45)

தோட விழ்ந்துபூந் தாதுகக் குடைந்தினச் சுரும்பு
பாட வாவியு ளிளநிலாத் தோற்றியபாண்மை
சாடும் வார்புன லலைதரத் திரைகளிற் றத்தி
யோட மோடுவ தொத்திருந தனவென வொளிரும். (46)

வாய்ந்த மெல்லிழை மடந்தையர் தடத்தின மெய் வருந்தத்
தோய்ந்து நீகுடைந தாடுவோர் மதிமுகத் தோற்றஞ்
சேந்த கஞ்சபூங் குவளையு மெனவெழில் சிறந்த
கூந்தல் வெண்டிரைக் கடலிடை முகி லெனக் குலவும். (47)

திருந்து மெல்லிழை மடந்தையர் புனலிடை திளைப்பச்
சரிந்த கூந்தலி லிருந்தவண் டெழுந்துபூந தடத்தில
விரிநத காவியில வீழ்வது மின்னனா விருக்குப்
பொருந்து மோவெனச் சினந்துட னுதைப்பது போலும். (48)

மறிநது தூங்கிய நாவலின் கனியையோா மங்கை
யெறிநது பார்மது கரத்தினைக் கரத்தினு லெடுப்பப்
பறிந்து போதலிற் றுனிக்கினகை யுதறிமெய் பதறிச்
செறிந்து சூழ்தரச் சொரிந்தமைக் கனியையுந் தீண்டாள். (49)

கரிய மைவிழி மங்கையர் பூங்குழற் காட்டிற்
சொரியு மென்மலர்த் தாதுக ளுதிரநதன சுடர்மின்
விரியு மெல்லிழைப் பூணொடு பூண்பல மிடைந்து
பொரு துரிஞ்சதிற் பொற்படி யுதிரவன போலும். (50)

பிடித்த கொம்பிருந் தோடிமுட் குடக்கனி பிடித்துக்
கடித்த போதினிற் காம்பறக் கனியுடன் கவியும்
படித்த லத்தினில் வீழ்ந்திடப் பதறிமெய் பதைத்துத்
துடித்துத் தன்னுயிர்க் கடுவனை யணைத்துட றுணுக்கும் (51)

தாறு கொண்டபைங் கதலிதே மாப்பலாத் தருத்தே
னூறு கொண்டசெங் கனிசிறு கிடங்கிடை யுகுப்பச்
சேறு கொண்டதிற் கிடந்திருள் செறிகரு மேதி
வேறு கொண்டுபொன் மேதியின் குலமென விளங்கும். (52)

கள்ள விழ்ந்தபூம் பொய்கையிற் புள்ளினங் கலையத்
துள்ளு மேல்வரிக் கயலுண்டு நாரைகண் டேங்கு
முள்ள மன்புறச் சேவலின் சிறைநிழ லொதுங்கி
வெள்ள னப்பெடை தாமரைத் தவிசிலவீற் றிருக்கும். (53)

ஏல வார்குழற் கிடுபுகை மஞ்சினோ டிகலுஞ்
சோலை வாய்தொறு முக்கனித் தேன்மழை சொரியு
மாலை வாய்தொறுங் கரும்புடைத் தாறெடுத் தோடு
நீல வாய்மலா வாவிகள் பெருங்கட னிகாக்கும். (54)

தெரு ளுறும்படி தென்றுளி தெறித்திடச் சிதறிப்
பொரு தலைத்திடு மாங்கனி தேமகனிப் பொழிலே
மரு மணம்பெறு சந்தகில் சண்பக வனத்திற்
றரு வெனும்பெயர் பெறச்சிறந் தீந்திருந் தனவே. (55)

வேறு.

நிலைக்கும் பொற்பொருளை நிந்தனை மற்றோர் நிந்தனை சிந்தனை யிலையே, யினக்கருஞ் சுரும்பு மதுத்துளி யருந்து மிவையலான் மதுப் பிறி திலையே, சினககரி முனைக்கோட் டிளமுலைப் புலவி திருத்தும் பொய் யலதுபொய் யிலையே, வனக்கனி கறுத்த குலைக்களவலது மறுத்தொரு கொலைக்கள விலையே. (56)

நாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம்-2க்குத்-திருவிருத்தம் 76.





# நகரப்படலம்.

---

நிலங்க ளேழுக்கு நாவலந் தீவுநண் ணிகர்க்கு
நலங்கொ டவுக்குக் கண்மணி யறபுநன் ஞடே
புலன்கொள் கண்மணிக் குள்ளுறை யுயிரெனப் பொருந்தி
யிலங்கு மக்கமா நகர்வளஞ் சிறிதெடுத் திசைப்பாம். (1)

வேறு.

விரிகதிரெறித்த மணிவளை யுகுப்ப விரிதிரை யகழெனுந்தடத்தி, லெரிசிகைக் கிரணப் பதுமமா மணியி னினம்பல சூழ்ந்திருந்திலங்கப், புரிமுறுக் கவிழ்ந்த பொன்னிதழ்க் கமலம் பூத்திருந்தது வெனப் புரிசை, தெரிதரச் சிறந்து செல்வமுஞ் செருக்குந் திகழ்தர வீற்றிருந் ததுவே. (2)

வடவரைப் புடைசூழ் நிலத்தெழு தீவும் வரவழைத் தொருதலத் திருத்தித், தடமுடிக் கிரணத் திகிரிமால் வரையைச சதுர்தரப் புரிசையாய் நிறுத்தி, யிடனற நெருங்கும் பெரும்புறக் கடலை யிதற்கக ழெனப்பெய ரிட்டுப், படவா வரசன் றிருமுடி மணியைப் பதித்தது மக்கமா நகரம். (3)

கானகத் துறையும் வயிரவொண் கதிரோ கடல்படு நித்திலக்கதிரோ, தேனவிழ் பதும மணிக்கதி ரதுவோ சிறந்திடு மக்கமாநகரில், வானவர்க் கிறைவன் ஜபுறயீல் பலகால் வருதவா மெய்யொளி பாய்ந்தே, யினமினகாஞ் செழுங்கதிர பரப்பி யிருப்பது பிறிதலை றிலையே.

சரிகதி வேக மாருதஞ் சிதையத் தாவிய புரவியி னெலியு, நிரைமணி யுருட்டுப் பசுங்கதி ரிரத நெருங்கிட நடத்துபே ரொலியு, முரலடிச் சிறுகட் பெருமதப் பிறைகோட் டொருத்தலி னிடிமுழக்கொலியுப, விரிதிரைக் கரங்கொண் டறையுவாப் பெருக்கும் வெருக்கொளத் தெருக்கிடந் தொலிக்கும். (5)

மின்னிடை நுடங்கச் சிலம்பொலி சிலம்ப மேகலைத் திரண்மணிக் கதிர்செம், பொன்னெடு மிலங்க மறுகிடை புகுநத புனையிழைப் பிடிநடை மடவார், மன்னிய பதத்தி னலத்தக நிலத்தில் வரிபடக் கிடப்பன சிறந்த, துன்னிதழ்க் கமலம் பதத்தினை நிகர்ப்பச சுவட்டடி தொடர்வன போலும். (6)

கண்ணகன் ஞாலம் விலைசொலற் கரியகலைபல நிரைத்தலாற் பணி
யாற், றண்ணெனக் குளிர்ந்து பிறவுரு வமைத்துத் தரும்படி மக்கலப்
பெருக்கான், மண்ணினிற் சிறந்த நகர்த்திர வியத்தான் மரக்கலத்திறக்
கிய சரக்கா, லெண்ணிறந் தெழுநல் வளம்பல படைத்தங் கிருந்தது
கடைத்தெருத் தலையே. (7)

மான்மதக் குவையுஞ் சந்தனத் தொகையு மணிக்கருங் காழகிற்
றுணியும், பான்மதிக் குழவிக் குருத்தெனக் கதிர்கள் பரப்பிய மதகரி
மருப்புந், தேனமர்ந் தொழுகுங் குங்குமத் தொகையுஞ் செறிதலா
லுயர்ச்சியால் வளத்தா, லீனமி லிமையப் பொருப்பெனப் பனைத்தங்
கிருந்தது கடைத்தெருத் தலையே. (8)

தந்தியின் குழுவுங் குரகதத்திரளுந் தடவரை பொருவுதேர்க்
கணமுஞ், சிந்துரப்பிறைநன் னுதற்கருங் கூந்தற் செவ்வரித் தடங்கண்
ணார் நெருக்கும், வந்தவர்நினைத்த பொருளுமாரமிர்தும் வகை வகை
தருதலான் மணியு, மிந்திர தருவெம் வறிதென மதர்த்தங் கிருந்தது
கடைத்தெருத் தலையே. (9)

நிரைத்தபைங் கதிரார் மரகத மணியா னீணிலாக் கருப்புரத்தகட்
டாற், பருத்தசங் கினத்தால் வலம்புரிக் குலத்தாற் படர்கொடித் திரட்
பவ ளத்தால், விரித்தவெண் ணுரைப்போல் வெண்டு கிலடுக்கால் விரை
செறி யம்பரின் றிடரா, லிரைத்தபே ரொளியாற் பெருங்கட னிகரா
யிருந்தது கடைத்தெருத் தலையே. (10)

பைங்கடற் பிறந்து வணிகர்கை புகுந்த பருமணி நித்திலக்குவை
யுந், தங்கிய கிரண வனசமா மணியுந் தயங்கொளி வயிரரா சிகளுஞ்,
செங்கதி ரெறிக்கு மிரவியு மமுதச் செழுங்கதிர் மதியமு முடுவு,மிங்கி
வண் குடிபுக் கிருந்தது போன்று மிருந்தது கடைத்தெருத் தலையே. ()

அணிபெற வொழுங்காய் வயின்வயின் றிரண்ட வகிற்புகை முகி
லின மெனவுங், குணில்பொரு முரசப் பெருங்குரல் கிடந்து குழுமி
விண் ணேறெறி யெனவு, வணிவளைத் தடக்கைத் துவரிதழ் கனத்த
வனமுலை மின்கண்மின் னெனவுந், தணிவில நிவந்த செழுங்கதிர் மா
டந் தமனியக் கிரியினோ டிகலும். (12)

வெண்ணில வெறிக்கு மிரசதத் தகடு வேய்ந்தமே னிலைவயின்
செறிந்து, பண்ணிருந் தொழுகு மென்மொழிக் குதலைப் பாவையர்
செழுங்குழல் விரித்து, நண்ணிய துகிலுங் கமழ்தரவூட்டு நறும் புகை

சுருண்டெழுந் தொழுங்காய், விண்ணினிற் படர்வ தேணியொன் றமைத்து விசும்பினுக் கிடுவது போலும். (13)

அடுசெழும் பாகுந் தேனுமா ரமிர்து மனத்தொடு மனத்தொடுந் திருந்தி, யிடனற விருந்து விருந்தொடு நுகர்வோர் மனையிட மெண்ணிலை மறைக்குங், கடுவிலை யடர்ந்த கொடுவிலை விழியார் கறைதவிர் மதிமுகங் கண்டோ, படர்தரு மாடக் குடுமியின் விசித்த பசுங்கொடி மதிமறுத் துடைக்கும். (14)

தேங்கமழ் சுருதி வரிமுறை படர்ந்து திகழ்தரு நித்திலக் கொடிக, ளோங்கிய மாடக் குடுமியி னடுநின் றுலவிய திரவினும் பகலும், வீங்குசெங் கதிரி னிரவியுந் தவள வெண்கதிர் மதியமும் விலகிப் பாங்கினிற் புகுமி னெனக்கர மசைத்த பான்மை யொத்திருந்தன மாதோ.

வேறு.

மானை யன்னகண் மடந்தையர் வதுவையின் முழக்குஞ்
சேனை மன்னவர் படைமுர சதிர்தரு முழக்குந்
தான மிந்நகர் முதலெனச் சாற்றிய முழக்குஞ்
சோனை மாமழை முழக்கென வைகலுந் தொனிக்கும். (16)

வீதி வாய்தொறு மிடனற நெருங்கிய மேடைச்
சோதி வெண்கதி ரந்தரத் துலவிய தோற்ற
நீதி மானபி பிறந்தநாள் விண்ணவர் நெருங்கிக்
கோதில் பொன்னகர் திறந்தவாய்க் கதிரெனக் குலவும். (17)

மன்ற லங்கம ழகழ்புனை சுதைதிகழ் மதிளா
னின்றி லங்கிய கணமணிக் கொடுமுடி நிரையான்
முன்றி லெங்கணு மசைதரு கொடிநிறை முறையா
லென்று மிந்நகர் பொன்னக ரென்பதொத் திடுமே. (18)

பட்ட முற்றிடு நபிகளால் விண்ணவர் பரிவாற்
கட்டு பேரொளி கஃபத்துல் லாவிருக் கையினன்
மட்டு வார்குளிர் சோலையான் மலிந்த பொன்னுலக
மெட்டு மொன்றெனத் திரண்டுவந் திருந்ததொத் திருக்கும். (19)

தெரிந்த செவ்வியர் முறைவழி தெளிந்தவர் செந்நாற்
சொரிந்த நாவினர் முதியவர் திரண்டசொல் லோதை
யெரிந்த செங்கதி ரிலங்கிய பள்ளிக ளவையும்
விரிந்த வாய்திறந் தோதுவ போன்றன வேதம். (20)

சந்திர காந்திசெய் பலகையை மடிமிசை தரித்தே
யிந்திர நீலமொத் திருந்தமை தோய்த்ததி லெழுதி
மந்திர மாமொழி மறைபயிலிளையவர் நெருங்கி
யெந்த வீதியு முழங்குவ திவையலா விலையே. (21

மறையின் மிக்கவ ரோதிய வோசையும் வரிசைத்
துறவின் மிக்கவர் திக்கிறி னோசையுஞ் சூழ்ந்தே
யிறைவ னைத்தொழு திருகையு மேந்திய வாமீன்
முறை முறைப்படி கூறிய வோசையு முழங்கும். (22)

———

நகரப் படல முற்றிற்று.

ஆகப் படலம் 3-க்குத் திருவிருத்தம் 98,



## தலைமுறைப்படலம்.

——(*)——

மருவிரி வாவி செந்தா மரை மலர்க் கைகளேந்தச்
சொரிமதுச் சிந்துஞ் சந்தத் தடவைசூழ் மதீனாத் தன்னிற்
றெரிதா ரரசு செய்து தீனிலை நிறுத்திச் செல்வந்
தருநபி யிறசூ லுல்லா தலைமுறை தோற்றஞ் சொல்வாம். (1)

தெரிபொரு ளரிய வேதத் துட்பொருட் டெளிவ தாக
வருபொரு ளாதி பாரின் முகம்மதை விளக்கஞ் செய்யப்
பரிவுறு மனுவா தத்தைப் படைக்கமண் ணெடுத்து வாவென்
றுரைதா இசுறா யீலு முவந்துமண் ணெடுத்துப் போந்தார். (2)

திர்வடி வொழுகி நின்ற ஹபீபுமெய் வகுக்க வேண்டி
தியவன் ஜபுறயீலை விரைந்துமண் கொடுவா வென்றான்
றதிபெற மதீனாத் தன்னிற் *றூயவோ ரிடத்திற் றோன்றி
யிதமுற வெடுத்துப் போந்தா ரிமையவர் தலைவரன்றே. (3)

திறலுறு ஜபுறயீல்தந் திருக்கையி லேந்திப் போந்த
பிறுதிவி தனையே மிக்கோர் பெறும்பதி சுவனந்தன்னி
னறைவிரி யமுத மெந்த நாளினு மதுர மாறாத்
துறைவிரி நதிக டோறுங் கழுவினர் துலங்க வன்றே. (4)

* தூயவோ ரிடமென்ற வாக்கியத்தின் கருத்தை-காம்செய் தசெட்டிருக்கும், சீறா வசனகாவியத்தில் நபிநாயக மதீனம்புக்கு சருக்கத்திற் கண்டுகொள்க.

வரிசையும் பேறும் வாய்ந்த முகம்மது நபினார் தோற்றந்
தெரிதர வானோர்க்கெல்லாஞ் சோபனஞ் சிறக்கச் சொல்லி
யரியமெய் பூரித் தோங்கி யகத்தினின் மகிழ்ச்சி பொங்கிப்
பெரியவன் றிருமுன் வைத்தார் பேரொளி யிலங்கிற் றன்றே. (5)

மன்னிய கதிர்கள்வீசு மண்ணினை மனுவா தத்தின்
வெந்நிடத் திருந்தி யங்கம் விய ஹூறும் வடிவதாகத்
தென்னுறு ஜலால் ஜமாலென் றேத்திய திருக்கை யாரத்
தன்னிக ரில்லாத் துய்யோன் வகுத்தனன் றழைக்கவன்றே. (6)

மெய்யெழில் வாய்ப்பச்சீவன் விடுத்தனன் விடுத்த போதி
லையமற் றெழுந்து சென்னி முளையி னவத ரித்து
வையகஞ் சிறப்ப வானோர் மனங்களிப் பேறி விம்மத்
துய்யநற் கலிமாத்தன்னை சொல்லியங் கிருந்த தன்றே. (7)

உரைதெரி கலிமா வோதி யோதியங் கிருந்து சீவ
னிருவிழி தனிலி றங்கி யிருந்தகண் விழித்து சொர்க்கச்
சொரிகதிர் வாயின் மேலாய் நோக்கின சுடர்க நீங்கும்
வரியுறு கலிமாத் தன்னை வளம்பெறக் கண்ட தன்றே. (8)

துண்டத்தி னாவி தோன்றத் தும்மலுந் தோன்றிப் பின்பு
விண்டுரை பகரு நாவின்மேவியல் ஹம்தை யோதிக்
கொண்டபின் பிரத்தி சொன்ன குதாதிரு வசன நோக்கி
யண்டர்நா யகனைப் போற்றி யாதமொன் றுரைப்ப தானார். (9)

கணித்தள வறுக்க வொண்ணாக் கடவுளே குதாயே நீங்கா
மணிக்கதி ரெறிக்குஞ் சொர்க்க வாயிலி னிலைக்கு மேல்பாற்
பணித்தநின் றிருநா மத்தி னுடனொரு பெயரைப் பண்பா
யணித்துவைத் திருப்பக் கண்டே னவரெவ ரறியே னென்றார்.

மாதர்சூ லகடுட் டோன்று மனுநெறி ஆத மேநின்
காதலி னுதவுகின்ற கான்முளை யதிலோர் பிள்ளை
வேதநா யகமா யெங்கும் விளங்குதீன் விளக்காய்ப் பின்னாட்
பூதல நபியாய்க் காணப் படைத்தனன் புகலக் கேண்மோ. (11)

கலைமறை முகம்ம தென்னுங் காரண மில்லையாகி
லுலகுவிண் ணிரவி திங்க ளொளிருடுக் கணஞ் சுவர்க்க
மலைகட னதிபா தாளாம் வானவர் முதலா யும்மை
நிலையுறப் படைப்பதில்லை யெனவிறை நிகழ்த்தினானே. (12)

பாத்தினை யிறைஞ்சி வாழ்த்திப் பரிவுபெற் றிருந்த வாதஞ்
சிரத்தினி லிருந்த வாவி தேகத்தி னிறைந்த பின்னர்
வரத்தினி லுயர்ந்த வண்மை முகம்மது புவியிற் றோன்றத்
தரித்தபே ரொளிவுக் கந்தச் சசிகதிர் மழுங்குமன்றே. (13)

உடலுறைந் துயிருண் டென்னு மொருவடி வில்லான் செவ்வி
மடலவிழ் வனச பாத முகம்மதி னொளிவுக் காக
வடலுறு மக்கட் கெல்லா மதிபதி யாதத் துக்கே
யிடமுறு மமரர் யாருஞ் சுஜூதுசெய் திடுகவென்றான். (14)

தூயவ னுரைப்பக் கேட்ட சொன்மறா தெழுந்து தங்கள்
காயமு மனமும் வாக்குங் கலந்தொன்றாய் மகிழ்வு பொங்கி
நேயமுற் றிடப் பணிந்து நிறைநிறை கைக ளேந்தி
வாயினிற் புகழ்ந்து போற்றி மலக்குகள் வணக்கஞ் செய்தார். (15)

வானவர் செய்யு மந்த வணக்கத்தின் முறைசெய் யாமற்
போனத னால் ஜாசீல்பொறைநிறை யறிவு போக்கி
யீனவன் குணத்த னாயி லகுனத்து முனிவும் பெற்றே
யானவம் பிபுலீசென்னும் பெயருமபெற் றலைந்து போனான். (16)

பொருப்புருக் கொண்ட தன்ன புயத்தெழி லாதந் தன்னுள்
விருப்பெனும்போக முற்றி விழைவுபெற் றிடுத லாலே
கருப்பமுற் பவிக்க வேண்டுங் காரண காட்சி யாக
மருப்புதங் குழல்ஹவ் வாவை வல்லவன் பிறப்பித் தானே. (17)

தேங்கமழ் குழலுஞ் சோதிச் சிறுபிறை நுதலு மவாய்ப் பப
பாங்கிருந் தமுதஞ் சிந்தும பனிமொழி மாதை நோக்கி
யோங்குநின் பெயரைக் கூறென வுரைத்திட ஹவ்வா வென்று
ரீங்கிவ னுறைந்த வண்ண மேதென வாதங் கேட்டார். (18)

செவ்விமன் னெறியா தத்தின் றிருமதி முகத்தை நோக்கி
மவ்வலங் குழலா ரிந்த வானகம் புவிமற் றுள்ள
வெவ்வையும் படைத்தோ னென்னை வகுத்தன னும் வயினசெல் கென்று
னவ்வழி யடைந்தே னென்று ரழகொளிர் பவள வாயால். (19)

செப்பிய மாற்றங் கேட்டு ரோமங்கள் சிலிர்த்துப் பூரித்
தப்பொழு திறையைப்போற்றி யாதம்ஹவ் வாவை நோக்கி
மைப்படுங் கரிய கூந்தன் மடமயில் வடிவுட் கொண்டு
துப்புறை யமுதந் துய்ப்பத் தொடுவதற் கொருமித் தாரே. (20)

பகாருங் குணமுந் திவ்ய பரிமள மணமு மாருச்
சிகரமு மயங்க வெற்றி திகழ்தரு புயமு நோக்கி
நிகருங் குரிசி லேகன் னிலைபெறு வாழ்வே யென்றன்
மகரினைத் தருக பின்னர் வருகவென் றுறைரத்திட் டாரே. (21)

கேட்டனர் மகரென் றுதங் கிலேசமுற் றிறைபாற் கெஞ்சி
வாட்டமில் லவனே யெந்த வகைமகர் கொடுப்ப தென்றார்
நாட்டிய புகழ்சேர் மக்க முகம்மது நபிதம் பேரிற்
சூட்டிய சலவாத் தீரைந் துரைமென விறைவன் சொன்னான். (22)

மதிக்கதிர் விலக்குஞ் சோதி முகம்மதின் சலவாத் தோத
விதித்தன னிறையென் றுதம் விளங்கொளிச் சலவாத் தோதித்
துதித்தனர் ஹவ்வா கேட்டுச் சோபன மகர்பெற் றேனென்
றிதத்தித மித்து நெஞ்ச மிருங்களிப் பேறினாரே. (23)

கடிமலர்க் கொடியுஞ் செவ்விக் கற்க தருவும் போலப்
பிடிநடை மயிலும் வெற்றி பெறுந்திற லரசுங் காம
மிடையறு தமிர்த போக மினிதுண்டு களித்துப் பொங்கிய்
வடிவுறு மின்ப வெள்ள வாரிக்கு ளமுழ்ந்தி னாரே. (24)

துறக்கநன் னகரிற் சேர்ந்து சுகமனு பவிக்குமாத
மறக்கரும் பொருளே வேதம் வருமுறைக் குரிய கோலே
பெறற்கருஞ் சுவன வானோ ரனைவரும் பெரிது கண்டென
புறக்கணி னிருப்ப தெனவோ புகலெனப் புகல லுற்றான். (25)

நிதமழ கொழுகி வாச நிறைநதமெய் முகம்ம தென்னு
முதிரகதிர விளங்கி நுந்த முதுகிடத் திருக்கை யாலே
பதவியி னரிய விண்ணோ ரெணணிலாப் பகுப்புக் கூடி
யிதமுறத் தெரிசிக கினுறு ரெனறன னென்று முள்ளான். (26)

மருள்கடிந தறிவு பொங்கு முகம்மதி னொளியை யென்மு
னருள்கவென றிருகை யேந்தி யாதநன் னபியுங் கேட்கப்
பெரியவன் கருணை கூர்ந்து பெருமுறை யிதுகொ லென்ன
தெரிநடுப் புருவக் கானமே னெற்றியி லொளிரச் செயதான். (26)

வேறு.

தாதவிழ் மலர்த்தா ராதநன் னுதலிற் றண்ணெனுங் கதிர்கள் விட்டொழுகுஞ், சோதியைத் தெரிசித் தமரர்க ளனுவுந் தோன் றுதற் கிடமற நெருங்கிக், கோதறப் பெருகி முன்னிலை திரண்ட

குழுவினைக்கண்டு கண்குளிர்ந்து, மாதவம் பெற்றே னெனமன மகிழ்
ச்சி வாரியிற் குளித்தன ரன்றே. (28)

அறவரி தான காட்சியும் பேறு மமரர்க ளியாவரும் பெற்று,
ரிறைவனே யானும் பெறுவதற் கென்க ணிடத்தினிற் றெரிகிலே னெ
ன்றார், நிறைநடு வாகி யுலகெலா நிறைந்த நெடியவ னினிதருள் புரி
ந்து, விறல்புரி யாதம் வலதுகைக் கலிமா விரனகத் திடத்தில் வைத்
தனனே. (29)

வரிச்சுரும் பலர்த்தி நறைவிரி தருக்க மருவுபொற்புயத்தெழி
லாதம், விரித்தக மகிழ்ச்சி பெருக்கியென் முதுகில் விளங்கொளியின்
னமு முளவோ, தெரித்தருள் புரியென் றிறையுடன் மொழியச் செவ்
விய முகம்மது நபிதம், முரித்துணை தோழர் நால்வருண்டவர்த மொ
ளியுள வெனவுரைத் தனனே. (30)

அப்பெரும் பெயர்க ளைன்குபே ரொளியு மகுமதி னொளியடுத்தி
ருப்ப, வைப்பையென் விரல்க ளைன்கினு மென்ன வல்லவ னவ்வழி
டமைத்தான், மெய்ப்பெருங் கலிமா விரனடு விரன்மென் விரற் சிறு
விரற்பெரு விரல்க, ளிப்படி விரல்க ளைந்தினு மைவர் விளங் கொளி
யுகிரிலங் கினவே. (31)

பகுத்தொளி விரிக்கு நகத்தொளி விருக்கும் பண்புகண் டதிஜ
யித் தாத, மகத்தினின் மகிழ்ந்து கண்ணிணை மலரி னடிக்கடி வைத்
துவாய் முத்தி, மிகுத்திடும் வரிசைநபிசல வாத்தை விளக்கி வாய்மறு
தெடுத் தோதி, வகுத்தவல் லவனைப பணிந்துவானகத்தில் வாழ்ந்
தினி திருக்குமந் நாளில். (32)

யிக்கெழிலாத மேலவன் விதித்த விலகலைப் பொருந்தின படியா,
லக்கையின் விரல்க ளொளிவுமுன் னிருந்த வணியணி முது கிடத் தா
கித், துக்கமு மிகுந்து சுவர்க்கமு மிழந்து தொல்லுலக டைந்துவெவ்
வேறு, திக்கினின மயங்கி யிருவரு மலைத்துத் தீவினைக் குரியவ ரா
னார். (33)

ஆதியே ஹக்கா றப்பனா விறையே யழிவிலாப் பேரின்பவாழ்வே,
நீதியே யெனவும் பலதரந் தவுபா நிகழ்த்தியுந் துன்பம் விட்டொழி
யாப், போதிலே யெனது முதுகிடத் துறைந்த பொரு ளொளிச் சிறப்
பினும் பொருட்டாற், சோதியே தவுபாத் தனைக்கபூலாக்கென் றுரைத்
தனர் சுடர்முடி யாதம். (34)

நறைதரு மறுவி கமழ்முகம் மதுநந் நபிதிருப் பெயர்சொலும்
பொருட்டா, லிறைவனு மாதஞ் செயுந்தவு பாவுக் கிசைந்தினி துறக்க

பூலாக்க, வுறைதரு துன்ப மனைத்தையும் போக்கி யூழ்வினை பின்பு மொன் றாக்க, மறுமதி யகடு தொடுமுடி யறபா மலையினி லிருவருஞ் சேர்ந்தார். (35)

கூடிய விருவர் தாமுஞ்சுத் தாவிற் குடியிருந் திருபது சூலி, கூடிய பொருட்போ ஹற்பது பெயரை நன்குறப் பெற்றதின் பின்னர் சூடிய கிரீட பதிநபி யமரர் துரைகளு யகமெனு மிறசூல், நீடிய வொளிவு சிறந்தொரு சூலி னிலமிசைச் சீதுதித் தனரே. (36)

பருமலர்த் திணிதோ ளிறைமதிவதன முகம்மதின் பேரொளி யிலங்கித், தெரிமறை ஆத மக்களிற் சிறந்த சீதுவி னிடத்திருந்த தனுற், பரிவுறு நபிப்பட் டமும்வரப் பெற்றுப் பல்கலைக் குரிசிலென் றேத்த, வரியவன் கொடுத்த வரிசைக ணிறைந்த வைம்பது சுருபிறங் கியதே. (37)

சீதுவி னிடத்தி னிருந்தவர் மதலை சிறந்தமா மணிமுடிக் குரிசின், மாதவர் கமல வதனயா னுசுதம் வயினுரைந் திருந்தணி சிறந்து, தாதவிழ் மலர்த்தார்க் குங்குமக் கலவைத் தடப்புயர் யானுசு தருகார், நீதிசேர் ஹறயிலு னிடத்தினி லிருந்து நிலைபெற விளங்கிய தன்றே.

தண்மணிக் கதிர்விட் டெறிக்கும்வெண் கவிகைத் தடவரை மணிப்புய ஹறயிலுன், கண்மணி மகுலீ லிடத்தினி லிருந்து கவின்குடி கொண்டெழ தோங்கி, வெண்மணித் தாளத் தொடைப்புய மகுலீல் வேந்தருக் குற்றசே யெனவா, முண்மைநன் னெறிசே ரெறுதுவி னிடத்தி னுறைநதினி திலங்கிய தன்றே. (39)

வடவரை குலுங்க நடமிடு துரங்க மன்னவ ரெறுதுதம் மதலை, கடகரிக் குவட்டி னிணையெனப் பணைத்த கதிர்முலைத் துடியிடை மடவார், விடமெனக் கரிய கொலைவிழிக் கணங்கள் வீற்றிருந் திடுமலர்ப் புயத்தா, ரிடிமுற சதிரு முன்றிலா ருகுநூ கிடத்தினிலிருந்திலங் கியதே. (40)

கடலெனத் தானை யரசர்வந் தீண்டிக் கைகுவித் திருபுற நெருங்கச், சுடர்மணித் தவிசி னுயர்நதா சியற்றிச் சுருதிநேருறை யுகுநூகு, புடையிருந் தவர்செய் யறமெலாந் திரண்டோர் புத்திரவடிவெடுத் தென்ன, விடுகொடை கவிப்பப் புரந்தசே யிதுரீ சிடத்தினி னிறைந்திருந் ததுவே. (41)

நன்னெறி நபிலு றொளியிருந் ததறு னபியெனும் பட்டமும் பெறலா, யுன்னுதற் கரிய முப்பது சுருபு முடையவ னருளிலு

லிறங்கிப், பன்னிய வுலகத் தொழிலெலை யனைக்கும் பரிவுறு முதன் மையே யிவரென், றெங்கிலங் களுக்கும் பெயர்பெற வரசர் யிருந்திட வியற்றிய தன்றே. (42)

மெய்த்தவக் குரிசி னபியி தரீசு விருப்புற வுதித்தநன் மதலை, யுத் தமர் மத்தூ சல்குதம் மிடத்தவ் வொளியுறைந் துலகெலா மிறைஞ்ச, வைத்தபின் மத்தூ சல்குதம் மைந்தர் மடந்தையர் மடலெடுத் தேந்தச், சித்திரக் கவின்பெற் றிருந்தலா மக்கு வயின்சிறந் திலங்குமவ் வொளி யே. (43)

தருமநன் னெறியா லுலகெலாம் புரக்கத் தரும்புக ழானலா மக் குத், திருமக நூகு வயினுறைந் திருந்து சிறந்தபே ரொளியினொ லவர்க் கும், பெருகிய நபிப்பட் டமுமிகப் பெறலாய்ப் பிரளயப் பெருக்கெடுத் தெறியுங், கருநிறக் கடல்வங் கமுங்கவி னாது காட்சியாய்க் கலாசுபெற் றதுவே. (44)

வரிசையு மிமையோர் துதிசெயும் பரிசும் வரப்பெறு நூகுதம் மதலை, தரைபுகழ்ந் தேத்தச் சாமிடத் திருந்து தனபதி கனபதி யாக் கிக், கருவிளை விழியார் கவரிகா லசைப்பக் கனகசிங் காதனத் திருத்தி, விரிகட லுலகம் பொதுவறப் புரக்கும் வேந்திவ ரெனவியற் றியதே.()

ஷாமுதம் மதலை யறுபகு சதுமன் றம்மிடத் தவதரித் திருந்து, தாமமும் புழுகுந் தகரமுஞ் சாந்துந் தோய்ந்திருண் டடர்ந்த பூங்குழ லார், காமுக ரெனச்செய் தணிமணிப் புயங்கள் கண்கொளா தழகிருந் தொழுகு, மாமதக் களிற்ற ரறுபகு சதுமா மதலைசா லகுவயி னடைந்த.

சாலகு தம்பா லடைந்துவாய் மைக்குந் தவத்திற்கும் பவுத்துக்கு மிவரே, மேலவ ரெனச்செய் திருந்தவர் மதலை வேந்தர்ஐபறு வயின் புரந்து, காலடி மறைக்கக் கவிழ்மத மிறைக்குங் கடகரி யரசன்ஐ பறு சேய், பாலகு வயின்வீற் றிருந்துல கெல்லாம் பரித்திடப் பண்புபெற் றதுவே. (47)

தேன்கிடந் தொழுகுங் குங்குமத் தொடையற் செழும்புயர் பா லகு மதலை, வான்கிடந் தனை மின்னொளிர் வடிவாண் மன்னன் றுகுவா விடத் திருந்து, கூன்கிடந் தனைப் பிறைகறைக் கோட்டுக் குஞ்சரத் தர சர்கை கூப்ப, மீன்கிடந் தலர்வான் மதியெனுங் கவிகை வேந்தர்வேந் தெனவிளைத் ததுவே. (48)

வாரணி முரச மிடியெனக் கறங்கும் வாயிலான் றருகுவா மதலை,
தாரணி தருவா யுதித்தசா றாகு தம்மிடத் திருந்தெழில் சிறந்து, கார
ணக் குரிசி லானசா றாகு கண்ணிணை மணியென விளங்கு, மோணிபு
யனு கூறிடத் துறைந்தங் கிலங்கிய தருமறை யொளியே. (49)

வெண்டிரை புரட்டுங் கருங்கட லுடுத்த மேதினிக் காசென விளங்
குந், திண்டிற லுகூ றுதவிய மதலை செழும்புக ழாசறு வயின்வந், தெ
ண்டிசை முழுது மொருதனிச் செங்கோ லியற்றுவ திவரென வியற்றி,
வண்டணி மலர்த்தா ராசறு தவத்தால் வருமொரு வடிவுறு மதலை.(50)

முருகவிழ் புயத்தார் நபியிபு றுகீ முன்னுறைந் திருந்தபே ரொளி
யாற், கரிசமுங் கபடு மிடையறுக் கொடிய களைநமு றாது செய்வினையி,
னெரியெழு நாவா லெண்டிசை தடவ வெழுந்திடப் பெருகிய நெருப்பு,
மருவிரி கழுநீர் நறைசொரி வனச வாவியிற் குளிர்ந்தன வன்றே.(51)

தீனிலைக் குரிய நபியிபு றுகீம் செய்தவப் பலனொரு வடிவா, யீன
மி லிசுமா யீல்நபி யிடத்தி னிருந்திலங் கியவொளிப் பொருட்டால்,
வானகத் தமரர் சுடர்விரி சுவன மடந்தைய ரினிதுவாழ்த் தெடுப்பக்,
கானகு மலர்த்தார் செழுமணிக் கழுத்திற் கருவிவாய் தடவில வன்றே.

மன்னவ ரிசுமா யீல்தரு மதலை மணிவிளக் கனையதா பித்து, தந்நி
டத் திருந்து தரணியேழ் புரக்குந் தலைபதி நிலைபெற வியற்றி, மின்ன
விர் மௌலி விளங்குதா பித்து வேந்தாபெற் றெடுத்தமா மதலை, யிந்
நிலம் புகழு மெசுஹபு வெனும்பே ரெடுத்தவ ரிடத்திலங் கியதே. ()

உடல்பிளந் துயிருண் டுதிரங்கொப் பிளித்தூ னுணங்குவேற் கா
ரெசு ஹபுதம், பிடிநடை மடவாள் பெற்றெடுத் துவந்த பிள்ளையஃ றுபு
வயி னிருந்து, கடல்கிளர்ந் தனைய தானையஃ றுபுதங் கண்மணி தயிறகு
என்போ, ரிடமுற விருந்து நெடும்புகழ் விளக்கி யெழில்கனிந் திலங்
கிய தன்றே. (54)

சந்தனந் திமிர்ந்து திரண்டமற் புயத்தார் தயிறகு தருதிரு மதலை,
கந்தெறி தறுகட் காடபா லியானைக் காவலர்க் கசனி நாகூறு, சுந்தர
வதனத் திலங்கிட விருந்து சொரிமழைச் செழுங்கை நாகூறு, மைந்தர்
மிக் குவந்தம் மிடத்துறைந் திருந்து மாட்சிபெற் றிலங்கிய தன்றே.()

மிக்குவ மெனும்பே ராசுதம் மதலை வெயில்விடு மணிமுடியுதது, பக்கலி லிருந்து செல்வமுஞ் செருக்கும் பண்புறப் பெருக்கிட நிறை த்துத், திக்கனைத் தினும்போர் விளங்கிட விளங்கித் திறல்பெறு முத்து நன் மதலை, தக்கமெய்ப் புகழ்சே ரிருநிதி யதுனன் றம்மிடத் திருந் தெழி றழைத்த. (59)

வெண்ணிலா விரிக்கு மொருதனிக் குடைக்கீழ் வேந்துசெய் தருள்புரி யதுனன், கண்ணின்மா மணியா யுதித்திடு முஅத்து கவின் பெற விருந்தவ ரிடத்தி, லெண்ணிலா வரச ரடிபணிந் திறைஞ்ச வியற்றிய பேரொளி முஅத்து புண்ணியப் பொருளா யுருவெடுத் துலகம் புரந்தநி சாறிடத் துறைந்த. (57)

ஒருகுடை நிழற்கீ ழிருநிலம் புரந்திட் டிருமென முழுமுராச திரத், திருநிறை நான்கு திக்கினுஞ் செங்கோல் செலுத்திய நிசா றெனுமரசர், பெருகிய நிலைமைக் குலக்கட னப்பண் பிறங்கெழுங் கதி ரவனைப்ப, வருமுகின் முலறு நபியிடத் துறைந்து மகிதலம் புகழ்ந் திட விருந்த. (58)

அறிவெனுங் கடலாய் வரம்புபெற் றிருந்த வருமறை முலறுநன் னபிக்குப், பெறுபல னெனவந் துதித்த இல்யாசு நபியெனப் பேரொ ளிதங்கித், திறலாக் காசா யிருந்த இல்யாசு புத்திரர் பவுத்தெலா நிறைந்த, மறுமன்னர் குலக்கோ ளரியெனப் பிளந்த மாமணி முதுறக் கத் தெனுமால். (59)

முகம்மது நபிறொ ரொளியிருந் திலங்கு மன்னவர் முதுறக்கா மதலை, செகமகிழ் குசைமா வயினுறைந் தரசர் செழுமுடி நடுமணி யெனலாய், நகுகதிர் விரிவெண் குடைநிழ லிருந்த நரபதி யெனுங் குசை மாமன், புகழெனத் தோன்றி வந்துறை கனைப் பூபதி யிடத் தின்வந் திருந்த. (60)

மடங்கலே றனைய தனபதி கனை மகிபதி தவத்துறு மதலை, நுடங்கிடை மடவார் கருத்தினைக் கவரு நலமெனு மழகுறு மரசர், தடம்புயங் களின்மா நிலங்குடி யிருப்பத் தயங்கியங் கவர்பெறு மரசர் முடங்குளைப் பகுவாய் மடங்கலங் கொடியான் மோலிமா லிக்குசா ரிருந்த. (61)

திண்டிற லரசர் சிரம்பொடி படுத்திச் செவந்தவாட் காத்தர் மாலி க்கு, மண்டலம் விளக்கு முழுமணி விளக்காய் வந்தமன் பிஃறிடத் திலங்கி, யெண்டிசை யிடத்து மெழுகடற் புறத்து மறுவகைத் தானை கொண் டெதிர்ந்து, கொண்டமா கடந்த வரசெனப் பெயருங் கொடுத் தது திருநபி யொளியே. (62)

குரிசிலென் றுயர்ந்த பிஃறெனு மாசன் குறைஷியங் குலத்துறு மதலே, வரிதிரை யுவரி நடுநிலம் புரந்த வேந்தன்கா லிவுவயி னிலங்கிக், கரிபரி பதாதி ரதம்புடை நெருங்குங் கடைத்தலே காலிபுதருசேய் முருகவிழ் மாலத் தொடைப்புயர் லுவையு முகமலர் தாவிருந் தொளிரும். (68)

வான்மதி பகுந்த முகம்மது நயினர் வடிவுறும்பேரொளி லுவையாங், கோன்மகன் கஃபு தயட்டத் திலங்கிக் குன்றினி லிடும் விளக்காகிச், சூன்முதிர் மழைக்கை கருபுகண் மணியாய்த் தோன்றிய முறத்திடத் துறைந்த, சேனமுங் கொடியுந் தொடாகதிற் வடிவேற் செம்மலென் றுயர்ச்சிபெற் றிருந்தார். (94)

கொந்தலர்ந் திருண்ட கருங்குழன் மடவார் கொங்கையிற் றடம்புய பழுநதுஞ், சுந்தார் முறத்து மதலேயாய் நிலத்திற் றோன்றிய மதிமுகக் கிலாபு, மந்தா மனேய தடம்புய ரிடத்தில் வந்திருந்தவர்தரு மதலே, கந்தடர் தறுகட் காடமா லியானைக் காவலர் குசையிடத் துறைந்த. (65)

வில்லுமிழ் வயிரத் தொடைபுரண் டசைந்த விறற்புயர் குசைதரு மதலே செல்லென விரங்குஞ் சினந்துவே ருங்குஞ் செழுங்கார் அப்துல்மு ளுபு, மல்லலே திணிதோ ளாசர்நா யகர்தம வயினுறைந் தவர்பெறு மதலே, யெல்லவ னெனவே கலியிரு டொத்தி யிருந்தஹா ஷிமிடத் துறைந்த. (69)

கிம்புரிக் கோட்டுக் கடமலே துளைத்துக் கிளைத்திடும் வேற்கார் ஹாஷி, மம்புவிக் காசாய்ப் பெற்றெடுத் துவந்த வருமணி யப்துல் முத் தலிபு, தம்பெயர் விளக்கக் குவலயத் துதித்த சந்ததி யப்துல்லா வென்போர். (67)

தலைமுறைப்படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-4-க்கு திருவிருத்தம்-165.

இந்தத் தலைமுறைப் படலத்தில், நபிஆதமலைகிஸ்ஸலா மவர்கள் முதல், நபிநாயக முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களினொளி தரிபட்டு வந்தவர்களிற் சிலரைப் பன்மையாயுஞ், சிலரை யொருமையாயும் பேசியிருந்தன. அவைகளை முதலி லிப்புராணத்தைச் சீர்திருத்தி யச்சிட்ட மகா வித்துவானாகிய எனதுகுரு செய்கப்துல் காதிறு நயினர் லெப்பை யாலிம் புலவரவர்கள் புத்தக முடிவில் எழுதிய விளம்பரத்தை நோட்டமிட்டும், நபிநாயகத்தி னொளி துப்புரவானவர்கள் புறமாகவே தரிபட்டு வந்ததென்னும் ஆகமமோர்ந்தும், அவனவனென்னும் சொற்களை மாற்றி, அவரவரென்று அச்சிடலாயிற் றென்றறிக.



# நபியவதாரப்படலம்.



பெருகிய கோடி சந்திரப் பிர காசமாய்
வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே
கருணைவீற் றிருந்தசெங் கமலக் கண்ணிணைத்
திருநபி வருமவ தாரஞ் செப்புவாம். (1)

வேறு.

கடியிருந் தெழு கற்பக முஞ்சுடர்
வடிவிருந்த மணியும் வசனமும்
படியுங் கார்முகி லேழும் பழித்துவிண்
குடியிருத்துங் கொழுந்தடக் கையினார். (2)

வேறு.

விண்டொடு கொடுமுடி மேரு வீறழித்
தெண்டிசைக் கிரியொடு மிகலுங் கொங்கையார்
கொண்டமா மயலொடு மனமுங் கூர்விழி
வண்டொடும் வண்டுறை மாலை மார்பினார், ( )

கொன்னுனை வெண்ணிறக் கோட்டு வாரணச்
செந்நிறக் குருதியிற் றிமிர்ந்து வாய்கழீஇ
மின்னவிர் கணமணி விளங்கு பாமுடி
யொன்னல ருயிர்மேய்ந் தறங்கும வேலினார். (4)

முடங்கலங் கைதை முள் ளெயிற்று வெண்பணிப்
படங்களா யிரத்தினும் பரித்த பாரெலா
மிடங்கொள் பூதரப் புயத்தி ருத்தி யேதிலா
மடங்கலே றெனுமன வலியின மாட்சியார். (5)

மாக்கட னெடும்புவி விளைந்த வன்கலி
நீக்கிய வெண்குடை நீழ லோம்புவோர்
வீக்கிய கழலடி வேந்தர் பொன்முடி
தாக்கிய மறுச்செழுங் கமலத் தாளினார். (6)

வரபதி யுலகெலாம் வாழ்த்து மக்கமா
புரபதிக் கதிபதி யெனுமப் பூபதி
பரபதி யரசர்கள் பணிந் திறைஞ்சிய
நரபதி யப்துல்லா வெனு நாமத்தார். (7)

செழுமழை முகிலென வமுதஞ் சிந்திட
வழிகதிர் நபியென வகுத்த பேரொளி
பொழிகாத் தப்துல்லா விடத்திற் பொங்கியே
யொழிதரு திருநுத லிடத்தி லங்குமே. (8)

அயிலுறை செழுங்கரத் தப்துல் லாவெனும்
பெயரிய களிறுக்கோர் பிடியும் போலவு
ருயிரென விருந்தசைந் தொசிந்த பூங்கொடி
மயிலெனு மாமினா வெனனு மங்கையே. (9)

இற்புகுந் தெழுமதி யிலங்கு மாமணி
விற்புரு வக்கடை மின்க ணாயகம்
பொற்பெலாம் பொதிந்தபொற் கொடிநற் பூவையார்
கற்பெலாந் திரண்டுருக் கொண்ட கன்னியே. (10)

அறத்தினுக் கில்லிட மருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக் கெண்மடங்
குறைப்பெருங் குலத்தினுக் கொப்பி லாமணி
சிறப்பினுக் குவமையில் லாத செல்வியே. (11)

குணிப்பருங் குறைஷியங் குலமென வோங்கிய
மணிப்பெருங் கடலிடை வளருஞ் செல்வமே
தணிப்பிலா தெடுத்தெறி தரங்க மேனடுப்
பணிப்படா தெழுந்துசெம் பவளக் கொம்பனா (12)

இத்தகைக் குலமயி லாமி னாவெனு
முத்தவெண் ணகைக்கனி மொழிப்பு மோகனச்
சித்திர அப்துல்லா வெனனுஞ் செம்மலு
மொத்தினி தமுதமுண் டிரையு நாளினில் (13)

வேறு

வீசு தெண்டிரைக் கடன்மலை யடங்கவென் றுடைக்கீ
ழாசி லாத சிங்காசனத் திருந்த சிக்கந்தா
காசி னிக்கர சியற்றுதல் கருதணையின கால
மாசி லாக்கணக் கெட்டுநூற் றெண்பதோர் வருடம். (14)

கரைத்த மின்றெளித் தெழுத்தெனச் சிறக்குமக் காலி
னிரைத்த கார்க்குலந் திரண்டெனக் * களிறுக ணெருங்கி
யிரைத்த டாந்துழும் மதங்களை வாரிநின் றிறைத்து
வரைக்கு லங்கள்போல் வந்ததற் கொருமுதல் வருடம். (15)

---

* களிறுக ணெருங்கின வென்னுங் கருத்தின் விரிவை, சீறா வசன காவியத்திற் காண்க.

திங்க ளாமி றஜபு முதற்றேதி வெள்ளியிராத்
துங்க வார்கழன் முகம்மது பேரொளி துளங்கி
யெங்க ணாயக ரப்துல்லா நுதலிடத் திருந்து
மங்கை யாமினா வயிற்றினிற் றரித்தன வன்றே. (16)

திருத்தும் பொன்னக ரமரரே திரண்டவா னவரே
கருத்தி னுண்மகிழ்ந் தெவ்வையு மலங்கரித் திடுமின
வருத்த மென்றிலா முகம்மதை யாமினா வயிற்றி
லிருத்தி னேனென வுரைத்தன னியாவர்க்கு மிறையோன். (17)

பரந்த வாய்க்கொடும் பாந்தளும் விடங்கொள்பஞ் சரமுங்
கரிந்து பொங்கிய குழிகளுங் கனற்பொறி கதுவ
வெரிந்து செந்நெருப் பொழுகிய நரகங்க ளேழும்
விரைந்த வித்தடைத் திடுகவென் றனன்முதல் வேந்தன். (18)

விற்கெழு மறுவொடு குறு சந்தாய விளங்கச்
சொர்க்க வாயிலுந் திறந்தலங் கரித்தனர் துன்ப
வர்க்க வாரிபாழ் நரகங்க ளடைத்தனர் வானோர்
கற்கு மாமறை முதல்வன் விதித்தகட் டளைக்கே. (19)

அந்தண் பொன்னக ரடங்கலு மலங்கரித் ததுவும்
வெந்த பாழ்நர கங்களை யடைத்தபல் விதமுஞ்
சந்த திண்புய முகம்மது நபிதரித் ததுவு
மிந்த வாறுக ளனைத்தையு மறிந்திபு லீசு. (20)

நடுங்கி வாயினீ ரறந்திட நாவுலாந் துடல
மொடுங்கி யைம்பொறி மயக்குற நெஞ்செலா முடைந்து
புடங்கொள் வங்கம தாய்நிலை யுருகினன் புலம்பத்
துடங்கி னானடிக் கடிபெரு மூசசொடு சுழன்றே. (21)

கரைவ னேங்குவன் மலங்குவன் கலங்குவன் கதறி
யிரைவன் கன்னத்திற் கையைவைத் திருந்தெழுந் திருப்பன்
றரையின் மேல்விழுந் தெனக்கிலை யினிச்சிங்கா சனமென்
றுரை மறந்திடக் கிடந்தன னிருகணீ ரொழுக. (22)

அறி வழிந்தமன் னவன்றனை மக்கள்வந் தடைந்து
குறியுந் துன்பமும் வந்தவா றேதெனக் கூறி
நிறையு மக்களோ டுறுபவா வாறெலா நிகழ்த்தி
யுறையு மில்லிட மிவணிலை நமக்கென வுரைத்தான். (23)

இந்த வாசகங் கேட்டலு மக்களெல் லோருந்
தந்தை யேயிதற் கென்செய்வோ மெனத்தடு மாறிப்
புந்தி நொந்துநொந் தவரவர் திசைதிசை புகுந்தார்
சிந்தை நொந்திபு லீசுவந் திகைத்திரு திடைந்தான். (24)

தரித்திடு முதற் றிங்களிற் றரைபுக ழாத
முரைப்ப ராமினா கனவினி லுன்றிரு வுதறத்
திருக்குஞ் சந்ததி வலுமையை யுடையதிவ் வுலகத்
தருக்க ளெப்பல நாமமு கம்மதென் றகன்றார். (25)

கருப்பந் திங்களி ரண்டினி லாமினா கனபின்
மருப்பு குங்குழல் வல்லிநின் வழற்றினின் மதலை
யருப்பும் வீறுடை யவர்பெயர் முகம்மதென் றதிக
விருப்ப மாயிது ரீசுநன் னபிவிளம் பினரே. (26)

இக்கெ னும்மொழி யாமினாக் கினிதுறத் திங்கள்
புக்கு மூன்றினி னாகுநன் னபிமனப் பொலிவாய்
மிக்க வுண்மையும் விளங்ய வெற்றியு முடையோர்
தக்க பேர்முகம் மதுவெனச் சாற்றிவிட் டகன்றார். (27)

திங்க ளைங்கினி லாமினா சனவினிற் றெளிவா
யிங்கி தத்திபு ருகிநன் னபியியம் பினாற்
சங்கை யாய்மிகு வரிசையும் பெருங்கொலுத் தனையும்
பொங்கு வாழ்வினா பெயர்முகம் மதுவெனப் போந்தே. (28)

அம்பொற் கும்பத்தி னருவினீர் மஞ்சன மாடிச்
செம்பொற் பட்டுடுத் தெறிகதி ரணியிழை திருத்திப்
பம்பு மேகலை தரித்துமென கரவளை பரித்துக்
கம்ப லைச்சிலம் பணிந்தனர் பதங்கவின் பெறவே. (29)

நெறித்த வார்குழ லிருக்கிமென் மலர்பல நிறைத்துக்
குறித்த வேலிணை கண்களி லஞ்சனங் கோட்டிச்
செறித்த மான்மதஞ் சந்தனக் கலவையுந் திமிர்ந்தே
யெறித்த நன்கதிர் விளக்கென வாமினா வெழுந்தார். (30)

இனத்து ளாரெனுஞ் தெழுமலர்க் கொடிநடு விடையே
கனத்த மாமணிக் கொம்பென நடந்துகஃ பாவின்
மனத்தி ருக்கற வலஞ்செய்து வாயிலில் வந்து
நினைத்தி டும்பொரு டருகெனப் போற்றினர் நிறைந்தே. (31)

வண்டு வாழ்குழன் மடந்தையர் திரண்டுவாழ்த் தெடுப்பக்
கண்டு மென்கொடி யாமினா தாமரைக் காலின்
மூண்ட சச்செழு மலர்சொரி தலைமுகங் கவிழத்
தெண்ட னிட்டது புத்தென வுறைந்ததே வதையே. (32)

அஞ்ச லித்தது புத்தென மனத்ததி ஜயித்து
மஞ்சு வார்குழ லாமினா பயந்துமெய் வருந்திக்
கஞ்ச மினனனார் கணத்துடன் வாயிலைக் கடந்தே
யின்சொ னன்குலக் கிளியென மனையில்வந் திருந்தார். (33)

தெரியுந் திங்களோந் தினிலிசு மாயீல்செப் பினரா
னுரிய மென்மயி லேநின துதரத்தி லுறைந்தோர்
தரிய லர்க்கிடி யாயடுத் தவர்க்கொரு தருவாய்
வரிசை யுற்றவர் பெயர்முகம் மதுவென வகுத்தே. (34)

ஆறு திங்களில் வந்துமூ சாநபி யழகாய்க்
கூறு மென்கரும் பேநின்றன் வயிற்றுறு குழந்தை
வீறு பெற்றிடு தலைமையும் பெரும்பத வியையு
மாறி லாதவர் பெயரிடு முகம்மதென் றுரைத்தார். (35)

சினவு வேற்கரத் தப்துல்லா வெனுமொரு சிங்க
மனைவி யாகிய ஆமினா வெனுங்குல மடமா
னினமு மாயமும் வாழ்த்திடக் கருப்பமு மிலங்கக்
கனவு கண்டக மகிழ்ந்தினி திருக்குமக் காலம். (36)

மக்க நன்னக ரப்துல்முத் தலிபெனு மன்ன
னக்க மன்னமன் னப்துல்லா தமையழைத் திருத்தித்
தக்க புத்தியு முறைமையுந் தொழிலையுஞ் சாற்றி
யொக்கல் கூட்டுறப் புறநகர்க் கெழுகவென் றுரைத்தார். (37)

தந்தை கூறிட அப்துல்லா மனந்தறு காமன்
மந்திர வாளெடுத் தினிதுற விசித்தனர் மருங்கி
லிந்திர வில்லென வில்லெடுத் தொருகையி லேந்திக்
கந்து கங்கொணர் கென்றுகட் டுரைத்தனர் கடிதின். (38)

பாட லத்தின்மேற் கொண்டுறு தனிற்பரி வாரங்
கூடு கோளரித் திரளென வரநெறி குறுகிக்
காடுங் கானமுங் கடந்துசெந் தேம்பொழிற் கணிசூழ்
நாடடைந்து போய்ப் புகுந்தனர் மதீனமா நகரில். (39)

மதீனத் தின்னுறை ரசவருக் கங்களு மதீனப்
பதிய டுத்தலூர்ச் சாக்கையுங் கொண்டுபங் தனமாக்
கதிர்கொண் மாடத்திற் கட்டிவைத் தவரவர் கரத்திற்
புதிய வாணிபத் தலைவிலைக் கீய்ந்தனர் பொருளை. (40)

வாணி பத்தொழி லனைத்தையு முடித்துமன் னவருங்
காணு நாட்சில விருந்துதம் பதிவரக் கருதிப்
பூண ணிந்தழ குறுமிளை யவர்புடை சூழச்
சேண டைந்தபு வாவெனுந் தலத்தினைச் சேர்ந்தார். (41)

ஆதி கற்பனை யூழ்விதிப் பயனும்வந் தடைந்து
போது நாட்களு நாழிகைக் கணக்கையும் போக்கி
நீதி மன்னவ ரப்துல்லா தனையறி நினைவாய்ச்
சோதி மென்முக மிலங்கிடத் துயில்வபோன் றிறந்தார். (42)

கூடிச் சூழ்ந்தவர் விதிப்பய னெனக்குலை குலைந்து
வாடி மன்னரை யெழில்பெற மணத்துட னடக்கிப்
பாடி யூரபு வாவைவிட் டகன்றுபோய்ப் பதியை
நாடி வந்தவ ராமினுக் கிவையெலா நவின்றார். (43)

மாற்றங் கேட்டலு மடமயின் மனமுடைந் தலறித்
தோற்று மாமழை சொரிந்தெனக் கண்ணினீர் சொரியப்
போற்றுங் காழகிற் புகைக்குழ லிலம்புரண் டசையக்
கோற்றொ டிக்கரக் கரந்தடா மரைமுகங் குழைக்க. (44)

வருந்தி நொந்தழு தாமினு விடைதலும் வளைந்து
திருந்தி ழைக்கொடி மடவிய ரிரண்குத றிரண்முத்
திருந்த சூல்வலம் புரியினைச் சூழ்ந்தசங் கிணங்க
ணிறைந்தி ரங்குவ போன்றன வெங்கணு நிறைந்த. (45)

சலித்து விம்மிய மயிலினைக் கண்டுமெய் தளர
வலித்த தோபகை விதிகொலோ மகப்பெறும் பலனோ
பலித்த தேதென வறிகிலோ மெனப்பதை பதைத்தே
யொலித்ததை யோவென விரங்கின ருரிமி லுளாரே. (46)

உடுத்த பூழியிற் புதைமணி யெனவுட லொடுங்கி
வடித்த கண்ணினீ ரொழுகிட விருந்தபொன் மயிலை
யடுத்து வந்திருந் தன்புட னப்துலமுத் தலிபு
தொடுத்த துன்பங்க ளாற்றிநல் வழிபல சொன்னார். (47)

இனத்து ளார்சொலு நல்வழிக் குருகிநெஞ் சிடைந்து
நினைத்த பற்பல துன்பமு மகற்றிநீ ணிலத்தி
லனைத்தை யும்விதித் தவன்செய வினையுமுற் றறிந்து
மனத்தி னிற்றெளி வாகினர் குலக்கொடி மயிலே. (48)

தவிசி ருந்துநன் னெறிமுறை நடத்துதா வூது
நபியுந திங்களோ ரேழினிற் கனவினி னவின்று
ரவியுங் காலமன் றாட்டத்துக் குரியவ ரானோர்
புவியி னிற்பெயர் முகம்மதென் றிடுமெனப் போந்தே, (49)

நலங்கொ டிங்களோ ரெட்டினில் சுலையுமா னபிவந்
திலங்கு பூணணி மயிலனீர் நம்வயிற் றிருந்தோர்
பெலன்கெ ழும்மது னன்கிளைப் பேரொளி நபியாய்த்
துலங்க வந்தவர் பெயாமுகம் மதுவெனச் சொன்னார். (50)

மாதமொன்பதி லாமினா கனவினின் மதித்தே
வேத நான்மறை நேர்வழிக் குரியவர் விளங்கக்
கோதை யேபெறின் முகம்மது வெனப்பெயர் கூறென்
றோதி நாயகன் வரிசையீ சாநபி யறைந்தார். (51)

ஈத லாவிமை பவர்தின மிடைவிடுத் திலராய்ப்
போது சேர்குழ லாமினா கனவினிற் போந்தே
யாதி தூதவர் முகம்மது பெயரென வதிக
நீதி யானமா ராயமே பெறநிகழ்த் தினரால், (52)

என்றும் வானவ ரிசைத்திடுங் கனவெலாமெடுத்தும்
வென்றி நன்னபி மார்சொலுங் கனவெலாம் விரித்து
மன்ற லங்குழ லாமினா படிப்படி வகையாய்
நன்றி தேர்ந்தசொற் றாயர்க்குத் தினந்தொறு நவின்றார். (53)

பெற்ற தாயருங் கனவினின் பேற்றியைப் பிரித்தே
யுற்ற பேரொடு மனத்தொடுந் தெளிந்தறிந் தோர்ந்து
சொற்ற தன்மகட் குறிப்பெலாங் காண்குறத் துணிந்து
குற்ற மின்றிய முகம்மதே பெயரெனக் குறித்தாள். (54)

செறிந்த வார்குழ லாமினா வுரைத்தசெய் தியைக்கேட்
டறிந்து தாயதற் கெதிர்மொழி கொடுத்தலு மாராய்ந்
துறைந்த வல்லிருட் சீத்தெறி மதியென வோங்கி
நிறைந்த பேரொளி முகமலர் தாசபா நிகழ்த்தும் (55)

திரிந்த பாலெனச் செறுத்துப்பண் ணேனழையுஞ் சினந்து
விரிந்த தெண்டிரைக் கடலிடை யமுதென விளங்கிச்
சொரிந்த தேன்மொழி யாமினு வயிற்றினிற் சூலா
யிருந்த நாளெலாங் கனவலா லொழிந்தநா ளிலையே. (56)

உள்ள கங்குளிர்ந் தருமறை மூன்றையு முணர்ந்தோர்
வள்ள லாகிய அப்துல்லா வயிற்றினில் வடிவாய்ப்
பிள்ளை யொன்றுதோன் றிடுமுகம் மதுவெனும் பெயரி
னெள்ள லின்றிய வுண்மைநன் னபியென விசைத்தார். (57)

சொரியும் பூந்துகட் டடைவசூழ் ஷாமினிற் றோன்ற
லரிவை தன்னகத் தறிவினுந் தேர்ந்துணர்ந் தறிந்து
தெரியக் கூறிய பெரியவர் சொல்லினுந் தெளிந்து
வரிசை நேருமக் காவினில் விரைவினில் வந்தாள், (58)

வந்து நல்வழிக் குரியவ ரிருக்குமக் காவிற்
சந்த னப்புய ரப்துல்லா தமைமணம் புரியச்
சிந்தை நேர்ந்தன ளவ்வுரை கேட்டுளந் திடுக்கிட்
டிந்த ஆருளர் மிகுதிபேர் மணத்தினுக் கிசைந்தார். (59)

எனக்கு னக்கென மடந்தையர் மணத்தினுக் கிகலத்
தனக்கு நேரிலா னெழுதிய படிதனி முடிந்து
வணக்க ருங்குழ லாமினு வெனுமட மானைச்
சினக்கும் வேற்கரத் தப்துல்லா மணத்தொடுஞ் சேர்ந்தார். (60)

அந்த வாறறிந் தரிவைய ரிந்நக ரனைத்து
மிந்து வாணுத லாமினு மனைவெறுத் திருந்தார்
கந்த மென்குழல் கருப்பமு முதிர்ந்தன காலம்
வெந்து வானவர் பிறரிலை யென்கொலோ விளைவே, (61)

மண்ணை ருந்திலள் புளிப்பையும் விரும்பிலள் வயினோ
யுண்ணி றந்தில மெய்பல வருந்தில வுதரக்
கண்ணி ருந்தபூப் பொனறுமே கண்டில கனிமென்
பண்ணி ருந்தவாய் வெளுத்தில பலன்பெறும் படியே. (62)

சிறுத்த மெல்லிடை பருத்திருந் திலதிரு வுதரம்
பொறுத்து வீங்கில வுநதிமேற் புடைத்தில பொருப்புங்
கறுத்தி ருநதில பசுநரம் பெழுந்தில கவின்கள்
வெறுத்தி ருந்தில கருப்பமென் றழகுறும் விதமே. (63)

என்றும் பற்பல மொழிநதுச பாசலித் திருப்ப
மன்றலங்குழ லாமினா கருப்பமும் வலியு
மின்று தோன்றுவ தெனவெடுத் தியம்பின ரிலங்கும்
வென்றி வேல்விழி மடந்தையர்க் கிவைசொலி விடுத்தார். (64)

உரைத்த வாசகங் கேட்டலு மந்நக ருறைவோ
ரிரைத் தடங்கலு மொழிமொழிப் படவெடுத் திசையா
வரைத்த ணிக்கொடி யாமினா மனையினின் மறந்துங்
கரைத்த லாயினும் வருவதில் லெனக்கழ றினரே. (65)

உற்ற வாய்மையைக் கேட்டலு மாமினா வுலைந்து
குற்ற மேதுநம் மிடத்தென மனத்தினிற் குறித்துப்
பெற்ற சூல்வலி யடிக்கடி பெரிதெனப் பதறி
வெற்றி வாட்கரத் தப்துல்முத் தலிபுக்காள் விடுத்தார். (66)

சருவு வேல்விழி மடந்தையர் விடுத்தவர் சாற்றக்
குரிசில் கேட்டவ ரவர்க்கெலாம் வகைவகைகூறி
வருக வென்றலுங் கொடியிடைப் பிடிநடை மடவா
ரொருவ ரும்மவண் புகுவதில லெனமறுத் துரைத்தார். (67)

மஞ்சு வாழ்குழ லாமினா வுரைத்தது மறுத்தா
ரினசொற் கூறிநா மழைக்கவு மனமிரங் கிலரென
றஞ்சி யுள்ளகம் புழுங்கினா ரப்துல்முத் தலிபு
தஞ்ச மீதெனக் கஃபத்துல லாதனைச் சார்ந்தார். (68)

வடிவி ருந்தொளிர் கஃபத்துல் லாதனை வலமாய்க்
கடிதிற் றன்புற வருங்கரு மாரியின் கனையாற்
கொடியி டையவர் தாபமும் வருத்தமுங் கூறி
நெடிது யிர்த்தயர்ந் திரந்துகொண் டிருக்குமந் நேரம். (69)

வேறு.

அரியமெய்ப் பொருளா யளவிடற் கரியோ னருளின் னமரர்கள் சுவர்க்கத், தெரிவையா பறவைக் குலங்கண்மற் றைவையுஞ் செழும் பொழிற் செகதலத் திறங்கி, வரிஞ்ஜீமி றுதறிக் கருங்குழன் முடித்த மடக்கொடி ஆமினா மனையி, னிரைநிரை செறிந்தங் கவருரை மறுத்து நின்றிடும் பணிவிடைக் கெனவே. (70)

கருவினிற் றோன்று தொளியினி லுருவாய்க் கண்ணிமைத் துண்டுறங் காத, பெருவடி வழகாய்க் குழுவுடன் றிரண்டு பெரியவ னுரை மறு தெழுந்து, விரிகதிர்க் ககனம புடவிமட் டொழுங்காய் விண்ணவ

றொண்ணிறந் தனையோ, ரருவரை யனையா ருருவமுஞ் சிறிதா யாமினா
திருமனை சூழ்ந்தார். (71)

தேன்பெருக் கோழுகி யெழிதரும் கனிகள் சிதறிடுஞ் சோலைவா
ய்த் தெளிந்த, வானதி மூழ்கித் துகிலெடுத் துடுத்து வளைபணித்
தொகையெலா மணிந்து, கானமலா முடித்துக் கடுவரி வடிவேற் கண்
களி லஞ்சனங் குலவச், சூன்முதி ராமினாமனை யிடத்திற் சூழ்ந்தனர்
விண்ணவர் மகளிர். (72)

மறுவறத் திருந்த நிறைந்தபூ ரணமா மதிக்குலந் திரண்டுவந்த
துவோ, வுறைதரு மமுதத் திரளைக ளுருவா யொழுங்குட னெழுந்தி
டுந் திரளோ, கறைபடாச சுவனக் காட்சிவாழ் வனைத்துங் கலந்துட
னிலங்கிவந் ததுவோ, குறைபடாச சுவனத் தருவினி லுதித்த கொழு
ங்கதிர்ச் செழுங்கனிக் குலமோ. (73)

அணித்துலைக் கனலி லுருககிடா தொளிரு மாயிரங் கோடிமாற்
றெனவுங், கணித்திடாப் பசும்பொ னெடுத்தெடுத் தமைந்த கவின்கு
லங் கூண்டெழுங் கனமோ, மணிக்கதி ரிளைத்துத் திரட்டிவைத் துருவ
வடிவமத் தெழுந்திடுங் குழுவோ, துணித்துமின் குலங்கண் மறை
படா தெழுந்த தொகுதியோ வெனவறிகிலமால். (74)

இருட்டடை கிடக்கும் கருங்குழற் பின்ன லெழும்பதி னாயிரமி
லங்க, விரித்தபொன் னிழைந்பூந் துகிலமே கலையும் விடவொளிர் வீசி
டத் துலங்கத், தரித்தமுத் தாரமுங் குங்கும மனைத்துந் தான்கும யிருந்
தெனத் தயங்கக், கரித்தகண் ணிமையா முலைக்கு வடசையாக் கனனி
யர் திரண்டிருந் தனரால். (75)

பண்ணமைத் தீஞ்சொ லரம்பையா மேனிப் பரிமளந் தெருவெ
லாங் கமழ, விண்ணகத் திரவிக் கதிரொளி பணிகளி விடுவெயில் விழு
துவிட் டொழுகத், தண்ணகைத் தாபூக் கதிரிரு டுணிபடத் தரையெ
லாம் பொன்மைபோர்த் திருப்ப, மண்ணகத் திருந்த வாமினாமனையை
வானவர் பதியென வாமல். (76)

பறவைக ளனைத்து மேவலின் படியே படியினு மந்தர மனைத்து,
நிறைதரப் பெருக வதிலொரு வெண்பு ணிதநிலக் கதிர்கள் கான்
றொழுக, வுறைதரு மாமி னாதிரு மனையி னுட்புகுந் தெதிர்வரு வது
கண், டறைதர மனமும் பயந்திட வொதுங்கி யஞ்சியின் றதிஜயித்
தனமே. (77)

வருந்திரொரங் திருந்த வாமினா திருமுன வந்துநின றழகுறும்
வெண்பு, ளிருந்தவெண் சிறையை விரித்தொளி சிறந்தே யிலங்கிட

வீசிய காற்றாற், பொருந்திய சரீர வேர்வையுந் தீர்ந்து புளகெழச் சிலிர்த்தன ரோமந், திருநதிழை மனத்துட் பயங்கர மகன்று தேகமுங் குளிர்ந்தன வன்றே. (78)

அண்டரி லொருவர் மாகதக் கிண்ணத் தமுதினை யேந்திவந் தடுத்துக், கொண்டவர் கொடுப்பக் கூறல்ஹீன் வாங்கிக் கொடியிடை மடமயிற்கிய, முண்டகக் கரத்தாற் றங்கியே பருக முதிர்பா தாபமு நீங்கிக், கண்டெனு மொழியார் கருப்பநோ யகன்று கலக்கமுந் தெளிந்தன ரன்றே. (79)

பொன்னொளிர் கவினு முறக்குழைத்தெழுது பூந்துகில் வெண்ணிறங் கவின, மின்னொளி கரப்பக் கதிர்விடுங் கலையை விரைந்தொரு தட்டினி லேந்திப், பன்னிய வமரா தொகையினி லொருவா பரிவுடன் கொணர்ந்ததை வாங்கி, யன்னமோ மயிலோ வெனுமொரு மடமா ஞமினா திருக்கையிலீய்ந்தார். (80)

செவிவீற்றிருந்து முகமதி யிலங்குந் திருந்திழை ஆசியாதமையு, மவ்வலங் குழலார் மறியமென் றுரைக்கு மயிலையு மாம் பையர் தமையும், கவ்வையங் கடல்சூழ் புடவியிற் சிறந்த காட்சி சேர மக்கமாநகரி, னவ்விவேல் விழியா ராமினு விருக்கு நறைமனை புகவிறை யுரைத்தான்.

இறையவ னுரைப்பச் சுவனமா மடவா ரெங்கனும் பரந்தெழு மொழுங்கு, மறியமு மழகு பழுதறதொளி ததும்பு மானனு ராசியா தாமு, நிறைமதி யிரண்டு வானகத் திழிந்து நிலத்திடை யுடுவொடுந் திரண்டே, யறைகழல சிலம்ப வருவபோல் வநதங் காமினு திருமனை புகுந்தார். (82)

படித்தலம் புகலு மாமினு வலது பாரிசத் தாசியா தாமும், வடித்தெள ளமிர்த மெனுமொழிக் குதலை மறியமு மிடதுபாரி சத்தி, லடுத்தவப் பொழுதி லரம்பையர் சிலர்வந் தணிமுழந்தாடுடை கணைக்கால், பிடித்தடி வருடி நின்றனர் மனையும் பேரொளி பிறங்கின வன்றே.

மடந்தையு மகப்பே றடுத்திடுஞ் சமயம் வானவர் குழுவினை நீங்கிக், கடந்துவந் தொருவர் நின்றன ரவர்செங் கரத்தினிற் கிண்ணமொன் றேந்தி, யிடங்கொளா துறைந்த கூறல்கீன் கனிலோ ரேந்திழை கடிதினில வாங்கி, யடர்ந்தில்லம் புதந்து கொடுப்பதைப் பருகியாமினு மகிழ்ந்தன ரகமே. (84)

பானகம் பருக வொளியும்வந் திறங்கிப் பகலவன் கதிரெனப் பரப்ப, வானவர் மகளிர் மருத்துவம் புகுத மறியமு மாசியா தாமுந், தேனவிழ் பதுமச் செழுங்கரங் கொடுத்துச் சேர்ந்தணைந் தருகுறச் சிறந்த, கானமர் குழலா யஞ்சலென் றுரைப்பக் கனிந்திழ கினைகருப் பமுமே. (85)

கோதறப் பழுத்து மதுரமே கனிந்த கொவ்வைவா யம்மையர் வாழ்த்தித், தீதற நெருங்கி யேவல்செய் திருப்பச் செழுங்கமலாசனத் திருந்த, பாதருக் கரசி யாமினா வுதர மனையிடத் திருந்துமா நிலத்தி, லாதரம் பெருக நல்வழிப்பொருளா யகுமதுதோற் றின ரன்றே. (86)

கிடந்தொளி பரப்பி வாசங்கொப் பிளித்துக் கிளர்கிபு லாவை முன் னோக்கி, யிடங்கொளந் தரநேர் சிரசினை யுயர்த்தி யெழில்பெறச் சுரூதுசெய் திணைத்தாட், டிடன்பெற மடித்துக் குறியிடக்கையாற் சேர்த்தொளிர வலக்கைகான் மேல்வைத், துடனணி கலிமா விரலினை யுயாத்தி யுதித்தனா முகம்மது நபியே. (87)

சிரசினி னெய்தோய்த் திருவிழிக் கருமை சிறந்திடக் கொப்பு ளுங் கொயலாய், மருவுசுன் னத்துஞ் செய்யலாய்த் துடக்கின் வருங் குறி யொன்றுமில் லாதாய்ப், பரவுகஸ் தூரி மனையெலா நிறைந்த பரி மளங் கமகம கமெனப், பெருகிய வொளிவு வானமட்டுவரப் பிறந்தனர் முகம்மது நபியே. (88)

செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந் தீர்ந்தபி னம்பாத நாளி, லம்மதி மாசத் தொகையினில் றபீவு லவ்வலிற் பனிரண்டாந் தேதி, யெம்மனைக் கும்பேறெனவரும் பொருளா யிசைத்திடுந் திங்களிராவின, மும்மையென் றுரைக்கும்புவனமும் புரக்கமுகம்மது நபிபிறந் தனரே.

பூதலத் தரசு பதியென வுதித்த புகழ்பெறு மக்கமா நகரிற், சீத வொண் கதிர்சேர் கஃபத்துல் லாவின் றிசையினில் வடகிழக்காக, வேதமொன் றணுகா ஜெம்றத்தி லூஸ்தா வெனுமொரு தலத்தினி னடுவே, மாதவ ரபித்தா விபுதிரு மனையின் முகம்மது நபிபிறந்தனரே.

நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து நெடுநிலமெங்கணும் பரந்து துறவறந் தவறி யில்லற மடிந்து சுடரிலா மனையது போலக், குறை படுங்கால மிருளெனுங்குபிரின் குலமறுத் தறநெறி விளக்க, மறுவிலா தெழுந்த முழுமதி போல முகம்மது நபிபிறந் தனரே. (91)

பானுவின் கதிரா லிடருறுங் காலம் படர்தரு தருநிழ லெனலா,
யீனமுங் கொலையும் விளைத்திடும் பலநோ யிடர்தவிர்த் திடுமரு
மருந்தாய்த், தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியிற் றிலதமே யெனலாய், மாநிலந் தனக்கோர் மணிவிளக்
கெனலாய் முகம்மது நபிபிறந் தனரே. (92)

செங்கதிர் பரப்பி யுலகெலாம் விளக்கித் திரிதின கரனும்வெண்
ணமுதந். தங்கிய கிரணச் சசியுமந் தரத்திற் றவழ்தரு முடுக்குல
மனைத்தும், பொங்கொளி யெவையுஞ் சுவனநா டனைத்தும் பூதலம்
விசும்புமற் றனவு.மிங்கெழின் முகம்ம தொளியினி லென்று விவர்க்
கெவை யுவமைசொல் லுவதே. (93)

மகிதலம் புகழீ சாநபி பாரில் வந்தநாட் டொடுத்திடை விடா
து, பகுமத மிலையென் றுறா நாறுண்டு பாரிசுக் காரர்கள் வணங்கும்,
புகையுடன் கெழுமிப் பொறிபல தெரிப்பப் புரிந்தெழு மக்கினிக்
கொழுந்து, திசைதொறுந் தெரிய வெரிந்தசெந் நெருப்புத் தேய்ந்து
நூந் தழிந்தன வன்றே. (94)

படியிடை புடைப்பப் பெருக்கெடுத் ததிரப் பாயலைச் சுருட்டிவிட்
டெறிய, விடுகடல் சாவா வெனும்பதி யிடத்தில் வெறுந்தரையாயின
வறந்து, குடிலமட் டோங்கி மஞ்சடை கிடக்குக் கொத்தள மொருபதி
னான்கு, மிடிபட வீழ்ந்து சேருவா னகர மெங்கணுங் கலங்கிய தன்றே.

சிலையெடுத் துருவாய் வைத்தபுத் தனைத்துஞ் சிரசுகீழ்ப்படமுகங்
கவிழ்த்த, சலமதி விபுலீ சியற்றிய சிங்கா சனமுமன் றிடிந்தன
ஷயித்தான், குலமுமன் றொதுங்கி வானகம் புகாமற் கூண்டு நக்
கேத்திர மெரிந்து, நிலமிசை வீழ்ந்த வினஞ்சில புதுமை நிகழ்த்துதற்
கரியதன் றிரவே. (96)

சிறந்தநன் மதலை தனைவிரைந் தெடுப்பத் தெரிவையார் மனத்
தினி னினைப்ப,மறந்திகழ் விழியார் தொடத்தகா தென்றென் முகம்
மதை விரைவினி லேந்தி, நிறந்திகழ் சுவனப் பதியினிற் கொடுவம்
பென்றன னெடியவ னதனா, லறந்திக ழாமினா திரு மனைபுக்கடுத்
தவர் பிள்ளையை யெடுத்தார். (97)

அமரருக் கிறைவன் ஜபுற யீல் வரிசை யகுமதை யெடுத்தினி
தேந்தித், தமருடன் சுவனப் பதியினிற் கொடுபோய்ச் சலநிதி
தொறுமுழு காட்டி, யிமைதிறந் திருமண் மையினை யெழுதி யெண்

ணைபிட் டமிர்தமு மூட்டிச், சுவைதர வாசந் திகழ்த்தி யெண்டிசையுஞ் சுற்றியே சிலமொழி பகர்வார். (98)

ஆதிநா யகன்றன் றிருநபி யிறசூ லாமிவர் தங்கலி மாவைப், பூதலத் துறைந்த படைப்பவை யாவையும் போற்றுதல் செய்யவும் வேண்டு, மீதலா லமா ரிவர்கலி மாவுக் கிசைந்தன வென்பது மிசைத்துச், சூதர மொழியா ராமினு விடத்திற் றோன்றலைக் கொடுத் தகன் றனரே. (99)

அந்தர மவனி கடன்மலை யெழுதீ வகத்தினு மெண்டிசை முழு துஞ், சுந்தர வதன முகம்மதைக் கொடுபோய்ச் சுற்றியெங்கணும் பெயர் விளக்கிச், சந்தமென் முகத்தா மரைமலர் குளிரத் தடஞ்சிறை வானவர் திரண்டு, வந்தது மாமி னுதிரு மனையில் வைத்தது மொரு நொடிப் பொழுதே. (100)

வள்ளலென் றுதவிப் பெயர்நிலை நிறுத்தி வளந்தரு புகழ்புல் காசீ, முள்ளக நிறைந்த செம்மலர்ப் பதந்தொட் டொளிர்பெறுமிணை விழிக் கேற்றி, விள்ளரும் பவளம் விரிந்தன கனிவாய் விளங்கிட வாழ்த் தெடுத் துவந்து, தெள்ளமு தனைய முகம்மது நபியைச் சபாதிரு மடிமிசை கொண்டார். (101)

மலர்தரு கரத்தா லேந்தியே மடியில் வைத்தினி திருக்குமந் நேர, மலர்தரு பவள வாயிதழ் திறந்தே யழுதனர் முகம்மது நபியு, முலக மும் விசும்பு நிறைதரப் பொருந்து முடையவன் சத்தமுண்டான, திலகிய கமல முகமலர் சபாவுக் கிறகுமத் துண் டாகவென் றிசைந்தே.

சத்தமுண் டாகிக் கேட்டவப் பொழுதே சபாவெனு மடமயி றனக்குப், பத்தவிட் டொளிரு றாமிராச் சியத்துப் பதியின்மாளிகை யெலாந் தெரிந்து, மித்திர னெழுந்த குணதிசை தொடுத்து வீழ்தரு குடமிசை தொடுத்துச், சித்திரம் பெறவே யிருவிழிக் கெதிரே தெரி தரச் சிறந்தன வன்றே. (103)

வரியளி குடைந்து தண்ணறு வருந்து மலர்ப்புய னப்துல் முத் தலிபு, கருதிய வரங்கேட் டிருந்துநெஞ் சுருகுங் காலையிற் கருப்பத்துல் லாவி, னிரைநிரை செறிந்த புத்தக ளனைத்து நெட்டுயிர்ப் பொடுலைந் தலைந்து, விரைவினிலோடிக் காவத வழிக்கு வேறுவேறாய்க்கிடந் தனவே. (104)

பானலங் கடந்து சேலெனப் பிறழ்ந்து பரந்துசெவ் வரிக்கொடி
யோடி, மான்மருள் விழியா ராமினா விருந்த வளமனைத் திசையினை நோ
க்கி, நானிலம் புகலுங் கருபத்துல் லாவி னாலுமூ லையுமொரு நெறியா
ய்த், தூநறை கமழ வொளிதிகழ் தரவே சுஜூது செய் தெழுந்தன
வன்றே. (105)

இறையவ னேவ விண்ணவர் கரத்தா லியற்றிய மணிமதிட் கஃபா,
மறைபடா தேவர்க்குங் கேட்பன வாக வாய்திறந் தோதுவ போன்று,
குறைபடா வடிவும் பெருமையும் பெற்ற கொற்றவ னென்றனை யின்றே
நிறைதரப் புனித மாக்கினா னென்ன நிகழ்த்திய தொருமொழி யன்றே.

இரவினிற் றனித்தங் கிருந்தகா லையினி லியற்றிய புத்துக ளனை
த்தும், பரவியே சிதறக் கண்டுடங் சகுபாப் பண்புறச் சுஜூது செய்
தியல்பா, விரைவினின் மொழிந்த வார்த்தையுங் கேட்டு வெருவியே
யப்துல்முத் தலிபு, முருகுகொப் பிளிக்கு மாமினா மனையின் முழுமணி
வாயில்வந் தடுத்தார். (107)

தரையினிற் பரந்த குபிரிருட் குலமுஞ் சாற்றிய கலியிருட் குல
மும், வரைவிலா தொடுங்க முறைமது நபியிம் மானிலத் துதித்தன
ரென்றே, கரையிலா வுவகை யார்ந்த வெள்ளக் கடலிடை குளித்துறக்
களித்து, விரைவினிற் றிமிரக் கடற்பகை துரந்து வெய்யவன் கதிர்கள்
விட் டெழுந்தான். (108)

விடிந்தவப் பொழுதி லப்துல்முத் தலிபு விரைவினி லாமினா வெ
ன்னு, மடநதையைக் கூவி வருகவென் றுரைப்ப மடமயிற் பெடை
யென வெழுந்து, நடந்தெதி ரரக்கண் டம்மநின் னுதலி னலங்கிளர்
பேரொளி யொன்றுண், டிடந்திகழ்ந் திலங்கக் காண்கிலே னென்ன
வீன்றனன் மகவென விசைத்தார். (109)

வஞ்சிமென் கொடியின் முகமலர் கவினு மருங்கினில் விசித்தபட்
டுடையுங், கஞ்சமென் மலர்த்தா ணிலம்புடைப் பெயர்வுங் கமழ்தரு
மெய்யினிற் குறியும், பிஞ்சுநன் னுதலுங் கண்டுளத் தடக்கிப் பெற்ற
வா றென்கொலென் றெண்ணிக், கொஞ்சுமென் மொழியீர் மதலையைக்
கொணர்கென் றுரைத்தனர் குளிர்மழைக் கொடையார். (110)

கூறிய மொழிகேட் டாமினா வெனது குமாரனை மூன்றுநாள் வரை
க்கும், வேறொரு வருக்குங் காணொணா தெனவே விண்ணவ ருரைத்

தன ரென்றே,யூறிய மதுர வாயிதழ் திறந்தே யோதின ரப்துல்முத் தலிபு, சிறினர் புருவ முரிதா விருகண் டிப்பொறி தெறித்திடச் சிவந்தே.

சினந்தமா துலரைக் கண்டுளம் பதறிச் சேயிழை யாமினா திகைத்துக், கனந்தரு கொடையா யரசர்நா யகமே கருதலர்க் கசனியே நந்த, மனந்தனிற் சினமென் மனையுநும் மனையே மகவுநும் மகவினின் மகவே, யினந்தரும் பலன்போ லெழுந்தசந் ததியை யெடுமிலம் புகுமென விசைத்தார். (112)

மருமலர் செறிந்து வண்டுகண் படுக்கு மஞ்செனுங் கருங்குழன் மடந்தை, தருமுறை கேட்டு வெகுளியைப் போக்கிச் சசிமுக மலர்ந்தகங் குளிர்ந்து, பருதியொத் திலங்கு மாளிகை புகப்போய்ப் பார்த்தனர் வாயிலு ளொருவ, குருவின கருவி கரத்தினி லேந்தி யுறுக்கிட வெருக்கொடு மீண்டார். (113)

மீண்டனர் பதறிக் காறடு மாறி விளைந்திடும் பயனையோ ராம, லாண்டகை யிவனார் நம்மனை தனைவந் தடுப்பனோ தகாதென வெண்ணிப், பூண்டநம் மினத்தா ரனைவர்க்கு முரைத்துப் போக்குவ மிவனையா மென்னத், தாண்டியே நடந்து வாயிலைக் கடந்தார் துன்பமுற் றப்துல்முத் தலிபு. (114)

காரண மனைத்தும் வெளிப்படா தமைக்குங் காலமென் றறிந்துண ராம, லூரவ ரெவர்க்கு முரைத்திவண் புகவென் றுளத்தினி லெண்ணிய காலை, பாரிடத் தெறும்பீ றுயிர முதலாய்ப் பகுத்தமைத் தவன் விதிப் படியா, லீரமுற் றுணங்கி நாவழங் காம லெழுதின மில்லம்புக் கிருந்தார். (115)

சிலைநுதற் கயற்க ணாமினா வெண்ணுஞ் செவ்விபூத் திருந்தபொன் மடந்தை, மலர்தலை யுலகிற் சுருதியை விளக்கு முஹம்மது நபிநயினாரை, யிலகிய கமலக் கரத்தினி லேந்தி யிருவிழி குளிர்தர நோக்கிப், பசைலை யறிவுங் கொடுப்பபோ லெழுநாட் பான்முலை கொடுத்தன ளன்றே. (116)

மின்னவிர் சுவன வானவர் கூண்டு விளங்கொளி யின்மணித் தசும்பி, னன்னிலைச் சலிலங் கொணர்ந்துகோ தறவே நறைகமழ் முகம்மது நபியை, யிந்நிலம் விளங்க விளக்குவ தெனவே யெழிற்காத் தேந்திநீ ராட்டிப் பன்னிய சலவாத் தோதியே வாழ்த்திப் பரிவுடன் புகழ்ந்துபோந் திடுவார். (117)

இலங்கிலை வேற்கை யப்துல்முத் தலிபு மொழுதின மனையகத் திருந்து, நலங்கிளர் நாவும் வழங்கிட மனத்தி னுல்லவைப் பயனேயு முணர்ந்து, கலங்கியே தெளிந்து மதலைமேல் விருப்பாய்க் கடுவிழி கனிமொழித் துவர்வாய்ப், பொலன்கொடி யாமினுமணி மனையிற் புக் கினர் புயங்கள் விம்முறவே. (118)

திண்டிறற் பொருப்பும் பொருவரா தெழுந்து செம்மையிற் றிரு ந்தபொற் புயத்தார், வண்டணி குழலா ராமினு வெனும்பேர் மடந் தைதந் திருமுக நோக்கிக், கண்டெனு மொழியா யிவ்வழி நிகழ்ந்த காரணக் காட்சிக ளெல்லாம், விண்டெமக் குரையு மென்றனர் முறுவல் விளங்கிய குமுதவாய் திறந்தே. (119)

பறவைக ளனைத்தும் வந்ததுஞ் சுவனப் பதியைவிட் டமரர்வந் ததுவு, மறியமு மாசி யாவும்வந் ததுவும் வானவர் மகளிர்வந்ததுவுங் குறைவிலாப் புதுமை பலவுங்கண் டதுவுங் குறிப்புடன படிப்படி யுரைத்தார். (120)

புகன்றநன் மொழிகேட் டறப்பெரும் புதுமை புதுமையீ தெனச் சிர மசைத்துன், மகன்றனைத் தருக வென்றனு மடமான் மகிழ்வொடு திருமனை புகுந்து, மிகுந்தபே ரொளிவு சொரிந்து கால் வீச விளங்கிய முகம்மதை யெடுத்துச், செகந்தனி புரக்கு மப்துல்முத் தலிபு செழு மணித் தடக்கையி லீய்ந்தார் (121)

கறைநிணஞ் சுமந்த செங்கதிர் வடிவேற் காதல ரப்துல்முத்தலிபு, முறைமுறை மோந்து முத்தமிட் டுவந்த முழுமலர்ச் செழுமுக நோக் கி, நிறைமதி நிகரா முகம்மது நபினுர் நிலவுகசொ ளிரித்திடச்சிரிப்பக, குறைபடா வுவகைப் பெருக்கெடுத் தெறியக் குளித்தகமிகமகிழ்ந் தெழுந்தார். (122)

கதம்பமான் மதம்பே ரொளிவுடன் றிகழ்ந்த காளையைக் கரத் தெடுத் தணைத்து, மதஞ் சொரிந் தசைந்த களிறென டந்து வந்து கஃபாவினை வலஞ்செய், திதம்பெறப் போற்றி யுள்ளுறப் புகுந்தங் கிருந்திறை தனைப்புகழ்ந் தேத்தி, விதம்பெற முகம்ம தெனப்பெயர் தரித்து வீறுடன் றிரும்பின ரன்றே. (123)

தேமலர்ப்பொழில்சூழ் சுவனநாட்டரசைத்திசைதொறும்விளக்கு நாயகத்தை, மாமறைக் கொழுந்தை முகம்மது நபியை மறுப்படா தெழுந்தசெம் மணியைப், பூமலா குழலி யாமினு வென்னும் பூங்கொடி கரத்தினி லருளி, நாமவை வேற்கை யப்துல முத்தலியு நடந்துதந் திருமனை சார்ந்தார். (124

அன்புட னெழுநா ளணியிழை சுமந்த வாமினா முலையருந்தியபி, னின்புற அபூல ஹபுதிரு மனையி னிருந்ததோர் மடக்கொடு துவைபா, மன்பெரும் புகழார் முகம்மது நபிக்கு மனமகிழ் வொடுமுலை கொடுத்துத், தன்பெரும் புகழும் வரிசையும் பெருகத் தழைத்தினி திருக்குமந் நாளில்.



நபியவதாரப் படல-முற்றிற்று.

ஆ படலம்-5-இு திருவிருத்தம்-290

# அலிமாமுலையூட்டுப் படலம்.



அறிவத பறமுறை பயிற்றி யன்புட
னெறிவளர் தரவளர்த் திடுவ தீயெமக்
குறுதியாய் முகம்மதை யருளொன் றானனியே
யிறையுடன் மொழிந்தன ரமா ரியாருமே. (1)

நம்பெறும் பேறெனு நபியைப் பொனனுள
கம்பொன்னீ ராட்டிநல் லமுத மூட்டியே
யெம்பதிக் கரசென வியற்று வோமென
வும்பாதம் மகளிர்க ளுவந்து கேட்டனர். (2)

நானமறை நபியையெம் மிடத்தி னலகிற்
பானமுலை கொடுத்தியாம் பரிபப தமமென
மான்மறை விலங்கின மனைத்து நம் வாய்திறந
தீனமில லவன்றனை யிரந்து கேட்டதே. (3)

இரைத்தெழும் புள்ளெலா மேகன் றனனிடத
துரைத்திடு மெங்கள்பா லுதவி நநநபி
வருத்தமொன் றின்மையா மதுரத் தேனகனி
யருத்தியாம் வளர்ப்பதற் கைய மில்லையே. (4)

வேறு.

என்று கூறிய பலமொழி கேட்டபி னிறையோன்
மனற லங்குழ லாளலி மாவெனு மடநதை
வெனறி யாமுலை கொடுப்பதும் வளர்ப்பதும் விருப்ப
மனறி யேதகு மோபிறர் தமக்கென வரைந்தான். (5)

இறைவ னிம்மொழி கூறலு மமர்க ளியாரும்
பிற மொழிந்திலர் மனத்திடை பயம்பெரி தானார்
சிறை விரித்திடும் பறவையும் விலங்கினத் திரளு
மறு மொழிக்கிட மெல்லெனப் போற்றின மகிழ்ந்தே. (6)

கனை கடற்றிரை யாடைசூழ் பாரினிற் கவின்கொண்
டனைய நாட்டினி லறபெனும் வளமைநா டதனுள்
குனையி னென்றொரு பதியலி மாகுடி யிருந்தா
ரினைய வூரினி னடந்தவா றெடுத்திசைத் திடுவாம். (7)

வேறு.

கருங்கட னீரையுண் டெழுந்து கார்குலம்
பெருந்தரை யெங்கணும் பெய்த வில்லையா
விருந்தபைங் கூழெலாங் கருகி யெங்கணும்
பரந்தது சிறுவிலைப் பஞ்ச மானதே. (8)

மலிபசி யானையாய் வறுமை சேனையாய்ப்
பலபரி பவங்களாய்ப் பழிர தங்களாய்க்
கலையமச் சாத்துரை கணக்கர் கோபமாய்க்
கொலையர சன்கொடுங் கோன டாத்தினான். (9)

குலமுறை மனனாபோய்க கொடிய பாதகர்
தலைநிலம் புரநதிடுந தகமை போலவே
நலனுறு கொடையெனு நாம வேந்துகெட்
டிலனெனு மாசுவிற் றிருநத காலமே. (10)

உருத்திரண் டெழுந்தபொய் யுடம்பை மெய்யெனத்
திருந்துபுண் ணியப்புகழ் தேடி நாடொறும்
வருத்தமின் றிப்பொருள் வழங்கு மேலவர்
தரித்திரம் படைத்திடுஞ் சாம காலமே. (11)

நெடுநிலம் பாரறத் தொட்டு நீரிறைத்
திடுபயிர செய்துகாத் திருந்து கள்வராற்
படுமுறைப் பாடெலாம் படப் பலித்திடாக்
கொடுமையா லகவிலை குறைந்த காலமே. (12)

காயிலை கிழங்கெலாங் கரு வறுத்துக்கான்
மேய்வி லங்கினம் பலகொன்று மென்றுமே
தீயவப் பசிப்பிணி தீண்ட லாற்சன
மாய்வுறு சடம்பல மலிந்த காலமே. (13)

நலந்தரு கற்பெனு நாமங் கெட்டட
லுலர்ந்தறப் பசியினா லொடுங்கி யினர்த
மிலந்தொறும் புகுந்திரந் திடைந்து வாடிநற்
குலந்தலை மயக்கிடுங் கொடிய காலமே. (14)

மதலைகள் பிறர்மனை வாயி றாங்கிநின்
றிதயநொந் திருகையேந் திரப்பக் கண்டுதாய்
விதிகொலென் றேங்கிட வேறு வேறதாய்ப்
பதிகுலைத் தெறிந்திடும் பஞ்ச காலமே. (15)

பஞ்சமென் றுருகொடும் பாவி தோன்றிடத்
துஞ்சினர் சிலர்தனி துறந்த பேர்சிலர்
தஞ்சமற் றடிமையாய்ச் சார்ந்த பேர்சிலர்
ரஞ்சியே புறநக ரடைந்த பேர்சிலர் (16)

கரிப்பினிற் சனமெலாங் கலைந்து போதலா
லுரைப்பருங் குணனெனு மூருள் ளோரெலா
நிரைப்பெறக் கூடியே நினைத்து சாவினின்
றுருப்பட வுய்யுமா றுத்துப் பேசினார். (17)

மகிதலத் துயர்பதி மக்க மென்னுமூர்
புகுதலே கருமநம் பூவை மாரணி
நகிலமு தூட்டிட மதலை நல்குவா
ரிகல்புரி தெரித்திர மிலையென றேதினார். (18)

மக்கமா நகரெனும் வரிசை யூரதிற்
புக்கியே பிழைப்பது பொருட்டென் றெண்ணியே
மிக்கபே ரனைவரும் விளம்பிக் காலமே
தக்கநற் பயணமென் றெடுத்துச் சாற்றினார். (19)

ஆரிது மனையலி மாகண் டுஞ்சிட
வேரிய மடிமிசை யிருக்க மொன்றதிற்
றாரிலை பணரெலாங் கனிக டேங்கிடச்
சீர்பெறு நறைகனி யமுதஞ் சிந்தவே. (20)

மரகத நிறமா மடியிற் றோன்றியே
சொரிகதிர்க் கனியெலாந் துய்ப்பச் செங்கயல்
வரிவிழி மயிலலி மாக ணவினைத்
தெரிதரக் கண்டெழுந் தெவர்க்குஞ் செப்பினார். (21)

அறிவுறு துவைபெனுந் தந்தை யாகிய
மறையவன் கேட்டுத்தன் மகளை நோக்கி நன்
னெறிதிகழ் மக்கமா நகரி னீர்செலின்
பெறுபல னுறுதியுண் டென்னப் பேசினான். (22)

அம்மொழி கேட்டலி மாவு மாரிது
நம்மையாள் பவளாரு ணமக்குண் டென்னவே
தம்மினத் தாருடன் கூண்டு தாழ்விலாச்
செம்மைசேர் மக்கமா நகரிற் செல்கின்றார். (23)

இடுக்கிய குழந்தைபு மேந்து பிள்ளையும்
வடுப்பிள வனையகண் மான னார்களுங்
கடுப்பினிற் கணவமா ருடனுங் கற்குவைத்
திடர்ப்படு சிறிநெறி செல்கின் றாரரோ. (24)

வரும்பரி வாகனத் துடனுந் தம்மனம்
விரும்பிய மக்கமா நகரை மேவிய
கரும்பெனும் மொழியனார் காளை மாருடன்
பெருந்தெரு விடந்தொறும் பிரியத் தெய்தினார். (25)

பிறைநுதற் கருங்குழற் பெண்க ளியாவருங்
குறையற மென்முலை கொடுத்துக் கூலிக்கா
மறுவறப் போற்றியே வளர்ப்ப மியாமெனச்
சிறுவர்க ளுளமனை யனைத்துந் தேடினார். (26)

கூலியின் முலையமு தூட்டுங் கோதையர்
நாலொரு பதின்மர்வந் தவரு நன்குறப்
பாலகர் பெற்றுறு பலனும் பெற்றனர்
சாலவெம் பசிப்பிணி தவிர்ந்திட் டாரரோ. (27)

ஆயிழை யெனுமலி மாவு மாரிதுந்
தூயநற் றெருவெலாந் திரிந்து சோர்ந்தொரு
சேய்கிடைத் திலையெனத் திகைத்து வாடியே
வாயுரை மறந்தற மதி மயங்கினார். (28)

உடற்பருத் திலவொரு முலையுஞ் சுவையிம்
மடக்கொடிக் கெனமறுத் தாரொன் றெண்ணியே
தடப்புய ரப்துல்முத் தலிபு தம்மனை
யிடத்தினில் வந்துநின் றிசைத்திட் டார்களே. (29)

தரைப்பெரும் புகழெலாந் தரித்து மாமணி
நிரைத்தணி குங்கும மாலை நீங்கிலா
வரைப்புய அப்துல்முத் தலிபு வந்துநின்
றுரைத்தவ ரிருவரை யுற்று நோக்கினார். (30)

உடனுலர்ந் தொடுங்கியோர் மூலையுஞ் சூகைகொண்
மடமயில் கூலிப்பால் வழங்குவோமெனத்
திடமுற விசைத்தன டெறியுங் காரணங்
கடவுளின் பயனெனக் கருத்தி லெண்ணினார். (31)

கோதைநின் குலம்பெய ரேது கூறென
மாதவ ருரைத்தலு மடந்தை பண்புறச்
சாதெனுங் குலத்தினென் றாயுந் தந்தையு
மோதுமென் பெயராலி மாவென் றோதினார். (32)

குலத்துடன் பெயரையுங் கூறக் கொற்றவர்
நலத்துடன் செல்வமும் பொரையு நன்கெனப்
பெலத்தது பொருளென வெண்ணிப் பேதியாச்
சிலைத்தடம் புயர்பல தெரிந்து கூறுவார். (33)

பெறுமொரு தந்தையு மில்லைப் பின்னிய
வறுமையொத் தீம்தரு மதலை யுண்டுகொ
லரிவுற முலைகொடுத் தாக்கஞ் செய்வதற்
குறுவதோ நும்மன மென்ன வோதினார். (34)

மன்றலங் குழலியு மன்ன ராரிது
மொன்றிய மனத்தொடு சாவிச் செல்குவ
நன்றுபார்த் தறிகுவ நாமென் றுன்னியே
வெனறிவேற் செழுங்கா வேநதுக் கோதினார். (35)

அவ்வயி னப்துல்மூத் தலிபு மாங்கொரு
செவ்விய வறிவனைக் கூட்டிச் செல்கென
நவ்விநோக் குறும்விழி யாமி னாவெனு
மவ்வலங் குழலிமா மனைக் கனுப்பினார். (36)

வேறு.

அரிவை யாமினா வகத்தினி லடைந்தலி மாறும்
முரிய மைந்தனுக் கென்முலைப் பாலமு தூட்டத்
தெரியவந்தன ளருளக் கென்றலுஞ் சிறந்த
மரும லர்க்குழ லிவாக் கெதிர் மொழிவழங் குவாரால். (37)

உற்றதந் தையுமிலை யுறுபொரு ளிலை யெத்தீம்
பெற்ற பிள்ளையோ ருதவிசெய் குநர்கிற ரிலைநீர்
பற்று நற்பொருட் குறித்துவந் தவர்பசி யுடையீ
ரிற்றைக் குண்பதற் கிடமிலை யென்னிடத் தென்றார். (38)

அந்த வாறலி மாதுணை யாரிதை நோக்கி
யிந்த நன்மனைக் குறுபொரு ளேதுமொன் றிலையாந்
தந்தையு மிலையாம் வறு மைக்குடி தானு
மெந்த வாறியா முய்வதிக் குழந்தையா லென்றார். (39)

பலன் படைப்பதும் வறுமையைப் படைப்பதும் பாரி
னலம் படைப்பது முடையவன் விதிப்படி நடக்குற
றுலைந்து நின்மன முடையதென் வெண்டிரை யுடுத்த
தலம் புரப்பதின் றெனச் சாற்றவு மரிதே. (40)

படியி னிற்பெறும் பலனமக் குளவெனிற் பாதிக்
கொடி மருங்குலிக் குழந்தையா லாங்கொடி யவரேல்
வடிவு றும்பொரு ளடுக்கினு நம்வயின் வாராக்
கடிதி னிற்புகுந் தறிவமென் றுரிது கரைந்தார். (41)

இருவ ரும்மெழுந் தாமினா மனையிடத் தெய்தித்
தெரிவை நும்மகக் கொணர்கெனக் கேட்டலுஞ் சிறந்த
பரிம ளந்திகழ் மதலையைக் கொணர்ந்தனர் பார்த்தார்
வரி பரந்த செவ் விழிதிறந் தனர்முகம் மதுவே. (42)

கண்டி றந்தவப் போதினிற் கவினொளி கதிர்விட்
டெண்டி சையினும் பரந்திரு சுடரினு மிலங்கப்
பண்டு கண்டிலாப் புதுமைகொ லெனவுளம் பயந்து
விண்டு ரைத்திடா திருவரு மயங்கிமெய் மறந்தார். (43)

பார்த்த கட்கதிர் பரத்தலிற் பயந்தவர் தெளிந்து
கூர்த்த தன்மனத் ததிஜயித் தகமகிழ் கொண்டு
கார்த்த டங்கடற் கீண்டெழு முழுமதிக் கதிரைச்
சேர்த்தநேமியம் புள்ளென வுவகையிற் றிளைத்தார் (44)

வேந்த ராரிது தம்மனை யாடமை விழித்துக்
காந்தண் மெல்லிதழ்ப் பசுந்தொடிக் கரத்தினால் விரைவி
னேந்து மென்றன ரிலங்கிழை மடமயி லலிமா
வாய்ந்த பேரொளி முகம்மதை யினிதெடுத் தணைத்தார். (45)

மலிந்த பேரொளி முகம்மதை யெடுத்தலும் வருந்தி
மெலிந்த மெல்லிழை சடம்பருத் தோங்கின வீங்கிக்
கலந்த மான்மத வாசமுங் கமழ்ந்தன கருகி
யுலந்த சூகைமென் முலைதிரண் டழகொழு கினவே. (46)

வடந் தயங்குபூண் செப்பெனப் பணைத்திறு மாந்து
கடந்த மும்மதக் கரிபினைக் கோட்டினுங் கதித்துக்
குடந் தயங்குற விம்மிதக் கொண்டுபொற் குவட்டை
யடர்ந்த பெண்முலைக் கண்டிறந் தொழுகின வமுதம். (47)

பாகி ருந்தமென் மொழியலி மாவலப் பாகச்
சூகை மென்முலை திரண்டதும் பாருளும் பியதுங்
தேக மெங்கணும் பருத்ததுங் கண்டெழில் சிறந்து
வாகு றும்வடி வாயின ராரிது மகிழ்ந்தே. (48)

புதிய நல்வடி வாகிய பூங்கொடி யலிமா
கதிர் விரித்திட மடிமிசை வைத்துக்கால் வருடிக்
குதிகொள் பான்முலை குடித்திடக் கொடுத்திடக் குறையா
மதுர வாய்திறந் தமுதமுண் டனர்முகம் மதுவே. (49)

நறை கமழ்ந்தொளி ததும்பிய முகம்மது நபியு
முறைமை யாகவுண் டனர்வலப் பாரிச முலைப்பான்
மறுவி லாததம் மதலையு மிடதுபான் மருங்கிற்
குறைவி லாதுவந் தடிக்கடி குடித்துக்கொப் பிளிக்கும். (50)

வற்றித் தூங்கிய லமுறத்து வெனுமந்த மதலை
நற்ற வம்பெறு முகம்மது நபிபறக் கத்தா
லுற்ற பால்குடித் துடறழைத் துறுபிடி யாகி
வெற்றி வெங்கயக் கன்றெனக் கவின்விளங் கியதே. (51)

மாத வம்பெறு முகம்மது நபிக்குந்தம் மகற்கு
மேத மின்றிய பால்கொடுத் திருந்துசின் னுட்பின்
கோதி லாக்குனே யினிற்செலக் கருத்தினிற் குறித்துக்
காத லித்துரைத் தார்துணைத் தார்க்கண வருக்கே. (52)

இருவ ருமமனச் சம்மதக் களிப்புட னேகி
யரசர் நாயக ரப்துல்முத் தலிபைச்சென் றடுத்து
வரிசை பெற்றனம் பொருள்பல பெற்றன மகிழ்ந்தெம்
புரிசை சூழ்பதி புகுவமென் றுரைத்தனர் புகழ்ந்தே. (53)

கேட்ட போதினி லப்துல்முத் தலிபெனுங் கிழவோர்
வேட்ட லாயிரு வருக்குநன் மொழிபல விளம்பிக்
கோட்டு மாங்குயி லாமினுக் கிவையெலாங் கூறி
வாட்ட மில்லதோர் நும்பதிச் செல்கென வகுத்தார். (54)

இந்த வாறுதேர்ந் தாரிது மெழிலலி மாவுங்
கொந்து லாங்குழ லாமினு மனையினைக் குறுகிச்
சுந்த ரந்தவழ்ந் திலங்கிய கொடியினைத் துதித்துச்
சிந்தை யின்னுறுஞ் செய்திக ளனைத்துஞ்செப் பினரே. (55)

தம்ப திச்செல விருவருஞ் சாற்றிய மாற்றஞ்
செம்பொற் பூங்கொடி யாமினு கேட்டுளந் திடுக்கிட்
டம்ப ரத்தெழு முழுமதி நிகருமு மதுவைக்
கம்ப ணிந்தசெங் கரத்தெடுத் துவகையிற் கலுழ்ந்தார். (56)

தேன் கிடந்தசெங் கனியிதழ்ப் பவளவாய் திறந்து
வான கிடந்தொளிர் மதியினு மொளிர்முகம்மதுவைக்
கான கிடந்தமெய் யுறமுத்த மிட்டுடல் களிப்ப
வூன் கிடந்தவேல் விழிமல ரிணையிலொத் தினரே. (57)

அமரர் நாயக மேபுவி யரசருக் கரசே
தமரி னுக்கொரு திலதமே யாக்குநா யகமே
நம துயிர்க்குயி ராகிய முகம்மது நபியே
சுமை தருங்கட லேயெனப் போற்றினர் கனிந்தே. (58)

போற்றி முத்தமிட் டணியணிந் தருந்துகில் புனைந்து
மாற்ற லார்க்கரி யேயென முகம்மதை வாழ்த்தித்
தேற்ற மெனமொழி பலவெடுத் தாமினு செப்பிக்
கூற் றடாந்தவேல் விழியலி மாகையிற் கொடுத்தார். (59)

தன்னு டன்பிறந் தவளென விருகையாற் றழுவி
யென்மக னலதின மகனிவ னெனவியம்பி
மின்னு ணங்குவே லாரிதை வெறுதியால வியத்திப
பொன்ன னுருட னூரினிற புகுமெனப் புகன்றார். (60)

வேறு.

அருந்தவம் புரியும் பெருந்தலம வணங்கி யடைகுவம் பதிக்கென அலிமா, வருந்திடா தெழுந்து முகம்மதைக் கதிரின் மணிவனைக் கரத்தினி லேந்தித் திருந்திட நடப்பக கருபத்துல் லாவிற சிறந்திடு தெனகிழ மூலை, யிருந்திடும் கசுறு லசுவது வெனுங்கல்லெதிர் கொடு நடந்தன வன்றே. (61)

நாரி யுங்கற் றெட்டுமுத் தமிட்டு நடந்து கம்பா வலஞ்செய்து
சீரிதி னியன்ற வாயிலி னெதிரே சென்றுநின் றிறைஞ்சு மந்நேரந்,
தாரணி திகழ்ந்த குபலெனும் புத்துத் தலைகவிழ்ந் தனவதனடுப்ப,
நேர்பெற நிரையா யிருந்தபுத் தனைத்து நிலமிசை சாய்ந்துருண்
டனவே. (62)

புதுமைக ளனைத்துங் கண்டுகண் குளிர்ந்து பொற்கொடி கருபத்
துல் லாவிட், டிதமுற நடந்து கணவரைக் குறுகி யெடுத்திவை யனைத்
தையு மியம்ப, மதியினிற் றெளிவுற் றுரிது மலிமா மலர்முக நோக்கி
யிம் மகவாற், கதியுறு நமக்குச் செல்வமும் பெருகுங் கவலையுந் தீர்ந்
தன மென்றார். (63)

நன்றெனப் புகழ்ந்து மனங்களி கூர்ந்து நாரியு மரிது தாமும்
வென்றிகொண் டனமென் றெட்டைமேற் கொண்டார் மேனியிற்
சொறியுடன் வரடு, மொன்றிய கிழடுந தூங்கிய குணமு மொழிந்தது
திடபிடி யாகிக், குன்றென வுயர்நது பருத்துறக் கொழுத்துக் குதிப்
பொடு நடந்தன வன்றே. (64)

குலையின்விட் டெழுந்த கொடியிடை மடவார் கூடின ரொரு
முக மாக, வனைவருந் திரண்டு மக்கமா நகர்விட் டருவரைச் சிறுநெறி
யணுகித், தனையரும் புதிய தனயரு முயிரோபோற் றலைவரு மடநதையர்
தாமுங், கனைகுரற் களிறும் பிடிகளுங் கனறுங் கலநதுட னடப்ப
தொத் தனரே. (65)

மல்லுயர் திணிதோ ளாடவர் பலரும் வனமுலை மடக்கொடி யாவ
ருஞ், செல்லுஞ னெறிபால வயினவயின செறிநத செடிகளு மரந்
தலை யெவையுங், கலலுமகற் குவையும் யாவருங் கேட்பக் கடிதினிற்
றெளியவாய் விண்டு, செல்லுயா கவிகை முகம்மது நபிக்குத்தெரிதரச்
சலாமுரைத் தனவே. (66)

நடந்தவர் வெயிலா லுடறடு மாறி நலிதரத் தாகமும் பெரிதாய்
விடந்தபங் கியகண் ணிணைமட வாரு மெலிதரச செல்லுமக் காலைக்,
கிடந்ததோர் கான மிலைபில வாகிக் கிளைதகிடும் பணமெலாங் கருகி,
யிடந்தொறு நிழலற் றிருந்தவ் விடத்தி லிறங்கின ரனைவருஞ் செறி
ந்தே. (67)

மான்மதஞ் செறிநது கமழ்தர அலிமா மடிமிசை முகம்மது
விளங்கக், கானகந தழைததுப் பணைகளவிட் டெழுநது கதிரவன
கனற்கா மறைதது, நீனிறப பசநத விலைமிக நெருங்கி நிறைமலர்

சொரிதரக் காய்த்துத், தேனிருந் தொழுகுங் கனிபல சிதறித் திசை யெலா நிறைந்தன வன்றே. (68)

கண்டவர் மனமுங் கண்களுங் குளிர்ந்து கனிபல பறித்தெடுத் தருந்தி, வண்டணி குழலார் வருத்தமுந் தீர்ந்து வழியினிற் பெரும்ப லன் கிடைத்துக், கொண்டதுந் தாகந் தீர்ந்தது மலிமா குழந்தையா லாமெனச் சூழ்ந்து, முண்டக மலர்த்தா ளினில்விழி சேர்த்தி முகம்ம தைப் போற்றி வாழ்த்தினரே. (69)

இலைபல தளிர்த்துக் குளிர்வனச் சோலை யிருந்தவ ரனைவருமெ ழுந்து, குலவுவா கனத்திற் கொண்டுகுன் றுகளுங் குழிதருங்கானியா றுகளு, நிலைபெறுஞ் சுரமுங் கடந்தவர் நடந்து நீள்வரை யனையமா மதிள்சூழ், பலபல மனையுந் தெரிதர நோக்கிப் பதியெனுங் குனையினை யடைந்தார். (70)

பதியினை யடுத்தா ரவர்மனை புகுந்தார் பாவையர் பலரும்வந் தடை ந்து, மதியினுந் தெளிந்த வடிவெடுத் தனைய முகம்மதங் கிருப்பதைக் கண்டா, ரதிஜய மிஃதென் றணிமலர்த் தாளி லயில்விழி வைத்துமுத் தமிட்டு, நிதியமும் பேறும் படைத்தன ரலிமா நிகரிலை யிவர்க்கினி யென்பார். (71)

கூண்டுவந் தெடுப்பார் புகழ்ந்துபோற் றிடுவார் கொழுங்கனி முகம்மதை யிவருக், காண்டவன் கொடுத்தா னிந்தநற் பெரும்பேறணி யிழைபடைத்தன ளென்பார், தூண்டிடா விளக்கோ முழுமணி தானோ சுவர்க்கத்தி லிருந்துவந் ததுவோ, வேண்டியபொருளு முறுமொரு நாளோர் வீட்டினிற் புகிலெனப் புகல்வார். (72)

வறுமையுந் தீரு நோயும்விட் டகலு மனத்தினிற் கவலையு நீங் குஞ், சிறுமையு மகலும் புத்தியும் பெருகுந் தீவினை வந்தடாது, தெறுபகை சிதையுஞ் செல்வமும் வளருந் தேகமுஞ்சிறந்து பூரிக்கு, முறுபவந் தொலையு முகம்மதை யெவர்க்கு மொருபகற் காண்கிலென் றுரைப்பார். (73)

தன்கிளை யவரை விளித்தரு கிருத்திச் சாற்றினர் செரும்புகழ லிமா, வென்குலத் தவமோ யான்செய்த பலனோ விவர்தமைக் கிடைக் கவும் பெற்றேன், முனபெருஞ் சூகை வடுவையுந் தவிர்ந்தேன் முகமல ர் தரவடி வானேன், பின்புறு கலியுங் காண்கிலேன் பலனும் பெற் றன னெனவுரைத் தனரே. (74)

பாரினிற் சிறந்த மக்கமா நகர்க்குப் பயணமென் றிருக்குமன் றிரவி, னேருமென் மடியில் விருக்கமொன் றெழுந்து நிலமிசை கனிகளைச் சிந்த, வாரியே யருந்தி வறுமையும் பசியு மறந்துடல் களிப்பொடு மகிழக், கூருமோர் கனவு கண்டன னெனவே கோதையர்க் கெடுத்துரைத் தனரே. (75)

அரந்துடைத் தொளிருங் கதிரிலை வேற்கண் ணுமிறு திருமதனலிமா, வரந்தரு குழந்தைக் கொருமுலைப் பாலே வழங்கின படியறி வதற்கே, சுரந்திடுஞ் சூகை முலையமு தருந்தித் துயிறருங் காலையி லெடுத்துங், காந்துதம் மிடது பான்முலை கொடுக்கிற் கனியிதழ் வாய் திறந் தருந்தார். (76)

ஆரிது மனையிற் சிலதுருச் சொம்முண் டறக்கிழ டொடுசொறி மலடுஞ், சோரியில் வாடும் வங்குமா யிருந்த துருவைகண் முதுகினிற் றிறமாய், வாரணிந் திலங்கு மணிமுலை யலிமா முகம்மது திருமலர்க் காத்தாற், சீருறத் தடவ விக்கினஞ் சிதைந்து செவ்விபெற் றிலங்கிய வன்றே. (77)

வாலசைத் திடாத கிழடிள வுருவாய் வரடுவங் கறமல டும்போய்ச, சாலவும் பருத்திட் டுடறிரண் டழகாய்த் தளதளத் தணிமயி ரொழுக் காய்ச், சூலுமாய்ச் சிறிது பாலுமாய் முலைக்கண சுரப்பெடுத் தறச் சொரிந் திடலா, யேலவார் குழலார் மனையிடங் கொள்ளா திருநதது பறழ்களு நிறைநதே. (78)

ஓங்கிய குனையி னெனும்பதி தனனி லுறைபவ ரெவர்மனைக்கேனு நீங்கரும் பிணிவந தடுததிடி லவாக ணிறைதரு முகம்மதைக் காணிற் றீங்ககன் றிடுமச் செய்திகண் டறிநது செறிதரு பிறநக ருளரும், பாங் கினிற் புகுந்து முகம்மது மலாத்தாள் பணிநதுமெய் மகிழ்சசிபெற் றிருப்பார். (79)

மறைதராச் சோதி முகம்மது நயினார் வடிவுறு மெய்யினிற் றுகளு, முறைதரா நீரிற் கழுவிலா திருந்து முலவுறு சிக்குமொன் றணுகாக், குறைதரா வாசங் கமழ்வது மாறுக் குமிறினீர்ச் சிறிதுமே, யணுகாக், கறைதரா வரிச்செங் கண்டுயின் றெழினுங் கலந்துறு மாசு மொன் றணுகா. (80)

சலமலா திகளி னாற்றமுந் தோற்றுத் தரையருந் திடுவதேயல்லா னிலமிசை யெவர்க்குங் கணணினிற் றோன்று நீடரு நீழலுந தோன்று, வுலவிய வெறும்பு மொண்சிறை யீயு மொருபொழு தாகிலுந தீண டாக், கலையினின மயிலைப் படாதராப் பிள்ளைக் கனியெனு முகம்மது நயிக்கே. (81)

மாமயி லலிமா கண்டுயில் காலை முகம்மது தயிலிட நோக்கித், தாமதி யாது சந்திர னிறங்கித் தன்னுரு மாறிவேற் றுருவாய்க், காமரு மலர்த்தாண் மெல்லென வருடிக் கதிர்மணித் தொட்டிலை யாட்டிப், பூமண மனைக்கு ளிருந்தடி பணிந்து போவது தினந்தொறுந் தொழிலே. (82)

இந்துவாந் துறைந்து மலரடி வருடி யிரவெலாங் காத்தினி திருந்து, கொந்தலர் குழலார் மனையெலா நிறைந்த கொழுங்கதிர் பரப்பிடக் கூடி, வந்துவா னவர்க ளிடமற நெருங்கி மனைப்புறங் காப்பென விருப்பச், சுந்தர வதன முகம்மது நபியைத் தூய்யவ னினிதுற வளர்த்தான். (83)

வரையெனத் திரண்ட புயநபி நயினார் முகம்மதை வளர்த்திடு மனைக்குட், கரையிலாச் செல்வந் தனித்தனி பெருகிக் காட்சிகள் பலவு முண் டாகி, நிரைநிரை மாடா டொட்டகம் பலவு நிறைந்து பா றயிர் றை விலதாய்த், தரையினிற் குடிக்குட் பெருங்குடியான தலைவரா ரீதெனவிருந்தார். (84)

குலையினி லலிமா மக்களுந் தாமுங் குடிக்குயர் குடியெனவாழு, மனையினி லொருநாட் டெபமிட் டதுமில் முகம்மது பேரொளி யல்லாற் றணியவ னருளாற் றுன்பநோய் வருமை தனையடுத்தவர்க்குமில் லாமற் சினவுவேற் காத்த ராரிது மகிழ்ந்து செல்வமுஞ் செருக்கும்பெற் றிருந்தார். (85)

எங்கில மனைத்துந் தீநெறி நடப்ப வியல்பெறு மனுமுறை நடப்பத், துன்னி வறத்தின் றுரைவழி நடப்பத் துன்பமற் றின் குலமுறை நடப்பபன்னருஞ் செங்கோ லுலகெலா நடப்பப் பாரினிற் குலமுறை நடபப மன் னிய ரெவருஞ் சொற்படி நடப்ப முகம்மது நபிநடந் தனரே. (86)

நிலமிசை ஹாஷீங் குலம்பெயர் விளங்க நிகரிலா நேர்வழி விளங்கக்,குலவிய நிறையும் பொறுமையும் விளங்கக் கோதிலாப்பெரும் புகழ் விளங்க, வுலகுயர் புதுமைக் காரணம் விளங்க வுயாதரு வேதமும் விளங்க, மலர்தரு சோதிமுமகதி விளங்க முகம்மது சொல்விளங் கினவே. (87)

விண்ணகத் தமரர் மனமகிழ்ளளர வியனுறும் வரிசைகள் வளரக், கண்ணகத் திறைந்து கருணையும் வளரக் கவினிறை பிறை யென வளர, வெண்ணரும் புதுமைக் காரணம்வளர விறையவன் றிருவருள்

வளர, மண்ணகத் திருந்து கிளையெலாம் வளர முகம்மது நபிவளர்ந் தனரே. (88)

பாரினிற் பரந்த குபிர்குல மறுத்துப் படர்தரு தீன்பயிர் விளக் கச், சீருறுங் கனக மாமழை பொழியத் திரண்டெழுஞ் செழுமுகிற் குலம்போற், பேர்தருங் குறைஷிக் குலத்தினி லுதித்துப் பிறங்கொளி முகம்மது நபிக்கு, வார்பொரு முலையார் மனங்களித் துவப்ப வருடமு மிரண்டுசென் றனவே. (89)

கதிருடன் கதிபு மொருவடி வெடுத்த காட்சிபெற் றிருந்தணி சிறந்து, மதியினு மொளிரு முகம்மது நபிக்கு வயதிரண் டானதன் பின்னர், குதிகொளு மமுத மடிக்கடி சுரந்து கொடுத்திடு முலைமறப் பித்துப், பதியினி லிருந்து பொற்பதி புரக்கு பலன் படைத்து வந்தன ரன்றே. (90)

நெறித்திண் டடர்ந்த செழுமழைக் கூந்த னேரிழை வனமுலை யலிமாக், குறித்தசெம் பவளம் விறிந்தெனத் தேன்பாய் கொழுமடற் குமுதவாய் திறந்து, செறித்ததிண் மாட மக்கமா நகரிற் செல்குவந் தருணமீ தென்னப், பொறித்தபொற் குவட்டைப் பணைத்தெழும், புயத்துப் புரவல ராரிதுக் குரைத்தார். (91)

ஆரிதுமதனைக் கேட்டுறத்தெளிந்தங்கழகுறுங் கருமமீதென்னச், சீர்பெறு மனையா டம்மையும் பயந்த செல்வரி லொருசிறு வனையும், பாரினில் விளங்கு முகம்மது தமையும் பண்புடன் வாகனத்தேற்றி, யேர்பெரும் வரிசை மக்கமா நகருக் கெழுந்தனர் செழும்புய மிலங்க.

வானவர் சுவனப் பதிநிக ரனைய மக்கமா நகரினிற் புகுந்து, கானமர் குழலா ராமினுவென்னுங் கனிமொழிப் பொற்றொடிக் கரத்தி, னூனமுங் கவினும் வளர்நறுமே னிவந்த நபிமுகம் மதுநபிநூரைத், தேனவிழ் பதும மென்மலர்ச் செழுந்தாட் டிருந்திழை களிப்பொடுங் கொடுத்தார். (93)

மடந்தையிற் சிறந்த வாமினு வென்னு மலர்கொடி முகம்மதை வாங்கி, யிடம்பெறப் பிறழ்ந்து சிவந்தவே லென்னு மிணைவிழி முகத் தொடுஞ் சேர்த்திக், குடங்கையிலேந்தி மார்புறத் தழுவிக் குமுதவாய் முத்தமிட்டுவந்து, கிடந்தன மனத்திற் றுயரெலா மகற்றிக் கிளர்தரு முவகையிற் குளிர்ந்தார். (94)

முலைச்சுமை கிடந்த சிற்றிடை திரண்ட முகிலெனுங் குழலலி மாவை, யிலைத்தளிர் விரல்கண் முதுகுறப் பொருந்த வின்னுயிரா

பொருந்தல் போற் றழுவி. நிலைத்தபொற் பாவை யெனவரு கிருத்தி
நெறியுடன் பலமொழி புகழ்ந்து, மலைத்தடம் புயத்தா ரீதையும் போற்
றி மகிழ்ந்தன ராமினு வன்றே.

நெய்நிணங் கமழ்ந்த செங்கதிர் வடிவே னிருபர்கோ னப்துல்
முத் தலிபு, மைநிறப் பாவைக் கயல்விழி யலிமா வந்தது கேட்டு வந்
தடுத்து, மெய்நிறங் கதிர்முச் சுடரையு மழுக்கும் விறன்முகம் மது
தமை யெடுத்துக், கைநிறை பொருட்போ லிருவிழி குளிரக்கண்டக
மகிழ்ந்துடல் களித்தார். (96)

வடிவுறுஞ் சுடர்வே லப்துல்முத் தலிபு மரைமலர் மாமுக நோக்
கிக், கொடியென வயங்கு நுண்ணிடை யலிமா கொவ்வையங்கனியிதழ்
திறந்து, படியினி லெவர்க்குங் காணுறாப் புதுமைப் பாலகர் முகம்
மது தம்மான், மிடிமையுந் தவிர்ந்தோம் பாக்கியம் பெற்றோம் வேண்
டுவ பிறிதிலை யென்றார். (97)

ஆடவர் திலக ரப்துல்முத் தலிபு மாமினு வெனுங்குலக் கொடி
யும், பீடுறு மலிமா தம்மையுந் தலைமைப்பெருமையா ரீதையும்போற்றி,
நாடுறு மனத்தா லினத்தவர் மனைக்கு ணன்குற விருந்துக ளளித்துத்,
தேடிய பொருளைக் கிடைத்தவர் போலச் செல்வமுற் றிருந்தனர் சில
நாள். (98)

செவ்விய வரிசை மக்கமா நகரிற் றிங்களு லிரண்டுசென் றதற்பி,
னெவ்வரம் பினுக்கு மிகுவரம் பெனவா ழிலங்கிழை யாமினுதமையு,மவ்
வலந் தொடையா ரப்துல்முத் தலிபு மன்னையும் பொருந்துறப் போற்
றிக், கவ்வையங் கழனி குனையினிற் புகுதுங் கருத்தினைக் கருதியே
யுரைத்தார். (99)

எண்ணரும் பெருமைப் புகழுசை னயினு ரெடுத்தியற் றியபல
வரிசைப், புண்ணியப் பொருளாய் வருமபுல் காசிம் புந்தியி னடுவுறப்
பொருந்திக் கண்ணினு மிருக்கு முகம்மது நபியைக்கடிதினில் வாகனத்
தேற்றி, நண்ணிய குனையின வழியினைக் கடந்து நடந்துதம் மனையி
னைச் சார்ந்தார். (100)

---

அலிமா முலையூட்டுப்படல-முற்றிற்று.

ஆக படலம்-6-இ-கூடியதிருவிருத்தம்-390.



# இலாஞ்சனை தரித்த படலம்.

புரிசைசூழ் மக்கந் தன்னிற் போந்தவ ணிருந்தும் பின்னர்
திருவுறை குனையி னென்னும் பதியினிற் சேர்ந்தும் பாரிற்
குரிசின்மா முகம்ம தென்னுங் குலமணி தமக்கு நாளின்
வருடமூன் றென்னத் தேகம் வளர்ந்தது மிரட்டி தானே. (1)

ஆண்டுமூன் றுறைந்து நாலா மாண்டுசென் றதற்பின் செல்வம்
பூண்டமா மயிலே யன்ன பொலன் கொடி யலிமா வென்னுந்
தூண்டிடா விளக்கின் செல்விச் சுடர்மதி முகத்தை நோக்கிக்
காண்டகாப் புதுமை வண்மை முகம்மது கவலலுற்றார் (2)

சேட்டிளஞ் சிங்க மென்னுந் திறலுறை யப்துல் லாவும்
பூட்டிய தனுவால் வெற்றி பொருந்துகை லமுறத் தென்னுந்
தோட்டுணைத் தனைய ரங்கே சொல்லுக வனையே யென்னக்
கேட்டபி னலிமா வென்னுங் கேகய மறுத்துக் கூறும். (3)

பிள்ளைமென் கனியே செல்வம் பெறுந்தவப் பலனே யெந்த
முள்ளகத் துயிரே மாமை யோங்கிய முகம்ம தேயிந்
நள்ளிருட் பொழுது நீங்கி விடிந்த பினம்மிமார்க
டுள்ளுமென் மறிகண் மேய்ப்பத் தொடர்ந்தனர் காட்டி லென்றார். (4)

கானகத் தொருவின் பின்னே கலந்தனர் தனையர் தாமென்
றனைவ ருரைப்ப நவ்வி யகுமதுங் கருத்தி லுற்றுத்
தூநகைத் தாளச் செவ்வாய்த் துடியிடைக் கொடியை நோக்கி
யானுமவ் வழிசெல் வேனென் றடுத்தடுத் துரைப்ப தானார். (5)

வாமுறு முகம்ம திந்த வாசக முரைப்பத் தேன்பாய்
விரைமலர் செருகுங் கூந்தன் மென்கொடி யலிமா கேட்டுக்
கரையிலா வுவகை பொங்கிக் காளைதம் வதன நோக்கி
நிரைதரு தகர்ப்பின் னாளைச் செல்கென நிகழ்க்கி னாரே. (6)

விரிகதிர்ப் பருதி வெய்யோ னுதித்தபின் விளங்குஞ் செவ்வித்
துரைமுகம் மதுக்கு வெள்ளைத் துகிலெடுத் தரையிற் சாத்திச்
சிரசினி னெய்யுந் தேய்த்துச் செறிமணி கோல்கைக் கீய்ந்து
குரிசிலைக் குறித்துச் சூழ்ந்த குமாரை விளித்துச் சொல்வார். (7)

கற்செறி பொதும்பிற் கூர்ந்த கண்டக வனத்திற் சேர்ந்த
புற்செறி வில்லாப் பாரிற் பொறியரா வுறையுங் கானில்
விற்செறி வேனற் காட்டில் விரிநிழ லில்லாச் சார்பின்
மற்செறி புயத்தீர் சேறன் மறுமென மறுத்துஞ் சொல்வார். (8)

பணர்விரி நிழலுந் துய்ய பசும்புலி னிடமும் வாய்ந்த
மணம்விரி வனசம் பூத்த மடுவுறை யிடமு மார்க்கு
முணவுறை கனியுஞ் சேர்ந்த வொருங்கினி லாடு மேய்ப்பக்
குணவரை யனைய செவ்விக் குரிசிலைக் கொடுபோ மென்றார். (9)

இலங்கிழை யலிமா கூறும் வார்த்தைகேட் டிளையோ ரெல்லா
நலங்கிளர் மனம்பூ ரித்து நன்மொழி யீதென் றெண்ணித்
துலங்குசெம் மணியைச் சூழ்ந்த பலமணி போலச் சூழ்ந்து
குலங்கெழுங் கொறியின் பின்னே முகம்மதைக் கூட்டிச் சென்றார். ( )

பருதியின் கரங்கள் காணாப் பாசடை செறிந்த நீழற்
றருவிடை முஹம்ம தென்னுஞ் சலதரக் கவிகை வேந்தை
யிருமென விருத்திச சூழ்ந்த விளையரிற் சிலபுற் கானிற்
றுருவைமேய்த் தருநீ ரூட்டித் தோன்றுவ ரலது நீங்கார். (11)

சுற்றிய துணைவ ரோடுஞ் சொரிகதிர் முஹம்ம தென்னு
நற்றவ முடைய நம்பி வருவதை நோக்கி நாடிச்
சிற்றிடை யலிமா வென்னுஞ் சேயிழை யெதிரிற் சென்று
பொற்றொடிக் கரத்தி லேந்திக் கொறியுடன் மனையிற் புக்கார். (12)

மற்றுமிவ் வண்ணஞ் சின்னாண் முகம்மது மபதுல் லாவும்
பற்றுவிட் டகலா ராடும் பலுகின தொன்று பத்தாய்க்
குற்றமி லலிமா வென்னுங் கொடிமனை தபிடா னனைய
வற்றுறுப் பெருகிச் செல்வம் வளர்ந்தினி தோங்கிற் றன்றே. (13)

குறுபறி யாய ராருங் குரிசிலைச் சூழ்வ ரல்லாற்
பிறிதொரு நெறியுஞ் செல்லார் பெய்பாற் கானி லாங்கோர்
செறிபுனற் றடத்தி னீழற் சோநதொரு முகமாய்க் கூடி
யிறையவன் றூதர் முன்சென் றேவல்செய் திருப்ப ரன்றே. (14)

நன்றிகொ ளிளையோ ரெல்லா நறைமுகம் மதுவை யாக்கும்
வென்றிகொ ளரசாய் வைத்து வேறுவே றதிகா ரத்தா
ரென்றவ ரவர்க்கே பேரிட் டிருந்தடி பணிந்து சாந்த
மன்றலசே ருவாயி னீழன் மகிழ்ந்தினி திருக்கும் போதில். (15)

பட்டுடை யினராய்ச் சாந்தம் பழகுதோ ளினராய் வாய்ந்த
கட்டழ கினராய் வீசுங் கதிர்மதி வதன ராய்மெய்க்
கிட்டகுஞ் சுகரா யாண்மை யிலங்கும்வா லிபராய்ச் சோதி
விட்டொளிர் மினனி னொப்ப விரைவினி லிருவர் வந்தார் (16)

படியகங் கெண்டி செம்பொற் பதுமமென் கரத்தி லேந்தி
வடிவுட னொருவர் நிற்ப மற்றொரு காளை கையிற்
றொடிபகுப் பெனவக் கூன்வா ளோடனறிட வெதிரதாகத்
திடமுட னிற்பக் கண்டு சிறுவர்கள் கலக்க முற்றார். (17)

சிறுவர்க ளுள்ளந் தேம்பித் திடுக்கிட நிற்குங் காலை
மறுவகன் மதியம் போன்ற முஹம்மதை யடுத்துப் பாரி
யிறையவன் றாதே யெங்கட் கினனுயிராக் குயிரோ யென்ன
நறைமலர்க் கரத்தைப் பற்றி நடந்துவாய் நிழலி லானார். (18)

தருநிழ லிடத்தில் வள்ள றன்முனும் பின்னு மாக
விருவரு மிருப்பக் கண்ட விளையவ ரனைத்து மேங்கி
வெருவுவ ருளளந் தேறு மெலிகுவ ரிவரியா ரென்ன
வுருகுவர் கரைவர் கண்ணீ ரொழுகிட வொருங்கு நிற்பார். (19)

பதறுவா கலங்கி யேங்கிப் பதைபதைத் தலறி விம்மிக்
கதறுவ ரநதோ வெனனக் கலநதுவா கனைக ளியாவுஞ்
சிதறிட வோடியோடித் திரும்பிநெட் டுயிர்ப்பு வீங்கி
யிதயநொந் தாவி சோர விடைநதுவா டுவர்க ளனறே. (20)

மல்விதம் பயிலுந் திணடோண் மன்னவ ரிவர்க ளியாரோ
தொல்விதிப் பயனால் வந்து சூழ்நதுனைக் கருவி தனனாற்
கொல்வதுக் கிசைநத பேரோ குரிசிலைக் கொண்டு தமமூர்
செல்வதுக் கிருக்கின் றாரோ தெரிகிலோ மெனன நைவார். (21)

கடலிடைப் புவியி லெங்கண் முஹம்மது பேரிற் கையாற்
றொடநினைத் தவரு மிலைத் தொடாநது கைபபற்றி நுங்க
ளிடபற விருத்தல செய்தீ ரேதுகா ரணமோ வெங்க
ளுடனுரைத திடுவீ ரெனன வுரைததுவாய் புலாந்து நிற்பார். (22)

மறைபடாச் செவ்வி வாய்ந்த முஹம்மது பேரிற் சற்றே
குறைபட நினைக்கின் மீறாற குடிகுடி கெடுவு நுங்கட்
கிறையனென் முனிவும் பாரி னெணணிலாப் பழியுஞ் சூழு
முறையல விடுமி னெனன மொழிநது நெஞசழிநது நிறபார். (23)

முகம்மது பேரி னும்மால் வடுவரு மாகி லிந்த
செகமகி ழுலிமா வென்னுந் திருந்திழை பழியு மீன்ற
நகைமணி முறுவ லாமி னுவுயிர்ப் பழியு மல்லாற்
பகைபெரி துடைய ராகிப் பழியெலாஞ் சுமப்பீ ரென்றார். (24)

இத்திறஞ் சிறுவர் கூற வியலபு தல்லா வென்னுஞ்
சித்திர வடிவன் செவ்வாய் திறந்திரு வரையு நோக்கி
வித்தகர் முகம்ம தினனை விடுமெனை நுங்கட் கேற்ற
குத்திரங் கொலையா தேனுங் குறித்ததை முடித்தி ரென்றான். (25)

சிறுவர்க ளுரைக்கு மாற்றங் கேட்டபின் ஜெபுற யீனு
மறநெறி மீக்கா யீனு மதிஜுயித் தகத்தி னுள்ளே
முறுவல்செய் துரையா தொன்று மொழிந்தில ராகிச் செவ்வி
நிறைமுகம் மதுவைச் சேர்ந்த நிழலிடை படுத்தல் செய்தார். (26)

படுத்தொளி பரப்புஞ் செவ்வி முகம்மதைப் பார்த்துக் கூன்வா
ளெடுத்துநாற் றிசையு நோக்கி யியல்பெற வுரத்தி னேரே
வடுப்பட வூன்றி நொய்தாய் வகிர்ந்திடும் போதி னெஞ்சந்
திடுக்கொடு பதறி நின்ற சிறுவர்கள் சிதறி னாரே. (27)

நேயமுற் றுரத்தைக் கீண்டு நிறையொளி பொங்குங் கஞ்சக்
காய்முகை கிழித்துள் ளுற்ற கறுப்பொடு கசடு மான
மாயவன் கூற்றை மாற்றி வழுவறக் கழுவி மாறு
தாயுநன் னினைவி மானல றிவுட னிரப்பல் செய்தார். (28)

உண்மையு நினைவுஞ் சேர்த்தி யூறிலா துறப்பொ ருத்தி
வண்மைசேர் முகம்ம தின்றண் மணிப்பிடர்த் தணிவ தாகத்
திண்மைகொள் புயமி ரண்டிற் றெரிதர நடுவிற் றூய
வொண்ணிறப் புறவி னண்டத் தோதிய வளவ தாக. (29)

முத்திரை யென்னு மவ்வி லாஞ்சனை தரித்து மூவா
வுத்தமர் தெரிந்து நோக்கி யொருவருக் கொருவர் சொல்வா
ரித்தகைக் குரிசி னின்ற நிறையெடை கண்டோ ரெல்லாம்
பத்திவிட் டொளிருஞ் சொர்க்கப் பலன்பதம் பெறுவ ரென்றே. (30)

தாம்பெறு மாயி ரம்பேர் நிறையெனச் சாற்றிப் பத்தா
யிரம்பெயர் நிறையுண் டென்ன வியம்பினா ரூயி ரம்பேர்க்
குரம்பெறக் கனமுண் டென்ன வோதியோர் கோடி கோடி
நிரம்புமா னிடருக் குற்ற நிறையென்று நிகழ்த்தி னாரே (31)

வகுத்தநாட் டொடுத்துப் பின்னாள் வருவதோர் நாளீ றாகத்
தொகுத்தவச் சனங்க ளெல்லா மிவரெடை தோன்றா தென்னப்
பகுத்தவர் பார்த்துப் பாரிற் படைப்புள சனங்க ளெல்லா
மிகத்திவர் ஷபாஅத் தாலீ டேறுவ ரென்றுஞ் சொன்னார். (32)

அதிஜயித் துரைத்து நின்றங் கருமது சிரசைத் தொட்டுத்
துதிசெய்து முத்த மிட்டுத் தூயவன் றூழ ரான
புதியதோர் ஹபிபுல் லாவென் றோதிய பேரும் போர்த்து
மதிமகிழ்ந் துவகை பொங்கி வானவர் வாழ்த்திச் சொல்வார். (33)

அருமறை முகம்ம தேறும் மகத்தினி லஞ்சல் வேண்டாம்
வாமுறு புதுமை நும்பால் வருவதுண் டனேக மந்தத்
தாமறிந் துவகை யெய்து முமக்கெனச் சாற்றிப் போற்றிப்
பெரியவ னருளால் வானோர் பேருல கடைந்தா ரன்றே. (34)

ஓடிய சிறுவர் கானொந் துலைந்திளைத் துடலம் வேர்த்து
வாடிய முகத்திற் கண்ணீர மார்பக நனைப்பச் சோர்ந்து
பாடியிற் புகுந்து தங்கண் மனப்பயங் கரத்தை வந்து
கூடிய பெயருக் கெல்லாம் வகைவகை கூறு கின்றார். (35)

அப்பொழு தப்துல் லாவும் லமுறத்து மழுது விம்மி
யெய்ப்பொடு மேங்கி யேங்கி யீன்றவர் முகத்தை நோக்கி
மைப்படுங் கவிகை வள்ளன் முகம்மதைக் கொணரு ரெனறு
செப்பிய மாற்றக் கூற்றஞ் செவிப்புக மயங்கி வீழ்ந்தார். (36)

ஆரிது தெருமந் துள்ளத் தறிவழிந் தாவி சோரக்
காரிகை யமினா பூண்ட கலன்பல திசையுஞ் சிந்த
வேரியங் குழனமா மேக மின்னென மேனி தேம்பிப்
பாரினிற் புரண்டே றுண்ட மயிலெனப் பதைக்க லுற்றார். (37)

பதைத்தெழுந் தையோ வென்னப் பாலக னப்துல் லாவை
மதித்துமுன் னடத்திக் காந்தண் மலர்க்கரஞ் சிறத்தி லேற்றி
யுதித்தெழுங் கமலபாத முதிரங்கொப் பிளிப்பக் கானின்
மிதித்தலைந் திடுங்கொம் பொப்ப விரைவினி னடந்து சென்றார். (38)

அயிரொழித் தாம்போற் றேய்க்கு மறக்கொடும் பாற்கா னேகிக்
குயில்புரை சொல்லாள் சொல்லக் கோட்டுவாய் நிழலின் கண்ணே
யுயிருந்தம் மனமுங் கண்ணு மோருருக் கண்ட தன்ன
செயிரற மகனவா னோக்கி நின்றிடுஞ் செய்தி கண்டார். (39)

கண்ணினின் மணியே யெந்தங் கருத்துறு மறிவே காமார்
விண்ணினிற் குறை படாமல் விளங்கிய மதிய மேயிம்
மண்ணினுக் கரசே நந்த மனைக்குறு செல்வ மேயெம்
புண்ணியப் பலனே யென்னப் பூங்கொடி யெடுத் தணைத்தார் (40)

வடிவுறு மேனி நோக்கி மாமதி வதன நோக்கி
யுடலுறும் வடுக்கா ணேனிங் குற்றவை புரைப்பா யென்று
கொடியிடை யலிமா கூறக் கொடுவரை முலையிற் றேன்று
மடலுறு சீயமன்ன அருமது புகல லுற்றார். (41)

இத்தரு நிழலி லியாங்க ளிருக்கையி லிருவர் வந்தென்
கைத்தலம் பற்ற நின்ற காளையர் வெருவி யேகப்
பத்திர மாயென் றன்னைப் படிமிசை கிடத்திக் கூன்வாள்
வைத்தாங் கீண்டல் கண்டேன் மறுத்தொன்றுந் தெரிகி லேனே.(42)

நினைவொடு மெழுந்தேன் பின்னென் னெஞ்சினில வடுவுங் காணேன்
மனமகிழ்ந திருவ ருமமெய் மகிழ்சசியா லெனது சென்னி
தனையுறத் தடவி முத்திச் சஞ்சலம் வேண்டா நும்பாற்
கனபுது மைகளுண் டென்றோர் காரணப் பெயரு மிட்டார். (43)

ஈதலா லனேக மாற்ற மெடுத்தெடுத் தியம்பி யென்னை
மாதவ முகம்மதேநல் வரிசையின மணியே யென்ன
வோதின ரோதி வானத் துறைந்திடல் பார்த்து நின்றேன்
றுதையு நீயு மென்னைத் தழுவவுங் கண்டே னென்றார். (44)

உரைத்தவிச் செய்தி யெல்லா மூரவ ருடனு முற்ற
வரைச்சிலை சுமந்த திண்டோன் மன்னரா ரிதுவு மோசைத்
திரைக்கொடிப் பவள மன்ன சேயிழை யலிமா வுங்கேட்
டிரைத்தக மகிழ்ச்சி பொங்கி யெழுநதுதம் பதியிற் புக்கார். (45)

வேறு.

வாடு மெல்லிழைப் பாதிறுண் ணிடைமயி லலிமா
கூடிவந்தவ ரனைவர்க்கு நன்மொழி கொடுத்து
நாடி நுபமனை புகுமெனத் தமர்களை நடத்தித்
தேடி டாப்பொருண் முகம்மதை மனைவயிற் செறித்தார். (46)

வனந் தனிற்செலுஞ் சிறுவரோ டிணக்கிலார் மறியி
னினந் தனிற்றொடர்ந் தேகவு மனத்தினி லியையார்
சினந்த சின்மொழி மறந்தொரு நாளினுஞ் செப்பா
ரனந்த ரத்தவர் மனையினிற் புகுத்தியு மறியார். 47)

சேம மாகிய பொருளினைக் காத்திடுந் திறம்போல்
வாம மாமணி முகம்மதை வளர்க்குமந் நாளிற்
றூம வொண்புயத் தினர்நசு றானிக டடஞ்சூழ்
பூம லர்ப்பொழில் குனையின்வந் தடைந்தனர் புதிதாய். (48)

ஹபஷி நாட்டினி லுறைநசு றானிக ளானோர்
குவித ருந்தனக் கொடியலி மாவையுங் கூண்டு
கவின் பழுத்தொழு கியமுகம் மதுவையுங் கண்டு
செவியி ராசிய மொருவருக் கொருவர் செப்பினரால். (49)

நபியெ னும்பெரு முத்திரைக் குறியும்பொன் னகர்க்கும்
புவியி னுக்குமோ ரசெனப் பொருந்திலக் கணமு
மவிரொ ளித்திரு மேனியு மவயவத் தழகு
மிவையெ லாமறிந் திவர்நபி யெனவுளத் திசைந்தார். (50)

புனை மணிப்புய ராரிதுக் குயிரெனப் பொருந்து
மனைவி யாகிய மயிலலி மாமுனம் வந்து
கனை தருங்கட லமுதென வாழ்த்தியுட் களித்து
வினைய மாம்நசு றானிகள் சிலமொழி விரித்தார். (51)

உங்க டம்மனைக் குளதொரு குழந்தைநும் முயிர்போ
லெங்க டம்மனத் துவகையால் வளர்ப்பதற் கிசைந்தோந்
திங்கள் வாணுத ளளித்தியேற் செல்வமுஞ் செருக்கும்
பொங்கு மாநிதி தருகுவ மியாமெனப் புகன்றார். (52)

நன்று நும்மனத் தெண்ணிய வுவகையா னடுக்க
மின்றிக் கேட்பதெக் குழந்தைநீ ரியப்புமென் றிசைத்தார்
வென்றி மற்புயன் முகம்மது வெனப்பெயர் விரித்தார்
குன்று போன்முலை செவிசுட மனங்கொதித் திடவே. (53)

புகன்ற புன்மொழி போதுநும் பதிபுகப் போது
மிகழ்ந் திருந்திராற் பழிவரு மூரிலெம் மினத்தார்
திகழ்ந் திருப்பவ ரறிகிலர் கேட்கிலோ செருப்ப
ரகந் தனைப்புற மிடுஞ்சொலும் போமென வரைந்தார் (54)

காட்டி னிற்புக விளைந்தகா ரணத்தையும் ஹபஷா
நாட்டி லுற்றவர் கேட்டகா ரியங்களு நறவூ
ரேட்டி லங்கிதழ்ப் பதத்தலி மாமனத் தெண்ணிக்
கூட்டித் தாயிடஞ் சேர்ப்பதே கருத்தெனக் குறித்தார். (55)

வருட மைந்துமோர் திங்களுஞ் சென்றது மக்கா
புரம டைந்தியா முகம்மதைப் புகழொடும் பொருவில்
அரிவை யாமினா வகத்திடை புகுத்தலே யறிவென்
றுரைத ரத்திறலாரிது மனங்களித் துவந்தார். (56)

மாதவ முகம்மதும் வரிவிழி யலிமாவுங்
கோத றுந்துணை வரும்வழித் துணையுடன் கூடித்
தீது றுங்கொடும் பாலையுங் குறிஞ்சியுஞ் சேர்ந்த
பாதை யின்றரு நிழலினைப் பாறினர் பரிவாய். (57)

இறங்கியங்கிருந் தெழுந்திடநினைக்குமந்நேரம்
பிறங்கு மோர்கா நீடரக் கண்டனர் பெரிதா
யறங்கி டந்தொளிர் முகம்மதைக் காண்கில ரலிமா
மறங்கி டந்தவேற் கட்கடன் மடைதிறந் தனவே (58)

என்ன மாயமிங் கென்னென நெட்டுயிர்ப் பெறிந்து
வன்ன மெனமலர்க் காநெரித் துதரத்தில் வைத்துத்
துன்னு பூங்குழல் விரிதரச் செவ்விதழ் துடிப்பக்
கன்னி மாமயில் கலங்கினர் புலம்பினர் கதறி. (59)

படியின் மீதினி லோடுவர் தேடுவர் பதறிக்
கடிதிற் கன்முழை முட்செறி பொதும்பினுங் கவிழ்ந்து
நெடிது நோக்குவர் செடியறக் கிளறுவர் நிகரில்
வடிவு றும்மக வேயெனக் கூவுவர் வருந்தி. (60)

வெய்ய கானிடை நீங்கவுங் காண்கிலன் வேறோர்
கைய லாற்பினைப் பிறரெடுத் தேகவுங் காணே
னுய்யு பாறினி யேதென வுலைந்துட லொடுங்கி
அய்ய கோமக னேவிதி யோவென வழுதார். (61)

கவச வல் லுராங் கீண்டவர் வஞ்சனைக் கருத்தோ
ஹுபஷி மாநசு ஜுனிகண் மாயமோ வலது
புவியிற் பூதங்க ளலகைகள் செய்தொழிற் பொருளோ
வெவர்க ளிவ்விடர் செய்தவ ரெனமன மிடைந்தார். (62)

வஞ்சி மெல்லிடை வாட்டமு நடுக்கமும் வாசக்
கஞ்ச மென்முகக் கோட்டமுங் கண்ணினீர்க் கவிழ்ப்புங்
கொஞ்சு மென்மொழி குழறிடப் புலம்பிய குறிப்பு
மஞ்சி நின்றதும் பயந்தொடுங் கியவாலாறும். (63)

கரிய பூங்குழல் சென்னிறப் பூழ்தியிற் காந்து
விரித ரக்கிடந் தொளிருமெய் பதைத்துவாய் வெளிறி
யெரியு நெய்யிடை யிட்டபைந் தளிரென விருந்த
வரிவை தன்வயி னெறிசெலும் பேர்கள் கண்டடைந்தார். (64)

ஏது வந்ததை யென்றடைந் தவர்சில ரியம்பக்
கோதை யீதென துறுகுலக் களிறொரு குழந்தை
தீதி லாப்பெயர் முகம்மது வெனுஞ்சிரு வரையிற்
பாதையி னிழந் தேன்கொடி யேயெனப் பகர்ந்தார். (65)

கேட்ட பேர்கடம் மனம்பயந் தறக்கெடி கலங்கிக்
காட்டி னிப்பெரும் புதுமையைக் கருத்தினிற் றெளிந்து
மூட்டும் வல்வினை பிரித்திட முடித்தவன் முறையாய்க்
கூட்டி விப்பதும் வலியதோ கூட்டுவன் கோதாய். (66)

என வெடுத்தநன் மொழிகளா லிவர்கருத் தினைய
நனைத ருங்குழன் மடந்தையர் தேற்றியு நடுக்கந்
தினையி னவ்வள வாயினுந் தேறிலீர் தியங்கு
மனைய காலையில் விருத்தனென் றொருத்தன்வந் தடைந்தான். (67)

கையி லூன்றிய தடியுமோ கயிற்கவி கையுமாய்
மெய்யெ லாநரம் பெழுந்தல ரியவிரி திரையாய்த்
துய்ய நூல்விரித் தனநரை துலங்கிடக் கூனி
னையு மென்றலை நடுக்கொடு மெலமெல நடந்தே. (68)

வந்து தோன்றிய முதியவ னரிவைநின் மனத்தி
னொந்தி ருந்தவா றேதெனப் பூங்கொடி நுவன்றார்
கந்த டர்க்கயக் களிறெனு முகம்மதைக் காணிற்
சிந்தி னேனுயிர் சிந்தவு நினைத்தன னெனவே. (69)

திருந்து மென்மலர்க் கொடியிடை கேட்டிநின் சிந்தை
வருந்த னின்றிரு மகன்முகம் மதுவையிவ் வழியிற்
பொருந்தக் கூட்டுறுந் தெய்வமொன் றுளதியாம் புகுந்தங்
கிருந்து கேட்குவம் வம்மென நன்மொழி யிசைத்தான். (70)

விருத்த னம்மொழி யியம்பிட விளங்கிழை யவிமா
கருத்தி லூற்றிவை யறிகுவ மெனநடுக் காணிற்
குருத்த செங்கதி ருதித்தெனக் கொடுமுடி யியற்றி
யிருத்து மாலயத் தேகின ரவன்மொழிக் கிசைந்தே. (71)

முருகு லாங்குழ னடந்தையர்க் காய்நரை முதியோன்
செருகு பொன்மலர்க் கோயிலிற் சாவணத் தினினின்
றுருகு தன்மனப் பயத்தொடும் வாய்புதைத் தொதுங்கிப்
பொருவி லாமணி யேமுத லேயெனப் புகழ்ந்தான். (72)

போற்றித் தெண்டனிட் டெழுந்தொரு வரமெனப் புகன்று
கூற்ற டர்ந்தவேல் விழியெளி யவளிவன் குழந்தை
மாற்ற லர்க்கரி வடிவுறும் பெயர்முகம் மதுவை
யாற்றினி லிழந்த தாளருள் வாயன வறைந்தான். (73)

மாது தன்மகன் முகம்மது வெனும்பெயர் சிலையின்
காதி னுட்புகக் கருத்துறைக் கலங்கிமெய் நடுங்கிப்
பாதை யிற்புகு முதியவன் பதமலர் கெதியா
மோதி வீழ்ந்தது முகந்தறை படமுனங் கியதே. (74)

சிலை மருண்டது கண்டலி மாமனந் திடுக்கிட்
டலைவி னோடற நரைமுதி யவன்முக நோக்கிக்
கொலைகொ ளீசெலு நெறிகுறு கெனக்கொழுங் கமலத்
திலையின் மேனடுத் துளியென வழியினின றிடைந்தார். (75)

இநத நாளையிற் றேவத மவர்பெய ரியம்ப
வந்த போதினிற் றலைமுகங் கவிழ்நதது மடவா
யுந்த மைந்தனுக் குடையவன் வேறுள னொருவ
னந்த நாயக னிடத்தினி லறைகென வகன்றான். (76)

ஆற்றி ருநதெழுந் திருகையுஞ் சிரசினி லாக்கித்
தூற்றும் வேல்விழி நீரிடுஞ் சுவடுகண் மறைப்ப
நாற்றி சையினுங் கண்மலர் பரப்பிட நடந்து
தேற்று நன்மறை மக்கமா நகரினைச் சேர்ந்தார். (77)

அபுதுல் முத்தலி பெனுமா சணிமனை யெடுத்துச்
சுவன நாயகக் குரிசிலை வழியிடை தோற்றிப்
புவியிற் றோன்றிய துன்பமு முதியவன் புகலச்
சவி கெடப்பெருந் தேவதந் தரைபடிந் ததுவும். (78)

மரு மலர்த்தொடைத் தடம்புயர் செவிமடர் றுளையிர்
றிருக வெநதுதீ யுமிழ்நதவே றிணித்தன சிவணக்
கருகி யீரலுஞ் சிந்திடத் தெளிமனங் கலங்கி
யுருகக் கூறின ரூற்றெடுத்துத் தொழுகுநீர் விழியார். (79)

பழுதி ருந்தசொற் கேட்டலும் பீடார்ந்தசெந் நெருப்பி
லொழுகு மென்மெழு காயுறு கருத்தழிந் துடைந்து
தொழுமட ற்செழுங் கமலமென் மலர்முகங் கூம்பி
யழுது சஞ்சலத் துறைந்தன ரப்துல்முத் தலிபு. (80)

கலவை மான்மத மார்பகஞ் செவந்தகட் டாளங்
குலவ வந்தவை யவைகொலென் றினத்தவர் கூற
மலை யெனுந்திட கடகரி யுதிரம்வாய் மடுத்துண்
டுலவு வேற்கா ருற்றவை யனைத்தையு முரைத்தார். (81)

மலை யடங்கலுந் தடவியும் வனத்தினை வகிர்ந்துந்
தொலைவிற் றீவினுஞ் சுற்றியு முகம்மதைத் தொடர்ந்து
நிலை தருங்கதிர் படுமுனந் தருகுவ நுமது
நலித லைத்தவிர் மெனத்திசை திசைதொறு நடந்தார். (82)

பாற்செ றிந்தகா னிடத்தினும் பருப்பத நெறியும்
விரற் புகுந்திடா வனத்தினும் வேறுசிற் றூரு
மிரைத்த பீடிகை மாடமா நகரிக ளெவையு
நிரைத்துத் தேடியுங் காண்கில மெனநிகழ்த் தினரே. (83)

அகந யங்கிமெய் மறநதெழி லப்துல்முத் தலிபு
வகிர்நது பேரொளி திருந்திட விரிந்தகஃ பாவிற்
புகுந்து சுற்றிவந தடிபணிந திறைஞ்சிவாய் புதைத்து
நெகிழ்ந்த நெஞ்சினோ டாகுலத் தயருமந் நேரம். (84)

தறையில் வானகத் திருந்திறங் கியதொரு சத்தம்
விரை கமழ்ந்திடுங் கருபத்துல் லாவிற்றென் மேல்பா
னிரை மலர்த்தடத் தோடையின் வானுழயி னிழற்கீ
ழுரிய மாமறை முகம்மதங் கிருப்பரென் றதிர்ந்தே. (85)

அந்த ரத்தினின் முழங்கிய மொழிவழி யறிந்து
சிந்தை கூரவத் திசையினிற் சிலருடன செலும்போழ்
திந்து தண்கலை யெண்ணிரண் டுடனிறைந் திறங்கி
வந்தி ருந்ததொத் திருந்தன ரெழின்முகம் மதுவே. (86)

சுதனி ரீழனி லிருநதொளிர் குரிசிலைக் கண்டென்
மதலை தம்மிரு கண்மணி யேமுகம் மதுவே
யதிரு மைக்கடற் றாளமே யெனவட லரச
ரிதய மீதுறக் களித்துத்தம் மிருகாத் தெடுத்தார். (87)

அடைய லர்க்கரி யேறெறு மப்துல்முத் தவிபு
கொடி மிடைந்தசை புரிசைசூழ் நகரினைக் குறுகிக்
கடிம லர்க்குழ லாமினு செழுமலர்க் கரத்தில்
வடிவின் மிக்குயர் முகம்மதைக் கொடுத்தன மகிழ்ந்தே. (88)

கண்ணி ருந்தொளிர் மணியெனக் கண்டுபெண் களித்துட்
புண்ணி ருந்தென விருந்திடுந் துன்பமும் போக்கி
வண்ண வார்குழ லாமினு முகம்மதை வாழ்த்தி
யெண்ண மொன்றுநம் மிடத்திலை யெனச்சிறந் திருந்தார். (89)

அடர்ந்த செவ்வரிக் கொடிபட ரரிவிழி யலிமா
தொடர்ந்த தன்மனத் திருகளி வாளினுற் றுணிந்து
மடநதை யாமினு மனையினில் வரமலர்க் கரத்தா
லிடம் பெறத்தழீஇ யிருவரு மொருவரா யிருந்தார். (90)

போது லாங்குழ லாமினு வெனுமணிப் பூவைச்
சாதெ னுங்குலத் தாரலி மாவுறத் தழுவி
யாத ரத்தொடு முகம்மதை யெடுத்துமுத் தாடிச்
சீத வொண்பொழிற் குனைனெனும் பதியினைச் சேர்ந்தார். (91)

---

இலாஞ்சனை தரித்த படல-முற்றிற்று.

ஆ படலம்-எ-இ-திருவிருத்தம் - 481.



## புனல்விளையாட்டுப் படலம்.



அலத்தக மலர்ப்பதத் தாமி னுவெழிற்
சிலைத்தடப் புயமுகம் மதுமெய்ச் சீர்பெறக்
கலைத்தட மதியென வளரக் கண்டுறு
நலத்தகு கண்களித் திருக்கு நாளினில் (1)

பொறிநிக ராமினு வென்னும் பூங்கொடி
யறிவக முகம்மதைக் கூட்டி யாதிரா
னெறிதரு மக்கமா நகரை நீங்கியே
செறிவள மதினமா நகரிற் சென்றனர். (2)

தன்னுழ ரீனயமுன் னவரிற் சார்ந்தவர்
பொன்னடி வணங்கிய பொருவி றங்கையை
யென்னு யிரென்னுயி ரெனத்த ழீஇக்குல
மன்னுயிர் முகம்மதை யெடுத்து வாழ்த்தினர். (3)

பிடிநடை யாமினு பெரிய தந்தைதன்
வடிவுறு மைந்தரு மனனு சின்னையர்
குடிவளர்த் திடுங்குலக் கொற்ற வேந்தரு
மடிகளென் றகுமதி னடியைம் போற்றினர். (4)

அனநடைச் சினமொழி யாமி னுதிருத்
தனையருந் தம்பிய ரியாருந் தனகுல
மனைமயி லனவரு மன மகிழ்ச்சியாற்.
கனைகட லமுதென நபியைக் காமுற்றார். (5)

இப்பெரு முவகையிற் றிருப்ப மனனெறிக்
கொப்பரி மதீனமென் றேது மூரிடைத்
துப்புறழ் மதுரவாய்ச சிறுவர் சூழ்தர
மைப்புயன் முகம்மதோர் வாவி நண்ணினர். (6)

பண்ணரு மறைநபி பாரிற் றோன்றியே
நண்ணிய புனல்விளையாட நாடுநா
ளெண்ணுற வடுத்ததென் றிறங்கி வானது
மண்ணினிற் குடியிருந தனைய வாவியே. (7)

வடுவிழித் தடமுலை யார்கண் மாமத
னடறரு முசைனயி னாத னுருயிர்க்
கடகரி யெனுமபுல் காசிம் செல்வம்போ
லிடனறப் பெருகியங் கிருந்த வாவியே (8)

சேடுறு முகம்மது செவ்வி வாய்ப்பரீ
ராடுவ திஃதென வாவியம் புயம்
பாடுறு மாசனு காது பைந்துணை
ரேடலர் போர்வைபோர்த் திரிந்த தொத்ததே (9)

கரைதவழ் தென்றலங் காலினல் விரை
சொரிமலர் வாவிநீ ரசைந்து தோன்றுவ
தரிதிரைக் கரங்களிற் சங்க மார்த்திட
விருகரை முத்தெடுத் தெறிதல் போலுமே (10)

தேன்மலர்ச் சண்பகஞ் செறிந்த நீழலும்
பாரினிற் கதிர்மணற் பரப்பு மன்னமுஞ்
சூன்முதிர் குடவளைத் தொனியும் வைகிய
கான்மலர் வாவிகண் களிப்ப நோக்கினார். (11)

மணிமுரா சதிராு மதீன மாநகர்த்
திணிபுய வாசர்கள் செல்வ ரியாவரும்
பணிமணி முஹம்மது நிறைந்த பங்கயத்
தணிதிகழ் வாவிநீ ராட லுற்றனர். (12)

நிறைதட மசைதலா ணிகரி லாமுத
லிறையவன் றூதர்நம் மிடத்தின் மூழ்குறக்
குறைபடா வரியமெய் குளிரு மோவென
நறைபுனல் கலங்கியுண் ணடுங்கல் போன்றதே. (13)

பம்புநீர் வாவிகண் குளிர்ந்திப் பாரிடை
யெம்பெரு மானம திடத்தின் மூழ்கலாற்
செம்பொனு டவர்க்குறுச் சீர்பெற் றேமெனக்
கம்பித மம்புயக் கரங்கள் காட்டுமே. (14)

தங்கிய புனலிடை குளிப்பத் தத்துநீ
ரெங்கணுங் கரைதவழ்ந் திழிந்து தோன்றுவ
தங்கைதன் னுள்ளகங் களிப்புற் றனந்தம்
பொங்கியே யுடற்புறம் பொசிவ போன்றதே. (15)

வடிவுறு முஹம்மது வாவித் தண்புன
லிடைகுளித் துயர்தர விலங்கும் வாண்முகம்
படிமிசை யாயிரங் கலைகொள் பான்மதி
கடலிடை முளைத்தெழுங் காட்சி போன்றதே. (16)

வருந்திமெய் நடுக்கொடு மறைகண் மூழ்குவ
தருந்தவப் பேறெனு மகும தின்றிருக்
கருநதடங் கண்முதந் தாள்கைக் கொப்பெனப்
பொருந்துறே மெனவனம் புகுதல் போன்றதே. (17)

அகுமது வாவிநீ ராடல் காண்டலுஞ்
சகமகிழ் தடக்கரைத் தருக்க ளேமலர்
வகைவகை சொரிந்தன வெற்றி வானவர்
புகழொடும் பொன்மலர் பொழிவ போன்றவே. (18)

மதுமலர்த் தேனையுண் டிருந்த வண்டினம்
புதுமணச் சுரும்பொடு மிசைத்த பொங்கிசை
சதுமறை முஹம்மது தழைத்து வாழ்கவென்
றதிவிதப் புகழெடுத் தறைத லன்னதே. (19)

பின்னிய தடத்தரு சினையிற் பேட்டொடு
மன்னிய குயிலினம் வாய்விட் டார்ப்பது
கன்னலஞ் சுவைக்கனி மாவை நந்நபிக்
கின்னண மியம்புமென் றிசைத்தல் போலுமே. (20)

பொன்முடி வேந்தர்கள் புதல்வர் தம்மொடு
மன்னவர் முஹம்மதும் வாவி நீர்குளித்
தன்னமென் றூவியி னரிய வெண்டுகின்
மின்னினைப் பொதிந்தென வரையில் வீக்கினார். (21)

கணமணிக் கலன்பல வணிந்து கள்ளறு
மணமலர் மாலிகை சூடி வான்றொடு
பணர்தரு பாசடைத் தருவின் பாலுயிர்த்
துணைவரோ டரியெனத் தோன்றல் வைகினார். (22)

வரிவளைத் தடம்புனை மதீன மாநகர்க்
குரியவர் குபிரினி லுறைய கூதிக
ளரிதினிற் றடக்கரை யடுத்துப் பூமழை
சொரிதல்கண் டகுமதைச் சூழ்ந்து நோக்கினார். (23)

பாலுறச் செழுங்கதிர் பரப்பி மென்கணைக்
காலுற வளர்ந்தசெங் கமுகும் பொன்மலை
போலென வீங்கிய புயமு மாமுகக்
கோலமுங் காட்சியென் றுணர்ந்து கூறினார். (24)

மண்ணகத் துதித்தமா னுடன்கொ லோவலால்
விண்ணகத் தமரர்கள் வேந்த னோவென
வெண்ணிய வெண்ணகத் தடங்கி லாவெழி
லண்ணலைப் பார்த்தடுத் தைய முற்றனர். (25)

முத்திரை யொன்றுள முழுது மெய்யினிற்
பத்திவிட் டொளிர்வன பாதம் பாருறுச்
சித்திர நீழலுந் தெரியக் காண்குறு
வித்திறந் நபியெனத் துணி தியற்றினார், (26)

பூரண மதியமே போலப் பின்னைநாட்
டாரணி தனினபி வருவர் சான்றெனை
வாரணத் துணர்ந்தரிந் தறிஞர் கூறிய
காரணக் குறிப்பிவர் காணுங் காணென்றார். (27)

கண்டவர் கேட்டவர்க் குரைப்பக் காதினிற்
கொண்டவர் கருத்தினிற் குறித்து சாவுவ
ரண்டர்நா யகநபி யுண்மை டங் றுதிநூல்
விண்டது தவறுறு மெய்யென் றோதுவார். (28)

தேர்ந்தரு தடத்தரு விடுத்துச் செம்மனு
மாந்தர்கண் களிப்புற மனையிற் புக்கபி
னேந்தெழி லாமினு வினமு மாயமுந
தாந்தம துளங்களி னென்னஞ் சாற்றுவார். (29)

நபியெனு மொருவர்பின் னளிற் றோன்றியிப்
புவியிடை வருவரென் றோதிப் போந்தவ
ரிவரெனக் குறித்தன ரினியிவ் வூரிடைக்
கவர்மனக் காபிர்கள் கொடியர் காணென்றார். (30)

குருத்திறன் முகம்மதைக் குடியிவ் வூரிடை
யிருத்துதல் பழுதுநம் மினத்த ரியா வர்க்கும்
பொருத்தமில் லெனமனம் புழுங்கித் தங்குலத்
திருத்திழை யாமினு வறியச் செப்பினார். (31)

தம்பியர் தனையர்சொற் கேட்டுத் தம்முளம்
வெம்பியே யாமினு மிகவி சாரமிட்
டம்பினை யடர்ந்தகண் ணலி சிந்திட
நம்பியை நோக்கித்தந் நகரை நாடினார். (32)

இனத்துளார் தங்கடம் மிதாத் துள்ளுயிர்ப்
புனக்கொடி துன்பறப் புந்தி கூர்தா
நினைத்தநன் மொழிபல நிகழ்த்திப் பங்கய
நனைத்தட மக்கமா நகர்க்க னுப்பினார். (33)

விட்டொளிர் விளங்குமி னுமி னாநறுங்
கட்டழ கருமதை நடத்திக் கள்ளறு
வட்டிலை முள்ளரை வனச வாவிபு
நெட்டிலை முளிக்கழைக் காடு நீந்தினார். (34)

கொடியிடை யாமினா வென்னுங் கோதையோர்
பிடியென வனமெலாம் பெருக மான்மதக்
கடிகமழ் முகம்மதோர் கன்றும் போலவே
யடவிவிட் டகன்றபு வாவி லாயினார். (35)

கருவிளை வரிவிழிக் கன்னி யாமினா
வரியமெய் நடுக்கமுற் றலைத் தேங்கவே
சுரமென வொருபகை தோன்றித் துக்கமுற்
றிரவலர் போற்றணி யிறந்திட் டாரரோ. (36)

அரசர்நா யகநபிக் காண்டோ ராறுட
னொருதிருத் திங்களு நிறைந்த தோதிய
வரிதினிற் கலக்கிலக் காக வாண்டுமோ
ரிருபஃ தாமினா விறந்த காலமே. (37)

தாயிறத் தலுமனஞ் சலித்துச் சஞ்சலத்
தீயினிற் கிரிமியிற் றிடுக்கிட் டேங்கியே
மாயிரும் புவியிடை தனித்து மன்னுயிர்
போயின தெனநினை வறப்பு லம்பினார். (38)

சிறுகுடி யெனுமபு வாவிற் சேர்நதவா
மறைநபி முகம்மதின் வாட்டந் தேற்றியே
குறைவறக் கற்பெனுங் கோதை மாதினை
யறைமறை முழக்கொடு மெடுத் தடக்கினார். (39)

ஒலிபுனற் றடத்தபு வாவி லுள்ளவர்
கலியிரு டீரந்த செங் கவிகை வள்ளற
னலிதலைப் போக்கிமக் காவை நாடியே
வலிதினிற் பாசுரம் வரைந்திட் டாரரோ. (40)

சிலைநுத லாமினா விறந்த செய்தியின்
மலைவுறு வாசகங் கண்டு வாய்புலர்ந்
தலைகுலைந் தப்துல்முத் தலிபு மன்றுதந்
நிலைதடு மாறியுள் ளறிவு நீங்கினார். (41)

மனத்துலை கவலையை மாற்றித் தம்முயி
ரினத்தவர் சிலர் தமக் கிசைந்த வாசக
மனைத்தையு முரைத்தபு வாவிற் போய்நபி
தனைசசிறு பொழுதினிற் றருக வென்றனர். (42)

வில்லுற விசைத்தெறி சரத்தின் வேகமா
யொல்லையிற் சிலரபு வாவி யோடியே
மல்லுறு புயன்முகம் மதுவைக் கண்டுநற்
சொல்லொடுந் தேற்றியுட் டுயர மாற்றினா. (43)

மதிமுக முகம்மதை மக்க மாநகர்ப்
பதியினிற் கொடுவரப் பார்த்துச் சிந்தைகூர்ந்
ததிஜயித் தப்துல்முத் தலிபு மாமலர்
பொதிதரு தடம்புயம் பொருந்தப் புல்லினார். (44)

மண்ணினிற் பதமுறு வள்ள றம்மைத்தங்
கண்ணெதிர் விட்டக லாத காட்சியா
யெண்ணியுள் ளகத்தினி லிருத்தி யென்குலப்
புண்ணிய மிதுகொலென் றுவந்து பூரித்தார். (45)

இலைமலர் கிழிந்துதே னிழிய வாய்மடுத
தலகில்வண் டுண்டுபண் ணார்க்குந தார்ப்புயா
கலைதெரி ஹறபிபுல்லா வென்னுங் காளைதந்
நிலைபெற வாண்டொரே ழாகி றைந்ததே. (46)

கனைகுரன் மும்மதக் களிறறின மற்றநத்
தினையுறக் கீண்டுபிர குடிக்குஞ் சீயமே
யனையவ ரபதுலமுத் தலிபு தநதிரு
மனையர செனநபி வளரு நாளினில. (47)

தழையுறக் கருகிநீாத தடங்கள வற்றிமெயக
குழைவொடு கானலைக் குறிததுநீ ரெனா
வுழையின மோடியுள் ளொடுங்கப பாரிடை
மழையறச் சனமெலா மறுக்க முற்றதே. (48)

புவியிடை மழைபொழி யாத நோவினு
லபுதல்முத் தலிபெனு மாசர் நாயகா
நபிதமைக் கூட்டிமுன னடத்தி யாஙகொரு
தவிசெனு முரம்புற தலத்தி ருத்தினா. (49)

இருகையு நபிதமை யேந்தச் சொல்லித்தம்
மிருகர நபிதிருக் கரத்தை யேந்தியே
யிருவரு மிரங்கினி ரிரந்து நோக்கமேவ
யிருவிசும் பிடைமழை யிறைத்த தெஙகுமே. (50)

பாரினிற் பெரும்புனல் பரந்த செல்வமித்
தாருடை முகம்மதின் பறக்கத் தாலென
வூரினிற் றலைவருக் கியம்பி யுண்மகிழ்ந்
தேர்பெறு மப்துல்முத் தலிபி ருந்தனர். (51)

நறைபொழில் ஹபசுநன் னாட்டின் சேனையை
அறபிகள் பொருதுவென் றாரென் றோதிய
திறனுறு செய்திகேட் டதுவுஞ் செவ்வி நா
விறைநபி பொருட்டலா தில்லையென் றோதினார் (52)

நபிதிரு வயதிரு நான்குந் திங்களுங்
கவினுற விரண்டுசென் றதற்பின காணுநாட்
புவியினிற் பத்துறப் பொருந்தும் போதினி
லபுதுல்முத் தலிபுமே லுலக டைந்தனர். (53)

விற்கர வப்துல்முத் தலிபு மேலுல
கிற்புகுந் தாரென வினமு மக்களுங்
கற்புடை மகளிருங் கமல வாண்முகம்
பொற்பறப் புடைத்தழு தேங்கிப் பொங்கினார். (54)

விதிமறை நூலவர் விருத்தர் மன்னவ
ரிதமுற வநதடுத் திரங்கும் போக்கெலா
மதிபல சொல்லியுட் புழுக்க மாற்றியே
யதிவிதத் துடனெடுத் தடக்கி னாரரோ. (55)

சடங்குள தெவவையுந் துடைத்துத் தங்குல
மடங்கலே றனையவா கூண்டு மாசிலாத்
தடம்புய முகம்மதை வளர்க்கத் தக்கதோ
ரிடம்பெறு மனத்தவ ரெவரென் றோதினார். (56)

அம்மொழி கேட்டபித் தாலி பாகிய
மும்மதக் கரியுயிர் முகம்ம துக்கினி
யெம்மனை யலதுவே றிடமுண் டோவெனச்
செம்மலர்க் கரத்தெடுத் தணைத்துச் சென்றனர். (57)



புனல்விளையாட்டுப் படலம்-முற்றிற்று.

ஆக படலம்-8-க்கு திருவிருத்தம்-528.



# புகைரூகண்ட படலம்.

---

மலையெ னத்திரட் புயாபித் தாலிபு மனையி
லலைக டற்புடை வருமுழு மணியகு மதுவு
நிலைத ரித்தவெண் கதிர்மதி நிகரென வளா
வுலைவில் செல்வமும் வளர்ந்தன வொன்றுபத் தெனவே. (1)

சலதா ரத்தைநேர் கரத்தைபித் தாலிபு தம்பாற்
குலவு வீரமுங் கல்வியும் வெற்றியுங் குடியாய்
நலமு றப்புகுந் திருந்தன நாடொறும் வனசத்
திலகு செல்வியு மிவர்மனை முன்றில்வீற் றிருந்தாள். (2)

சுரபி யின்றிரள் கூன்றெருறுத் திரளொடுஞ் சுரந்த
கரிய மேதியின் குலமொரு பெருங்கடல் கடுப்பப்
பெருகி யோங்கின கொறிகளும் பல்கின பிறரும்
பருகப் பாறயிற் குறைவறப் பெரும்பலன் படைத்தார். (3)

நான மெய்கமழ் வேதநா யகனம திடத்தி
லான தாலிவை பெற்றன மெனவக மகிழ்ந்து
வானு லாவுவெண் புகழபித் தாலிபு மன்னா
தேனு லாம்பொழிற் சாமினிற் செலக்கரு தினரே. (4)

வெள்ளி வெண்டகட் டொளிரநிலா வெறித்தமே னிலைக
ணள்ளி ருட்களி சீத்தெறி மக்கமா நகரிற்
கொள்ளும் பற்பல சரக்கனை யவையெலாங் கொண்டு
தெள்ளி தாகித்தம் புறச்சரக் கறையையுந் திரந்தா. (5)

ஏறு வாம்பரி யொட்டையி லெடுத்தெடுத் தேற்றிக்
கூற வல்லவ ரெவரவ ரவர்க்கெலாங் கூறி
யாற டுத்தொரு பொழில்புற விடுதிய தாகி
யூறு தேன்குழன் மனைவியர்க் கிவையெலா முரைத்தார். (6)

சொன்ன வாசகங் கேட்டலு முகம்மது துணுக்குற்
றென்னை யுங்கொடு ஷாமினுக் கேகுமென் றிசைப்பப்
பொன்னு நன்கதிர மணியையும் போர்த்தெடுப் பவர்போல்
மன்ன வார்கழற் றுரிசிலுக் குறுமொழி வகுத்தார். (7)

பாதை போவதும் வருவது மெளிதல பாற்கா
டேத முற்றது சுரத்திடை படுமிடர் கொடிது
காத நான்கினுக் கொருகா நீருறாக் கடுங்கான்
வாதை மிக்குள வருமொழி மறுமென மறுத்தார். (8)

தந்தை சொல்லிய சொல்லினுக் கரிய கட்டளைஞ்
சிந்தை நோக்கிய முகம்மது திருமுக நோக்கிப்
புந்தி நேர்ந்தனை தேற்றவுந் தெளிந்திலை புகழோ
யெந்த வாற்றினு நிற்பிரிந் தேகல னென்றார். (9)

குலத் தடக்கிளைத் தாமரைக் குழுவினி ளுப்ப
ணலத் துதித்தெழுஞ் செழுமணி நபிகளு யகத்தைச்
சிலைத் தடப்புயர் வருகெனப் பணிபல திருத்தி
பிலைத் தடக்கதிர் வேலெடுத் தினத்துட னெழுந்தார். (10)

பார்த்தி வாபூ பக்கரும் பாதையர் பலரு
மேத்து மெய்ப்புகழ் முகம்மதைச் சூழ்தர வியைந்து
மாத்த டக்கரி கூன்றொறுச் சுமைதிசை மலியப்
பூத்த தாமரைக் கமணிவிட்டருநெறி புகுந்தார். (11)

காறு நீங்கியே முகம்மது வருவது கண்டு
மாறி லாதசந் தோடமு மொன்பதாம் வயதிற்
றேறி லாமனச் சிறுவனென் றெண்ணிய திடுக்கு
மூறு துன்பமு மின்பமு முடன்வர நடந்தார். (12)

மடங்க லேறபீத் தாலிபென றோதிப மன்னர்
மடங்கொண் மும்மதக் கரிதிரி வனத்தையுங்கடந்து
சடங்க முங்கிய சடிலமு மிடபமுஞ் சாய்த்தே
யடங்க லுங்கொடு நடந்தொரு தலத்தினி லானார். (13)

தக்க தோர்புசு றாவெனுந் தலத்தினிற் சார
மிக்க பேரொளி வெய்யவன் மேற்றிசை சார்ந்தான்
றிக்கெ லாந்துதி செயுமபித் தாலிபுஞ் செறிந்த
வொக்கல் சூழ்தர வினனுயிர்ப் புதல்வரோ டுறைந்தார். (14)

ஆங்கி ருந்தனர் விடிந்தபி னத்தலத் தொருவ
னோங்கு மும்மறை நுண்பொரு ளனைத்தையு முணர்ந்து
தீங்கி லாதமுக் காலமுந் தெளிந்தறி திறலோன்
றாங்கு மில்லறந் துறவறந் தெரிந்தமா தவத்தோன். (15)

நகையு ருவுறா மெனும்பகுத் தறிவினை நாளும்
வகையு ருநசு ருனிகள் குருக்களின் மதியோன்
புகையு ருவெனும் பெயரின னெத்திசைப் புறத்தும்
பகையு ருதசெம் மலர்முக முஹம்மதைப் பார்த்தான். (16)

கண்டு நந்நபி மெய்யெழி லிருமலர்க் கண்ணு
ணுண்டு தன்னகங் குளிர்தர வுடலெலாங் களிப்புக்
கொண்டு வீங்கினன் மறையினிற் கண்டதுங் குலத்தோர்
பண்டு சொற்றதுங் கேட்டதுங் கனவினிற் பயனும். (17)

வாய்ந்த முத்திரைக் குறியுஞ்செங் கரங்களின் வனப்புந்
தோய்ந்து சீரடி படியுறுப் புதுமையுஞ் சுடரால்
வேய்ந்த மெய்யினின் மாசணு காததும் விறலோ
ராய்ந்து நன்னபி யிவரெனத் திடமுற வறிந்தான். (18)

அறிந்து ணர்ந்தபண் டிதனபித் தாலிபை யழைத்துச்
சிறந்த வாதனத் திருத்தித்தன் செவ்விதழ் திறந்து
பிறந்த வூர்குல நும்பெய ரிப்பெரும பெயரோ
டுறைந்த பிள்ளையின் பெயர்தெரி தரவுரை மென்றான். (19)

ஆதி மக்கமூர் கிளையது ஹாஷிங்குலத் தாசீ
மோது மியானபித் தாலிபென் பின்னவ னுயிரின்
போத ரத்தின னப்துல்லா தருதிருப் புதல்வன்
மாதவ னிவன் பெயர்முகம் மதுவென வகுத்தார். (20)

பைத்த டப்பணி நெளிதர விண்டுகள் பரப்ப
மொய்த்த வொட்டையு மிடபமு முழக்கொடு நடத்தி
யெத்த லத்தினுக் கேகுவிர் நீவிரென் றியம்ப
வித்தகர் பொழில் ஷாமினுக் கெனவிளம் பினரே. (21)

அரும்பு மென்மலர்த் தொடைதிரட் புயவபித் தாலிப்
விரும்பிச் சாமினுக் கெழுந்தன மெனவுரை விளம்பத்
தரும்பெ ரும்பயன் முஹம்மதைச் சடுதியிற் கூட்டித்
திரும்பு நும்மனைச் சென்மென வுரைத்தனன் றிறலோன். (22)

வெடித்த மென்மலர்த் தேனையுண் டினவெறிச் சுரும்பு
படித்த பாட்டயர் பொழிறிகழ் ஷாமெனும் பதிக்குப்
பிடித்து நோக்கிய சரக்குட னெமையொரு பேச்சி
லடித்த லம்புக வுரைத்தசொல் லென்னென வறைந்தார். (23)

வாட்டிறத் நபித் தாலிபு நடுங்கியுள் வருந்திக்
கேட்ட போதினிற் புகையுறு வெனுமறைக் கிழவோன்
பூட்டும் விற்றடக் காமுஹம் மதுதமைப் புகழ்ந்திந்
நாட்டின் மேல்வருங் காரண மனைத்தையு நவில்வான். (24)

ஆத மக்கடந் தலைமுறை யைம்பதின் பின்னர்
சோதி மாநபி வருவரிந் நாளெனத் துணிந்து
பேத மற்றவ ருரைத்ததுங் கண்டதும் பெரியோன்
வேதஞ் சொற்றது மிவராற் பிறிதுவே றிலையே (25)

கொலை யெகூதிகள் வன்னசு றுனியின் குலத்தோ
ரலகில் கூட்டமுண் டப்பெரும் ஷாமினி லடைந்தாற்
றொலைவி றன்புற வறக்கொடு வினையொடுந் தொடர்வர்
கலைவ தன்றிநின் மிடர்தவிர்த் திடுவதுங் கடிதே. (26)

நபியு மிங்கிவ ரலதுவே றிலையிவ ணமிக்குத்
தவ றெடுத்தவர் முடித்திட நினைக்கினுஞ் சாரா
நபியு மோமுதி யவரலச் சிறுவரா கையினிற்
றவிரு நும்பதி புகுமென வுரைத்தனன் றவத்தோன். (27)

உரைத்த வாசகங் கேட்டபித் தாலிப்தம் முளத்திற்
பொருத்த மீதெனச் சம்மதித் திருக்குமப் போதிற்
றிருத்து நந்நபிக் குறுபகை விளைத்திடச் சினந்து
நிரைத் தெகூதிகள் வந்தடைந் தனர்சிலர் நெருங்கி. (28)

அடர்ந்து வந்துநின் றவர்முகக் குறிப்பையு மவரைத்
தொடர்ந்த மாயவன் சூழ்ச்சியுங் கொடுமனத் துணிவுங்
கடந்த வார்த்தையுங் கண்டுபெண் டிதனகங் கறுத்து
ளிடைந்து நோக்கினன் றழற்கதி ரொழிவிரு விழியால் (29)

கடுத்து நோக்கியங் கவருளங் கலங்கக்கட் டுரைக
ளெடுத்து ரைத்துநன் னபிதமை வாழ்க்குமென் றிசைத்து
விடுத்திர் நும்மன நினைவெனக் காபிர்கள் விரைவி
னடுத்த வல்வினைத் துணிவைவிட் டப்புற மகன்றார். (30)

ஈத லால்நசு றுனிக டெண்ணிலொன் பதுபேர்
சீத மென்றடம் புனைபுசு றுவினைச் சேர்ந்து
மாத வத்தின னறப்புறச் சாலையில் வந்து
கோத றப்பணிந் திருகாஞ் சிரத்தினிற் குவித்தார். (31)

வந்து கண்டவர்க் கின்புறு மொழிபல வழங்கி
யெந்த ஊருளீ ரெவ்விடத் தேகுவீர் நீரென்
றந்த மிக்குறு பண்டிதன் கேட்டபி னடைந்தோர்
சிந்தை கூர்ந்துதம் வரவினை யெடுத்துரை செய்தார். (32)

அந்த மில்லவன் மும்மறை யுணர்த்திய தழகாய்
நந்த மார்க்கமுஞ் சமயமுங் கெடநமர் நவிய
வந்து தோன்றுவர் நபியென முகம்மதிவ் வருட
மிந்த மாத்தையிற் ஷாமினுக் கேகுவ ரெனவே. (33)

கோதி லாமறை யுரைத்தசொ லுளத்தினிற் குறித்துச்
சூத மென்பொழில் வளைதரு ஷாமினைச் சூழ்ந்த
பாதை நான்கினு மொற்றரை யனுப்பியிப் பாதைக்
கேத மன்றிநம் பாலடைந் தோமென விசைத்தார். (34)

வடிவு றும்மறை யுரைத்தது முளதுமும் மறைக்கு
நெடிய வன்னபி யுதித்திவண் வருவது நிசமே
படி யதிர்ந்திட நடந்தலைந் துலைந்துமெய் பதறக்
கடிதிற் றேடியே திரிவதெக் காரண மென்றான். (35)

முதிய வேதிப னுரைத்தலும் பகையென முளைத்துப்
புதிய தாய்நபி யெனவரி லவரைவிண் புகுதச்
சதிசெய் வோமென வந்தனஞ் சரதமென் றுரைத்தார்
மதியி லாதறை யிருளினு மிருண்டபுன் மனத்தார். (36)

நிறைம திக்கதி ரெனவொரு நபியையிந் நிலத்திற்
குறைவி லாதவன் விதித்தனே னீவிர்நுங் குலத்துக்
கிறைவர் கூடியு மிடாசெயுங் கொடுங்கொலை யிருளான்
மறையு மோமறை யாதென வுரைத்தனன் மறையோன். (37)

சுடிகை மன்னவர் குலத்துறு தொன்மறை நபிக்குப்
படியி டத்திடர் நினைத்திடி னிம்மையிற் பழியுங்
குடிகு டித்தொறும் வழுவும லாற்கொடு நரக
முடிவி லெய்துவ ரெனறன னீதிநான் முறையால். (38)

வானர் முன்னினும் பின்னினுஞ் சுற்றியெவ் வழிக்கு
மீன மின்றியே திரிகுவ ரெண்ணிறந் தோராக
ளான தாலொரு தீங்கிலை நபிக்கென வறைந்தான்
ஞான மூற்றிருந் தொழுகிட மொழிந்தசெந் நாவால். (39)

வச்சி ரத்தினி லெழுதிய வெழுத்தினை மாற்றப்
பச்சை மென்மல ரிதழ்கொடு துடைத்திடும் படிபோற்
கெச்சை முங்கிய புயநபிக் குறுகொலை செயவே
யச்ச மின்றிநீர் துணிந்ததென் றறைந்தன னறிவால். (40)

வேதவேதிய னுரைத்தநன் மொழியெலாம் விரைவிற்
காதி னுட்புகுந் தெண்ணிய கருத்தினைக் கலக்கப்
பாத கப்பய னியாம்நினைத் தவையெனப்பயந்து
கோத றத்தெளிந் தார்நசா ருக்கடங் குலத்தோர். (41)

பொருந்து மாதவன் செம்மலர் பொருவுசே வடியில்
விரிந்த செங்கரங் கூப்பியுன் மனவினை வெறுத்துத்
தருந்த வப்பய னும்மொழி யெனவெதிர் சாற்றித்
திருந்து நல்வழி கொண்டன ரவரவர் திசைக்கே. (42)

முன்னர் மாமறை முதியவன் சொற்றபின் முறையா
யிநீ லத்தெகூ திகள்சில ரடைந்தது மிடாய்
வன்னி தாநசா ருக்கள்வந் ததுவுமுள் ளகத்தி
லுன்னி னாரபித் தாலிபென் றெழுங்குறு முரவோர். (43)

நன்ன யம்பெறு முகம்மதை மக்கமா நகருக்
கின்ன ணம்புக விடுத்துமென் றெழிதபித் தாலிப்
சொன்ன போழ்தினிற் பண்டிதன் முகமதி துலங்கி
யன்ன தேகருத் தாமெனக்களித்தக மகிழ்ந்தான். (44)

வருதி யென்றெழின் முகம்மதைத் தவிசில்வைத் துயர்த்தித்
திரிகை யின்கனி மோதகத் தொடுசில வெடுத்துப்
பரிவி னிற்கொடுத் தணிமல ரடியிடை பணிந்து
பொருவின் மக்கமா நகரினிற் புகுமெனப் புகன்றான். (45)

சிலைசு மந்தொளிர் புயத்தபித் தாலிபு செழுங்க
மலை குடிக்குறு மனையபூ பக்கரை வாழ்த்தி
நலனு றும்படி முகம்மதை மக்கமா நகரிற்
கலைவி னல்வழி கொடுசெலு மெனவனுப் பினரே. (46)

அண்ண லைச்செழு மக்கமா நகரினுக் கனுப்பி
வண்ண வார்கழ லடலபித் தாலிபு மறையின்
பண்ண மைந்தவாய் முதியவற் கிவையெலாம் பகர்ந்து
தண்ண கன்பொழிற் சாமினுக் கெழுந்தனர் கடிதின். (47)

குன்றுங் கானமு மடவிபுஞ் சுரங்களுங் குறுகிப்
பொன்றி லாப்புகழ் ஷாமெனும் பதியிடை புகுந்தே
யொன்று நாலென வாணிபத் தொழின்முடித் தொடுக்கி
வென்றி கொண்டெழுந் தனரது னான்கிளை வேந்தர். (48)

எழுந்து ஷாமெனும் பதியைவிட் டிருஞ்சுரங் கடந்து
பொழிந்த சாரலிற் பொருப்பிட மனைத்தினும் பொங்கி
வழிந்து பாய்தரு மருவியுங் கண்டுள மகிழ்ந்து
செழுந்த டம்பொழின் மக்கமா நகரினைச் சேர்ந்தார். (49)

அறநெறி க்குயி ராயபித் தாலிபு மடுத்தோர்க்
குறுபொ ருட்கொடுத் திரவலர் கின்னமு தூட்டி
யிறைவ னன்மறை முதியவர் வேட்டவை யீய்ந்து
மறுவில் வண்புகழ் முகம்மதை யினிதொடும் வளர்த்தார். (50)

கான றைப்பொழில் சூழ்தரச் சிறந்தமக்காவிற்
றானவ னருடழைத்தெழு முகம்மது தமக்கு
வானர் வநதிரு செம்மல ரடியிணை வருட
வான நல்வய தொருபதி னான்கு சென்றனவே (51)

அந்த நாளின் மக்கமா நகரினை யடுத்து
வந்த தோர்படை காபிசென வரும்பெருங் கூட்டந
தநத மிலவிடுத் தனைவரு மோரிடஞ் சார்ந்து
சிநதை நொநதுவன மறமறவொடுங்கினா திகைத்தே (52)

கலக்க முற்றவ ரெவரெவ ரெனச்சிலா கடுத்து
கலக்க முற்றிடப் பொருதுவ மியாரென நவிலவா
நிலைக்கு மோநிலை யாதுநம படையென நிகழ்வா
ரலக்க ழிந்தொரு மொழியுரைத் தனரனை வருமே. (53)

சந்த மான் மதங் கமழ்புய அப்துல்லா தவத்தால்
வந்த பேரொளி வெற்றிவெம் புலிமுகம் மதுவை
நந்த முரவ ரினப்படை யுடன்கொடு நடநதா
லிநத வல்வினைப் பகையிடர் தவிர்ந்திடு மெனவே. (54)

நன்று நன்றென இபுனுசுத் ஆனுநந் நபியுந்
துனறு வெம்படைத் தலைவரும் பரிபுடன் சூழக்
குன்று லாவுகோ ளரிக்குலக் குறைஷிக ணடந்து
சென்று தாக்கினர் கைசெனும் படைதெறித் ததுவே. (55)

தருவெ னத்தரு முசைனயி னொர்தரு மதனை
திருவு லாவிய புயனபுல் காசிஞ்செங் கரத்தாற்
பொருள்வ ரப்பெறு மவர்கலி யுடைந்தது போல
வெருவி யோடின கைசெனும் படைமிடை மிடைந்தே. (56)

மாறு கொண்டகை செனும்படை தெறித்திட வயவர்
பேறு கொண்டனம் வெற்றியுங் கொண்டனம் பெரியோன்
வீறு கொண்டநன் முகம்மதின் பொருட்டென வியத்தி
யாறு கொண்டன ரூரடைந் தனரனை வருமே. (47)

பண்டு நாட்டொடுத் திற்றைநாள் வரைக்குமப் படையைக்
கண்டு நாமுறிந் தனமலால் வெற்றிகண் டறியோம்
வண்டு வாழ்மலர்த் தொடைப்புய முகம்மது வராலாற்
கொண்ட வெற்றிபோல் வெற்றிவே றிலெனக் குறித்தார். (58)

புனைகருகண்டபடல-முற்றிற்று.

---

ஆக படலம்-9-க்குத்-திருவிருத்தம். 596



# பாரதபோந்தபடலம்.



குரைகட லனைய செல்வக் குறைஷியின் குலத்து நாப்ப
ணரசிளங் குமர ராய அப்துல்லா வரத்தில் வந்த
முருகவி ழலங்கற் றிண்டோன் முகம்மது தமக்குச் சார்ந்த
திருவய திருபத்தைந்து நிறைந்தன சிறக்க வன்றே. 1)

பேரறி வையவுஞ் செம்மை பெருந்தொளிர வனப்பும் வெற்றி
வீரமுந் திறனு முண்மை விளங்கும்வா சகமுங் கல்விச்
சாரமும் பொறையுமிக்க தரும நற்குணமு மியார்க்கும்
வாரமு முகம்ம தின்பால் வநதடைந் திருந்த தன்றே. (2)

பாரினி லடங்கா விண்ணோர் பன்முறை பெரிதிற் கூண்டு
சீருறை பாத காப்புற் றிருப்பது தெரியக் காணு
ரூரவர் போலுந் தங்கைக் குறுபொரு ளின்மை யெண்ணங்
காருறு கவிகை வள்ளற் கருத்திலங் குருந்த தன்றே. (3)

அகலிடத் தடங்கா வெற்றி யப்துல்முத் தலிபு பெற்ற
புகழபித் தாலி பென்னும் புரவலர் தம்மை நோக்கித்
துகளறு வனுகா மேனி சொரிகதி ரெறிப்பத் திண்மை
முகம்மதி னழகு பூத்த வாய்திறந் துரைக்க லுற்றார். (4)

குடித்தனப் பெருமை சேர்ந்த குலத்தினுக் குயர்ந்த மேன்மை
படித்தலம் புகழுஞ் செங்கோர் பார்த்திவ ராத றேய்ந்து
மிடித்தவா பெரிய ராதன் மிகுபுகழ் கிடைத்தல் கையிற்
பிடித்திடும் பொருளா தன்றிப் பிறிதிலை யுலகத் தன்றே. (5)

ஒருதனி பிறந்து கையி னுறுபொரு ளின்றி யிந்தப்
பெருநிலத் திருந்து வாழ்தல் பேதமை யதனால் வண்மைத்
திருநகர் ஷாமிற் சென்று செய்தொழின் முடித்து வல்லே
வருகுவன் சிறியே னுந்த மனத்தரு ளறியே னென்றார். (6)

மகனுரைத் தவையுந் தங்கண் மனைவறு மையையு மெண்ணி
யகநினை யறிவு நீங்கி யாகுலக் கடலின் மூழ்கி
வகையுறத் தேறிச் செவ்வி முகம்மதின் வதன நோக்கி
நகுகதிர் முறுவற் செவ்வாய் திறந்துபின் னவில லுற்றார். (7)

என்னுயிர்த் துணைவ னீன்ற விளங்கிளம் பருதி யேயிந்
நன்னிலத் தரிய பேறே நங்குடி குலத்துக் கெல்லாம்
பொன்னுநன் மணியு மென்னப் பொருந்துநா யகமே தேறு
மொன்னலர்க் கரியே கேளென் னுளத்தினி லுற்ற தன்றே. (8)

மன்றலந் துடவை 0 சூழ்ந்த மக்கமா நகரில் வாழ்வோன்
றென்றிசை வடக்கு மேற்குக் கிழக்கெனுந் திக்கு நான்கும்
வென்றிகொள் விறலோன் செம்பொன் விழைதொழி லவருக் கெல்
லாந், குன்றினி விட்ட தீபங் குவைலிது வென்னும் வேந்தன். (9)

இருகரஞ் சேப்பச் செம்பொ னிரவலர்க் கீய்ந்த தாலு
மரியமெய் வருந்த நாளு மருந்தவம் புரிந்த தாலுங்
கருதிய வரத்தி னாலுங் கதிருமிழ்ந் தொழுகும் பைம்பொன்
வரையினின் மணிக்கொம் பென்ன வருமொரு மகவை யீன்றான். 10

---

0 சூழும் மக்கமாநகரில்வாழ்வோன்-என்றிவ் விடத்தில் வேண்டும் என்றாலு முன்னாசிரிட்ட நாயகத்தின கருத்தை நமது கருத்து மிகைக்காதாலால், அப்படியே யமைத்திருக்கின்றதென்றறிக.

தேன்கட லமிர்துந் திக்கிற் றிகழ்வரை யமிர்துஞ் சூழ்ந்த
மீன்கட னடுவிற் றோன்றும் வெண்மதி யமிர்துந் துய்ய
கூன்கட வளையார் வெண்பாற் குரைகட லமிர்துஞ் சோதி
வான்கட லமிர்து மொன்றாய் வடிவெடுத் தனைய பாவை. (11)

பைங்கட லுடுத்த பாரிற் பன்மணி வரையிற் றீவிற்
செங்கதிர்க் கனக நாட்டிற் செழுமணி மனைக்கு நாளுந்
தங்கிய சுடரு மொவ்வாத் தனித்தனி யழகு வாய்ந்த
மங்கையர் தனையொப் பென்ன வகுக்கநா விருத்தி டாதே. (12)

குலமெனும் விருக்கந் தோன்றிக் குழுஉக்கிளைப் பணர்விட் டோங்
கி, நலனுறு செல்வ மென்னு நறுந்தழை யீன்று வண்ணச்
சிலைநுதற் பவளச் செவ்வா யனையெனுஞ் செம்பொற் பூவிற்
கலனணி நறவஞ் சிந்துங் கனியினுங் கனிந்த பாவை. (13)

இனமெனுஞ் சோலை சூழ்ந்த விருளைய ரெனும்வா விக்குட்
புனையிழை யனைய ரான பொன்னிதழ்க் கமல நாப்பண்
வனைதரு பதும ராக மணியடி யிருந்தசெவ்வி
யனமென விளங்கித் தோன்று மணியணிப் பாவை யன்னா. (14)

குரிசிலென் றுயர்ந்த வெற்றிக் குவைலிதன் பரிதிற் பெற்ற
வரிவைதன் னழகு வெள்ளத் தமுதினை யிருக ணாரப்
பருகுதற் கிமையா நாட்டம் படைத்திலோ மெனநா டோறுந்
தெரிவைய ருள்ளத் தெண்ணந் தேற்றினுந் தேறா தனறே. (15)

வானகத் தமரா ராலு மானில மக்க ளாலுந்
தானவ யவத்தின் செவ்வி தனையெடுத் தின்ன தின்ன
தானநன் குவமை யெனன வளவறுத் துரைக்க வொண்ணாத்
தேன்மொழி கதிஜா வென்னுந் திருப்பெயர் தரித்த பாவை. (16)

வருகலி வெயிலால் வாடு மானுடப் பயிர்கட் கெல்லாம்
பொருளெனு மாரி சிந்திப் பூவிடத் தினிது நோக்கி
யருமறை மலருட் காய்த்த வறிவெனுங் கனியை யுண்ட
திருநமர் குலச்சஞ் சீவிச் செழுங்கொழுந் தனைய பூவை. (17)

வணக்கமு மறிவுஞ் சேர்ந்த மனத்துறும் பொறையு நல்லோ
ரிணக்கமும் வரியோர்க் கீயு மிரக்கமு நிறைந்த கற்புங்
குணக்கலை வலலோ ராலுங் குறித்தெடுத் தவட்கொப் பாகப்
பணக்கடுப் பாந்தட் பாரிற் பகருதற கறிய வன்றே. (18)

மின்னென வொளி மருத விளங்கிழை கதிஜா வென்ன
மன்னிய பொருளின் செல்வி மனையகத் தினிஞ் டோறு
மிந்நணி நகர மாக்க ளியாவரு மினிது கூறப்
பொன்னனி வாங்கித் தேச வாணிபம் பொருந்தச் செய்வார். (19)

கலைத்தடக் கடலே யெந்தங் கண்ணிரு மணியே யாமு
மலைத்தடக் கடற்கட் பாவை யணிமனை யடுத்துச் செம்பொ
னிலைத்திட நினைத்து வாங்கி நெறிநெடுந் தூர மெல்லாந்
தொலைத்திவண் புகுவம் வல்ல தொழின்முடித் திடுவ மென்றே. (20)

தீனகக் குளந்த டாகந் திசைதொறு நிறைந்து தேக்க
வானதிப் பெருக்கை யொப்ப வருமுஹம் மதுவை நோக்கித்
தூநகை முறுவல் வாய்விண் டுரைத்தனர் சொன்ன மாரி
யானென வுதவுஞ் செங்கை யருளெனுங் கடலி னூரே. (21)

தரைத்தலம் புகழும் வெற்றித் தடப்புயத் தபித்தா லீபு
முரைத்தவை யனைத்துந் தேர்ந்து முகம்மது முளத்தி னூடு
வருத்தமுஞ் சிறிதுநேர மகிழ்ச்சியுந் தொடர்ந்து தோன்றக்
கருத்தினி லிருத்தித் தாதை கழறல்சம் மதித் திருந்தார். (22)

குங்குமத் தடந்தோள் வள்ளல் குறித்திடுங் கருத்தி னூடு
செங்கயல் வரிக்கட் செவ்வாய்த் திருந்திழை கதிஜா வென்னு
மங்கைதம் பெயருஞ் சித்ர வடிவுநின் றுலவ மாருப்
பொங்கறி வதனுன் மூடிப் புந்தியின் மறைப்ப தானார். (23)

மம்மரை மனத்துள் ளாக்கி முஹம்மது கதிஜா வென்னும்
பெய்ம்மலர்க் கொம்பே யன்ன பெண்மனைக் கடையிற் சாரு
மம்மறு கிடத்திற் போக்கும் வாத்தும தாகி வாசச்
செம்மலர்ச் சுவடு தோன்றுத் திருவடி நடத்தல் செய்தார். (24)

இப்படி நிகழ்கா லத்தோ ரிளவன்மா மறைக்கு வல்லான்
மைப்படி கடிகை வள்ளல் வனப்பிலக் கணமு நீண்ட
கைப்படு குறியுஞ் சேர்ந்த கதிர்மதி முகமு நோக்கிச்
செப்பிடற் கரிய வோகைத் திருக்கட லாடி னானே. (25)

பெரியவன் றூத ராகப் பிறந்தொரு நபியிற் காலம்
வருகுவர் சாத மென்ன மறையுண ரறிவர் கூடித்
தெரிதர வுரைத்த தெல்லா மிவரெனத் தேறும் வாளா
விருளறத் துண்மை யாயுள் ளிருத்தினன் பெருத்த சீரான். (26)

கண்டவ னுளத்தி னூடு கண்கொளா வுவகை பொங்கிக்
கொண்டு கொண் டெழுந்து சென்று குவைலிது மனையுளாகி
வண்டுகண் படுக்குங் கூந்தன் மடமயில் கதிஜா வென்னு
மொண்டொடி திருமுன் முந்தி யொதுக்கிவாய் புதைத்துச் சொல்வான்.

குவைலிது தவத்தின் பேறே குரைகடன் மணியே நீண்ட
புவியிடை யமுதே பொன்னே பூவையர்க் கரசே யென்றன்
செவியினிற் பெரியோர் கூறுஞ் செய்தியாற் றேர்ந்து தேர்ந்த
கவினுறும் புதுமை யிந்நாட் கண்டுகண் களித்தே னென்றான். (28)

வன்மன நஸ்றா வென்ன வருபெருங் குலத்திற் றோன்றிப்
பன்முறை மறைக டேர்ந்த பண்டிதன் முகத்தை நோக்கி
நின்மனந் தேறக் கண்ட புதுமையை நினை வுறமற்
சொன்மென மயிலே யன்னார் சொற்றபி னவனுஞ் சொல்வான். (29)

முல்லைவெண் ணகையாய் தொன்னூன் முறைமுறை மறைக ளெல்லாம்
வல்லவர் தெளிந்த மாற்ற மக்கமா நகரிற் பின்னு
ளெல்லையில் புதுமை யாயோ ரிளவல்வந் துதித்திப் பாரிற்
பல்லருந் தீனி லாகப் பலன்பெற நடக்கு மென்றும். (30)

ஈறிலா னபியாய்த் தோன்று மெழின்முகம் மதுதம் மெய்யின்
மாறிலாக் கதிருண் டாகி மான்மதங் கமழு மென்றுஞ்
சேறிலாங் கவில மீதிற் றிருவடி தோயா தென்றுங்
கூறிலாப் பிடரின் கீழ்பாற் குறித்தலாஞ் சினையுண் டென்றும். (31)

வியனுறு புறக்கா னென்னும் வேதமொன் றிறங்கு மென்றுங்
குயின்மொழிப் பவளச் செவ்வாய்க் கொடியிடைக் கருங்கட் பேடை
மயிலினை யிந்த வூரின் மணமுடித் திடுவ ரென்றும்
நயனுறக் கேட்டே னின்றென் னயனங்கள் குளிரக் கண்டேன். (32)

முன்னுணர்ந் தவரைக் கேட்டு முதலவன் மறைக டேர்ந்தும்
நின்னையொப் பவரு மில்லை யாகையா னினது பாலம்
மன்னவிண் ணப்பஞ் செய்தேன் முஹம்மதை விளித்து நோக்கும்
பொன்னனீ ரென்னப் போற்றிப் புகழ்ந்தன னெகிழ்ந்த நெஞ்சான். ()

கலைவலா னுரைத்த மாற்றங் கேட்டபின் கதிஜா வென்னுஞ்
சிலைநுத றெளியத் தேர்ந்தோர் செவ்வியோன் றன்னைக்கூவி
யலகில்வண் புகழ்சேர் வள்ளன் முஹம்மதை யினிதிற் கூட்டித்
தலைவரீ வருக வென்னத் தாழ்ச்சிசெய் தெழுந்து போந்தான். (34)

ஏவலென் றுரைத்த மாற்ற மிடையறா தொழுகிச் செய்யுங்
காவல னபித்தா லீபு கடைத்தலை கடந்து சென்று
பாவலம் பியசெந் நாவார் பன்முறை வழுத்தப் போதா
மேவலர்க் கரியே றென்னு முகம்மதை விரைவிற் கண்டான். ()

கண்டுகண் களித்துள் ளஞ்சிக் கரகம லங்கள் கூப்பி
யொண்டொடி கதிஜா வென்று மோவிய முரைத்த மாற்றம்
விண்டுவின் னப்பஞ் செய்தான் விரைகம ழலங்கற் றிண்டோட்
கொண்டறன் செவியு நெஞ்சுங் குறைவறக் குளிர வன்றே. (36)

கூறிய கூற்றைக் கேட்டுக் குறித்துள கரும மின்று
மாறிலா தடைந்த தென்ன முகம்மது மனத்தி லுன்னித்
தேறியங் கொழுந்து போந்தார் தேனினு மதுர மாறா
தூறிய தொண்டைச் செவ்வா யொண்ணுதன் மனையி லன்றே. ()

சித்திர வனப்பு வாய்ந்த செம்மறன் வரவு நோக்கிப்
பத்திரக் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி பதும ராக
முத்தணி நிரைத்த பீட முன்றிலிற் காந்தட் கையால்
வைத்திவ ணிருமென் றோத முகம்மது மகிழ்ந்திருந்தார். (38)

எரிமணித் தவிசின் மேல்வந் திருந்தலக் காணமும் பொற்புந்
திருவுறை முகமு மன்பு திகழ்தரு மகமுங் கண்ணும்
விரிகதிர் பரந்தமெய்யும் விறல்குடி யிருந்த கையு
மருமலர் வேய்ந்த தோளு மணிதிரண் டனைய தாளும். (39)

பேரொளி பரப்பிப் பொங்கிப் பெருகிய வழகு வெள்ளச்
சார்பினிற் கதிஜா வென்னுந் தையறன் கரிய வாட்கட்
கூருடைக் கயல்க ளோடிக் குதித்தன குளித்துத் தேக்கி
வாரிய வதனஞ் சேர்ந்து மறுக்கமுற் றிருந்த தன்றே. (40)

பார்த்தகண் பறித்து வாங்கப் படாமையா னறவுஞ் சிந்தப்
பூத்தகொம் பனைய மெய்யி னெண்ணும் போர்வை போர்த்துக்
கூர்த்தாவா வெளிப்ப டாமற் கற்பெனும் வேலி கோலிச்
சேர்த்ததம் முளங்கா ணாது திருந்திழை வருந்தி நின்றார். (41)

மெய்மொழி மறைக டேர்ந்த பண்டிதன் விரைவின் வந்து
மொய்மலர்க் கதீஜா செவ்வி முழுமதி வதன நோக்கிச்
செய்தவப் பலனே யன்ன வள்ளலைத் திரும ணக்கே
ஏய்துதற் கருள்செய் வீரென் றெடுத்துரை விடுத்துச் சொன்னான்.

விரும்பிய காம நோயை வெளிவிடா தகத்துள்ளாக்கி
யரும்பிள முறுவற் செவ்வா யணி மல ரிதழை விண்டோ
யிரும்புகழ் தரித்த வெற்றி முகம்மதை யினிதி னோக்கி
வரும்பெருந் தவமே றுந்த மனையிடத் தெழுக வென்றார். (43)

காக்குதற் குதித்த வள்ளல் காரிகை வடிவைக் கண்ணு
னோக்கியு நோக்கா தும்போ னொடியினி லெழுந்தம் மாதின்
மாக்கட லனைய கண்ணு மனமும்பின் றொடர்ந்து செல்லக்
கோக்குல வீதி நீந்திக் கொழுமனை யிடத்திற் சார்ந்தார். (44)

மடங்கலே றனைய செம்மன் மனையில்வந் திருந்த போழ்தே
படங்கொள்பூ தலத்தி ராஜ பதவியும் பெரிய வாழ்வு
மிடங்கொள்வா னகத்தின் பேறு மெளிதினி னும்பாற் செல்வ
மடங்கலு மடைந்த தின்றென் றறைந்துபண் டிதன கற்றான் ( )

தெரிந்துணர்ந் தறிந்தோர் மாற்றஞ் சிறிதெனும் பழுது வாரா
விரிந்தநூ லுரையும் பொய்யா விளங்கொளிர் வடிவ தாக
விருந்தவர் நபியே யானு மிவர்மனை வியரே யென்னக்
கருந்தடங் கண்ணா ருள்ளக் கருத்தினி லிருத்தல் செய்தார். ( )

படியினிற் சரியுஞ் செங்கேழ்ப் பருதியு நிகரொவ் வாத
வடிவெடுத் தனைய வள்ளன் முகம்மதி னெஞ்ச மென்னுங்
கடிகமழ் வாவியூடு கருத்தெனுங் சமல நாப்பண்
பிடிநடைக் கதிஜா வென்னும் பெடையன முறைந்த தன்றே. ( )

தம்மனத் துறைந்த கர்த ரனைவெளிப் படுத்தி டாமற்
செம்மனு மிருந்தார் மற்றைச் சிலபகல் கழிந்த பின்னர்
மும்மதம் பொழியு நால்வாய் முரட்கரி யபித்தா லீபு
விம்மிதப் வியப்பூரிப்ப மைந்தனை விளித்துச் சொல்வார். (48)

தெரிதரத் தெளிந்த சிந்தைத் தேன்மொழி கதிஜா பாவில்
விரைவினிற் சென்று செம்பொன் வினைவுறச் சிறிது கேட்போ
மருளொடு மீய்ந்தா ரென்னி லதற்குறு தொழிலைக் காண்போம்
வரையற விலையென் றோதில் வருகுவம் வருக வென்றார். (49)

உரைத்திடுந் தந்தை மாற்றஞ் செவிவுற வுவகை பொங்கி
விரைத்தகாக் குழற்க தீஜா மெல்லிழை நினைவு நெஞ்சும்
பொருத்திய வகத்தி னூடு புக்கிடத் திருவாய் விண்டு
தரைத்தனர் நாளைக் காண்போங் கருதிய கரும மென்றே. (50)

(வேறு.)

மருக்கொள் பூதர புயநபி முகம்மது மனையிடை மகிழ் கூர, விருக்கு மெல்லையி லெல்லவன் புகுந்திர விருள்பரந் திடு காலை, கருக்கு மை விழிதுயிறரு பொழுதொரு கனவுகண்டனர் நாவிற், சுருக்கு நுண் ணிடை பொலன்றொடி திருந்திழை சுடர்மணி கதிஜாவே. (51)

நிறையுமுட வாகன மலர்தரு முடுவின நிரைவிடுத் தெளி தாகக், கறையி லாக்கலை முழுமதி மடிமிசை கவின்றொடு விளை யாட, மறைவி லாதுகண் டணிதுகில் கொடுதனி மகிழ்வொடு பொதிவாகக் குறைவி லாதுரத் துடணைக் கவுமகங் குளிரவு மிகத் தானே. (52)

கண்ட காரண மாதுல னெனவரு கலைவல ரொடு கூற, விண்டு கூறத் திடப் பார்த்தனன் றெளிந்திவர் விரைமலர் முகநோக்கி, வண்டு லாம் புய நபியுனை யிதமுற மணமுடித் திட நாடிக், கொண்டதா மிதென் றோதிட வுடலகங் குளிர்ந்திருந் திடு நேரம். (53)

மதும மாத்தெழு புயஅபித் தாலிபு முகம்மது நபி னுரும், விதுவுஞ் சேட்டிளம் பருதியுங் கலநதுடன் விரைவொடு தெரு வூடே, புதுமை யாய் நடந் தணி நில வெறித்திடப் புனையிழை கதிஜாதஞ், சுதை கொண் மண்டபமணிக்கடை புகுநதனர் துணைவழி களிகூர. (54)

இருவ ரும்வரக் கண்டன ரெழுந்திருந் திணைமல ரடி போற்றிச், சொ ரியு மென்கதி ராதனத் திருத்திநந் தூய்மலர்ப் பத நோவ வரிதில் வந் ததென் புன்மொழிச் சிறியவ றறிவிலர் மனை தேடித், தெரியக்கூறு மென் றஞ்சிநின் றுரைத்தனர் தேமொழி கதிஜாவே. (55)

இந்த மாநிலத் தொருநிதி யேயென திருவிழி மணியேகேள், சுந்த ரப்புய னப்துல்லா வெனதுறு துணையுயிர்க் குயிரான, மைந்தனிங் கிவன் மனத்திருழ் கெடவொரு மணமுடித் திடநாடிச், சிந்தை நேர்ந் திவ ணடைந்தன னுமதுரைத் திருவுளமறி யேனே. (56)

சிறிது பொன்னென திடத்தினி லளித்திடிற் றேசிக ருடன்கூடி, யுறுதி ஷாமினுக் கேயிங் கடைகுவ னுமதரு ளுள தாகில், வறிய வற்கொரு மணநிறை வேறிடு மடமயிலனை யாயீ, தறுதி யில்லெனி லதுவுநன் றெனஅபித் தாலிபு முறைத் தாரே. (57)

நிரைத்த செவ்வரி பரந்தகட் கடமயி னிசமென அபித்தாலி, புரைத்த
வார்த்தையுந் தம்மனக் கருத்தையு முடன்படுத்திட நோக்கித், திரைத்த
டத்தலர் மரையென முகமலர் செறிதரத் துயர்கூரும், வருத்தமின்னை
யின்படி முடித்தென மனத்திடைகளித் தாரே. (58)

பூதரம்பொரு புயத்தபித் தாசுபு புளகெழ முகநோக்கு, மாத வத்தி
னென் பொருளுள தெவையுநின் மனைப்பொரு ளெளியேனு, மாதரத்
துறு மொழிவழி நடப்பதற்கு கையுற லெனப் போற்றிக், காத லித்
துரைத் தார்விரைத் தாற்குழற் கனிமொழி கதி ஜாவே. (59)

இனிய வாசக மிருதுளைச் செவிபுக விதயமென் மலர் போர்த்த, துனி
புறந்தன வுதகையும் பிறந்தன துணைவரைப் புய மீறத், தனியனம்வயி
னிளைஞ்சில பெறுபொருட்குருவ னெனப் போற்றி, வனசமென்மலர்
முகமலர்ந் திருந்தனர் மருவல ரரி யேறே. (60)

கொடுவ ரிப்பதத் துகிர்முனை யரிந்தன கோதில் வெண்ணறு வாசந்,
தடுசிலும்மறு சுவைப் பொரிக் கறிகளு மனுவொடு செழுந் தேனும்,
வடிந றுவுடைந் தொழுகுமிக் கனியுடன் மதுரமென் மொழி கூறி,
யிடுவி ருந்தளித் தாரிரு வருக்குமோ ரிளங்கொடிமடமானே. (61)

அன மருந்திய தாசர்க டமை மணி யாசனத் தினி தேற்றி, நனைத
ருந்துவர்க் காயிலை யாளித நறும்புகை மலர் சாந்தம், புனையு மென்று
கில் கஞ்சுகி சிரத்தணி போல்வன பல வீய்ந்து, சினவுவேல்விழி பொ
ருள்கொடு வருகென வுரைத்தனர் திரு வாயால். (62)

ஆடகங்கொணர் கென்றலும் வான்றொடு மறையினிற் சிலரோடி, மூடு
பெட்டகத்திறந்தனர் கொணர்ந்தனர் குவித்தனர் முறையாக, நீடி லக்
கறு றாயிரத் தொன்பதி னாயிர நிறை தேர்ந்த, மாடைதா னெடுத் தீய்
ந்திடக்கொண்டனர் முகம்மது நயினாரே. (63)

கொடுத்ததங்கம லாற்பெரும் ஷாமெனக் குறித்திடுந்திசை கேற்க,
வெடுத்த நற்சரக் கொட்டையின பொதி யிரு நூற்றொடு திரளாக, விடு
த்த கப்பரி வாரத்தி லுரியவர்விறல்கெழு வயவீரந் தொடுத்த நெஞ்
சின ரிருபது பெயரையுந தொகுத்தனர் மடமானே (64)

வடிவுறிந்திரட் டாள்களு மிரு புறம் வகிர் தரு மயிர் வாலு, நெடுகிக்
கட்டுரத் திறுகிய கண்டமு நிமிர்ந்தமெய் யுறு கூனு, நடையி லோ
ர்பகற் கொருபதின் காவத நடந்திடுந் திடத் தாலும், கடியவொட்
டையொன் றெழினபிக் களித்தனர் கரியமை விழி மாதர். (65)

மல்ல லம்பிய புயமுகம் மதுநபி மனத்தினின் மகிழ் கூரச்
செல்ல லந்திடப் பொழிதரு காமிசை செழுங்கதிர் வடி வேலு
மெல்ல வண்கதிர் மறைதரு குற்றுடை வாளொடு மணி தீய்ந்தார்
வில்லின் மேற்பிறை தோற்றிய தெனநுதல் விளங்கிய மட மானே.

இவையெ லாநபிக் களித்தபி னேவலி னியலுறு மைச ருவை
நவைய றத்தன தருகினி லிருத்திவெண் ணகைமலர் முகநோக்கிப்
புவியி னின்னிலு மெனக்குரி யவரிலைப் பொருளுநின் பொருளேயா
மவைய வநதனைக் காப்பவர் போனபிக் கடுத்தினி துறை வாயே, (67)

ஏகும் பாதையிற் பண்டித னொருவனுண் டியன்மறை வழிதேர்ந்த
வாக னெம்மினத் தவரினு முரியவன் மகிழ்ந்தவ னிடத் தேகி
நீக ருத்திட னெனதுச லாமையு நிகழ்த்திநள் ளிருட் போது
மோக முற்றியான் கண்டிடுங் கனவினை மொழியென மொழிவாயே.

பாதை யுற்றிடுஞ் செய்தியு மிவர்க்கிடர் பணித்தவர் தமக் கான
வாதை யுற்றிடு வருத்தமுங் காரணத் தொகுதியும் வனஞ் சார்ந்த
போதி னிற்பெறும புதுமையு மிங்கிவர் பொறுமையு நகர் சேர்ந்து
சூதர் தம்மொடு மிருப்பது மினமெனச் சூழ்ந்தவர் வர வாறும். (69)

இற்றை நாட்டொடுத் தந்நகர்க் கேகியுங் கிவண்புக வரு நாளை
யற்றை நாளைக்குங் கண்டிடுங் காரண மனைத்தையுந் துட ராக
ஒற்றர் தம்வயி னெழுதியிங் கனுப்பியென் னுறுவிழிமணிபோலுங்
குற்ற மில்லதோர் நபியுடன் வருகென வுரைத்தனர் குல மாதே. (70)

இத்தி றத்துரை பகர்ந்தன ரழகொளி ரிளமயின் முக நோக்கி
மத்த கக்கட கரிமுகம் மதினெழின் மலரடி யிணை போற்றி
யுத்த ரப்படி பணிகுவ னவரையென் னுயிரினு மிகக் காத்து
முத்தி ரைப்படி வருகுவன் காணென மொழிந்தடி பணிந் தானே.

முருகு லாங்குழன் மயிலபித் தாலிபு முழுமதி முக நோக்கி
யரசா நாயக நின்மனைக் கெழுகென வுரைத்தலு மவர் போந்தார்
பரிச னங்களும் வணிதருஞ் சூழ்தரப் பாதமென் மலர் பாரிற்
றெரித ராமுகம் மதுநபி யாத்திரைத் திரளொடு மெழுந் தாரே. (72)

கூன்றொரு றுத்தொறும் பொதியெடுத் தேற்றிய குழுவிடை நயினாரு;
மேன்ற தம்பிரு காத்தினும் பொதியிரண்டெடுத் தெடுத்தினி தேற்றிச்,
சான்ற பேர்கட மனத்ததி ஜயமுறத் தையறன்மனை நீங்கித், தோன்ற
றேன்றின ரணிமணி மறுகிடை சுடர்விடு மதியேபோல். (73)

அருந்த வத்தபூ பக்கநஞ்சுவைபறட ஞரிதுமப் பாசுந், திருந்திரா
மனத் தபுஜகுலொடுங்கலை தெரிதரு மைசறுவும், பொருந்தக் கூடிய
மார்க்கரு மிடபமும் புரவியுந துகளாரப்ப, வருந்தி லாப்பெரு வாழ்வு
கொண் டுறைதரும் வளநகரப் புறத் தாஞா. (74)

ஊறுநீர்த்தடக் கரைகளுங் குட்டமு மோடையு மலர்க்காடுந், தேற
தூற்றிய சோலையு மரம்பையின றிரளிடை பழக்காடுங், கூறு கூறு
கொண் டிடுங்கிடைச்சிறு கொடியிலைக் கொடிக் காலுந், சாறு கொண்
டெழு மாலையுங் கன்னலஞ் சாலையுங் கடந் தாரே. (75)

கடந்து காவத நடந்தொரு பொழிலிடை காளைகளனைவோரு, மிடம்
பெறத்திரண். டிறங்கியங் குறைநதன ரிருட்பொழு தினைப் போக்கி
விடிந்த காலையின முன்னிலை யெவரென விளம்பின ரவரோடு, மடைந்த
பேர்களின் முகம்மது முதலென அபூபக்க ரரைந்தாரே. (76)

முகம்மதென் றுரை கேட்டலு மபுஜகல் மனத்திடை தடுமாறி, மிக
முனிந்தன னிவர்தமை முன்னிலை விலக்குவ துயக் காகா, திகழெனப்
பலர் கூறவுங் கேட்டில னிதற்குமுன னிலையா னென், றகமகிழ்நதிட
நடந்தனன் கெடுமதி யடைவது மறியானே. (77)

ஒட்டைமீதினில் வரும்பொழு தவ்வழி யோரிடத் திடையூறுய்க்,
கட்டை தட்டிட வொட்டையுஞ் சாய்நதொரு கவிழொடு தலை கீழாய்,
முட்டி வீழ்ந்தனன் குமிழினும் வாயினும் முழுப்பெருக் கெனச்சோரி,
கொட்டிறனெழுந் தானபுஜகு லெனுங் கொலைமனக் கொடி யோனே.

வேறு.

உதிரங் கொப்பிளித்து முகமழிந் துடைந்தான் முகம்மதையுறு
திகேடாக, நிதமுரைத் ததனை லபூஜகு லினமுநிலைகுலைந் திடுவது நிச
மென், றதிர்தா வுரைத்துப் பல்லருங் கூண்டிவ் வாற்றிடை முன்னிலை
யாறேன், மதூரமென்மொழி யானுத்பா வலதுமறுத்தெவ ருளரோனத்
தோர்ந்தார். (79)

கூறு மென்மொழி யாஹுத்பா வென்னுங் குரிசில்பி னியாவரு நடந்து, தூறடை நெறியுஞ் சிறு பாற் றிடருந் தொலைத்திடுங் காலையி லாங்கோர், மாறுகொண் டெழுந்து துயவரி சினக்து வருவது கண்டு டல் கலங்கி, யாறிடை வீழ்ந்தான் முன்னிலை யிளவ லனைவரும் பயந் திட வன்றே. (80)

நிலமிசை கலங்கி யுத்பா வீழ நெடுங்கழுத் தலைவரி வேங்கை, யலைபடப் பிடித்தங் கடவியி னடைய வருகஹுங் குடபுலத் தடைந் தான், செலநெறி தெரியுந் தெரிகிலா தென்னத் திசைதிசை நிறைந் தன திமிரம், பல பல வருக்கச் சரக்கெலா மிறக்கிப் படுபாற் பாதயி லுறைந்தார். (81)

ஆய்ந்தபே ரறிவர் பசிக்கிடர் தவிர்த்தங் கவரவர் சார்பினிற் சார்ந் தார், வாய்ந்தபே ரெழிலார் முகம்மதுந் துயின்றூர் மாகமுட் டேண்டி சைகவிய, வேய்ந்தவல் லிருளி லடிக்கடி வெருகி விடுதியி னடுவு ரைந்தவணிற், சாய்ந்திடா திருகண் டேங்கிடாதிருந்தான் றாக்கினல் வெருக்கொளு மனத்தான். (82)

அலரிவெண் டினமே லெழுந்தனன் கீழ்பா லனைவரு மெழுக வென் றெழுந்தார், நிலைதளர்ந் திருந்த வுத்பா வென்போ னெறியின் முன்னிலைநடப் பதற்கோர், தலைவனை வேறு நிறுத்து மென் றுரைத்த தன்மைகேட் டனைவரும் பொருந்தி, யிலைமலி வேலாறுசெனுங் குரி சின முன்னிலை யெனவைத் திசைத்தார். (83)

பாதைபோர்ந்தபடல-முற்றிற்று.

ஆ படலம்-10-க்குத் திருவிருத்தம்-679.



## சுரத்திற்புனலழைத்த படலம்.



முன்னிலையாசு நடந்திட நடந்து முதிரட விகள் கடந்த தற்பின், றன்னிக ரில்லான திருவுளப் படியாற் றரையினிற் ஜபுறயீ லிறங்கி, யிந்நிலத் தெவர்க்குந் தெரிகிலா வண்ண மிளம்பிடி யொட்டையொன் றெனிதாய்ப், பனனரும் பாதைத் தலைதடுமாறப் பண்பொடு கொடு நடத் திடிவரே, (1)

மட்டவிழ் புயத்தா ரூசுறுமன் னடத்தி வந்தவெட் டகம்புது மையதாம், பெட்டையொட் டகத்தைக் கண்டுபின் றொடரப் பிசகின தருநெறி காணிற், செட்டரு மெருதும் புரவியு மிடைந்து சிறுநெறி வயின்வெகு தூர, மெட்டிமுன் னடப்பச் சிறுநெறி குறுகி யிருநதுந் தேய்ந்து போயதுவே. (2)

ஆசெனு மாச றொட்டகக் கயற்றை யசைத்திடுந் திசையெலா நடப்ப, வாசியு மெருதுங் கூன்றெறுத் தொகையும் வழிகெடத் தனித் தனி மறுகத், தேசிகர் கலக்கி யாயிதற் கென்கொல் செய்குவ தென்மன மிடைந்து, வீசிய கானற் சுடச்சுடக் கருகிவிடர்விடும் பாலை யிலடைத்தார். (3)

பின்னிய திரைவா ருதியினைச் சுவற்றிப் பெரும்புறக் கடலினைத் தேக்கித், தன்னகங் களித்து வடவையின் கொழுந்து தனிவிளை யாடிய தலமோ, பன்னருந் தென்கீழ்த் திசையினை திரண்ட படையொடு மிருந்தபா சறையோ, வுந்தகக் ககன முகடற வுருக்கு முலைகொலோ வெனவறி கிலமால். (4)

பருந்திருந் தெழுந்து பறந்தசின் னிழலும் பற்றறக் கானலிற் றேய்ந்த, கரிந்திலை தோன்றா தொவ்வொரு விருக்கங் கண்களின் குல மெனத் தோன்று, மெரிந்தெரி மேய்ந்து கரிந்துவிண் ணிடங்காந் திடுந்தரை யொருதுளி நீரு, மருந்திடக் கிடையா தலைகை கடிரிந்தங் காள்வழக் கற்றவெங் கானம். (5)

பாலையென் றுலர்ந்த செந்நிலக் கானற் பரப்பினைப் புனலென வோடிச் சாலவு மிளைத்துத் தவித்துழை யினங்க டனித்தனி மறுகிய மறுக்க, மாலுளர்ந் திருண்ட புனமனச் சிறியோர் மருங்கினி விரந்திரந் திடைந்து, காலறத்தேய்ந்த பலகலை மேலோர் கருத்தினில் வருத்த மொத் தனவே, (6)

கள்ளியின் குலங்கள் வெந்தொடுங் கினவேர்க் கட்டையி னுட் டுளை கிடந்து, புள்ளிபூத் திருந்த பைத்தலைப் பாந்தள் புளந்திரிந்து றைந்திடா திறந்து, முள்ளொயி றொதுங்கிச் செம்மணி பிதுங்கிமுளை தொறுங் கிடப்பதைச் செறிந்த, கொள்ளியிந் தனங்க ளென றுழைக் குலங்கள் குறுகிடப் பயந்துதான் மறுகும். (7)

மூவிலை நெடுவேற் காளிவிற் றிருப்ப முறைமுறை நெட்டுடற் சுரும்பே, யேவல்செய் துறைவ தலதுமா னிடர்கா விடுவதற் கரி

ரிதுசெந் நெருப்புத், தாவியெப் பொருப்புங் கரிந்தன செலவந்து தவ
பிளந் தனவதிற் பிறந்த, வாவியோ வெழுந்த புகைபாந் ததுவோ வறக்
கொடுங் கானலென் பதுவே. (8)

சேந்தெரி பரந்த பாலையிற் புகுந்து செல்னெறி சிறிதுந் தோன்
றுமற், காந்தெரி கதிரோ னெழுதிசை தெற்கு வடக்கு மேற்கெல்லை
காணுமன், மாந்தரு மாவுந் திசைதடு மாறி வாயினீ ரறவுலர்ந் தொடுங்கி
யேந்தெழில் கருகி மனமுடைந் துருகி யெரிபடு தளிரையொத் திடு
வார். (9)

மன்னவ ருசு முன்னடந் ததற்கோர் வல்வினை பின்றொடர்ந் தது
வோ, விந்நா ளகில மடங்கலுந் தழலா லெரிபடு காரணந் தானோ முன்
னைநாள் விதியோ நகரைவிட் டெழுந்த முகூர்த்தமோ பவங்கண் முற்
றியதோ, பண்ணுறு தற் கெவையென் றறிகுவோங் கொடியேம் பாலையிற்
படும்வா லாறே. (10)

பாடுறு புனலற் றெவ்வொரு காதம் படிபாற் பரப்புநாற் றிசைக்கு,
மோடுவர் திரும்பி மீள்குவ ரடிசுட் டெச்சியும் வெதுப்புற வுலர்ந்து,வாடு
வர் துகில்கீழ்ப் படுத்தியொட் டகத்தின் வயிற்றிடை தலைநுழைத் திடு
வார், தேடிடும் பொருட்கோ வுயிரிழப் பதற்கோ செறிந்திவ ணடைந்
தன மென்பார். (11)

ஓங்கிய வுதய கிரியிசை யெழுந்த மதியென வொட்டகை யதன்
மேல், வீங்கிய புயமுங் கரத்தினி லயிலும் வெண்முறு வலுமலர் முக
மும், பாங்கினிற் குளிர்ந்த வெண்கதிர் பரப்பப் பரிமள மான்மதங் கம
ழத், தூங்கிசை மறைதேர் முஹம்மதும் பாலைத் துன்புறு தின்பமுற்
றனரே. (12)

பாலையி லடைந்து பசியினு விடைந்து பலபல வருத்தமுற் றது
வும், வேலைவா ருதிபோல் வழிபிழைத் ததுவும் விழுந்தியான் முக
முடைந்ததுவுங், கோலமார் புலிவந் ததுமுகம் மதையான் கூட்டிவந்
துறுபல மென்னச், சாலவு முரைத்தா னிதியை வெறுத்த தறுகணு
னெனுமபூ ஜகுலே. (13)

மூரிவெற் பனைய புயமுகம் மதுவை முன்னிலைத் தலைவாய் றுத்
தித், தாரையிற் செலுநும் மிடர்களுந் தவிருந் தழலெழும் பாலையுங்
குளிர்ந்து, வேரியங் கமல வாவியங் கரையாம் விரைவினிற் ஷாமடை
குவமென், றுரிதுக் குரைத்தார் தாதவிழ் மலர்த்தா ரணிதிகழ் புயத்தபூ
பக்கர். (14)

ஈதுநன் றெனவொத் தனைவரு மிசைத்தா ரெழின் முஹம் மது வுமுன் னிலையாய்ப், பாதையி னடப்பப் பெரியவ னருளின் பணிகொடு ஐபுறயீ லிறங்கிப், பேதமற் றணுகி யொட்டகக் கயற்றைப் பிடித்தன ரைநொடிப் பொழுதிற், றீதற நெறியுந் தெரிநதன நான்கு திசைகளுந் தெளிதரத் தெரிந்த. (15)

தலைமைமுன் னிலையாய் முஹம்மது நடப்பச் சாருநன் னெறியினைச் சார்ந்தோம், நிலமிசை கரிய மேகமொன் றெழுந்து நிழலிவர்க் கிடுவதுங் கண்டோ, மலைகடற் றிரைபோற் கானலில வெதும்பி யலைந்திடு வருத்தமுந் தவிரப், புலனுறப் புனலும் பருகுவஞ் சிறிது போழ்திலென் றனைவரும் புகன்றார். (16)

மந்தரம் பொருவா தெழுந்தபொற் புயத்து முஹம்மது மேருவாகனத்தின், கந்தரக் கயற்றை யசைத்திட வுளத்தின் கறுத்தறிந் தொட்டகங் களித்துச், சுந்தரப் புவியில் வலதுகா லோங்கித் தொட்டிடத் தொட்டவப் போதிற், சிந்துநேர் கடுப்ப நுரைதிரை பிறங்கச் செழித்தெழுந் தனநதிப் பெருக்கே. (17)

ஆறெழுந தோடிப் பாலையைப் புரட்டி யழகுறு மருதம தாக்கத், தேறல்கொப் பளித்து வனசமுங் குவளைத் திரள்களுங் குமுதமும் விரிய, வேறுபட் டலர்ந்த மாமெலாந் தழைத்து மென்றழை குளிரதரப் பூத்துத், தூறுதேன் றளித்துக் கனிகளுங் காயுஞ் சொரிதரச் சோலைசூழ்ந் தனவே. (18)

வற்றுறுச் செல்வப் பெருக்கினி தோங்கும் வருதையம் பதியுறைனயினுர், பெற்றபே றிதுகொ லெனமுழு மணியாய்ப் பிறந்தமெய்த் துரையபுல் காசீஞ், சுற்றமுங் கிளையுஞ் சிறப்பொடு தழைத்துச் சூழ்ந்திருந் தணிதிகழ் வனதோறு, குற்றமி னதியி னிருகரை மருங்குங் குறைவறத் தளிர்த்தன தருக்கள். (19)

நானமும் புழுகும் பாளிதக் குலமு நறைகெட மிகுந்தவா சமதாய்த், தேனினுங் கருப்பஞ் சாற்றினு நதிரண்ட தெங்கிள நீரினு மினிதா, யூனமி னதியி னொருகைநீ ரருந்தி யுடல்குளிர்ந் தரும்பசி யொடுங்கி, யானன மலர்ந்து முஹம்மதைப் புகழ்ந்தங் கனைவரு மதகளி றுறுர். (20)

சுரத்திற்புனலழைத்த படலம் முற்றிற்று.

ஆ படலம் 11-க்கு திருவிருத்தம் 999.



# பாந்தள் வதைப் படலம்.

கனலுண்ட கடுஞ்சுர மீதுநறும்
புனலுண்டு பொருந்தின ரவ்வுழையின்
சினமுண்டெழு செங்கதிர் பொங்குமிரு
ளினமுண்டு குணக்கி லெழுந் ததுவே. (1)

மருதங்கள் கலந்த வனத்தி லிருந்
தெருதும்பரி யும்மெழி லொட்டகமும்
பெருகுந்திர ளும்படி பின்செலவே
வாதுங்க முகம்ம தெழுந் தனரே. (2)

வடிவா லொளி வீசிய வானவர்கோன்
படிமீ துறுபா தையின்முன் செலவே
நெடியோனபி பின்செல நேணெறியிற்
கடிமார்பர் கலந்து நடந் தனரே. (3)

கானந்தனி லேகிய காலையினிற்
றானந்தரு தாரை தனைத் தெரியா
தீனந்தரு வல்லிரு ளெய்தி நெடு
வானுந்தெரி யாது மறைத் ததுவே. (4)

இருள்கொண்டு பரந்திட யாவருமோர்
மருள்கொண்டவர் போல மயங்கினரா
லருள்கொண்ட முகம்மது மனம்புறவே
தெருள்கொண்டு நடந்தனர் செலவழியே. (5)

கொடுவல்லிரு ளுண்டு கொழுங்கதிர்பைங்
கடலந்தனை மீதெழு காரணமுற்
றிடருந்தவி ருமமில ராலெனவே
மடனெஞ்சமி லாது மகிழ்ந் தனரே. (6)

மருமிக்க புயத்தெழில் வள்ள லுடன
கருமத் தொழில காரரு மற்றவரு
மொருமித்து நடந்துறு வாவெனுமோ
ரருவிக்கரை மேவி யடுத் தனரே. (7)

வண்டார்பொழி லார்வரை யூடருவி
யுண்டாசில ருண்கிலர்கா ணெனவே

கண்டார்நபி வல்லவ னைக்கருதிக்
கொண்டார்புன லுங்குதி கொண்டதுவே. (8)

அளித்தானுண நீர்கிடை யாதகனை
யுளித்தானிலை யாதிட வோடுபுனற்
குளித்தார்குடித் தார்மகிழ் கொண்டுடலங்
களித்தாடி நடந்தனர் காளையரே. (9)

மகிழ்கொண்டு நடந்த வனந் தனிலே
துகடுன்றி விசும்பு துடைத் திடவே
நிகழ்கின்ற நெடுநதொலை சென் றதின்மே
லுகழ்கின்றொரு வன்வா வுற்றனனே. (10)

கைபோடிரு காலு நடுங் கிடவே
மெய்யோடிய வேர்வைகள் சிந்திவிழ
அய்யோவிதி யோவென வாயலறி
யுய்வாறினி யேதென வோதினனே. (11)

மயமாறிட வாய்குழ றிக்குழறித்
துயரோடுற வந்து சுழன் றவனை
வயவீரர்கள் கண்டுன் மனத்தி லுறும்
பயமேதுகொ லென்று பகர்ந் தனரே. (12)

சினமுண்ட செழுங்கதிர் வேலுடையீர்
வனமுண்டனை நாழிகை யுள்வழியிற
கனமுண்டொரு காரண மாமலையி
னினமுண்டு பருத்தெழு கின்றதுபோல. (13)

அரவொன்றுள தத்திரி யும்பரியுங்
கரமொன்று சரித்திர னும்மெதிரே
வரவுண்டிடும் வாறலை நீளமதை
யுரமொன்றி யுரைத்திட நா வரிதே. (14)

கண்ணின்கன லுங்கடை வாய்புரளப்
பண்ணுங்கனவ நாவொடு பற்களுறும்
வண்ணந்தனை யோதிட வானவருந்
துண்ணென்றுட லங்க டுணுக் குறுவார். (15)

திருகுஞ் சின மாயது சீறிவெகுண்
டிருகுனறு கடந்தென தினனுயிரைப்

பருகும்படி வந்தது பாரு மகோா
வருகின்றது காணென மாழ்கினனால். (16)

அலைவுற்றவ னம்மொழி கூறிடலு
நிலையற்றவர் நின்று நினைந்துநினைந்
துலைவுற்றுட லங்க ளொடுங்கிமன
மலைவுற்று மயங்கி வருந் தினரே. (17)

வந்தானுரை செய்தது மற்றவர்க
ளொந்தாவி பதைத்திட நோக்கினரா
லுந்தாதுறு பாதையி லொட் டகம்விட்
டிந்தாரெழில் வள்ள லிரங் கினரே. (18)

அதிர்கொண் டது நாசியி லங்கி யெழக்
கொதிகொண் டுறுகோ பமதா யரவஞ்
சதிகொண்டு நடந்தது தாரையிலென்
றெதிர்கொண் டன ரெங்கண்மு கம்மதுவே (19)

அரிகண்டு வெருண் டடல் வாயினைவிண்
டெரிகொண்ட விழிக்கன லிற்று விழ
விரிகின்ற படத்தை விரித்து விடஞ்
சொரிகின்ற தெனத்திசை தாவியதே. (20)

கழிகின்ற தரும்பொரு கை முழுமுண்
டெழில்கொண்டமு கம்ம தெடுத் தெதிரே
வழிகொண்டதை வீசிட வலனுடல
0 மிழிகொண்டுதி ரங்களெழுந் தனவே. (21)

அடிபட்டட வித்திர ளத்தனையும்
பொடிபட்ட துருண்டு புரண்டு வயின்
மடிபட்டொரு கற்குவை வாயினிடைக்
கடிபட்டது பட்டதுகட் செவியே. (22)

வரைபோலுர கத்தை வதைத் ததுகண்
டிரைவோடு புகழ்ந் திவாசெங் கனிவா
யுரையூ டொழு கிச்செலு மென்றுவகைத்
திரையூடு குளித்தனர் தேசிகரே (23)

பாந்தள்வதைப் படல-முற்றிறு.

ஆகப்படலம்-12-க்குத் திருவிருத்தம்-722

---

0 உதிரங்களென்னும்பன்மை-இரு துண்டங்களை மருவியது.



# நதிகடந்த படலம்.

கட்செவி பகையறுத் தரிய கானகத்
துட்படு மிடர் தவிர்த் தொளிரும் வள்ளலை
வட்படும் வேலுடை மாக்க ளியாவரு
நட்பொடு கலந்துட னடந்து போந்தனர். (1)

குறுபொறை கடந்து போய்க் குவடு சுற்றிய
சிறுநதி யாறுகள் கடந்து சென்றபின்
மறுவுறு மதிதொடு மலையு மம்மலைப்
பெறுமுறை யருவியும் பிறங்கத் தோன்றின (2)

அம்மலை நதிக்கரை யடுத்துச் சீரிய
செம்மலுஞ் சூழ்ந்ததே சிகரு நீங்கிலாச்
சும்மை கொண் டிறங்கிநீ ராடித் தூநறைப்
பொம்மலுண் டரும்பகற் பொழுது போக்கினா. (3)

மதுப்பிலிற் றியமரை மலரின் கொள்ளையும்
விதுக்கதிர படத்தனி விரியுங் காவியு
மெதிரபொடு களிப்புமா குலமு மெய்திடக்
கதிர்க்கதி ரவன்குட கடற்கு ளாயினன். (4)

நீருறை பறவையுன் குலமு நீடரு
பாரினில விலங்கின மியாவும் பண்ணுறக்
காருறு சோலைவாய்ச் சுரும்புங் கண்படைந்
தூர்வன வெவையுநல் லுறக்க முற்றதே. (5)

போதடைந் திருளெனும் படலம் போர்த்திட
மாதவ ரெனுமுகம் மதுவு மன்னருந்
தாதவிழ் நதிக்கரைத் தருவி னீழலிற்
சோதிமா முகமலர் விழிக டூங்கினர் (6)

வனநதிப் பெருக்கெடுத் தெறிந்து மால்வரை
தனையமிழ்த் திடவரு வதுகொல் சார்நதநும்
மினமுட னெழுகவென் றிலங்கும் வள்ளறன
கனவினிற் ஜபுறயீல் கழறிப் போயினர் (7)

மருப்பொலி புயமுகம் மதுதங் கண்விழித்
தொருப்பட வெழுந்துழை யுற்ற பேர்க்கெலாம்
விருப்பொடு மொழிந்தனர் வெள்ளம் வந்துநம்
மிருப்பிடம் புரட்டுமீங் கெழுக வென்னவே. (8)

தெரிதர வுரைத்தசொற் றேர்ந்தி யாவரும்
விரைவினிற் சோலைவாய் விடுதி நீங்கியே
புரவியொட் டகம்பொதி பொருளுங் கொண்டணி
வரையினுச் சியினிடை மலிய வேகினார். (9)

படர்தரு திரைவயி றலைத்த பைம்புனற்
கடலிடை குளித்துச்செங் கதிர்க் கரங்களா
லிடைபடு மிருட்குல மறுத்துப் போக்கியே
சுடரவ னுதயமா கிரியிற் றோன்றினான். (10)

அரிசினக் கொடுவரி யமிழ்ந்து போதரப்
பொரியரைத் தருக்கிளை புரட்டிப் பொங்கிய
நுரையிரு கரைகளு நுங்க மாநதிப்
பிரளய மிடனறப் பெருகி வந்ததே. (11)

குறவரைக் குறிஞ்சிவிட் டூழ்த்துப் பாலையின்
மறவரை முல்லையி லாக்கி மாசுடைத்
தொறுவரை நிரையொடுஞ் சுருட்டி வாரியே
யறைபுனற் பெருக்கெடுத் தடர்ந்த தெங்குமே. (12)

கரைசுழித் தெறிந்துநீள் கயங்க ளாக்கின
திரையெறி கயத்தினைத் திடரா தாக்கின
விரைகமழ் சோலைவே ரறுத்து வீழ்த்தின
வரைகளைப் பிடுங்கின மலிந்த நீத்தமே. (13)

கரைபுரண் டுள்ளகங் களித்துக் கானிடைத்
திரவியந் திரைக்கரத் தெடுத்துச் சிந்தியே
குரைகட லெனுநதி குரிசி னங்கபி
மறைமல ரடிதொழ வந்த போலுமே. (14)

மாநதி பெருகியெவ் வரையுஞ் சுற்றிய
நாணிலத் திசைநெறி நடப்ப தின்மையாற்
றானவன் றாதொடு சார்ந்த மன்னரும்
மீனமின் மூன்றுநா ளிருந்து நோக்கினார். (15)

மலைமிசை மூன்றுநா ளிருந்து மானதி
யலையெடுத் தெறிந்துயர்ந் தடர்ந்த தல்லது
நிலைதரக் காண்கிலோ மென்ன நீண்டசஞ்
சலமெனுங் கடற்குளாய்த் தவித்து வாடினார். (16)

இற்றைநா ளிரவிவ ணிருந்து கண்டுநா
மற்றைநாட் போகுவம் வருந்த லென்றனர்
வெற்றியும் வீரமுந் தவத்தின் மேன்மையு
முற்றிய யாட்சியா ரலங்கன் மொய்ம்பினர். (17)

இருகரை களுந்தெரிந் திலவிம் மானதி
பெருகுவ தடிக்கடி பேத முற்றபி
னொருமொழி யுரைத்தவ ருளத்தின் பெற்றியைத்
தெரிகிலோ மெனமனந் தேம்பி னாரரோ. (18)

அவ்வுழி ஐபுறயீ லடைந்து கண்டுயில்
செவ்விநேர் முகம்மது கனவிற் செப்பினு
ரிவ்விருள் விடிந்தபி னெழுந்து முன்னரோர்
நவ்விதோன் றிடும்வழி நடத்தி ரென்னவே. (19)

மனமுறச் சபுறயீல் வந்து சொல்லிய
கனவினைக் கண்டகங் களித்துக் கண்ணிணை
யிணைவிழித் தெழுந்தன ரெழுந்த காலையிற்
றினகர னெழுந்தனன் பரந்த செங்கதிர். (20)

வரைபுரை புயமுகம் மதுமன் மாவொடு
நிரைநிரைத் தொறுவையு நடத்திர் நீவிரென்
றுரைசெய்து பெருக்கெடுத் தோங்கு மானதிக்
கரையினின் மரைமலர்க் காலி னேகினார். (21)

ஒட்டகம் புரவிமற் றுள்ள போர்களு
மட்டறு சரக்கொடு மலிந்து தோன்றிடத்
தொட்டவெண் டிரைக்கட லகடு தூர்த்திட
முட்டிய புனனதிக் கரையின் முன்னினார். (22)

அள்ளிய பொன்னெடுத் தமைத்து வெள்ளியாற்
புள்ளிக ளணியணி பொறித்து வைத்தன
வொள்ளிய மெய்யழ கொழுக வொல்லையிற்
றுள்ளிய வுழையுழை யிடத்திற் றோன்றிற்றே. (23)

நதியிடை வந்துமா னடப்பக் கண்டுமா
மதிநிகர் முஹம்மது மனத்தி லின்பமுற்
றிதமுற நடந்துபி னேக யாவரும்
புதுமைகொ லிதுவெனத் தொடர்ந்து போயினர். (25)

உடற்பொறி புள்ளிக ளொளிர முனைசெலு
மடப்பிணை பின்செலு மக்க ளியாவர்க்குங்
கடற்பெருக் கெனக்கரை கடந்து வீங்கிய
தடப்பெரு நதிமுழந் தாட்கு ளானதே. (26)

பெருகிய பிரளயப் பெருக்கைப் போக்குதற்
கொருவனே யலதுவே றிலையென் றுன்னியே
தெருளுறச் செல்குநர் செல்க வென்றனர்
வரையிரண் டெனுபுணிப் புயமு ஹம்மதே. (27)

இம்மொழி நன்கென விசைந்தி யாவருஞ்
செம்மலோ டினிதுறச் செல்லுங் காலையில்
விம்மிதப் புயநபி விரித்த வாசகஞ்
சம்மதித் திலதொரு தறுக ணாளனே. (28)

புந்தியிற் புத்தினைப் புகழ்ந்து போற்றித்தன்
சிந்தையைத் தவ்வுழை செல்லும் போழ்தினி
லுந்தியின் றிரைசுழித் துருட்டி யீழ்த்திட
நந்திறு னபியுரை மறுத்த நாவினன். (29)

விதியவன் றூதர்சொன் மேவி லாதவ
னதியினி லிறந்தன னடுக்க மின்றியே
யிதமுற வுண்மைகொண் டிசைந்த பேர்முழுக்
கதிபெறு பவரெனக் கரையி லேறினா. (30)

சிந்துவின் றிரைப்பெருக் கெறியத் தீதிலா
நந்தியத் திரிபரி யாவு நன்குற
வந்தவை முஹம்மதின் பறக்கத் தாலெனத்
தந்தம ரொடுபுகழ்ந் தெடுத்துச் சாற்றினர். (31)

நதிகடந்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 13-க்குத் திருவிருத்தம் 753.





# புலிவசனித்த படலம்.

படர்ந்த தெண்டிரைப் பெருக்கெடுத் தெறிநதிப் பரப்பைக்
கடந்து கான்பல கடந்தரு நெறிசெலுங் காலை
கொடுந்த டக்கரித் திரளெனுங் குழுவினு ளொருவ
னடைந்து சீரகு மதினடி தொழுதறை குவனால். (1)

நிகழுந் தாரையிற் காவதத் துள்ளுறை நெடுநீ
ரகழி போன்றவோ ரோடையுண் டதனினுக் கணித்தாய்ப்
புகலு தற்கரி தடவியுண் டவ்வுழி பொருநதி
யுகளு மாங்கொரு பாதசக் கொடுவரி யுழுவை. (2)

நீண்ட வானிலம் புடைத்திடக் கிடந்துட னிமிர்த்துக்
கூண்டு கான்மடித் திருவிழி கனல்கள் கொப்பிளிப்பப்
பூண்ட வெள்ளெயி றிலங்கிட வாய்புலால் கமழ
வீண்டு முட்செறி வனத்திடை சினத்தொடு மிருக்கும். (3)

நிரம்பும் வள்ளுகிர் மடங்கலி னினங்களி னிணைமுண்
டிரும்ப னைக்கையும் மதகரிக் கோட்டினை யீழ்த்திட்
டுரம்பி ளந்துதி ரங்களை மாந்திநின் றுறங்கா
தரும்பெ ருங்கிரி பிதிர்ந்திட வுருமினு மலறும். (4)

அதிர்ந்தி டுந்தொனி செவியுற வடவியி லடைந்த
முதிர்ந்த மேதியுங் கலையடிக் கேழலு முழுதும்
பொதிந்த பெய்மயி ரெண்கினங் களுமரைப் போத்தும்
பதிந்த காறடு மாறிட வீழ்ந்துடல் பதைக்கும். (5)

புறந்த யங்குமஞ் சிறையறு பதப்பொறிச் சுரும்பு
திறந்து தேனையுண் டணிதிகழ் தொடைபணி திறலோய்
மறந்த யங்குவேன் மாந்தரவ் வேங்கையின் வாய்ப்பட்
டிறந்த தன்றியொட் டகம்பரி யெண்ணிலக் கிலையே. (6)

என்ற வாசகஞ் செவிபுக வெழிலிரு புயமுங்
குன்று போலுற வீங்கின முறுவல்கொண் டிடாய்
நின்ற வேங்கையெவ் வுழியென நிகழ்த்தின ரவனும்
வென்றி வாளர சேயணித் தெனவிளம் பினனே. (7)

இலங்கு செங்கதிர் வேலொரு கரத்தினி லேந்தி
நிலங்கொ ளப்பரந் தரியமெய் யொளிபுடை நிலவ
நலங்கொள் குங்குமத் தொடைபுரண் டசைந்திட நடந்த
குலங்கொ டோண்முகம் மதுபுலி யுறைநறி யுழையில். (8)

மாதி ரத்துறை கேசரி நிகர்முகம் மதுதம்
பூதரப் புய மசைதரப் புளகிதத் தோடுங்
காது செங்கதிர் வேல்வலக் கரத்திடை கவின
வீதி வாய்வரக் கண்டது பெரும்வரி வேங்கை. (9)

கண்ட போதினில் வால்குழைத் தரியமெய் கலங்கிக்
கொண்டு மென்மெல நடந்துதன் பெருஞ்சிரங் குனித்துத்
தண்ட னிரப்பதத் தெரிசனைக் கெனச்சலா முரைத்துத்
தெண்ட னிட்டது வள்ளுகிர் திண்டிறற் புலியே. (10)

நலன்பெ றுங்குறை விகரினில் வந்தநா யகமே
நிலம்ப ரந்துநீன் பெருகிட வெழுந்தநீ ணிலவே
புலன்க ணினபுறக் கண்டனன் களித்தனன் பொருவில்
பலன்பெ றும்படி யாயின னெனப்பகரந் ததுவே. (11)

வந்து தெண்டனிட் டெழுந்துவாய் புதைத்துற வணங்கிய
புந்தி கூரதரப் போற்றிய வள்ளுகிர்ப் புலியை
மந்த ராசல முகம்மது நனிமன மகிழ்ந்து
சந்த மெண்மணிக் கரத்தினுற் சிரமுகந் தடவி. (12)

இன்று தொட்டிவ ணெறியினி லுயிர்செகுத் திடுவ
தன்று வேறொரு காட்டினிற் புகுகவென் றறைந்த
மன்ற றுன்றிய முகம்மதின் மலரடி வணங்கி
நன்று நன்றெனப் போற்றியே நடந்தது வேங்கை. (13)

படுகொ லைப்புலி மெய்யுறப் பணிந்திவர் பாதத்
தடி வணங்கிய காரண வதிஜய மதனு
லுடைய வன்றிருத் தூதரே யுண்மையென் றுன்னித்
திடமு டைத்தநெஞ் சாயின மறிவினிற் றெளிந்தோர். (14)

புலி வசனித்த படல-முற்றிற்று.

ஆகப்படலம்-14-க்குத் திருவிருத்தம்-767.



# பாந்தள் வசனித்த படலம்.

---

வேங்கை போயபின் வள்ளலு மனைவரும் விரைவிற்
றுங்க ருஞ்சுமை யொட்டகம் புரவியுஞ் சாய்த்து
நீங்க ரும்பராற் கானையா றுகளையு நீந்தி
யோங்க லுஞ்சிறு திடர்களுங் கடந்துட னடந்தார். (1)

துன்று மென்மதி முகந்துலங் கிடவெகு தூரஞ்
சென்ற பிற்றையிங் கிவர்களி லொருவர்செப் பினராற்
குன்று தோன்றுவ ததன்கிழக் கொருகுவ டடுப்ப
வன்றி றற்கொடும் பாந்தளுண் டவண்வழிக் கெனவே. (2)

பாந்த ளொன்றுள தெனுமொழி செவிபுகப் பசுந்தேன்
மாந்தி வண்டிசை பயிலுமொன் டார்புய வள்ளல்
கூந்தன் மாவுடன் பின்னிட வருகெனக் குழுவை
நீந்தி முன்னிட நடந்தனர் கானிடை நெறியின். (3)

சீத வொண்புனற் குட்டமுந் தடவையுஞ் செறிந்த
பாதை நீந்தியங் கொருகுவ டடியினிற் படரக்
கோது கோடைமா ருதமுயிர்த் துணங்குதன் றனைய
தீது றுங்கொலைப் பாந்தளைக் கண்டனர் திறலோர். (4)

கண்க ளக்கினிக் குவையெனப் பொரிதிரை கதுவ
மண்க ளங்கனு மிருளுற நச்சுமா சுமிழ்ந்து
விண்கொ ளும்பிறைக் கீற்றென வெளவெயி றிலங்கப்
புண்கொ ளுங்கடை வாய்கவை நாவிடை புரள. (5)

புள்ளி வட்டவெண் பரிசைக ளெனவுடல் போர்ப்பத்
தள்ளி வாலசைத் திடுதலிற் றரையிடம் பிதிர்த்திட்
டள்ளி விட்டெறிந் தெனத்திசை திசைதுக ளடைய
விள்ள ருஞ்சிரச் சூட்டொரு கதிரினும் விளங்க. (6)

கண்டு தம்மனத் திடையினி லொருபயங் கரஞ்சற்
றுண்ட தில்லைகொ லென்னவந் துதித்தவந் நொடிக்கு
ளண்டர் போற்றிய முதலிறை யவன்றிரு வருளாற்
கொண்ட சத்தமொன் றெழுந்தது குவலயங் குலுங்க. (7)

முகம்ம தேயும தடியிணை காணவிவ் வழியி
னிகரில் வாளா வடைந்தது பயங்கர நினையா
தகம கிழ்ந்திடச் செலுமென வரசர்கோன் களித்துப்
புகா றத்தனி நடந்தடுத் தனர்புயங் கனையே. (8)

இரைந்து மூச்சொடுங் கிடந்தகட் செவிதலை யெடுத்து
விரிந்தெ ரிந்தகட் கடையினன் முகம்மதை விழித்துத்
தெரிந்து நோக்கிநம் மிறைபவன் றாதெனத் தெளிந்து
வருந்து துன்பமின றொழிந்தன மெனமகிழ்ந் ததுவே. (9)

மலை கிடந்துயர்த் தனையென விரிந்தவாய் பிளநது
தலையெடுத்துநா விரண்டினு மொருசலாஞ் சாற்றி
நிலை யசைந்தொளி நெட்டுடல் குழைந்திட நெளிநது
பல பொறிப்படந தரைபடப் பணிநதுபின் பகரும். (10)

கோல வார்கழற் குரிசில்நும் மடிக்கொழுங் கமலத்
தால னேகமென் போலஃ றிணைக்கொடுஞ் சாதி
சீல மேவிய பதமுறு மென்பதைத் தெளிந்தெக்
காலங் காண்குவ னெனக்கிடந் தனனெடுங் காலம். (11)

பிறந்த நாட்டொடுத் திற்றைநாள் வரைக்குநும் பெயரை
மறந்தி ருநதநா ளறிகில னினைக்கிலென மனத்தி
லிறந்தி டாமுன மின்றுகண் டிடும்பல னெனைப்போ
லறநத வப்புரிந தவர்களும பெறுவதற் கரிதால். (12)

ஆதி நாயகன் றிருவொளி வினிலவ தரித்த
வேத நாயக மேயுமைக் கண்டதால விளைத்த
பாத கம்பல தவிர்த்துமுற் பவங்களை யறுத்துத்
தீதி லாதநற் பதவியும் படைத்தனன சிறியேன. (13)

என்று கூறியிம் மலரடி யிணையினை யெளியே
மென்று காண்குவ மோவென வயர்ந்துடைந் தெண்ணி
யென்று மின்றுபோற் காண்குவ மெனமனத் திருத்தி
யென்றுந் தீன்பயிர் விளங்குற வாழியென் றிசைத்தே. (14)

பணி பணிநதெனக் கெவைபணி விடையெனப் பகர
வணி யணிந்தெனச் செவியுறக் கேட்டதி ஜபித்து
மணி கிடந்தொளிர புயவரை விம்முற மகிழ்ந்தார்
திணி சுடர்க்கதிர வேல்வல னேநதிய திறலோர். (15)

பொருப்பி டத்தினு மடவிக ளிடத்தினும் புகுந்து
விருப்பு றும்படி வாழ்வதல் லதுநெறி மேவி
யிருப்பி னின்வயி னிடர்வரு மெனவெடுத் திசைத்தார்
சுருப்பி ருந்துதே னிடைதவழ் தொடையணி தோன்றல். (16)

ஒடுங்கித் தெண்டனிட் டுறைந்திட மிகழ்ந்தொரு மருங்கி
னெடுங்கி ரிப்பறந் தவழ்ந்தென வுடறனை நெளித்து
மடங்கல் வெங்கரி கொடுவரி யடவியின் மறைந்து
நடுங்கி டத்தனி போயது பெருந்தலை நாகம். (17)

நாக முற்றதுங் கிடந்ததும் பாதையி னயினோர்
பாக முற்றுமெய் வணங்கிநன் மொழிசில பகர்ந்து
போகை யென்றதிற் போயதும் புதுமைசொ லெனவே
யாக முற்றதி ஐயித்தன ரனைவரு மன்றே. (18)

பாந்தள் வசனித்த படல-முற்றிற்று.

ஆகப்படலம்-15-க்குத்-திருவிருத்தம்-785.

——:*:——



## இசுறுகாண் படலம்.

எரிந்த கட்பொறி யரவுவந் துறைபிட மிவணை
யருந்த வப்பொருண் முகம்மது மடையிட மினணை
தெரிந்து காண்பதற் கிவையிவை குறியெனச் சோத்தி
விரிந்த தம்பெருங் குழுவுட னடந்தனா விறலோர். (1)

பால் பரந்திடந் துகளெழப் படுமுனைத் திரிகோ
டிரலை மென்பிணை கன்றுடன் றிரிதகா னேகி
விரித லைச்சிறு முள்ளிலைச் செங்குலை விளைந்த
கரிய மென்கனி சொரிதரும் பொழிலையுங் கடந்தார். (2)

ஈத்தம் போரட விகள்பல கடந்தய லேகப்
பூத்த மென்மலர் செறிதரு பொழில்புடை சூழ
வாய்த்த நற்குடிப் பெயருடன் வழியிடை நெடுநாட்
காத் திருந்தபண் டிதன்மனை தெரிதரக் கண்டார். (3)

## வேறு.

இரைதரு வாரியேழு மெடுத்துலாய் மடுத்துண் டோடிச்
சொரிதரு மேகம் போலச்சொல்லுமெய்ம் மறைக ளென்னுங்
கரையில்வா ருதியை யுண்டு கருத்தினி லிருத்தி யார்க்குந்
தெரிதர வறிவுமாரி பொழிந்திடத் திறக்கும் வாயான். (4)

ஆதமே முதலீ ருக வருநபி யவர்கட் கெல்லாம்
பேதமொன் றின்றி வந்த பெருவர மறையின் றீஞ்சொ
லோதிய முறைமை யங்கா ளொழுகிய வொழுக்க மிங்காண்
மாதவர் குறிப்புந் தேர்ந்து வகுத்தெடுத் துரைக்கும் வாயான். (5)

பல்வித நூலிற் றேர்ந்து பலசம யங்க ளாகச்
செல்வழி யனைத்து நோக்கிச் சென்றுமட் டறுத்துத் தேறிக்
கல்பினி லிருத்தி மாறுக் கதிபதி சேர்க்குந் தூய
நல்வழி தெரிந்து காண நடுவெடுத் துரைக்கு நாவான். (6)

அறிவுநல் லொழுக்கம் வாய்மை யன்புறு மிரக்க மிக்க
பொறைதவங் குணம் வணக்கம் பொருவிலா சார மேன்மைத்
திறநிரை யருணன் மானந் தேறச்சியிற் றெளிந்த கல்வி
குறைவறப் பெருகி நாளுங் குடிபுகுந் திருந்த நெஞ்சான். (7)

தருந்தரு வனைய செங்கைத் தனபதி யிசுரு வென்னும்
பெருந்தவ முடைய வள்ளல் புறங்கொளி தவழு மாடத்
திருந்தன னிருந்தபோதி லெழுகதிர் துகளான் மூடி
பாரந்திடும் வரவு நோக்கிப் பார்த்ததி ஜூயித்து நின்றான். (8)

மெய்த்தவப் பொருந்து மக்கா புரத்துறு வேந்தர் கொல்லோ
பத்திவிட் டொளிர்ஷா மென்னும் பதியுடைத் தலைவர் கொல்லோ
முத்தவெண் மணியிற் றோன்று முகம்மதின் வரவு கொல்லோ
வெத்தலத் தவரோ விங்ஙு னெதிரந்தவ ரென்று நின்றான். (9)

ஒட்டகம் புரவி தூர்த்திட் டுறுதுக ளுதயன் மாய
மட்டறம் பொலிந்து தோன்றி வருமவர் தமக்கு மேலா
யிட்டதோர் கவிகை மேக மெழிலுறத் துலங்கக் கண்டு
கட்டிய மாலைத் திண்டோள் கதித்தெழப் புளகம் பூத்தான். (10)

வேதவா சகத்தி லீசா விளம்பிய வசனந் தேர்வான்
கோதறு கரிய மேகக் குடைநிழ றொடர்ந்து வந்த
பாதையோர் தம்மை நீங்காப் பரிவினை நோக்கிநோக்கித்
தீதறு முகம்மதென்னத் தெளிந்தனன் செவ்வி யோனே. (11)

கருந்தடங் கவிகை வள்ளல் வரவுகண் களித்து நோக்கி
யருந்தவம் பெற்றே னின்றென் றருகிருந் தவனைக் கூவி
விருந்தின னருந்தி நந்தந் துடவையில் விடுதி யாக
விருந்தவ தரித்துப் போமி னெனவெடுத் தியம்பு கென்றான். (12)

என்றவ னுரைப்பக் கேட்டங் கெழுந்தனன் பாதை யோர்முன்
சென்றனன் விரைவின் வந்த தேசிகர் தம்மை நோக்கி
மின்றவ ழுலங்கல் வேலிர் சோலைவாய் விடுதி யாகிச்
சொன்றியுண் டேழுக வென்னச் சொல்லினன் முதியோ னென்றான்.

விருந்தெனு மாற்றங் கேட்டு மெய்மகிழ்ந் தாகம் பூரித்
திருந்தனர் விரிந்த காவி லிடபமத் திரிமா வெல்லா
மருந்தின குளகு நீருண் டவ்வயி னுறைந்த பின்னர்
திருந்திய பண்ட மியாவுஞ் செறித்தொரு புறத்திற் சேர்ந்தார். (14)

மறந்தலை மயங்குஞ் செவ்வேற் காமுகர் மதுதாம் வந்தங்
குறைந்திடத் தருக்க ளியாவுந் தளிர்த்தன வொண்பூக் கோட்டி
னிறைந்தன வீன்ற பைங்காய் நெருங்கின கனிக ளெங்குஞ்
சிறந்தன தேம்பெய் மாரி சிந்தின திசைக ளெல்லாம். (15)

மறைதெரி இசுறா வென்போன் முகம்மது தமக்கன் பாக
முறைவிருந் தளிக்கு முன்ன முகிழ்நனி தருக்க ளெல்லா
நிறைமலர்த் தலைகள் சாய்த்து நீண்டமென் றளிர்க்கை தன்னால்
வெறிநறாக் கனிகள் சிந்தி விருந்தளித் திட்ட வன்றே. (16)

விருகசுந் தோடு விண்டு மென்முகை யவிழ்க்கும் பூவி
னரியளி குடைந்து தேனுண் டகுமதின் புகழைப் பாட
மாகதக் கதிர்விட் டோங்கு மணிச்சிறை விரித்து நீண்ட
கரைகளிற் றருவி னீழற் களிமயி லாடு மன்றே. (17)

மடலவிழ் வனச வாவி வைகையம் பதிக்கு வேந்த
னடலுறை யபுல்கா சீம்த னருங்குடிச் செல்வம் போலப்
புடைபரந் தலர்கள் சிந்திப் பொங்குதேன் கனிக டேக்கிச்
சுடரவன் கதிர்க டோன்றாச் சோலைவாய் விளங்கிற் றன்றே. (18)

மருப்புகுஞ் சோலை வேலி நீழலில் வரவு மொட்டார்
நெருப்புநீ ருப்பென் றூனு நினைத்தெடுத் தளிக்கி லாதார்
பொருப்பென வுயர்ந்த செந்தேம் பொழிலிடை புகுந்து நந்தம்
விருப்பொடு மிருப்பச் செய்தார் முகம்மதின் வியப்பீ தென்பார். (19)

சீதநீர் குடைவா ராடிச் செழும்பொழின் மலர்கள் கொய்வார்
கோதறு கனிக ளெய்ப்பார் கொழுந்தழை விலங்குக் கீய்வார்
போதினி லமளி செய்வார் பூத்தொடுத் தணிந்து கொள்வார்
மாதவர் முகம்ம இங்ஙன் வாப்பெறும் பலனீ தென்பார். (20)

கனிபல வருந்தித் துண்டக் கறுப்படு சாறு தேக்கிக்
குனிதலை யிளநீ ருண்டு கொழுமடற் றேனை மாந்தி
நனிவயி றார்ந்தோம் பொய்யா நாவினன் மனையிற் புக்கி
யினியெவர் விருந்துண் பாரென் றெழின்முக மலர்ந்து சொல்வார். ()

இன்னண மியம்பிக் காவி லினிதுறைந் திருக்குங் காலைச்
சென்னெறி வேத நன்னூ றெளிந்தறி யிசுரு வென்போன்
றன்மனை விருந்துண் டேக வருகவென் றிருவர் சார்ந்திம்
மன்னவர் தம்மைப் போற்றி மனங்களி குளிர்ப்பச் சொன்னார். (22)

மடிவுறு மனத்த னாகி வருமபூ ஜகுலென் றோதுங்
கொடியவன் கவட மாயோர் சூழ்ச்சியைக் குறித்து நீண்ட
கடிகமழ் சோலை வாயின் முகம்மதைச் சரக்குக் காக்கும்
படியிருத் திடுக யாரும் பரிவுட னெழுக வென்றான். (23)

வஞ்சக னுரைத்த மாற்றங் கேட்டபூ பக்கர் மாழ்கி
நெஞ்சகம் புழுங்கிச் சென்றார் நிறைமலர் தேனை மாந்திச்
சஞ்சரி கங்கள் பாடுந் தண்டலை நீங்கி யாரும்
விஞ்சையு மறையுந் தேர்ந்த வேதியன் மனையிற் புக்கார். (24)

மூதுரை வழிவ ழாதோன் முன்றில்வந் தவர்க ளோடுஞ்
சீதவொண் கவிகை நீழற் காண்கிலன் றெருமந் தேங்கிப்
பாதக ரிவரியா ரென்றன் பவக்கட றொலைய வந்த
மாதவ ரிலையென் றெண்ணி வாடிய மனத்த னானான். (25)

மறந்திகழ் வேலீ ரிங்கு வந்தவ ரன்றிக் காவி
லுறைந்தவ ருளரோ வென்ன வுறுவினைத் துடரை நீக்கித்
துறந்தவ னுரைப்பப் பாவம் பகையொரு தொகையாய்க் கூடிப்
பிறந்தபூ ஜகுலென் றோதும் பெரியனன் பெயர்ந்துஞ் சொல்வான். ()

வடுக்கதிர் வேற்க ணங்கை மனைப்பொருட் பண்ட மற்று
மடுக்கிய துணர்ப்பைங் காவி லகுமதென் றொருவ னல்லா
லெடுக்கருந் தவத்தின் மேலோ ரியாவரு மடைந்தோ மென்ன
நடுக்கமொன் றின்றிச் சொன்னா னஞ்சுறும் வெஞ்சொ லானே. (27)

தீயினுங் கொடிய மாற்றஞ் செவிமடற் றுளையி லோடிப்
போயது சிந்தை யூடு புகைந்திடப் புழுங்கிப் பொங்கி
வாயினீர் வறந்து கண்ணில் வளர்தழற் கொழுந்து காட்டிக்
காய்சின வேறு போன்றான் கவலுநூற் புலமை யோனே. (28)

சினத்தினை யடக்கித் தேறாச் சிந்தையைத் தேற்றி நந்த
வனத்தினி லிருந்த செவ்வி முகம்மதைக் கொணர்க வென்ன
நினைத்தவ னுரைப்பக் கேட்டங் காரிது நெடிதிற் புக்குக்
கனைத்துவண் டிருந்த தண்டார் ஹபீபுதம் மிடத்திற் சார்ந்தான். (29)

மங்குலங் கவிகை யீர்நம் வரவினைக் காணான் சீற்றச்
செங்கதிர் தெறிக்கக் கண்கள் செவந்தனன் செவந்த தேகம்
பொங்குமா தவத்தோன் கோபப் புரையற வேண்டு மல்லா
லெங்களைக் காக்க வேண்டும் படியெழுந் தருள்க வென்றான். (30)

சிலைவய வரியா ரீது செப்பிய மாற்றங் கேட்டு
மலையெனும் புயங்க ளோங்க மகிழ்ந்துபுன் முறுவல் கொண்டு
கலைவல னிசுறா வென்னுங் காவலன் களிப்பச் சேந்த
விலைமதி கதிர்வே லேந்தி முகம்மது மெழுந்தா னன்றே. (31)

சலதரந் திரண்டு நீங்காத் தனிக்குடை நிழற்றச் சோதிக்
கலைமதி பொருவா மெய்யிற் கதிர்புடை விலகி மின்ன
நிலமிசை வழிக்குக் காத மான்மத நிறைந்து வீச
மலரடி படிதீண் டாது மாதவன் மனையிற் புக்கார். (32)

தொட்டபாழ்ங் கிணறுண் டாங்கு துவலைநீ ரசும்புந் தோன்றா
திட்டமுள் ளிலையீந் தங்க ணிருந்திறந் தனேக காலக்
கட்டையொன் றுளது தன்பால் ஹபீபுமெய் கவின்க ணிந்து
விட்டொளி பரப்பத் தோன்றி விரைவின்வீற் றிருந்தா னன்றே. (33)

குறைபடுங் கூவல் கீழ்பாற் குமிளிவிட் டெழுந்து மேல்பா
னிறைபடப் பொங்கி யோங்கி நிலம்வலஞ் சுழித்திட் டேறி
யிறையவன் றூதர் செவ்வி யிணைமலர்ப் பதத்திற் றாழ்ந்து
துறைதொறும் பெருகும் வெள்ள நதியெனத் தோற்றிற் றன்றே. (34)

இருந்தது தொல்லை நாளி லிறந்தபே ரீந்தின் குத்தி
கரிந்திடம் பசந்து செவ்வே கதித்தெழக் குருத்து விட்டுச்
சொரிந்தநெட் டிலைவிட் டோங்கித் தொடர்துணர் தோறும் பாளை
விரிந்துபூச் சிந்திக் காய்த்து மென்கனி சிதறிற் றன்றே. (35)

கோதறப் புனலுண் டாகிக் குற்றியுந் தளிர்ப்பக் கண்ட
மாதவன் மனமுங் கண்ணு மகிழ்வொடு களிப்புப் பொங்கிச்
சீதக் கவிகை வள்ளன் முகம்மதின் சேநத செவ்வி
பாததா மரையிற் றாழ்ந்து பைந்துணர் மௌலி சேர்த்தான். (36)

மறைதெரி யறிவ னீதி முகம்மதி னடியைப் போற்றி
யிறையவன் றூத ரேயிவ் விருநிலத் தரசர் கோவே
குறைபடா திருந்த வெற்றிக் கொழுமணிக் குன்ற மேயா
னறைவகேட் டருள்க வென்ன வடுத்துவிண் ணப்பஞ்செய்தான். (37)

இந்நிலத் திருந்தேன் பன்னா ளிறையவன் றூத ரான
மன்னவ ரீசா வெங்ஙன் வந்தன ரவரைப் போற்றிப்
பொன்னடி விளக்கி யின்னம் புவியிடை நபிமாருண்டோ
வென்னவு மென்னை நோக்கி யெடுத்தினி துரைக்க லுற்றார். (38)

அருந்தவத் தவனே யாதி யருளொளி யவனி னீங்கா
திருந்துள தாத மெய்யி னிடத்தவ தரித்துத் தொல்லை
வருந்தலை முறைக ளெல்லாம் வந்தினி மேலும் பின்னாட்
பெருந்தலம் புரக்க வல்லே நபியெனப் புறக்கு மன்றே. (39)

மக்கமா நகரில் வாழும் அப்துல்லா மதலை யாகித்
திக்கெலாம் விளக்குஞ் செங்கோல் தீனிலை நிறுத்தி வேறு
பக்கமுன் மதங்களென்றும் பகையறத் தரிய காட்சி
மிக்கவ ராகுமற்ற நபிகளின் மேன்மை யாமால். (40)

புவியினின் முகம்ம தென்னப் பொருந்திய பெயருண்டாகு
மவரலா னபியின் னிலவே யவரும்மத தாரோர்க் கெல்லாம்
பவமறுங் கதியுண்டாகும் படைப்புணும் வானோ ரெல்லாஞ்
சுவைபெறுங் கவிமாச்சொல்வ ரென்னவே சொல்லி னாரால். (41)

ஆரணக் குரிசி லீசா வுரைத்தபி னவரைப் போற்றி
பூரண மதியம் போலும் புகழ்முகம் மதுவென் றோதும்
பேரறி வாள ரெந்நாட் பிறப்பரென் றிசைப்பக் கேட்டுச்
சீர்பெற வறுநூ றாண்டு செல்லுமென் றிசைத்தா ரன்றே. (42)

அம்மொழி கேட்டுக் காண்ப தரிதென வெளியேன் சிந்தைச்
செம்மலர் கருகத் துன்பத் தீயினிற் குளித்தோன் றன்னை
வம்மெனத் திருத்திச் செவ்வி முகம்மதைக் காணுமட்டு
மிம்மரச் சோலை வாயி னிருமிறை யருளான் மாதோ. (43)

பலன்பெறு முகம்ம திங்ஙன் ஷாமெனும் பதியை நாடி
நலம்பெற வருவர் நீரு நன்குறக் காண்பி ரென்னத்
தலம்புக ழீசா கூறத் தாழ்ச்சிசெய் தடியே னிந்த
நிலத்தனிற் காண்பே னென்ன நிகழ்த்தின னிகழ்த்தும் போதில். ()

இந்நெறிவந்து முன்னு ளிறந்தவிந் தடியிற் றோன்றப்
பன்மலர் சொரிந்து காய்த்தும் பழமுதிர்த் திடும்பா ழூற்று
முன்னிடப் பெருகி யோடு முறைமைகண் டறிந்து நீரந்
கன்னெறிக் குரிசிற் கென்றன் சலாத்தையு நவிலு மென்றார். (45)

இன்னண மியம்பி யாதி யிடத்திரந் தரிதா யென்றன்
றன்னுயிர் நிற்கச் செய்து சார்ந்தன ரவணி லீசா
மன்னவ கேட்டேன் கண்டேன் மணத்தெனை யெடுத் தடக்கிப்
பின்னெழுந் தருள்க வென்ன வுரைத்தனன் பிறங்கு தாரான். (46)

வேறு.

மாலை தாழ்புய முகம்மது கேட்டுள மகிழ்ந்த
காலை யவ்வயி னுறைந்தவேற் காளையர்க் கெல்லாம்
வேலை வாருதி யமுதென விருந்தெடுத் தளித்தான்
சோலை முக்கனி தேனொடும் பாகையுஞ் சொரிநதே. (47)

ஆகங் கூர்தர விருந்தளித் தவரவர் கரத்திற்
பாகு பாளிதம் வெள்ளிலைச் சுருளொடும் பகிர்ந்து
தேக மெங்கணுஞ் சநதனக் குழம்பினாற் றீற்றி
யோகை கூர்தர நன்மொழி யெடுத்தெடுத் துரைத்தான். (48)

தெரியு மெய்மறைக் குரியவ விச்செக தலத்தில்
வரிசை நநநபி முகம்மதை யொருநொடிப் பொழுதும்
பிரியல் வாய்மொழி மறுத்திட லிப்பெரும் பேறுக்
குரியர் நீரல ரெவரென அபூபக்கர்க் குரைத்தான். (49)

சுரிக ருங்குழல் வெண்ணகைப் பசியமென் றோகை
வரிவி ழிக்கதி ஜாமனை மைசரு தன்னை
யருகி ருத்தின மொழிபல வெடுத்தெடுத் தறைந்தான்
விரியு நூற்கடற் செவிமடுத் துண்டமெய்த் தவத்தோன். (50)

வரிசை வள்ளற னிணையடிச் செழுமல ரதனைச்
சிரசு றப்பணிந் திருவிழி மணிகளாற் றேய்த்து
மருமலர்க்குழன் மனையவர்க் குறுமொழி வகுத்துத்
தலையி னிற்புகழ் பெறும்படி யணைமிசை சாய்ந்தான். (51)

துணைவ ரும்முயிர்த் துணைவியும் புதல்வருஞ் சூழப்
பணர்வி ரிந்தன கேளிநம் பாங்கினி லிருப்ப
மணமெ ழும்புய வள்ளலை யடிக்கடி வாழ்த்தி
யணையின் மீதினிற் சாய்தலும் விண்ணுல கடைந்தான். (52)

பொருந்து மெய்மொழி மாதவ னிறந்தவப் போதிற்
அருத்த ழிந்திரு கண்கண்முத் துகுத்திடக் கலங்கி
வருத்த முற்றவர் சிலரணி வயிறலைத் தலறிச்
சிரத்தி னிறகதுப் பறப்பறித் தெறிந்தனர் சிலரே. (53)

சிந்தை தேங்கிட வழுதவர் தங்களைத் தேற்றி
மைந்த ரியாவரும் திரண்டெழு மணத்துட னெடுத்துக்
கந்த மென்மலர் கமழ்ந்திட வடக்கினர் ஹறபீபு
மந்த மில்லவன் றனைப்புகழ்ந் தேத்தின ரன்றே. (54)

முதிய கேள்வியன் சடங்குள தெவ்வையு முடிப்பக்
கதிர வன்கதி ரொடுக்கிமேற் கடலினிற் சார்ந்தான்
மதிவிண் ணெய்திட வசிகரு முகம்மது மகிழ்வா
யுதிரு மென்மலர்ச் சோலைபுக் குறங்கின ரன்றே. (55)

இசுறுகாண் படல-முற்றிற்று.

ஆகப்படலம்-16-க்குத்-திருவிருத்தம்-840



## கள்வரைநதிமறித்த படலம்.

பருதி வாலவன் செங்கதிர் பரந்திடத் துயின்றே
ரொருது வாம்பரி யொட்டகம் பரந்திட வெழுந்து
முருகு லாவிய பொழில்கடந் தருநெறி முன்னித்
திருகு வெஞ்சினக் களிறெனை நடந்தனர் செறிந்தே. (1)

சிறுபொ ருப் படர்ந் தடவிக ளுறைநெறி சேர்ந்து
வறுப ரர்படர் பாலைக ணீந்திமுள் வகிர்ந்திட்
டறல்கொ ழித்திடுங் கானையா றுகள்கடந் தகன்று
குறைவில் சந்தகில் செறிநெடு வரைகுறு கினரே. (2)

பள்ள மும்பசுஞ் சோலையும் வெண்மணற் பரப்பு
முள்ள தோரிட மவ்வையி னுறைந்தன ருரவோர்
வள்ள றம்மிடத் தொருவன்வந் திவ்வரை வனத்திற்
கள்ள ருண்டெனு மசுகையுங் கண்டன னென்றான். ( )

இருந்த வவ்வையிற் கள்ளருண் டெனுமொழி யிசைப்பத்
தெரிந்து கண்டன மென்றனர் சிலர்சிலர் திகைத்தார்
விரிந்த செங்கதி ரோனுமேற் றிசையினிற் புகுந்தான்
வருந்த லென்றவர்க் குரைத்தனர் புகழ்முகம் மதுவே. (4)

சோர ருண்டென மனந்துணுக் குறல்சுடர் வரையி
னோர தாயொரு நதியுள நிலஞ்சுழித் தெழுந்து
கோர மாய்வருங் கள்ளருங் குறுகிடா ரெனவே
காரெ ழுங்குடை முகம்மது கனவுகண் டனரே. (5)

கனவின் செய்தியை யவரவர்க் குரைத்திடுங் காலைத்
தினக ரன்குணக் கெழுந்தன னதிசுழி கிளறி
வனம டங்கலும் வகிர்ந்தெடுத் திருகரை வழிநதிட்
டினம ணிக்கருங் கடல்வயி றிடைமடுத் ததுவே. (6)

இருந்த பேரணை வருமெழுந் திருநதிக் கரையிற்
பொருந்தி நன்னெறி யீதென் நடக்குமப் போதில்
வருந்திக் கள்வரு மறுகரை யிடத்தினின் மறுகித்
திருந்த நோக்கினுங் காண்கிலா தெழுந்தன திரைகள். (7)

ஆறு வந்தது புதுமைகொ லெனவதி ஜயித்து
மாறு கொண்டவர் திரண்டொரு பெருவரை முகட்டி
லேறி நின்றுதே சிகர்தமை நோக்கலு மெழுந்து
மீறி வெண்டிரை புரட்டிமீக் கொண்டது வெள்ளம். (8)

கள்ளர் வந்தவ ணிருந்தன ரெனக்கொடி கலங்கி
யுள்ள நொந்தனம் முகம்மதிங் குறுபொருட் டதனால்
வெள்ளம் வந்தது மறித்தது காணென வியந்து
வள்ள லைப்புகழ்ந் தார்வழி நடந்தனர் வசிகர். (9)

தஞ்ச மீங்கிவ ரெனப்புகழ்ந் தவர்தமை நோக்கி
யஞ்ச லாதுநின் றபூஜகல் மனத்தினி லழன்று
விஞ்சை யான்முகம் மதுபடித் திவணிடை விளைத்த
வஞ்ச னைத்தொழி லலதுவே றிலையென மறுத்தான். (10)

படிறு ளக்கசட் டபூஜகல் பகர்ந்திடு மொழிகேட்
டடல பூபக்கர் மனத்தடக் கினுமடம் காதாற்
கொடிய தீவினைக் குரியவர் சொல்வினைக் குறித்தோர்
கெடுவ ரென்பதற் கையமி லெனக்கிளத் தினரே. (11)

கரிந்த புன்மனச் சிறியவர் கழறிய கொடுஞ்சொற்
றெரிந்த மேலவர் செவிக்கிடா ரென்னுமத் திறம்போல்
விரிந்த கார்க்குடை நிழலிடை வரைப்புயம் விளங்க
வருந்த வப்பொருண் முகம்மது நடந்தன ரன்றே. (12)

சிந்து நன்மணிக் கதிரெழத் திரைக்கரத் தெறிந்து
வந்த மாநதிக் கணியெனு மொருகரை மருங்கிற்
கந்த மென்மலர் செறிதரும் காவகங் கடந்து
புந்தி கூர்தர மக்கிக ளனைவரும் போனார். (13)

சீத வொண்புனற் செழுமல ரோடையிற் செறிந்த
கோதில் வெண்சிறைப் பெடையொடுங் குருகின மிரியப்
பாதை போந்தனர் ஷாமெனுந் திருப்பெயர்ப் பதிக்கோர்
காத மாமென விறங்கினர் கடிமலர்க் காவில். (14)

ஒட்ட கத்திர ளனைத்தையு மொழுங்குற நிரைத்துக்
கட்டி வாம்பரித் திரளையுஞ் சேர்த்தனர் கடிதின்
விட்ட பாசறை யிடங்களி னிவையியப் பெனவே
செட்டர் சூழ்தர விருந்தனர் செழுமலர்க் காவில். (15)

சோலை வாயொரு வாகன மெனச்சுடர் திகழக்
கோல வார்கழற் குறைஷிகள் குழுக்கண நாப்பண்
வேலை வெண்டிரை முகட்டெழு மதியினும் வியப்ப
மாலை தாழ்புய முகம்மது வந்துவீற் றிருந்தார். (16)

கள்வரைநதிமறித்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 17-க்குத் திருவிருத்தம் 856.



# ஷாமுநகர்புக்க படலம்.



காவ கத்தின் றிருந்திருள் கடிந்துவெங் கதிரோன்
மேவு வெண்டிரைக் கடன்முகட் டெழுதலு மேலோர்
தாவு வெம்பரி யொட்டகத் திரளொடுஞ் சாய்த்தே
யேகி லங்கையி லேந்திய வேந்தலோ டெழுந்தார். (1)

கடிகொண் மென்மலர்த் துடவையுங் கருஞ்சுறும் புதைப்ப
வடியுந் தேன்மலர் வாவியும் வளர்கழைக் குலம்போ
னெடிய பச்சிலைக் கரும்புடைக் கழனியு நிறைந்த
கொடியி லைச்சிறு கேணியுங் குறுகிட நடந்தார். (2)

கூய்த் திரண்டளி யினங்தடைந் துழிநறுக் குளித்துத்
தோய்த்த பொற்குவ டெனவிரு வரைப்புயந் துலங்க
வாய்த்த பேரொளி முகம்மது வருவது நோக்கிக்
காய்த்தி ரட்குலை சாய்த்துநின் றிறைஞ்சின கதலி. (3)

வேந்தர் வேந்தவ னருகுற வடைதலும் விரிந்த
மாந்த ருச்சினை யிடைபழுத் தொடுங்குயல் வருதற்
றேந்த ருங்கனி யுண்டெழுந் தருளெனச் செறிந்து
சாய்ந்த மென்றளிர்க் காத்திறு லழைப்பதொத் தனவால். (4)

தேக்கும் வெண்டிரைப் புவிக்கொரு தனிச்செங்கோல் செலுத்திக்
காக்கு நாயக முகம்மது வரும்வழி கவினை
வாக்கும் பொற்குட நணிநிரை நிரையணி யணியாய்த்
தூக்கி வைத்தபோன் முட்புற நறைக்கனி தூங்கும். (5)

வெள்ளி வெண்மலர் சொரிந்தன பாளைவாய் விரித்துத்
தெள்ளு செம்பொனாற் சமைத்தபோற் செழுங்குலை தாங்கி
வள்ள லார்வரு னெறியலங் கரிப்பென வயங்கும்
புள்ளி வண்டொடு பசுமடல் விரிதலைப் பூகம். (6)

விரிந்த மென்மலர்க் கொம்பினி லளியினம் வீழச்
சரிந்து மென்றுக ளுதிர்வது வானவர் தலத்தி
லிருந்த பொன்னெடுத் தருநபி யிணைமல ரடியிற்
சொரிந்து விட்டது போல்வயின் வயின்றொறுந தோன்றும். (7)

தெறித்த முத்தொளிர் கழனிவா ளைமெனச் சிறப்பத்
தறித்த பூங்கரும் பாட்டுசா றடுபுகை தயங்கிக்
குறித்த சோலைமேற் றவழ்வது குரைகட லேழும்
பறித்த ருந்திய கருமுகிற் படலமொத் துளதால். (8)

பாட லத்தரு நிழன்மா கதக்கதிர் படா
வாடி னிற்பன முகம்மதைக் கண்டகங் களித்து
வீடின் மென்சிறை பட்டகண் ணனைத்தையும் விழித்துக்
கூடி நோக்குவ தொத்தன களிமயிற் கூட்டம். (9)

கோட்டு மென்மலர் வாசமுங் கொடிமலர் விரையுஞ்
சூட்டு நீர்மலர் நிலமலர் வாசமுந் தூர்த்துப்
பூட்டும் விற்கா முகம்மது மெய்யினிற் பொங்கிக்
காட்டு மான்மதங் காவகங் காவதங் கமழும். (10)

ஒரும னைப்பிறந் தொருமனை யிடத்தினி லுறைந்து
கருவ ரத்தரித் தீன்றுதன் கணவனை யிகழாப்
பெருவ ரம்புறும் பெண்கொடி யெனத்தலை சாய்த்துத்
திருவுஞ் செல்வமுந் திகழ்தரக் காண்பன செந்நெல். (11)

துன்னு மெல்லிதழ் வனசமும் பானலுஞ் சுரும்புண்
டின்னி சைப்பட வூட்டுதேங் குவளையு மிடையிற்
செந்நெ ருப்புநா விரித்தசே தாம்பலுஞ் செறிந்து
வன்ன மென்படம் போர்த்தபோன் றிருந்தன வாவி. (12)

துய்ய சைவலச் சுரிகுழ றயல்வாச் சுனைமென்
றைய லுள்ளகங் குளித்துடற் களிப்பொடுந் தனது
கையின் வெண்மலர்ப் பந்தெடுத் தெறிவது கடுப்பச்
செய்ய தாமரை மீதனஞ் சிறந்தெழுந் ததுவே. (13)

பண்ணை வாய்ச்செழுங் கமலங்கள் செவ்விதழ் பரப்பி
யுண்ணி றைந்தமா மணியொடு மொளிர்வன வவைகள்
வண்ண வார்கழன் முகம்மது வருநெறிக் கெதிரா
யெண்ணி றந்தகை விளக்கெடுத் தேந்தின ரியையும். (14)

வண்டி னத்தொளி மறுத்தில மலர்சொரி வனங்கண்
முண்டகத்தட மலர்ந்தில புள்ளொலி முழக்கந்
தொண்டை வாய்ச்சியர் குரவையே கழனிக டோறும்
பண்டி யின்றொகைக் கம்பலை மறுத்தில பாதை. (15)

வடந்த யங்கிவிம் மிதத்தெழுங் குவிமுலை மடவார்
குடைந்து நீர்விளை யாடிய வாவியுங் குறுகிப்
படந்த மல்லிகை மாதுளைப் பந்தரு நோக்கிக்
கடந்தி லங்கிய ஷாமெனுந் திருநகர் கண்டார். (16)

முதிர்ந்த பேரொளி முகப்மது வருநெறி முன்னி
யெதிர்ந் திறைஞ்சுதற் கிந்நக ருறைந்திடு மாசீர்
பொதிந்த பூவொடு பேருமி னெனக்களி பொங்கி
யதிர்ந்தி டக்கா மசைத்தல்போ லசைந்தன கொடிகள். (17)

மதுக்கொண் மாலிகை நாற்றிநன் மணிபல குயிற்றிச்
செதுக்கி மின்னுமிழ் தமனியத் தசும்புகள் செறித்து
விதுக்கொண் மேனிலை மென்றுகண் மாசறத் துடைத்துப்
புதுக்கு வான்றொழில் புரிந்தபோ லசைந்தபொற் கொடிகள். (18)

செவ்ந்த பாதபங் கயநபி திருநகர்ப் புரத்துக்
கவிந்த கார்குடை நிழலிட வருவது கண்டு
நிவந்த வெண்சுதைப் பளிக்குமே னிலைவயி னின்று
குவிந்த கைவிரித் தழைத்தபோ லசைந்தன கொடிகள். (19)

வேறு.

இச்செக மதிற்றபதி யற்றொழி லியற்றி
விச்சையி னமைத்ததுகொ லோவமரர் விண்ணி
லச்சொடு பிறந்திவ ணடைந்ததுகொ றுனே
வச்சிர மணிக்கதிர் பரப்புமணி மாடம். (20)

சுந்தர நபிக்குரிசின் மெய்ப்புகழ் துலங்கி
யந்தரமு மண்டபகி ரண்டமு நிறைந்து
மந்தரமி தென்றுற வளைந்தற வழிந்து
சிந்துவ தெனச்சுதை தெளித்தமணி மாடம். (21)

எங்கணபி யிங்ஙன மெதிர்ந்தனர்கொ லென்னத்
திங்கடவழ் சாளர விழிக்கடை திறந்து
பொங்கழகு நோக்குவன போலுற நிவந்த
பைங்கதிர் விரித்தொளி பரப்புமணி மாடம். (22)

கந்தநறும் வெண்சுதை காந்தணி யிலங்கி
வந்துநக ரந்தனை வளைந்தமதி லாடை
யிந்தநில மெங்குமெதி ரின்றென வியந்தே
யந்தர மடங்கலு மளந்தது வளர்ந்தே. (23)

சீதவக ழாடையை யுடுத்தணி சிறந்து
மோதியிட றுங்கரு முகிற்குழன் முடித்தே
யாதிமணி வாயின்முக மாகவழி யாத
மாதர்தமை யொத்தது வளந்தமதி ளம்மா. (24)

பந்திபெற நின்றபட லந்தணி யெழுந்தே
யந்தர நடந்துதிர ளாரமணி வாரிச்
சிந்துதிரை வாரியற வுண்டது திரளூடு
வந்துநனி மஞ்சடை கிடக்குமதி ளன்றே. (25)

கந்துகமொ டுந்துமிர தங்களு மிடைந்து
தந்தியின மும்பிடிக ளுந்தலை மயங்கிச்
சுந்தரம டந்தையரு மைந்தரொடு துன்றி
வந்தவரெ திர்ந்தவர் நெருங்குமணி வாயில். (26)

ஈறுதெரி யாதென வுயர்ந்தெழி றவழ்ந்து
மாறுபகர் கின்றரிய மாமதிண் மதிக்கோர்
வீறுபெற நின்றபரி வேடமென லாகி
யூறுபுனல் கொண்டுகட லொத்தவக ழம்மா. (27)

தும்பிகள் குடைந்துபுன றுய்ப்பமக ரங்க
ளும்பரி னெழுந்துமுத லைக்குல மொதுங்க
வெம்பியுக ளுநதொறு மிடைக்கயல் வெருண்ட
கம்பலை யருதலை கலிக்குமக ழன்றே. (28)

இந்துதவழ் கின்றமதி ளும்மக ழிருந்த
கொந்தல ருரைந்துவரி வண்டுகள் குடைந்து
சிந்தமு தருந்துகய லங்கரை தியங்க
வந்துநனி கண்டக மகிழ்நதனாக ளன்றே. (29)

கண்டுநக ரந்தனை மனத்திடை களித்து
வண்டுதுதை கின்றபுய மைந்தர்களி யாருங்
கொண்டல்கவி யுந்திற லுடைக்குக்குரிசி ருனு
மெண்டல மதிக்குமதி ளின்புற மிறுத்தார். (30)

பந்தியி னிரைத்தனர் பரித்திர ளனைத்து
முந்துமிட பத்திரளொ டொட்டக நிரைத்தா
ரிந்துகதிர் கொண்டென விலங்கறை யிடத்தில்
வந்தபல பண்டமு மணித்தொகையும் வைத்தார். (31)

வித்தக ரனைத்தும்விடு தித்தலைகள் புக்கார்
மைத்தவழ் முகிற்குடை மறைக்குரிசி லோடு
மத்தல மிலங்க அபூ பக்கரு மிருந்தா
ருத்தம குணத்தினொடு மக்கிகளு றைந்தார். (32)

புவிவளாகன்கனி பொழிந்த தரு வூடோர்
சுவையுமற நஞ்சுகள் சொரிந்தசெடி யென்னப்
பவமிடறு வஞ்சனை படுங்கொலை படைத்த
அபுஜகு லெனுங்கொடிய பாவியு மடைந்தான். (33)

எவ்வுழி யிருந்திவ ணடைந்தவர்க ணீவிர்
செவ்விய திறற்குரிசி லியார்தொழிலி யாதென்
றவ்வுலகி லந்நக ரடைந்தவர்கள் வந்தே
யொவ்வொரு வரைத்தனி யுசாவினர்க ளன்றே. (34)

மக்கநக ரத்தபுதல் முந்தலிபு மன்ன
ருக்குரிய பேருயிர் போன் முகம்ம தென்போர்
தக்கபுக ழுக்குமதி மிக்கவர் சரக்கோ
டொக்கலொடு வந்தன மெனத்தனி யுரைத்தார். (35)

ஷாமுநக ரத்துநசு றாணிக டமக்குண்
மாமறையின் மிக்கனவன வந்துமைச றாவைத்
தேமலர் புயத்திலணி செம்மலொ டிருப்பக்
காமருவு சார்பினிடை கண்டனன மகிழ்ந்தான். (36)

அன்னிய ரொருதுமைச றாதனை யடுத்து
வன்னமலர் மாலைதிகழ் மார்புற வணைத்து
முன்னைநெடு நாளுறவ தானமுதி யோனு
மென்னக மடைந்தினி தெழுந்தருளு மென்றான். (37)

கோதைகதி ஜாவுரை மனத்திடை குறித்து
மாதிர மெதிராந்துபொரு வாதபுய வள்ளல்
பாதகம லத்துறு பணித்தொழி லிகழ்ந்தோர்
போதினு மகன்றதிலை யெனவுரை புகன்றான். (38)

கோலமொடு கூறுமொழி கொண்டுடல் களித்துச்
சீலநபி பாதமிசை செங்கணிணை வைத்துப்
பாலரிசி காய்கறி பழத்தொடு சுமந்தே
சாலவு மளித்தவனு மேதாக னானான். (39)

வந்தவர் கொணர்ந்தபணி யாமணி சாக்கோ
டிந்துகலை யென்றகலை யாவையு மெடுத்துச்
சிந்தைகளி கொண்டவர் செழுங்கர மறைந்தே
யத்தநக ரத்துவணி கர்க்கினி தளித்தார் (40)

வேறு.

மிக்கசெம் மணிபணி விற்று மாற்றிய
மக்கிகண் மறுசாக் கெவையும் வாங்கித்தம்
மொக்கலொ டின்புற வுவக்கும் போதினி
லக்கண மொருவன்ற னமைதி கூறுவான். (41)

உற்றதென் வயினுறை சாக்கொன் றுயினும்
வற்றில முகம்மதென் விடுதி புக்கிடி
லற்றையின் மாறியூ திபமுண் டாக்குவேன்
மற்றடப் புயத்திர்க ளென்று வாழ்த்தினன். (42)

என்றவ னுரைத்தலு மெழுந்து வள்ளலுஞ்
சென்றவ னுறைந்திடும் விடுதி சேர்ந்தபின
மின்றவள் மணிகலை விலையென் றோதிய
தொன்றிரண் டெனத்தொழி லுறுதி யானதே. 43)

தன்னிடத் துறைந்தபொற் சாக்குங் கோவையு
முன்னிய விலைக்குவிற் றொடுங்கி யந்நகா
மன்னிய பண்டமும் வாங்கி வள்ளறன்
பொன்னடி தன்முடி பொலியச் சூட்டினன். (44)

ஷாமுநகர்புக்கபடல-முற்றிற்று.

ஆகப்படலம்-18-க்குத்-திருவிருத்தம்-900

---



## கரம்பொருத்து படலம்.



மறங்கிளர் வேற்கா வள்ளன் மக்கிக
ளிறங்கிய விடுதிபுக் கிருக்குங் காலையிற்
கறங்கிய ஷாமினிற் காபி ரிற்சில
ரறங்கிளர் நபியைவந் தடுத்து நோக்கினர். (1)

மேனியிற் கதிர்விரி வியப்பு மெய்யினின்
மான்மதங் கமழ்தரும் வடிந்த கைகளுந்
தூநிறை மதியென முகமுந் தோள்களுங்
காணிலந் தோய்தராக் கார ணீகமும். (2)

பன்னருஞ் சிறப்புடை யருட்கட் பார்வையு
மன்னிய வவயவத் தழகு மாசிலா
நன்னிலை மொழிபல நவிற்றுஞ் செய்கையு
மின்னன பலவுங்கண் டேகி னாரோ. (3)

கண்டவர் காண்கிலாக் கார ணீகமொன்
றுண்டென நகரவர்க் குரைப்பக் கேட்டவர்
விண்டவர் விளங்கிட வேதம் பேசிய
கொண்டலங் கவிகையா ரெனனக் கூறினர். (4)

மறைதெரி சமயமு நமரு மாய்நதிட
வுறைகுவ னொருவனுண் டனித்தென் றோதுநூற்
றுறைவலார் நாடொறுஞ் சொற்ற சொற்படி
பிறவியானிவனெனப் பின்னும் பேசினர். (5)

தருபெரும் பதவியிச் சமயம் பாழ்பட
வருபவன் றன்னுயிர் வானி லேறிடக்
குருதிநீர் சிந்திடக் குவல யத்திடை
செருவிளைத் திடுதலே திறமென் றோதினர். (6)

அறைதிரைக் கடலென வதிர்தன் மாறியிங்
குறையுமின் வேறொரு பாய சூழ்ச்சியான்
மறைபட வரவழைத் தவன்றன் வல்லுயிர்
குறைபட ரகசியக் கொலைசெய் வோமென்றார். (7)

* சூதர்கள் கூண்டினி துரைத்த சொல்லையோர்
பாதகன் கருத்தினுட் படுத்தி மாமறை
வாதியென் றவனுயிர் மாக்க வேண்டுதற்
கேதலா லுறுமொழி யொன்று மில்லென்றான். (8)

உரைவழி யவைசெய் துபாய மாகிய
கரைமதிக் காபிரி னல்வர் கள்ளமாய்
நிரைமணிப் புரிசையின் வாயி னீங்கியே
விரைசெறி முகம்மதினை விடுதி நண்ணினர். (9)

* சூதர்கள் - ஜுதஜாதியார்கள்.

வஞ்சனை கொலைகப டனைத்து மாட்டிய
நெஞ்சினர் மக்கிக ணிறைந்த நாப்பணிற்
கஞ்சமென் மலர்ப்பதக் கார ணீகரை
யஞ்சலித் தன்புட னடுத்து நின்றனர். (10)

ஆங்கவர் தமையழைத் தருகி ருத்திநீ
ரீங்குறை கருமமே தெடுத் தியம்புமென்
றோங்கிய முகம்மது முரைப்பச் சாமிக
டீங்குறு மனத்தினை யடக்கிச் செப்புவார். (11)

மருக்கமழ் சோலைசூழ் மக்க மாநகர்ச்
சரக்குள தெனிலது வருக சேரலார்
செருக்கறுத் தவருடற் சிதைத்துத் திக்கெலாம்
பெருக்கிய கீர்த்தியீ ரென்னப் பேசினார். (12)

உறுதிகொள் சரக்குவிற் றெடுக்கி யிப்பதி
மறுசரக் கெவையையும் வாங்கி ஞெமினிச்
சிறிதுள சரக்கெனச் செப்பச் சாமிக
ளுறுதியின் விலைக்கெடுத் தருள்க வென்றனர். (13)

அனையவர் கூறக்கேட் டடுத்த மக்கிகண்
மனையினிற் புகுந்தெடுத் தியாவும் வைத்தனர்
வினையமற் றுறுவிலை விள்ளச் சம்மதித்
தினையன சரக்கெலா மிசைந்து வாங்கினார். (14)

சொல்லிய விலைப்பொருட் டொகையை நும்வயி
னெல்லையி னுதவுதற் குறுதி யாகவே
மல்லுடைப் புயத்திறன் முகம்ம தேயெம
தில்லிடை வருகவென் றிசைதிட் டாரரோ. (15)

ஷாமுநாட் டவருரை யனைத்துஞ் சம்மதித்
தாமினா திருமக னகம கிழ்ச்சியாய்
நேமிவா னவர்திரை நிறைந்து சுற்றிய
பூமிநா யகர்தோழப் புறப்பட் டாரரோ. (16)

மக்கிகள் சிலருடன் மைச றாவுந்தன்
பக்கலில் வரக்கதிர் பரப்பி மெய்யொளி
திக்கினில் விரித்திடச் செறிந்த செங்கதிர்
மிக்கபொற் புரிசையின் வாயின் மேவினார். (17)

## வேறு.

விரைநறை கமலச் செல்வி மேவுசை னபினோர் பாலன்
றரைபுக ழபுல்கா சிஞ்சிர் தருங்கொடைப் புகழேபோல
நிரைசுதை வெள்ளை தீற்றி நிலாமணி குயிற்றி வெள்ளி
வரையென நிமிர்ந்து தோற்றி மறுவிலா தொளிரும் வாயில் (18)

இரசித நிலையிற் செம்பொ னிணைமணிக் கபாடஞ் சேர்த்தி
விரிகதிர் மணிக ணீக்கி விரிந்தவா யிலினிற் புக்குக்
கரிமத மாரி சிந்திக் கனிவழி வழுக்கல் பாயுந்
துரகதக் குரத்தூண் மாய்க்குந் தோரண மறுகு சார்ந்தார். (19)

அகிர் புகை வயங்கு மாட மணிபணி யிமயம் போன்றுந்
துகிற்கொடி நுடங்கும் வெள்ளி வரையெனச் சுதைகொண் மாட
மிகச்செறி சயந்த மாட மேருவைப் போன்றும் வீதி
தொகுத்தவத் திசைக டோறு மெண்ணில தோன்றக் கண்டார். (20)

துகிர்சிறு வேர்விட் டோடிச் சுடரொடுந் திகழ்வ தேபோர்
பகிர்விரற் சிறுகாண் மேண்மை படர்சிறைப் புறவின் கூட்டந்
திகழ்தரக் கூவுமோதை தெரிவையர் கூந்தற் கூட்டும்
புகையிணைப் பொருது மாடம் புலம்புவ போன்ற தன்றே. (21)

நித்தில நிரைத்த மாட நிரைதிரை போன்ற நாவா
யொத்தன காடக் கைமா வொண்கொடி பவளம் போன்ற
கைத்தொடி மகளிர் செல்வக் கடிமுர சறைத லோதை
நித்தமு மறாத வாரி நிகர்த்தது நகர மன்றே. (22)

தாறுபாய் தந்தி மாதேர் தானையும் முரசு வேத
மீறுபண் ணினைய வெல்லா மெங்கணும் விளங்கு மோதை
மாறிலா தெழில்கொண் டோங்கும் வளமைமா நகரம் வாய்விண்
டீறிலான் றூதர் வந்தா ரெனவெடுத் தியம்பல் போலும். (23)

மாலைவாய்ப பலபூண் டாங்கி மான்மதங் கமழ்ந்து வீங்குங்
கோலமார் பொருப்புத் திண்டோட் குரிசிறன் கதிர்க டாக்கி
நீலமா மணியிற் செய்து நிரைகதி ரெறித்த வீதி
வேலைவாய்த் தாளச் சோதி விளங்குவ போன்ற தன்றே. (24)

பந்தரிட் டலர்கள் சிந்திப் பரிமள மாவ நாற்றிச்
சந்தகில் கலவைச் சேறு தடவிய மகுட வீதி
யிந்தெழின் மழுங்குஞ் சோதி யிறையவன் றூதர் மெய்யின்
கந்தமூ டுலவி யெங்கு மறுவியே கமழ்ந்த தன்றே. (25)

முத்தணி பவளத் திண்கான் முறைமுறை நிறுவித் தேர்ந்த
சித்திரமெழுதி வாய்த்த செறிமயிர்க் கற்றை தூக்கிப்
பத்திவிட் டெறிக்குங் காந்திப் பன்மணி பரப்பி யோதை
நித்தமு மறாது செல்வ நிகழ்ந்தவா வணமுங் கண்டார். (26)

அடையல ரொடுங்க மோதும் படைமுர சதிரு மோதை
யிடைபடு வறுமை யோட விடுகொடை முரசி னோதை
கடைபடு வடிவேற் கண்ணார் கடிமண முரசி னோதை
முடியுடை யரசர் வீதி யெங்கணு முழங்கக்கண்டார். (27)

வாரியின் மதங்கள்சிந்தி வாரண மிடைந்து செல்லத்
தேரினந் திரண்டு கூடிச் செழுங்கொடி நுடங்கி நிற்பப்
பாரிடைதுகள்விண் போர்க்கும் பரித்திரண் மலிந்து தோன்ற
வாரவார் முரசருத வரசர்வீ திகளுங் கண்டார். (28)

புகர்முகச் சிறுகண் வேழப் பொருப்போடு பொருப்புத் தாக்கி
யிகல்பொர முட்டுஞ் செவ்வி யிளையவர் குழாத்தி னோசை
முகிலொடு மசனி பொங்கி முழங்குவ போன்றும் விண்ணு
மகிலமு மதிரத் தோன்று மணிமறு கிடமுங் கண்டார். (29)

வன்னியின் கொழுந்து போற்செம் மணிக்கதி ரூச லேறி
மின்னனார் பாடி யாடும் வீதிவாய் மலிந்த தோற்றந்
துன்னிதழ்க் கமலப் போது துயல்வர நாப்பண் வைகு
மன்னமொத் திருப்ப நோக்கு மகமகிழ்ந் தினிது கண்டார். (30)

கந்துக மெடுத்துக் காந்தட் கரத்தினி லேந்தி யாடு
மந்தர மனைய கொங்கை மயிலனார் முகத்தின் வேர்வை
சிந்தக டுளைந்து தத்துந் திரைமுகட் டெழுந்து தோன்று
மிந்துமுத் துகுப்ப தென்ன விடந்தொறு மலியக் கண்டார். (31)

கருமணிக் கழங்கு கஞ்சக் கரத்தினி லெற்றி யாடச்
சிரிகுழன் மலர்வண் டென்னச் சுரும்பினந் தாவநோக்கி
யரிவைபுன் முறுவ லென்ற வணிநகைக் கதிரின் முத்தாய்த்
தெரிதரப் புதுமை காட்டுந் தெருத்தலைச் சிறப்புங் கண்டார். (32)

மாசறு வாயிறோறும் வயங்கிய கதலி நெற்றிப்
பாசடை துயல்வ திந்தப் பாரினிற் குபிரென் றோங்கு
மாசற வுதித்த வள்ள லருமதி னழகுமெய்யின்
வீசுவ போன்று தோன்றி விளங்குதல் பலவுங் கண்டார். (33)

முருக்கிதழ் கரிய கூந்தன் முத்தவெண் ணகையி னார்தம்
பெருக்கொடு திரண்டு நன்னீர் குடைதலிற் பிறங்கு மெய்யின்
றிருக்கிளர் கலவைச் சேறு நானமும் புழுகுஞ்சேர்ந்து
மருப்பொலி வாவியாவு மணங்கமழ்ந் திருப்பக் கண்டார். (34)

பாதமா டிடமுங் கீதப் பண்ணொலி யாங்குஞ் சீர்மை
விரதமா மறையோ ரோதும் வேதமண் டபமுஞ் செவ்விக்
காதலஞ் சேப்ப வள்வார்க் கருவியா ரிடமுஞ் செல்வர்
நிரைதரு சிரம சாலை நிறைந்தன பலவுங் கண்டார். (35)

இன்னன பலவு நோக்கி யெழில்கனிந் தொழுகிக் காந்தி
மின்னொளி மழுக்குஞ் சோதி மெய்முகம் மதுமன் பாகத்
தன்னுயிர்த் தோழ ரோடுந் தாகனு மைசறூவும்
பின்னுற வரவக் காபிர் பெருந்தலைக் கடையிற் சார்ந்தார். (36)

அருளினி லறத்திற் றேர்ந்த வறிவினி லெவரு மொவ்வாக்
குரிசினான் மறைக்கும் வாய்த்த கொண்டலங் கவிகை வள்ளல்
விரிகதிர்க் கலைக ளோடும் வெண்மதி காவி னேகி
யிருளிடம் புகுவ போல விவர்களில் லிடத்திற் புக்கார். (37)

கள்ளவிழ் மாவத் திண்டோட் காரணக் கடலே யன்ன
வள்ளலை யவர்கள் போற்றி மாளிகை வயின்கொண் டேகித்
தெள்ளிய மணியிற் செய்த செவ்வியா சனத்தி லேற்றி
வெள்ளிலை யடைகாய் சந்தம் விரைவின்வைத் திருந்தா ரன்றே. ( )

மைதவழ் குடையீ ரிந்த மனையிடை புகுதயாங்கள்
செய்தவப் பலனோ முன்னோர் திளைத்தபுண் ணியத்தின் பேறோ
வெய்திய பெற்றி யென்ன விசைந்தநன் முகமனாகப்
பொய் திகழ் நாவால் வஞ்சம் பொருந்திய மனத்தர் சொன்னார். (39)

நன்னய மொழிக ளாக நவிற்றியங் கிருந்த காலை
வன்மனக் கொடிய காபிர் மனத்துறு சூழ்ச்சி யாக
மின்னொளி காக்கு மாட மேனிலை செறித்த கற்பாற்
சென்மெனக் கடைக்கண் ணாரச் செப்பின னொருவன் சென்றான். (40)

தீங்குறு மனத்த னேகிச் செறித்தமேற் பலகை மெல்ல
வாங்கியங் கிருந்த கல்லை வரைப்புயம் பிதுங்க வுன்னித்
தாங்கலி லுருட்டி மெல்லத் தள்ளினன் றள்ள லோடு
நீங்கருங் காத்தை கவ்வி நெரிபட விறுக்கின் றன்றே. (41)

கரத்தினிற் பதிந்த கல்லைக் கழற்றினன் கழற்ற லாகா
துரத்தொடுங் காலை யூன்றி யுதைத்திழுத் தசைத்து வெள்வாய்
நிரைத்தபல் லதரங் கவ்வி நெற்றிமேற் புருவ மோட்டி
வரைத்தடப் புயங்கள் வேர்ப்ப வலித்தறச் சலித் துழன்றான். (42)

உடம்புவன் கையைக் கல்லோ டுதறுவ னுதற டாம
னிரம்பநெட் டுயிர்ப்புச் செய்வ னிலைதளர்ந் திடுவன் வாசிக்
குரம்படை துகள்போ லாவி குலைகுலைந் திடுவ னிந்தத்
தரம்பட விதியோ வென்னத் தயங்குவன் மயங்கு வானே. (43)

மாதிரங் கையைப் பற்றி வரவர நெருக்க மேன்மேல்
வேதனை பெருக வாடி வேர்த்துட லயர்ந்து சோர்ந்து
பாதகம் பலித்த வாற்றாற் பதைபதைத் துருகி யேங்கி
யேதினிச் செய்வோ மென்ன விடைந்துநெஞ் சுடைந்து நின்றான். (44)

இனையன துன்ப மெய்தி யிவனிவ ணிருப்ப வன்னோர்
மனையிடை பொருள்கொண் டங்கு வந்திலன் காணு மென்னச்
சினமுடன் சொல்வார் போலச் செப்பிமே னிலையிற் போந்தார்
புனைமணிக் கரங்கல் லோடும் புரண்டவன் கிடப்பக் கண்டார். (45)

மாட்டுவந் திருந்து நின்பால் வந்தவை யெவைகொ லென்னப்
பூட்டிய கல்லுந் தானும் புரண்டவன் றெருண்டு சொல்வான்
வீட்டினிற் புகுமின பாரம் வீழ்த்துமி னெனனு நுஞ்சொற்
கேட்டனன் கேட்ட போதே கெட்டனன் கெட்டே னென்றான். (46)

வே று.

வருந்திக் கல்லிரு கையினும் பிடிபட மயங்கி
யிருந்த வனிடத் தெய்திய போதி ஜயித்துச்
சரிந்து வீழ்ந்திட வீழ்த்தன ரீழ்த்தவா தவித்தார்
விரிந்தி டாதுமேன் மேலற விறுகிய விலங்கல். (47)

இல்லி னுட்புகுந் தவரொரு முகம்பட விருந்து
பல்லி னுலித ழதுக்கிமெய் யுரத்தொடும் பறிப்பச்
சொல்லொ ணாதுயிர் பதைத்திட வுடறுடி துடிப்பக்
கல்லி னுட்புக வற்றன வவன்மணிக் கரங்கள். (48)

கரங்கள் போயின கல்லொடு மெனநிலை கலங்கி
யிரங்கு வாரிடை வாரிது விதிகொலென் றேங்கி
மரங்கி டந்தெனக் கிடந்தவா மாட்டினின் றொருவ
னாங்கு நின்றிழிந் தியல்புறுந் தாகனை யடைந்தான். (49)

தாக னுக்குரைத் தழைத்துயர் மேனிலை சார்ந்து
விரகா செய்தொழி லனைத்தையு மொன்றற விரித்தான்
கரைக ணீருகக் கேட்டவன் மனங்கெடு கடுத்து
நரக வாதிக ளாயினி ரெனநவின் றனனே. (50)

பாரி டைபெரி யவர்களுக் கிடர்படுத் திடவென்
றோரும் வன்மனத் தவர்களுக் குறுபொரு ளுலகிற்
சாரு மக்களு மனைவியுந் தாமுந்தம் பொருளும்
வேரொ டுங்கெடு மென்பது நிசமென விரித்தான். (51)

ஓங்கு மாநில மாக்களி லொருவருக் கொருவர்
தீங்கி யற்றிட நினைத்திடுங் கொடியவத் தீய்மை
நீங்கி டாதவ ருயிரினைப் பருகநே ரலர்கை
தாங்கும் வாளென வொல்லையி லுறச்சமைந் திடுமே. (52)

ஈர மற்றபுன் மனச்சிறி யவாதிரண் டிதலிக்
கோர மாகிய பழியையெண் ணுக்கொடுங் கொலையாய்த்
தேரு நல்லறி வாளருக் கிழைத்திடுந தீங்கு
நீரி டைக்கன னெருப்புகுத் திடுவதொத் திடுமே. (53)

மக்க மாநகர் முகம்மது தமக்கல மறுவிற்
றக்க பேர்க்கிடர் நினைப்பதுந் தகுவதன் றேயான்
மிக்க வார்த்தையில் விளம்புவ தென்கொல்நும் வினையால்
கைக்கு மேற்பலன் பலித்தது காண்டினி ரென்றான். (54)

ஆதி தூதுவ ரொருவர்வந் தடைகுவ ரெனவே
வேத வல்லவ ருறுமொழி நமக்குமுன் விரித்தா
ரோத மற்றவ ரவரிவ ரலதுவே றிலையாற்
போதி ணைச்சாண் பணிநதிவை புகலுவ மென்றான். (55)

பொருத்து நன்மொழி யிதுகொலென் றேமிகப் புகழ்ந்து
கருத்த ழிந்தவக் கருத்தினி லென்கெனக் கருதித்
தரித்த போரினை வருமெழுந தனாதிற் றாக
னொருத்தன் முன்னெழுந தணிமுகம் மதினிடத் துற்றான். (56)

ஏத முற்றவன் மனக்கொடி யவர்களில் லிடத்தோர்
பாத கத்தினை விளைத்தனர் பலித்ததங் கவர்பால்
வேத னைப்படர் விள்ளுதற் கரிதுவெள் வேலோ
யீது வந்தவை யெனப்பணிந் துரைத்தவ னிருந்தான். (57)

இருந்த காலையி லனைவரும் வந்தெழி லிலங்கிச்
சொரிந்த மாமுக முகம்மதி னிணையடி தொழுது
புரிந்த தீங்கினால் வந்தவை யனைத்தையும் புகன்றார்
விரிந்த வாய்புலந் தேங்கிய மனத்தொடு மெலிவார். (58)

வெறுத்த புன்மனக் கொடியம்யாம் விளைத்திடும் வினையைப்
பொறுத்து நல்லரு ளெம்வயின புரிகெனப் போற்றி
மறுத்து நன்மொழி புகன்றனர் வளருநல் லறத்தை
யறுத்துத் தீவினைப் பயிர்விளைத் திடநினைந் தவரே. (59)

வருந்தி நன்மொழி தாகனங் குரைத்தது மருவார்
பொருந்தி நின்றவை புகன்றது மனத்தினிற் பொருத்தித்
திருந்து வெண்புகழ் முகம்மது செழுங்கரம் போக்கி
யிருந்த வன்றனைக் கொணர்கென வாய்மலர்ந் திசைத்தார். (60)

சொன்ன போதினி லோடினர் சோரிநீர் சொரியத்
தன்னி ருங்கர மிழந்தவன் றனைச்சடு தியினின்
மன்னர் மன்னவர் முன்கொணார்ந் தனர்மணிக் கரத்தைப்
பின்ன மாக்கிய சிலையையுஞ் சிறுமையிற் பெரியோர். (61)

கல்லி துட்புதைந் துறைந்திடுங் கரங்களுங் கரம்போ
யல்ல லுற்றிடைந் தழுங்கிடு மவனையு நோக்கிச்
செல்ல லம்பிய காதல முகம்மது தெளியாப்
புல்லா வஞ்சக நெஞ்சகந் தெரிதரப் புகல்வார். (62)

கரிய கல்லினிற் பதிந்திடுங் கரத்தினின கரத்தைத்
தெரிய வைத்திடென் றோதிய மொழியினைத் தேறிச்
சொரித ருங்குரு திகளொடுந் துடிப்பெனுங் கரங்க
ளரிதி னீட்டியே தொட்டிட வொட்டின வன்றே. (63)

உறையுங் கல்லினிற் கரங்களை நெகிழென வுரைப்பக்
குறைவி லாதற வாங்கின னீரினிற் குளித்து
மறையு மென்கரம் வாங்கின தெனமறுத் தழும்பு
கறையு மில்லென விலங்கின தவனிரு கரங்கள். (64)

முன்னை நாளினும் பெலனுறு முழுமலர்க் கரத்தால்
வன்ன மாமலர் முகம்மதி னிணையடி வருடி
யின்ன னீக்கினை யிருகரம் பொருத்தினை யினியென்
றன்னை யாளுதி கடனென வடிக்கடி தாழ்ந்தான். (65)

கொடிய ஜூதர்கள் வன்னசு ருனியின் குலத்தோர்
நெடிய காரண மெனமுகம் மதுதமை நெகிழா
தடியி னிற்பணிந் தாசரித் தாசனத் திருத்திக்
கடிதி னும்பொரு ளிவையெனக் கணக்குடன் கொடுத்தார். (66)

காம்பொருத்துபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-19-க்குத் திருவிருத்தம்-966.



## ஊசாவைக்கண்ட படலம்.



மிக்க செம்பொனீய்ந் தவர்க்குநன் மொழிபல விளம்பிப்
புக்கிருந் தவருட னெழுந தகனறுபொன் றிகழத்
தக்க மாமணிக் கதிர்விடு மறுகினிற் சாரநேதோ
ரக்க சாலையி னிடத்துவந் திருந்தன ரன்றே. (1)

நெருப்பு குத்திடுந் தெறித்திடுஞ் சுடுஞ்சுடு நெறியீ
ரிருப்பி டந்தவிர்ந் தெழுமெனத் தபதிய னிசைப்ப
வொருப்ப டத்துணுக் கெனப்புறத் தொதுங்கின ருழையோர்
விருப்ப முற்றிருந தெதிரகு மதுவிளக் கினரால். (2)

தோற்ற றும்மிடத் தலதுவே றிலைசுடுங் கனலை
யகற்றும் பேறறியா னுமதிடத் தடைகுவ தலது
வேற்றி டம்புகா புக்கினு மெய்யினில வெதுப்ப
வூற்ற மின்றதற் குறுகுணந் தானுமின் றெனவே. (3)

மெலிவி லாதசொற் கேட்டலுங் கம்மியன் வெகுண்டவ்
வுலையி னிற்கரும் பொன்புகுத் துமியொடு கரியும்
பொலிய வைத்தெரி மூட்டினன புகையிருட் படல
மலித ரக்கனல் கொழுந்துவிட் டெழுந்தது வளர்ந்தே. (4)

உருகி வெந்தவல் லிரும்பினை யுலைமுகத் தெடுத்துக்
கருகி மேனியன் கட்கடைக் கனற்பொறி கதுவ
வருகி ருந்தெழுந் தங்கைகள் செவப்புற வடித்தான்
பெருகு மக்கினிக் கொழுந்துக டெறித்தது பிதிர்ந்தே. (5)

சரிந்து வீழ்ந்திடச் சிதறிய செங்கதிர்த் தழல்கள்
விரிந்து நன்கதிர் குலவிய முகம்மது மெய்யி
னெரிந்த சந்தனச் சேறுபன் னீரொடுங் குழைத்துச்
சொரிந்த தாமெனக் குளிர்ந்தது சோர்வற வன்றே. (6)

இத்தி றத்தெழில் கண்டுகம் மியனெதிர் நோக்கி
யுத்த மக்குலப் பெயர்தலை முறைப்பெய ரூர்ப்பேர்
பத்தியி னுமக் கிடுபெய ரிவைபடிப் படியாய்
வித்த காதெரி தரவுரை யெனவிளம் பினனே. (7)

மக்க மூர்கிலர் பருள்குசை யப்து முறுபுக்
கக்க மானஹா ஷீமுத லப்துல்முத் தலிபு
தக்க மன்னவர் மைந்தரி லப்துல்லா தவத்தான்
மிக்க னென்பெயர் முகம்மது வெனவிளம் பினரே. (8)

அறபின் மக்கமா நகரினின் முகம்மதென் றனித்தா
யுறவு தித்துநஞ் சமயங்க ளுலைப்பனென் றாவோர்
மறையி லோதிய வான்முறைப் படியஃ துணர்கிற்
குறையி லாதவ னிவனெனக் குறித்துளங் கொதித்தான். (9)

வருந்தி லாமறை யவர்களே ஷாமின்மன் னவரே
திருந்து நல்லறி வாளரே தேவத மனைத்தும்
பொருந்து றூதற வழித்திட நகரிடை புகுந்து
இருந்த வனிவன் காணெனக் கூக்குர லிட்டான் (10)

வேறு.

கனைவாருதி நிகர்ஷாமுறை கதிர்மாமுடி வீரர்
தனுவாளயி லெறிவேல்கலை தண்டம்பல வேந்தி
முனையாமென வெதிர்வாமுறை யிடுவாமென வென்றே
சினமாயெழு புலிபோல்பவர் சிலர்வந்துவ ளைந்தார். (11)

கருதார்வரு திறலாலிடு கலைகந்தர மன்றென்
றிரைவாகிய சினத்தானய குணத்தாற்றிர ளினத்தாற்
பொருவோமெனு மனத்தாலெதி புகழார்முகம் மதுவை
மருவார்மன மலையக்கொடு மதினின்புறம் வந்தார். (12)

நறைதுன்றிய சுதைகெண்கதி ரெயிலின்புற கண்ணி
யுறையுட்விடு தியுலவகதன ரொளிமாமுகம் மதுவுந
துறையின்றெருழில் வகையுநதொகை நிதியும்முறை முறையாய்
நிறைகின்றன குறையின்றென நெறியேகிட நினைவார், (13)

எருதொட்டக மடல்வெம்பரி யிருபக்கமு நிறைப
மாவத்தொடை புயமுங்கிட வருமக்கிக டாமுந்
தருமத்துரை நபிஞரொடு சதுரான்மைச ருவும
புரிசைப்புற நகர்விட்டணி பொழில்புக்கு நடந்தார். (14)

குருகார்கழ னிகள்வாவிகள் குளிர்சோலை கடந்தே
யிருகாதமு மொருகாதமு வெழிலாக நடந்து
கருமாமுகி ளிழுறவிய ஹபிபாகமும் மதுவும்
வருபாதையி னடுவேயொரு வளமாமலை கண்டார். (15)

கனமாமதி யுடையோனெதிர் கலைகால முணர்ந்தோன்
மனமூடுறை யறிவான்முகம் மதுவார்வழி யறிவோன்
குனிவார்சிலை நசுறுனிகள் குருவாகிய வூசா
வெனுமாமறை முதியோனுறை யெழின்மாமலை யேகார். (16)

மேகக்குடை நிழலுங்கதிர் விரிவாகிய மெய்யும்
பாகத்திடை கமழும்பரி மளமும்மதி முகமு
நாகத்தொடு தனிபேசிய நபினார்முகம் மதுவென்
றாகத்திடை கண்டானவ னடைந்தானரு கிருந்தான். (17)

இருந்தான்முகம் மதுதண்கதி ரெழின்மாமுக நோக்கித்
திருந்தாரட லரியேதரு செழுமாமழை முகிலே
பெருந்தாரணி தனினும்பதி குலம்போரவை யனைத்தும்
வருந்தாதுரை யீரென்றனன் மறையோதிய மதியோன். (18)

அதுனன்கிளை ஹாஷிம்குல மமரும்பதி மக்கம்
பிதிராநிலை யபுத்தாலிபு பின்னோபு துல்லா
சுதனுமுகம் மதுநாமெனச் சொன்னார் மறைவல்லோ
னிதமாகிய நபியாமென விசைந்தான்மன மகிழ்ந்தான். (19)

வடிவாரிடை யகலாதுறை மைசறுதனை நோக்கிக்
கொடியார்கழ லடலோய்நுமர் குலமேதென நவிலக்
கடுவார்விழி கொடியாரிடை கதீஜாவெனு மயிலா
ரடியாரினி லெளியேன்மிக வுரியேனென வறைந்தான். (20)

மடமாமயில் கதிஜாவென வளர்கோதையை யுதவு
மடலாரரி குவைலீதெனு மறிவோன்மறை மொழியைக்
கடவாதகன் மதியோனுயா கனபோரு ளாளெனன்
னுடலாருயி ரெனவே வுறவானவ னென்றான், (21)

முன்னூறு வெனவோதிய முதியோன்முக நோக்கி
யென்னாருயி ரனையீருமதிடுபேர்சொ லுமெனவே
மன்னுகிய மைசறாசொல் மறையோனு மகிழ்ந்தே
யொன்னாரரி யேயென்பெய ரூசாவென வுரைத்தான். (22)

வேறு.

உரையினி லுறவு குவைலிதென் றாசா வுரைத்தவை யுளத்தினிற் குறித்துக், கரைவழிந் தொழுகு மகிழ்ச்சியாய் மைசறா கருங்குழற் செவ்விதழ்க் கனிவாய்த், திருமொழி யுரைத்த திவனெனக் கருதிச் செவ்வியோன் முகமரை நோக்கிப், புரையற றமக்குச் சொல்வதொன் றுளது கேண்மினென் றன்பொடு புகல்வான். (23)

குறைஷியங் குலத்துக் கொருமணி யெனவுங் குவைலிய துக்கிரு விழி யெனவு, மறைதிரைக் கடலி லமுதெனப் பிறந்த வரிவையர்க் கணியெனுங் கதீஜா, நிறைமதி மடியிற் றவழவுந் துகிலிற் பொதியவு நெறிபடுங் கனவி, னுறைபடும் பொருளை யுணர்கெனச் சலாமு மோதின ருமக்கென வுரைத்தான். (24)

அம்புய வதனன் குவைலிது வருந்து மருந்தவந் திரண்டொரு வடிவாய்க், கொம்பென வொசிந்த நுண்ணிடைக் கதீஜா குறித்திடுக் கனவினைத் தேர்ந்து, கம்பிதஞ் செய்து கருத்தினுண் மகிழ்ந்து காரண புதுமைக ளனைத்து, மின்பரின் விளங்க மைசறா மகிழ வினிதுற வெடுத் திசைத் திடுவான். (25)

அகிலமுந் திசையுஞ் சுவனமும் விளங்க வணிதிகழ் மக்கமா நகரின், முகம்மதென் றுதித்துத் தீன்பயி ரேற்றி மறைவழி தவறிடா நடத்திப், பகரு நபியாய் வேதமு முடைத்தாய் வருவரென் றறிவுளோர் பகர்ந்த, நிகரருங் குரிசி லிவரல்ல ரிந்த நீணிலத் தினியிலை யெனவும். (26)

கலைநிறை மதியாய் மடிமிசை யிருப்பக் கனவுகண் டகமகிழ் கதீஜா, நிலைமிசை யிவர்க்கே மனைவியா யிருந்திந் நீணிலம் புரப்பது தவறில், குலமிகப் பெருகுஞ் செல்வமும் வளருங் குறைவிலாப் பதவியும் பேறு, மலகிலா தடைந்த தென்னவு முரைத்தே னெனவரி வையர்க் குரை யென்றான். (27)

மறைதெரி யறிவு ளுரைத்தசொற் கேட்டு மைசறா மனமிக மகிழ்ந்து, நிறைபதி தனைவிட் டிற்றைநாள் வரைக்கு நிகழ்ந்த காரணமுள

வனைத்துங், குறைவிலா தெழுதி முத்திரை பொருத்திக் குறித்தவ ரிடத்தினிற் கொடுத்துக், கறையிலா மதிய மெனுமயில் கதீஜா கரத் தினி லளித்திடு மென்றான். (28)

விண்ணபத் திரத்தை மக்கமா நகரில் விளங்கிழைக் கனுப்பிய பின் னர், பண்ணினிற் சிறந்த மறைமுறை தேர்ந்த பண்டிதன் பதமலர் போற்றி, வண்ணவார் தடக்கை முகம்மதைப் புகழ்ந்து வாகனங் கொ ணர்ந்தனன் மைசறு, வெண்ணிறந் தனைய மக்கிக ளெவரு மெழுந்தனர் குரிசிலு மெழுந்தார். (29)

பாதையிற் புகுத மூதறி வுணர்ந்த பண்டித னெனவரு மூசா, தீதற வெழுந்து முகம்மதின் வனசச் செம்மல ரடியிணை பணிந்து, கோதறப் பழுத்த செழுங்கனி கொடுத்துக் கொண்டலங் கவிகையை நோக்கி, மாதவர் தமையு மடிக்கடி போற்றி மகிழ்ந்துதன் மனைவயிற் சார்ந்தான். (30)

ஊசாவைக்கண்ட படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 20-க்குத் திருவிருத்தம் 996.



## கதீஜாகனவுகண்ட படலம்.

முகைமுறுக் கவிழ்ந்து முருகுகொப் பிளிக்கு முளரியு முழுமணி நீல, நகைவிரித் தனைய குவளைபுந் துகிரி னறுமலர் விரிந்தென விரிந்து, திகழ்தருஞ் சேதாம் பலுங்குடி யிருந்து திருவளர் வாவியின் வாளை, யுகடொறும் வெருவி யொதுங்கிய சிறைப்புள் ளொலித்திடு மிடங் களுங் கடந்தார். (1)

புனன்முகி லசனி யதிர்தொறுங் கிடந்து புடைத்துவால் விசைத் தரி யேறு, சினமுடன் சிலம்பப் புகர்முகச் சிறுகட் சிந்துரம் பிடியொடு மிரிந்து, நனைமல ருதறுங் காவகத் தொதுங்கு நனிதிரள் குயினென மயில்க, ளினமணிச் சிறைவிட் டருநடம் புரியு மிருவரை யிடங்களுங் கடந்தார். (2)

படுகொலைப் பார்வை காருடற் கழற்காற் பறிதலைப் பங்கிவேட் டுவர்தங், கொடுமரங் குனித்துத் தூணியுந் தாங்கிக் கொழுஞ்சரம் வலக்கரந் தூண்டிப், புடை புடை பரந்த மானினம் வீழ்த்திப் பொருந்

தவுண் டிருந்தசி றாறும், விடர்படர் கானம் பாலையுங் கடந்தார் விறல்பெறு மறபினின் வேந்தர். (3)

தொண்டையங் கனிக டோன்றியிற் சிறப்பத் தோன்றிய தரியமாணிக்கம், விண்டலர் விரித்துக் காய்த்தன போலும் விளங்கிடக் குருந்தொடு காயா, வண்டுறை பிடவுங் கொன்றையுஞ் செறிய வளைதருங் குடியிடை பொதுவர், வெண்டயி ருடைக்கு மொலிமரு முல்லை வேலியுங் கடந்தயல் போனார். (4)

பரித்திர ளனைத்து மொருபுற நெருங்கப் பாதையிற் பல்லியமெனவே, யெருத்தின மணிக ளொலித்திட வொருபா லிலங்கிளவெயில்பிறந் துமிழக், காத்தினி னெடுவே லேந்திய மாக்கள் கவுண்மதக் களிறென நடந்து, விரித்தவெண் குடையுந் துவசமு மலியவிரைந்தொரு காவகம் புகுந்தார். (5)

சந்தகில் திலகங் குரவுதேக் காரந்தான் றிகோங் கேழிலம் பாலை,சிந்துர மசோகு மாதவி நெல்லி செண்பகம் பாடலந் தேமா, மந்தைரகமுகு புன்னைநா ரத்தை மகிழ்விளா மருதெகலு மிச்சை, குந்தமா சினிமா கடம்பில விதழி குங்குமஞ் செறிதிரட் சோலை. (6)

நித்திலத் திரளி னரும்பிளம புன்னை நிரைமலா சொரிவன வொருபால், கொத்தரும் பலாத்திச் சண்பகத் தொகுதி குவைதரச் சொரிவன வொருபால, பத்தியிற் செறிந்த பாடலம் விரித்த பாயலிற் சொரிவன வொருபால், புத்தரி சொழுநகு நிரைமகிழ் செறிந்த புழைமலா சொரிவன வொருபால். (7)

முள்ளிலை பொதிந்த வெண்மடல் விரிந்து முருகுமிழ் கைதைகளொருபால், கொள்ளைமென் கனிகள் சிதறுமுள வீந்து குறுங்கழுத் தசைவன வொருபால், வெள்ளிவெண் கவரி விரிந்தபோற் பாளை மிடறெசி வனகமு கொருபாற், றெள்ளுநீர்க் குரும்பைக் குலம்பல சுமந்த செறிதிரட் டாழைக ளொருபால். (8)

தூய்திரட் பளிக்குக் கனியையா மலகஞ் சொரிதரச் சிதறுவவொருபாற், காய்கதிர நீல மணியென நாவற் கருங்கனி சிதறுவ வொருபாற், சேயுயர் தேமாச் செழுந்தலை குழைத்துத் தீங்கனி யுகுவனவொருபாற், சாய்பணைக் கொழுவிஞ் சியினகனி செவந்த தனமெனச் சொரிவன வொருபால். (9)

தேங்குட மனைய முட்புறக் கனிக டிகழ்தரச் செறிந்தனவொரு பான், மாங்கனி யமுதத்திவலைக டெறிப்ப மலிதரத் சொரிவன வொருபாற், பூங்குலைக் கூன்காய் பொன்பழுத் தொளிர்வ போன்றன கதலிக ளொருபாற், றீங்கில்பொற் கலசம் விண்டுசெம் மணிகள் சிந்துமா துளைத்திர ளொருபால். (10)

உலகமுந் திசையும் புகழுசை னயினொ ருதவுசந் ததியபுல் காசீஞ், சலதர மனைய கரத்தினி லேற்றோர் தம்மனங் குளிர்வபோற் குளிர்ந்து நிலமிசை கிடையாப் பெருவளஞ் சுரந்து நீடிரை வாவிக டிகழ, வலகிலாச் செல்வங் குறைவறு திருந்த வணிதிகழ் வனதளிர்ச் சோலை. ( )

அறிவினுக் கறிவா யரசினுக் கரசா யணியினுக் கணியதாய்ச் சிறந்த, மறுவிமெய் கமழ்ந்த முகம்மதாங் கூண்ட மக்கிக ளனைவருஞ் செறிந்து, நிறைவளம் பலகண் டகங்களி கூர்ந்து நிலாமணிப் புரவி விட் டிறங்கித், துறையின்முத் திறைக்குந் திரைத்தடஞ் சூழ்ந்த சோலையி லிருந்தன ரிப்பால். (12)

வானிருந் தமர ரெண்ணிலக் கிலபேர் முகம்மதி னிடத்தில்வந் துறைந்து, தேனிமிர் மாவத் தொடையலுந் தரித்துத திகழ்மணிக் கலன்பல வணிந்து, பானுவின் கதிர்கள் பெருவுறு தியன்ற பன்மணித் தவிசின்மே லிருத்திக், கான்மலர் ஞாயொட் டகத்தின்மே லேற்றிக் கண்கொளா தழகிருந் திளங்க. (13)

பலவியங் கறங்கக் கொடித்திர ளுடங்கப் பானிறக் கவரிகள் சுழற்ற, வெல்லன கதிரிற் படைக்கலஞ் செறிய விநதுவெண்குடை தனி நிழற்றச், செல்லுறழ் கட மதகரிநெருங்கச சிவிகையின் கணந் திசை மலிய, வல்லியின கொடிபோ லமராதம் மகளிர் மருங்கிரு பாலினு மிடைய. (14)

பரித்திர டொடா வானவ ரீண்டிப் பரிமளப் பொன்னலர் தூற்றத், தெருத்தலை புகுநது பவனியி னுலவிச் செழும்புகழ் முகம்மது வரவுங், கருத்துடன் கண்ணுங் களிப்புற நோக்கிக் கவின்மலர்ப் பதம் பணிந் திறைஞ்சத், திருத்திழை மணியிற் குருத்தெனுங் கதீஜா தெரிதரக் கனவுகண் டெழுந்தார். (15)

கனவினை நனவென் றகமகிழ் தெழுந்து கதிர்மணி வாயிலை நோக்க, வினமத கரியும் பரியொடி ரதமு மிருங்கடற் சேனையும் விருது

மனமல ருறைந்த முகம்மது தமையும் வானவர்மகளிர்கடமையும் புனைமணிக் கொடியுங் கவிகையுங் காணார் பொருந்திய துயரமே கண்டார். (16)

இருடுணித் தெழுந்தமின்னென பிறழு மிழைபல திருத்தில ரிருண்ட, சுரிகுழன் முடியார் தோளணி தரியா சுண்ணமுஞ் சாந்தமும் பூசார், சரிகரத் தணியார் மேகலை யிறுக்கார் தளிர்மலர்ப் பதத்தணி தாங்கார், மருமலர் சொருகார் வடுவெனச் சிறந்த வரிவிழிக் கஞ்சன மெழுதார். (17)

கந்துகங் கழங்கம் மனைகரத் தேந்தார் கதிர்மணி யூசலிருட் டாடார், சிந்துரப் பிறைநன னுதலியர் திளைத்த சிற்றிலும் பேரிலுந் தேடார், மந்தர மதிண்மண் டபத்திடை புகுந்து மரைக்குழற் கதிர்ப்புகை மாட்டார், சுந்தரக் கமலச சீறடிக் கிசைந்த சுடாலத் தகமெடுத் தெழுதார். (18)

பஞ்சணை பொருந்தா ரிருவிழி துயிலார் பழத்தொடு பாலமு தருந்தார், கொஞ்சுமென குதலைக் கிளியொடு மொழியார் கொழு மடற் செவிக்கிசை கொள்ளார், கஞ்சமென மலர்த்தாள் பெயர்ந்திட வுலவார் கடிமலர் வாசநீ ராடார், வஞ்சிநுண் ணிடையார்தம் மிடத் துறையார் முகம்மது மனத்திடத் துறைந்தார். (19)

வேறு

மருமலர்ப் புயமுகம் மதுவொன் மாமதிற்
றிருநகர்த் தெருவரு பவனி போதரு
முருகலர் குழலிதன் கனவின் முற்படக்
கரிதிய துயரெனும் கடற்கு ளாயினார். (20)

மலைநிகர் புயமுகம் மதுநன் மாமணத்
துலவிய பவனியின் கனவொன் றுற்றிடக்
கலைமதி நிகர்கதீ ஜாதங் காதலர்
லலைதுயர்ப் பெருக்கினி லாழ்ந்திட் டாரரோ. (21)

துதிபெறுங் குவைலிது கருத்துத் துன்புறப்
பதியர்பே தப்படப் பகர்வ ரோவெனு
மதிநிகர் முகம்மதின் மனைவி யாகவென
விதிவசம் பொருத்துமோ விலக்கு மோவெனும். (22)

மடிமிசை மதிவரும் வரவு மாமறை
நெடியவன் மணமென நிகழ்த்தும் வார்த்தையுங்
கடிமணப் பவனியின் கனவு மாதுலன்
றிடமுறும் வசனமுஞ் சிதையு மோவெனும். (23)

கருத்தினுள் ளுறைமுதற் கனவை மைசறு
விரித்தெடுத் துரைத்தலும் விளங்கத் தேர்ந்துபொன்
வரைத்தடப் புயத்தனூ சாதன் வாக்கினு
லுரைத்ததென் னேவென வுளத்தி லெண்ணுமால். (24)

நிலமிசை நபிப்பெயர் நிறுத்தும் பேர்களுக்
கலைவுறப் பெரும்பகை யவதி யுண்டெனக்
கலைவல ருரைத்தசொற் கருத்தி லெண்ணமுற்
றலைதா வுடன்மெலிந் துருகிவாடுமால். (25)

உரிமையி னுடனெழுந் தொழுகு மைசறு
வரைதரு பத்திரம் வரவுங் காண்கிலே
மெரிசுரப் பாலையிற் செய்தி
தெரிதா விலையெனத் திகைத்துத் தேம்புமால், (26)

விம்முறு மேங்கிமெய் வருந்தும் மெய்துயிர்த்
தம்மவோ வெனுமுலைத் தடக்கி யாழ்கடன்
மம்மரைக் கடப் பதெங் வகைகொ லோவெனச்
செம்மலர் முகங்கரிந் திருந்து தேம்புமே. (27)

மன்னவன் குவைவிது வரத்திற் றேன்றியே
பொன்னிளங் கொடிவிழி பொருநதி லாதிருந
தின்னன துயரமுற் றெண்ணி யேங்கியே
தந்தளந் தடக்கியமெய் தளருங் காலையில். (28)

வழுவற நன்மொழி யெடுத்துமைசறு
வெழுதிய பத்திர மடைந்த தின்றெனச்
செழுமலர்க் குழலிய ருரைப் பத் தேமொழி
விழைவொடுங் காத்தினில் விரைந்து வாங்கினர். (29)

முத்திரை தனைவிடுத் தெடுத்து முரிவெண்
பத்திரந் தனைவிரித் துவந்து பார்த்ததி
னுத்தரந் தனையுணர்ந் தறிய வுள்ளமும்
புத்தியுங் களித்துடல புளகம் பூத்ததே. (30)

விரிதருங் காரணம் விளக்கி நற்புகழ்
தெரிதரா முகம்மதென் றெழுதுஞ் சித்திர
வரிதொறு மிருவிழி வைத்து முத்தமிட்
டுரியதம் முயிர்பெறு முவகை யாயினார். (31)

உரைப்பருங் காரணத் துறுதி யாவையும்
வரைப்புயன் மைசறு வரைந்த பத்திரந்
திரைப்படுங் கடலிடை தியங்கு வார்க்கொரு
கரைப்படுத் திடுமரக் கலத்தை யொத்ததே. (32)

தூயவர் காரணந் தொகுத்த பத்திரம்
பாய்திரை யமுதெனப் பிறந்த பைந்தொடி
காய்கனன் மெழுகெனக் கருத்துச் சிந்திட
மாய்வுறுந் துயர்க்கொரு மருந்து போன்றதே. (33)

விரைமல ருடுத்திகழ் மேக வார்குழற்
கரியமை விழிக்கதீ ஜாதங் கையினிற்
பிரிவுறு துறைந்தபத் திரத்தைப் பெட்புட
னரசபித் தாலிபுக் கனுப்பி னாரோ. (34)

வந்தபத் திரந்தனை வாங்கித் தம்முயிர்ச்
சந்ததி விளைத்தகா ரணத்தின் றன்மைநேர்ந்
திந்தநற் பதவிக ளியன்ற தோவெனச்
சுந்தரப் புயவரை துலங்க வீங்கினார். (35)

வியனுறு பத்திரம் விளம்புஞ் செய்திகண்
டுயரபூத் தாலிபென் றோது மன்னவர்
செயிரறு முகம்மது வெனுஞ்சஞ் சீவியா
லுயிர்பரந் திடுவதோ ருடல தாயினார். (36)

திருநிகர் காத்தபித் தாலி பாகிய
குரிசி லுங்கதீ ஜாவென் னுங் கோதையும்
வருமதிக் கின்புறு மலர்க ளொப்பென
விருவரு முவகையிற் களித்தி ருந்தனர். (37)

கதீஜாகனவுகண்ட படல-முற்றிற்று.

ஆ படலம்-21-க்குத் திருவிருத்தம்-1033.

———



# மணம்பொருத்து படலம்.

உடல்குழைத் தெழுந்து செந்தே னொழுக்கிய மலர்ப்பைங்காவில்
வடவரை யனைய திண்டோள் வள்ளலு மறுவிலாத
கடகரி யனைய வெற்றிக் காளையர் பலருஞ் சேர்ந்த
விடபமும் பரியுந் துன்ன வெழுந்தனர் விரைவி னன்றே. (1)

சோலைவாய் விடுத்து நீங்கித் துவசமுங் குடையு மல்க
நீலமா மங்கு லங்கேழ் நெடுங்குடை நிழற்ற வெற்றிக்
காலவேல் கரத்தி லேந்திக் காளையர் மருங்கு சூழ
மாலையொண் புயத்தி லோங்க முகம்மது மினிதின் வந்தார். (2)

அகிலமுஞ் சுவனநாடு மமரரும் போற்றி வாழ்த்த
மிகுபுகழ் குவைலி தீன்ற மெல்லியல் களிப்புப் பொங்க
நகிலணி துகிர்க்கொம் பென்ன நாரியர் புளகம் பூப்ப
முகம்மது வென்னும் வள்ளன் மக்கமா நகரின் வந்தார் (3)

காரணக் கடலை யொண்கேழ்க் கதிருமிழ் மலையை யாதி
யாரணக் குரிசி லென்னு மகுடதை யெதிரிற் புக்கித்
தாரணிந் திலகு தோட்பூ தாத்தபூத் தாலிப் பெற்றி
வீரமுந் திறனும் வாய்த்த மென்கரத் தணைத்து மோந்தார. (4)

அணியிழை சுமந்த செவ்வி யனையெனும் பாத்தி மாவந்
திணைவிழி பெற்றே னென்ன விருகையாற் றழுவிப் பைம்பொன்
மணமலி பீடத் தேற்றி முகம்மதை யினிது போற்றிக்
கணநிரை யயினி நீராற் கண்ணெச்சிற் கழுவி னாரால். (5)

மறமுதிர்ந் திலங்கும் வெள்வாண் முகம்மது மினிது புக்கார்
திறலபூ பக்க ரென்னுஞ் செம்மலு மனையிற் சேர்ந்தார்
தொறுவினத் தொடுமப் பாசு மாரிதுஞ் சுபைறு தாமு
மறபிக ளெவருந்தத்த மணிமனை யிடத்திற் சார்ந்தார். (6)

கட்கொலை படிறு நிந்தை களவுடன் கொடிய பாவ
முட்பட வளர்த்த மெய்யா னாறுமொழி யறுதி யில்லா
னட்பினைப் பகைத்துச் செய்த நன்றியைக் கொன்று சஞ்சார்
மட்படு கலமே யன்ன மனத்தபூ ஜகுலும் போனான். (7)

பாங்கினிற் கணைக்கர் சூழப் பரிசனக் குழுவந் தீண்ட
வாங்குவிற் றடக்கை வெற்றி மலிபுகழ் மைச றாவு
மோங்குமா நகரம்புக்கி யொளிர் மணித் தவிசி னுய
தேங்குழற் கதீஜா பைம்பொற் சீரடி வணக்கஞ் செய்தான். (8)

தெரிமலர்க் கரங்கள் கூப்பிச் சேவடி வணங்கி நின்ற
வுரிமைதன் முகத்தை நோக்கி யொண்டொடி கதீஜா வென்னு
மரிவையாங் குற்ற செய்தி யறைகென வறைய மாரி
மருமலி புயங்கள் விம்ம வாய்புதைத் திருந்து சொல்வான். (9)

கரும்பெனத் தோன்றிச் செம்பொற் கதிருமிழ்ந் திருந்த கொம்பே
சுரும்பிருந் திசைகொ டிண்டோட் டோன்றல் காரணங்க ளியாவுந்
தாய்பெற விவைகொ லென்னத் தானள வறுத்து மட்டிட்
டிரும்பெரும் புடவி தன்னு ளியாவரே யியம்ப வல்லார். (10)

சேயுய ரமரர் போற்றுஞ் செவ்விய முகம்ம தென்ன
மாயிரும் புவியுட் டோன்றி மானுட வடிவு கொண்ட
நாயகர் புதுமை யெல்லா நானெடுத் துரைக்க நானூ
றாயிர நாவுண் டாகி லதிற்சிறி துரைப்ப னென்றான். (11)

மறைப்பதம் வழுத்தி யன்னோர் வாய்மொழி மறாது நின்றோர்
திரைப்பெரும் புவியின் மேலோர் செல்வமே பெறுவர் கேளார்
நிரைப்பெரு நரக மாழக் கெடுவர்நீ ணிலத்தி லென்னு
னுரைப்பதென் சிறியேன் றீட்டு மோலையே யுரைக்கு மென்றான். (12)

மாவமுங் கியபொற் றிண்டோன் முகம்மது வரவு கண்டேன்
கரையிலாக் காட்சி கண்டேன் காசினி தோயா பாதம்
பிரிவுறாப் பதவி கண்டேன் பெண்களுக் கரசே யின்றுந்
திருவடி கண்டேன் காணாச் செல்வமொன் றில்லை யென்றான். (13)

தெண்டிரை புவனமேழுஞ் சேந்தபொன் னுலக மெட்டுங்
கொண்டுதந் நேமி யொன்றாற் கொற்றவெண் குடையு ளாக்கி
வண்டணி துளையுந் தண்டார் முகம்மதே புரப்பர் தேனுங்
கண்டுமொத் தனைய சொல்லாய் காண்பது திண்ண மென்றான். (14)

கடிகமழ் மாவத் திண்டோட் காளைதம் புதுமை யாவும்
வடிவுறத் தெளிந்து தேர்ந்த மைசறா வுரைத்த *மாற்றம்
படிபுகழ் கதீஜா மெய்யிற் பசலைபூத் தெழுந்த காமக்
கொடிபடர்ந் தேற நாட்டுங் கொழுங்கொம்பு போன்ற தன்றே. (15)

---

* மாற்றங் கொம்பு போன்றதென்று கொள்க.

மனையினுக் குயிராய் வந்த மைசறு வுரைத்த மாற்றஞ்
சினவுவேற் கருங்கட் பாவை செவிநுழைந் தகத்திற் புக்கு
நனிதுய ரூறு தொட்டு நதிப்பெருக் காக்கிப் பின்னுங்
கனைகடல் விரிவ தாக்கிக் கதித்தெழப் பெருக்கிற் றன்றே. (16)

செயிரறு கனவு மிங்கு செப்பிய மொழியு மோலைப்
பயனுமுன் னணித்துக் கண்ட பார்வையுங் கலந் *தொன்றாகி
நயனுறு கதீஜா வுள்ள நடுக்கநட் டுயிர்ப்பு மீறுந்
துயர்நெருப் பெழுக மூட்டுந் துருத்தியின் வியத்த தன்றே. (17)

வையகம் விளங்க வந்த முகம்மதின் செவ்வி காணா
வையமி லமரர் மாத ராருந்தவம் புரிவ ரென்றாற்
செய்யகண் குளிரக் கண்ட செழுமுகிற் கரிய கூந்தற்
றையற முளத்தின் காதற் பகுதியார் சாற்றற் பாலார். (18)

பெருகிய துயர மென்னும் பெருங்கட னீந்தி நீந்திக்
கரைபெறற் கரிதாய்ச் சோர்ந்து கண்படை பெறாது வாடிப்
பருவரல் படர்ந்து புந்திப் பயிரெனுங் கருத்தை மூடத்
திருமயி லின்புறாது சிலபகல் கழிந்த பிற்றை. (19)

மண்ணினுக் கரசாய் வந்த முகம்மதின் வடிவு கூர்ந்து
கண்ணினுங் கருத்து மாறா தடிக்கடி தோற்ற நாணிப்
பண்ணெனச் சிவந்த வாயார் பஞ்சணை பாயல் புக்கி
யெண்ணிலா தெண்ண முற்றங் கிருந்தவர் துயிலுங் காலை. (20)

வயிரவே ரூன்றிச் சேர்ந்த மாணிக்கப் பணர்விட் டோடி
யியன்மர கதத்தின் சோதி யிளந்தளிர் குழைப்ப வீன்று
நயனுறு நகரை மூடி நற்கனி யுகுத்து வாசச்
செயமல ரிடைவி டாது சிரபிசை சொரிய மாதோ. (21)

வானமட் டோங்கி நீண்ட மாணிக்கத் தருவின் பொற்பூ
நானில முழுதும் விண்ணு நறைகமழ்ந் திடுவ நோக்கித்
தேனமர் குழலி னாருஞ் செல்வரும் பெரிது போற்றப்
பானுலங் கடந்த கண்ணார் பயனுறுங் கனவு கண்டார். (22)

மெல்லியல் கனவு கண்டு விழித்தெழுந் திருந்து நெஞ்சைக்
கல்லிய துயரி னோடுங் கருத்தொடுந் தெளிந்து பார்த்து
வல்லவ னுறக்கத் தெனது மறைவலான் றன்னைக் கூவி
யல்லினிற் றெரியக் கண்ட காட்சியை யடுத்து ரைத்தார். (23)

* ஒன்றாகி வியத்ததென்று கொள்க.

மடந்தைதங் கனவைங் கேட்டு மனத்தினுட் படுத்தித் தேர்ந்து
கடந்தநூன் முறையி னாலுங் கல்வியோர் கேள்வி யானும்
படர்ந்ததன் னறிவி னாலும் பகுத்துச்சீர் தூக்கிப் பார்த்துத்
தொடர்ந்தபுன் முறுவ றோன்றத் தோகையர்க் குரைப்ப தானான். ()

இருநிலத் துறைந்த வேரீ மானிலை யெழுந்து நின்ற
தருமுகம் மதுநல் வாசந் தழைத்தல்தினை விளக்க மின்பம்
வருகனி கலிமா வாழ்த்து வானவர் செயல்பூ மார்
தெரிதரச் சொரித லும்மைத் திருமண முடித்த லென்றான். (25)

புதியதோர் கனவி னுட்பப் பொருளினைத் தேர்ந்து சோதி
மதிநுதற் குரைத்துப் போற்றி மனமகிழ்ந் தெழுந்து வீரங்
குதிகொளும் வெள்வேற் செங்கைக் குவைலிது மருங்கிற் புக்குத்
துதிசெய்தங் குற்றசெய்தி யனைத்தையுந் தொகுத்துச் சொன்னான். ()

அவிரொளி விரிக்கு மேனி யகுமதின் மனைவியாகப்
புவியினும் வானும் போற்றப் பொருந்தனும் பொன்னேயென்னக்
குவைலிது கேட்டா னந்தக் கொழுங்கடற் குளித்துக் கூர்ந்து
தவமுய ரறிவனோடுஞ் சம்மதித் திருந்தா ரன்றே. (27)

சுரும்பிமிர் கரிய கூந்தற் சுடர்த்தொடி கதிஜா தம்பா
லரும்புகழ் மைச றாவை யழைத்தரு கிருத்தி நெஞ்சின
விரும்பிய வுவகை கூரக் காரண வேந்தர்க் கன்பாய்ப்
பெரும்புவி மணத்தின கோலம் பெற்றிலா தென்கொ லென்றார். (28)

கூறிய மொழியை வேய்க்குங் குயிலுக்குங் கொடுத்துச் செந்தேன்
மீறிய மதுரச் சொல்லாய் விரும்பிய பயனக ளியாவுந்
தேறிய காரணம் போகஞ் செழும்புவி யாக்கை போல
ஆறிய ஆழி னன்றி முடியுமோ வுலகத் தென்றான். (29)

சினப்படைச் செழுங்கட் கொவ்வைச் செவ்விதழ் சிறுவெண்மூர
லனப்பெடைக் கதீஜா பாலயிட் டடலரி மைசறு மன்
கனப்பெருங் கவிகை யோங்கக் கடுவிடப் பாந்தண் மாய்த்த
வனப்பிருந் தொழுகுஞ் சோதி முகம்மதி னிடத்திற் சார்ந்தான். (30)

வந்துதாள் வழுத்திச் செவ்வி மலர்க்கொடி கனவுங் காதற்
சிந்தையு னினைவும் வேதந் தெளிந்தவ னுரையுந் தேறா
கொந்தலர் மரவ மாலைக் குவைலிது மகிழ்வுங் கூறிட்
டந்தரங் கத்திற் சொன்னா னுண்மையு மறிவு மிக்கான். (31)

மானவேற் றடக்கை வீரன் மைசறா வசனங் கேட்டுக்
கானம ருடலு முள்ளக் கருத்தும்பூ ரித்துச் சிந்தித்
தானவ னருளை யுன்னி யகத்தினி லடக்கி யுண்மைத்
தூநெறி வழுவா வள்ளற் றோற்றிடா வுவகை கொண்டார். (32)

பொற்றொடிக் கதீஜா பாதம் போற்றிய மைசறா சொல்லின்
வெற்றியுங் குவைவலி தெனனும் வேந்தனுக் குறக்கத் தோதும்
பெற்றியின மகிழ்ந்த வாறும் பெட்புறு கலவி னாலங்
குற்றவை யனைத்துந் தந்தைக் குறைப்பதற் குன்னி னாரால். (33)

அணிநிரைத் தெதிர்ந்த வொன்னா ராருயிர் சிதைத்துச் சேந்து
திணிசுடர் விரிக்கும் வேற்கைத் திறலபித் தாலிப் தம்பாற்
பணிமறா தொழுகிச் செய்யும் பாலகன் மைச றாவை
மணிவகுத் தனைய திண்டோண் முகம்மது கூட்டிச் சென்றார். (34)

தந்தைமாட் டேகி யங்ஙன் சார்பிட மரிந்து சார்ந்து
நந்தமர் தனிலு மிக்க நண்பின னிவனென் றோதி
மந்திர மொழியா யேதோ வாசக முளதென் றான்றன்
சிந்தனை விளக்க மாகக் கேளுதி தெரிய வென்றார். (35)

மன்னர்மன் சொற்கேட் டந்த மைசறா தன்னைக் கூவித்
தந்நக மடைந்தன் பாகத் தனித்துவைத் துள்ளத் தூற்ற
நன்னய மொழிக ளியாவு மறைபினி னவிற்று தென்னப்
பொன்னெடுத் துரைத்த தென்னப் புகன்றெடுத் துரைக்கலுற்றான் ( )

நேரிழை கதீஜா பாலி னிகழ்ந்தது முறக்கத் தென்னும்
போரறி வாளன் றோர்ந்து குவைவலி துக் குறைத்த பேச்சு
மூர்மனத் துயராற் றனபான் மணமென வுரைத்த வாறுஞ்
சோர்விலா துரைத்தான் மிக்க சூழ்ச்சியிற் றெளிந்த சீரான் (37)

நிரைத்தெடுத் துரைத்த சொல்லை நெஞ்சில்வைத் திலையுங் காயுங்
கரைத்தசந் தனமும் பூவுங் கட்டுரை யுடனு மீய்ந்த
துரைத்தனத் தபித்தா லிபைச் சுடர்முகம் மதுவைப் போற்றி
மனைத்தட மலர்க்கை கூப்பி மைசறா மனையிற் போனான். (38)

அயர்விலா துரைத்த சொற்கேட் டருளுறை யபித்தா லீபு
புயவரை பூரித் தோங்கிப் பொருவிலப் பாசா சீது
வயவரி ஹமுசா வீறாய் மன்னுசோ தரரை யல்லா
நயனுற வழைத்தி ருத்தி நடந்தசொல் லனைத்துஞ் சொன்னார். (39)

பாட்டளி மிழற்றுந் தேறற் படலையிற் றிருந்த வீரத்
தோட்டுணை யபூத்தா லீபு சுடர்நகை பூறுவல் வாயாற்
கேட்டசொல் லமிர்தந் தனூற் கேகய முகில்கண் டென்னப்
பூட்டிய சிலைக்கை வீரர் பொனறிலா மகிழ்ச்சி பூத்தார். (40)

உடைமையிற் பணத்திற் சாதி யுயர்ச்சியில வணக்கந் தனனின்
மடமயி லழகி லொவ்வா மாட்சியிற் கதீஜா தம்மைக்
கடிமண முடிக்க நாடிக் கருதின பேர்க ளெல்லா
மடிகளென் றுரைநா நீட்ட வச்சமுற் றிருநதா ரன்றே. (41)

அந்நெறி யதனு லியாமுங் கேட்பதற் கையமாமேனும்
நன்னெறி மொழிக்க தீஜா மனையினி னடந்த செய்தி
யின்னணங் கேட்டோஞ் செல்வ மணத்தினுக் கிசைநத தாது
முன்னுதல் பொருளை யென்ன யாவரு மொழிநதா ரன்றே. (42)

வல்லமை யறிவிற் றேர்நத வார்த்தையுந் தாத்திற் சூழ்ச்சிச்
சொல்லினுட் பொருளி னுட்பத் துடாறிந துரைக்க வேண்டி
னல்லெழில் ஹமுசா வல்லா னகரின்மற் றுண்டோ வென்னப்
பல்லரும் போற்று மாற்றம் பகர்ந்தன ரபுத்தாலீபே. (43)

வேறு.

திறலறிவ றபித்தாலி யுரைத்தமொழி யனைவருந்தஞ் சிநதைகூர்ந்து, துறுமலர்ப்பொற் புயத்தமுசா தமையழைத்து மணமொழியைத் தொகுத்துப் பேசி, நிறைநிலைமை தவறுத குவைலிதுபா லினிதேகி நிகழ்த்து வீரென், றுறைதருமுன னவர்யாற்றம் பின்வருந் தலைமேற் கொண் டன்பு கூர்நதார். (44)

மனமகிழ்வு மனக்களிப்பு மருங்குவர வெழுநதமுசா வாயினீங்கி, யினமணியொண் கதிர்மாடத் திடுமணிவில லெறிப்பவடலேறு போலத், தினகரன்மெய் மறுகுமணி மறுகூடு மறுகாது சென்று நீங்காக், கனக மதை பொழிமேகங் குவைலிதுவாழ்ந திருந்ததலைக் கடையிற் சார்ந்தார். (45)

அபுத்தாலிப் திருத்துணைவ ரறத்தாறு வழுக்காத வண்ண னீங்காக், கவுட்டான மொழுகுமுராட் கரித்தானை நெருங்குமணிக் கடையிலர்கிப், புவித்தாரை நடத்திமறு புறத்தேசப் பொருளனைத்தும் பொருப்புப் போலக், குவித்தானை சொலற்கரிய குலத்தானைக் குவைலிதைக் கண் குளிரக் கண்டார். (46)

இருந்தவனு மெதிராகி ஹமுசாங் கெழிற்கரந்தங் காத்திலேந்திப், பெருந்தவிசி னினிதிருத்தி யருகிருந்து பிரியமொழி பேசிப் பேசி, விரிந்தபிள வரிந்த விலைக் கருப்பூர முடனளித்து வெற்றி வேந்தே, யருந்தவமே யெனப்போற்றி யீண்டடைந்த வரவாறேதுரையே னென்றார்.

தெரிந்தமறை முறையாலுந் தேர்ந்தவர்சொற் றெளிவாலுந்தெரு ண்டமேலோ, யருந்தவமா மெய்ம்மினத்தோ ராருயிரா யருமருந்தா யப் துல்லாபா, லிருந்தமணி யாயுதித்த முகம்மதெனும் விடலைகருத்தினிது கூரப், பொருந்தமண முடிப்பதற்கு வந்தேனென் றிணையமொழி புகல் வதானார். (48)

இந்நகரிற் குறைஷிகணம் மினத்தவறின மதித்தவர்தம்மிடத்தில் வாய்ந்த, பொன்னனைய மடவாரைத் தருதுமென வவரவரே யுகல்கின றாற், றன்னவரிற் பெரியாரின்மதியாரிற் றவத்தோரிற் றலைமையோரி, னின்னையல தினையெனவே வவருரைத்த பொழியனைத்து நிகழ்த்தி யன்றே. (49)

மாற்றரைநுங் கருத்தினுறும் படிகேட்டு வருதியென மறுவிலாது போற்றியுரைத் தனரெனது முன்னோரி னுரைப்படியே புகன்றேன் மிக்க, தேற்றமுறு மனத்தாய்ந்து நிகழ்காலம் வருங்காலச் செய்கை நோக்கி, யூற்றமுட னுரைத்திடுக வவ்வுரையின் படிகடப்ப துறுதி யென்றார். (50)

தீட்டுதிறற் புகழ்ஹமுசா வுரைத்தமொழி யமுதமழை செவியிற் பாய்ந்து, நாட்டமுறு மனத்தடத்தை நிரப்பிடசெசம் முகமலர்ந்து நவில்கி லாது, கூட்டுமுத லனைவிதிப்பு மகள்கனவு மிவைநிகழ்ந்த குறிப்பு நோக்கிப், பூட்டுமணிக் கதிர்வலய நெகிழவடிக் கடிபுயங்கள் பூரித்தாரே. (51)

வடிவாலுங் குணத்தாலுங் குலத்தாலும் முகம்மதுநேர் மற்றோ ரில்லைப், படியாளு முதியாரி லியாவரவா மணம்பொருந்தப் பகர்ந்தி டாதார், பிடியாரு மென்னடைக்கொம் பினைக்கதீஜா வெனத் தமியேன் பெற்றபேறைக் கடியாரு மலர்சூட்டி நும்மிடத்திற் றருகமனங் கருதிற் றென்றே. (52)

எம்மனத்தி னுறங்களிப்பு நந்துணைவர்க் கியம்பிறும தினத்து ளானோர், தம்மனத்துக் கிசைந்தபடி நன்மொழிகள் சிலதெரிந்து சாற்

றி வீரர், செம்மலிளங் களிறனை முகம்மதையென் மருகயரெனச்செவ் விதாக்கி, வம்மெனமற் புயத்தமுசா தனையாலுப்பி யினிதிருந்தார் மதி வல் லோரே. (53)

நினைத்தபடி முடிந்ததெனை மனத்தடக்கி யெழுந்த முசா நெறியி னேகிச், சினத்தடக்கை மலையெனவுட் களிப்புமத மொழுக மணித் தெருவு நீநதிக், கனைத்தகடன் முகட்டெழுந்த கதிர்கடுப்ப வருவது கண் கவா நோக்கி, யினத்தவர்முன் னவரிதய முககமல நகையினொடு மிலங்கிற் றன்றே. (54)

முன்னவர்தம் முன்னேகிப் பின்னவருமிருகரங்கண் முகிழ்த்துத் தாழ்த்துத், தங்திதய மலர்மொழித்தே னுவழியெயொழுகியவர் செவி யிற சார, மனனவர்மன் குவைலிதுதம் மருங்கிருந்து மணமொழியின் வரவா றெல்லாஞ், சொன்னதுவு மவர்மறுத்துச்சொன்னதுவும் விரித் தெடுத்துச் சொல்லி னரால். (55)

திருத்துணைவ ருரைத்தமொழி யபித்தாலிப் கருத்தூடு திளைப்ப வுறாவிம், பெருத்தகுலத் தவர்கோதிக் குறைவிகளின முதியாரைப் பெரிது கூட்டிப், பொருத்தமிது நலதினைத்தின முகூர்த்தமிது வருக வெனப் பொருவி லாத, குருத்தவள மணிமாலைக் குவைலிது பாற் குறித்தெழுந்தார் கொற்ற வேந்தர். (56)

ஆரிதுசு தம்சுபைறு அப்துல்கதுபா அபூலஅபு கைதாக்குக், காரோயும் விறுறப்பா சுடன்ஹ முசா வுடனேமு கைரு தானுஞ், சீரோறு மபித்தாலிப் அப்துல்லா மதலையெனுஞ் செவ்வி யோர்க்குத், தாரோறு வதுவைமொழி பகாவரும் வாவாறு தன்னைக் கேட்டான். (57)

அருமறைதேர் குவைலிதுகேட் டகத்திலடங்காவுவகைப் பெருக் கா நந்த, மிருகரையும் வழிந்தகடற் குளித்தநடு வெழுந்துமிதந்தெதி ரே புக்குத், தருவனைய அபுத்தாலிப் தம்முடனே மன்னவர்கடமையும் போற்றித், தெரிகதிரா சனத்திருத்தி யனைவருக்கு முறைமுறையே சிறப்புச் செய்தார். (58)

சொல்லரிய காரணத்துக் குறும்பொருளாய் நமர்க்குயிராய்த்தோன் றித் தோன்றாஞ், செல்லுலவுகவிகைநிழல் வள்ளலுக்கு மணமுடிக்குஞ் செய்தி யாச, வல்லமைஹா ஷிம்குலத்துக் கனைவோருங் குறைஷிகளு மகிழ்ச்சி யாயென், னிலவிடத்தில் வாமுதனுட்கிடையாத பெருநதவஞ் செய் திருந்தே னென்றார். (59)

அவ்வுரைகேட் டபுத்தாலி பகக்களிப்புத் தலைமீறியாசே கேளீர், மௌவல்கமழ் குழன்மயிலே யென்மகற்கு மணமுடிக்கவாப்பெற் றேறுற், பௌவநதி சூழ்பாரைப் புரந்தளிக்கும் பெரும்பதவி படைத்தேன் செல்வ, மெவ்வெவையும் படைத்தேனிங் கினிக்கிடையாப்பொருளுமெனக் கெய்து மென்றார். (60)

இருவருஞ்சம் மதித்துரைத்தா ரெனக்குறைஷிக் குலத்தாசரிதயங் கூர்ந்து, மருமருபூங் குழலாட்கு முகம்மதுக்கு மணநாளை வகுத்துக் கூறித், தெரிதருசீ தனப்பொருளுமின்னதென வகைவகையாய்த் தெளியச் சாற்றிப், பொருவரிய பொற்புளவும் வெள்ளிலையுந்தருகவெனப் புகழ்ந்திட் டாரால். (61)

வெள்ளிலைபா கேலமில வங்கமுடன் றக்கோலம் விரைகற்பூர, மள்ளியசந் தனச்சேறும்பொற்கலத்தில் குவைவித்தெடுத் தருளவாங்கி, வள்ளியோர்க் கினிதீய்ந்து மறையோர்க்குமெடுத்தருளி வலக்கைசேர்த்தித், தெள்ளியநன் முகூர்த்தமுதற்றிங்களென வகுத்துரைத்தார் செவ்வியோரே. (62)

இலங்கிலைவேற் குவைலிதுபா விருந்துபசா ரத்தினுட னெழுந்து நீங்கா, வலங்கலணி புயத்துணைவ ரனைவரொடு மபூத்தாலி பன்பு கூர, விலங்கலணி யளர்மாட நகர்வீதிதடனைக்கடந்து விரைவினேகிக், குலங்கெழும மனைபுகுந்து மனைவியர்க்கு மணமொழியைக் கூறினரால். (63)

மணம்பொருத்துபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-22-க்குத்-திருவிருத்தம்-1096.



# மணம்புரிபடலம்.



குறைஷி மன்னவ ருடனபுத் தாலிபுங் குழுமி
நிறைசெய் மாமதி முகம்மதின் மணவினை நிலவை
விறைவ ரியாவரு மறியவிந் நகர்க்கெழின் முரச
மறைகவென்றனு மெழுந்தனன் கடிமுரா சறைவான. (1)

ஒட்டை மீதினின் மணமுரா சினையெடுத் துயர்த்தி
விட்டு வெண்கதி ருமிழ்மணி மறுகிடை மேவி
வட்ட வாருதிச் செல்வமொத் திந்நகர் மாக்க
ளிட்ட மாயினி தூழிவாழ் கெனவெடுத் திசைத்தே. (2)

ஹாஷி மாகுலத் தப்துல்லா மகாராணி மருவி
வாச மெய்முகம் மதுபெறும் புதுமணக் கோலங்
காசி லாவிதுக் கிழமையி னிரவெனக் காட்டிப்
பாச முற்றவர்க் குரைப்பதுண் டெனப்பகர்ந் திடுவான். (3)

நகைகொள் வாயிலின் மகரதோ ரணங்களை நடுமி
னிறையு மாடங்கள் புதுக்குமுன் கொடிநிரைத் திடுமி
னுறையும் வெண்சுதை மதிடோறுங் கரைத்தொழுக் கிடுமின்
குறைவி லாதபொற் பூரண குடங்கள்வைத் திடுமின். (4)

பூணு நல்லிழை பூணுமின் குழற்கதிற் புகைமின்
காணெ ணுவிடைக் கம்பொன்மே கலைகளின் புனைமின்
பாணி யிற்சரி தோளணி பலபரித் திடுமின்
வாணு தற்கணி கடுவரி விழிக்குமை வரைமின். (5)

இரவ லர்க்கினி தருளொடு மின்னமு திடுமின்
வரைவி லாதெடுத் தேற்பவர்க் கனிவழங் கிடுமி
னிருமை யும்பலன் பெறுமினென் றினைமன வியம்பி
யாவ மீக்கொளக் குணிலெடுத் தணிமுரா சறைந்தான். (6)

இந்த மாமொழி பகர்ந்தெழு தினமுரா சியம்ப
மந்த ராசல மாளிகை மறுகுக டோறுங்
கந்த மென்மலர்த் துகடுடைத் திருநிலங் கவினச்
சுந்த ரக்கதிர் மடந்தையர் சுதைமெழுக் கிடுவார். (7)

இடன றத்திருக் காவண நிரைநிரைத் திடுவார்
நடலை யுள்ளற மகாதோ ரணம்பல நடுவார்
விடுசுடர்ப்பட மெடுத்துயர் வெளியடைத் திடுவார்
குடுமி மாடத்தி னணியணி கொடித்திர ணடுவார். (8)

இடைப ழக்குலை யொடுகத லிகணிரைத் திடுவார்
மடல்வி ரிந்தபூங் கமுகினை நிறுவிவைத் திடுவார்
கடிந றுவொழு கிடக்கொடிக் கரும்புக ணடுவார்
துடா ணிக்குலைத் தெங்கிள நீர்கடூக் கிடுவார். (9)

நறவு சிந்திடக் கனியொடு சூதங்க ணடுவார்
நிறையும் பொற்சுளை முட்புறக் கனிநிறைத் திடுவார்
மறுவின் மாதுளைக் கனியொடும் பூவொடும் வனைவார்
செறிதி ரட்கொழு விஞ்சியுங் கனியொடு சேர்ப்பார், (10)

வன்ன பேதபட் டாடைகொய் தனிநிரை வணைவார்
பொன்னி னன்மலர் மாலைக ளுறப் புனைவார்
நன்ன யம்பெற நறுக்கிய நறுக்குநாற் றிடுவார்
துன்னு வெண்கதிர்க் கற்றைபோற் கவரிதூக் குவரால். (11)

முல்லை சண்பகம் பாடலஞ் செவ்விதழ் முளரி
மல்லி கைமடற் கைதைமா மகிழ்மருக் கொழுந்து
பல்ல வத்தொடு நிரைநிரை பன்மலர் தொடுத்தாங்
கெல்லை யில்லெனத் தூக்குவ ரெழில்விளங் கிழைபார். (12)

சால வெண்முகைப் புன்னையின் வண்மலர் தொடுத்து
நால விட்டதிற் றுய்ப்பிக ணடுநடு வதித்த
கோல மாக்கட் லீன்றமுத் திலங்கிடக் கோத்து
நீல மாமணி யிடையிடை தொடுத்தன நிகர்த்த. (13)

குவளை மைவிழிச் சுரிகுழ லியர் கொழுங் கரத்தாற்
றுவளு மாதுளை மலரினை நிரைநிரை தொடுத்துத்
தவள மாமணிப் பந்தரிற் றாக்கிய தன்மை
பவள மாலிகை நான்றன போன்றன பாங்கர். (14)

சலதி வெண்டிரைத் தாளவெண் மணியொடு தயங்கக்
குலவு நீலமா மணியிடை கோத்தவை தூக்கி
யிலகு பூந்துகிற் பந்தரின் வயினிடு கதிர்க
ணிலவு வெண்கதி ரொடுமிருள் பரந்தென நிகர்த்த. (15)

மாச டர்த்தெறி மரகத மணிநிறை வடங்க
ளேச லாயணி நான்றிட வுமிழ்பசுங் கதிர்கள்
பூசு சந்தனச் சுவர்தொறும் வாயிலின் புறத்தும்
பாசை டைத்திரள் விரிந்தன பாரினும் பரப்பும். (16)

மிக்க செம்மணித் தொடையமலில் விளங்கிய கதிர்கள்
பக்க மீக்கொளப் பந்தரின் வயிர பந்திகளி
னொக்க வெங்கணும் பரந்து நிறைந்திட வுயர்ந்த
செக்கர் வானக மீனொடு திகழ்வன சிவணும். (17)

அறைப்பு றத்தினு மாலயத் திடத்தினு மணியாற்
சிறப்பு மிக்கன செய்தவத் தெருத்தலை தோறு
முறப்ப சந்தசெங் குமிழ்க்கிளி யினத்தொடு மொழுங்காய்ப்
பறப்ப தொத்தன பாசிலைத் தோரண பந்தி. (18)

கனக மாமழை பொழிதர வருமபுல் காசி
மனதி னன்னெறி யொழுங்குறு மாட்சியின் மான
வினம ணிக்கதிர் தவழ்நிலை மேனிலை யெவையும்
புனமு கிற்குல மொத்தென வகில்புகைத் திடுவார். (19)

காக துண்டமுஞ் சந்தனக் கடிகையுங் கலந்து
தோகை மாரிடு புகைத்திர ளிடையிடை தோன்று
மாக மூடெழு மண்டபக் கொடுமுடி வயிர
மேக மூடுறை பிறையெனப் பிறழ்ந்தொளி மிளிரும். (20)

குங்கு மஞ்செறி தனத்தியர் செழுங்குழல் விரித்துப்
பொங்கு பன்னறை யூட்டிய காழகில் புகைப்ப
தெங்க ணும்பரப் படவொளி திகழெழின் முகங்கண்
மங்கு லூடுவெண் மதியமொத் திருந்தன மாதோ. (21)

நிலைகொண் மாடத்து மண்டப மருங்கினு நிமிர்ந்த
சிலைநி கர்த்தமே னிலையினுஞ் செவ்வரி விழியார்
குலிக மாரப்பற வரைத்தெடுத் தெழுதிய கோல
மலைகண் மீதினும் பவளங்கள் படர்ந்தென வயங்கும். (22)

புகைத்த காரிருட் குழன்முடித் தருமலர் புனைவார்
பகுத்த நன்னுத றுலங்கிடச் சுடிகைகள் பதிப்பார்
தொகுத்த காதினிற் பலவணி தொகைசுமத் திடுவார்
மிகைத்த வேல்விழிக் கஞ்சனம் விரித்தெழு துவரால். (23)

பூக மென்கழுத் திடனறக் கதிர்மணி புனைவார்
பாகு றச்செழுந் தோள்வளை பலபரித் திடுவார்
நாக மென்முலைக் குவட்டினன் மணிவடந் தரிப்பார்
மேக லைத்திரண் மணியொடு மருங்கில்வீக் கிடுவார். (24)

உவரி மென்னுரை போலும்வெண் டுகில்விரித் துடுப்பார்
குவித னத்திடை சந்தனக் குழம்புகள் செறிப்பார்
திவளு நல்லொளி நுதலிடை திலதங்க ளணிவா
ரவிருங் கேழலத் தகமிரு பதத்தினு மணிவார். (25)

சந்த மான்மதஞ் செழும்பனி நீரொடு சாந்தங்
கந்த மென்னறும் பொடியொடு விரையெழக் கலக்கி
யிந்து வெண்கதிர் பரப்பிய மதிணடு விடுவார்
சிந்து வார்தெருத் தலைதொறு மிடனறத் தெளிப்பார். (26)

வட்ட வான்மதி முகத்திய ரிடத்தும்வாள் விரித்து
விட்ட வேற்கா வீரர்க ளிடத்தினு மெதிர்ந்து
தொட்டி தோறும்பன் னீர்சொரிந் தருநறை மறுகி
யிட்ட சந்தனக் குழம்புகள் கரைத்திறைத் திடுவார். (27)

கொந்து றைந்தபூம் பாளைவாய் வெள்ளிவெண் குடங்கள்
சந்த மென்னறை மெழுக்கிடுந தலத்திடை தயங்கப்
பந்தி யாகவைத் திருப்பது பானிலாக் கதிரோ
டிந்து வாயில்க டோறும்வந் திருந்தன வியையும். (28)

பால னத்தொடும் பழத்தொடும் பசித்தவர்க் கிடுவார்
கோல மென்றுகி லுடைகர் கரத்தினிற் கொடுப்பார்
சோலை வாய்க்குயி லெனுமிசை யவர்க்கணி சொரிவா
ரேனு நன்மறை யவர்க்கிரு நிதியெடுத் திறைப்பார். (29)

வான மாமுகி லெனச்சொரி தரவரு மாந்தர்
தான றுங்கதிர் மணியொடு நிதியினைச் சுமந்து
தீன ரியாசக ரியாரெனத் தெருத்தொறுந திரிந்து
தான மேற்பவ ரில்லென மனத்திடை சலிப்பார். (30)

மதியின் மிக்கவ ரொருவரால் வருங்கிளை யனைத்துங்
கதியும் வெற்றியும் வீரமும் பெறுவரக் கதைபோற்
புதிய பேரொளி முகம்மதின் மணவினைப் பொருட்டாற்
பதியும் வீதியு மாடமு மணம்படைத் தனவே (31)

வேறு.

சிறுபிறை நுதற்க தீஜா திருமனை யிடத்தும் வெற்றி
விறலபித் தாலி பென்னு மெய்ம்மையோர் மனைவின் முன்னு
மறபிகண் மனையுஞ் செம்பொ னுவணத் திடத்தும் வேந்தர்
மறுகுக டோறுஞ் செல்வ மணச்சிறப் பியன்ற பின்னர். (32)

வேறு.

அற்புதமாய் விண்ணவரும் புகலரிய ஆபுஸம்சத் தரியநீரைப்
பொற்குடத்தி லெடுத்தமுத கதிர்கிரண மலைமிசையே பொழிவபோலச்
சிற்பரியற் றியபலகை நடுவிருத்தி முகம்மதுதஞ் சிரசின்மீதே [றே.
சொற்பழுத்த மறைமுதியோர் மங்கலவாக் கியங்கறங்கச் சொரிந்தாரன்

மஞ்சனத்தீ ரம்புலர்த்தி விரைவாசப் புகைக்கொழுந்து வயங்கச் சேர்த்திப், பஞ்சினின்மென் றுகிலரையி னெடுத்தணிந்து செழுங் கவன பதிக்குமேவா, ரெஞ்சலில்வெண் கதிர்திரண்டு வந்திருந்த தெனச்சருவந் திலங்கச் சூட்டிக், கஞ்சமல ரெனச்சேந்த கண்ணிணையிற் சுறுமாவுங் கவினச்செய்தார். (34)

பொன்காலுந் திரண்முலையார் கண்ணேறு படாது பொதிதல் போலுஞ், சின்காத வழிக்கலும் வேதமொழி யனைத்தும் வந்து செறிந்த போலும், வன்காயிர் விழிக்கணங்க டிருமேனி தீண்டாது மறைத்தல் போலு, மின்கால வெண்கிரணக் குப்பாய மெடுத்தணிந்த வியம்புத் தானே. (35)

மருந்தமுத மெனுங்கவிமாத் தலைபிணங்கா ருயிரனைத்தும் வானிலேற்ற, விருந்ததென வயிரமணிப் பிடியுடைவா ளெடுத்துமருங் கிடதுச் சேர்ந்து, விரிந்தசெழுங் காகமல விரலிதழின் மணியாழி விளங்கித் தோன்றப், பரிந்தணிந்தா ரழகுவெள்ளம் வழியாது மருங்கணைக்கும் பான்மை போன்றே. (36)

மண்முழுது மாறுரிய செவந்தகதிர் மணிக்கோவை மறுவிலாத, வெண்மணிநித் திலவடமு மேருவெனும் புயவரையில் விரித்தகாந்தி, விண்முழுது மடங்காத வெழிலேர்க்கி யவரவர்கண ணேறடாது, தண்மதியும் வெஞ்சுடரும் கரநீட்டி யிருபுறத்துந் தடவல போலும். (37)

பொன்னிதழ்க்குங் குமத்தொடையன் முகம்மதுதம் வயிரவரைப் புயத்திற் சாத்தி, மினனிடவெண் மணித்தொடையுஞ் செம்மணியும் போற்காந்தி விரிந்த தோற்றந், தனனிலைமை தவறாத முதியோரை யெவரேனுஞ் சாரில வாய்ந்த, நனனிலைநற் குணமறிவு பெறுவரெனும் பழமொழியை நவிற்றிற் றன்றே. (38)

அவனிதனிற் றனியரசை நபிநெறை முகம்மதையா ரணத்தின் வாழ்வைக், கவினொழுக வலங்கரித்துப் பவனிவர வெனவெழுகக் கருதுங் காலைச், சுவனபதி தனைத்திறமி னிரயடைத் திடுமி னெனத் தூயோன் சத்தம், பவனமுமண் ணுலகுகடன் மலையுந் திசைதிசை யனைத்தும் பரந்த தன்றே. (39)

வானவர்பொற் பூமாரி சொரிந்திடமண் ணவர்வாழ்த்த மறையோ ரேத்தத், தானமென வேற்பவர்க்குப் பொன்மணிதூ செடுத்

தருளிச் சடங்கு தீர்த்துக், கானமர்பூங் குழன்மடவா ரயினிநீர் கொணர்ந்தெடுத்துக் கனித்துப் போத, வினையில்பல் வியமகர கடலெனவார்த் தெடுப்பவினி தெழுந்தா ரன்றே. (40)

வேறு.

கானறு மல்லிகை கமல மெல்லிதழ்ப்
பூநறும் பயலி னடந்து பொங்கொளி
தேனறுந் தெரியலார் செம்பொ னொட்டுறை
வானவர் வாழ்த்திட வாசி மேற்கொண்டார். (41)

முறைமுறை தண்ணுமை முருடு துந்துமி
சிறுபறை சல்லரி பதலை திண்டிம
மறுவறு பேரிகை முரசு மத்தளி
யறைதிரைக் கடலொலி யடங்க வார்த்தவே. (42)

பெருகிய கடனமுகட் டெழுந்த பேரொளிப்
பரிதியொத் திருந்தன குரிசில் பான்மைமேல்
விரிதரு மதியெனக் கவிகை வெண்ணிலாச்
சொரிவன கற்றையுங் கவரி தூங்கின. (43)

அவிரொளிக் கொடியிடைந் தடா வண்ணலார்
பவுரியு னடுமுறைப் பணில மார்த்தெழக்
குவிகைகொம் புகள்குமு குமெனப் பல்லியஞ்
செவியடைத் தனதெருத் தலைக ளெங்குமே. (44)

மதித்தென மறுகிடை விண்ணின் மண்ணெழப்
பதித்தன குளம்புவிட் டெறிந்து பாரிடை
மிதித்தென வில்லென வேக மீக்கொளக்
குதித்தன நெருங்கின குதிரை யீட்டமே. (45)

மதங்களைச் சிந்தின மதுகின் மாந்தர்தம்
பதங்களை வழுக்கிடப் படர்செ விச்சுள
கிதங்கொள்வண் டினம்புடைத் தெழுப்ப வெங்கணுங்
கதங்கொடு நெருங்கின கரியின் கூட்டமே. (46)

கடுவிடப் பணத்தலை நெளியக் கண்ணகன்
படிகுழித் தெழுதுகள் பரப்பிப் பாங்கினிற்
கொடிநிறைத் தசைந்தகோ லாரி வண்டில்க
ளிடைவெளி யின்றென வெங்கு மீண்டின. (47)

இசையொடு பல்லிய மியம்பி யார்த்தெழ
வசையறு காளையார் மருங்கு சுற்றிடச்
சசியெனக் கதிரொளி தவழும் வீதியிற்
றிசைதிசை மலிந்தன சிவிகை வெள்ளமே. (48)

பிடிபடு குசைப்பரி மீதும் பெய்மழை
கடகரி மீதினுங் கதிர்கொண் மாமணிப்
படமிடு சிவிகையின் மீதும் பாங்கெலாஞ்
சுடாரணி திகழ்ந்தெனக் கிளைஞர் சுற்றினர். (49)

வெள்ளணி யுடையினர் விரிந்த கஞ்சுகர்
கள்ளவிழ் மாலையர் கலன்கொண் மேனிய
ரள்ளிய வழகின ராச வீதியி
னெள்ளிட மிலையென வெங்கு மீண்டினார். (50)

செழுமுகிற் கவிகையஞ் செம்மல் வீதிவாய்
வழுவறு பவனியின் வருகின் றானென
வெழுவகைப் பேதையே ரிளம்பே ணீறதாய்க்
குழுவுடன் றிசைதிசை நிறைந்து கூடினார். (51)

மணிப்பளிக் கறைநிலை மாட மீதினுங்
குணிப்பருங் கூடகோ புரத்து மீதினும்
பணிப்பரு மேனிலைப் பரப்பு மீதினுந்
தணிப்பிலா துயர்ந்தமண் டபத்தின் சார்பினும். (52)

சச்சையின் முகப்பினுஞ் சாள ரத்தினும்
வச்சிர மழுத்திய வாயின் மீதினுங்
கச்சணி முலைச்சியர் கதிர்கொண் மால்வரைப்
பச்சையங் கிளியெனப் பரந்து தோன்றினார் (53)

வெண்முகிற் கவிகையிற் பிறந்த மின்னென
வண்ணமென் பசுங்கதிர்த் தோகை மஞ்ஞைகள்
சுண்ணினக் கவிகையைக் கண்டு வந்தென
வெண்ணிறந் தனையமா மாத ரீண்டினார். (54)

வழிகதிர் முகம்மதின் வனப்பு வெள்ளமீக்
கெழுதிரைக் குவந்தன மெழிந்த கூட்டம்போற்
பொழிகதிர்க் கலன்பல புரள வெங்கணுந்
தொழுதிகொண் டுற்றனர் தோகை மாதரே. (55)

தேனென வமிர்தெனத் திரண்ட பாகெனத்
தூநறுங் கனியெனச் சுடருங் கொம்பெனப்
பூநறுங் கரும்பெனப் பொருவின் மாதரார்
வானவ ரமிர்தென வளைந்து சுற்றினார். (56)

வேறு.

வண்ண வார்முலைக் கொம்பன்னார் மருங்கொசிந் தசைய நோக்கிக்
கண்ணகன் ஞால மெல்லாங் களிப்புறு மரிய காட்சி
யண்ணறன் மணத்தின் கோல மாமிது வென்னு மந்தப்
பெண்ணிருந் தினிது காணப் பெற்றிலள் காணு மென்பார். (57)

கடுநடைப் புரவி மேலாய்க் கவிகைமா னிழற்ற வந்த
வடிவுறை முகம்ம தின்றன் வனப்பலால் வனப்பு மில்லைக்
கொடியிடைக் கதீஜா வென்னுங் கொம்புசெய் தவப்பே றுகப்
பிடிநடை யவரிற் பேறு பெற்றவ ரில்லை யென்பார் (58)

பொன்னெனப் பூங்கொம் பென்ன மணியெனப் பொருந்து மாதர்
மின்னொளி காக்குஞ் சோதி மெய்யெழின் முகம்ம தென்னு
மண்ணினைக் கதீஜா செல்வ மனைமண முடித்த போதே
யெந்நிலப் பொருளும் வாழ்வு மிவர்க்கினி யெய்து மென்பார். (59)

வளைந்தபூ மாவத் திண்டோண் முகம்மதின் வடிவை நோக்கித்
தனந்தொறும் பசலை பூத்த தையலார் திரண்டு கூடிக்
கனந்துதைந் தொதுங்கு மாடக் கதிர்நிலா வீதி வாயிற்
றினந்தொறும் பவனி காணச் செய்தவஞ் செய்வோமென்பார். (60)

வரிசைக்கு மிகுந்த செவ்வி முகம்மதின் வடிவை நோக்கி
யுருசிக்க மலர்த்தே னுண்ட வொண்சிறைப் பறவை போலப்
பரிசிப்ப தொத்து நீங்காப் பவனியி லிருகண் ணாரத்
தெரிசிக்க நம்போன் மிக்க ஜெனனமா பெறுவ ரென்பார். (61)

ஆரவா ருதியிற் றோன்று மமுதனார் பரியைநோக்கிப்
பாரிடை பையப்பையச் செல்லெனப் பரிவிற் சொல்வார்
வாரமா மறுகிற் போத மனமற மறுகி நின்னைக்
கோரமென் றிதற்கோ பேரிட் டுலகெலாங் கூறிற் றென்பார். (62)

பொருத்துதற் கரிய செவ்விப் புரவல ரழகைக் கண்ணா
லருத்திய துயரக் காற்று லவதியுற் றலைந்து காந்தட்
காத்தணி பணிக ளியாவுங் கருத்துட னிழந்து வாசம்
விருத்தபூ வுதிர்த்த கொம்பாய் விளங்கிழை யொருத்தி நின்றாள். ()

கோதறு கருணை வள்ளல் குவவுத்தோள் வனப்பைக் கண்ணாற்
றீதற வாரி யுண்ட செழுங்கொடி யொருத்தி செம்பொற்
பூதர கொங்கைச் சாந்து முத்தமும் பொரிவ தென்கொல்
காதினி லுரையி னென்றோர் காரிகைதன்னைக் கேட்டாள். (64)

திருத்தகு பவனி நோக்குஞ் சேயிழை யொருத்தி காதல்
வருத்தமுற் றிருந்து பஞ்ச வனக்கிளி கையி லேந்திக்
கரத்தினைப் பொருத்தச் செய்த காளைபா லேகி யென்ற
னுரத்தினைப் பொருத்தச் சொல்லென் றோதும்வாயொழிகிலாளே. ( )

கதியுறு பரியின் மேலோர் காளையை நோக்கி நோக்கிப்
புதியதோர் செவ்வி வாய்ந்த பொலன்கொடி யொருத்தி யிந்தப்
பதியினிற் பிறந்து செய்த பலத்தினுக் குற்ற பேறாய்
மதியினைக் கொடுத்துக் கொள்ளா மாலையே வாங்கிக்கொண்டாள். (66)

இனமணிச் செழுங்கொம் பன்னா ருடனெழுந் தெதிரிற் புக்குச்
சினமதக் கரியுந் தேருஞ் சிவிகையும் பரியுஞ் சூழப்
புனன்முகிற் கவிகை வள்ளல் வருவதும் பொருந்த நோக்கிக்
கனவெனத் தெளிவு றாமற் கலங்கிநின் றொருத்தி போனாள். (67)

கனமுகி லனைய கூந்தற் காரிகை யொருத்தி யுள்ள
நினைவெலாங் குரிசி றோன்று நெறியிடை யெதிரிற்போக்கி
யினமெங்கே யாய மெங்கே யெவ்விடத் தேகின் றேனென்
மனமெங்கே யான்றா னெங்கே யெனநின்று மறுகுகின்றாள். (68)

மயற்கடற் படிந்து கூந்தன் மலர்மணிக் கலையும் போக்கிச்
செயற்கையிற் பணிக ளியாவுந் தெருத்தலை தோறுஞ் சிந்திப்
புயற்குடைக் குரிசி றந்த பொன்னெலா முடலம் பூத்த
வியற்கையே போது மென்ன விளங்கிழை யொருத்தி போனாள். (69)

பருமித்த முலையி னார்ந்த பண்மணிக் கலன்க ளீய்ந்து
மருமொய்த்த குழலா ளாசை மதிப்பிலா வயிரந் தான்கொண்
டொருமுத்தி னுதித்த வள்ள லுறுகதி ரழகுக் காகப்
பெருமுத்த வாரி கோடி யிறைத்தனள் பெரிய கணால். (70)

காயிள நீரும் வேயுங் கதலியுங் கமுகுங் காந்தி
பாயொளி யாம்ப லுஞ்செம் பதுமமுங் குவளை மானுஞ்
சேயரி கருங்க ணல்லார் செறிந்து கொண் டெழுந்த தோற்றந்
தூயமே னிலைக ளெல்லாந் துடவைபோன் றிருந்தமாதோ. (71)

குரும்பையென் முலைக டாங்கிக் கொடிநிலை மாடமீதிற்
கரும்பெனு மமுதத் தீஞ்சொற் கன்னியர் செறிந்த தோற்றந்
தரும்பெரும் புவியும் வானுந் தழைக்கவந் துதித்த வள்ளல்
வரும்பெரும் பவனிக் கேற்ற மாணிக்க விளக்கம் போன்றார். (72)

தாவிய பரிமேற் சேனைத் தளத்தொடும் வீதி வாயின்
மேவிய வள்ள லார்த மெய்யெழி னைக்கி நோக்கி
யாவியு ளடங்கி நெஞ்சத் தறிவிதிர்த் திமைப்பில் லாது
பாவையர் நின்றார் செய்த பாவைகள் போலு மன்றே. (73)

கண்களி லடங்காக் காட்சிக் காளைதம் வனப்பு நோக்கும்
பெண்களி லமுத மன்னார் பேரெழின் முகத்தின் றோற்றம்
விண்கதி ரடருஞ் சோதி மேனிலை வாயி றோறுந்
தண்கதிர் கிளைத்த செவ்வி சசியின முளைத்தல் போலும் (74)

வடிசுதை மெழுக்கிட் டோங்கி வளர்ந்த மண்டபத்தின் சாற்பிற்
படர்கதி ரரத்தந் தோய்ந்த பல்கணி வாயி றோறுங்
கடிமணப் பவனி நோக்குங் கன்னியர் கதிர்வேற் கண்கள்
கொடிதுடர்ப் பவளத் தூடு குவளைகள் பூத்த போன்ற. (75)

தண்ணில வுமிழுஞ் சோதி தவழ்நிலை வீதி வாயின்
மண்ணகத் தெவரு மொவ்வா முகம்மதின் பதனி நோக்கி
யெண்ணகத் தடங்கா மாத ரிவ்வண்ண நிகழும் வேலை
விண்ணவ ரிடத்தில் வாய்ந்த வியப்பினை விரித்துச் சொல்வாம் (76)

வேறு.

உம்ப ருள்ளங் களித்தெழுந் தோடி நீள்
செம்பொ னாட்டுயர் ஜென்னத்தின் மாமணிக்
கம்பை சேர்த்துங் கபாடந் திறந்தன
ரிம்பர் நாட்டு மெழுந்தன சோதியே. (77)

விரைவி னூதி யுரைப்படி விண்ணவர்
நிரயந் தன்னை யடைத்து நெருப்பையும்
பாவி லாதவித் துள்ளுறைப் பாழ்ங்குழி
யிரையு மூச்சு மடக்கின ரென்பவே. (78)

அவனி மீதி லகுமது மாமணிப்
பவனி வந்தனா பாருமின் பாரெனக்
கவன வேகத் தமரர் களிப்பொடுஞ்
சுவன நாட்டுறை தோகையர்க் கோதினார். (79)

மன்னர் மன்னர்மு கம்மது தம்பெயர்
சொன்ன போதிற் சுவன மடந்தையர்
முன்னி ருந்த வடிவினு மும்மடங்
கென்ன லாகி யிருங்களிப் பேறினார். (80)

விதிக்கு மேலவ னேவலின் விண்ணினிற்
குதிக்குஞ் சோதிக் கொடியிடைக் கொம்பனா
பதிக்கும் பூரண மாய்ப்பல கோடிமா
மதிக்கு லய்வநதெ ழுந்தது மானுமே. (81)

மாக நன்னதி யாடி மணங்கம
ழாக மீதி லணியணிந் தந்நலா
ரேக மாயெழுந் தெங்கனு மெண்ணிலா
மேக மண்டல் மின்னெனத் தோன்றினார். (82)

தீனெனு முதற செம்மறன் வீதிவாய்
வான நாடுறை மங்கைய ரங்கையா
னான மம்பர் நறுங்கறுப் பூரம்பொற்
பூதி றைத்திறைத் துப்பொழிந் தார்களே. (83)

விண்ணி னுற்றவர் வீசியி றைத்தலாற்
கண்ண கன்ற கடன்மலை கானகம்
பண்ணை சூழ்நக ரும்பல சோலையு
மண்ணு விண்ணு மலிந்தன வாசமே. (84)

வள்ள லார்திரு மேனியின் வாசமுந்
தெள்ளி மேலவர் சிந்திய வாசமுங்
களரு லாவிய காவினி னாலவகை
யுள்ள பூவினு முளளுறைந தோங்கிற்றே. (85)

திருத்து கூந்தலுந் தேங்கமழ் மாலையும்
விரித்த பூநதுகி லும் * மணி மெய்யினும்
பருத்த கொஙகையி னும்புவிப் பாவையா
கருததி னூடுங் கலநதவ் வாசமே. (86)

ரைகொ னானமும் வெண்கருப் பூரமும்
வரிசை வள்ளன்மு கம்மதின வீதியி
லரிதி னிற்சொரிந தம்பர மங்கையர்
பெருகுந் தம்மனத் தாசையிற் பேசுவார் (87)

---

* கூந்தலிடத்தும, மாலையிடத்துந் துகிலிடத்து மென்றுகொள்க.

குற்ற மற்ற கொழுங்கதிர் மெய்யெழில்
வெற்றி வள்ளலை வீதியிற் கண்டன
முற்று றாத முகத்திமை யாவிழி
பெற்ற பேறின்று பெற்றமென் பார்சிலர். (88)

தண்ணந் தாமரைப் பாதந் தழீஇத் தொழு
மண்ணின் மாதர்க ளேவலி யாரெனபார்
பெண்ண னார்கதீ ஜாவொடும் பெட்புற
விண்ணி னூடும் விளங்குவர் காணென்பார். (89)

வழுத்து வீரிவ ராரென மற்றவர்
பழுத்த பொன்னிலைப் பன்மணி மின்னவே
யழுத்து வாயிலின் மேலிரண் டாம்வரி
யெழுத்தெ லாமிவர் பேரென் றியம்புவார். (90)

தடந்த யங்குபொன் னாட்டினிற் றானென
நடந்து கொண்டவ னன்னெறி நற்பத
மிடைந்து கெட்டிபு லீசென் றெரிநர
கடைந்த தும்மிவர் தம்பொருட் டாலென்பார். (91)

எந்நி லத்தினு மிக்குய ரேந்தெழின்
மன்னர் மன்னர்மு கம்மது தம்பத
நன்னி லத்தொடு நாம்புகழ்ந தேத்திடப்
பொன்னி னாட்டைப் புரந்தில ரென்னென்பார். (92)

பூவி னன்கலி மாவைப் பொருந்துற
நாவி லோதிய நம்மண வாளர்க
டாவி லெண்ணிறந தோரொடுந தாநமர்
சேவை செய்திடச் சேர்குவர் காணென்பார். (93)

கால மேகக் கவிகைபி னீழலோ
நீல மோநறை நான நிறைத்ததோ
கோல வார்குவ வுப்புயக் குங்கும
மாலை யூடுறை வண்டின மோவென்பார். (94)

மண்ணி டந்தெரி வின்றென வந்தடர்
பெண்ணி னங்கள் பெருத்திடு மாகையாற்
சுண்ண மும்மல ருந்திகழ் தோண் மிசைக்
கண்ணின் பேரொளி கான்றது காணென்பார். (95)

தெளிய வந்துறுஞ் சிந்தையர் சிந்தையி
னளிமெ லாமிகழ்ந் தாசையி னுவலா
லொளியெ லாமிவ ருள்ளுறை யாலிந்த
வெளியெ லாமந்த மெய்யுருக் காமென்பார். (96)

வார்த்த டக்கரி வண்முலை விம்முற
வேர்த்து நின்று வெதும்பிவெ தும்பியே
கூர்த்த தங்கருத் துள்ளுறை கொண்டலைப்
பார்த்த கண்கள் பறிப்பரி தென்பரே. (97)

மன்னைப் பார்த்து மதிமுகம் பார்த்துநின்
றென்னைப் பார்க்கிலர் காமென வேங்குவார்
மினைப் பார்த்த விளங்கிழை யார்களென்
றன்னைப் பார்த்தனர் காணவர் தாமென்பார். (98)

வண்ண வார்புய மன்னவர் மெய்யெழிற்
கண்ணி னூடுங் கரந்ததென் பாரசில
ரெண்ணி னூடு மிருந்ததென் பாரசில
ருண்ணி னைவொடு முற்றதென் பார்சிலர். (99)

ஏந்து கொங்கை யணியிழப் பார்சிலா
கூந்தல் சோரக் குழைநதுநிற் பார்சிலர்
காந்தி மேனி கரிந்திடு வாசிலர்
மாந்தி யாசை மயக்குறு வாசிலர். (100)

வேறு.

வானவர் மகளி ரின்னண மியம்பி மனத்துறு துயருழன் றலைப்பத், தேனிமி ரங்கலற் செழும்புயக் குரிசிற் செம்முகம் பருதிய தென்னக், கானமா நழலார் செவ்வரி வேற்கட் கணமெலா நெருஞ்சியை நிகர்ப்பத், தானவா ரணமும் பரிகளு மிடையச் சுற்றமுந தழீஇவரப் போந்தார். (101)

சலதரக் கவிகை நெடுநிழல் பரப்பச் சலதியிற் பல்லியங் கறங்கக் குலவிய கொடியுங் கவரியும் விரியக் கொலைமதக் களிறுக ணெருங்கப் பலகதிப் பரியு மரசரு மிடையப் பாவல ரினிதுவாழ்த் தெடுப்பக் கலைவலர் குவைவி தினிதலங் கரித்த கடைத்தலைக் காவணம் புகுந்தார்.

வரைதிரள் வயிரப் புயமுகம் மதுகன் மணமலர்க் காவணம் புகுதந்த், திரையினிற் பிறந்த வமுதெனு மொழியார் செழுமணித் தீபங்க

ளேந்த, விருபுற நெருங்கி யபினிசீர் சுழற்ற வெண்ணில ராலத்தி யெ
டுப்பப், பரவையின் மறையுங் குரவையுஞ் சிலம்பப் பரியைவிட் டிறங்
கின ரன்றே. (103)

பணித்தொகை சுமத்தி யிளைத்தநுண் ணிடையார் பங்கயக் கரப்
பணி நீரான், மணிப்பதம் விளக்கித் துகிலினாற் றுடைத்து வரிசையின்
முறைபல பணித்தார், துணர்ப்பசுங் கொழுந்து மலர்களுஞ் சொரிந்த
தூநறைப் பாயலி னடந்து, கணிப்பருங் கதிர்கள் பாய்மணித் தவிசின்
முகம்மது கவின்பெற விருந்தார். (104)

அமரர்விண் ணுலகும் புவனமும் விளக்கு மணிவிளக் கெனுங்கதி
ரவைத், தமனியத் தசும்பு நனிவிரை கமழ்ந்த தண்ணறும் புதுப்புன
லாட்டி, யுமிழ்கதிர்க் கொடியை வெண்ணிலாக் கலைவந் துடுத்தபோற்
கலையெடுத் துடுத்திச், சுமையிருட் காவின் முகிறவழ்ந் தென்ன சுரி
குழற் கதிர்ப்புகை கமழ்த்தி. (105)

இருட்குல மனைத்தும் பிடித்தொரு தலத்தி லிருத்துவ தெனக்
குழ லிறுக்கி, யருட்டமுண் டறாகாற் சுரும்பின மலம்ப மலங்கலை யில
ங்குற வணிந்து, திருத்திய முகிலிற் சசிக்கிடை கதிருஞ் சேர்ந்தெனத்
திருப்பிறை தரித்துப, பொறுத்திளம் பிறையில் விரிச்சிகன் கதிர்கள்
புரண்டென நுதற்கணி புனைந்தார். (106)

வள்ளையைக் கிழித்துக் குமிழினைத் துரந்த மதர்விழிக் கஞ்சன
மெழுதிக், கொள்ளைவென கதிர்விட் டுமிழ்மணிப் பணியைக் கொழும
டற் குழைமிசை சுமத்தித், தெள்ளிய பணிலச் செழுமணிக் கழுத்திற்
றிரள்பணித் தொகைபல திருத்தி, விள்ளரும் பசிய கழைக்குலம் பொ
ருவா விளங்குதோ ளணிபல தரித்தார். (107)

காவளை தரித்து விரலணி பொருத்திக் கதிர்கொண்மே கலைபல
புனைந்து, சரணினைச் சிலம்புஞ் சிலலரிச சதங்கை தருசிறு சிலம்பொடு
தரித்து, விரிகதிர்ப் பவளக் கொடியெனும விரல்கள விளைந்தபொன்
மணிப்பணி செறித்துப், பருதியின் காங்கண் டுவக்குறும் வனசப் பத
த்தலத் தகமெழு தினரே. (108)

மறுவியும் புழுகுஞ் சுண்ணமுஞ் சாந்தும் வடித்தபன் னீரொடுங்
குழைத்துப் பொறிநிகா பொருவாச செழுங்குழை யமிர்தப் பொலன்
றொடி மெய்யினிற் பூசிச், சிறுநுதற் பெருங்கட் குவிமுலைச் செவ்

வாய்ச் சேடிய ரிருமருங் கீண்டிக், கறைதவிர் மதியந் தொழுமுழு மதி
க்குக் கலந்தகண் ணெச்சிலுங் கழித்தார். (109)

செறிந்தசந் தனமுங் கலவையும் புழுகுஞ் சிலதியர் தட்டினி
லேந்த, வெறிந்தசா மரையின் கதிர்கள்கொப் பளிப்ப விலங்கிழை
யிருளைய ரேந்த, வுரைந்தபா ளிதம்பா கிலையெடுத் தேந்தி யொருங்
கினிற் சிலதிய ருதவ, நிறைந்தபூண் சொரிந்த கோடிகஞ் சுமந்து நின்
றனர் மடவிய ரொருங்கே. (110)

பேரழ கொழுகும் பெண்ணலங் கனியைப் பிரசமூ றியமொழிக்
கரும்பை, யாரணக் கடலுக் கமுதநா யகியை யரிவையர் முறைமுறை
வாழ்த்திப், பாரினிற் செறித்த மலர்மிசை நடத்திப் பல்லிய முரசொடு
கறங்க, வார்பொரு முலையார் முகம்மது மருங்கின் மணித்தவி சிடத்
திருத் தினரே. (111)

பொருவருங் கதிர்விட் டெழும்பொருப் பிடத்திற் பூத்தகொம்
பிருந்தது போன்றுங், தெரிதரு மறியின் றருநிழ லுறைந்த செழும்
பொறைப் பசுங்கிளி யெனவு, முருகவிழ் மலரிற் றேன்றுளித் தெனவு
முகம்மதி னிடத்தினிற் கதீஜா, பரிவுட னிருப்ப வமரருங் களிப்பச்
செல்வமும் படர்ந்தெழுந் தனவே. (112)

இருகிளை யவருஞ் சம்மதித் தைந்நூ றிரசித மகரெனப் பொருந்
திக், கருமுகிற் கவிகை முகம்மது தமக்குங் காரிகை கனங்குழை தம
க்கு, மருமலர் தொடையல் புனைபுதிக் காகை மணத்துடன் முடித்திடு
மென்னப், பெருகிய ஹாஷிம் குலத்தவ ரனைத்தும் பிரியமுற் றுரைத்
தன ரன்றே. (113)

முதியவ ருவந்து நீகிமுன் மார்க்க முறைப்படி சடங்குகண்
முடிப்ப, மதிவலர் குவைலி தகமகிழ்ந் தெழுந்து முகம்மதின் செழு
மணிக் கரத்திற். புதுமதி வதனச் செழுங்கொடிக் கதீஜா பொன்மலர்க்
கரத்தினைச் சேர்த்திக், கதிர்மதி யுளநாள் வாழ்கவென் றிசைத்துக்
கண்களித் தினிதுவாழ்த் தினரே. (114)

செறிதரு மடவார் குரவைக ளிம்பத் திரளொடு பல்லிய மார்ப்ப,
வறிஞினர் வாழ்த்த வாணர்க ளேத்த வந்தரத் தமரர்கள் களிப்பக்,
குறைவிலா துயாநது தழைத்தினி தோங்குங் குலக்கதீ ஜாவெனுங்
கொடியு, மறைபடா தெழுந்த மதிமுகம் மதுவு மணவறை புகுந்தன
றன்றே. (115)

மணிகொழித் ததிருந் திரைக்கட லனைய மனமகிழ் வொடுமுகம் மதுவும், பணிபட ரவனித் திலத நாயகியும் பன்பலர் பளிக்கறை புகுந்து, கணிபடா வழகு கண்களிற் பருகிக் கருத்தெதன வுயிருமொன் ருகி, யணிகிள ரின்பப் பெருக்கெடுத் தெரியு மாகந்தக் கடற்குளித் தனரே. (116)

திண்டிறற் புயியின் முகம்மது தமக்குத் திருவய திருபத்தைந் தினின்மேற், கண்டதிங் களுமோ ரிரண்டுநா ளிரண்டிற் கனகநாட் டவர்கள்கண் களிப்ப, வெண்டிசை முழுதுந் திருப்பெயர் விளக்க விருநில மணிக்கதீ ஜாவை, வண்டுறை மாவச் செழுந்தொடை புனைந்து வரிசைமா மணம்பொருந் தினரே. (117)

அரவினை வதைத்த காதல நபியு ரருங்காம் பொருத்திய நபியுார் பால்செறி சுரத்திற் புனறரு நபியுார் பணிபணிந் திடவரு நபியுார், வரியளி யலம்பும் புயனபுல் காசீ மனத்துறை வரிசைநந் நபியுார், தெரிமலர் கதீஜா நாயகி நபியுார், செல்வமுற் றினிதுவாழ்ந்திருந்தார்.(118)

மக்கமா நகருஞ் செல்வமும் வாழ மறைவலோ ரறனெறி வாழ்த் தக்கமெய்ப் புகழுங் கிளைஞரும் வாழத் தரணிநாற் றிசையினும் வாழ, மிக்கநன் னெறியோர் முகம்மதுஞ் சிறந்த விரைகமழ் பதாமுற் றிருந்த விக்குமென் மொழியா ரெனுங்கதீ ஜாவு மினிது றப் பெரிதுவாழ்ந் திருந்தார். (119)

மணம்புரிபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-23-க்குத்-திருவிருத்தம்-1205.



## கருபத்துல்லா வரலாற்றுப் படலம்.



தருமமனு நெறியறிவு பொறையொழுக்க மினையனவுந் தழைத்து வாழக், கருமுகிலின் செழுங்கவிகை நிழறோங்கக் குரிசிலகங் களிக்கு நாளில், வரிவிழிசெங் கனிதுவர்வாய்க் கொடியிடையார் புடைசூழ வளருஞ் செல்வம், பெருகுமிள மயில்கதீஜா ஸயினபெனும் பசுங்கிளியைப் பெற்ற றன்றே (1)

ஸயினபெனு மணியீன்ற வலப்புரிநே ரனையகுலத் தரும மாது, குயின்மொழி றுக்கையாவை யீன்றுமுக் குல்தூமை யீன்று

பின்னர், செயிரறநா லாவதிலாண் பிள்ளைகா சிமெனவோர் செம்
மலீன்று. நயமுறப்பின் னையுபெறுஞ் சேயீன்று தாகிறையு நல்கி
ஞரே. (2)

மன்றல்கமழ்முகம்மதர்க்கை யேழாண்டு நிறைந்ததற்பின் மறு
விலாத, மின்றவழ்வ தெனவொளிருங் கதீஜாநா யகியுதரம் விளங்கச்
சோதி,துன்றுமணி யெனப்பூவின் மடந்தையர்க்குஞ் சுவனபதித் தோ
கை மார்க்கு, மென்றுமா செனவிருப்பப் பாத்திமா வெனுமயிலை யீன்று
ரன்றே (3)

வேறு

ஆதி நாகன் றிருவுளத் தமரர்க ளிறங்கிப்
பூத லத்தினி லறமெனுந் தலநடுப் புகுந்து
சோதி யெங்கணும் பரந்திடக் கருபத்துல் லாவைத்
தீதி லாதுறச் சுவனமா மணத்தொடுஞ் செய்தார். (4)

அந்த நாட்டொடுத் தளவிடற் கருநெடுங் காலஞ்
சுந்த ரத்தொடு மமரர்கள் புகுந்தவண் டொழுது
புந்தி கூர்ந்துடற் புளகுற விறைவனைப் புகழ்ந்து
சந்த தம்மிவை தொழிலெனத் திரிந்தவண் சார்வார். (5)

ஆத நன்னபி யாமருல கிழிந்தவ ணடைந்து
மாதவ் வாவுட னின்புற வாழுமந் நாளிற்
காதல் கூர்தரக் கருபத்துல் லாவினைக் கடிதி
னேத முற்றிடா திடம்பெறப் பின்னியற் றினரால். (6)

முதிருங் கேள்விய ராதத்தின் மக்களின் முதியோர்
கருதி மிழ்ந்துகா ரணம்பல விளங்கு கஃ பவைப்
பிதிர்த ரும்படி கண்டதைப் பெலத்தொடு நிறுவி
யதிக மாய்ச்செய் துயர்த்தின ரழகொடு மிலங்க. (7)

உரந்த ரும்படி நின்றெழில் பிறங்கிட வொளிகள்
பிரிந்தி டாதகஃ பாவெனும் பேரின்பத் துறையை
விரிந்த காரண நூகுதங் காலத்தில் விண்மட்
டிரைந் தெறிந்திடும் பிரளயத் திடிந்ததை யன்றே. (8)

நிறைந் திலங்கிய திடிந்தது கிடந்தது நெடுநாட்
பிரிந்த நூகுதம் பதினொரு தலைமுறைப் பின்னர்

துறந்த பேரிபு றுகிம்நன் னபியெனுந் தூயோர்
சிறந்தி லங்கிடக் கருபத்துல் லாவினைச் செய்தார். (9)

கன்னல் வேலிமக் காபுரக் கருபத்துல் லாவை
நன்ன யம்பெறு நெறியிபு றுகிம்நன் னபிக்குப்
பின்ன மாலிக்கத் தென்பதோர் கூட்டத்திற் பெரியோ
ருன்ன தம்பெற விடம்பெறச் செய்துயர்த் தினரே. (10)

அறப மாலிக்கத் தென்பதோர் கூட்டத்துக் கணித்தாய்ச்
சுறுகு மென்னுமக் கூட்டத்தி னரசர்கள் சூழ்ந்தே
யிறைவ னோர்வழிக் கருபத்துல் லாதனை யியல்பாய்
மறை படாதொளி பொருக்கிடச் செய்துவைத் தனரே. (11)

விசய மிக்குயர் சுறுகுமாங் கூட்டத்தின் வீரர்
திசைவி ளங்கிடச் செய்தன ரிருந்தது சிலநா
ளிசைய நல்லெழிற் கருபத்துல் லாதனை யிறக்கிக்
குசையு வென்பவ ரதிகமா யியற்றினர் குறித்தே. (12)

பெருகு நற்குலக் குசையெனும் வேந்தற்குப் பின்னர்
முருகு பூம்பொழின் மக்கமா நகரியின் முதிர்ந்து
செருகு மாமழைத் தாரையிற் பிரளயஞ் சிதைப்பத்
தருகை மன்னவர் குறைஷிகள் செய்துவைத் தனரால். (13)

கணம ணித்திரள் கதிருமிழ் கருபத்துல் லாவைப்
பிணைய முங்கிய புயவரைக் குறைஷிகள் பெரிதா
யிணைபி றப்பதற் கிலையென வெழிலொடு மிலங்க
மணமு றும்படி செய்துவைத் திருக்குமந் நாளில். (14)

அருளி லாமனக் கொடுங்கொலைக் காவிட ரடுத்துப்
பொருளங் குண்டெனக் கருபத்துல் லாநடுப் புறத்திற்
றிருடுங் கன்னம்வைத் தறப்பறித் தடிமதிள் சிதைப்ப
விருள றுங்கதிர் மேனிலை யொடுமிடிந் ததுவே. (15)

புடைப் பறித்ததி னுட்படச் சோதனை போக்கி
யுடைப் பெரும்பொரு ளில்லெனக் காவிட ரொதுங்கி
யிடைப்ப டாததற் கிசைந்தன மெனமென மிடைந்து
துடைப்ப ரும்பெரும் பழிசுமந் தயலினிற் போனார். (16)

கறைபி லாமுழு மதியெனுங் கருபத்துல் லாவைக்
குறைஷி மன்னவ ரனைவரு மொருங்குறக் கூண்டு

நறையு றுஞ்சுவை மதிடனை நாலுபங் காகத்
துறை பெறும்படி பிரித்துச்செய் தொழிணிந் தன்றே. (17)

வசை யிலாக்குலக் குறைஷிக ளனைவரு மதித்துத்
திசையும் வானமும் போற்றிய செவ்விய கசுறி
லசுவ தென்னுமக் குவட்டினை யணைத்தெடுத் தசையா
திசையுந் தானத்தில் வைத்திடு பவரெவ ரென்றார். (18)

அன்ன காலையிற் செவ்விய நெறிபணி ஹாஷீ
மென்னும் வங்கிடத் தொருவரிப் பள்ளியி னிடத்து
முன்ன தாகவந் தவர் நிறு வுவரென முதலோன்
பன்னு மாமறை தெளிந்தவா சிலர் பகர்ந்தனரே. (19)

ஈது நன் றெனக் குறைஷிக ளனைவரு மிசைவுற்
றோதும் வேளையி லகமலர்க் களிப்புட னுலவித்
தூத ராகிய முகம்மது மவ்வுழித் தோன்றச்
சீத வொண்கம லானனங் குளிர்தரச் சிறந்தார். (20)

நீங்கி டாக்கனற் சுரத்திடை நிறைபுன லளித்து
வேங்கை யோடுரை பகர்ந்தசெங் கதிர்வடி வேலோய்
பாங்கி னிற்கருங் குவட்டைமுன் பதித்திடுந் தலத்திற்
றூங்கி வைத்திடு மென்றனர் நிலைபெறுந் தலத்தோர் (21)

உரைத்த தங்குல மன்னவ ருளங்களிப் பேற
வரைத்த டம்புய மேனூறு போர்வையை வாங்கி
விரித்து நன்குறு துகிலிடை நாப்பணின் விளங்கு
விருத்தி னூர்செ ழுங் கரத்தினிற் கருங்கலை யெடுத்தே. (22)

வெற்றி மன்னவன் றலைவரி னூல்வரை விரித்துப்
பொற்ற டந்துகின் முந்தியி னுன்கினும் பொருந்த
விற்று ருவகை யெடுமென விவரொடு மெடுப்பக்
குற்ற மின்றிமுற் றலத்திடை யிருத்தினர் குறித்தே. (23)

வலிய வீரர்க ளுரைத்திடும் படிமுகம் மதுவு
நலிவி லாதெடுத் திருத்திய நறுங்கருங் குவட்டை
யொலிகொ ளும்படி தொட்டுற முத்தமிட் டுவந்து
நிலைத ரும்படி சதுர்தா மதிணிறு வினரே. (24)

பொன்ன கத்திலுந் தீவினும் பூவினும் பொருவா
மின்னி லங்கிய மக்கமா நகரினில் வியப்பா
மன்னவர் மன்னவர் மதித்திடச் சிறந்தகலீ பாவை
முன்னி ருந்தின் மும்மடங் கெனும்படி முடித்தார். (25)

———*———

கருபத்துல்லா வரலாற்றுப் படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-24-க்குத் திருவிருத்தம்- 1240.

——%*%——

# விலாதத்துக் காண்டம்.

முற்றுப்பெற்றது.

காண்டம் - 1-க்கு படலம்-24.

இதிற் கூடிய திருவிருத்தம்-1240.

இனி நுபுவ்வத்துக் காண்டம் வருவது காண்க.

———*———



இரண்டாவது,

# நுபுவ்வத்துக் காண்டம்.

## நபிப்பட்டம்பெற்ற படலம்.

---

சோதியா யெவைக்கு முள்ளுறைப் பொருளாய்த் தோற்றமு மாற்றமுந் தோன்று, வாதிதன் பருமான் கொண்டினி தோங்கிய மரி யிந் தமாருக் காசன், மேதினி புகுந்து முகம்மது தமக்கு விளங்கிய நபியெனும் பட்டங், கோதறக் கொடுப்பத் தீன்பயிர் விளைந்த கூறெ லாம் விரித்தெடுத் துரைப்பாம். (1)

புள்ளிவண் டருட்ட முண்டிசை பயிலும் பொழிறிகழ் மக்கமா புரத்திற், றெள்ளிய குறைஷிக் குலத்தினி லுதித்த செம்மலுக் குறைந்த போரண்டு, விள்ளருங் கணக்கா றலிரண் டதின்மேல் மேலவன் றிருவு ளப் படியால், வெள்ளிடை யதனிற் சிறிதொளி திரண்டு விழித்திடும் விழிக்கெதிர் தோன்றும். (2)

தெரிதிடு மொளியைத் தம்மிரு விழியாற் றெரிதர நோக்குவர் காணு திருந்திடும் பின்னுந் தோற்றிடு மிதனை யெவரொடும் விடுத்தெ டுத் துரையார், பொருநதுளக் களிப்பு மச்சமும் பிறப்பப் புநதியிற் றேர்குவர் பொருவாக் கருந்தலைக் கவைநா வரவுட றடிநத கவின்கர தலமுகம் மதுவே. (3)

திசையனைத் தினுமந தாத்தினு மிருந்த திசையினு மிரவினும்பக லு, மிசையுறச சிறிதுதொனிகளே பிறக்குமெதிரநது நோக்கிடி லுருத் தெரியா, தசையினும் பிரியா தடுத்துறைந் தவர்தஞ் செவியினு மத் தொனி சாரா, வசையறுங் குறைஷிக் குலத்துறுங்குரிசின் மனத்தினி லதிசயம் பெறுவார். (4)

இவ்வணஞ் சிறிது பகனிகழ்ந் ததற்பி னெழில்பெறும் வரிசிலைக் குரிசின், மைவண விழியா ரிடத்தினி லுறைபா மற்றொருவரை யுடன் கூட்டாச், செவ்வணக் கருத்திற் றனியிருப் பதற்கே சிந்திக்கு மதன் படி தேறி, யெவ்வரை யிடத்துங் காலினி லேகியெழில் பெறத் தனித் தனி யிருப்பார். (5)

உலகினிற் பிறந்து வருமெழு வகைக்கு முயிரெனுஞ் சலதாக் கவிகை, நிலைபெறு நிழலார் முகம்மது தனித்து நிரைகிரா தவழ்கிரு மலையி, னலனுற வுலவி மனனுறும்படியே நாலுநா ளிரண்டு நாளிருநது, சிலையென வளைநத சிறுநுதற் கதீஜா திருமனை யிடத்தினில வருவார்.

வரிசைக்குங் கதிக்கு முதற்றிருத் தலமாய் மதித்திட வருங்கிரு மலையி, லுருசிக்கும் கனிவாய் மடமயிற் கதீஜா வுடன்வர முகம்மது மெழுந்து, தெரிசிக்கப் பொருநது மமார்தம் முருவுந் தெரிந்திடா தவ ணிடை யிருந்து, பரிசுத்த மனைய குயிலொடுந் தாமும் பகற்பொழு தாற்றியே வருவார. (7)

மக்கநன் னகருந் தெருத்தலை மதிளும் வழியிடை கிடக்கும் கல் லனைத்தும், புக்குநல் லிடத்திற் றெரிந்தெவை யெவையும் புகழொடு முகம்மது தமக்குத், தக்கநற் பொருளா யுறுசலா முரைக்குந்தனித் தொனி யிருசெவி தழைப்ப, மிக்கமெய்ப் புதுமை தனை யுணர்ந்து ணர்ந்து மிகக்களித் ததிசயித் திருப்பார். (8)

முருக விழ்புய வள்ளலுக் குறும் வருப முப்பதிற் றொன்பதின் மேலாய்த், தெரித ருநதிங்க ளாறுஞ்சென் றதற்பின றினநதொறும் புதுமைய தாக, மருமலர்ச செழுநதார்க் கனங்குழற் கதீஜா வெனு மயின் மணமனை யிடத்தி, லிருவிழி துயில மண்ணிடை தோன்று தெ ழில்பெறக் கனவுகள் காண்பார். (9)

வெண்டிரைக் கடலி லமுதமும் பொருவா வியனுறு மெல்லிதழ்க் கதீஜா, கொண்டுறு மயலு ளுயிரினு முயிராய்க் குலவிய முகம்மது நயினார், வண்டுறை மலாப்பஞ் சணையிசை பொருநதி மறுவிலா தொ ளிர்மதி முகத்துக், கண்டுயில பொழுதிற் கனவுக ளனைத்துங் கண்டது கண்டதாய்ப் பலிக்கும். (10)

துய்யவ னருளா லாதமா மனுவாய்த் தோன்றிய வவணியின்வருட, மையமி லாறு யிரத்தினி லொருநூற் றிருபத்து மூன்றினி லழகா, வையக மதிக்கு முகம்மதின் வயது நாற்பதில் றபீவுலவ்வலினி, லெய் திய வெடாந் தேதியிற சனியி னிரவினிற் கிறுமலை யிடத்தில். (11)

நித்தில நிரைத்த விருசிறை யொழுங்கு நீணிலாக் கதிர்கள் விட் டொழுக, வித்துரு மத்தாள் சிறந்தனி திகழ வில்லுமிழ் காந்

கிடந் திலங்கப், பத்திவிட் டெறிக்குஞ் செம்மணி யிருகட் பார்வையிற் கருணையிற் றிருக்கச், சித்திர வடிவைச் சுருக்கிமா னுடர்போற் ஜெபு றயீ லவ்விடத் தடைந்தார். (12)

வேறு.

மானுட வடிவாய் வந்த வானவர்க் கரசன் செவ்வி
யானனக் குரிசி லென்னு மகுமதின் வதன நோக்கி
நானமுங் கியமெய்ச் சோதி நாயகா வரையின் கண்ணே
தீனுற விருக்கின் றீரோ வென்றுசே ணடைந்தா னன்றே. (13)

மற்றைநாட் பருதி ராவில் கிருமலை யிடத்தில் வானோர்
கொற்றவ ருறைந்து வள்ளற் குவவுத்தோள் வனப்பு நோக்கி
யுற்றவென் னுயிரே நீரிங் குறைந்திநி ரோவென் றோதி
வெற்றிவெண் விசும்பி லேறி மேலுல கிடத்திற் சார்ந்தார். (14)

விண்ணகத் தரசர் தோன்றும் விதிமுறை யறியா வள்ளன்
மண்ணகத் திவரை நேரும் வனப்பினில் விசையி லந்தக்
கண்ணகன் வானநாட்டுங் காண்குற வரிதே யென்ன
வெண்ணமுற் றிதயத் தாராய்ந் திருப்பிடம் பெயர்ந்தி ராரால். (15)

வரிசைநேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாளிற்
றெரிதர விளங்குந் திங்க ளிரவினிற் சிறப்பு மிக்கோ
னருளினில் ஜபுற யீவ்வந்து தருவரை யிடத்தின் வைகுங்
குரிசிறன் கமலச் செங்கண் குளிர்தர வெதிர்ந்து நின்றார். (16)

நானிலம் பரப்புஞ் சோதி நாயகக் கடவு டம்மை
வானகத் திருந்த சோதி வந்துசந் தித்த தேபோற்
கானமர் துண்டச் செங்கட் கலைநிலாத் தவழு மியாக்கை
யீனமில் ஜபுற யீல்வந் திறையவன் சலாமுஞ் சொன்னார். (17)

மரகதப் பத்தி கோவை வச்சிரத் தாரை சாத்தி
யுரகமா மணிக ளொப்ப வொளிபெறக் குயிற்றி வெள்ளைத்
தரளமென் புருட ராகம் பலமணி தயங்கத் தாக்கிச்
சொரிகதிர் பரப்புஞ் சோதித் துகிலினைக் கரத்திற் கொண்டார். (18)

ஜெகமதில் விண்ணி லொவ்வாச் செழுந்துகி லதனை யேந்தி
யகமகிழ்ந் தினிது போற்றி யமரருக் கரசர் வாய்த்த
முகமதி நோக்கி யாதி முறைமறைக் கலிமா வோதி
முகம்மதை விளித்துச் செவ்வி வலக்கரத் திடத்தில் வைத்தார். (19)

மறைமலர் வதனச் சோதி முகம்மதின் காத்தில் வானோ
ராசர்மிக் குவளை கூர்ந்தவ் வணிதுகி லிருத்தும் போதிற்
றிரைமுகில் வரையும் விண்ணுந் திகாந்தமு நடுவு மீக்கொ
ளிரைசட லேழும் பாரு மிலங்கொளி விரிந்த தன்றே. (20)

மண்டலம் புரக்குஞ் செங்கோன் முகம்மதின் வதன நோக்கி
விண்டலம் பரவும் வேத நபியெனும் பட்ட நும்பாற்
கொண்டலே குதாவின் றீந்தா னெனுமொழி கூறிப் பின்னு
மண்டர்வாழ்த் தெடுப்பச் செவ்வி யாரணம் புகறி யென்றார். (21)

செப்பிய வசனங் கேட்டுச் செபுறயீல் முகத்தை நோக்கி
முப்படி விளங்கும் வண்ண முழுமணிக் குரிசி லேயா
னிப்பெரும் புவியிற் றீட்டு மெழுத்திலொன் றறியே னாதி
யொப்பரும் வேத மென்ப தோதினே னல்ல னென்றார். (22)

சிறைநிறஞ் சுருக்கித் தோன்றுஞ் செபுறயீல் முதலோன் கூறு
முறைவழி முகம்ம தன்பான் முன்னிருந் திருகை யார
விறுகுறத் தழுவிப் பின்ன ரியம்புமென் றியம்பத் தோன்றன்
மறைமுதல் வசன நாவின் வழக்கின னல்ல னென்றார். (23)

எதிரிருந் தாசர் பின்னு மிடருறத் தழுவி நோக்கி
மதியினு மிலங்குஞ் சோதி முகம்மதே யோது மென்னப்
புதுமையி னரிய பேறே புவியிடத் தரிய வேதங்
கதிபெறக் கண்டுங் கேட்டுங் கற்றறிந் திலனியா னென்றார். (24)

கேட்டவா னவர்கோ மானுங் கிளரொளி வனப்பு வாய்ந்த
தோட்டுணை நெருங்க வுள்ளந் துனிவர விடலஞ் சோரப்
பூட்டிய கரங்கள் சேப்பப் புல்லிநந் நபியை நோக்கி
மீட்டுமெய்ம் மறைநூன் மாற்றம் விரித்தெடுத் தியம்பு மென்றார். ()

நெருக்கிவிட் டதற்பின் வேத நெறிநபி யுள்ளத் துள்ளே
திருக்கிளர் புவியில் விண்ணோர் தெரிதரு மறிவு முன்னா
விருக்கினி லறிவுந் தோன்றி யிடனறப் பெருகிநல்லோ
ருருக்கொளு மரசை நோக்கி யோதவேண் டுவதே தென்றா. (26)

மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பலின் னவர்கள் கோமா
னிக்றவு வெனுஞ்சூ றத்தி லிருந்துநா லாயத் தின்ப
மெய்க்குற மாலம் யௌல மெனுமட்டும் விளம்பு வீரென்
றொக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி னரால், (27)

எழுத்தினிற் றவறுச் சொல்லி னியன்முறை சிதகா வின்பம்
பழுத்தபண் ணொலியாற் றீய்ந்த பயிருயிர் பெறுவதாகச்
செழித்த மெய் * ஐபுற யீல்தஞ் செவியகங் குளிரக் கல்வி
யழுத்திய பொருளுட் டோன்ற அகுமது மோதி னால். (28)

உறைந்தமெய்ம் மறையின் றீஞ்சொன் முகம்மதாண் டுரைப்பச்
செவ்வி, யறந்தழைத்தன நன்மார்க்கத் தரும்புவி தழைத்தவெற்றித்
திறந்தழைத் தனவிண் ணோர்கள் செயறழைத் தனதி காந்தப்
புறந்தழைத் தனநந் தீனின் புகழ்தழைத் தோங்க வன்றே. (29)

பறவைக ளினங்கள் போற்ற விலங்கினம் பலவும் போற்ற
வுரைதருந் தருக்கள் போற்ற வூர்வன வெவையும் போற்ற
நிறைதரு மலகை போற்ற நிரைதிரைப் பரவை போற்ற
மறைவிலா தமரர் போற்ற முகம்மது மோதி னால். (30)

உயிரினுக் குயிராய் வந்த முகம்மது முரைப்பக் கேட்டுச்
செயிரறு ஐபுற யீல்தம் மெய்மயிர் சிலிர்ப்ப வோங்கி
முயலகன் மதியம் போன்ற முகம்மதைப் போற்றி வேக
வெயிலவன் கதிரிற் றாண்டி மேலுல கிடத்திற் புக்கார். (31)

அரியவன் றூத ரான அகுமது கலக்க முற்று
மருமலர்ச் சோலை சூழ்ந்த மால்வரை யிடத்தை நீங்கி
யெரிபகற் கதிர்க்கா றேன்று விரவினிற் றனித்து வல்லே
விரிகதி ருமிழும் பைம்பூண் மின்னகத் திடத்திற் சார்ந்தார். (32)

வேறு.

நடுக்க முற்றுமெய்ச் சுரத்தொடுங் குளிர்தர நலிந்து
மிடுக்க கன்றிடப் பயத்தொடு மரிமையை விளித்துத்
திடுக்க முற்றது துகில்கொடு பொதிமனந் தெளியா
துடுக்க ணியாதென வறிகில னென்றன ரிறசூல். (33)

தலைவர் கூறிய மொழிசெவி புகவுட றயங்கி
நிலைகு லைந்தெழுந் தயர்வொடு நெட்டுயிர்ப் பெறிந்து
பலம லர்த்தொடை செறிந்தபஞ் சணைமிசை படுத்திச்
சலவை கொண்டுறப் போர்த்தரு கிருந்தனர் தையல். (34)

* ஜிபுரீல் விளம்புவிரென்று மாலம்யெளலம் எனுமட்டு முணர்த்தினர், முகம்மதுமோதினரென்றிறந்ததுதழீ இயவெச்சவும்மையாகக் கொள்க.

னொந்து மெய்யகம் பதறிடக் கணவனை நோக்கி
யெந்த னுருயி ரேபிக லடலரி யேறே
சிந்தை சிந்திமெய் திடுக்கொடு மதிமுகந் தேம்ப
வந்த வாறெவை யுரைக்கவென் றுரைத்தனர் மடமான். (35)

மலையி னுச்சியி னிருந்தது மொருவர்வந் தடுத்து
நிலைபெ றுந்துகில் காத்தளித் துரைத்தது நெருங்க
வுலைவு றத்தனி யணைத்தது முரைத்துளப் பயத்தா
லலம லர்ந்தன னென்றன ராசருக் கரசர். (36)

துணைவர் கூறிய மாற்றமு மறைகள்சொற் றதுவு
மிணைப டுத்திநேர்ந் தின்பமென் றுளத்தினி லிருத்திப்
பிணையை நேர்விழி கனிமொழு சிறுபிறை நுதலா
ரணையுந் தம்வயின் றுனிபல வகற்றின ரன்றே. (37)

தாங்கு மெய்ப்பொரு ளறிவருள் குணந்தய விரக்க
நீங்கி டாதறம் பெருகிட வளர்க்குநன் னெறியீ
ரோங்கு மாநிலத் திடத்துறை பவர்களா னுமக்குத்
தீங்கு றாதென வுரைத்தனர் மடந்தையர் திலதம். (38)

சிந்து தேன்மொழிச் செழுங்குயில் தூதெனுந் திருப்பேர்
வந்த தாமெனத் தெருளுற முகம்மது நயினா
ருந்து வெங்குபிர் களைவதித் தாமென வுயர்வா
னிந்து நேரிரு ளொடுக்கிவிண் ணெழுந்தன னிரவி (39)

நிறக்க ருங்கழு நீர்குவி தரநிறை வனசந
திறக்க மெல்லிதழ் வெய்யவ னெழுந்தபின் றிருவு
முறக்கத் தென்னுமவ் வேந்தனைக் கொணர்கென வொருவ
னறக்க டும்விசை கொண்டெழுந் தேகின னன்றே. (40)

மடங்க லேறெனு முகம்மதும் வரிபரந் திருண்ட
விடங்கொள் வேலினை நிகர்த்துமை பொருவிழி மயிலு
முடன்க லந்தினி தழைத்தனர் வருகவென் றுணர்வு
துடங்கு மும்மறை தெளிந்தவற் குரைத்தனன் றூதன். (41)

பழுதி லாக்குலப் பாவைதம் பாலினிற் பரிவா
யெழுக வென்றன ரென்றசொற் சிரமிசை யேற்றி
வழுவி லாமறை வுறக்கத்தென் றேகிய வள்ள
றழுவு மெய்க்கதிர் முகம்மது மனைவயிற் சார்ந்தான். (42)

கற்ற வேதியன் வருதலுங் கிளிமொழி கதீஜா
பொற்றொ டிக்கரஞ் சாயத்தில வுறைகெனப் புகன்று
மற்ற டப்புய முகம்மது வரையிடை புதுமை
யுற்ற செய்தியுண் டென்றன ரறிகவென் றுரைத்தார். (43)

பதியின் மிக்கநன் மறையவன் முகம்மதை நோக்கித்
துதிசெய் தும்முறை வந்தவா றனைத்தையுந் தொகுத்து
முதிர்த ரும்புக ழோயுரை கென்றலு முறையா
விதிய வன்றிருத் தூதர்நன் றெனவிளம் புவரால். (44)

வரையி னிற்றனி யிரவினி லிருக்கையின் மதியி
னுறையின் மிக்கவ ரொருவர்வந் தென்பெய ருரைத்துப்
பரிவி னுலிவ ணுறைந்தினி ரோவெனப் பகர்ந்து
விரைவி னின்மறு நாளுமவ் வுரைவிளம் பினரால். (45)

இருதி னத்தினு முரைத்தவர் மறுதினத் தெய்தித்
தெரிம ணித்துகி லெனதுசெங் கரத்தினிற் சேர்த்தி
யரிய நாயக னபி யெனும் பெயருமக் களித்தா
னுரிமை யீரினி யோதுமென் றுரைத்தன ருவநதே. (46)

ஓது மென்றசொற் கேட்டலு மோதின லலனென்
றோத முன்னிருந் திருகை னிறுக்கிமுன் னுரைபோ
லோது மெனறனும் பின்னரு மோதின னலனென
றோத மற்றுமென றனமிக விறுக்கின ருரத்தின். (47)

மறுத்து மோதுமென் றுரைத்திட மறுத்தனன் மறுத்து
மிறுக்கி யோதுமென் றுரைத்தன ரெதிரிருந் தெளியேன்
றிறக்க வோதுவ தெவையென வுரைத்தனன நீட்டா
தறத்தி னுட்படுஞ் சொல்லினைக் குறித்தெடுத் தறைந்தார். (48)

அந்த நல்லுரை கேட்டன னவருரைப் படியே
பிந்தி டாதெடுத் தோதினன் செழும்பொருள் பிறக்க
வெந்தை யீரெனப் போற்றிவிண் ணடைந்தன ரெழிலோய்
வந்த வாறிவை யெனவெடுத் துரைத்தனர் வள்ளல். (49)

புவியி னிற்பெரும் புதுமைய தாகிய பொருளாய்
நபியு ரைத்தசொல் லனைத்தையு மனத்தினி னயநது
குவித ருங்கதிர் செழுமணிக் கொடியிடை கதீஜா
செவிகு ளிரந்திட மனங்களித் திடப்பொரு டெரிவான். (50)

மலையல் வள்ளலும் மிடத்தினில் வரைமிசை யடைந்த
தலைவர் நாயகன் றாதரிற் ஜபுறயீல் சரதம்
பலக திர்த்துகில் காத்தளித் ததுநபிப் பட்டம்
விலக வோதுமென் றோதிய துமக்குறும் வேதம். (51)

உடலு லைந்திட விறுக்கிய துமதிடத் தினிமேல்
வடுவின் மும்முறை யிடுக்கண்வந் துற்றது மாறும்
படியி டத்திலும் மினத்தவர் பெரும்பகை விளைத்து
மிடரு றும்படி யூரைவிட் டெழத்துரத் திடுவார். (52)

என்ற விம்மொழி மறைபவ லுரைத்தலு மிசைத்தேன்
றன்ற மென்மலர்ப் புயநபி மனத்தினிற் றணுக்குற்
றொன்று மென்னினத் தவர்பகை யெனக்குவந் துறுமோ
வொன்று மோவென வுரைத்தலு முதியவன் புகல்வான். (53)

முன்னர் மாமறை நபியெனும் பெயர்முதி யவருக்
கின்னல் வந்துறு திலறும் மிடத்திட ரணுகா
நன்ன லம்பெறு நபிகளு யகமுநீ ரலது
மன்னு மானில நபியினு யிலையென வகுத்தான். (54)

மாத வத்துறும் பொருளெனு முகம்மது நபிதம்
பாத பங்கயத் திணைமிசை சிரங்கொடு பணிந்து
கோதி லாக்கதீ ஜாதமை யிருகரங் குவித்துத்
தீதி லாதெழுந் தேகினன் பலகலை தெரிந்தோன். (55)

நபிப்பட்டம் பெற்றபடலம்-முற்றிற்று.

படலம்-க-க்குத்-திருவிருத்தம்-55.



# தொழுகைவந்த வரலாற்றுப் படலம்.



உடையவ் னொருவன்ற னுண்மைத் தன்மையை
நடைவர விளக்கிநல் வழியி லியாரையு
மடைதர வழைத்திடற் கனுப்புந் தூதரொன்
றிடைவரு மமரகோ னீய்ந்த பட்டமே. (1)

ஒருத்தனு யகனவற் குரிய தூதெனு
மருத்தமே யுரைகலி மாவந் நிண்ணயப்
பொருத்தமே மானடை புனைத லாமமல்
திருத்தமே யிவையிக லாத்திற் சேர்தலே. (2)

இப்பொருள் பொதிந்ததோ நிறைமை தாங்கிய
மைப்புயல் கவிகையின் வள்ளல் தம்மிடத்
தொப்புற வொழுகுவார்க் குரிமை யார்க்கெலாஞ்
செப்பினர் வெளிப்படாச் சிறப்பிற் றாகவே. (3)

ஒருவனே நாயன்மற் றொழிந்த தேவத
மிருமையும் பேறிலா திழிவு கொண்டதென்
றருமொழி விளக்கலா லாய்ந்து நந்நபி
திருமொழி யுண்மையிற் சிந்தை செய்குற்றார். (4)

வல்லிய மெனுமுக மதுதம மாமணம்
புல்லிய புயலரை படர்ந்த பொற்கொடி
முல்லையங் குழற்கதீ ஜாமின் னேமுத
லில்லறத் தொடுமிசுலாத்தி லாயினார். (5)

மனுமுறை நெறிவழு வா அபூ பக்க
ரெனுமுகில் கண்டுயில் காலை யினபுறத்
தினகரன் மதிமடி யிருப்பச் செவ்விய
கனவுகண் டெழுநதகங் களிப்புற் றாரோ. (6)

இன்னதன் மையின்கன வியாது கொல்லென
மன்னிய மனத்தினன் மதியிற் றேர்குவர்
பன்னுவர் புதுமையிற் பலனுண் டாமென
வுன்னுவா தொளிந்தொரு வருக்கும் விண்டிலார். (7)

பொன்னகரத்தினும் புவியுங் காணுறா
நன்னல முண்டுநம் மிடத்தி லென்னவே
யின்னலைப் பிரித்தெறிந் தெழுந்து பொற்புற
மன்னவர் நபியுறை மனையி லாயினார். (8)

ஆரணக் கடவுளு மழகின் கன்னியும்
பூரண மனத்துட னிருத்திப் போற்றியே
தாரணி யிடத்தினிற் றனிய னாலுறங்
காரண மனைத்தையுங் கழறி னாரோ. (9)

அம்மொழி கேட்டட லரியபூ பக்கர்
தம்மனக் கனவையும் சார்ந்த செய்தியுஞ்
செம்மையி னுணர்ந்துளத் திருத்திச் சிந்தையில்
விம்மிதத் தொடும்புயக் களிப்பு வீங்கினார். (10)

சுரத்தினிற் பெருநதி யழைத்துத் தோன்றிய
சரத்தினிற் கட்செவி தடிந்து பாதகன்
கரத்தினைப் பொருத்திய காவ லாளரும்
வரத்தினை யெவரினும் வகுக்கற் பாலதோ. (11)

என்றுரைத் தருளிய வெழிலபூ பக்கர்
தன்றிரு மதிமுக நோக்கித் தாழ்விலா
வென்றிகொண் டுறங்கலி மாவை விள்ளுத
னன்றுமக் கெனநபி நவிற்றி னாரரோ. (12)

அருமறை நாயக நபிக ளானவர்
தெரிதரும் புதுமையின் வழியிற் சேர்த்துவர்
பெரியவன் றூதென வெனக்கும் பெட்புற
விரிதரும் புதுமையொன் றுவத வேண்டுமே. (13)

எனவுரைத் தவர்மனங் களிப்புற் றின்புறப்
புனைமலர்ப் பஞ்சணை பொருந்துங் காலையிற்
கனவுகண் டினிரது புதுமை காணென
வனமலர்த் தொடைப்புய முகம்ம தோதினார். (14)

சொல்லிய நனமொழி கேட்டுத் துன்புறு
மல்லலும் போக்கறுத் தடலபூ பக்கர்
செல்லுறழ் நபிதிரு நாமஞ் சீர்பெற
நல்லிய லொடுமிசு லாத்தி னண்ணினார். (15)

அந்தமி னாயகன் றூதர்க் கன்புறுஞ்
சிந்தையர் புழுப்புத் தாலிப் சேய்களிற்
சுந்தரப் புலியலி யென்னுந தோன்றலும்
வந்தனை செய்துதீன் வழியி லாயினார். (16)

அடிமையி லோங்கிய வறிவின் மிக்கவர்
வடிவுறும் ஆரிதா மதலை யாகிய
மிடலவர் சைதெனும் வீர கேசரி
யிடாறுங் கதியிசு லாத்தி லாயினார். (17)

இயன்மறை முறையொடு மிவர்க ளிங்ஙன
மயலவ ரறிவுறூ தடங்கி நன்னெறிச்
செயலென நாட்குநாட் டேர்ந்து தம்மன
மயலறத் தீனெனும் வழியிற் றேறினார். (18)

அறிவினிற் றெளிந்தபூ பக்க ரன்பொடு
முறவினிற் கிளைகளி னுற்ற பேர்களுக்
கிறையவ னபியிவ ரென்ன வேதநூற்
றுறையொடும் ரகசியச் சொல்லிற் சொல்லினார். (19)

செவ்விய ரிவர்மொழி சிதைதலி லாதென
வவ்வவர் கருத்தினு ளாய்ந்தவ் வாற்றிடைக்
கவ்வையங் கடனதி கடப்ப வன்றொரு
நவ்வியி னெழுநபி பதத்தை நண்ணினார். (20)

அலகில்வண் புகழபூ பக்கர் சொல்லினைப்
பெலனுறக் குறித்த னடைந்த பேர்க்கெலா
மலைவற வறத்தொடுஞ் சுவன வாழ்வெனு
நிலைபெற நல்வழி நிகழ்த்தி னாரரோ. (21)

பணவர வடர்ந்தவர் பகரக் கேட்டது
மணமனத் தொடுங்கதி வாழ்வுக் கீதொரு
துணையென நற்கலி மாவைச் சொல்லிநின்
றிணையிலான் றூதடி யிறைஞ்சி வாழ்த்தினார். (22)

கரும்பெனு நபிகலி மாவைக் காழுற
விரும்பிய பேர்களிற் றலைமை மிக்கவ
ரரும்புவிக் காசபு துற்றஃ மானுடன்
றரும்புகழ் சுபைறுதல் காவுஞ் சகுதுவும். (23)

அருமறைப் பொருட்குரை யாணி யாகிய
வரிசைநன் னெறியுது மானு மாசிலாத்
திருநபி பெயர்க்கலி மாவைச் செப்பிய
பரிசனத் தொடுந்தனி பழகு நாளினில். (24)

அண்டருக் காசிழிந் தடுத்தென் முன்னுரை
விண்டனர் போயினர் மறுத்தும் வெற்பிடை
கண்டிலம் மெனமனங் கலங்கிக் கார்கடன்
பண்டலம் புகழ்நபி வருத்த முற்றனர். (25)

குருநபிப் பட்டமே கொண்ட மேலவர்
வருவது நிகழ்வதும் வழுத்து வாரெனு
மிருநில மாந்தருக் கென்சொல் வோமெனப்
பருவா லடிக்கடி படர்வ தாயினார். (26)

மருப்புகுங் கருங்குழன் மடந்தை தம்மொடு
மிருப்பர்பின் றனித்தெழுந் திரவி னேகியப்
பொருப்பிடை வைகுவர் புகழ்ந்து விண்ணினை
விருப்பொடு நோக்குவர் மீள்வ ரெண்ணுவார். (27)

வாணுதற் குரைதா மறுப்பர் தம்முளம்
பாணியிற் சசியெனப் பதைப்பர் நல்லுரை
பேணினர் தம்முகம் பெரிது நோக்குற
நாணுவ ருயிர்ப்பர்மெய் நலிதல் கொண்டனர். (28)

என்னினி யுரைப்பதென் றெண்ணி யின்புறுந்
தன்னுயிர்த் துணைவியைத் தணர்ந்து நெஞ்சகந்
துன்னிய துயரொடு மெழுந்து சூன்முகின்
மன்னிய தடவரை முகட்டின் வைகினார். (29)

தனியவன் றாதெனச் சார்ந்து பூவிடை
நனிபெறும் புதுமைக ணடத்தலில் லெனிற்
பணிவரை நின்றுவீழ்ந் திடுதல் பண்பலா
லினியிருப் பதுபழு தென்னுங் காலையில். (30)

வாடிய பயிர்க்குறு மழையும் போற்றினந்
தேடிய பொருள் கரஞ் சேரு மாறென
வீடில்வா னவர்க்கிறை விரைவி னேகியக்
கோடுறை நபிவயின் குறுகி னாரோ. (31)

திண்ணிய பெருஞ்சிறைச் செபுற யீல்வரை
நண்ணிய முகம்மதை யடுத்து நன்குறு
தெண்ணமென் னுமக்கென வியம்பி யாவர்க்கு
முண்மைநீர் நபியென்ப துரைத்துப் போயினார். (32)

தன்னுடற் குயிரெனுந் தகைமைத் தாகிய
பொன்னகர்க் கிறைசொலும் புனித வாசகங்
கன்னலஞ் சுவையினுங் கனிந்த பாகென
நந்நபி செவிப்புக நடுக்க நீங்கினார். (33)

ஜகமதில் தீன்பயிர் தழைப்பத் தூநெறி
முகம்மதின் றிருப்பெயர் வளர மாசிலாப்
புகழொடுஞ் ஜபுறயீல் போற்றி யிம்மொழி
யிகலறப் பலதர மியம்பிப் போயினார். (34)

வேறு.

முருகுண் டறுகாற் சஞ்சரிக முரலும் புயத்தா ருசைனொ டரு
மைத், தவத்தால் வந்துதித்த அபுல்கா சிம்தன் செழுங்கரம் பொற்,
பெருகத் தருஞ்செல் லினக்குலங்கள் பிறங்கும் பிறங்கலிடத்திருந்த,
வரிசைநபியை நோக்கிப் பின்னும் வந்தார் வானோர் கோமானே. (35)

கலன்சூழ் கிரண மணிநாப்ப ணிருந்த கதிர்மா மணிக்குறைஷிக்,
குலஞ்சூழ் வரிசை நபிக்கமரர் கோமான் சலமுன் கூறியபி, னிலஞ்சூழ்
பரவைப் புறப்புவியு மிறைஞ்ச நெடியோன் றிருவருளாற், சொலும்சூ
றத்தில்மு ஸம்மிலெனுஞ் சுருதி வசன மிறங்கினவே. (36)

சிலம்பி லுறைந்த முகம்மதுவைத் திருந்து மமரர்கோமான்
கொண் டுலம்பற் றுறுஞ்சில னெறியினிழிந் துடனின் றரிதோர் மருங்
கணைந்து, நிலமிட் டுதிர மண்சிதற நிலவா மணித்தாள்கொடுகீண்டப்
பிலப்பட்டுறைந்த நறுஞ்சலிலம் பிறந்து குமிளியெழுந்தனவே. (37)

பெருகிப் பரந்த புனற்கரையிற் பெரியோன்றூதை யருகிருத்தி,
மருவு மலரு மெணவுலுவின் வகையுந் தொகையும் வரவருத்திக், குரிசி
னபியைப் பின்னிறுத்திக் குறித்த நிலோண் டிறக்கஅத்துப், பரிவிற்
றொழுவித் திருந்துவிண்ணிற் படர்ந்து சுவனத் தலத் துறைந்
தார். (38)

மறையார் நபிக்கி ரகசியத்தின் வணக்கம் படத்துக் கொடுத்தும
ணிச்; சிறையா ரமரர்க் கரசர்முகி றீண்டா விசும்பி னடைந்ததற்பி,
னறையார் கூந்தற் கதீஜாவை நண்ணி யுலுவும் வணக்கமுமுன், முறை
யா யுரைப்ப வுரைத்தபடி முடித்தார் கனகக் கொடித்தாயே. (39)

மாரி யருந்திப் பண்மிழற்றி வரிவண்டுறங்கு மலர்க்கூந்த, னரி
சுருதி முறைவணங்கி நளின மனங்கூர்ந் திருந்ததற்பின், மூரித்
திறலொண் சிலைக்கையபூ பக்கர் முதன் மற் றுள்ளோரு, மேருப் புயத்
தார் பெருவரத்தார் விரைத்தா மரைதாட்புகழ்ந்தடுத்தார். (40)

வந்த குறைஷிக் குலத்திலுறு படங்க லனைய முதியோர்தஞ் சிந்தை குளிர வானவர்கோன் றிருத்தி யுரைத்த வணக்கமுறை, யந்த மிலிதன் றூதரெடுத் தறைய நெறிநேர் வழுவாமர், பந்தி பெறநின் றூறுந்தொழுகை படித்தார் பாவந் துடைத்தாரே. (41)

வடுவைப் பகிர்ந்த கரியவிழி மயிலும் வரிசை நயினுரு, மடல்வெம் புரவிக் குரிசிலபூ பக்க ரலிசமீ துதுமானுந், தடவெண் கவிகைச் சுபைறுடுதல் ஹாவும் அப்து றகுமானும், புடைவிட் டகலாச் செழுந்தேனைப் பொருத்துஞ் சிறைவண்டெனத் தொழுதார். (42)

சீற்ற மடங்கா வரிவேங்கை திரியும் வனமுங் கொடுமடங்க, லேற்றை வெருவி விலங்கினங்க ளிருக்கு மிடமும் வரையிடத்து, தூற்று மருவிச் சாரலினுந் தோன்று திருண்ட மனையிடத்தும், வேற்றுச் சமயப் பயத்தொதுங்கி விதித்த தொழுகை முடித்துவந்தார். (43)

வேதப் பொருளாய்ப் பொருளொளியாய் விளங்கு முதலோன் றிருக்காட்சித், தூதென் றுதித்த முகம்மதுவுஞ் சுருதி நெறித்தீன் பெரியோருந், தீதுற் றுலக்குங் கொடுங்காபிர் தெரியா வண்ணமுவாண்டு, பேதப்படாதி ரகசியத்தின் பெரியோன் வணக்கம் பெருக்கினரே. (44)

தொழுகைவந்த வாலாற்றுப் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம் உ-க்குத் திருவித்தம்-99.



## தீனிலைகண்ட படலம்.



சீதவொள் கவிகை நீழ றிருந்திய குரிசி லானோர்
தூதென நபியின் பட்டந் துலங்கிய நான்கா மாண்டில்
வேதம்நல் வணக்க மியார்க்கும் விரித்துற விளக்கு மென்ன
வாதிதன் பருமான் மேற்கொண் டமார்கோன்ரைத்துப்போனார். (1)

பொருப்பிடத் தொளித்தும் வாழாப் புறமனை யிடத்தும் புக்கி
யிருப்பது தகாதென் றுயத் திறங்கிய தென்னக் கேட்டு
மருப்பருங் காடக் கைமா மதர்த்தன மதர்த்து வீரர்
தெருப்புகுந் தெவர்க்குந் தோன்றத் தீனிலை வணக்கஞ்செய்தார். (2)

நீருறை யிடத்துஞ் செவ்வி நிழறிக ழிடத்தும் வாய்ந்த
பேரொளி மாட வாயும் பெருகுமண் டபத்தின் சார்புங்
கூருநல் லறிவி னோடு மறயிகள் குலத்து வேந்த
ரீரமுற் றுருகி நெஞ்ச மிணங்குற வணங்கி நின்றார். (3)

ஆரணத் துளுவும் வாய்ந்த வறிவுமந் திரத்தின் வாயும்
பூரண நிலைநின் றங்கை பொருந்துற வளைக்கு மாறும்
பாரினி னெற்றி தீண்டப் படும்படி குழைவு மற்றுங்
காரண மிதுகொ லென்னக் காபிர்கண் டைய முற்றார். (4)

மார்க்கமோ நெறியோ வீதோர் வணக்கமோ மாறு பாடு
தேற்குமோ நல்லோர் கேட்கி லிணங்குமோ வினத்தார் வேத
நூற்கிது பொருந்து மோவிந் நூதனச் செய்கை யாவு
நாற்குலத் தவர்க்குமொவ்வா நகையென நகைத்துச் சொல்வார். (5)

மீறிய மதப்பி னாலோர் * வேதமொன் றிறங்கிற் றென்று
மீறிலா னிறுதித் தூத னெனும்பெய ரெனக்குண் டென்றுந்
தேறிய வறிஞர் போலத் தெளிவுறா முகம்ம தென்போன்
கூறிய கூற்றைத் தேற்றா விளைத்திடுங் கோட்டி யென்பார். (6)

பொறுத்துளத் தடக்கிக் கண்டு போவது தகுவ தன்று
மறுத்துடைப் பனபோன் மார்க்க வழிகெட நின்ற பேரைக்
கறுத்தகட் டுரைக டம்மான் மதமனங் கலங்கக் கூறிச்
செறுத்திவர் தம்மைத் தண்டஞ் செய்விரா லொழியு மென்பார். (7)

உரனுறு மனத்தி னூடு முலைவிலாச் சமய நீங்கார்
பரகதி யடைவர் வேறு படுத்திநல் லறத்தைத் தீய்த்தோர்
நரகமே யடைவ ரென்ற நன்மறை வசனந் தன்னால்
விரகர்கள் பகுத்துக்காட்டி விலக்கவுங் கலக்க நீங்கார். (8)

மனத்துறு வருமக் காபிர் வலிபகை சிறிது மெண்ணா
தினத்துடன் கூடிச் சஃதென் றிலங்குறு மலங்கன் மார்பர்
புனற்றடக் கரையி னுள்ளப் புகழொடும் பொருவி லானை
நினைத்துளுச் செய்து நீங்கா நெறிமுறை வணக்கஞ் செய்தார். (9)

வணக்கமுற் றிருந்த சஃது மன்னவன் றன்னை நோக்கி
யிணக்கியிவ் விடரைத் தீர்ப்போ மிவர்க்கென வுரைப்பர் பின்னும்
பிணக்கெனுஞ் சமய பேதப் பேய்பிடித் தவர்க்கு நீதிக்
கணக்கறி வுறுமோ வென்னக் காபிர்கள் கடுத்து நின்றார். (10)

* ஓர்தல்-ஆராய்தல்.

சீற்றமுங் கடுப்பு மாறாச் சினத்தொடுங் காபிர் கூடி
மாற்றலர் போலச் சூழ்ந்து மன்னவர் சஃதை நோக்கித்
தேற்றுறு முதியோர் முன்செய் செயலினைச் செய்ய லன்றி
வேற்றமு தூழல் புக்கத் தொழிலினை விரும்ப முற்றீர். (11)

வருநெறி பிழைத்தீர் கஃபா வலஞ்செய்து குபலைப் போற்றுந்
திருநெறி விடுத்தீர் செய்யாத் தீவினை விளைத்தீர் வீணி
லொருநெறி தொடுத்தீ ரும்மோ டுற்றவர்க் கெல்லா நந்தங்-குரு
நெறி தவிர்த்தீர் கொள்ளாக் கொடும்பவம் விளைத்துங் கொண்டீர். ()

அமாருக் கவலஞ் செய்தீ ரருமறை வசனந் தீய்த்தீர்
றுமர்களுக் கிடுக்கண் செய்தீர் நோற்றநோன் பதனை மாய்த்தீ
ரெமருடன் பகைத்தீ ரிவ்வூ ரிருப்பிடம் பெயர்ந்தீர் பொல்லாக்
கமரிடை வீழ்வ தல்லாற் கதியொன்றுங் காண மாட்டிர். (13)

என்றவ ருரைப்பக் கேட்ட விளவல்புன் முறுவ றோன்ற
நின்றுபுன் மொழிகள் வேறு நிகழ்த்திய பெயரை நோக்கித
தொன்றுதொட் டுவந்து நீவிர் துதிசெய்யும் புத்துகளை
யின்றொழித் திடுமி னென்றென் றியம்புதல் கேண்மி னென்றார். (14)

வானமும் புவியு மற்றும் வகுத்தவ னுண்மைத் தூத
ரானவர் முகம்ம தென்போ ரவர்மொழி மறுத்து நின்றோ
ரீனமில் சுவன நன்னா டெய்துவ ரெங்கட் குற்ற
தீனிலை பொய்மை யென்ற தேவரு நரகஞ் சேர்வார். (15)

தீய்நர கடைவ ரென்ற சொற்செவித் துளையின் மாறாக்
காயெரி நெய்பிட் டென்னக் கட்கனல் கதுவக் காபிர்
பாய்மதக் களிறு போலப் படுகொலை மனத்த ராகி
வாய்துடி துடிப்பப் பேசி வருமித்து நெருங்கி நின்றார். (16)

வரைதிரண் டனைய பொற்றோண் மன்னவர் சஃது கோபங்
கரைகடந் தென்னச் சோகத் தென் பிணைக் கரத்தி லேந்தி
விரைவொடுஞ் செறுத்து நின்ற வீரரி லொருவன் றன்னைச்
சிரசுடைந் துதிரஞ் சிந்தச் சினத்துடன் புடைத்து நின்றார். (17)

சினத்துட னெதிர்த்த காபிர் திரளையுஞ் சஃதுவேந்த
ரினத்தையும் வேறு தாக்கி யிவர்க்குறு மொழிகள் சாற்றி
மனத்தினிற் கோப மாற்றி மனைவயின் புகுதச் செய்தார்
கனத்தநா னபியை யுட்பங் கண்டவல் லவர்க ளன்றே. (18)

உதித்தமுன் முதன்மை யாக பீஸமீ லுதிரங் காட்டி
மதித்தவீ ரியத்தின் செவ்வி மன்னவர் சஃதும் புக்கார்
கொதித்தபுன மனத்தி னோடுங் குறுகலர் மனையிர் சார்ந்தார்
பதித்தவே ரூன்றித் தீனும் படர்கொழுந தோங்கிற் றன்றே. (19)

வேறு

தூத ராகிய முகம்மது பலர்க்குறுஞ் சுருதி
யோது நன்னெறி யுடையரு மினத்துடை னுவந்து
தீது றுங்கொடுங் காபிர்கள் செயலினைத் சிதைப்ப
வேத நன்மொழிப் பொருளொடுந் தீனிலை விரித்தார். (20)

கோத றுந்துகில் பொதிந்தரு மணிபல குயிற்றீ
யோது நன்மொழி யொடுமிரு கரங்குவித் தொதுங்கிப்
பேத முள்ளற வணங்குமிப் பேயினை யுமக்குப்
பாத கம்பலித் திடுநிச மெனப்பழித் தனரே. (21)

வம்பி ராதசொன் மறைதன துரையென வகுத்தெந்
தம்பி ரானையும் பழிப்பது தகுவதன் றெனவே
வெம்பி மாசினத் தொடும்பல விக்கினம் விளைப்ப
வம்பு ராசியொத் தூரவர் முகம்மதை யடர்ந்தார். (22)

அடர்ந்து வந்தவர்க் கெதிரபுத் தாலிப்பென் றடுத்துத்
தொடர்ந்து வந்ததிங் கென்னெனச் சூழ்ச்சியாற் றேற்றிக்
கடந்த சொல்லொடு மிதத்தொடும பலவுரை காட்டித்
திடம்ப டைத்தவர் விக்கின மனத்தையுஞ் சிதைத்தார். (23)

சமய பேதபுத் தனைத்தையுந் தகர்த்திடுந் தீனி
லமையு மெனபடர் சிலாசில ரம்மொழிப் பகையாற்
கமைய றக்கடு கடுப்பவா சிலாசில ரிவர்க
டமை விலக்குத றொழிலபுத் தாலிபு தமக்கே. (24)

இவ்வ ணஞ்சில பகலிக லொடு நடந் ததற்பின்
பௌவ மார்த்தெனக் குறைஷிக டலைவர்கள் பலருஞ்
செவ்வி தாயொரு நெறிபடத் திரண்டுவந் தடைந்தார்
மைவ ணந்தரு கொடையபித் தாலிபு மனைக்கே. (25)

இகன் மனத்தவர் திரண்டபித் தாலிபை யெதிர்ந்து
ஜகத லத்திரு ளறவரும் பருதியொத் தனையோய்
விகட விக்கினம் விளைமுன் விலகறும் மிடத்திற்
புகலு தற்கொரு கருமமுண் டெனப்புக லுவரால். (26)

ஹாஷி மாகுலக் கடனடு வெழுந்தக லிடத்தின்
மாசி லாமதி நின்றனே யவயர்தரு மதலை
யேசு வார்க்கிட மெனப்பிறந் திழிதா வினத்துப்
பாக நீக்கிநந் தேவத மணைத்தையும் பழித்தான். (27)

நடந்த முன்னெறி பழுதென நவிற்றியா லயத்து
ளடைந்த பேரனே வரும்வழி கேடெரன் றறைந்து
கடந்த நான்மறைப் பெரியவ ரிருசெவி கசப்பத்
தொடர்ந்து பேசுவ தொறுத்தில னடிக்கடி தொடுத்தான். (28)

தந்தை தாய்தமர்க் குரும்பொருட் சமயநிண் ணயத்தை
நிந்தை செய்தனுஞ் றனக்குறும் வடுவென நினையான்
சிந்தை யுற்றதே துணிந்தனன் பிறர்மொழி தேறு
னிந்த வாறலால் வேறொரு கருமமு மிசையான். (29)

நின்னை நோக்கி யுநின்குல முறைப்பெரி யவர்நேர்
தன்னை நோக்கியும் பொறுத் தனந தணிந்தன மிவனை
யுன்னி நோக்கியே வணக்கிடு முமதுசொற் கடந்தாற்
பின்னை நோக்குமெந் திறமெனப் பேசின ரன்றே. (30)

முறைமு றைப்படி காபிர்கள் கூறிய மொழிகேட்
டறம திந்தநெஞ் சுடைந்தபித் தாலிபங் கவர்கட்
குறும னக்குறை தவிர்ந்திட நன்மொழி யுரைப்பப்
பொறைம னத்தொடு மனைவரு மனைவயிற் போனர். (31)

மாற்ற லர்க்கரி முகம்மது காபிர்கள் வணங்கிப்
போற்று புத்தையு மினைதையும் பொருத்திலா திகழ்ந்து
தூற்று நிந்தனை யுரைமறுத் திலர்செழுஞ் சுருதி
தேற்றும் வானவர் கோனுரை நிலைபடுந் திறத்தால். (32)

உரைத்த வாசக மனத்திடை தரித்தில ருாவோர்
நிரைத்த டைந்தபித் தாலிபுக் குரைத்தது நெகிழ்ந்துமன்
குரைந்த லென்னினி முகம்மது பெலத்தொடும் குறும்பைக்
களைத்தல் வேண்டுமென் றவரவர் தனித்தனி கடுத்தார். (33)

கோதில் கற்பகச் செழுங்கொடிக் கொழுங்கனிக் கதீஜா
மாது தன்மணம் புணர்ந்தவர் பொருடரு மதமோ
சாதி ஹாஷிமென் குலத்தவர் பெலன்குறித் ததுவோ
வேதி லற்குறுங் குறும்பெனச் சிலரெடுத் திசைத்தார். (34)

தந்திரத் திறற் சிலவரைத் தனதுரைக் கடக்கி
மந்தி ரத்துருச் சித்தியான் மார்க்கமொன் றெடுத்தான்
சிந்தை யிற்றெளி வுற்றுநோக் கிடுமறைச் செயலீ
ரிந்த வாறிவன் றொழிலெனச் சிலரெடுத் திசைத்தார். (35)

இழிவு செய்தொரு குலம்பிறந் தொருகுல மெடுத்து
வழிகெ டத்தனி நின்றவன் றனதுயிற் மாய்க்கப்
பழியும் பாவமு நினைத்திலை பழுதெனப் பலகான்
மொழிய வேண்டுவ தில்லெனச் சிலர்மொறு மொறுத்தார். (36)

நிறைத்த நன்னெறித் தேவ நிலைதலை குலைய
வெறுத்த பேருயி ரகல்விசும் பிணிற்குடி படுத்த
லொறுத்த லென்னபித் தாவிபுக் குரைத்தி னியொருகாற்
பொறுத்துச் செய்வது கருமமென் றனைவரும் புகன்றார். (37)

இசைத்து ரைத்தவை நன்கென வினத்தொடு பலரும்
விசைத்தெ ழுந்தபித் தாவிபு திருவயின் யேவித்
திசைத்த டங்களுந் திக்கினுந் திரிதரு கவனக்
குசைத்த டப்பரிக் குரிசின்முன் கூறுதல் குறித்தார். (38)

குரிசி லங்குல மகன்முகம் மதுசெயுங் குறும்பைப்
பரிவி னிற்பொறுத் திருந்துநம் மிருசெவிப் படுத்தித்
தெரிய வேண்டுவ திலையினிச் சேர்தரு மினத்திற்
குரிய ரியாமல வறிகவென் றுரைத்தயல் போனார். (39)

உற்ற தங்குலப் பெரிவ ரனைவரு முரைத்த
பெற்றி யும்மகன் குறிப்பையும் பிரித்தெடுத் தாய்ந்து
வெற்றி வாளபித் தாவிபு மனமிடை மிடைந்திட்
டுற்ற தங்கருத் தொடுமயற் குரைத்திடா துறைந்தார். (40)

பத்தி விட்டினம் வெறுப்பதும் பழுதுயிர்த் துணைவன்
புத்தி ரற்கிடர் வருவதும் பழுதெனப் புழுங்கி
யெய்த்த சிந்தையோ டியனபி தமையழைத் திருத்தி
வைத்து நன்னய மொழிசில வகுத்தெடுத் துரைத்தார். (41)

மாத வத்தின னெலீதருண் மதலையைக் கொடுபோய்க்
கோதி லாதபித் தாவிபு திருக்கரங் கொடுத்துத்
தீதி ழைத்திடு முகம்மதை நமதிடஞ் சேர்த்துப்
பேத கத்தினைத் துடைப்பமென் றுரைத்தனர் பெரியோர். (42)

வருத்த முற்றபித் தாலிபங் குரைத்திடும் வசனந்
திருத்துந் தீனிலை முகம்மது செவியிடை புகுந்து
கருத்தி னிற்றெளிந் தெண்ணிய நல்வினைக் கருமம்
பொருத்து தற்கிட மிதுகொலன் றகத்திடை பொறுத்தார். (43)

வந்து ரைத்ததம் மினத்தவர் மனவெறுப் பகல
நந்த மைச்சிறி திகழ்வரென் றகத்தினி னைட்டித்
தந்தை தந்திரு முகம்மலர் தனையெதிர் நோக்கிச்
சிந்து முத்தவெண் ணகையித ழமுதவாய் திறந்தார். (44)

பருதி யைக்கொணர்ந் தணிவலக் கரத்திடை பதித்து
மரிதி னிற்சசி கொணர்ந்திடக் கரத்தினி லமைத்து
மொருமொ ழிப்பட வினத்தவ ரொருங்குற நெருங்கி
பொருத டக்கினு நம்மனம் பொருந்திலா திருந்தும். (45)

ஈதலாற் சில விடரெனை யடுக்கினு மிறையோன்
றாத னியானெனச் சுருதியை விளக்குவ தலது
பேதி யாதென தகமென முகம்மது பிரியாத்
தாதை யோடுரைத் தனரிரு விழிமழை தயங்க. (46)

அழுது ரைத்தநன் னெறிமுகம் மதுதமை யடுத்துத்
தழுவி யென்னுயிர் நீயல திலையெனச் சாற்றி
முழுது நின்கருத் துறும்படி முயல்வதே யன்றிப்
பழுதி லென்மனத் திதுகொனின் னயமெனப் பகர்ந்தார். (47)

சிதைவி லாமொழி தனையபித் தாலிபு தெளிப்ப
மதலை யாகிய முகம்மது மனத்திடை களித்துப்
*புதிய ஞயகன் ஆரணம் புடைபரந் தேங்க
விதுவி னொண்கலை வளர்த்தெனத் தீன்பயிர் விளைத்தார். (48)

வருந்தி லாதொரு சமயமென் றகுமது வடுவைத்
தருந்த வப்பிழைக் கொடுமுடி தனைமறுத் திலனென்
றிருந்த பேரினிற் றலைவர்க ளவரவர்க் கிசைத்துத்
திருந்தி லாமனக் காபிர்கள் கிளையெடுந் திரண்டார். (49)

---

* புதிதாகிய ஆலத்தையுடைய நாயகனென்று வினைக்குறிப்புப் பெயராகக் கொள்க.

குறித்த வாசக நன்கெனத் திரளொடுங் கூடி
நறைத்த டப்புய வொலிதருண் மகனைமுன் னடத்தி
நிறைத்த மாமலர்ப் புபாயித் தாவிபு நிலவச்
செறித்த நீணிலை மணித்தலைக் கடையிடை சேர்ந்தார். (50)

வேறு.

மாலை யிட்ட வரைப்புய மன்னயித்
தாவி னைக்கண் டனைவருங் கைமுகிழ்த்
தோவி டுங்கட லுட்படு நஞ்சினைப்
போலு மாற்றம் புகலப் பொருந்தினர். (51)

உத்த மத்தொலி தென்பவன் செய்தவப்
புத்திரன் கலை யிற்பொரு வற்றவன்
சித்தி ரத்தினு மிக்குயர் செவ்வியன்
மத்த மாகரி யொத்த மனத்தினன். (52)

மறுவ றுங்குல மைந்தனிம் மைந்தனை
யறுதி நன்மனத் தோடு மளித்தனை
யிறைவ நின்மக னுக்குக வில்லகத்
துறைக பின்னு மொருமொழி கேட்டியால். (53)

பெறத்த காத பெரும்பழி யாய்நம
தறத்தி னுக்கழி வாயவ தூறுமாய்
மறுத்தோர் மார்க்கம் வகுத்தமு கம்மதை
வெறுத்தி னத்தவர்க் கீந்திடல் வேண்டுமால். (54)

இந்த மாற்ற மிசைந்தினி ரேற்பகை
வந்தி டாது மறுத்தொரு தீங்கிலைச்
சிந்தை வேறு செய் தீரெனி னீள்பகை
பிந்தி டாத பெரும்பழி சூழுமே. (55)

என வுரைத்த வினத்தவர் தம்மொழி
மனதி னுட்புகுந் தங்கி வளர்த்துறு
சினமெழுப்பின சிந்தையுட் டையநன்
னினைவி னுட்பொதிந் தோர்மொழி நீட்டுவார். (56)

நவியி லாது நடுவுரைத் தீரும
தொலிது மைந்தனு மாறத்தென் போன்றனை
மலியும் வெண்சுதை மாடத்துள் வைத்தியான்
மெலிவி லாது வளர்த்திடல் வேண்டுமால், (57)

எங்க டங்குலத் தின்னுயிர்த் தம்பிதன்
மங்கை யீன்ற மணியை முகம்மதை
யுங்கள் பாற்கொடு போயுமர் தம்மனப்
பங்கந் தீரப் படுத்தலும் வேண்டுமால். (58)

ஈது நன்னெறி யீது மனுநெறி
யீது நங்குலத் தாருக் கிணங்குவ
தீது வேதத் துரைப்படி யாவர்க்கு
மீத லாதுநன் னீதியு மில்லையே. (59)

அறபெ னும்பதி யாரா சூழியோ
ரறவு நல்லறத் தாலறி வோங்கியோர்
பிறவு மிவ்வுரை யாவர்கள் பேசுவார்
பிறரு மில்லைநம் போற்பெரி யோர்களே. (60)

உறைத்த லென்னுமர்க் குற்றசொல் லென்மனம்
பொருத்த மில்லெனப் புண்ணியர் கூறலுந்
திருத்தி லாதெங்கொல் செய்குவ மியாமென
வருத்த முற்ற மனத்தொடும் போயினர். (61)

கனன்று சென்றற பிக்குலக் காபிர்க
ளனந்த ரக்குறை ஷிக்குலத் தாரொடு
வனைந்த பொற்கழன் மன்னவர் தம்மொடு
மினைந்து தங்க ளினங்க டிரட்டினர். (62)

கேட்டு வந்தவ ருஞ்சிலர் கேட்டினை
மூட்ட வந்தவ ருஞ்சிலர் மூள்பகை
வீட்டு மென்று வெருண்டவ ருஞ்சிலர்
கூட்ட மிட்டுக் குலத்தொடுங் கூடினர். (63)

வடித்த மெய்ம்மறை நந்நபி வாக்கினிற்
படித்த சொல்லைப் பகர்ந்திடும் பேர்களைப்
பிடித்த டித்துப் பெலன்குறைத் தில்லமு
மிடித்து டைத்திடை யூறு படுத்தினர். (64)

செறுநர் செய்திடுந் தீயவக் கோட்டிகண்
டறிவு றும்மபித் தாலிபு மங்கவர்க்
கிறுதி செய்குவ னியானென வீரமுற்
றுறைபெ ருங்குலஞ் சேர்ப்பதற் குன்னினர். (65)

பெருகி நின்ற தலைமுறைப் பேராய்
வருமவ் வப்துல் முனாபுதம் மக்களி
னுரிய ஹாஷிமெ னுங்கிளை யோரையும்
பொருவின் முத்தலி புக்கிளை யாரையும். (66)

தனத்த அப்து ஷமுசுக் கிளையையுஞ்
சினத்த வேல்நவு பல்க்கிளைச் சேனையுங்
கனத்த வெண்டிரை மாகடற் கொப்பென
மனைத்த லத்தில வரவழைத் தாரரோ. (67)

முன்றி லெங்கணு மொய்த்தசெவ் வேற்கா
வென்றி வீரரை நோக்கி விளித்தணி
மன்றன் மார்பின்மு கம்மது வான்முனஞ்
சென்ற செய்தி யனைத்தையுஞ் செப்பினார். (68)

மாறி லாதெழின் மான்மதங் காவத
நாறு மேனிமுகம்மதை நாடொறும்
வேறு பாடு விளைத்திடும் பேர்களைக்
கோற லென்குறிப் பென்னவுங் கூறினார். (69)

ஆட்டி றத்தபித் தாலி புரைத்தசொற்
கேட்டு முத்தலி புக்கிளை யோர்களுங்
கூட்டத் தாஷிம் குலப்பெரி யோர்களு
நாட்ட முற்றிது நன்றெனக் கூடினார். (70)

மற்றி ரண்டு கிளைமு தன் மன்னரிங்
குற்ற வார்த்தை யுசாவி யுறுதென
வெற்றி வேந்தக நீங்கி வெறுத்திடும்
பற்ற லாருறை பாலடைந் தாரரோ. (71)

மறுவு றுத்து மனத்தின னாகிநல்
லறிவு நீங்கி யபூலகு பென்பவன்
பெறுபு றைத்தலை மைப்பெய ரானுமக்
குறுக லாருறை கூட்டத்தி லாயினான் (72)

பிரிவு செய்கிளை தன்னொடும் பின்னவ
னுரிய னாயின னென்று முளத்தினில்
வெருவி லாதுபுன் மூரல் விளைத்தட
லரியின் சீற்றமுற் றாபித் தாலிபே. (73)

பகைத்த காபிர்கள் கூடிப் பணிக்கைமா
வுகைத்த வீர ேனெனிடம் புக்கிநா
மிகைத்த ஹாஜ்ஜின் முகம்மதின் வீரத்தைத்
தகைத்தல் வேண்டுவ துண்டெனச் சாற்றுவார். (74)

கணிதன் றுன்பக் கவியன் கபடித
வணிதன் வஞ்சனை யன்வரை வற்றபித்
தணித னென்றொரு பேரையுண் டாக்குத
றணித னன்றென யாவருஞ் சொல்லினர். (75)

நீட்டு கைக்கரி யைநிக ரிற்புலி
காட்டு மாறென மாறிடுங் காபிர்கண்
மாட்டி ருந்து வழங்கிய மாற்றத்தைக்
கேட்டி ருந்த வொலீது கிளத்துவான். (76)

ஈதெ லாம்பெய ரன்றிவன் சொல்லினைக்
கோத டர்த்தக் குறிப்பரி தாற்குலம்
பேத கப்படுத் தும்பெரு வஞ்சனைச்
சூத னென்றிடும் பேரெனச் சொல்லினன். (77)

இத்த லத்தினி லிவ்வரு டத்தினின்
மொய்த்த ஹாஜ்ஜின்மு கம்மதை வஞ்சனைப்
பித்த னென்று பெரும்பெயர் நாட்டுதல்
பத்தி யென்றித மித்தனர் பொய்மையோர். (78)

மக்க மாநகர் வந்தவர் தம்மிடம்
புக்கி ருந்துமு கம்மதின் புத்திகேட்
டொக்க லோடுமிவ் வூரிழந் தொவவொரு
திக்கி னில்லடை வார்சிலர் காணென்பார். (79)

தாயைத் தந்தையைத் தன்றுயி ராகிய
சேயைப் பெண்டிரைச் சிந்தையில் வேறதாய்
பாயத் தோடும் பகைப்பிக்க வல்லதோர்
மாய காரன்மு கம்மதென் றோதுவார். (80)

ஆதி வேறுண் டொருவனென் பாணவன்
றாத னியானெனச் சொல்லுபவன் றெய்வங்கள்
பேத கம்படப் பேசுவன பேதியா
வேத மொன்று விளைந்தது காணென்பான். (81)

மடுத்த சிந்தை முகம்மதென் போன்றனை
யடுத்த வன்மொழிக் குள்ளகப் பட்டு
ரெடுத்த நலவழி கெட்டெளி மைக்குநகீழ்ப்
படுத்த லாகப் படநினை யீரென்பார். (82)

வேறு

மலித ருப்புகழ் முகம்மதைக் கொடிய வஞ்சனென்ற பெயர்பே
சிய, வொலித மக்களு மிழந்துனைப்பொரு ளொழிந்து பேறுமுத
வாமலே, கலித ருங்கொடிய நரகடைந் திடுவ னென்னவாதிதிரு நன்
மொழி, யலைவி லாதமரர் கோணிழிந்நிவனி யிற்புகன்றவணி லேகினர்.

மாசி லாவரிசை முகம்மதின்பெரை மாற்றி வஞ்சக னெனும்பெ
யர், பேசி யூரவரி ரண்டுபட்டவுரை பெருகி யெங்கணுமறிந்து பொன்,
னூச லாடுதெரு வீதிமாமதின முற்றமன்னரு மறிந்துமா பூச லாதுவ
தினத்தி னுக்கிது பொருந்து மோவென வருந்தினர். (84)

மனதி மானக ரவர்க்கு மக்கநக ருற்றமன்னவர் தமக்குமோ,ருதர
பேதமஃ தன்றி யாவியுட லொத்திருப்பவர்க ளாகையால், விதியி னுட்
பமறை கற்றவன் புகழின் மிக்க னை அபு கைசவன், பதிவு பாசுரமொ
டுறைய நீதிமுறை பழுதி லாதபடி யெழுதினன். (85)

ஓலையுத்தரமு கம்மதைக்கொடு முரைத்த நிந்தைபழுதென்னவுஞ்,
சீலமற்றபகை யொருவருக் கொருவர் செய்து கோடல்பழு தென்னவு,
மேலுநல்வழி திருத்தினோர்கள்பத மீது சார்தனல னென்னவுஞ், சால
மிக்கவி தைத்திறத்தொடு தணப்பி லாதுற வனுப்பினன். (86)

வந்த வாசக முணர்ந்து காபிர்கண் முகம்மதைப் பழுது பேசிய,
நிந்த னைச்சின மொறுக்கி லார்தின நிகழ்த்து நல்வழி மனக்கொளார்,
தந்தி ரத்திலுயர் மன்னர் சொன்னமொழி தன்னையுந் நினைவி லெண்
ணிலார், செநத ழற்குழிக ளேழு மாளமுறை தேடி நன்னெறியை
மூடினர். (87)

இன்ன வாறுமுர ணனகாபிரிட ராயிருப்பவு முகம்மது, முன்னு
நன்னெறி நிறுத்து வேனெனு முளத்தி னேடுதடு மாறிலா, தன்ன
மன்னமட வார்க்கு மாடவர் தமக்கு மற்றவர் தமக்குமே, லின்ன லற்ற
விசி லாத்தி னோர்வழி யினைக்கி லாதுற விளக்கினர். (88)

சிந்தூரத்திரளடர்த்து நின்றதொரு சிங்கவேறெனுமு கம்மது, தந்தி ரத்தையு மவன்ற னேர்வழி தனக்கிசைந்தவர்க டம்மையு, மந்த ரத்தின்வழி யாவிடற் கினியோ ரையமில்லையென வங்கவர், புந்தி யிற் கருதிவேறு வேறுகொலை பூணுநாளில்வர வோதுவாம். (89)

மதுவ ழிந்தொழுகு மரவ மாலைபுனை வரைநிகர்த்தபுய அப்துலா, புதல்வ ராகியமு கம்மதுந் தனியோரா போது நீடுகரு பாவடித், ததிவி தப்புதுமை மறைமொ ழிக்குமுத லாதியைத்தலை வணங்கியே, புதிய வேதமொழி கொடுபு கழ்ந்துநிலை பொருந்தி யங்ஙன மிருந்தனர். ()

கண்ட காபிர்களி லொருவ னோர்துகில் கரத்தி லொப்பறமு றக் கியே, யண்டர் நாயகமு கம்மதினறம தருங்கழுத்துற விறுக்கினன், விண்டி லாரெதிர விழுத்திலா ரதனை மெய்ம்மையோருமபு பக்கர்தா, மிண்டு வல்வினையி தெனறு கண்டற விரைந்துபாலினி லடைந்தனர்.

மிடற்றி னுற்றதுகி றனைநெகிழ்த்துமிகு வினைகொ லைக்க படர் தங்களை, யடுத்த டாதசில மொழியின் வைகமோ டடர்த்து விட்டெ ழின்மு கம்மதி, னிடத் திருந்துதொழு தெழுந்த பின்புட னெழுந்தி ருந்து தமதாளித, முடற் புகுந்தபடி மனைபுகுந்தபி னுயர்ந்த தம்மனை யடைந்தனர். (92)

அன்றொ ழிந்துசில நாளகன்றபி னஃதி தாதெனுமுகம்மது, மன்ற றுன்றுமது மாலை நாற்றியொளின் மணிதிகழ்ந்தகருபாவிடஞ், சென்ற டுத்தரு கிருந்து மூதுரை தெளித்த மாமறை விழிக்கொடே, யொன்று பட்டமன மங்ஙனஞ் சிறி துணங்கி லாதுற வணங்கினர். ()

தக்க நன்னெறி பிழைத்த பாவியபு ஜகல்சைபா வொலிது தன் னுட, னுக்கு பாவுமுத் பாவு மூடனுமை யாவு மீனனுமா ருவுமா, யொக்க லோடவ னடைந்து நந்நபி யொழுங்குறுந் தொழுகை நோக்கி யோர், விக்கி னத்தினை நினைத் தொருத்தனை விளித்து ளெரிடை விடுத் தனர். (94)

ஊரி னிற்புகுந்தோ ரொட்ட கத்தெலும் புடர்குடக் குருதி யூனு லம், வாரி வந்தவன் முகம்ம தினறனி மணிப் புறத்திடை படுத்தலும், வேரியங்கமுதலைம்பு லன்களும் வெறுத்தொடுக்கியசுஜூதிற் றிபற்னிரிர,

டைப்படிதல் கண்டுதீனிலை பகைத்த பாவிகணை கைத்தனர். (95)

பீடரின் மீதுசுமையும் சுஜூதியல் பிரிந்திடாதவ னுறைந்தது,
மடைய லார்கணைக ளோடுநின்றது மகம் மெதும்பவொருகாலைகண்,
டிடைய றுதவசை கொண்ட பாவிக ளிழைத்த பாதகமி தென்னவே,
யுடைய நாயனபி புதல்வி தம்பிட மொதுங்கி நின்றிவை யுரைத்
தனன். (96)

மாத ருக்கரசு பாத்தி மாவெனு மடந்தை கேட்டுளமயக்குற, வீதி
வாயிடை புகுந்து மின்னென நடந்து மாமறை விளக்குடுந், தாதை தெ
ந்நிட மிருந்த தைச்சிதறிச் சரிவ லைக்கைகொடு தணிதுடைத், தேத
முற்ற மொழி காபி ரைச்சிறி தெடுத்து ரைத்துமனை மேவினர். (97)

ஏக னைத்தொழு தெழுந் திருந்துபி னிடும்புசெய் தவரை நோக்கி
யே,மோக முற்றதனி றப்பனு வனது முனிவிறு லிவர்க டங்களை,வேக
முற்றுகொடு நாகிடைப் புகுத விடுதல் வேண்டுமென விரைவினன்,மாக
நோக்கியிரு கரமெடுத்துபது வாவுரைத்துநபி போயினர். (98)

வேறு.

விணுரை பகர்ந்து மிடிப்புக டொடுத்தும் வெவ்வினைக் கொடுங்
கொலை நினைத்துங், காணிலாப் புதுமை விளைத்தநாயகத்தைக் காபிர்கள்
வெறுத்திடுங் காலந், தாணினைத் துரும்பா நினைத்தென ஹாவின் றே
ன்றலில் அக்கமென் றொருவன், பூணிலாப் பவநோய் பூண்டது தனக்
கே பொருவிலா தொருதொழி லெடுத்தான். (99)

இருவழி கருப்பு மொருபுறத் தொதுங்க விதழ்கடை வாயிடைப்
பிதுங்கத், திருகுற முகத்தைச் சுரிப்பொடு வளைத்துத் திகழ்தரு நாசி
யைச் சிலுத்துப், பெருகிய கழுத்தி னரம்புகழ் விறைப்பப் பிளந்து
வாய் நாநுனி புரட்டி, வரிவா வலித்து முசம்மதை நோக்கி மனத்துறு
இகழ்ச்சிசெய்தனனால். (100)

கதிர்விரிந் தொழுகு மெய்யெழி னபியைக் காண்டொறுங் காண்
டொறும் வலித்திட் டெதிரெதிர் வருவன் விகுக்குதற் கமையா னிங்ங
னஞ் சிலபக றிரிந்தான், புநியவன் றாத ரிவன்றனை நோக்கிப்
பொருவிலாச் செவ்விதழ் திறந்து, பதிபெற வலித்திட்டிதனிலெண் ம
டங்காய்ப் பழிப்பொடுந் திரிகுவை யென்றார். (101)

பலித்தது நபிதந் திருமொழி யவன்பாற் பதிமடங் காயின விதழ் வாய், வலித்தலுங் கண்கள் சிமிட்டலு முலகில் வழங்கிலா வலிப்பெ லாம் வலித்துச், சிலிர்த்தது முகங்கண்டடுத்தவர் மனங்கடிகைத்த தும் பெருங்குல மனைத்துஞ், சலித்ததுந் தவிரா இடும்பினால் வருநோ ய் படர்ந்தது வைகலுந் தழைத்தே. (102)

பெறுமவ ரிடத்து மனைவிதன் னிடத்தும் வலிப்பது தவிர்ந்திலன் பெரியோர், மறுகெதிரப் படினு முகத்தெதிர் நோக்கி வலித்திட லொழித்திடான் புதியோர், சிறுவர்கள் காணி லெவ்விடமனைத்துஞ் சிதறியே வெருவிடத் திரிவன், குறைவிலா நபியைப் பழித்த நிந்தனையாற் குவ லயம் பழித்திடத் திரிந்தான். (103)

குறுநெறி யவரைக் காண்டொறும் வலிப்பன் கோயிலிற் றேவ த மிடத்திற், சிரசினை வளைத்து முகஞ்சுரித் திருகண் சிமிட்டுவ தடிக்கடி மறவான். வருநெறி பிழைத்த பாவிகள் குலமும் வணங்கிய புத்துக ளனைத்துந், தருநபி பழித்துக் காட்டுதற் கிவனோர் சாட்சியிற் றலை மையானான். (104)

மருந்தினான் மணியான் மந்திரத் தொழிலான் மாறிலா மாயநோய தனாற், றிருந்திய மதிகெட் டங்கமும் வேறாய்த் திரிந்தவ னாட்குனாட் டேய்ந்தான், பருந்தெழுங் கதிர்வேன் முகம்மதை யிகழ்ந்தோன் படும் வா லாற்றையு மறிந்து' மிருந்தகா பிர்களி லொருவனுண் மதத்தா விட துசெங் கரங்கொடு புசித்தான். (105)

போனக மருந்தாக் கரத்தினா லமுது புசித்தவன் றனையெதிர் விழி த்து, வானநா யகநன் னெறிமுகம் மதுவும் வலக்கரங் கொடுபுசித் திடு மென், றீனமற் றுரைப்ப விடருறு மொழியா யிடக்கரம் வழங்குவ தலது, தேனவிழ் தொடையாய் வலக்கரம் வழங்கா தெனவவர் திருமொ ழி மறுத்தான். (106)

வலிபெற வழங்கும் வழக்கம் வழங்கா தெனமறுப் படிறுரைத் தவனைக், கலியென நினைத்துக் கவரிதழ் திறந்தெக் காலமு முனதுரைப் படியே, நிலைபெற நிலத்தி லிருப்பது நிசமென் றுரைத்தனர் நெடுமுடி யாதந்,தலைமுறைப் பெயரின்முதன்மணி விளக்காய்த் தருகதிர் நபிமுகம் மதுவே, (107)

அடங்கலர்க்கரியா யுதித்தநந் நயினா ரன்றந்தசொன் மறுத்தவன்
வலக்கை, முடச்சில சிறிது நீண்டில வுணர்வு முழுதினு மிலதுகெட்
டொடுங்கி, வடங்கொள்வெம் முலையார் நகைத்தரு வருப்ப வருந்தினும்
வாய்க்குத வாம, விடங்கொளம் புவியுளோக்கு நர்க்கிழிவா யிணங்கிலா
தொழிந்திருந் ததுவே. (108)

மண்ணினிற் செழுந்தீன் பயிர்நலந் தழைக்க வளர்த்தமா மறை
நபி நயினார், கண்ணுடைக் கரும்பின் சுவையினு மினிய கட்டுரை நெறிக்
கலி மாவை, புண்ணிறை யமிர்த மெனவறி யாமலொடுங்கிலா தெதி
ரிடர் பகர்ந்திட், டெண்ணிறந் தனையர் சிலபக லிவர்போ லிடும்பை
நோய் சுமந்திருந் தனரே. (109)

மறைபடாப் புகழை யுலகினில் வளர்த்து வருமொரு துரையபுல்
காசீங், குறைபடா மனமும் வாக்குமொன் றாகப் புகழ்ந்திடுங் குரிசினந்
நபிக்கு, நிறைபட வடுத்த கிளையனைத் தையுந்தீ னிலைபெற நிறுத்திடு
மென்ன, விறையவ னாயத் திறங்கிய தெனவங் கிருந்திறங் கினர்ஜிபு
ரீலே. (110)

திருமறை மொழியொன் றுரைத்துவிண் ணவர்கோன் சேணி
டையுறைந்தபின மாறு, விரைகிடங் கருந்தேன் றுளித்தருங் குமத்தார்
விளங்கிய புயவரை துலங்க, வருமுதன் மதமாகரியெனத் திருந்து
மனத்திடை களிப்பொடு மகிழ்ந்து, தருமுகிற் கவிகை யிலங்கிடச்
சிறந்த சபாமலை யிடத்தினிற் சார்ந்தார். (111)

உடுப்புறம் பொதிந்த மதிதவழ் மலையி னுச்சியி னடுமிசை யுறை
து, கடுப்பறக் கொடுஞ்சொற் பிறந்திடா தமிர்தங் கனிந்தவா யிதழ்
திறந்து தெவர்க்கு மெடுப்பரும் புதுமை யுண்டெனவினத்தோ ரியா
ரையு மினிதுற நோக்கிக், கொடுப்பதற் கெழுமா முகிலினம் பொரு
வாக் குருநெறி முகம்மது விளித்தார். (112)

கல்லகத் துறைந்து முகம்மது விளித்த கட்டுரைகேட்டனு மினத்
தோர், பல்லருஞ் செறிநது திரளொடு மெழுந்து பார்த்தறி குவமென
நடந்து, செல்லிடம் பிரியாக் கருமுகிற் கவிகை நீழலிற் சேட்டிளங்
கதிர்விட், டெல்லவ னெழுந்த தெனநபி யிருந்த விடத்தினி லுறைந்
தன ரன்றே. (113)

காரண முளதென் றுரைத்தெமை விளித்த கருத்தறி கிலமெனக்
கடிதி, னாரவ ருரைப்ப வானவ ருரைத்த வுரையினை யுளத்தினி லிருத்

தித், தாரணிப் புறத்திற் றெறும்படை திரண்டு வந்தது தமர்க்கிட ரெ
ணையா, வீறமுற் றுரைப்ப வெவர்க்குமுனை மையதா யிருப்பதோ வென
நபி யிசைத்தார். (114)

உரைத்தசொல் லெவர்க்கு முறுதிநின் னையமென் றனைவரு
முரைத்திட மகிழ்ந்து, நிரைத்தகுங் குமத்தார்ப் புயநபி யினியா னிகழ்
த்திய மார்க்கநன் னெறியைத், தரைத்தலைத் தீமான்கொள்ளுதற் கிசை
யாத் தரம்படைத் தவரனை வரையுங், களைத்திட நனிய தாபெனுங்
கொடிய கடும்பிணி பிடித்திடு மென்றார். (115)

கூறிய மொழிகேட் டபூலகு பெனுமக் கொடியவ னிருவிழி செ
வந்து, மாறுபட்டிதற்கோ குலைத்தொடுங் கெடுவாய் வரவழைத் தனை
யெனச் சீறித், தேறிலா துறுக்கி யிருகரம் புதைப்பச் செறிதரு பூழ்
தியை வாரி, யீறிலான் றூதை முகம்மதைச் சிறிதுமெண்ணிலா தெ
திர்ந்துநின் றெறிந்தான். (116)

அடர்ந்தெதிர்த் துரைத்த கொடியவ னபூல கபுபுலி யிடத்து மாகி
றத்து, மிடைந்திடும் பெருங்கே டுடையவனிவனே யென்னுமப் பொரு
ளுரைபிறப்பத், துடங்குதப் பத்யதாவெனத் தோன்றுஞ் சூறத்தொன்
றிறங்கிய துலகிற், கிடந்தறும் மறையுந் தெரிதரப் புரிந்த கிளரொளி
முகம்மது நபிக்கே. (117)

சூறத்தின் பொருளை முகம்மது முரைப்பத் துணுக்குறு தனது
ரை யுறகிற், றேறத்துன் புறுங்கே டெனக்குவந் தடைந்தாற் றேடிய
திரவியமனைத்து மீறத்தந், திருக்களித்திட ரதனை விரைவினிற் போக்
குவ னென்னப், பேறத்த மிலசொ லுரைத்தன னெவர்க்கும் பெருங்
கொலைப் பிழைவிளைத் திடுவான். (118)

இறையவன் றூதர்க் கிசைத்தசொற் கெதிரா யிசைத்திடு மபூலகு
பென்போ, னிறைதரும் பொருளு மிழந்துத வாம னெட்டுடற் பெருந்
தலை யாவ, முறைதரு நரகம் புகுவனென் றுயத் திறங்கிய துலகெ
லாம் விளங்க, மறைமொழி பயிற்றுரு செவ்விதழ் மணிவாய் முகம்
மது மனமகிழ் பெறவே. (119)

அவனியிற் கேடு முடிவினி னாகு மடைகுவ னபூலகு பெனவே,
செவியுற வாயத் திறங்கிற்றென் றுறைத்த வுரைக்குஞ் சேர்தருமின
மனைத்துங், கவின்ற அதாபென் றெருபிணி பிடிக்கு மென்றகட் டுரை
க்குமே கன்றித், தவிர்கிலாவயிர மனத்தராய்க் காபிர் தனித்தனி கொ
லைத்தொழி னினைத்தார். (120)

வேறு.

தேந்தரு மினியசொற் செவ்வி நந்நபி
யர்ந்தசொ ணுணர்ந்திசு லாத்திலாகிய
மாந்தரைப் பிடித்தக மறுக்க முற்றற
வீய்ந்திட விடர் பல விளைத்திட் டார்களே. (121)

வீசுவர் சிலர் தமை விடுத்து நன்மொழி
பேசுவர் சிலர்தமைப் பிடித்துப் புன்மொழி
யேசுவர் சிலர்தமை யிரண்டு பட்டுறும்
பூசலுக் கடிப்படை புணர்த்து வார்சிலர். (122)

மாயவன் முகம்மது வருத்த மார்க்கத்தி
லாயின னிவனென வடுத்தம் மாறையுங்
கூயவன் றந்தைபா சிறையுங் கோதிலாத்
தாய்சுமை யாவையுந் தமக்கை தனையும். (123)

பிடித்தனர் சினத்தொடிந் நான்கு பேரையு
மடித்தன ரிருகர மழுந்த வங்கமுந்
துடித்திடக் கயிற்றினிற சுருக்கிப் பாதலம்
வெடித்திடச் சுடும்பரல் வெயிலி லாக்கினார். (124)

எங்குவ ரேங்குவ ரிருந்த ணீர்விழத்
தேங்குவ ரடிகசடி தீனை மாறியு
நீங்குவ திலலென நினைநதிட் டொராகம்
வீங்கிட நெட்டுயிர பெறிந்து விழ்குவார. (125)

தங்கிய சூரியன் றழலின வெய்யொளி
மங்கியுபா வீரலும் வறந்து தீய்ந்திடப
பங்கிகள் பூழ்கியிற் பதிய மூட்டிய
வங்கியிற் கிரியியொத் தறிவு போக்கினர். (126)

வேனலிற் கிடந்துடல வெதும்பிச செவ்வரி
பானலைத் தருவிரோ பாபபி யுள்ளுடைக
தானென வியாபபெறிந துதிர நநநபி
தீனிலை மறுத்திலா செவ்வி யோர்களே. (127)

உறுக்கினர் செழுங்கர முரத்தொ டொன்றவே
பிறக்கின ரடிக்கடி யெடுத்த தீவினை
முறுக்கின ரல்லது முட்டுந தண்டனைக்
குறுக்கின ரிலைக்கொலைக் கொடுமை யாளரே (128)

நன்னிலை கெடிமவர் நடத்தும் வல்வினை
யின்னல்கண் டெழினபி யிடருற் றாரொடு
மன்னிய துயரினைப் பொறுத்த மாட்சியாற்
பொன்னுல குமக்கென வுரைத்துப் போயினா. (129)

மண்ணிடை கணவனை நோக்கி மைந்தனை
யெண்ணுற நோக்குவ ளிதயம் வாடுமப்
பெண்ணினை நோக்குவள் பெய்யுஞ் செந்தழல்
விண்ணினை நோக்குவள் வீடு நோக்குவாள் (130)

யாசிறு மனைவிநல் லறிவுக் கில்லிட
மாசறத் தீன்பயிர் வளர்க்கும் வேலியார்
பாசமற் றவரிடர் பார்த்தி லேனெனக்
காசறு கொன்னபர் காணப் போயினார். (131)

தெரிமறை முகம்மதின் தீனுக் காகவே
யிருநிலத் திடைமுத லிறந்து தேன்சொரி
மருமலர் சுவர்க்கமா ராயம் பெற்றவர்
தருஅம்மா றுடையதா யெவர்க்குந் தாயரே. (132)

அனைமென் னடைச்சுமை யாவென் றோதிய
மினைம ருலகிடை மேய பின்னெடு
வனணிபின் குழிக்குடல் வளர்க்கும் பாதக
ருன்னிய கொடுஞ்சின மொழிந்தி லாரரோ. (233)

துன்னல ரிழைத்திடுந் துன்பத் தாலடன்
மன்னவன் யாசிறு மகளும் வாடிநின்
றின்னலி லிடைநதிடைந் திறந்து சோதிவாய்ப்
பொன்னுல கினிற்குடி புகுதப போயினார். (134)

தந்தையு முடன்பிறந் தவளுந் தாயரு
மிநதவல் வினையினா லிருந்திட் டாரென
மந்தரப் புயரம்மா றென்னு மன்னவர்
சிநதையிற் சூழ்ச்சியோன் றன்னித் தேறினார். (135)

வாயினி லொன்றுந்தம் மனத்தி லொன்றுமத்
தீயினுங் கொடியவ ரிடத்திற செயபியே
மேபதுன் பனைத்தையும் விலக்கி விலவிடுஞ்
சாயக மெனநபி யிடத்திற் சார்ந்தனர் (136)

மாதவ ரிடம்புகுந் தமரர் வாழ்த்திய
பாதபங் கயமல ரிறைஞ்சிப் பற்றொடுங்
கோதறு தீனிலை நிறுத்துங் கொற்றவர்
சீதவொண் கட்கடை யருவி சிந்தினர். (137)

அழுதவர் திருமுக நோக்கி யங்கையாற்
செழுமலர்க் கண்ணினீர் துடைத்துத் தீயவர்க்
குழுவினைக் கடந்திவ ணடைந்த கொள்கையை
மொழியென வுரைத்தனா முதல்வன் றாதரே. (138)

பெற்ற ரிருவரும் பிறப்புந் துஞ்சின
ருற்றவ ரிலையென வுன்னினை யுண்மையை
முற்றுறக் கருத்தினின் முடித்துக் காபிர்கள்
சொற்றவைக் கேற்பவை சொல்லி னேனென்றார். (139)

ஆக்க மற் றவரிட ரடுக்கி வின்னமும்
வாக்கினி லொருமொழி வழங்கி யுண்மையைப்
போக்கறச் சிந்தையுட் பொருத்தித் தீவினை
நீக்குதல் கடனென நிகழ்த்தி னாரரோ. (140)

இவ்வண நிகழ்ந்திவ ணிருக்கு நாளையி
னெவ்விய மனத்திபு னுகல பெண்பவன்
வெவ்விய னடிமையி லாலை நோக்கிமா
செவ்விய னிவனென நகைத்துச் சீறினன். (141)

அடிமைய னறிவில னறியுந தனனுரைப்
படிநட வாமுரண் படித்த வஞ்சனபொய்
பிடிபடி முகம்மதின் பேச்சுக் குட்படுங்
கொடியவ னிவனெனக் கனன்று கூறினன். (142)

மாயவஞ் சனைத்தொழின் முகம்ம தின்வயின்
போயிசு லாத்தினிற் புகுந்த தென்னெனக்
காயெரி நிலத்திடை படுத்திக் கல்லெடுத்
தேயவ னுரத்தினி லிருத்தி னனரோ. (143)

படருல முரத்தினிற் பதியப் பார்க்கரன்
சுடுகதிர் நிலத்திடை சோர்ந்து மூசசெறிந்
துடலுலைந் துள்ளுயி ரொடுங்குங் காலையி
லிடர்தவிர்த் திருவிழி பெரிய நோக்குவான். (144)

மற்றுமத் தரையிடை கிடத்தி மார்பக
மிற்றிடப் பெருஞ்சிலை யுரத்தி லேற்றுவன்
சற்றொரு நொடிவரை தவிர்ந்தி ரான்மனப்
பற்றறு மிரக்கமி லாத பாவியான். (145)

நெஞ்சினிற் பெருஞ்சிலை சுமந்து நீங்கிலா
வெஞ்சுரத் திடையிடை யிடைந்தும் வேதநூல்
விஞ்சையின் முகம்மது விளக்கு முண்மையை
யஞ்சலித் தவனலா லறிவு நீங்கிலான். (146)

இபுனுகல் பவனிட ரென்னுந் தீயினி
னவிந்த மெனப்பிலால் நடுங்க விண்ணுமிவ்
வவனியும் புகழ்நபி தோழ ராகிய
கவனவாம் பரியபூ பக்கர் கண்டனர். (147)

பொறுக்கரும் வேதனை பொறுத்து நின்னய
மறுக்கில னிவனென மதித்துக் கூறிய
வெறுக்கைகொண் டடிமையி லாலை மீட்டினம்
பெறற்கரு முரிமையா னென்னப் பேசினார். (148)

மன்னிய புகழபூ பக்கர் மாசிலா
நன்னிலை யவனறனை யுரிமை நாட்டிய
பின்னரும் பகைப்பிணி பிணிப்பு நீக்கியே
தன்னரு ளொடும்பெருந் தீனைத் தாங்கினார். (149)

வேறு.

திருநெறித் தீனுல்லோரைத் தீநெறி மாறினோர்கண்
பருளுடை மனத்த ராகி முரண்மறு திருக்கு நாளில்
விரிகதி ரிலங்கிச் சோரார் மெய்நிணர் பருகும் வெள்வேற்
காதல ஹம்சா வென்னுங் காளைகா னிடத்திற் புக்கார். (150)

மெல்லிலைக் கானத் தேகி விலங்கினம் வேலிற் றுக்கிப்
பல்லருங் குழுமி யார்ப்பப் பரிவொடும் வேட்டை யாடி
யொல்லையி லடவி நீந்தி யுள்ளகம் பூரித் தோங்கச்
செல்லுறை புரிசை வேலித் திருநகர் சாருங் காலை. (151)

செல்லுறழ் காச்சுத் ஆமென் றோதிய செவ்வித் தோன்ற
வில்லுறைத் தொழும்பி னுள்ளா ளிளங்கொடி யொருத்தி வெற்றி
வில்லணி தடக்கை யேந்தி வரும்விறல் ஹசா வென்னும்
வல்லிய மெதிரிற் புக்கு வாய்திறந் துரைக்க லுற்றாள். (152)

ஒன்னலர்ச் செருக்கும் வேலோ யுமதுயிர்த் துணைவ ரீன்ற
மன்னர்மன் னவரைச் செல்வ முகம்மதை வதனநோக்கி
யின்னலுற் றகமுங் கொள்ளா விழக்கொடும் வழுக்கொண் மாற்ற
முன்னியுற் றுரைக்க வொண்ணா தபூஜகு லுரைத்த தன்றே. (153)

கைப்புரை சினக்கக் கூறுங் கருதலன் முகத்தை நோக்கி
மைப்படுங் கவிகை வள்ளன் மறுத்தென்று மொழி கிலாம
லெய்ப்புறு மனத்த ராகி யினமில்லாத் தமியர் போலச்
செயப்படும் வசன மொவ்வாச் செம்முகம் வெளிறித் தென்றாள்.(154)

பழுதுறுங் கொடியமாற்ற மபூஜகல் பகர்ந்த வெல்லாம்
பொழிகதிர்ப் பொருப்புத் திண்டோட் புரவலர் பொறுத்தாரென்
ன, வழுவறு ஹம்சா கேட்டு மனத்தினுள் வேக மீறிக்
குழுவெடுந் திரண்டு வைகுங் கொடியவ னிடத்திற் சார்ந்தார். (155)

படிறபூ ஜகுலென் றோதும் பாதகன் வதன நோக்கி
யடல்முகம் முதுவைச் சொல்லா தவமொழி பகர்ந்த தெந்த
மிடலெனச் சினந்து சீறி வீரவேற் றடக்கை வில்லா
லுடைபடச் சிரத்திற் றாக்கி யுறக்கொடுங் கறுத்துச் சொல்வார்.(156)

துனிமனத் துறைய முன்றோன் றோன்றலை யுறைத்தா யென்னி
னினியெவை யுரைப்பா னியானு மியனபி மொழிந்த மார்க்கந்
தனினடு நிலைமை யானேன் சாதியிற் றலைவர் கூடி
நனிபகை வரினுங் காண்பேன் காணுநீ நவிற லென்றார். (157)

அணிதிகழ் ஹம்சா வஞ்ச மடாபூ ஜகுலை நோக்கித்
தணிவிலா வெகுளி மாற்றஞ் சாற்றலு மவனைச் சூழ்ந்து
பணிபனீ மகுசூ மென்னுங் கிரளவர் பலருங் கோபத்
துணிவுட னமருக் கேற்ற சுடர்ப்படைக் கலன்க ளேற்றார். (158)

இனத்தவர் நெருங்கிச் செவ்வா யிதழ்மருத் திழிகண் சேப்பச்
சினத்ததும் ஹம்சா வென்னுஞ் சிங்கவே றியல்பு நோக்கி
மனத்தினி லடக்கச் செவ்வி மதியொடுந் தமருக் கேற்பக்
கனத்துரை யெடுத்துக் காட்டி யபூஜகல் கழற லுற்றான். (159)

அங்கவன் றனையன் மைந்த னகுமதை வாய்க்கொள் ளாத
பங்கமுற் றுறுஞ்சொற் கேற்பத் தண்டனை படுத்தல் செய்தா
னங்குலத் தவர்க்குக் கோப நடத்துதல் பழுதென் றோதி
வெங்கொலை மனத்து ளாக்கி விளைபகை தவிர்த்து நின்றான். (160)

அடலரி ஹம்சா கோபித் தபூஜக லவையை நீந்திக்
கடிமலர் மாவத் திண்டோட் கணவரை கதித்து வீங்க
வுடைதிரை யமுத மொவ்வா தோதிய கலிமா வேந்த
ரிடைவிடா திருப்பத்தோன்று மெழின்முகம்மதுவைச் சார்ந்தார்

வள்ளலென் றுதவுஞ் செவ்வி முகம்மதின் மதுர வாக்கின்
விள்ளரு மறையின் றீஞ்சொல் விடுத் தெடுத் துரைப்பத் தேறி
யுள்ளமு முடலும் பூரித் துருசிக்கு மமுதின் மிக்காய்த்
தெள்ளிய கலிமா வோதித் தீனிலைக் குரிய ராணர். (161)

அறிவுறும் ஹம்சா தீனி லாயின ரென்னு மாற்ற
மறவுறை குமரர் கேட்டு மனத்தினிற் றன்ப முற்று
ரிறையவன் றூதர் செவ்வி யியனபி கலிமா வோதுந்
திறல்புகழும் வேந்த ரியாருஞ் சிந்தையிற் செல்வம் பெற்றார். (162)

தீனிலைகண்ட படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-3-க்குத் திருவிருத்தம்-262.



## உமறுகத்தாபீமான் கொண்டபடலம்.

சமா கேசரி யப்துல்லா தருதிரு மதலைக்
கமார் கோனிழிந் தருநபி யெனும்பெய ரளித்துத்
திமிர வெங்குபிர் கடிந்துதீ னிலைநெறி நிறுத்திக்
கமைத ரும்படி யாண்டுநான் கெனக்கடந் ததற்பின். (1)

வருட நான்குசென் றைந்தினின் முகம்மது மொருநா
ளிரவி னிற்றனித்திருந்திரு கரமெடுத் தேந்திப்
பொருவி லாமுத லிறைவனை யீறிலாப் பொருளை
யுருகு மெய்ம்மன வாக்கொடும் புகழெடுத் துரைத்தார் (2)

உலகி னிற்கரு தலர்க்கட லரியும றிணைக்கொண்
டலதபூ ஜகுலினைக் கொடுதீ னிலை யதனைப்
பெலனு றும்படி யெனக்கருள் பிறிதிலை யெனவே
நலனெ டுந்துஆச் செய்தனர் முகம்மது நபியே. (3)

இந்த மன்னர்க ளிருவரி லொருவரென் வசமாய்த்
தந்து தீனிலை நிறுத்துவை யெனத்தனி முதலைப்
புந்தி கூர்தர வுரைத்தனர் கேட்டனர் புகழ்ந்தார்
சிந்து வெங்கதி ரெழுந்தது விழுந்தது திமிரம். (4)

அற்றை யிற்பகற் போதினி லபூஜகு லவையுள்
வெற்றி வேந்தர்கள் பலருட னுமறையும் விழித்துக்
கற்ற வாள்வலி யவர்க்குறு கருமமென் மனத்தி
னுற்ற தொன்றுள தியாவருங் கேண்மினென் றுரைத்தான். (5)

திக்கு நான்கினுந் திசையினுந் தேயங்க டனினு
மக்க மேயிக லறுந்தலம் வெனுமைப்பு பஃதே
மிக்க வீரத்தி னம்பினத் தவரின் மேலோ
ரொக்கு மியாங்தொடுத் ததின்முடி யாததென் றிலையே. (6)

பதிக்கு நம்மினத் தவர்க்குநல் வழிக்குமுட் பகையா
யுதிக்கும் பாதகர் போனபி முகம்மதென் றுதித்தான்
சதிக்கும் வஞ்சனைத் தறுகண னிவன்றனைப் பொருளாய்
மதிக்க வேண்டுவ திலையினி வதைத்திட வேண்டும். (7)

உதிரஞ் சிந்திட முகம்மதி னுயிர்செகுத் தவர்க்கென்
பதியி னுற்றதெப் பொருளுள தப்பொருள் பலவு
நிதியு மீய்குவ னெனக்கர செனநிகழ்த் திடுவ
னெதிரும் வீரர்க ளுளரெவ ரெனவெடுத் திசைத்தான். (8)

மானம் போக்கிய கொடுங்கொலை விளைத்திடு மனத்தா
னீன னிவ்வுரை பகர்தலு மவையகத் திருந்தோ
ரான திவ்வுரை தீங்கிவை யெனவுரை யாடா
தான ருந்திய வேனுழை பவரையொத் திருந்தார். (9)

வெற்றி வீரத்தின் மிக்கவ ரெவரென விரித்துச்
சொற்ற திறகடு வெகுளியுற் றிருவிழி சுழல
வுற்று நோக்கிவெற் பதிர்த்திடு முறுவலிப் புயங்க
ளிற்ற தோவென வவைவெரு விடவுமற் றிசைத்தா. (10)

புதிய வேதமொன் றுளதெனும் படிறுரை புகன்றிப்
பதியி னுள்ளவர்க் கருங்கலை யெனப்பகை விளைத்த
மதுகை மன்னவன் முகம்மதி னுடல்வதைத் திடும்வா
ளிதுகொல் காணுதி நீவிரென் றட னுவ றெழுந்தார். (11)

குறுக லாருயி ருதிரங்கொப் பிளித்தகுற் றுடைவா
ளிறுக வீக்கிமற் றொருபடைக் கலம்வல னேந்தித்
தறுகி லாமன வலியொடு புயவரைத் தடத்தி
னுறைகொள் குங்குமத் தொடைபுரண் டசைந்திட நடந்தார்.

உமறெ ழுந்திடும் வெகுளியி னுடையவ னருளா
லமரர் தங்களி லொருவரா னேறுரு வாகிக்
கமல மென்பத முகம்மதி னரும்பகை களைய
விலைமொ டிக்குளந் தரமிருந் தவனியி னிழிந்தார். (13)

காற்றி ரட்சியுங் கவையடிக் குளம்பின்கட் டுரமு
மேற்றி ருக்கற வளைந்தெழு மருப்பினில் வியப்புங்
கூற்று ருதுருள் கழுத்தடித் தோனெளிக் குழைவு
நாற்றி மேற்றுளை நாசியிற் றவழ்தரு நாவும். (14)

அசைத்த வாலெடுத் திருபுடை புடைத்துமண் ணதிர
விசைத்த கால்களி லுலவித்தண் பசியபுன் மேய்ந்து
பசித்த வள்ளுகிர் நிகரும றேகிய பாதைக்
கிசைத்த டுத்தது வானகத் துருமெனு மிடபம். (15)

உலங்கொ டிண்டிறற் புயனும றெனுமொரு சீயங்
கலன்கள் வில்லிட வியர்ப்பொடும் விழிக்கனல் கதுவத்
துலங்கு செவ்விதழ் வெள்ளெயி றதுங்கிடச் சுடர்வா
ளிடங்கி டத்தனி வருவது நோக்கிய திடபம். (16)

கவ்வை யங்கடற் புவியினின் முகம்மதைக் கசப்பத்
தெவ்வ ரில்லென மனத்திடை களிப்பொடுஞ் சிரித்துக்
குவ்வ திர்ந்திட வுமறுமத் தாவெனக் கூவி
யெவ்வு ழித்தனி செல்குற்றீர் நீவிரென் றிசைத்த (17)

உரைத்த சொற்செவி புகவுழை யெவரென நோக்கித்
தரைத்த லத்திவ ணொருவரு மிலரெனச் சார
விரைத்த லோடுமவ் வுரைபகர்ந் துமறெனை விசைப்பத்
திருத்தி நாற்றிசை யெங்கணு நோக்கினா செம்மல. (18)

கூறு மாந்தர்க ளிலையெனப் பினுவழி குறுக
வேறு கூவிய தெவரென மறுத்துமுள் ளிடைந்து
வேறு மாக்களைக் காண்கிலர் விடையினை நோக்கித்
தேறு மிவ்வுரை பகர்ந்ததிங் கெவரெனத் திகைத்தார். (19)

பருந்தெ ழுங்கதிர் வேலும றெழின்முகம் பார்த்து
வருந்தி லாதுமைக் கூவிய தியானென மதித்துப்
பொருந்து மில்லிடந் தவிர்ந்தெவண் புகுவது புகழோய்
விரிந்த வாய்திறந் தறையுமென் றுரைத்தது விடையே. (20)

ஞானமாமறை முன்னவா மொழிநட வாம
லீனமின்றிய தேவத மனைத்தையு மிகழ்ந்து
மாணி லத்தினிற் புதியொரு மார்க்கமுண் டாக்கித்
தீனெ னும்பெயர் நிறுத்தித்தன் னுரைப்படி திருத்தி. (21)

இனமெ லாம்வெறுத் திடப்பகை பெனத்தலை யெடுத்துத்
துணிவி ளைத்திடு முகம்மதி னுடறுணி துணித்துச்
சினம கற்றுதற் கெழுந்தன னெனத்தெளிந் தெதிராய்
வினவு மேறுடன் மொழிந்தன ருமறெனும் வீரர். (22)

ஆதி தூதரை வெறுத்துல கடங்கலுந் திரண்டு
வேத னைத்தொழில் விளைக்கினு மவாவயின் விளையா
தேத முற்றதும் மனமலி யிடரினைத் தவிர்ந்து
போதல் வேண்டுமா னுமக்கென மறுத்துரை புகலும். (23)

பரிக ரித்திரட் படையொடு நிலத்தினிற் பரப்பி
யரச ராயிர ரிகலினின மனவலிக் கணுவே
திரம தாயினு முகம்மதி னிடத்தினிற் சேற
லுரம தன்றுநி னானது முறனல வுரவோய். (24)

படைக லத்திலொன் றெடுத்தறி யாப்பகுத் தறியா
விடைக்குண் மெல்லிய னிளமையன் றனியவன் வினையேன்
புடைக்குள் வீரத்தை விளைத்தியேன் முகம்மதின் புகழை
யுடைக்கு நின்வலி யென்பதை யறிவனென் றுரைத்த. (25)

நந்தி யிவ்வுரை பகர்ந்திட நரபதி யுமறு
கந்த டாதெறி களிறென விருவிழிக் கனல்கள்
சிந்தி டக்கரும பிருகுடி நுதல செலச் சினந்து
மந்தி ரக்கதிர் வாளெடுத் தசைத்தெதிர் வந்தார். (26)

எதிர்த்து நின்றற வீசினர் வீசலு மிடபங்
குதித்துத் தம்வலப் பாரிச மாகின குறுகி
மதித்து வீசலு மிடப்புற மானது மறுத்தும்
பதித்து வீசலும் பிற்புற மானது பறந்தே. (27)

நான்கு திக்கினுங் குதித்துமுன் னணித்துற நடக்குந்
தேன்கு தித்தசெந் தொடைப்புய ரூரத்தொடுஞ் சினந்து
வான்கு தித்தமின் னெனக்கர வாளொளி மயங்கத்
தான்கு தித்தனர் துரத்தினர் திரிந்தனர் சாரி. (28)

எட்டி யொட்டுவர் வெட்டுவர் வெட்டலு மிடபங்
கிட்டிடாதக லாதுடல் கிழிபட வெதிர்ந்து
முட்டித் தாக்குற வருவபோ லடிக்கடி முடுகுந்
தொட்டி டாதொழி யாதருஞ் சூறைபிற் சுழலும். (29)

அடுத்து முன்னெதிரத் திருவளை மருப்பினை யசைக்கும்
வெடித்த வாலிரு புறத்தினு மடிக்கடி விசைக்கும்
படித்த லத்துகள் விசும்புறக் குளம்பினிற் பறிக்கு
மிடித்த வானுறு மேறென வதிர்ந்திடு மிடபம். (30)

கண்ணி னுக்கெதிர் தோன்றிடுங் காணுறு தகலும்
விண்ணி னிற்பறந் திடுந்திசை விசும்பெலாந் திரியு
மெண்ணு முன்னுமுன் வந்திடுங் கான்மடித் தெதிரே
மண்ணி னிற்படுத் திடுங்குனிந் தெழுந்துவா னிமிர்க்கும். (31)

இடப மீவ்வணந் திரிதர விருவிழி செவந்து
தொடரு வார்சுடா வாட்கொடு தாக்குவா துரத்தி
யடரு வார்மறிப் பார்திகைப் பாரடுத் தடுத்துக்
கடுவி சைகொளுங் காறளர்ந் திதழினைக் கறிப்பார். (32)

கரத்தை நோக்குவர் வாளினை நோக்குவர் கடுப்பி
னெருத்தை நோக்குவா வீரத்தை நோக்குவ ரெதிராத்
தாதனை நோக்குவ ரலைபினி லஜ்ஜகு லுடனே
யுரைத்த வார்த்தையை நோக்குவா நோக்குவ ருளத்தை. (33)

இன்றி ருந்தெழுந் திகலட லரிமுகம் மதுவை
வென்றி கொண்டன மிலையல தீவனெறி மேவுங்
கன்றி னைக்கடிந் தோமிலை யெனமனங் கசங்கி
நன்று நன்றுநம் வீரமென் றகத்திடை நகுவார். (34)

முனிந்து புன்னகை கொண்டவா ளுமறைமுன் னடுத்துக்
குனிந்து பாதல மோந்துடல் குழைத்தறத் தூங்கிக்
கனிந்த வாயசைப் போட்டிரு காதினை யசைத்து
வனைந்த போலக லாதுநின் றதுமழ விடையே. (35)

வறு முன்னனித் திட்டதென் றெழிற்கர வாளான்
வாறி வீசினர் முடுகின ரடிக்கடி வளைத்துக்
கோறல் செய்குவ னியாமெனக் குவலயங் குலுங்கச்
சீறி முன்னினு மும்மடங் கெனும்படி திரிந்தார். (36)

தொலைந்த திவ்வணம் வெய்யவன் றோன்றுமுன் றொடுத்திட்
டலைந்து லைந்திடைந் தறத்தவித் தசறுபட் டாகக்
கலைந்த தன்றியே றகப்பட வில்லெனக் கலங்கி
மலைந்தி டாமன மறுகுற வுமறுள மலைந்தார். (37)

மட்டு வார்பொழி னெறியிடை மழ்விடை யெதிர்ந்து
வெட்டு மென்றுரை பகர்ந்ததும் வெகுளியி னடந்து
பட்ட செய்தியும் புதுமையு மூரவர் பலர்க்கும்
விட்டு ரைத்திட வேண்டுமென் றெழுந்தனர் விரைவின். (38)

குறித்து வந்தவை விடுத்தெழு முமறினைக் கூவித்
தெறித்த நுண்டுளி முகிற்குடை முகம்மதைச் செகுப்ப
வெறித்த வெஞ்சின வீரத்தின் விழைவுக ளனைத்து
மறைத்தி நோயெனப் புகன்றுபோ யதுமழ விடையே. (39)

கொண்ட வேகமும் வீரமும் புறந்தலை குனியக்
கண்ட காரணத் தொடுமிளைப் பருகெறி காட்ட
விண்டு திர்த்தமெய வெயர்ப்பொடு மெலமெல நடந்து
மணடு போரவை யபூஜகு லிடத்தில்வந் தனரே. (40)

முகம லர்ச்சிகெட் டறத்தவித் துடல்வெயர் முழுகப்
பகும னதும றடைந்தவை யனைவரும் பார்த்து
முகம்ம தின்வயி நடைந்ததும் வகுத்துப்
புகா றும்புக ழோயுரை யெனப்புகன் றனரே. (41)

வேறு.

அறபிகள் குழுவி னொப்ப ணமாபூ ஜகுலை நோக்கிப்
பொறைமதக் கரிகோ டேற்ற புரவல ருயிரை மாந்திக்
கறைகெழுங் குருதி வைவேற் காவல ருமறு கத்தாப்
மறைபடா நெறியிற் கண்ட புதுமையை வகுக்க லுற்றார். (42)

மண்ணினிற் றிசையிற் சூழ்ந்த மறிதிரைக் கடற்குள் வானோர்
விண்ணினிற் பெரியோ ராய்ந்த மெய்ம்மறை தனக்குட் டோர்ந்த
திண்ணிய ருரைக்குட் கேட்ட திலைமனந் தெளிய வென்றன்
கண்ணினிற் கண்ட தியாருங் காணொணாப் புதுமையென்றார். (43)

சாத்திடை விடையொன் றங்ஙன் றனித்துநின் றதிர்ந்தென்பேரை
யுரைத்தது விளிப்பக் கேட்டே னுணர்ந்தியா ரென்ன நேர்ந்தேன்
விரைத்தலி னெங்கே கின்றீ ரெனவிறன் முகம்ம தூற்ற
துரைத்தனக் குறும்புதீர்ப்பத் துணிந்தனென் றுரைத்தன்மாதோ

இனறெனை யடர்த்தோர் செவ்வி யியன்முகம் மதுவை வென்றே
ரென்றதற் கெதிர்ந்து கைவா ளொறிந்தன னுரத்திற் றாக்கி
நின்றனன் மறித்தே னெநத நிலத்தினுந் தொடர்ந்து காலிற்
சென்றனன் றவித்தே னென்னாற் செய்ததொன் றில்லை யன்றே.

காற்றெனப் பறக்கு மூழிக் கணலெனச் சீறுங் கொல்லுங்
கூற்றென வெதிருஞ் செல்லிற் குலவரை யனைத்துஞ் சுற்றுந்
தோற்றிடா விசும்பிற் றாவுஞ் சுழலுமட் டிகிரி யென்னச்
சீற்றமுற் றடுத்துப் பின்னு முனனுமே திரியு மன்றே. (46)

அலகையின் குலமோ வானி னமரரி லொருவன் றானே
வுலகுறுஞ் ஜின்னோ தெய்வ முருவெடுத் ததுவோ செவ்விச்
சிலைநுதல் கதீஜா கேள்வன் செய்தொழில் வஞ்சந் தானோ
நிலமிசை விடையாய்த் தோன்றி நின்றவம் மாயந் தானே. (47)

மாற்றுரை வேதம் பேசு முகம்மதைத் தேடிச் சொல்லு
மாற்றிலிவ் விடையைக் கண்டே னசறுமட் டாகக் கண்ணிற்
றேற்றிடாத் துன்ப முற்ற புதுமையைத் தொகுத்து வல்லை
சாற்றுதற் கமைந்தோன் வீரந் தனைமறுத் திலனியா னென்றார். (48)

கொடுவரி யனைய கத்தாப் குமாரீ துரைப்பக் கேட்டு
விடமெனக் கறுத்துச் சிந்தை விறலபூ ஜகுலுஞ் சுற்றி
யுடனிருந் தவருந் தம்பி லொண்புயங் குலுங்க நக்கி
யடலுறு முமறு கத்தா பணிமுக நோக்கிச் சொல்வார். (49)

ஈதொரு புதுமை யாக வெண்ணினீ ருரைத்தீர் வேத
மாதவன் முகம்மதென்போன் வளர்ததவஞ் சனைக்கு னூறு
பேதமொன் றதற்குச் சாணு திதனைநீர் பிதற்றிப்பேச
நீதுறு மிவைபோ லியாங்கள் கணடதுந் தெரிக்கொ ணாதே. (50)

இன்னமு மிவைபோ னூறு யிரம்விதங் கண்ணுற் றாலு
மன்னவன் விளக்கும் வஞ்ச மதனைநீ ரமைத்தல் வேண்டும்
பன்னுத லெவருங் கேட்பிற் பழுதுறும் பருதி வேலாய்
முன்னுமுன் கருத்தி லுன்னும் மடிமுடித்திடுமி னென்றார். (51)

பொய்யினைப் புகலேன் கண்ட புதுமையைப் புகன்றே னென்று
மெய்யினைப் பொய்யென் றோத வியாவர்க்கும் விதிய தன்றே
ஐயுற வுரைக்க லாகா ததனைய மறைக்க லாகா
வையகத் தியற்கை யீதென் றுமறினை வழங்கிப் போனார். (52)

அற்றைநாட் கழிந்த பிற்றை யடலும றெழுந்து செவ்வேற்
கொற்றவ ரப்துல் லாதங் குமாரைக் கோறல் வேண்டி
முற்றிய மனத்தி னோடு முரண்மதக் கரியை நேராய்
வெற்றிவெண் கதிர்வாட் டாங்கி நடந்தனர் விளைவ தோரார். (53)

நடுவுறு மனத்தார் நீதி நான்மறை தெரிந்த நாவார்
படிறுரை பகராச் செவ்வி யறபிகள் பல்லர் கூடி
யுடனொரு வழக்கைத் தேற்றித் தேறிலா தொளிரும்செம்பொற்
கொடுமுடி விசும்பு தூண்டுங் கோயிலின் வாயிற் புக்கார். (54)

ஆலயம் புகுந்து செந்தே னலங்கரேய் சுவாகு பூம்பொற்
காலிணை யிறைஞ்சி யேத்திக் கைமுகிழ்த் திருந்து நோக்கி
மேலவ வெக்கட் குற்ற வழக்கினை விளங்கக் கேட்டுச்
சாலவுந் தீர்த லாகச் சாற்றுதல் வேண்டு மென்றார். (55)

தோட்டலர் நாற்றும் வாயிற் சுவாகெனும் புத்துத் தன்னை
வாட்டிறற் றறபி வீரர் மகிழ்ந்தெவர் வழக்கி னுட்பப்
பூட்டறுத் துரைக்க வேண்டு மெனப்புகழ்ந் திருக்குங் காலை
தீட்டிய கதிர்வேற் செங்கைத் திறலும றவணின் வந்தார். (56)

வகையறு வழக்குத் தீர்த்துத் தருகென மன்னர் சூழ்ந்த
தொகையினி னுமறென் றோதுந் தோன்றலு மிருப்பக்கண்டு
திகைதெரி விளக்க மாகச் சுவாகெனுந் தெய்வம் வாய்விண்
டகமகிழ்ந் தவையோர் கேட்ப நன்மொழி யாய்ந்து சொல்லும் (57)

மதிகதி ரவனி காயம் வானமற் றெவையும் போற்றும்
புதியவ னுண்மைத் தூதர் நபிகளிற் புகழின் மிக்கோர்
பதியிரண் டினுக்கு மேலோர் படைப்புள வெவைக்கு முன்னோர்
கதிதருங் காட்சி பெற்றோர் ஹபீபெனு முகம்ம தென்போர். (58)

அன்னவர் முன்ன ரேகி யவர்நிலை கொண்ட தீனின்
சொன்னயக் கலிமா வோதித் துணைமல ரடியைப் போற்றிப்
பன்னுமா மறையின் றீஞ்சொற் படிவழு வாது நேர்ந்து
பொன்னுமா மணியும் போலப் பொருந்துத லெவர்க்கும் வேண்டும்.

தேவனன் மொழியென் றெண்சொற் சிந்தையிற் சிந்தித் தோர்கள்
காவல ரெவர்க்கு மேலாய்க் காசினிக் கரச ராகிப்
பூவலர் சுவன நாட்டை பொதுவறப் புரப்போ ராகி
மேவுதீ வினைக டீர்த்து வேதநல் லறிவ ராவார். (60)

வருந்திடா தகலு நுந்த மனத்துறை வழக்கின் சொல்லைத்
திருந்திட வுரையு நீதிச் செவ்வியன் முகம்ம தின்சொற்
பொருந்திட நடவுமென்முன் புகல்வது புந்தி கேடென்
றிருந்தவப் பெயருக் கெல்லா மிணையன வியம்பிற் றன்றே. (61)

புத்துநன் குரைத்த மாற்றம் புதுமையென் றெவரும் போந்தார்
மத்தகக் கரடக் கைமா மடுத்தெறிந் துதிரஞ் சிந்துஞ்
சித்திர வடிவாட் செங்கை யுமறெனுஞ் செம்ம லேற்றி
னுத்தரந் தனையு மிந்த வுறுதியு நினைத்துத் தேர்ந்தார் (62)

றென்னலேற் றுரையுந் தெய்வ நிகழ்த்திய மொழியும் பார்த்து
முன்னுறு காட்சி யேதோ முடிவதொன் றுளதென் றெண்ணித்
தன்னகத் திருத்திச் செவ்வி முகம்மதின் சார்பை மீட்டும்
மன்னுசோ தரியென் றோதும் பாத்திமா மனையிற் சென்றார். (63)

திருமயில் பாத்தி மாவுஞ் செவ்வியல் ஸஹீதுந் தேன்சோர்
மருமலி படலைத் திண்டோன் முகம்மதின் கலிமா வோதிக்
குருநெறி ஹப்பா பென்னுங் குரிசின்முன் னிருந்து செல்வம்
பெருகிய மறைநேர் கேட்டுப் பிரியமுற் றிருக்குங் காலை. (64)

எறுழ்வலித் தடக்கை வெற்றி யெழிலும றிவணு னம்பாற்
குறுகின ரன்னச் செல்வக் குலக்கொடி பாத்தி மாவும்
பெறுகதி ஸஹீதுந் தம்மிற் பேதுற்று நெறிஹப் பாவை
மறைபட விருத்திச் செவ்வி மனைத்திரு முன்றி னின்றார். (66)

மென்னபிக் கீமான் கொண்டோ ரிவரெனும் வெறுப்பி னாலும்
பன்னுமா மறைச்சொல் விளுட் பகர்ந்ததோ ரையத்தாலு
மன்னிய சீல நீக்கி மைத்துனர் ஸஹீதைக் கோபித்
தின்னுயிர் தடிவே னென்ன விருவிழி கனல நின்றார். (66)

கணவனைச் சினந்தா ரென்னக் காரிகை பாத்தி மாகண்
டிணைவிழி முத்தஞ் சிந்த வின்னுயிர்ப் பிறப்பை நோக்கி
மணவலித் தடக்கை வேந்தே மருவலர் போலச் சீற
லுணவது நமக்கொன் றோதி யடர்த்ததை விலக்கா நின்றார், (67)

மடித்தவா ளெயிறு கவ்வி நின்றமன் மடந்தை தன்னை
வெடித்திட வுறுக்கிக் கூறி விழிகனல் சிதறச் சீறி
யெடுத்ததோர் கரத்திற் றண்டா லிளம்பிறை நுதற்கு மேல்பா
லடித்தன ருதிர மாரி யாறுபட் டொழுகிற் றன்றே. (68)

சிரசுடைந் துதிரஞ் சிந்தித் தேங்கிய மயிலை நோக்கி
விரிகதிர் பணிப்பைம் பூணார் வெகுளியுள் ளடங்க தேங்கி
யரிவைநும் மனைக்கு ணீவி ரடிக்கடி யோதி யோதிப்
பாவிய மாற்ற மென்னே தெளிதரப் பகர்மி னென்றார். (69)

படித்தசொ லியாது வேறு பகர்ந்தவ ரெவர்கொ லென்ன
வடித்தடங் கதிர்வேன் மைக்கண் மடமயின் மறைத்துக் கூறக்
கடத்தடக் கரத்து வேழக் காவலர்க் கசனி யொப்பார்
பிடித்தசொற் றனைம ருது விருப்புற்றுப் பின்னுங் கேட்டார். (70)

உடன்பிறந் திகலா நின்ற வுமறெனு முயிரை நோக்கி
மடந்தையர் திலத மன்ன பாத்திமா மணிவாய் விண்டு
திடந்தவ முண்மை வேதந் தெளிந்தசொல் லதனைத் தீனைக்
கடந்தவர் புனிதமில்லார் கரத்தளித் திடறீ தென்றார். (71)

முன்னவள் கனிவாய் விண்டு மொழிந்தசொன் மனத்துட்கொண்டு
மன்னவ னடல்கா சிந்தன் மனத்தெளி வதனின் மிக்காய்ப்
பன்னருஞ் சிறப்பு வாய்ந்த பங்கய வாவி நண்ணித்
தென்னுறு கதிர்வேற் சிங்கஞ் சீதநீ ராடி னாரால் (72)

புனைந்தமென் றுகிலை நீத்து வேறொரு புதிய தூசும்
வனைந்தகம் புனித மாக்கி வாவியங் கரையை நீக்கிச்
சினந்தங்கு கதிர்வேற் கண்ணு டிருமனை புகுந்து நீவிர்
நினைந்தவை முடித்தே னியானு நிகழ்த்திய தருள்க வென்றார். (73)

சுந்தரப் புதுநீ ராடித் தூசணிந் திகலி லாது
வந்தபின் னேனை நோக்கி முகம்மதே யுண்மைத் தூதென்
றந்தமி லாதி சொற்ற ஆயத்தும் பொருளுந் தீஞ்சொற்
சிந்துபத் திரத்தை யீந்தார் சிற்றிடை பெரிய கண்ணார். (74)

பத்திரங் கரத்தில் வாங்கிப் பார்த்திவ ருமறு காத்தாப்
சித்திர வரியி லொன்றைத் தெரிவுறத் தேர்ந்து வாசித்
தித்தகைக் குரிய ரியாவ ரெவர்மொழி யிதுகொ லென்னப்
புத்தியுட் களித்துத் தேறிப் பொருவிலா வுவகை பூத்தார். (75)

மறைமொழிப் பொருளைத் தேர்ந்து மானுடர் மொழியீதன்றென்
றிறையவன் மொழியே யென்ன விதயத்தி லிருத்தி வேத
நிறைநிலை மனத்த ராகி நினைத்தவஞ் சகத்தைப் போக்கிக்
குறைபடுங் குபிரைச் சூழ்ந்த குலத்தொடும் வெறுத்துநின்றார். (76)

வழிபிழைத் திருளின் முட்சார் வனத்திடை கிடந்துள் ளாவி
கழிபட விடைந்தெற் றேன்றுங் காலைநன் னெறிபெற் றோர்போ
லழிதருங் குபிரை நீக்கி யகுமது தீனை நோக்கிப்
பொழிகதிர் வதனச் செவ்விப் புரவல ருமறு நின்றார். (77)

ஓதுநன் னெறிக்கு நேர்பட் டிசைந்தன ருமறென் றெண்ணிக்
காதா மகற்றி யில்லுட் கரந்தது தவிர்ந்து ஹப்பாப்
தாதவி ழலங்கற் கோதைத் தையலும் ஸஹீது முற்ற
வேதிகையிடத்திற் புக்கு விளைவது காண்ப நின்றார். (78)

மிருங்கினி னின்ற ஹப்பாப் மன்னவ ருமறை நோக்கித்
தருங்கா தலத்தோய் நும்பாற் சகத்தினும் விண்ணு மொவ்வா
வருங்கன வெற்றி நன்மாராயமொன் றடைவ தாக
நெருங்கிய பொருளா யின்றோர் சோபன நிகழ்வனென்றார். (79)

இணையட றவிர்வெள் வேலோ யின்றிர வுமைதீ னுக்கோர்
துணையென வருள்செய் வாயென் றுதியைத் துதித்துச் செவ்வி
மணவலி புயத்தார் வள்ளன் முகம்மதாண் டிரந்து கேட்ப
வுணர்வுறக் கேட்டே மென்று ரோங்குநன் னெறியை நீங்கார். (80)

எடுத்திவை யுரைத்த ஹப்பாப் தலைவிழித் திரப்போர்க்கென் றுங்
கொடுத்ததிற் செவந்த செங்கைக் கோளரி யுமறு கத்தாப்
கடுத்தவழ்க் திருண்டு சேந்த கயல்விழிக் கதீஜா கேள்வ
ரடுத்துறைந் தவதனங் கென்ன வணியிதழ் வாய்விண் டாரால். (81)

வேறு.

முதிருங் கருஞ்சூற் சலதரத்தை முடியிற் றுங்கிச் செழுந்தேனை
விதிருஞ் சினைத்தண் டலையுடுத்து விளங்குங் குவவுச பாவரைக்குச்
சதுரி னணித்தா யொருமனையுண் டதனிற் றரித்தா ரகுமதுவு
முதிருங் கலிமா நிலைதவறு முதியோர் சிலரு முரணறவே. (82)

மறைமா மொழிநா வொழியாது வளர்க்கு முதியோரினி துரைப்பக்
கறையா ரிலைவேற் காத்தேந்திக் கடிதின் விருப்பி னுடனெழுந்து
குறையா மதிய மெனத்தீனை வளர்க்குங் குரிசின் முகம்மது
முறைவார் பொழில்சூழ் வரையினிடத் துற்றா ருமறு கத்தாபே. (83)

மலையி னிடத்தி னுயர்ந்திருந்த மனையை நோக்கி யெம்மருங்கும்
குலவ நோக்கி மாந்தருறை குறிப்புற் றறியத் தோன்றுமல்
விலகுங் கதிர்மெய்க் குரிசினபி யுறைவ திவனே யெனவிரைவி
னிலைகொள் கபாடந் தனைத்தீண்டி நின்றா ரறிவு குன்றாரே. (84)

இணைத்தாள் செறித்த மணிக்கதவந் தீண்டி யிவணி லடைந்தோர்தி
னணித்தார் புறத்தா ரெனநோக்கி யுமறென் றறிந்தங்கனைவோரும்
பணித்தாழ் குழியிற்களிற்றினம் போற்பதறிப் பயந்துள்ளக்கலங்
கித், தணித்தாரிலை மெய்நடுக்க முறைதவிர்ந்தார் முகங்கள்குவிந்தாரே.

வெருவியுறையா திருந்தவரை விழித்துக் காத்தா லடர்க ளிற்றைப்
பொருவும் ஹம்சா மனம்வெகுண்டு புகழ்தற் கரிய திருக்கலிமா
மருவி வருவா ரெனிலுமறு மதிக்கு மதிக்கும் படியாகப்
பெருகு நலனுஞ் சுவனபதிப் பேறும் பெறுவ ரெனவுரைத்தார். (86)

இகலுந் தீங்கு மனத்திருத்தி யெழுந்தா ரெனிலங் கவர்காத்திற்
றிகழுங் கதிர்வாட் டனைப்பறித்துச் சென்னி களைவ தறுதியிதற்
ககலு மனத்தால் வெருவிடலில வவையீர் மணித்தாள செறிகதவந்
தகவல் விடுமி னெனமறுத்து முரைததார தடததார்ப் புயத்தாரே. ()

அறந்தாங் ககத்தார் ஹம்சாசொல் லறிவு ளிருத்தி மணிக்கதவந்
திறந்தார் திறந்த மனைநோக்கிச் செம்மை குடிகொண் டெழுந்தடல்
வெம், மறந்தாங் கியபொற் புயத்துமறு வந்தார் வானுஞ் செழுஞ்
சோதி, பிறந்தாரெழின நபிக்குரிசில்பிநதாதிருந்தா ரெழுந்தாரே. ()

நாந்தங் குலவி மாவமலர் நறுந்தேன் குளிக்கும் புயவரையோ
டோந்தங் கிடவா ளரியுமறைத் தழிவி யொளிருங் காந்தீண்டி
யிருந்திங் கிவணில் வரும்வாவா றியம்பு மெனக்கென் றெழிலி முற்றுங்
காந்தங் கியகல் லருள்பெருகும் ஹபீபுமு கம்ம துரைத்தனரால். (89)

வரிசை நபியே முகம்மதுவே வானோர்க் காசே புவிக்காசே
யுரிய தனியோன் முதற்றூதே யுமது கலிமா வுரைப்படியே
யரிய மறைதேர்ந் தீமான்கொண் டறத்தா றொழுகும் படிகருத்திற்
கருதி யிவணி லடைந்தேனென் றுரைத்தா ருமறு கத்தாபே. (90)

கூறுங் கலிமா வுரைத்தீமான் கொள்ளும் படிக்கிங் கடைந்தனென
த், தேறு மொழிகேட் டகுமதுதஞ் செவ்விக் கமல முகமலர்ந்து

பேறு மிதுவே கிடைத்ததெனப் பெரியோ ரோதி தனைப்புகழ்ந்து
மீறுங் களிப்பா னந்தமன விறைவாற் றக்கு மீறுரைத்தார். (91)

வல்லோ னயிப்புங் கலிமாவை வகுத்துக்காட்டி முன்னுரைப்பச்
செல்லோர் காத்தா ருமறுகத்தாப் செப்பி யிசுலா நெறிதேக்கி
யல்லார் குபிரைக் கடிதகற்றி யழியாத் தொழுகை முறைபடித்து
நல்லோர் பரவும் படிவணங்கி நறுந்தீ னடக்கந் தனைத்தவிர்த்தார். ()

விரியுங் கதிர்மெய்ச் சிறைத்தடங்கண் விண்ணோர்க் கரசர் பொ
ருப்பினிருந், தருவி யெனச்செய் திடுங்கலிமா வடங்கா நதியின் பெ
ருக்காக்கிச், சுருதி மொழித்தீன் பயிர்தழைப்பச் சுற்றுங் குபிர வெங்
களை தீய்க்குங், குருவி னெறியான் மனங்களிப்புக் கொண்டா ரீமான்
கொண்டாரே. (93)

விதியின் முறையென் றருமதுதாம் விளக்கு முரைகேட் டுமறுகத்
தாப், மதிமெய் மயங்கிடுசனையின் மாயத் துறைநதா ரெனவூரும்
பதியும் பெருக்க வுரைநடத்திப் பற்றா ரிவரென் றபூஜகல்தன, புதி
யமொழியைத் தொல்கிளைக்குப் புகழ்ந்தானபியை யிகழ்ந்தானே (94)

சரியுந் திரைமுத் தெறிநதிரைக்குஞ் சலதிக் குபிரி னிடையினடு
விரியு மமுத மெனுங்கலிமா மேலோ ரொருமுப் பஃதுடனமுன்
றறிய மகடூ வுறுவருமம றரச ரொருவ ரவணியினிற
றெரியு மிலக்க மிகநானகு பதினம ருடனுஞ் சிறந்திருந்தார். (95)

உமறுகத்தாபீமானகொண்ட படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-4-க்குத்-திருவிருத்தம்-357.



# உடும்புபேசிய படலம்.

வடிவுறு புமறெனும் வள்ள லந்நபி
யுடனுயர் தீனிலைக குரிய ராயின
ரிடமுடைத் தவர்களாய்ச் சிந்தை யிற்பெறு
படமக றாப்பெரு மகிழ்ச்சி யெய்தினார். (1)

செயிரறு தீனிலைக் குரிய செவ்விய
டயிரென வருங்கலி மாவைப் பண்பொடு

நயனுறப் பெருக்கிய நண்ப ரியாவரு
முயிரென முகம்மதை யுவந்து காமுற்றார். (2)

உடலுயி ரெனவுவந் துறையு நாளினி
லடலபூ பக்கரு மலியுந் தெவ்வாரைக்
கடவிய வேற்கர வுமறுங் கள்ளவிழ்
மடறிகழ் மாலிகை யறபி மன் னரும். (3)

தோமகன் முகம்மது நபியுஞ் சூழ்வர
மாமதி னகர்ப்புறத் தெய்தி ற்றொரு
தேமலர்ப் பொழிலிடை தெரிய வைகினார்
காமரு மதியமுங் கணமு மென்னவே. (4)

செல்லிடுங் குடைநபி செவ்வி காண்டலுங்
கல்லொடு மாமும்புற் காணும் வாவியு
மெல்லிய சிறைப்புளும் விலக்கி னங்களு
மொல்லை யூர் வனவனத் துகளுஞ் சாதியும. (5)

தோற்றிய தெவ்வையுந் துலங்கக் கேட்பதாய்
மாற்றருஞ் சுருதியின வசனந் தன்னொடும்
போற்றரும் புகழ்ச்சியாற் புகழ்ந்து பொங்கிய
லூற்றமுற் றுயர்சலா முறைத்து நினறவே. (6)

கானகத் துற்றகா ரணங்க ளியாவையுந
தீனவர் செவியுறத் தேக்கிச சீரெபற
வானவர் புகழ்தா மக்க மாநபி
யினமின மனையகத தேகி னாரோ. (7)

அற்றையிற் போழ்தவை யகனறு பின்னைநாள்
வெற்றிவெங் கதிரயில் வீர ரியாவருஞ்
சுற்றிட மெய்யெழி றுலங்க மாநபி
மற்றொரு தலத்திடை வைகி னாரோ, (8)

நல்லறி வுடையவர் சூழ நந்நபி
யில்லிருந தெழுந்திவ ணிருப்ப மற்றொரு
வில்லினன வலையினன் வேடன் கையினிற்
கல்லிய தடியொடுங் கானி லேகினான். (9)

கானகஞ் சுற்றியுங் கல்லைத் தள்ளியு
மானினந் தடைபட வலைகள வீக்கியுங்

தான்மலை முழைஞ்சினுத் தடவி நோக்கியு
முன்புசித் திடுவதற் கொன்றுங் காண்கிலான். (10)

அடவியிற் புகுந்தரும் பதுக்கை சுற்றியோர்
புடையினின் முசலிகை புகுதக் கண்டனன்
றடைபட வலைவயின் சாய்த்து மேற்சிலை
யுடைபடத் தாக்கித்தன் னுரத்திற் பற்றினான். (11)

வள்ளுகி ருடும்பினை வலைக்குண் மாட்டிவை
முள்ளுறை கானமு முரம்பு நீக்கித்த
னுள்ளக மகிழ்வொடு முழையர் சூழ்தர
நள்ளுறை முகம்மது நபியை நோக்கினான். (12)

மன்னிய வஃறினாரி னுப்பண் வைகிய
தென்னிவர்க் குறுஞ்செய லியாது கொல்லென
முன்னிய வேட்டுவன் மொழிய வாகித
னன்னிலைத் தூதிவர் நபியென் றோதினார். (13)

மைமுகிற் கவிகைநன் னபிமுன் வந்துநின்
றெம்மறைக் குரியவர் நீவி ரெந்நெறி
செம்மையி னடத்துத றெளியச் செப்புமென்
றிம்மொழி யறபிவேட் டுவனி சைத்தனன். (14)

கூறிய வறபியைக் குறித்துக் காசினிக்
கீறினில் வருநபி யான லாதிலை
யூறிய பொருட்புறுக் கானென் றோதிய
* தேறுநன் மறையெனக் குற்ற செவ்வியோய். (15)

என்னுரை நினதிசு லாத்தி லாயினோர்
மின்னொளிர் மாளிகைச் சுவன மேவுவர்
மன்னியிம் மொழிபழு தென்னும் பாவியோர்
வன்னியின் குழியிடை கிடந்து மாழ்குவார். (16)

ஈதுநன் றெனமன மிசைந்தென் னுவினி
லோதிய நன்கலி மாவை யோதிநின்
பாதகந் துடைத்துநற் பதவி யெய்தென
வாதிதன் றூதுவ ரறைந்திட் டாரரோ. (17)

---

* ஏறு மெனக்குற்ற நன்மறை யென்றுணர்க.

தெரிதர நன்மொழி தெளித்த நந்நபி
மரைமலர் செவ்விய வதன நோக்கிநும்
முரைமறுத் திலனெனச் குண்மையாகவித்
தரையினி னபியெனச் சாட்சி வேண்டுமால். (18)

கானிடை யறபியிவ் வுரையைக் காட்டலுந்
தேனகு மலர்ப்புயச் செவ்வி நந்நபி
வானிடை மண்ணிடை படைப்பின் மற்றதி
லீனமில் கரியுனக் கியைவ தேதென்றார். (19)

கடும்பாற் கான்கவிழ் வலையி னுட்படு
முடும்பென திடத்திலொன் றுளது முள்ளெயி
றிடும்பகு வாய்திறந் தினிதி னுகநும்
மொடும்பகர்ந் திடின்மறுத் துரைப்ப தில்லையே. (20)

என்றுரை பகர்ந்தவ னிதயங் கூர்தர
நன்றென முறுவல்கொண் டினிய நந்நபி
குன்றினிற் றிரிதரு முடும்பைக் கூடிய
மன்றினில் விடுகவென் றுரைவ ழங்கினார். (21)

கானிடை திரிந்தறத் தவித்துக் காறளர்ந்
தேனினி விடிலுடும் பெளிதி னெய்திடா
தானதான் மடிபிசை யாக்கி னேனறுந்
தேனவி ழலங்கலோ யென்னச் செப்பினான். (22)

எடுத்துன துடும்பை யென்னிடத்தின் முன்னிதாய்
விடுத்திடி லகன்றிடா தெனவி ளம்பலு
மடுத்தமென் மடிபுகு முடும்பை வாங்கியங்
கடுத்தனன் விடுத்தன னறபி வேடனே. (23)

நெடுந்தலை யெடுத்துவா னிமிர்த்து முள்ளெனப்
படுந்தாத துகிர்நிலம் பதிப்ப வூன்றியெள்
ளிடுந்தரை யகன்றிடா திறைவன் றாதெனத்
திடந்தர மனத்தினிற் றெளிந்து நோக்கிற்றே. (24)

ஆரமு தனையசொல் லரிய வாய்திறந்
தோர்மொழி நந்நபி யுடும்பைக் கூவலுஞ்
சீர்பெற விருவிழி திறந்து நோக்கினி
தீர்தரு நாவெடுத் தியம்பிற் றன்றரோ. (25)

இகம்பர மெனவரு மிருமைக் குண்மையா
யுகம்பல வதிக்குமுன் னுதித்துப் பின்னுதித்
தகம்பயி லாணைத் துறைந்து செப்புமுச்
சகம்புகழ்ந் திடவருந் தக்க நீதியோய். (26)

அண்டர்கள் பரவுநம் மடியை நாடொறுந்
தெண்டனிட் டிருவிழி சிரசின் மீதுறக்
கொண்டசிற் றடிமையே னுய்யக் கொண்டுவாய்
விண்டெனை விளித்தவை விளம்பு கென்னவே. (27)

தேறிய மொழியினை செவியிற் சார்தலு
மாறிலா தியாரைநீ வணங்கு கின்றனை
வேறற வுரையென விளங்கு நந்நபி
கூறலு முசலிகை மறுத்துங் கூறுமால். (28)

மருமலி வள்ளலி யான் வணங்கு நாயக
னொருவனன் னோனெழி லுயர்சிங் காசனம்
பொருவறும் வானில்ராஜாங்கம் பூமியிற்
றெரிதருங் கிருபையோ செம்போ னாட்டினில். (29)

தீதிக லற்றவன் சினந்து செய்யுமங்
வேதனை நரகமென் றெரியும் வீட்டினிற்
பேதமி லன்னதோர் பெரிய வன்றனை
யோதியான் வணங்குவ துண்மை யென்றதே (30)

அறத்தொடு முரைத்தனை யென்னை யாரெனக்
குறித்தனை யெனநபி கூறக் கேட்டலுஞ்
சிறுத்தமுள் ளெயிற்றவெண் ணிறத்த செம்முனை
யிருத்தநூ லிரட்டைநா வெடுத்தி யம்புமால். (31)

பரவைவிண் ணிலமலை பருதி மற்றவு
முரியநும் மொளியினி லுள்ள வுண்மையிற்
றெரிதரா முதலவன் செவ்வித் தாதரா
யிருநில நபிகளி னிலங்கு மேன்மையாய். (32)

ஈறினில் வருநபி யிவனும் வாக்கினிற்
கூறிய மார்க்கமே மார்க்கங் கோதறத்
தேறினர் சுவர்க்கமே சேர்வர் தீதென
வேறுரைத் தவரவர் நரகின் வீழ்வரால். (33)

இனிதினும் பெயர்க்கலி மாவை யென்னொடும்
வணமுறை யஃறிணை வாழ்த்து கின்றது
நனிபுக ழுண்மைநன் னபியு நீரலாற்
பிணையிவ ணிலையென வுடும்பி பேசிற்றே. (34)

உடும்பிவை யுரைத்தலு முவந்து தன்மனத்
திடும்பினைத் தவிர்த்துநின் றறபி யென்பவன்
குடும்பமு மொளியனுங் குபிரி னாற்றினம்
படும்பவந் தவிர்கெனப் பாதம் பற்றினான். (35)

வண்ணவொண் புயநபி பாதம் வைத்ததை
கண்ணினிற் பதித்தகங் கனிய முத்தமிட்
டெண்ணில வுவகையுற் றெவரும் போற்றிட
வுண்ணெகிழ்ந் தருங்கலி மாவை போகினான். (36)

புதியவ னபிகலி மாவின் பொற்புற
வுதுவுடன் வருமுறை யொழுகி மாமறை *
விதிமுறைத் தொழுகையு மேவி மேதையின்
முதியவ னிவனென முசுலி மாயினான். (37)

உனைப்பிடித் தடர்ந்தன னுனது செய்நயா
லெனைப்பிடித் தடாபவ மின்று போக்கினான்
மனைத்தட வளைசெலென் றுடும்பை வாழ்த்தினான்
பனைத்தடக் கரக்களி றனைய பண்பினான். (38)

உறைதருங் குழுவின ருவப்ப நோக்கித்தன்
னறபிதன் முகமல ரதனை நோக்கிமெய்
மறைநபி பங்கய வதன நோக்கிப்பின்
னிறைதரு மகிழ்ச்சிபெற் றுடும்பு நின்றதே. (39)

மருப்புய நபிதிரு மதுர வாய்திறந்
திருப்பிடத் தேகென வுடும்புக் கின்புற
வுரைப்பது கேட்டுளங் கனிந்து கானிடை
விருப்பொடும் போயது விலங்கின் சாதியே. (40)

உடும்புபேசிய படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-5-க்குத் திருவிருத்தம்-397.

---

* உலுவென்னும்பதம், எதுகைத்தொடரால், உதுவெனவந்தது.



# உத்துபாவந்த படலம்.



அடவியினி லுடும்பகல அறமிவே டனுமறிவுள் ளகத்திற் றேக்கிப், புடையகலா நிழல்போலுந் தோழருட னருமறையும் புகழ்ந்து போற்ற, மடலவிழ்பைங் குவளைசெறி மடுச்சூழ நீள்புரிசை மக்க மீதி, லுடுவினமு நடுவுறையு நிறைமதியு நிகர்த்திடவந் துறைந்தா ரன்றே.

திரைக்கடலி னடுவெழுந்த மதிக்கதிர்போன் முகம்மதுதஞ் செழுந்தீன் செவ்வி, நிறைத்தெழுந்த பயிர்போலத் தழைத்தோங்க நிறுநிறுத்தி நிகழுங் கால, முரைக்கடங்கா வெகுளிபொங்கு மனத்தினராய்க் குபிர்த்தலைவ ரொருங்குகூடி, வரைத்தடத்தைக் கொதுகினங்க ளரிப்பதெனச் சிலவசனம் வளர்க்கின் றாரால். (2)

தண்டாளக் கதிர்வடிவின் முகம்மதினைக் குறைபடுத்தி யவர் தம் வாக்கின், விண்டுரைக்கு மறைமொழியை யெளியமொழி யெனவாக்கி வினவி யீமான்,கொண்டவர்க டமையுமவர் மனையும் புறம் படுத்திநமர் குலத்துக் காகாத், தண்டனைகள் படுத்திடவும் பலபலதந் திரவசனஞ் சாற்றி னாரால். (3)

பிறவியா திவனுரையா தெனவிரித்துப் பகுத்தறியாப் பேதமாக, அறபியாகியகுபிரர் பலர்கூறு மொழிவழிகேட் டவரைநோக்கி, யிறபியா தரும்புதல்வ னிரங்காத கெடுமனத்த னென்று நீங்கா, வுறவியா னென் பவரைப் பகையாக்கும் விடனுக்கி னுரைக்கின் றனல். (4)

முகிற்கவிகை முகம்மதிடஞ் சென்றுசிறி துத்தரத்தை மொழிந்தியானோர், பகற்பொழுதி னவனுரையா லவனெடுத்த நெறியனைத்தும் பழுதி லாக்கி, நிகர்க்கரிய குபலலது முதற்பிறிதொன் றில்லையென நிறுத்தி மேலும், விகற்பமிலை யெனப்படுத்தி வருவனென மொழிந்தெழுந்தான் வீரக் கன்றே. (5)

ஒருகாலுந் தறுகாது குணக்கெழுந்து குடக்கோடற் குறும்வெய்யோனை, யிருகாலும் வழங்காதான் முன்றேடி மறிப்பனெனு மியற்கை போலக், குருகாலு மலர்வாவி புடைசூழு மக்கநகர்க்

குரிசி றன்பாற், பொருகாலக் கதிரிலைவேல் வலனிலங்க விரைவினொடு புறப்பட் டானே. (6)

உத்துபா வரபினைக்கண் டுருட்டுவார் திரைக்கரத்தி னோடிச் சோர்ந்து, கத்துவால் வளைத்தாளங் கதிர்த்துவார்ந் தொழுகுமணிக் கடலி னுப்பண், வைத்துவாழ்ந் தெழுங்கதிர்போற் கதிர்கான்ற முகம்மதுள மகிழ்ந்து நோக்கித், தத்துவாம் பரிவயவ ருடனணித்தங் குறைகவெ னச் சாற்றி னால். (7)

இகல்பொருந்து முளத்தோடு மிறபியா தரும்விடலை யிருந்து சோதி, முகம்மதினை முகநோக்கிச் சூழ்ந்திருந்த பெரியோரை மதித் துப் போற்றிப், பகருமொழி சிறிதுளதென் னிடத்திலம் மொழியனை த்தும் பரிவிற் கேட்டுப், புகாறதும் மனத்தாய்ந்து தெளியுமென மறு த்துமுறை புகல்கின் றனன்.(8)

பெருந்தவத்தால் வரும்புகழோய் தனியிறைவ னொருவனெனப் பெருக்கும் பேச்சு, மிருந்தமறை யனைத்தையும்விட் டொருதுமொழி மறைமொழியென் றிசைக்கும் வாக்குந், திருந்துநெறி புதுநெறியொன் றுளதெனமுன் னெறிவழுவாய்ச செப்பு மாறும், வருநதமர்க்குந் திசையோர்க்கு மறையோர்க்கு மனம்பொருத்த மனறதானே. (9)

ஒருவனென வுரைத்தீரிந் நிறத்தனிவ னுளனெனக்கண் ணுறச் செய் தீரிற், றிருவணக்க மெனத்தொடுத்தீர் முகம்மைகா றனைத்தே ய்த்தோர் திசையை நோக்கித், தரையினுத றைவரலா யடிக்கடிதாழ்ந் தெழுந்திருகை தன்னை யேந்தி,வருவதலா லொருகுறிப்பு மிலையெவாக ளிவ்வணக்கம் வணங்கி னோரே. (10)

முதலவன்றன் றிருத்தூத ரெனப்பேரிட் டரியமறை மொழியென ரேத்திப், புதியமொழி யுரைத்தீரான கொள்வித்தீ ரிசுலாத்திற் புக்க பேரி, லிதமுறநம் மிறைவனிவ னெனக்கண்டோ மெனவுரைத்தோ ரில லைமேலும், பதவியுள வெணிவதவு மெவரறிவர் சாதமெனப் பரிதி வேலோய். (11)

மந்திரமொன் றுருவேற்றிக் கண்கட்டா யுடும்பினொடும வசனித் தோமென்,றநதரத்தைக் காரணமாய் விளைவித்தீர் விசைையலா லருளோ நாளும்,புநதியினிற் சிறியோாக ளறியாது மயக்குறுவர் பொருந்தி லாத, தந்திரமுமு மறையோாக ளிதனையொரு பொருளாகச் சாாநதி டாரே.()

குலத்தினுக்கு மாசறுக்கு முநியோர்க்கு மறையோர்க்குங் கோதி
லாதித்,தலத்தினுறை குபலெனுமத் தம்பிரான் றனக்குமெந்தச் சமயத்
தோர்க்கு, நலத்தகைமைத் தலக்கேடும் பிறர்சூடும் பெரும்பகையு நடை
வா முன்ன, மிலத்தொடொழு கினத்தொடுறைந் திவை வயிர்வெண்
ணிணம்பருகி யிலங்கும் வேலோய். (13)

தந்தைதாய் தமர்வணக்க முறையொழுகிப் பழையமறை தழுவி
னீரேல்,வநதமா வினைநீங்கு மினத்தோர்க ளெவருமன மகிழ்ச்சியாகிக்,
கந்தடர்வெங் கரியிரதம் பரிநெருங்கப் படைசூழக் கவிகை யோங்க,விந்
தமா நிலத்தரசா மிறைஞ்சுவது சாதமெனா வியம்பி னுறல். (14)

அச்சமனு விலதகத்தி னுத்துபா வுரைத்தமொழி யனைத்துங்
கேட்டு, முச்சகமும் புகழ்முகம்ம துறசூல்தம் மிதழினிற் புன்முறுவ
ரேன்றி, விச்சையெனத் தெளிந்துபல பலசூழ்ச்சி விரித்தறத் தைவி
ளங்கி யென்னே, டிச்சைபெற வுரைத்தனைநன் கியானுரைத்தல் கேட்டி
யென விசைக்கின் றூரால். (15)

எனக்கிறையோ னுரைத்தமறை மொழிவசனந் திறத்ததல வென்
ணக் கூறல், மனக்குறையோ வலதுனது மதித்திறனோ வறிகிலன்மும்
மறைபுந தோநதோய்,கனக்கமொழி யெனறெடுத்துக் காட்டுகநீ யென
துமொழிக் கவினைப் பினன,றுனக்குரைப்பக் கேட்டுமொழித் திறனறி
யென் றெடுத்துரைத்தா ரொளிரும் பூணர். (16)

தாளவொளி தனிலுருவா யுதித்தமுகம் மதுவிதனைச் சாற்றக்
கேட்டுப், பெருகுமுதன் மறைவசன மெவ்வுலகு மறிவதியான் பேசி
லென்னே, யிருமையினுவ கதிதருநும் புதுமொழியை யெனதுசெவிக்
கியைவ தாக, வுரையுமென வெடுத்துரைததா னிறபிரா தரும்புதல்வ
னுத்து பாவே. (17)

ஆதிதனை யுளத்திருத்தி பிசுமிலெனு முரைதிருத்தி யமுத முறும்,
வேதமெனும் புறக்கானி லொருசூறத் தெடுத்தோதி விரிவதாகப்,யோ
தமுறு முபனிடதப் பொருளனைத்துந தொகுத்துரைத்தா பொருவி
லாத, சீதரவொண் கவிகைநிழ றனினுலகம் புரநதளிக்குஞ் செவ்வி
யோரே. (18)

இரவியெனுங் கவிபாவிற் குபிரத்திபிர மடர்த்தெரியு மிறசூ
னுல்லா, தெரிமறையி னுரைகேட்டுப் பொருடோர்நது பகுப்பவதி

ஜபித்து நோக்கி,புருகிமதி மயங்கியெதி ருரையாம லூமனென வொடு
ங்கி வான்றோய், பெருவரையின் மடங்கலெதிர் வரையாடு நிகர்வதெனப்
பேதுற் ருனே. (19)

அலங்குளைவா லரியேறு முகம்மதுநா விற்பிறந்த தன்றித்தீஞ்
சொ,லிலங்கமா ரிறைமொழிகேட் டிவர்க்குரைத்த தறுதியென விதயத்
தோர்ந்து, கலங்குமனை தெளிந்துநபி கமலமலர் முகநோக்கக் கண்க
ளுணி, விலங்கினமொத் தெவரோடு மொழியாது தனியெழுந்து விரை
விற் போனன். (20)

கலைமறைதேர் முகம்மதுட னுரையாம லெழுந்துதலை கவிழ்ந்து
நாணி, நிலைமைபட லறிவகன்ற நெஞ்சினொடும் புலம்பிநெடு மூச்சிற்
சோர்ந்து, சிலைவயவர்க் கெதிருரைப்ப தென்னெனச் சஞ்சலத்தினொடுத்
தியங்கி வாடிக், குலைகுலைந்து குலத்தவரு மபூஜகுலு மிருந்தபெருங்
குழுவைச் சார்ந்தான். (21)

உத்துபாவந்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 6-க்குத் திருவிருத்தம் 418.



## ஹபீபுமக்கத்துக்குவந்த படலம்.

உள்ளறிவு குடிபோகவி யிருந்தவன்றன முகநோக்கி யபூஜகீ லவ்,
வள்ளலிடஞ் சென்றதுவு மிருந்ததுவும் நிகழ்ந்ததுவும் வகுத்துக் கூ
றென், றள்ளிலைவே லவாகேட்ப முகம்மதுசொற் கெதிராக வமரரா
லும், விள்ளரிதிந நிலத்திலெவ ரெதிருரைப்ப ரெனுமொழியை விளம்பி
னனே. (1)

அரியலபும் புயவிடலை மனமயக்குற் றுரைத்தவைகேட் டறிவின்
மாந்தர், பெருகுமலி றிணைச்சாதி யுளமனைத்தும் பேதுறுத்திப் பெட்பி
னேடு, முறைதரச்செய் தவரிவரை நிலைமாறச் செய்பவனிவ் வுத்து
பாதன, திருமனத்தைப் பேதுறுத்த லவற்கரிதோ வெனநகைத்துச்
செப்பி னூரால். (2)

கனைத்தமுரட் கரிங்கர்த்த வுத்துபா கலங்கியகட் டுரையு நோநதம்,
கினத்தவர்களுரைத்ததுவுஞ் சாதமெனச் சிரநதூக்கி யெணிதநேர்ந்து,

மனத்தடக்கித் தீனெனுமோர் பெரும்பயத்தைப் புறத்தாக்கி வரிவிலே ந்து, முனைத்தடக்கை யபூஜகல்தன் குலத்தோரை யெதிர்நோக்கி மொழிவ தானன். (3)

எத்திறத்து மெப்புதுமை விளைத்திடினு மம்மாயத் திடைப் படாத, புத்தியினும் வாள்வலியின் றிடத்தாலும் வஞ்சனையைப் பொதிந்து தோன்றுஞ், சத்துருவா முகம்மதுத னுயிர்விசும்பு குடிபுகுதத் தக்க தாக்கும், பத்தியின னினைத்தபடி முடித்திடுவன் பார்மினெனப் பகர்ந் து மாதோ. (4)

தேறுத மதியாலு முற்றுத வலியாலும் செவ்வி யோர்க்கு, மாறுத பெரும்பகையாய் முகம்மதென வுதித்தோன்றன் மாயந்தா னோர், பேருக நினைத்துமறு கத்தாபைப் போலமனம் பேதுறே னியான், வீறு ரும் வேல்வேந்தீ ரிவைசாத மெனமறுத்தும் விளம்பி னனே. (5)

மதியார்தஞ் செவிக்கியைய வாக்கிறு லிவையுரைத்து மனத்தி னூடு,கொதியார்வெவ் விடவாவின் வாய்த்தேரை யெனவறிவு குலைந்து மேனள், விதியாதென் றறியாத கொடும்பாவி யவைநீங்கி விண்ணி னூடும், பதியாகப் படுத்தகொடி மணிமாட மனைபுகுந்தான் பண்பி லானே. (6)

அற்றையினி லிரவகற்றி யறிவிறு லுயர்ந்தோரை யாவி போலு, முற்றவரை மதிக்கேற்ப வுரைகொடுக்குந் திறத்தவரை யுறவி னேரை, வெற்றியொடு மினிதழைத்தங் கோர்மாடத் திடத்திருத்தி வியந்து நோக்கிக்,குற்றமற அபூஜகல்த னுளத்தினுறும் வரலாறு கூற லுற்றுன்.

பிறந்தகுலந் தனைவழுக்கி நமர்க்குமொரு பெரும்பகையாய்ப் பே தியாத, மறந்தவழு மனத்தினறு யிருந்தமுகம் மதுவையுயிர் மாய்த்தல் வேண்டு, நிறந்தவழுங் கதிர்வேலீ ரில்லெனில்தீ னிலைபெருகி நிலத் தின் மீது, புறந்தயங்கப் படர்ந்துநமர் குலஞ்சமயந் தேய்த்தமிழ்த்திப் போடுந் தானே. (8)

பகையினைநல் லுடல்வருத்து நோயதனைக் கொடுநெருப்பைப் பா ரின் மீதிற், றெருகுவிடத்தைத் தோற்றாவிற் பரிகரித்த லியாவருக்குஞ் சூழ்ச்சித் தாகு, மிகுமெனிலிந் நிலமாக்கண் மதியாலும் வெல்வ தாகா, நிகாரும்வெஞ் சமர்தொலைத்து நிறங்குருதி பிறங்கியொளி திணங்கொ ள் வேலீர். (9

### வேறு.

குடிமை யின்னமர் குலத்தையு மனத்தினிற் குறித்து
மடிமை யாயிருந் தேமெனின் முகம்மது தனக்கே
யடிமை யாயவன் றண்டனைக் கடல்வலி யிழந்து
மிடிமை யாகுதல் சாதமின் னவிர்கதிர் வேலீர். (10)

உறைந்த வர்க்கிடர் வருமுன மொருமனத் துணிவாய்
மறந்த ரித்திடுந் திரளினைத் தொடுமுகம் மதுவை
யிறந்தி டும்படிக் கியற்றுவ மெனினமர்க் கெளிதி
னறந்த ரும்பா கதியுடன் புகழுமுண் டாமால். (11)

இந்த வல்வினை தவிர்த்திடற் கெனதுளம் பொருந்தச்
சிந்தி டாதுறு மொழிபல ருளத்தினுந் தேர்ந்து
மந்தி ரத்தொடு வழுவறு முறைவழங் கிடுமென்
றந்த மன்னவர் தமக்குரைத் தபூஜகல் கேட்டான். (12)

மாறு கொண்டகு மதுநடத் திடும்வா லாற்றை
வேறு கொண்டபூ ஜகல்விளம் பியமொழி யனைத்துங்
கூறு கொண்டவர் சிந்தையிற் பலபல குறித்து
வீறு கொண்டொரு மொழிபட வெதிர்விளம் புவரால். (13)

உரைத்த வாசக நன்குன துறுமொழிக் கெதிராய்த்
திருத்தி வேறுரை பகரவல் லவரெவர் திறலோய்
விரித்து மேலுரை பகரவு நமர்குலம் விளங்கப்
பொருத்த வும்நினை யலதுவே றிலைசெழும் புவிக்கே. (14)

சிதைவி லாமனத் திறல்வலிச் செயலினுக் கேற்ற
மதிவ லோமியா மலமின றும்மதிக் கியையைப்
புதிய சூழ்ச்சியொன் றுரைத்தியே லெங்கள்புந் தியிற்கும்
விதிய தாமவை நடத்துக வெனவுரை விரித்தார். (15)

உற்ற செய்திக ளனைத்தையு மோர்ந்துணர்ந் துரவோர்
வெற்றி வாண்முக நோக்கிவெவ் வினைமுகம் மதுவைப்
பற்ற ருக்கொலை படுத்திட னமரொடு பரிவின்
முற்று மிந்நகர்ப் படைகொடு முடித்திட லரிதே. (16)

வஞ்ச னைத்தொழி லினின்முகம் மதினெடும் வாதா
விஞ்சை கற்றவ ராயிர ரெதிரினும் விளையா
தஞ்ச லாதுரு வேற்றிடி லேறுரு வனைத்து
நஞ்ச மாம்நம துயிரினைச் செகுத்திட நடக்கும். (17)

வன்ம திட்புறத் தாலயத் துறைந்ததே வதத்தை
யென்ம னக்குறை தவிர்த்திடர் தவிர்த்தியென் றிசைக்கி
னன்மை யாயுரைத் திடுவதோ நமர்குலப் பவத்தாற்
றின்மை யாயுரைத் திடுவதோ வெனத்தெரி கிலமால். (18)

ஆய்ந்து ணர்ந்துளத் தெண்ணிய காரிய மனைத்துந்
தேய்ந்த தல்லது தேறிய தெருட்சிய தன்றே
வாய்ந்த புந்தியோன் றுளதினந் தெளிந்திடு மதிப்பாய்க்
காய்ந்த செங்கதிர வேல்வல னேந்திய கரத்தீர். (19)

உரனி னம்பெருங் குலத்தினி லரசரி னுயர்ந்தோன்
மனைம லர்த்தடஞ் சூழ்திமஸ் கதிபதி மாலிக்
கருள்ஹ பீபெனு மரசனுக் கறிந்திட வுரைத்து
விரைவி னம்பெரும் பகையினைத் துடைத்திடல் வேண்டும். (20)

ஈத லாற்பிறி திலையென அபூஜகு லிசைப்ப
வாத ரத்துடன் கேட்டவ ரனைவரு மகத்திற்
கோத றத்தெளிந் திம்மொழி நன்றெனக் குறித்து
மாதி ரப்புயம் வீங்கிட மகிழ்ந்துசம் மதித்தார் (21)

மாந்த ரியாவரு மொருப்பட வெழுந்தொரு மருங்கிற்
போந்தி ருந்துநல் லறிவினிற் கேள்வியிற் புகழிற்
சார்ந்த வுத்தரப் பிரத்தியுத் தரத்திவன் றனைப்போ
லாய்ந்த பேரிலை யெனவொரு வனைக்குறித் தழைத்தார். (22)

பத்தி ரம்மிவன் வரைந்திடிற் காரியம் பலிக்கும்
புத்தி யிற்றிறத் தவனிவ னெனப்பல புகழ்ந்து
முத்தி ரைப்பட முறையொடுந் தேர்ந்தியா மொழிந்த
வுத்த ரந்தனை வரைகென யாவரு முரைத்தார். (23)

காசி லாதுரை வரைபவன் கேட்டுளங் களித்து
மாசி லாப்பெருந் தலைவரைத் தாழ்ந்துற வாழ்த்திச்
சூசியுங்கடு தாசியு மெடுத்துமை தோய்த்துப்
பாசு ரந்தனை யுரைமின்க ளெனுமுறை பகர்ந்தான். (24)

எழுது கின்றன னென்றது மவணிருந் ததுவும்
பழுதி லாதிற்றை முகுர்த்தமு நிமித்தமும் பார்க்கின்
முழுதும் வெற்றியே யலதிட ரிலையென முதலோர்
தொழுது புத்தினைப் புகழ்ந்துவக் கணைதொகுத் துரைப்பார். (25)

ஆதி நூலுரை தெரிதரு ஹபீபர சறிக
ளோது நன்னெறி மக்கமா நகரினி லுறைந்த
சாதி யோர்களுந் தலைவரு மபூஜகல் தானுங்
கோதி லாதவின் னப்பமென் றிருகாங் குவித்தே. (26)

குபலு றைந்தநற் றலத்தினில் ஹாஷிமா குலத்தி
லபுதுல் லாவயி னவதரித் தாமினு மாவாய்த்
தவமி லாமுகம் மதுவெனும் பெயரினைத் தரித்துப்
புவியி கழ்ந்திடப் பிறந்திருந் தனனொரு புதியோன். (27)

சலதி யூடுறை கொடுவிட மெனத்தலை யெடுத்திட்
டலைவொ டன்னையுந் தந்தையு மிழந்தொரு தனியா
யலகி லாதவஞ் சனைவிதத் தொழில்படித் ததனால்
விலகு தற்கரி தாகிய மாயங்கள் விளைத்தான். (28)

அந்த நாட்குவை லிதுமக ளரசெனு மயிலைப்
பிந்தி டாமண முடித்ததன் னவர்பெரும் பொருளாற்
சிந்தை யிற்கரு விதத்தொடு மதத்தொடுஞ் சிலநா
ளெந்த மன்னவர் தம்மையு மாசரித் திணங்கான். (29)

ஆண்டு நாற்பது சென்றபி னவனியி லெவருந்
தாண்டி டாப்பெருங் கோட்டிக ளெடுத்தவன் றனிவாய்க்
காண்ட காவிறை யொருவனுண் டெனமொழி கணித்து
மீண்டு மன்னவன் றூதனியா னெனுமுரை விரித்தான். (30)

தூத னியானெனக் காகிதன் றாய்மொழி புறக்கான்
வேத மொன்றிறங் கிற்றெனப் பலரொடும் விரித்தான்
பூத லத்திலெவ் விடத்தினுஞ் சிரந்தரை புரள
வீத லானெறி யிலையென விழுந்தெழுந் திடுவான். (31)

எனக்கு றுங்கலி மாவுரை தனக்கிணை யாதான்
றனக்கெ ரிந்திடு நரகமென் றிசைத் தவன் றனக்குக்
கணக்க மேம்படு மவர்கடாங் கனகநன் னாட்டின்
மனைக்குள் வாழ்குவர் சாதமென் றுரைவழங் குவனால். (32)

தேறிலாதகட் டுரையினிற் புதுநெறி திருத்தி
மாறுபட்டவ ரனைவரையுந் தன்வசப் படுத்தி
வீறு சொண்டநம் வேத மனைத்தையும் விழலா
யேறு மாறுகொண் டிருப்புகல் லெனவிகழ்ந் திடுவான். (33)

ஆல யங்களைக் காண்டொறுங் கண்புதைத் தகல்வன்
மேலை யோர்செயும் வணக்கங்க ளனைத்தையும் வெறுப்பன்
பாலை நேர்மறைக் குருக்களைத் தினம்பழித் திடுவன்
சால வும்மனப் பெருமையிற் கிளையொடுஞ் சாரான். (34)

அகில மீதுறை யரசர்க ளெவரையு மடிக்கீழ்ப்
புகவி டுத்துவ னென்பது பாதமாய்ப் புகல்வன்
பகும னத்தறி வினிற்றெளி வினிற்பல நெறியி
லிகலி யென்னுட னெதிர்ப்பவ ரிலையென விசைப்பன். (35)

வாதி யாயித லாற்சில வாய்க்கொளா வசனங்
காதி னாற்கொளப் படுவதன் றிழிந்தகட் டுரையை
யோதி யோலையிற் றீட்டவு முடிவதன் றுடையோன்
றாத னியானென வுரைத்தவ னுரைத்திடுந் துணிவே. (36)

மறந்த வழ்ந்திடு முகம்மது விரித்தசொன் மனுவாய்ப்
பிறந்த வர்க்கிடர் வடுவலாற் பெறுபய னிலையா
லறந்த மைத்திடுந் தலத்துறை யறபிக ளெவரு
மிறந்தி டாவயி ராய்த்தலை கவிழ்ந்திவ ணிருந்தோம். (37)

இந்த வாசக மறிந்திவ ணிடத்தெழுந் தருளி
வந்து பார்த்திடின் முகம்மது மாயவஞ் சனையும்
விந்தை யேற்றுரு மந்திர சூழ்ச்சியும் வீறுஞ்
சிந்தி நங்கிளை யவர்மனத் துன்பமுஞ் சிதையும். (38)

இனைய பாசுர மனைத்தையும் விரித்தெடுத் திசைத்து
வனையும் வார்கழ லறபிக ளனைவரும் வகுத்தார்
தினையி னவ்வள வெண்ணினுஞ் சிதைவிலா வண்ண
நினைவி னேர்வழி தொடுத்தெழு தினன்வரி நிரைத்தே. (39)

எழுது பத்திரந் தனைமடித் திலங்குபட் டதனுன்
முழுதி னும்பொதிந் திருவயின் முத்திரை பதித்துக்
குழுவி லாய்ந்தொரு விரைவினன் கரத்தினிற் கொடுப்பத்
தொழுது வாங்கினன் காலினுங் காலினிற் றொடர்வான். (40)

எடுத்த முத்திரைப் பத்திரஞ் சிரமிசை யேற்றிக்
கொடுத்த மன்னவரைப் பணிந்துகொண் டறபிகள் குழுவை
விடுத்து வீதிநன் னிமித்தமெய் திடவிரை வுடனே
தடத்து சிறகொடி நுடங்கிய மதிட்புறஞ் சார்ந்தார். (41)

காட மும்மதக் கரிநிகர் துறையபுல் காசீ
மிரவ லர்க்களித் தவனிரு நிதிபெரு கினபோன்
மரும லர்த்தட வாவியுங் கழனியும் வழிதேன்
முருகொ டுங்கனி தரும்பொழி லனைத்துமுன் னினனால். (42)

குன்றுங் கானமு மடவியு நதிகளுங் குறுகிக்
கன்று மென்மயிர்க் கவரியுந் திரிவனங் கடந்து
வென்றி வெய்யவன் கதிரினு மனத்தினும் விரைவா
யென்றும் பூமகள் பொருந்திய திமஸ்கினை யெதிர்ந்தான். (43)

மின்னெ னக்கதிர் தருமணி குயிற்றிவெண் சுதையாற்
றென்னு லாவிய மேனிலை மாடமுஞ் செறிந்த
பொன்னி னன்கதிர் குலவிய கொடிகளும் பொருவாக்
கன்னி மாமதிட் புரிசையுந் திமஸ்கையுங் கண்டான். (44)

திரையெ டுத்தெறிந் திரைதரு கடலினுஞ் செழித்து
விரைக மழ்ந்தமென் குவளையும் வனசமு மேவிக்
கரைத தும்பிய சீகரத் தகழினைக் கடந்து
புரிசை வாயிலுங் கடந்தரும் பெரும்பதி புகுந்தான். (45)

நிரைகொ ணித்திலத் தாவண வீதியு நிமிர்ந்த
வரையெ னத்திகழ் மண்டப மறுகையுங் கடந்து
பரக திப்பரி கரியொடு படைக்கலம் பரப்பி
யரசு தங்கிய கோயிலின் வாயிலி னுற்றான். (46)

மெய்யின் வேண்டுகிற் கஞ்சுகி யணிந்தடல் விளைந்த
கையின் வேத்திர மேந்திய வாயில்கா வலரை
யையு றூதடுத் தவரொடும் வரவெடுத் தறைந்தான
றய்ய நன்னினை வகற்றிய அபூஜகல் தூதன். (47)

வந்த தூதுவ னுரைத்தலும் வாயில்கா வலவர்
பிந்திடாதெழுந் தெண்ணரும் படைக்கலப் பிறங்கத்
தந்தி ராதியர் மந்திரத் தலைவர்சொற் றணவாச்
சிந்தை யன்ஹபீ பெனுமட லரசன்முன் சென்றான். (48)

போற்றி நின்றுகும் பிட்டணி யொதுக்கி வாய் புதைத்துத்
தூற்று தேம்பொழின் மக்கமா நகரவர் தூதன்
மாற்ற ருங்கதிர் வாயிலில் வந்தன னெனுஞ்சொற்
சாற்றி னார்செழும் பொன்மழைக் காதலன் றனக்கே. (49)

கரைகொளாப்பெருஞ் சேனையங் கடனடுக் கடிதின்
வரவி டுத்துக வென்றலும் வாயில்கா வலவர்
விரைவி னேகியத் தூதனை விளித்துமின் னணிபூ
ணரசர் நாயகன் றிருமுன மழைத்துவந் தனரால். (50)

எதிர்ந்த தூதுவன் றரையினிற் றெண்டனிட் டெழுந்து
முதிர்ந்த பேரவை யரசனை முறைமுறை பணிந்து
பதிந்த முத்திரை புணர்த்திய விண்ணபத் திரத்தைப்
பொதிந்த மென்றுகி லொடுந்திறற் புரவலற் கீய்ந்தான். (51)

ஈய்ந்த முத்திரைப் பத்திர மதனையோ ரிளவல்
வாய்ந்த செங்கரத் தேந்திமுத் திரைத்துகில் வாங்கி
யாய்ந்த பாசுர மனைத்தையுந் தெரிதர தணியாய்ச்
சாய்ந்தி டாதபொன் மணிமுடி யவர்க்குரைத் தனனே. (52)

வனைந்த பாசுர மனைத்தையும் வரன்முறை கேட்டுச்
சினந்த யங்குவே லவன்மன முறச்சிரந் தூக்கி
யினைந்த னிற்பெரி யவர்மறை யவர்க்கெடுத் தியம்பிப்
புனைந்த பொன்முடி மண்டப மாளிகை புகுந்தான். (53)

தனித்தி ருந்தொரு மண்டபத் தரசர்க டமையு
நினைத்த சூழ்ச்சியை யுரைதரு நிருபர்க டமையு
மனத்தி னிசைபுற வழைத்தரு கிருத்திமும் மறையின்
றெளித்த செயதியு நிகழ்ந்ததுந் தொகுத்தெடுத் துரைத்தான்

அரசன சொற்றனை கேட்டவ ரனைவருந் தெளிந்து
புரிசை சூழ்தரு மக்கமா நகரியிற் புதுமை
விளைவிற் சாவாகுவ துண்டெனச் சூழ்ச்சியின விரித்தா
மரைம லர்த்தடஞ் சூழ்தரு திமஸ்குமன் னனுக்கே. (55)

கேட்டு மன்னவ னன்கெனக் கிளரொளி வடிவாட்
பூட்டுந் திண்கர வீரரு மடற்புர விகளுங்
கோட்டு வாரணத் தொகுதியு மரசர்கள் குழுவு
மீட்டு மிற்றையி லெழும்புற விடுதியி லென்றான். (56)

வேறு.

நிருபர்கோ னெழுகவென்ன நிகழ்த்தமந் திரத்தின் மிக்கா
புரவியுந் தறுக ணல்வாய்ப புகர்முகக் களிறுந் தேரு
மரசரும் வருக வென்ன வணிமணிக் கனக மாடத்
தெருவினு நகர முற்றுஞ் செழுமுர சறைவித் திட்டார். (57)

முரசதி ரோதை கேட்டு முரண்மற முதிர்ந்து வெற்றி
மருமலி வாகை தாங்கு மன்னவர் திரளிற் கூண்டு
திருநகர்ப் புறத்துங் கோயிற் றெருவினுஞ் செறிந்து தூளி
பருதியும் விசும்புந் தூர்ப்பப் படைக்கலம் பரப்பி வந்தார். (58)

சேனையிற் றிரளிற் செம்பொற் செழுங்கொடி நுடங்க வெற்றி
வானதி ரசனி யொப்ப மதகரி முரச மார்ப்பக்
கானமர் கூந்தற் செவ்வாய்க் கடுவடர் கொடிய வாட்கட்
டேனிதழ் மடவார் சூழச் சீயமொத் தெழுந்தா னன்றே. (59)

திங்கடங் காத வெற்றித் திறற்படை ஹபீபு வேந்த
னொக்கலின் புறப்ப தாதி யுவர்க்கடல் கடுப்பப் பொங்கித்
திக்கிரு நான்குந் தூது செலத்துக ளமரர் போற்று
மக்கமா நகரை நோக்கி நடந்தனன் வயங்க மாதோ. (60)

வண்டுக ளுண்டு பாட மணிச்சிறை மயிலக ளாடக்
கொண்டல்கண் டேங்குஞ் செந்தேன் கொழுங்கனி குழைபைங் காவு
முண்டகத் தடமுஞ் செவ்வி முருகவிழ் கழனிக் காடுந்
தெண்டிரை பரந்த தெனனத் திரட்படை படர்ந்த தன்றே. (61)

வரிகளைக் குலத்தின குப்பை வாயிசின குரத்திற் றாக்கி
விரிகதிர்த் தரளஞ் சிதறும் விளைநிலங் கடந்து செந்தே
னருவிகள் வரையிற் செம்பொ னணிவடம் புரள்வ போல
நிரைநிரை செறிந்து தோன்று நெடுமுடிக் குறிஞ்சி சார்ந்தார். (62)

கண்விரித் தனைய தூவிக் கலாபமா மயிலுங் கீதப்
பண்விரித் தென்னப் பேசுந் தத்தையும் பறவை யாவும்
விண்படரந் திரியச் செந்தேன் விளைதருப் படிந்து தோன்று
மண்பட நெரியத் தாவும் விலங்கின மலைய வந்தார். (63)

வரிப்புலிக் குழுவு மாறு மதகரித் திரளுஞ் செங்கட்
டிருக்கறத் திசைக ணோக்குஞ் சீயமும் வெருவி யோடிப்
பொருப்புறைந் தொதுங்கித் தென்றூற் புரவலன் சேனைவீரர்
விருப்புரம் வீரத் தன்மை யாவரோ விரிக்கற் பாலார். (64)

நெடுவரைக் குறிஞ்சி நீந்தி நிரைதொறு புகுதச் சேர்த்தி
யிடுகுறு நனைமுள வேலி யிடையர்தம் பாடி யேங்கப்
படர்கொடி நுடங்கு முல்லைப் பரப்பையு நீந்தி யீந்தி
னடவிகள் புடையிற் றோன்று மறபுநாட் டகத்திற் புக்கார். (65)

மதிதவழ் குடுமி மாட மக்கமா நகர மென்னு
பதியினுக் கடுப்ப மற்றோர் பாடியி னிழிந்து பாயுஞ்
சதிகதிப் பரியு நீண்ட தடக்கைமா கரியும் பொங்கக்
கதிரயின் மன்ன ரீண்ட ஹபீப ரிருந்தா னிப்பால். (66)

மைக்கருங் கவிகை வள்ளன் முகம்மதுக் குதவி யாகத்
தக்கவ னருளாற் செம்பொற் றலத்தினும் பாரிற் றோன்றுந்
திக்கினுங் கதிர்கு லாவுஞ் செழுஞ்சிறைத் தடங்கட் செவ்வி
மிக்குயங் வடிவ தாகச் சபுறயீல் விசும்பில் வந்தார். (67)

ஆயிரஞ் சிறையு மொவ்வா வாயிரஞ் சிரசு மாயீ
ராயிரம விழியுந் தோன்ற வாயிர முகமு மாகி
யாயிர நாவி னாலு மகுமதே யென்னக் கூவி
யாயிரம் பெயரி னான்றன் சலாமென வருளிச் செய்தார். (68)

விரைவினிற் சலாமென் றோது மொழிவழி விசும்பை நோக்கிக்
கரையிலா வடிவு தோன்றுங் காரணங் கண்டியாரே
தெரிகில மென்ன வுள்ளந் தெருமந்து வருத்த முற்றார்
மரையிதழ் வனப்பு மொவ்வா மலர்ப்பத முகம்ம தன்றே. (69)

சூரிகிறன் னுளத்தி னச்சஞ் ஜபுறயீல் குறித்துப் பினனும்
வரிசையின் விழித்துச் சோதி முகம்மதே வருந்தன் மேலோன்
பரிவுட னும்பால வெற்றிப் பறவிக ளளித்த தியாவுந்
தெரிதாக் கேண்மி னென்னச் செய்யவாய் திறந்து சொல்வார். (70)

வானுல கினினீ ராடை மண்ணுல கினில்வெண் டிங்கள்
பானுவி னரிதா யுள்ள படைப்பினி லெவைக்கு மேலா
மீனயின் முகம்ம தைப்போ லிலையென வரிசை மேலுந்
தானவன் பெருமை மேலு மாணையிற் சாற்றி னானால். (71)

செந்நெலங் கழனி சூழுந் திமஸ்கினின் ஹபீபு வேந்தன்
பொன்னணிப் புரோசை நால்வாய்க் களிற்றொடும் புரவி யோடு
மிந்நகர்ப் புறத்திற் சார்ந்தங் கிருந்தன னதனால் தீனில்
மன்னவ துன்ப மென்ப வருவதொன் றில்லை யன்றே. (72)

கடற்படு நிலத்தி லில்லாக் காரணங்களை ஹபீபு
தொடுத்துரைத் திடுவன் கேட்டு மகிழ்ச்சியிற் றுஆச்செய் வீரா
லடுத்திருந் தவர்க்குந் தூரத் தவர்க்குங்கண் டறிய வல்லே
படைப்புள தெவைக்குந் தோன்றப் பலித்திடுங் கடிதின் மாதோ. (73)

உடற்றசை திரண்ட தல்லா லுறுப்பொன்று மிலதாய்ப்பின்னோர்
மடக்கொடி தனைக்கொணர்ந்தான் வடிவுசெய் திடுமி னென்னத்
துடக்குறக் கேட்பவன் கேட்கு முறைப்படி துஆச்செய் வீராற்
கடற்படு புவிக்குட் காணுக் காரணந் தோன்று மாதோ. (74)

வாட்படைத் திமஸ்கு வேந்தன் மறையுணர் தெளிவா லெண்ணிக்
கேட்பதெவ் வழிக்கு நுந்தங் கிளரொளித் திருவாய் விண்டு
கோட்பட வுரையு மென்னச் சபுறயீல் கூறி னார்தேந்
தோட்படு மாவ மாலை துலங்கிய குரிசிற் கன்றே. (75)

அமரர்கோ னினைய மாற்ற மாதிதன் பருமான் மேற்கொண்
டிமைநொடிப் பொழுதிற் றோன்றி யியம்பிய தினங்கா ரான
திமிரவெம் பகைக்குத் தோன்றுந் தினகர னாகப் பூத்த
கமலவொண் வதனச் செவ்வி முகம்மது களிப்புக் கொண்டார். (76)

என்னுயிர்த் துணைவ ரான ஜபுறயீ லிருகண் ணா
முன்னுறு கோலம் போல முகத்தெதிர் நிற்பப் பேதந்
தன்னைமாற் றுகவென் றோதி தன்னுட னிரந்து நின்றார்
மன்னிய ஜபுறயீலு மறுத்துமுன் வடிவம் போன்றார். (77)

அவிரொளி ஜபுற யீல்முன் வடிவெடுத் தடுத்துப் பேசிப்
புவியினின் றகல்வான் புக்கார் பொருந்தல ருயிரை மாந்திக்
கவினுறு நெடுவே லேந்துங் காதல முகம்ம தென்னு
நபியினிதி ருந்தா ரிப்பா னடந்தவா றெடுத்துச் சொல்வாம். (78)

மறுகிவெள் ளெகினஞ் சிந்த வரிவாற் றாவும் வாவி
செறிதிமஸ் கிறைவன் செல்வத் திருநக ரடுத்த சீறூர்ப்
புறனிடத் துறைந்தா னென்னப் பொருவருந் தடக்கை வெள்வே
லறபிகட் குறைத்தார் தூத ரபூஜகு லறிய வன்றே. (79)

கவனமாம் பரியு நால்வாய்க் கரியுடன் ஹபீபு வேந்த
னிவணில்வந் தடைந்தா னென்ன அபூஜகு லிணைத்தோள் வீங்கி
யவிர்கதிர்க் கலன்க டாங்கி யகுமதை வெல்வேன் மேலும்
புவனியி லெதிரியா ரென்னப் புதுமதிக் களிப்புப் பூத்தான். (80)

நிகரரும் பதிக்குட் செவ்வி நெடுந்தெரு வனைத்துந் தூதைப்
புகவிடுத் தறிவிற் றேர்ந்த புரவலர் தம்மைக் கூவி
முகிலுறை கனக மாட முன்றிலி னிருத்திச் சேர்ந்த
தொகுதியில் ஹபீபு வேந்தன் வந்ததை யெடுத்துச் சொன்னான். ()

நெறிகுலஞ் சமயஞ் சாயா நிறுத்திட வந்த வேந்தைத்
திறைகொடு பணிந்து வேறோர் திருமனை யிடத்திற் சேர்த்தி
மறுவறும் படிகுற் றேவல் வகுத்தவை நடத்தப் போதல்
பொறியென வெவர்க்குஞ்சொன்னான் பொறியறிந் துரைக்கிலானே.

மனமதிக் குறியன் கூறும் வசனங்கேட் டறபி மன்ன
ரனைவரு மிதுநன் கென்ன வகத்தினிற் கொண்டு வேறோர்
புனைகதிர் விடுதி மாடம் புதியதொன் றியற்றிச் செம்பொற்
கனைகழ லாசைச் சேர்த்திக் கவல்வது கரும மென்றார். (83)

மாவினை யவர்க்குஞ் சிற்ப மறுவறு தொழிலி னோர்க்குந்
திரகம தளித்துச் செவ்விச் செழுமுடிக் கனக மாட
நிரைகளை யியற்றிச் சுற்று நெடுமதி றிருத்தி வாயில்
விரிகதிர்க் கபாடஞ் சேர்த்தி வீதிகள் பலவுஞ் செய்தார். (84)

பந்தரிட் டலர்க ணாற்றிப் பருமணிக் கலன்க டூக்கிச்
சந்தனம் பணிநீர் சிந்தித் தரைமெழுக் கெறிந்து சோதி
யந்தரத் துடுவின் கூட்ட மனைத்தும்வந் தடைந்த தென்னச்
சிந்துவெண் டரள ராசி செறித்தலங் காரஞ் செய்தார். (85)

கண்படைத் தவர்க ளியாருங் கண்டதி சயிப்பக் காந்தி
விண்படர் மாட வாயின் வெளியினிற் படங்கு கோட்டிப்
பண்பட ரிசையின் வாய்ந்த பழக்குலைக் கதலி நாட்டி
மண்பட ருலகி னில்லா வளம்பல செய்வித் தாரால். (86)

மேதினித் துறக்க மென்ன விடுதிக ளியற்றி யோதும்
வேதியர் குழுவும் வெள்வேல் வீரர்க டலைவ ரோடு
மேதமில் திமஸ்கில் வாழு மிறைவனை யெதிரிற் காணக்
காதலித் தினத்தீ னோடு மபூஜகல் கடிதிற் போனான். (87)

மாலமர் நகர மாக்க ளபூஜகல் மாபி னோடு
நால்வகைப் பதாதி சூழ நனிபல திறைக ளீய்ந்து
நீலவா ருதியே யன்ன நெடும்படைக் கடலி னுப்பன்
காலைவெங் கதிரிற் றோன்றும் ஹபீபெனு மரசைக் கண்டார். (88)

கண்டுகண் குளிர நோக்கிக் கரஞ்சிரங் குவித்துக் கான
வண்டம ரலங்கற் றிண்டோண் மன்னவர் மருங்கு நிற்பத்
தெண்டிரைப் புவனங் காக்குந் திறல்வலி யரசர் கோமான்
விண்டநல் லுரையி னோடு மிருமென விரைவிற் சொன்னான். (89)

போதலர் கழனி சூழ்ந்த திமஸ்கினைப் புரந்த வேந்துங்
கோதறு மக்க மென்னுங் கொழும்பதித் தலைவ மாறு
மாதரத் துடனு மொன்று யளவளா மகிழ்ச்சி பொங்கிப்
பேதமின் மனத்த ராகிப் பிரியமுற் றெழுந்தா ரன்றே. (60)

சூரகத் திரளி னோடுங் கொலைமதக் கரியி னோடும்
விரிகதி ரெஃகங் கூர்வாள் வில்லுடைத் தலைவ ரோடு
மருமலர்ச் சோலை சூழு மக்கமா நகரஞ் சேர்ந்து
புரவலர்க் கரியே றனையன் புதிய மண்டபத்திற் புக்கான். (61)

செய்யவா யொளிவெண் மூரற் சிறுநுதற் பெரிய கண்ணுற்
கையின்வெண் ணிலவின் காந்திக் கவரிகா லசைப்ப நீண்ட
வையக முழுதுங் காக்கு மணிக்குடை நிழற்ற வெற்றி
வெய்யவ னிருந்த தென்ன விருந்தனன் திமஸ்கு வேந்தன். (62)

ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-7-க்குத் திருவிருத்தம்-510.



## மதியையழைப்பித்த படலம்.

தவிசினி லிருந்து வெற்றித் தடமுடி யரசர் கோமா
னபுஜகல் தன்னைக் கூவி யணிநகர்க் கழைத்த மாற்றங்
கவரற மனத்தி னுற்ற கருமங்க ளனைத்து நாளுங்
குபலினை மனத்திற் கொண்டோய் கூறெனக் கூறி னானால். (1)

ஒலீ துத்பா வுமாறு வுக்குபா வுமையா சைபா
மலிதருங் கொடுமை பூண்ட மனத்தபூ ஜகுலு மொன்றாய்
நலிதலி லெழுந்து போற்றி நமர்க்கல ருற்ற யாவு
மலர்தலை யுலகம் போற்று மரசகேட் டருள்க வென்றார். (2)

முகம்மதென் றொருத்தன் றோன்றி வணக்கமு நெறியு மிந்த
வகலிடந் தோன்றத் தோன்று மாலய முழுது முன்னோர்
புகலுநன் மறையுஞ் சூழ்ந்த பொருவரு குலமு மற்று
மிகலொடுங் கெடுத்து நின்று னினையிலெண் ணிலைந்த தையா. (3)

அகலிடம் விளக்குஞ் செங்கோ லணிமணித் தீப மேனோர்
புகலுமும் மறையுந் தேர்ந்த புந்தியிற் கடலே நாளு
மிகலுடை யரசர்க் கெல்லா மெதிரிடி யேறே வானுஞ்
சகமுமெண் டிசையுந் திக்கும் வெண்புகழ் தடவும் வேந்தே. (4)

மறுவற வுலகி னில்லா வயதொரு நூற்றின் மேலு
மறுபது மிருந்தோய் நுந்த மறிவினு லறியா தில்லைச்
சிறியவ ருரைத்த தல்லாற் செவியினுந் தெரிவ தாகுங்
கறையற விற்றைப் போதிற் கண்ணினுங் காண்பி ரென்றார், (5)

ஓலையுத் தாமு மியாங்க ளுரைத்தது முசம்ம தென்போன்
பாலினின் முராணி னூறு பங்கினி லொன்றுங் காணா
தோலிடுங்க டன்மாச் சேனை யுரவனென் றுரைப்ப மூன்று
காலமுந் தெரிந்து நோக்குங் காவலன் செவியிற் கொண்டான். (6)

உரைத்தவிவ் வசன மெல்லா முள்ளுறப் பொருத்தி நாளை
வரைத்தடப் புயத்து வீர முகம்மதை விளித்து மார்க்கம்
பொருத்தறப் புகன்ற செய்தி யறிகுவ மிற்றைப் போதிற்
றிருத்தகு மனையின் கண்ணே யாவருஞ் செல்க வென்றான். (7)

அரசுரை கேட்டு வீர ரவரவர் மனையிற் சார்ந்தார்
கரைதிரை புரட்டு மேலைக் கடலிடை கனலி சார்ந்தா
னிரவினைப் பகலைச் செய்யு மெழின்மணித் தவிசின் மீதிற்
குரவர்கண் விழிப்ப வோசைக் குணகடல் வெளுத்த தன்றே. (8)

விடிந்தபி னவனிப் பொன்னா டெனும்விறற் பதியின் வீர
ரிடந்தரு திமஸ்கின் வேந்தைக் காண்பதற் கெழுந்தார் வெற்றிப்
படர்ந்தரு கொடியிற் றாண்டுர் பகைப்பெருங் கடலைக் கையாற்
கடந்தவே லபித்தா லீபு கலன்பல வணிவ தானார். (9)

வையகம் புரந்து தீனை வளர்த்திடு மிபுரு கீந்தங்
கையொலி யலைச்செங் கையா லரையினிற் கவினச் சேர்த்தித்
துய்யவன் றாதர் முன்னந் தோன்றிய ஆத மென்போர்
மெய்யணி குப்பா யத்தை வியன்பெற மெய்யிற் சேர்த்தார். (10)

கருவிமென் மிடற்றிற் றீண்டாக் காரண ரிசுமா யீல்தஞ்
சருவந்து சிரசிற் சேர்த்தித் தாரணி தனிற்பொன் னாட்டு
மருமலர் புயத்திற் றூங்கி வளர்நபி சீதுமெய்யிற்
றருகதி ருத்த ரீயந் தனையெடுத் தணிந்தா ரன்றே. (11)

சூலினைத் தரித்த கொண்டற் சுகைபுநன்னபிதஞ் செம்பொற்
காலினைக் கபுசை வீரக் கழலடி பொருந்தச் சேர்த்திச்

சாலவுங் குலத்து முன்னோர் தரித்திடுங் கலன்க டாங்கி
வேலினைக் கரத்தி லேந்தி வீரவாண் மருங்கு சேர்த்தார். (12)

தனக்குறுங் குலத்தி லாய்ந்த தலைவரின் முதியார் பாரிற்
சினக்கதிர் வேற்கை கொண்ட செல்வர்நாற் பதின்மர் தம்மைக்
கனக்குற மருங்கு கூட்டிக் காவல ரபித்தா லீபு
வனக்கட கரியை நேராய் மகிழ்வோடும் புறப்பட் டாரால். (13)

வேறு.

மாதிர மெனக்கனக மண்டப நெருங்கும்
வீதியிடை புக்குவிறன் மன்னர்புடை சூழக்
கோதறு மறக்கொடு வரிக்குழிவி னாப்ப
ணேதமற வந்தவரி யேறென நடந்தார். (14)

நித்தில நிரைத்துமலர் நீடொடைய னாற்றிப்
புத்தரி சொழுக்குமுயர் பந்தரிடை புக்குச்
சித்திர விறற்குரிசில் செவ்வியழி யாத
மத்தகரி யைத்திமஸ்கு மன்னையெதிற் கண்டார். (15)

கங்கமுல வுங்கதி ரயிற்கடவு டனனை
மங்குலக லொண்கதிர் மணிக்கடக மின்ன
வங்கையிணை தொட்டினி தழைததரு கிருத்தி
யிங்கித மொடுந்திமஸ்கி னுர்க்கிறை யிருந்தான். (16)

மூரியட லேறபுதுல் முத்தலிபு மைந்தா
மாரியொரு வாதகா மன்னவனை நோக்கித்
தேருமதி யாற்பல தெரிந்தபுக ழோடு
மாரமுத மானசில நன்மொழி யறைந்தார். (17)

ஓதுநெறி நீதியபித் தாலிபுரை கேட்டுச்
சீதமதி போலுமொளிர் செம்முக மிலங்க
வாதரவி னோடுமகிழ் வின்சிர மசைத்துச்
சோதிமதின் சூழ்திமஸ்கி னுக்கிறைசொல் வானால். (18)

இந்நகரி யிற்றலைவ ரியாவரினு மிக்கோய்
மன்னுகிளை யிற்பகை வரத்தவிர்தல் செய்யா
தன்னவர் துணிந்தவை துணிந்தனை யறத்தோ
ருன்னவு மிழுக்கென வுளத்திலவை கொள்ளார். (19)

சீலமறி யாதசிறி யோர்கள்பிழை செய்யின்
மேலவர்கள் கண்டவை விலக்கல்கட னல்லாற்
கோலிய பெரும்பகை குலத்தினில் விளைத்தான்
மாலுற வளர்த்தன்மட மைத்தகைமை யாமால். (20)

ஆதியொரு வன்றனியா னுண்டெனவ வன்றன்
றூதனபி யானவில் சோதியுரை யான
வேதமென தின்சொலென விஞ்சையின் விளைத்த
பேதமொழி வஞ்சமொடு பேசுவது மன்றே. (21)

மாறுபக ரற்கரிய மக்கநக ரத்திற்
றேறுமறை மன்னவர் செழுங்குறைஷி மன்னர்
கூறுவதி லொன்றுபடி றினறுகுல முற்றும்
வேறுபடல் வேதவிதி யன்றுபுகழ் மிக்கோய். (22)

காரண நினைத்தவர் கருத்துற முடித்திப்
பாரிலிறை தூதுவ ரெனப்பகர்தல் வேண்டும்
வேருமொரு நூறுமிலை யென்பதொரு விஞ்சை
யார்வமொடு கொண்டுநபி யென்பதியல் பன்றே. (23)

நன்றிவை யறிந்திடுவ துண்டுநபி தம்மை
யினறவை யிடத்தினி லுழைந்திடுக வென்ன
வென்றிவிறல் சேருமபித் தாலிபை விழித்து
மன்றல்கம ழுநதிமஸ்கு மன்னவ னுரைத்தான். (24)

மந்தர மதிற்றிமஸ்கு மன்னவ னுரைப்பச்
சிந்தைகளி கொண்டபுதல் முத்தலிபு செல்வ
ரிந்தமொழு நன்கென வெடுத்துற வியத்திச்
சந்தென வொருத்தனை யழைத்தனர் தனித்தே. (25)

மங்குறவ ழுங்கவிகை வள்ளலை விரிந்த
பங்கயப தக்குரிசிலைப்பரிவி னோடு
மிங்கினித ழைத்துவரு கென்றனர் விரைந்தே
பொங்கிய புயங்கள்புள கங்கொள வெழுந்தான். (26)

ஊதையை நிகர்த்தகதி யொண்புரவி மேற்கொண்
டேதமறு மாநகர வீதியிடை புக்கி
யாதமுத லானநபி நாயகம ருதி
னூதவரை வநதநா தூதனெதிர் கண்டான். (27)

கண்டுகடி திற்பரி யிழிந்திருகை யார
முண்டக மலர்ப்பத மிருத்திமுடி மீது
கொண்டுற வணங்கிநய னங்கள்களி கூற
வண்டென மலர்க்கர வனப்பினை நுகர்ந்தான். (28)

மாதவமு கம்மதின் வனப்பினை நுகர்ந்த
தூதனொரு வில்லினிடு தூரமதி னின்று
காதலொடு மெய்யணி கலன்கலை யொதுக்கிச்
சூதற விரிந்தமணி வாய்புதைத்துச் சொல்வான். (29)

பவக்கட னடுப்படு மனுப்பகுதி யெல்லா
முவப்பொடு கரைப்படு மரக்கலம தொத்தே
நவப்பட வுதித்தநபி நாயக விளக்கே
துவர்க்கமுடி விற்கொரு சுடர்க்கதிரின் மிக்கோய். (30)

தேனமர் பொழிற்றிமஸ்கு மன்னொடு செறிந்திம்
மாநகரின வீரரு மதிக்குடை கவித்த
கோனபுதுல முத்தலிபு புக்கிரரு முற்றே
யீனமற நும்மைவர வென்றனர்க ளென்றான். (31)

வருகவென நன்மொழி வகுத்தனர்க ளென்ன
வருகினி துவந்தவ னறைந்தது தெளிந்தே
தருமநெறி நந்நபி தருக்கொடு மகிழ்ந்தே
மருமலர் பொதிந்தமணி மாளிகை புகுந்தார். (32)

மாசகல வந்தகுல மாதினை விளித்துப்
பாசன அபில் ஹக்கமொடு பற்பல ருடனாறு
பூசலை நினைத்தெழுதி விட்டதும் புரிந்தே
யாசில்திமஸ் கிக்கிறை யடைந்தது வுமன்றே. (33)

துன்றுமடல் வெம்புரவி சேனையுடை சூழ
வன்றிற லயசசரொ டிருந்துமதி வல்லோன்
வென்றிகொ ளயிற்படை யொருத்தனை விடுத்தே
யொன்றிய மறத்தொடு மழைத்தது முரைத்தனர். (34)

வேறு.

மறத்திகன் மனத்தவர் கிரண்டு மாநகர்ப்
புறத்திருந் தழைத்தன ரென்னும் புன்மொழி
நறைத்தடப் புயநபி நவிலக் கேட்டவு
நிறைத்தகற் புடைமையா ரறிவு நீங்கினார். (35)

காரதி ரிடிக்கெதிர் கலங்கித் தன்னுடல்
சோர்தரு மயிலெனச் சோர்ந்து கண்ணினீர்
வார்தரு கல்ன்கலை நனைப்ப வார்குழல்
பார்தர விரிப்பமெய் பதைத்து வாடினார். (36)

மறைத்திடா மதியென வளருந் தீனிலை
நிறைத்தநற் பதவியை நிலத்தி லெங்களுக்
குறத்தரு மிறைவவுன் றாத ருன்றிருப்
புறத்தினி லடைக்கல மெனைப் போற்றினார். (37)

நவ்விபின் பெரும்புன னடந்த நந்நபி
மௌவலங் குழற்கதி ஜாதம் வாட்டங்கண்
டவ்வயி னினிதுற வடுத்து நன்மறைச்
செவ்விய தெருட்சியிற் றெளியச் செப்புவார். (38)

குவைலிதுக் கரும்பெருங் குலத்திற் றீபமே
புவியில்விண் ணவாதினம் போற்றும் பூவையே
கவினுமென் னுயிரன்னீர் கவலல் காவலோ
னவனரு ணம்மிடத் தகல்வ தில்லையால். (39)

மண்பெரும் புவியினில் வாழு மாநதரிற்
றுன்புறு தவரிலைத் துன்மைத் துன்புறு
தின்பமே கொள்பவ ரிலங்கும் பொற்பதிக்
கன்பரா யிருப்பரென் றறிவு ரொற்றதே. (40)

இனப்படைக் கடனடு விருந்து ளோரமியாந
தனிப்பவ னருண்மரக் கலத்தின சாயினாற்
பணிப்படா மகிழ்களை படுத லல்லது
துணிபபட லறிவெனுஞ் சூழ்ச்சித் தன்றரோ. (41)

கொதிப்படர் குபிரெனுங் குறுக லாதிர
ளதிரப்படர் தீன்படைக் கலத்தி னாக்கம்போ
லெதிர்ப்படுந் துன்பெனு மிருளை யுண்மகிழ்
மதிப்பெனுங் கதிரினான் மாய்த்தல் வேண்டுமால். (42)

தன்மமே பொருளெனத் தவத்தின மேற்செலு
நன்மனத் தவர்க்கொரு நாளுந தீங்கெனும்
புன்மைவந் தடைந்திடா தென்னப் பூவினின்
முன்மறை தெளிந்தவர் மொழிந்த வாய்மையே. (43)

இன்னன பலமொழி யியம்பிக் கற்பெனு
நன்னிலைக் கொடிமன * நடுக்கந் தீர்த்தொரு
மின்னகத் திருந்தெழு மேக நீழலிற்
பொன்னணி முன்றிலின் புறத்தி லாயினுர். (44)

உள்ளகக் களிப்பொடு முவந்து நங்கபி
விள்ளரும் விசும்பினி னேக்க வெள்ளிடைத்
தெள்ளிய பெருஞ்சிறைச் செபுற மீல்தமைக்
கள்ளவிழ் தாமரைக் கண்ணுற் ருரரோ. (45)

மூரணுறும் வானவர் கோனெடுமூ வாயிர
வாரமுறு மலக்குகள் வந்து தோன்றினர்
சிரமொரு கிரியெனத் திகழச் செவ்விய
காதலம் புயவரை ககனந் துன்னவே. (46)

பெரும்படைப் பெனுமவர் பிடித்த வல்லய
மரும்பெரும் பொருளவன் முனிவி லாயது
தரும்பெருங் கதிரவன் றனினும் வெய்யதா
யிரும்பெரும் புவிக்கட லேழு முண்ணுமால். (47)

அறத்தனி படைப்பவர் காத்தி லாயவை
மறத்தினைத் திரட்டியோர் வடிவு கொண்டென
வுறைத்தெழுங் கொழுந்தழ லோங்கி யொவ்வொரு
புறத்தினி லெழுபது தலைக்கும் பொங்குமால். (48)

வருமெழு வான்படு வானென் றேங்கிய
விருதிசைக் கிருதலை யிடமுந் தீண்டுந்தீப்
பொருகதி ரயிற்கெதிர் பொருவ வாயிரம்
பருதியுஞ் செழுங்கதிர் பரப்ப வெட்குமால். (49)

அப்பெருந் திறலமி லங்கை யேந்திநன்
மைப்படி திரளென வந்த வானவர்
செப்பருஞ் சலாமெனச் செய்ய வாய்திறந்
தொப்பரும் புகழ்நபிக் கோதி னாரரோ. (50)

முருகலர் தொடைப்புய முகம்ம தேயெமக்
கருளினன் பெரும்பொரு ளாதி நாயக

* நடுக்கந் தீர்த்து மின்னகத் திருந்து முன்றிலின் புறத்தி லாயி னுர் எழுமொரு மேகநிழற்ற வென்றுகொள்க.

னிருளற றும்விரும் பேவல் செய்திடத்
திரளொடும் வந்தனஞ் செகத லத்தினே. (51)

கொலைமனக் கொடியவர் கூட்டத் தான்மன
மலையனீ ரேகிடின் மாந்தர் சேனைக
ளலைகட லாயினு மனுவன் றுதித
னிலைபெறுந் தீனெறி நிறுத்தல் வேண்டுமால். (52)

இருங்கலைக் குரிசிலெம் மேவல் காண்பிராற்
கருங்கட லேழையுங் கலக்கி நீறதாய்ப்
பெருங்கிரி யனைத்தையும் பிதிர்த்திட் டோர்நொடி
யருங்கதிர்ப் பொழுதினி லடைகு வோமென்றார். (53)

விண்ணவ ருரைத்தவை கேட்டு மெய்சிலிர்த்
துண்ணிறை மகிழ்வொடு முணர்ந்து தேர்ந்தியன்
மண்ணகத் தென்னெடும் வந்து சென்மினென்
றண்ணலும் பொறுமையி னவர்கட் கோதினார். (54)

அமரருக் கினிதுரை யருளிச் செய்தபின்
றமர்வரத் திறலபூ பக்கர் தம்மொடு
முமறுது மானலி யும்வந் துற்றன
* ரிமையினி லடலரி யேறு போலவே. (55)

காரண மெனும்பல கலன்க டாங்கிமே
லாரண வெற்றிவெள் ளலங்கல் சூடியோர்
வீரவே லெனுங்கதிர் பிசுமி லேந்தினற்
பூரண மதியெனப் புறப்பட் டாரரோ. (56)

தீனெனுங் கொடிமுத னிறுத்திச் செவ்வியீ
மானெனு மதகரி மருங்கு சூழ்வரப்
பானல னெனுங்கலி மாப்ப ரந்திடத்
தானவ னருளெனுந் தானை முன்செல. (57)

மூதுரை யென்னுந் தீன்தீன் முகம்மதென்
றோதிய பெருமுர சொலிப்ப நால்வரு
மாதித னமரரு மணிய தாய்வர
வீதியி னடந்தனர் வேத வீரத்தார். (58)

---

* அதனோ டியைந்த வொருவினைக் கிளவி தலைமைபற்றி நிகழ்ந்தது, அவ் வும்மையைப் படுத்த லோசையாற் கொள்க.

அந்நபி வருவது கேட் டபூஜகு
லுடலுயிர் மனமறி வொடுங்கி யெவ்வண
முடிவதோ வெனத்திமஸ் கிறைமுன் னேகியோர
வடிவுறுங் கவிதையின் வாழ்த்திச் சொல்லுவான். (59)

மறைதெரி யறிவன்மா லீக்கு செய்தவ
முறைதா வுருவெடுத் துதித்த தீபமே
குறைபடாப் பெருங்குலங் காக்குங் கொற்றவ
நிறைபயி லுலகினைப் புரக்கு நேமியோய். (60)

மருப்பொதி முகம்மது வாக்கி னூற்றின
முறைப்பது படிறலா லுண்மை யில்லையா
னிரைத்தடர் வஞ்சனை நிறுத்தி யாரையு
மொருப்பட மாயத்து ளொடுக்கி னாரோ. (61)

வஞ்சனை யாகிய வலையி னுட்படு
நெஞ்சால் லானெறி நிலைநின் றுரிலை
வெஞ்சமர்க் கவனொடும் வீரம் போக்கிநின்
றஞ்சின ரலதெதிர்ந் தவரு மில்லையால். (62)

வருந்திட முகம்மதின் மாயவெள்ளமே
பாந்தி லமிழ்ந்துமுன் பரிவிற் றுங்குதற்
கருந்தவ மாக்கல மாக வந்திவ
னிருந்தனை மார்க்கமு மிறத்த வில்லையால் (63)

நிரைநிரைக் கடற்படை நிரப்பி நாமிது
வரையினு மிவணிடை வருவ தில்லையா
லிருநில மாந்தர்க ளியாருஞ் சூறையிற்
சொரிதரு பூளையொத் திடுவர் சொல்லினே. (64)

நனிபல புதுமையி நபிகள் வேடமா
யினமொடு வருகுவ னியாவ ராயினு
மனமலைத் திடமொழி வளர்பன் மெய்யெனக்
கனவினு மனத்தினிற் கருதல் காவலோய். (65)

அடுத்துறைந் தபூஜகு லளவி லாதசொல்
லெடுத்திசைத் திடதிமஸ் கிறைவன் கேட்டுளங்
கடுத்திலன் களித்திலன் கவிதை யாற்சில
தொடுத்துரை யெடுத்தவை யெவர்க்குஞ் சொல்லுவான். (66)

றன்றனைத் * தவத்தினர் தியற் றன்மையிற்
குன்றிலர் நாடோறுங் குளத்தைப் பல்லுறத்
தின்றிடி விரதமே செனிக்கு மியாவரு
மென்றிடி வினியவை வேம்புக் கில்லையால். (67)

பொய்மையோர் நொடிவரைப் பொழுதிற் றீர்ந்திடு
பொய்மைசூழ் கடலினும் விளங்கித் தோன்றமாற்
கைமத கரியினைக் கருப்பை மாய்த்திடா
துய்மதிப் பெரியவ ருளத்திற் காண்பரால். (68)

வஞ்சனைக் கீழ்மையோர் மாயக் காரண
மெஞ்சலி லுளதில தென்னத் தோனறிடு
மஞ்சலி னிறைவன்றா தவர்கள் காரணம்
விஞ்சையன் றலகெலாம் விளங்க நிற்குமால். (69)

தூயவன் மறைவழித் தூதர் செய்கையு
மாயமந் திரத்தவர் வழக்கின் வண்ணமு
நேயமு மும்மறை நிகழ்த்துங் கேள்வியி
னுயுநல் லறிவினு மறிவ தாகுமால். (70)

வரியளி மலர்த்தடத் திமஸ்கு மன்னவன்
குருநெறி முகம்மது கொண்ட பெற்றியை
யெறிகதிர் படுமுன மிற்றைப் போதினிற்
றெரிவதுண் டெனப்பல கவியிற் செப்பினன். (71)

செவியினு முளத்தினுங் காயத் தீயசொல்
லபுஜகு லுரைத்ததுந் திமஸ்கி னதிபன்
கவியினிற் சொற்றதுங் கேட்டுக் கல்வியின்
மவுலுவர் குரிசின்முத் தலிபு மைந்தரே. (72)

அறிவினிற் குணத்தினி லெவர்க்கு மன்பினிற்
பொறுமையி னன்னெறிப் புகலிற் செய்கையிற்
றிறன்முகம் மதினொடு முவமை செப்புதற்
குறுபவ ரெவருமிவ் வுலகி லில்லையால். (73)

மைதருங் கவிகையின் வள்ளல் வாக்கினிற்
பொய்யெனப் பிறந்தசொற் புகல்வ தில்லையாற்

---

* தவத்தினருந் தீயருந்தத் தந்தன்மையிற் குறைதலில்லா ரென்றுணர்க.

கைதவச் சூனியங் கற்று மந்திரஞ்
செய்பவ ரிடத்தினுஞ் சேர்ந்த தில்லையால். (74)

பெற்றனன் வளர்த்தனன் பிறந்த நாட்டொடுத்
திற்றைநாள் வரையினு மெவரொ டாயினும்
வெற்றிகொண் டிணங்குதல் விருப்ப மல்லது
குற்றமென் றொருமொழி குறித்த தில்லையால். (75)

பிற்பல மொழியினைப் பிதற்ற லென்கொலோ
சிறுநொடிப் பொழுதிவண் சேர்வர் கண்களாற்
றிறனுறக் கண்டவர் செப்புஞ் செய்தியு
மறிகவென் றெடுத்தபித் தாளி போகினர். (76)

இவ்வணம் பலமொழி நிகழு மெல்லையின்
மைவணக் கவிகையர் மெய்யின் மான்மத
மவ்வவைக் குற்றது தாக முன்னமே
செவ்விநன் னெறித்திமஸ் கிறைமுன் சென்றதே. (77)

திசைகதிர் தாநபி நடந்து தீனென
வசையறும் புகழுபுல் காசி மன்னனுத்
திசைதரா மருவல ரிதயம போலநின்
றசைதருங் கொடிமதிள் வாயி லாயினர். (78)

மெய்யொளி பரப்பிட விரிந்த வாயிலின்
மையலங் கடகரித் திரளும் வாசியும்
பெய்கழற் சேனையு நீக்கிப் பெட்புறத்
துய்யவன் றிருமறைத் தூதர் தோன்றினர். (79)

மான்மகங் கமழ்ந்திரு மருங்கு மெய்யெழில்
பான்மதிக் கதிரொளி பரப்ப வந்தநந்
நான்மறைக் குரிசிலைக் கண்டு நண்பொடுந்
தேனவிழ் தொடையலா னெதிரிற் சென்றனன். (80)

அணிதிமஸ் கிறையெழுந் தெதிரி னன்பொடு
மணியொளி முகம்மதை ருங்கி ருத்திநற்
பணிவிடை யொடும்பல பகர்ந் தடிக்கடி
தணிவிலா மகிழ்மொழி சார நோக்கினன். (81)

மருங்கினி லிருத்திமா லீக்கு தன்மக
னிருங்குழு நாப்பணி னிருப்பக் காயிர்க

ளொருங்குற நோக்கியுள் ளுடைந்து மாமுகம்
பெருங்குலை வங்கமொத் தழுங்கிப் பேசுவார். (82)

கன்னலங் கழனிசூழ் திகஸ்குக் காவல
னின்னண மெழுந்தெதி ரிறைஞ்சிப் போந்தனன்
முன்னமியா னினைத்தவை முடிவ தென்கொலென்
றன்னவர் சஞ்சலித் தவல முற்றனர். (83)

திருந்திலாக் காபிர்கள் சிந்தை நொந்தவ
ணிருந்ததும் ஹபீபுட னபி யிருந்ததும்
பொருந்துறக் கண்டுபொற் புரிசை சூழ்தர
வருந்திபஸ் கவர்சில வசனங் கூறுவார். (84)

நிலந்தனிற் சுவடில நிழலுந் தோன்றில
கலந்துமெய் யொளியொடு நறை கமழ்ந்தன
சலந்தரு கவிகையொன் றெழுந்து சார்ந்தன
குலந்தரு மனுவல ரென்னக் கூறுவார். (85)

வேறு.

அருளி னோக்கமு மமுதுகு வசனமு மழகா
யிருளி லாதமெய் யவயவத் தாசிலக் கணமுந்
தெருளுங் கல்வியும் பொறுமையு நிறைந்தவிச் சேயை
மருவி லாதள விடற்கரி தெனச்சிலர் மதிப்பார். (86)

இறைவன் றூதுவ ரென்றது மிறைதிரு வசன
மறையி றங்கிய தென்றது மார்க்கமென் றதுவு
நிறையும் வாக்கினிற் றெரிவது நிகரிலிந் நிகரா
ரறையும் வாசகம் படிறெனச் சிலரெடுத் தறைவார். (87)

மதியி லாமனத் தபுஜகல் வரைந்தபத் திரத்துக்
கிதய நேர்ந்திவண் வந்தன மிவன்மொழி கேட்கி
லதிக பொன்னுல கிழந்துபாழ் நரகடை வதலாற்
பதியி னல்லறி விலைநமக் கெனச்சிலர் பகர்வார். (88)

பத்தி ரத்தினிற் கடிதினிப் பதியடைந் திவர்த
முத்த ரத்தினுக் கொழுகியுற் பவிபவந் துடைத்து
முத்தி யெய்துதற் கெழுதிய முதல்விதி யியற்றுஞ்
சித்தி ரத்திற னிஃதெனச் சிலரெடுத் திசைப்பார். (89)

கண்ப டைத்தவ ரிவரெழிற் காண்பவர் முகத்திற்
புண்ப டைத்தவ ரிவர்தமைக் காண்கிலார் புதியோன்
பண்ப டைத்தசொன் மறைநபி பதம்பணி யாதார்
மண்ப டைத்ததிற் படைப்பல ரெனச்சிலர் வகுப்பார். (90)

அண்டர் நாயக முகம்மதின் காரண மனைத்துங்
கண்டு நல்வழி யொழுகிப்பொன் னுலகுகை விலையாய்க்
கொண்டு போவதற் கடைந்தன மெனச்சிலர் குழுமி
விண்டு மெய்யுள கெழக்களிப் பொடும்விரித் துரைப்பார். (91)

உறுதி யாகம தாசபு ஜகுலுரை கேட்டு
மறுகும் வெம்பகை விளைத்திடி லினைவரு மதியா
தறுதி யீதென வாசுட னபுஜகல் தனையுந்
தெறுத லேதுணி வெனச்சிலர் தெரிந்துசெப் புவரால். (92)

முகம்மது தமக்கிடர் செயத் திமஸ்குமன் னவனுஞ்
செகத லத்துறை மன்னவ ரடங்கலுஞ் சினந்தே
யிகல்பொ ரத்துணிந் தெதிரினு மிருங்கதிர்ப் பணியா
யகல்வ தலலது முடிவதில் லெனச்சில ரறைவார். (93)

ஈத லாற்சில வுரைபிறர் தாத்திமஸ் கிறைவன்
காத லான்முகம் மதுதிருக் கவின்முக நோக்கி
மூது ரைத்தெளி வினுமறை யினுமுதி மொழியாய்ப்
போத ரத்தொடும் புகழொடு மிதத்தொடும் புகல்வான். (94)

வரிசை ஹாஷிமென் குலத்தினி லுதித்தமா மணியே
தரும லாபபுய அபதுலலா தருதிரு மகவே
யிருநி லத்தவர்க் கிசைநடெ வெனதுளத் திருந்த
வுரையி னிற்சில கேட்டியென் றினிதெடுத் துரைப்பான். (95)

தந்தை தாய்தமர் தம்வழி யொழுகிலா ததுவு
மெநத ஞயக ஞெருனுண் டெனறது மெழிலா
யந்த நாளையின் வருங்குப லினைப்பழித் ததுவும்
வந்த தென்றனக் கருமறை யெனவகுத் ததுவும். (96)

* நபியு நானலா லினியிலை யெனநவின் றதுவும்
புவியு ளோர்க்கெலா மொருகலி மாவெனப் புகன்று

* அனைத்து மென்பதில் நபியுநானலா லென்பது பமைதலாலுந் தொழிலென்றது பயனிலை கொள்ளாமையாலு மென்றுணர்க.

செவிக டச்சுட வுரைத்ததுங் குலத்தொடு தினமுந்
தவிர்கி லாப்பகை கொண்டதுந் தகுவதன் றெமக்கே. (97)

இன்ன வாசகங் கூறநம் மிறையவன் றாதாய்
மன்னு நன்னபி மார்க்குறுந் தொழின்முதன் மறையோர்
சொன்ன சொற்படி பெரியர்க்குஞ் சிறியர்க்குந் தோன்ற
முன்னி லைப்படி மிகுதிகா ரணங்களை முடிப்பார். (98)

பிறந்த பல்லுயி ரனைத்துமுற் பிரளய மதனி
லிறந்தி டாவகை நூகுநன் னபியினி தளித்தார்
நிறந்த ழீஇயிபு றூஹிநன் னபிபெரு நெருப்பைச்
சிறந்த மென்மலர் வாவியிற் குளிர்தரச் செய்தார். (99)

மூரணி டும்பிரு ஊன்முன மறைநபி மூசா
காத லத்துறை கோறனைப் பெருமலை கடுப்ப
வரவ மாக்கின ரரியதா ஊதுவல் லிரும்பை
யுருகு மென்மெழு காக்கினர் செருநர்நெஞ் சுருக. (100)

நிறைந்த நீணதி யிடங்களின் வாயிடை நெடுநா
ளிறந்த வர்க்குயிர் கொடுத்தனர் மறைநபி யீசா
வறைந்த வெண்டிரைக் கடற்படு தலத்திவை யறியா
துறைந்த பேரெவ ராயினு வயிற்றினி லுதித்தோய். (101)

பண்டு மேலவர் காரணப் படிக்கவர் கலிமா
கொண்டி ருந்தவர் சிலரினங் குவலயத் தாவோர்
கண்டு தேறிடும் படிதருங் காரண நளரோற்
றொண்டு செய்திடா ரெவரெனத் திமஸ்கிறை சொன்னான். (102)

வேத நந்நபி கேட்டெதி ராசனை விளித்திப்
போது ரைத்தனை நடுநிலை நின்னுளம் பொறுத்த
தேது காரண காரியங் குறித்தெடுத் தெனக்குக்
கோதி லாதுரை யெனவுரைத் தனர்நபிக் குரிசில். (103)

குரிசி லாகிய முகம்மதி னுரைசெவி குளிர
வருளி னோக்கொடு மனக்களிப் பொடுஞ்சிர மசைத்துத்
தெருளி னொடொறுந் தெரிந்துதன் சிந்தையாற் றிரட்டும்
பொருள தாகிய நன்மொழி திமஸ்கிறை புகல்வான். (104)

மதிபி னுஞ்செழுங் கதிர்தரு முகமுகம் மதுவே
கதிரின் வெய்யவன் மேற்கடற் புகக்ககன் முழுது

முதிரும் வல்லிருள் பரந்திட வேண்டும்பின் முரம்பாற்
பொதிய பூக்குலை செங்கிரிக் குடுமியிற் புகுந்தே. (105)

நின்று நீரம வாசையிற் கலைநிறை மதியம்
வென்றி வேண்டிரைக் கடன்முகட் டெழச்செயல் வேண்டுங்
குன்றி டாதெழுந் தந்தரங் குலவிப்பின் னிறங்கித்
தோன்று தோன்றுகலை பரமிசை தோன்றவும் வேண்டும். (106)

இருந்த பூரணை மதியநன் னிடத்திடை யிறங்கி
வருந்தி டாதுகலை பாவினை யெழுதரம் வலமாய்த்
திருந்த வந்துபின் னுட்புகுந் திறைவனைச் சிரஞ்சாய்த்
தருந்த வத்தொடு மிதயமன் புறத்தொழ வேண்டும் (107)

வணங்கி யங்கிருந் தெழுந்துபொன் வாயிலைக் கடந்து
கணங்கொண் மாந்தரி னடுநடந் தழகொடு கடிதி
ணிணங்கொண் மால்வரை யேறிநின் றும்முட னியல்பாய்ப்
பிணங்கி லாதநன் மொழிபல பேசவும் வேண்டும். (108)

ஆதி நாயக னொருவனுண் டெனவுமங் கவன்றன்
றூதர் நீர்நபி யென்பது மறபெனுஞ் சொல்லினாற்
பாத லத்தினி லியாவருஞ் செவியுறப் பகர்ந்தப்
போதி னுந்திருச் சட்டையுட் புகுதவும் வேண்டும். (109)

அங்கி ருந்திரு பிளவதா யணிசெழும் வலது
செங்க ரத்துளை சட்டையிற் புறப்படத் திறத்தோர்
பங்கி டக்கரச் சட்டையிற் புறப்படப் பரிவா
யிங்கி தத்தொடுங் குறையற வெதிரவும் வேண்டும். (110)

ஒருப குப்பெழு வானினிற் புகுந்தொரு பகுப்பு
விரிதி ரைப்படு வான்புகுந் தந்தரம் விளங்கப்
பொருவி லாதிரு பங்குமோர் மதியெனப் பொருந்திப்
பருதி வானகத் திடைகதிர் பரப்பவும் வேண்டும். (111)

பரப்பும் வெண்மதி பின்னுமிப் பாரெலா மறிய
வுரப்பி நாயக னொருவனென் றவன்மறைக் குரித்தாய்
வரப்ப டுந்திறன முகம்மதென் றருமொழி வகுத்து
விரிப்பர் தீனிலை யென்பதும் விளக்கவும் வேண்டும். (112)

ஈதெலாமுடித் திடுவிரே னும்முறைக் கிணங்கிக்
காத லாலிணை யடிமிசைச் சிரமுகங் கவிழ்த்தி

யாத ரத்திலென் றிரளொடுந் தீனிலைக் காகிப்
போது வேனென வுரைத்தனன் திமஸ்கினைப் புரப்போன். (113)

உள்ள மீதினி யிதுகொலோ வின்னுமற் றுளவோ
விள்ளு வாயென நபிதிமஸ் கிறைவனை விளித்துக்
கிள்ளை யின்றிர ளரசருஞ் சேனையுங் கேட்பக்
கள்ள நெஞ்சபூ ஜகல்பனங் சருசக்கட் டுரைத்தார். (114)

புகலுஞ் சொற்செவி புகத்திமஸ் கினிற்புர வலனு
மகம கிழ்ச்சிகொண் டிவையலால் வேறென்னென் றறைய
விகன்ம னத்தவர் முகமரைக் கிருஞ்சசி யெனலாய்
மகித லம்புகழ் நபியெழுந் தனர்திரு மனைக்கே. (115)

கரிந்த சிந்தைய னபூஜகல் கடிதினி லெழுந்து
புரிந்த பொன்மலர்ப் புயத்திமஸ் கிறைவனைப் போற்றி
வருந்தி லாதுசம் மதித்தனன் முகம்மது மினிமேற்
றெரிந்த தங்கவன் படிறென வுரைத்தயல் சேர்ந்தான். (116)

வாய்ந்த போரவை விடுத்தின மாந்தரை விளித்துச்
சாய்ந்த புந்தியன் முகம்மதின் சரிதையும் வலியு
மாய்ந்த வேதமு மார்க்கமும் வணக்கமு மறிவுந்
தேய்ந்த தின்றென அபூஜகல் குலுங்கிடச் சிரித்தான் (117)

மருவ லாருரை செவிக்கிடா தெழின்முகம் மதுமப்
பொருவி லாவணங் கடந்துதங் திருமனை புகுந்து
பெருகுங் கேள்வியன் குவைலிது தவத்தினிற் பிறந்த
விரிம லர்க்குழற் றெரிவையை யருகினில் விளித்தார். (118)

அடர்ந்த வேல்விழி மடந்தைய யருகுற விருத்தித்
திடந்த ருங்கதிர் வேற்கா தலத்திமஸ் கிறைமு
னடந்த வுத்தர மனைத்தையும் வான்முறை நவின்றார்
மடந்த ராதான் மறைமன வலிமுகம் மதுவே. (119)

அடிகள் கூறிய மொழிவழி கேட்டகந் துணுக்கிக்
கடிகொண் மென்மலர்ப் பல்லவச் செழுங்கர மேந்தி
நொடிய வாவென துயிரவர் மனத்தினி னினைத்த
படிமு டித்தரு ளென்றிறை யொடுபகர்ந் திரந்தார். (120)

அன்று நநநபி தனித்தொரு வயினுறைந் தறிவா
னின்றி ரண்டிறக் ஆத்துநன் னெடியனை வணங்கி

வென்றி தாவவன விருந்தனர் விரைவின் வந் தடைந்தார்
தென்றி றற்றம துயிரென வருஞ்ஜிபு ரீலே. (121)

எனக்கு றுந்துணை யேயுபி ரேமுத விறையென்
றனக்கு மக்குச லாமெடுத் துரையெனச் சாற்றிச்
சினக்குங் காபிர்க ளொடுந் திமஸ் கிறைவன்செப் பினதும்
நினைக்கு முன்வரு மென்றன னெனநிகழ்த் தினரால். (122)

மன்றன் மெய்முகம் மதினுரை மறுத்திடா தேவ
லென்றுஞ் செய்தவர்க் கமைத்தனன் மதியையென் றிறையோன்
வென்றி யாய்ப்பினு முரைத்தன னெனுமுரை விரித்தார்
குன்றி லாப்பெருஞ் சிறைசெறி வானவர் கோமான். (123)

விண்ண வர்க்கிரை யிவையலாற் பல்பல விரித்து
மண்ணகத்திருந் தரும்விசும் படைந்தபின் மகிழ்வா
யண்ண லாரைய முகம்மது மகத்தினிற் களிப்புற்
றெண்ண மின்றியங் கிருந்தனர் திருந்தல ரிடியின். (124)

மருவ லர்க்கரி நிகரபித் தாலிபு மன்னர்
திரும னைப்புகுந் திருந்துதம் முளத்தினிற் செனித்த
பருவ ரற்பெரு நோயினாற் றனித்துடல பதைத்துத்
தெரியுந் தேற்றமு நலக்கமும் வரச்சில புகல்வார். (125)

கான கச்சுரத் திடைநதி யழைத்தனர் கடிதி
னூன ருந்திய புலிபணி தாவெதி ருரைததா
பானு வினகதிர மணிமுடி யரவுடற பகிரநதா
ரீன வன்கொலைக் கறுங்காம் பொருத்தியங் கிருந்தார். (126)

நிலவ ழைத்திடத் திமஸ்கிறை நிகழ்த்தின னவன்மு
னலைவி லாதெதிர்ந் தறுதிசொற் றனருல கறிய
விலகு காரண மெவவணை முடியுமோ வெனத்தம்
மலைவி னுடன் மதியற மயங்கிடுங் காலை. (127)

இருந்த வில்லகத் தொருமதி ளிடியென முழங்கி
விரிந்த செங்கதிர் வேலபித தாலிபை விளித்துத்
திருநதும் பொன்னகர் வானவர் மொழியெனத் தெளியப்
பொருந்த நன்குறத் தெரிதா வினியன புகலும். (128)

மெலிவு மெண்ணமுங் கவலையும் விரைநதெடுத் தெறிமின்
வலிய வன்னரு ணின்மக விடத்தினின் மலிவாய்த்

தொலைவி லாப்பெருங் காரணம் விளைப்பதாற் சுடர்வெண்
ணிலவு மிற்றையில் வருஉமது மறுவற நிறைந்தே (129)

மருவ லார்பெருங் கிளையொடுங் குழுவொடும் வதனங்
கருகி யங்கவர் வலியிழந் திடுதல்கண் டறிமி
னரிய தீனெனுஞ் செழுங்கதிர்க் குபிரிரு ளறுத்துப்
பெருகு மென்பதுங் கேட்டன ரறிவினிற் பெரியோர். (130)

நிகதி பெற்றிலா வதிசய மிஃதென நினைத்து
முகம்ம தின்றிரு மனைபுகுந் தவர்வயி னுறைந்து
பகர ருஞ்சுவை மதிண்முறை பகர்ந்ததைப் பகர்ந்தார்
செகதலத் தினும் விண்ணினும் பெரும்புகழ் சிறந்தோர். (131)

தந்தை கூறிட வானந்த முளத்தடங் ததும்பி
யெந்தை யீசெனப் போற்றிவிண் ணவர்க்கிறை யிசைத்த
மந்தி ரத்தையும் வரன்முறை வகுத்தெடுத் துரைத்தார்
கந்த மெனமலர்ப் புயவபித் தாலிபுங் களித்தார். (132)

அவிரு மெய்யொளி முகம்மதே யும்மிடத் தவனாற்
புவியின் மிக்குயர் செல்வமும் பெரும்புது மைகளுந்
தவிர்கி லாதுவந் தடைவதுண் டெனப்பல சாற்றித்
திவளு மாலைக டியலவர் மனைவயிற் சேர்ந்தார். (133)

அற்றை நாளகன் றரும்பெரும் புகழ்முகம் மதுவு
மற்றை நாளுயிர்த் தோழராக டைபவர வழைத்துக்
சுற்ற மற்றதம் பெருங்குலத் தவரையுங் கூட்டி
யொற்றர் முன்புகப் பின்னனெழுந் தனர்குழு வுடனே. (134)

கொடிய பாதகம் வஞ்சனை குபிர்கொலை யனைத்து
மடிய நல்லறங் குருவொடும் வருவன போனறுங்
கடிகொண் மான்மதங் கமழ்தரத் தெருத்தலை கடந்து
முடியின் மைதவழ் கஃபதுல் லாவைமுன் னினரால். (135)

உயிரு றுந்துணைத் தோழமை நால்வர்க ளுடனே
வயிர வொண்கதிர்க் கஃபத்துல் லாவலஞ் சூழ்ந்து
செயிர றத்தொழு திருந்தினத் தவருடன் சிறப்ப
வியல்பெ றுந்தனி மறைமுகம் மதுநபி யெழுந்தார். (1:6)

வடிவு றுஞ்சல தாக்குடை நிழற்றிட வானோர்
நெடுவி சும்பிடை யிடனறத் திசைதிசை நெருங்க

வுடனு றம்படைப் பெணையுநல் வாழ்த்தெடுத் தொலிப்பப்
புடைப ரந்தினம் வாநபி பொருப்பினி லானர். (137)

சிறுவ ருந்துணை முலைபணை பிரிந்திடாச்சேயு
மறுகு மைக்கய லஞ்சன விழிமடந் தையருந்
தெறுக திர்ப்படைப் பன்னகர் மாக்களுஞ் சிலையைக்
குறுகி நின்றனர் நால்வகைக் குலந்தலை மயங்க. (138)

கனைகு ரற்சிறு கட்பெருஞ் செவிமத கரியும்
புனைம யிர்க்கடு விசைவளை முகப்புர விகளு
மினைம ணிக்கடற் சேனையும் புறப்பட வெழுந்தான்
வனச மென்மலர்த் தடந்திகழ் திமஸ்குமன் னவனே. (139)

திவட டங்கடற் சலஞ்சல முராறாத் திசைவிண்
டவழ்த ருங்குடைத் திரள்களுங் கவரியுந் தயங்கத்
துவட ருங்கொடி மலிதரப் பல்லியந் தொனிப்பக்
குவட டங்கலுஞ் செருகின நிறைந்தன குழுவி. (140)

முருக லர்த்தருப் பொருப்பிடந் தொடுத்தணி முதிர்ந்த
தெருவும் வீதியுங் கானமும் பார்த்திடுந் திசையு
மிருநி லத்திடை யெள்ளிட விடமரி தெனலாய்ப்
பெருகி நின்றது நிறைதரு மனுப்பிர ளயமே. (141)

கலையி ழந்தன மானின மடிசுரை கவிழ்பான்
முலையி ழந்தன கன்றுகள் விலங்கின முழுது
நிலையி ழந்தன பறவைக ணெடும்விசும் பெழுந்த
மலைய மிழந்திய திரைதரு வெணுமனுக் கடலுள். (142)

எறிந்த வெண்டிரைக் கடன்முகட் டெழுந்துவிண் ணேகிச்
செறிந்த பார்மனுக் கடலினைக் கண்களாற் றெரிசித்
துறைந்த திண்கதி ராயிரங் கரங்களு மொடுக்கிக்
குறைந்த கர்ந்திகொண் டிரவிமேற் கடலிடை குதித்தான். (143)

அடரும் வான்றிரிந் துடலினைப் பாற்றுதற் கணிமேற்
கடல ணைத்திரைத் துகிலினிற் கதிர்க்கா மூன்றி
யுடல்கு ழைத்திடச் செக்கரின் படத்தினுள் ளுறைந்து
படரும் பேரொளி மறைந்திடப் படுத்தனன் பருதி. (144)

மதியி னைப்பகிர் தரநி பலைமிசை வானோர்
துதிசெ யத்தனி நின்றனா கதிரையுந் தொடர்ந்து

பதியி னிற்றரு கென்றிடிற் பகர்வதென் னெனத்த
னிதய மச்சுமுற் றடைந்தபோ லடைந்தன னிரவி. (145)

அந்த ரத்தமா வாசையி னபிமதி மழைப்ப
வந்தி ருந்தனர் வானவ ரெவருமண் ணிலத்தி
லிந்த வானகத் திருப்பது பழுதென விரவி
சிந்து வெண்டிரைக் குடகட லிடத்தினிற் சேர்ந்தான். (146)

மாதி ரப்புய நபிமனங் களிப்புற மதியைக்
கோதி லாதிவண் கொடுவரு வேனெனக் குறித்து
வீதி வானக வழியினைத் தொடர்ந்துமேற் கடலுட்
டூது போனவ ரொத்தனன் சொரிகதிர்ச் சுடரோன். (147)

வெய்ய வன்சுடர் புகுந்தபின் செக்கர்மே லெழுந்த
துய்யு மென்மறை முகம்மதின் மொழியிலொன் றதனைப்
பொய்யென் பார்கிளை யொடுமுடல் பொரிதரப் புழுங்கி
மைய மற்றெழு நரகிடை நெருப்பென லாமால். (148)

வேறு.

விரிதரும் பருதிக் கதிர்களைத் தேக்கி மேற்கடல் கொப்பளித்தன போற், றெரிதரச் சேந்து செக்கர்விண் ணிலங்கச் செழுமறை புகழ் முகம் மதுநூச், சொரிமது விதிர்க்கும் பொரியரைத் தருக்கள் சுற்றிய வரைமிசை யேறி, மரைமலர் பொருவா விருகர மேந்திவல்லவன் றனையிரந் துரைப்பார். (149)

ஆதிநா யகனே யழிவிலா தவனே யளவறுத் திடற்கரும் பொருளே, சோதியே யெவையி னுவமையில் லவனே தொடரின்ப துன்ப மற் றவனே, நீதியே குபிரர் தெளிதரும் படியா னினைத்தவை முடித்திடென் றுருகிக், கோதற மனமும் வாக்குமொன் றுகிக்குதா தனையடிக்கடி புகழ்ந்தார். (150)

இரந்துநின் றதம்கா யாதிவல் லவனு மிருட்டறை மலக்கினைக் கூவிப், பரந்திட விருளிற் சிறிதெடுத் தூசித் துளையினுட் படவிடு கென்னத், திருந்திட வுரைப்ப அம்மலக் கெழுந்து செறியிருட் பிழம்பினிற் சிறிது, பொருந்திட விடுத்தார் ககனமும் புவியும் பொதுவற விழுங்கிய தன்றே. (151)

மனுநெறி பிழைத்த அபுஜகல் கொதித்த மனத்தினு மிருண் டமைக்கடலொன், றினமணி கொழிக்கும் பாவையுங் கிரியு மெடுத்

தகட் டிடைமடுத் தெரியுந், தினகர னுலவும் விண்ணினைத் தடவித் திசைதிசை யிடனறச் செருகித், தனிநிலை பெருகும் பிரளய மெனலாய்ச் சகத்தினிற் பரந்தவல் லிருளே. (152)

கரைபுர ளிருளா லக்கினிக் கொழுந்துங் கரிந்துகண் ணினிலொளி மறுகி, விரிகதிர் மணியின் குலங்களு மிருண்டு விசும்பிடை கணங்களு மறைந்து, சொரிமத கரியும் பரியொடு ரதமுந் துவண்டணி மறுகிலந் தோன்று, தொருவருக் கொருவர் வதனமுந் தெரியா துலகமெங் கணுமயங் கியதே. (153)

முடிவுறுங் காலத் தியற்கையோ வலது முகம்மதைக் குறைபட நினைத்த, கொடியவர் பொருட்டால் விளைந்திடும் பவமோ குவலயத் துதித்திடு மாந்தரிடருற வெவர்க்குங் கண்ணொளி மழுங்கி யிருந்ததோ மதிமயங் கியதோ,படர்விட முலகிற் பரந்ததோ வெவைவென் றுரைப்பரி தெனப்பதை பதைத்தார். (154)

கனமுகிற் கவிகை முகம்மது விளைத்த காரணமுள திதன் றென்பார், தினகர னிறந்து பேரிரு ளரசு செலுத்திடுங் காலமீ தென்பார், மனமகிழ் தரவந் தடைந்தல ரெவரு மனையிடம் புகலரி தென்பா, ரினமொரு கடிகைப் பொழுதினிற் றெரியா திறந்திடுங் காலமீ தென்பார்.

அன்பினர்க் கிரங்காத் தறுகணன் கொடிய னபூஜகு லொழியுநாளளவுந், துன்பமு மொழியா தினம்பெருங் கேடு சூழ்தர விளைந்திடு மென்பா, ரின்புறு நபிசொற் கிணங்கிலா ரிருக்கு நகரினு மிருக்கொணு தென்பார், வன்பெரு மிருடீர்ந் துய்விரே னடக்கு மாற்றமு மிஃதென மதிப்பார். (156)

மல்விதம் பயின்று திரடரும் புயத்தார் முகம்மதைத் தினந்தொறும் பகைத்துச், செல்லுழி மறுத்த அபுஜகு லழைத்த திமஸ்கினுக் கிறைவனைச் சினந்து, கொல்விதச் சூழ்ச்சி யிதுகொலென் றுரைப்பார் குதாதிரு வருளினல் வானில், வெல்விதப் புதுமைக் காரண மலது வேறுதன் பிலையென விரிப்பார். (157)

உயிரினும் பிரியாத் துணைவரைக் காணு தலைந்திடு மடந்தையர் சிலரே, செயிரறு மகவைத் தவறவிட் டலைந்து திரிந்திடு மடந்தையர் சிலரே,குயில்புரை யமுதக் கிளிமொழி மடவார் குழுப்பிரிந் தழுங்கவர் சிலரே, மயலுறழ்ந் தணியும் பணியிழந் திரங்கி மறுகுறு மடந்தையர் சிலரே, (158)

தெரிதரா விருளா ளரசருந் தேர்ச்சித் துணைவரும் வரிசைமன் னவ ரும், பரியினின் றிழிந்த வீரரு மற்றப் படைக்கலத் தவர்களு நகரிற் பெருகிய மாந்த ரனைவரு நிறைந்த பெண்ணினத் துடன்றலை மயங்கி, விரிதருந் தலைமத் தெறிதருந் தயிரின் மிக்குடைந் தறமிடைந் தனரே.

புதுநற வருந்தி வரிச்சுரும் பிரைக்கும் பொழிலுடைப் பொருப் பிடைத் திரண்ட, முதுமரத் துறைந்த பறவைக ளனைத்து முயங்கிய பெடையினைக் காணு, தநிர்தரும் வாய்விட் டந்தா முழுது பரற்றுவ தருமது நொடிக்குண், மதியமைத் திடுவரை யுறலெனுஞ்சொன் மானி டர்க் குரைப்பன போலும். (160)

விலங்கினங் கலையப் பறவைகண் மறுகமே தினிப் படைப்புரா வெவையுங், கலங்கிடக் கலங்கித் திமஸ்கினுக் காசன்கண் கொளாப் புது மையாய்ச் சிறந்த, நிலங்கொள நிறைந்த மறைமுகம் மதுவை நெஞ் சுறப் புகழ்ந்துமுன் னிலையாய்ப், பலன்கொளும் பதமும் படைத்தன மென்னப் பண்பொடு களித்தெழுந் திருந்தான். (161)

மீனக டிரிஞ்சுங் குவட்டிடை வடிவாய் விளங்கிய முகம்மதை விளி த்து, வானமட் டிருண்ட கொடியவல் லிருளை மறைபட நொடியினின் மாற்றிப், பானலங் கொழிக்கு நிறைந்தவெண் மதியைப் பாவையின் முகட்டெழப் படுத்தி, யீனமற் றிவணில் வரவழைத் திடுக வென்ற னன் திமஸ்கினுக் கிறைவன். (162)

திரைத்தடத் தலர்த்தேன் சேலினஞ் சிதறுந் திமஸ்கினுக் கிறைய வன் றெரிய, வுரைத்தசொ லுளத்தா டிருத்திநந் நபியு முடையவ னிட த்தினை நோக்கி, நிரைத்தவல் லிருளைச் சடுதியி லகற்றி நீணிலாக் கதிர் கள்கொப் பளிப்பத், தரைத்தளம் புகல முழுமதி யழைத்துத் தருக வென் றினிதுரைத் தனரே. (163)

இறையவன் றனைநன் னயமனத் திருத்தி யிரந்துநின் றிடும்பொ ருட் டதனு, லறைதருந் திரைமுத் திறைத்தபைஞ் சலதி யகட்டிடை யிருந்துவெண் கலைக, ணிறைபடப் பரப்பி விசும்புறத் தடவி நெடும் புவி யடங்கலு நயினுர், மறைபடாப் புகழின் கொழுந்தினிற் பூத்த மல ரென வெழுந்தது மதியம். (164)

திணிசுடர்ச் சுவனத் தாம்பைப ரமார் தினந்தொறும் பரவிய நபி று, ரணிபெறத் திமஸ்குக் கிறைமனங் களிப்ப வவனியில் தீன்பயிர்

படரப், பணிநெடும் படத்திற் கிடந்தபா ருடுத்த பரவைவேந் தனுக்கு
வெண்டரள, மணியினி லமைத்த செழுமுடி திகர்ப்ப வந்தது நிறைந்த
வெண் மதியம். (165)

இடனறக் கலைகள் பெருகிய மதிய மெங்கணுங் கதிர்கள்விட் டெ
றிந்து, கடுவிட மனைய விருட்குல மறுத்துக் ககன்முகட் டொளிசுதை
தீற்றி, மடலவிழ் குவளை மதுமலர் மலர்த்தி முகம்மதைத் தெளிதர
நோக்கி, மிடலுடைக் குபிர ரகமுகங் கருக்கி விண்ணகத் தினிதெழுந்
ததுவே. (166)

விண்ணகத் தமுதங் கானறவெண் மதிய மீனடு மதியினிற் றிகழ்
ந்து, மண்ணக நோக்கி மெலமெலத் தாழ்ந்து மக்கமா நகரியிற் கருபா,
நண்ணிவிண் முகட்டி னடுநிலை நோக்கி நலங்கெழுங் கலைநிலா வொழு
கப், பண்ணுதற் கியைந்த வெள்ளிவெண் குடம்போற் பரிவுற வினிது
வந் துறைந்த. (167)

படியினிற் சுவனப் பதிநிகர்த் தனைய பழமறைப் பள்ளியிற் சிறந்த,
கொடுமுடி யெனலா யுறைந்த வெண்மதியங் குவலயத் திடத்தினிற்
றாழ்ந்து,வடிவுறுங் கருபா வாயிலி னெதிர்ந்து மகிழ்வொடு மெழுதரம்
வலம்வந்,துடல்குழைந்த தரிதி னுள்ளுறப் புகுந்தங் குறைந்தது திசை
திசை யொளிர. (168)

நறைகுடி புகுந்த கருபத் துல்லாவி னடுவிருந் தொளிருமா மதிய,
மிறைவனைப் பரிவி னெடுமனப் பயத்தா லிருந்தரை யிடத்தினிற் றொ
ழுது, முறைமுறை பணிந்து பலதரம் புகழ்ந்து முகம்மது நபியையும்
வாழ்த்தி, நிறைமதிக் கதிர்த்தாள் வாயிலைக் கடந்து நின்றது நிலம்
பிறங் கிடவே. (169)

முதிர்கதி ரெறித்த கருபத்துல் லாவின் முன்றிலிற் சிறந்தவெண்
மதிய,மதுவிரி பொழில்சூழ் வரையிடை நோக்கி வந்துமா மறைமுகம்
மதுவை,யெதிர்தரப் பணிந்து சலாமெடுத் தோதி யிணைமரை மலர்ப்
பதம் போற்றி, விதியவன் றாதா பேரினிற் கலிமா விரைந்தடுத் துரை
த்துநின் றதுவே. (170)

திருந்திநற் கலிமா வோதிமுன் னெதிர்ந்த சிறப்பினை நோக்கிநன்
னெறியாய், வருந்திடா தெனது வரவினை யெவர்க்கு மவுலென முகம்
மது மவுலப், பொருந்திய மனத்திற் களிப்பொடும் வாக்கிற் புகழொ

டும் பொழிதிலா மதிய, மிருந்தவ ரெவர்க்குந் தெரிதர அறபி னிசையி
னிற் றெளிதர வியம்பும். (171)

நெடியவன் படைப்பெப் பொருட்கு முன்னொளியாய் நின்றபி
னப்துல்லா வயிற்றில், வடிவுறு மாசா யுதித்தநன் னபியே முகம்மதே
தனியவன் றாதே, படியினுங் கலிமாப் பகர்ந்தவர் சுவனப் பதிபடை
குவர்பக ராதார், கெடுநர கடைவர் சரதமென் றெவர்க்குங் கிளத்திநின்
றதுசெழு மதியம். (172)

பாரினி லெவர்க்குந் தோன்றிட மதியம் பழமறை முகம்மதின்
மெய்யிற், போர்வையிற் புகுந்தங் குரனடு விருந்து பொருவற விருப
குப் பாகிச், சீர்பெற வலது கரத்திடை யொருபாற் செழுமிடக் கரத்
தினி லொருபா, லேர்பெற வெழுந்து முகம்மதுக் கெதிரா யிருபிறை
யிலங்கநின் றனவே. (173)

முன்னெதிர்ந் திலங்கு மொருபகுப் பெழுவான் முரிதிரைக் கட
ன்முகட் டேகிப், பினனொரு பகுப்புக் குடகடற் புகுந்து பெருவிசும்
பிடையினிற் பிறங்கித், தன்னிரு பகுப்பு மந்தரத் துலவித் தவணிலாக்
கதிரொடுந் தாழ்ந்து, மன்னிய கருபாக் குடுமிமேற் சிறந்து மறுவறப்
பொருந்திய தன்றே. (174)

உலகெலாம் விளங்கச் செழுங்கதிர் பரப்பி யொளிதர வயங்குமா
மதிய, நிலமிசை யுதித்த முகம்மதே யெவர்க்கு நெடியவன் றாதரென்
றிசைத்துக், குலவுமெய்ப் படைப்பி யிவர் தமக் கீமான் கொண்டது சர
தமென், றறைந்து மலிதர நபிக்குச் சலாமெடுத் தேத்தி வளர்ந்தது
வானகத் திடத்தில். (175)

வானகத் துலவி யமுதவெண் கதிர்கான் மாநிலப் பரப்பெலாம்
பரப்பி, மீனொடுஞ் செறிந்து தன்னர சியற்றி விரைவொடு மேற்றிசை
படர்ந்து, தேனின மிருந்து புதுநற வருந்திச் செழித்திடும் பெருந
தடத் திருந்த, பாலனங் குவியக் குடகடற் றிரைக்குட் பாய்ந்தது புது
முழு மதியம். (176)

மதிவர வழைத்துக் காரணம் விளைத்த முகம்மதின் பொருட்டிறைச்
சுவனக்,கதிபத மடந்தே மெனச்சிர மசைத்து ஹபீபுதன் னகத்தினிற்
களித்து, முதிர்கலை நூலோர் தமக்கெடுத் திசைத்து முன்மறை விளக்
கமும் விளக்கி, யெதிரிவர்க் கிலையென் றதிலுயம் பிறப்ப வெவரொடுந்
தனித்தனி யிசைத்தான். (177)

மாதவன் திமஸ்குக் கிறையுரைத் ததுவு முகம்மது விளைத்தகார ணமும், பூதலத் தினிற்கண் டறிகொணாப் பெரிய புதுமையிற் புதுமை கொலென்னச், சீதவொண் கமல முகமலர் மலர்ந்துதேர்ச்சியிற் றுணை வர்மன்னவரும், பேதுற லகற்றிச் சிந்தையிற் றேறிப் பெரியவன் றாதினைப் புகழ்ந்தார். (178)

மருவலர்க்கரியே றெனுந்திமஸ் கிறைவன் மனக்களிப்புடனெழுந் திருந்து, குருமுகம் மதுதம் பிணையடி மலரைக் கொழுமலர்க் கரத்தி னாற் றடவி, யிருவிழி குளிர வைத்துமுத் தமிட்டீமானினை யுளத்தினி லிருத்தித், திருமுக மலர்ந்து மணிமெயயி றிலங்கச் செவ்விதழ் திறந்து செப்பு வனால். (179)

ஆதிதன் றாதே பேரின்ப விளக்கே யமருல கினுக்கும்நல் லரசே மாதலத் தெவர்க்கும் பவக்கடல் கடப்ப வருமொரு திருமரக் கலமே, தீதற வெனது கருத்துறுமறிலே தீனிலைநிறுத்துநாயகமே, பூதரத் துறைந்த முழுமணிச் சுடரே புண்ணியந் திரண்டமெய்ப் பொருளே.

உமதுரை திருத்து மவர்கள் பொற் பதியோ ருமதுரை படிறென வுரைத்தோர், தமரொடு நரகிற் புகுவர் றும் மரிய தண்ணளி யெவரறி குவரிந், நிமிர்தருங் குடுமிக் கிரியினின் றிறங்கி நிரைமணி மாளிகை புகுமென், றமரரும் புகலு முகம்மதுக் குரைத்தானணி மதிள் திமஸ் கினுக் கதிபன். (181)

குருத்துவெண்ணிலவு கொப்பளித் தெரியுங் கொடிமதிள் திமஸ் கினுக் கிறைவ, னுரைத்தசொற் றவறு தழுகொளிர நபினா ருலகெலாஞ் செழுபுகழ் விளங்கத், திருத்திய வகுதைப் பதியபுல் 'காசீஞ் சிந்தை யிற் பலன்பெறத் தினமு, மிருத்திய மரைத்தா டருங்கதிர் குலவ விறம்பினின் றிருநிலத் திழிந்தார். (182)

மண்டலத் தரிய புதுமதி விளங்கி வானெழுந் தகத்தடைந் தன போல், விண்டுநின் றிறங்கி முகம்மது நபியும் விரிகதிர்மாளிகை புகுந் தார், திண்டிறற் பரியுஞ் சேனையு மிடையுந் திமஸ்கிறை யவனிடஞ் சேர்ந்தா, னெண்டிசை யவரு நகரவ ருடனு மின்புறக் கலந்தயல் போனார். (183)

மக்கமா நகரக் குறைஷிகள் பலரு மதியிலி யபூஜகுலுடனிவ், வொக்கலுந் தன்புற் றெழின்முகம் வெளிறி யுள்ளுணர் நிலைவறக்

கருகித், தக்கவ ரொருவர்க் குரைகொடுப் பதற்குத் தங்களிற் றனிதடு மாறிப், புக்கிடம் புகுதற் கருநெறி யறியாப் புல்லறி வினிற்சில புகல்வார். (184)

ஒருட மீ ரைம்பா னறுபதின் மேலு மிருந்துமா மறைகளைத் தெளிந்த, புருடரா தியனிம் முகம்மதின் கியற்றும் புன்மை வஞ்சனையிடத் தடைந்து, திருடர்போல் விழித்தா னென்னிலிந் நிலத்திற் றெளிமறை தெளிந்தசிந் தையினு, மிருடரா திருத்த லரிதெனச் சினந்த விடரொடும் படிறெடுத் திசைப்பார். (185)

விறற்பெரும் படைகொண் டபூஜகல் விளக்கும் வினைகளு மிருந்ததந் திரமு, மறற்பல கொழிப்ப நதிசுரத் தழைத்த அகுமதி னிடத்தினி லணுகாப், புறப்பல நகரிற் சமயமுஞ் சிதையப் புதுமறை யெனும்புறக் கானி, லுறப்படுத் துலக மடங்களு மிவன்ற னுள்ளடி படுக்குமென் றுரைப்பார். (186)

தெரிமறை மாலிக் கருளர சறியாச் சிந்தைய னெனவுமா மதியை, வரவழைத் தரிய காட்சியை முடித்த முகம்மதை வஞ்சக னெனவும், பெருகிய குபிரார் தனித்தனி யுரைப்பப் பெருஞ்சிறை திரண்டமுள் வளைவாய்க், குருதிகொப் பளித்த வேதினச் சூட்டுக்குக்குடந் திசைதொறுங் கூய. (187)

இனவளை மூலுந் தடத்தன மிரைப்ப விசைக்குரற் மோகில மியம்ப, மனநிலை யுணராக் குபிரார்தம் முளத்தில் வல்லிருட் குலம்புகுந் தொளிப்ப, நனிபொருண் மறைதீ னவர்மனத் தெளிவி னடுநிலந் தெளிதரக் குணக்கிற், றினகரன் கதிர்கள வெளிறிடப் பரப்பித் தெண்டிரைக் கடன்முளைத் தெழுந்தான். (188)

மதியை யழைப்பித்தபடலம் முற்றிற்று.

ஆகப்படலம்-8-க்குத்-திருவிருத்தம்-698.



# தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்.



மருமலர் சுமந்து தேன்வழிந் தொழுகு மணிப்புய முகம்மதுநபியுந், தெரிதருந் தீனி னெறிமுறை யவருஞ் சிந்தையிற் களிப்

பொடுஞ் சிறப்ப, வரியமெய்ப் பொருளை முறைமுறை வணங்கி யற்றையிற் கடன்கழித் தமரர், திருவடி பரவத் தம்முயி ரனைய செல்வரோ டுறைந்திடுங் காலை. (1)

பூரணகளப கனதன மடவார் பொருதிரைக் கவரிகா லசைப்ப, வாரணி முரச மதிர்தரச் சிறு மடங்கலின் கொடிமுனங் குலவ, வாரணத் தலைவர் மருங்கினிற் பிரியா தரசர்க ளுடன்வரத் தொலையாக், காரணக் குரிசின் முகம்மதி னிடத்தில் வந்தனன் ஹபீபெனு மரசன்.

செம்மலர்ப் பதத்தில் வெண்கதிர் குலவுஞ் செழுமணி முடிசிரஞ் சேர்த்தித், தம்மினத் தவர்க ளுடன்சலா முரைத்துத் தக்கதோரிடத்துநின் றவனை, வம்மெனத் திருவா யுரையருள் கொடுத்து முகம்மது மருங்கினி லிருத்தி, வெம்மையி னமுதக் கனியெனுங் கவிமா விளம்புக வெனவிரித் துரைத்தார். (3)

நன்றெனப் புகழ்ந்து மனங்களித் தெழுந்து நரபதி திமஸ்கினுக் கரசன், வென்றிகொ ளபசே யினமொரு வசனம் வினவுதல் வேண்டுமென் னிடத்தி, லென்றவ னுரைப்ப முகம்மது நபியு மின்புறு முறுவல்கொண் டினிதாய்த், துன்றுமென் மனத்திற் றெரிந்ததுன் மகடன் றொல்வினை தெளிப்பதற் கென்றார். (4)

ஆண்டகை யுரைத்த புதுமொழி நறுந்தே னகத்தினிற் புகுந்துடல் களித்து, வேண்டுநற் பதவி படைத்தனன் சிறியேன் விளைத்திடும் பவக்கட றொலைத்தேன், காண்டகாப் புதுமை யனைத்தையுந் தெரிந்தேன கடிகம ழணிமலர்ப் பதத்தைத், தீண்டவும் பெற்றே னினியரும் பொருளொன் றிலையென வுரைத்தனன் றிறலோன். (5)

புதியவன் றூதர் முகம்மதுந் திமஸ்கைப் புரந்திடு மருந்தவத் தவனு, மதுரமென் மொழியா லளவளா யுளங்கண் மகிழ்ந்தினி திருக்குமக் காலை, *ககணிழிந தரிய பெருஞ்சிறை யொடுக்கிக் கடிதினிற் கண்ணிமைத் திடுமுன், செகதலத் துறைந்த நபியிடத் துவந்தார் தெரிமறை கொடுஜிபு ரீலே. (6)

* இவ்வெதுகை யினத்தைக்கொண்டதா லினவெதுகை.

மருங்கினி லெவர்க்குந் தோன்றிடா துறைந்து வல்லவன் சலா
மெடுத் தியம்பிப், பெருங்குலம் விளக்கு முகம்மதை நோக்கிப் பிறழ்ந்
திருத் தோன்றிலாத் தசையை, நெருங்குவெண் கொடிக்கஃபாவிடத்
தேகி நிரைமயிர்ப் போர்வையான் மூடி, யருங்கதிர்க்கல சத்தாபுஸம்
ஸத்தி னரியநீர் கரங்கொடு தெளித்தே. (7)

இறைவனை நோக்கித் துஆவிரந் தினிமே லிலங்குருத் தோன்று
மென் றிசைத்துச், சிறைநிறந் தோன்று தமருல கதனிற் ஜெபுறயீ
லேகிய பின்னர்; கறைநிறங் குலவுஞ் செழுங்கதிர வடிவேற் காதல
முகம்மது நபிறு, ரறைமுர சதிரத திமஸ்கினை யவனு பொழுந்தன
ரரியகஃ பாவில். (8)

வானவ ரிறையோ னருட்படி யமைத்த மக்கமா நகரியி னுப்பண்
கானலர் பொதுளுங் கருபத்துல் லாவிற் கடிமதிட் புறத்தொருபாலில்
தீனவ ருடனு மணிபெற விருந்து செவ்வியன் ஹபீபினை நோக்கி,
யினமற் றனது மகவெனுந் தசையை யிவண்கொடு வருகவென்
றிசைத்தார். (9)

அந்தநன் மொழிகேட் டடற்படை மாலிக் கருளிய ஹபீபெனு
மரசன், சிந்தையிற் களித்து கருங்குநின் றவரைத் திண்ணிய தசையி
னைக் கொணர்கென, றுந்திட வுரைப்ப வோடினர் சிலவ ருறுபொருட்
பொதிகதெனப் பொதிந்து, தந்தபெட் டகத்தி னொடுமெடுத் துவந்
தார் தனுவிடு சரத்தினுங் கடிதின். (10)

முன்னுறப் பணித்த பெட்டகத் திருந்த முதிர்தசைக் கட்டியை
யெடுத்து, மன்னிய குரிசின முகம்மது நபிமுன் வைத்தனர் சுரிகுழற்
கருங்கண், மின்னெனப் பிறழு மடந்தைய ருடனும் விரிதிரைப் பசுங்
கடலனைய, வந்நகர் மாக்க ளனைவரும் விரைவி னடுத்ததி ஜயித்திட
வன்றே. (11)

கடல்கிடந் துடுத்த பெரும்புவி யிடத்திற் கண்டறி யாய்ப்பெருங்
காட்சி, மடலவிழ் கமல வாவிசூழ் திமஸ்கு மன்னவன் மகவெனப்
பிறந்து, மிடலுறுங் கதிர்வாண் முகம்மது பொருட்டால் விளக்குங்கா
ரணத்தினுக் கிருந்த, வுடலெனுந் தசைத னுயிரலா தியைந்தோ ருறுப்
பெனும் வடிவுபெற் றிலவே. (12)

பொருந்துறுங் குறிப்பொன் றணுவினு மிலதாய்ப் பொருவ
றும் புதுமையி னெதிரி, னிருந்தவத் தசையை முகம்மது நோக்கி

யிறையவ னருளெனக் குறித்துத், திருந்துற மயிரின் போர்வையிற்
போர்த்துச் செங்கரத் தரியநீ ரேந்தி, மருந்தினு மமர ரமுதினுஞ் சிற
ப்ப மகிழ்வொடுந் தெளித்துநின் றனரால். (13)

மணியெனச் சிறந்து மலரின்மென் மையவா மழைச்செழுங் காங்
கனை யேநதி, யணிதரப் போற்றிக் கனிந்தற நெகிழ்ந்த வகத்தினி
லரியநா யகனைத், தணிவிலா துயர்த்திப் பலபல புகழாற்சாற்றிநன்
னெறிமுறை தவறாப், பணிபணிந் திரந்தார் தீனிலை நிறுத்தும் பதும
மென் பதமுகம் மதுவே. (14)

பூதலத் தெவர்க்கு மறைநெறி புதுக்கிப் பொருவருஞ் சுவன
நா டளிப்பத் தூதெனவுதித்த முகம்மதின் துஆவைத் துய்யவனுறக்
கபூ லாக்கப், பாதகக் குபிரர் மனம்பதை பதைப்பப் பலன் படாப்
பெருந்தசைத் திரட்சி, நீதறத் தோன்று மவயவஞ் சிறப்பத் தெரிவை
யின் றிருவுரு வெடுத்த. (15)

வரியிழை மயிர்ப்போருவையெனுங் கரிய வல்லிரு ளிடையெழு
மதிபோல், விரிகடற் பெருநீ ருண்டுசூ லுளைந்த விசும்பிடை யுதித்த
மின் குலம்போ, லரியின நறவுண் டலம்புகுங் குமத்தாரணிபுய முகம்
மதின் கலிமாத், தெரிதரப் பவள விதழ்திறந் தோதிச் செறிதருமவை
யிடத் தெழுந்தாள். (16)

விண்ணகத் தரம்பைக் குலத்தினும் வடிவாய் விரிகடன் மகளி
னும் வியப்பாய், மண்ணகத் துறையு மெழுவகைப் பருவ மடநதைய
ரணிநதிடு மணியாய்க், கணணினுக் கடங்கா கழகினைச் சுமந்த கனி
யுரு வெடுத்தகாட் சியதாய்ப், பெணணலங் கனிந்து நலனெழில் பிறங்
கப் பெருநிலத் தெழுந்துநின் றனளே. (17)

மங்குலிற் பெருகி விடத்தினுங் கருகி வரியற வினுமினு மினு
த்துத், தங்கிய விதழித் திரளினுந் திரண்டு சைவலத் தொடரினுந்
தழைத்துக், கொங்குறக் குழனறு நெறித்துவார்ந் தொழுகிக் குவல
யத் திளைஞர்கண் வழுகக, வெங்கணன் னயினார் முன்னைநா ளழைத்த
விருளினு மிருண்டமைக் குழலாள். (18)

கீற்றிளம் பிறையுங் கணிசசிபின் வளைவுங் கிளர்ந்தசெவ் வகத்
திமென மலருந், தோற்றிடத் தோற்றி விளங்குநன் னுதலாள் சுட்டு
முள் வாரணத் தலகு, மாற்றருந தனுசுங் கருங்கொடி யெதிரவு மாற்
றிமைக் கட்கடற் கரையின், மேற்றிகழ் கரிய பவளமென கொழுந்தாய்
விளங்கிய செழும்புரு வததாள். (19)

மடற்குழை கிழித்துத் தடக்குழல் குழைத்து வரியளி யிணைச் சிறை படுத்திக், கடற்குளந் தேறு தலைதாச் செய்து கணையயில் கடை படக் கறுவி, விடத்தினை யாவப் படத்திடை படுத்தி மீனினம் பயப் படத் தாழ்த்தித், திடக்கதிர், வடிவா ளெனக்கொலை பழகிச் செவந்தரி படர்ந்தமை விழியாள். (20)

வள்ளையை வாட்டி யூசலை யசைத்து மண்ணெழி லாடவ ருயி ரைக், கொள்ளைகொண் டிடலங் குழைப்பதற் கன்றே குழையெனும் பெயரிடுங் குழைபா, ளெள்ளையுஞ் சிறந்த குமிழையும் வாசத் தினிய சண் பகமலர் தனையும், விள்ளருங் கானத் திடையலர் படுத்தி விலங் கிட விலங்கிய குமிழாள். (21)

வெண்ணிலாத் தாள நகைநிரை பொதிந்து விரிந்தசெம் பவ ளமோ விலவோ, வண்ணவாய்ச் செழுஞ்சே தாம்பலின் மலரோவடி வுறு தொண்டையங் கனியோ, வெண்ணிநோக் கினருக் குவமையி னடங்கா தெழில்குடி யிருந்தமு .தொழுகிப், பண்ணெலாஞ்சுவற்றி யாடவ ரிருகட் பார்வையிற் செவந்தமெல் லிதழாள். (22)

முல்லையு முருந்து நிரைத்தன போன்று முத்தெனத் திகழ்ந்தற நெருங்கி, மெல்லெனச் செவந்த மணியிணிற் பிரித்து விளக்கியொப் பித்துவைத் தனபோல், வில்லிடக் கவின்கொண் டிருபுறத்தொழுங் கும் விரிந்தபூங் காவிகள் படர்ந்து, சொல்லரு மனத்தாடவர் மயலிரு ளைத் துணித்திட நகைக்குமென் னகையாள். (23)

பாலென வெளிறுக் கனியென வழியாப் பசுமடற் றேறெனச்சி தறு, வேலவார் குழலார் செழுங்காத் தேநது மிளங்கிளி மொழி யெனக் குழுறு, வேலைவா முமுதம் பிறந்தென வுலகம் விளங்கிடப் பொன்மழை பொழியச், சாலவு மிறந்த தருவினந தழைப்பத் தாவரு மினியமென் மொழியாள். (24)

வெய்யவ னலர்த்த விகசிதம் பொருந்தி விரிநறைக் கமலமென் மலரிற், செய்யவ ளிருப்ப தெனவெழில் சிறந்து செழுங்களைக்கதிர் கள்கான் றொழுக, வையக மதிப்பத் திமஸ்கிறை யுரைத்த வழிமுறை முகம்மதங் கழைத்த, துய்யவெண் மதிய நிகரென வுலகிற் சொலும் படி சிறந்தமா முகத்தாள். (25)

திரளினின் மணியாய் முரல்வினின் வளையாய்ச் செவ்விநெய்ப் பினிற்கமு கெனலாய், விரிகதிர் மணிப் பூண் டாங்குமென் கழுத்

தாள் வேயினைக் கரும்பைமெல் லணையைச், சருவிடப் பசந்து திரண்டு மென் மையவாய்த் தழைத் தெழில் பிறங்கிய தோளாள், வரிவளை சுமந்தி யாழினும் வியந்து மயிர்நிரைந் தொளிருமுன் கையினள். (26)

குலிகமார்ந் தனபோ லாக்கினுஞ் செவந்த கொழுமடற் காந்தளங் கரத்தாள், மசிலினைக் கெளிற்றின் வனப்பினும் வனப்பாய் மணியணி சுமந்தமெல் விரலாள், பொலிவுறச் செவதீந் திலையெனக் கிளர்ந்து புனக்கிளி நாசியின் வடிவாய், நலிவிலா திளைத்த வயிரவொண் கதிரய் நலங்கிடூந் திலங்கிய வுகிராள். (27)

தடித்தடி பரந்திட் டெழுந்துபூ ரித்துத் தளதளத் தொன்றொ டொன் றமையா, தடர்த்திமை யாத கறுத்தகண் ணைதனு லருந்தவத் தவருயிர் குடித்து, வடத்தினு ளடங்கா திணைத்தகச் சறுத்து மதகரிக் கோட்டினுங் கதித்துப், படத்தினும் பிறக்குஞ்சுணங்கணி படர்ந்த பருமிதத் துணைக்கன தனத்தாள். (28)

பரிமளச் சிமிழோ குலிகச்செப் பினமோ பசுமதுக்கலசமோ வயிர்தம், பெருகிய குடமோ காமநீ ருறைந்த பேரிளங் குரும்பையோ கதிரின், முருகுகொப் பிளிக்கும் வசனமென் முகையோ முழுமணி பதித்தமென முடியோ, கரையிலா வழகா றொழுகிய வரையோ கவனுதற் கரிதெனுந் தனத்தாள். (29)

தனமெனு மிருகோட் டத்தியோ ராலிற் றளைபடப் பிணித்தசங் கிலியோ, மனநிலை கவருங்கடிதட வரவின் வாலணி கிடந்ததோ வலது சினவுவிற் காமன் மலைக்கிந்தன் மனைக்குஞ் சேர்த்திய மய நடுநூலோ வினனுட னழகு நிறைகுடி யிருந்த விவள்வயி றணிமயி ரொழுங்கே. (30)

பெருவரை யிடத்தி னடியுறைந் திலங்கும் பேரெழிற் சுமந்த பொற் கொடியோ, விரிகதிர் மணிமே கலைநடிக் கோத்துவிளங்கிட நுடங்குமெல் லிடையோ, குருமுகம் மதுநன் மொழிவறி யடங்காக் குயிர்க்குலந் தேய்ந்தெனத் தேய்ந்து, தெரிவரி தெலா யுவமையிற் பொருவாச் சேயிழை மடந்தைசிற் றிடையே. (31)

கதிரொளி வழுக்கின் ரம்பையைப் பழித்துக் கவினுறுந்திரட், சியிற் சதத்த, மதமலைக் கரத்தின் வனப்பினை யழித்து மாறரு மிருது மென் மையினிலித முறச் செவந்த, விலவினைக் கடைந்திட் டிணையடி

யணையெனப் படுத்திப், புதுமையின் விளங்கித் தவத்துறை யவரும்
புகழ்ந்திடச் சிறந்தபொற் குறங்காள். (32)

அணிமுகட் டலவன் றனைமுகந் தடுத்த வரிவரிச் சினைவாற்
போன்று, மணியினிற் செறித்த தூணியும் பொருவா வடிவதாய் வெற்
றிமன் னவர்முன், றணிவிலா திசைக்குங் காளமும் பொருவாத் தன்
மைய வாகிமென் மையவாய்ப், பணிபலசுமந்துசிறுமயிர் நெருங்காப்
பண்புறு மிணைக்கணை காலாள். (33)

நிறைதரு தராசின் வடிவுறும் பாடாள் நிறைமணிப் பந்தெனுங்
குதியாள், பொறையொடுங் கமடத் தினவனம் புகுந்து பொருவரு
தைந்தையு மொடுக்கி, மறைபடத் தவஞ்செய் திணைபடற் கரிதான்
மதித்திடற் குறும்புறந் தாளாள், கறைதரா மணியின் குலமென விரல்
கள் கவின்கொளச் செவந்தமென் பதத்தாள். (34)

வனமயிற் சாயற் குலமென வெழுந்து மரைமல ரிதழின்மேற்
குலவு, மனமென நடந்து நயிமுகம் மதுக மடிமலர்ப் பதத்தினி விறை
ஞ்சி, யினியன புகழ்ந்து பலரதி ஜயிப்ப வினமுகிற் கருங்குழ னெகி
ழப், புனைமணி பிறழ மின்னென நடங்கிப் புதுமையிற் றோன்றநின
றனளால். (35)

தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 9-க்குத் திருவிருத்தம் 733.



## ஹபீபுராஜா வரிசைவரவிடுத்த படலம்.

—:*:—

பூங்கொடி யெனமுன நின்ற பூவையைத்
தேங்கம ழமுதவாய் திறந்து நந்நபி
வாங்குகென் டிரைத்தடத் திமஸ்கு மன்னவன்
பங்கினி லுறைகெனப் பரிவிற் கூறினர். (1)

வரிவிழிச் சிறுநுதன் மடந்தை நன்னெறிக்
குருவிடம் விடுத்தெழில் குலவச் சென்றணி
விரிகதி ரிலங்கிலே வேற்கை மன்னவன்
றிருவடி கருங்குழற் சென்னி சேர்த்தினள். (2)

தெண்டனிட் டெழுந்தபொன் மயிலைச் சீர்பெறக்
கண்டன னுவகையங் கடற்கு ளாயினன்
விண்டலத் தினிலிலாப் பதவி வெற்றியைக்
கொண்டன னெனமனக் குறைவு நீக்கினான். (3)

தெரிவைபின் வரத்திமஸ் கிறைவர் செவ்விய
குருசினை நபிகொழுங் கமல மெல்லடி
பாவிநற் புகழ்சில பகர்ந்து வாக்கொடும்
வரிசையி னெறிக்கவி மாலை யோதினார். (4)

அரசரு மமைச்சருந் திமஸ்கி னாதிபர்
பரிகரி வீரரும் படைக்கு ழாங்களுந்
தெரிவையின் றொகுதியுஞ் சிறந்த நந்நபிக்
குரிமையி னெடுங்கவி மாலை யோதினார். (5)

ஈனமொன் றில்லதோ ரிறைவ னாகிய
தானவன் றனையுளத் திருத்தித் தக்கதோர்
வானவர் புகழ்முகம் மதுவை வாழ்த்திநற்
றேனெனுங் கடற்பெருந் தீனிலாயினார். (6)

மறைமுறை யொடுந்தின வணக்க நீங்கிலா
திறைவனைத் தொழுதிசு லாத்தி னோர்வழி
குறைவறப் படித்தருங் குபிரை நீக்கியே
முறைதவ றுப்பெரு முசிலி மாயினார். (7)

மானகர்த் திமஸ்குமன் னவருந் தம்பெருஞ்
சேனையு முகம்மதின் றிருமு னாகிச்செங்
கான்மல ரடியினை யிறைஞ்சிக் கைகொடுத்
தானநல் லறிவராய்ப் புறப்பட் டாரரோ. (8)

நபியெனு முகம்மதை வாழ்த்தி நன்னெறிப்
புவியெனு நகரினோர் புறத்தி னீங்கிநின்
றபுஜகல் தனையழைத் தரசர் நாயகர்
கவினுறும் பலமொழி யெடுத்துக் காட்டினார். (9)

மந்திர மறைமுகம் மதுவை வாக்கினிற்
சிந்தையி னிகழ்ந்தவர் நரகஞ் சேர்குவ
ரந்தமி னாயகன் றாத ராமெனப்
புந்தியிற் புகழ்வர்பொன் னுலகம் போதுவார் (10)

மலையென நிமிர்மதில் திமஸ்கு மன்னவர்
நிலைகுலை மனத்தபூ ஜகல்த னெஞ்சினிற்
கலைமறை தெளிவினுங் கார ணத்தினும்
பலதர முரைத்துத்தம் பதியை நோக்கினார். (11)

மதகரி யிருபுற னெருங்க மாப்படை
கதழ்வொடுங் கதியொடுங் கனைத்து முன்செலப்
பதலையு முரசமும் பம்பக் கானக
நதிகளுங் கடந்தய னடந்து போயினார் (12)

கரித்திர ளொலித்தகம் பலையுங் காவளர்
பரித்திர ளொலித்தகம் பலையும் பண்முர
சிரைத்ததுந் தீன்கலி மாவை யின்புற
வுரைத்திடுந் தொனிக்கட லுடைத்துக் காட்டுமால் (13)

கனியினுந் தேனினுங் காய்ந்த பாகினு
மினியன புதுமறை யியற்று நாவினர்
நனிபல சூழ்வர நகரை நண்ணினார்
பனிவரை யினுப்புகழ் பரித்த பான்மையார். (14)

விண்ணுறை கொடிமதில் திமஸ்கு மேவிய
வண்ணலும் பதிமுதி யவருக் கன்பொடு
பண்ணருந் தீன்மொழி பயிற்றி நன்னெறி
யெண்ணிலை பெறவிசு லாத்தி லாக்கினார் (15)

தீன்முறை நடத்திய திமஸ்கு மன்னவர்
மான்மதங் கமழ்ந்தமெய் நபிக்கு மாசிலாப்
பான்மதிக் கலைகலை பணிபொன் பட்டிவை
கூன்வெரிந் தொறுவினிற் கொடுத்த னுப்பினார். (16)

நிதிமணி பணிபல நிறைந்த வொட்டகப்
பொதிபதிற் றொருபொற் புடவி நீந்திவான்
மதிநடந் துலவிய மக்க மாகிய
பதியினுக் கடுத்தொரு பாலுற் றாரவர். (17)

அருமறை நபிமுகம் மதுவுள் ளன்புறக்
குருமணி யொடுநிதி திமஸ்கிற் கொற்றவர்
வரவிடுத் தனவென வழங்கும் வாசகந்
தெரிதர அபூஜகல் செவியிற் சார்ந்ததே. (17)

மடித்தசிந் தையினெழுந் தேகி மன்னவன்
கொடுத்தனுப் பியநிதிக் குவையும் பண்டமும்
விடுத்ததிங் கெமக்கென வெகுண்டு வெஞ்சொலாற்
றடுத்தடுத் தனனபூ ஜகுலென் பானரோ. (19)

ஹபீபர சனுப்பிய கனக மியாவையு
மபுஜகல் தடுத்தன னென்ன வாதிநூற்
புவியினில் விளக்கிநற் புகழ்ந டாத்திய
நபிதிரு முனஞ்சிலர் நவின்றிட் டாரரோ. (20)

வேறு.

உரைவி ளக்கிட முகம்மதுந் தோழர்க ளுடனும்
விரைவி னேகிப்பொன் றடுத்தவ ரெவரெவ வினவத்
தரையி லியானல திலையென வபூஜகல் சாற்ற
வருள்கி டந்தகட் கடைசெவப் புண்டவப் போதில். (21)

உனக்கு வந்தது மோங்கிய தீன்முகம் மதுசீர்
தனக்கு வந்ததுங் கொணர்ந்தவர் சொல்குவர் சரதஞ்
சினக்க வந்திவண் மறிப்பது தகுவதோ செலுநின்
மனைக்கெ னச்சிலர் கூறலு மனத்திடை கொதித்தான். (22)

மட்டு வார்பொழிற் றிமஸ்குமன் னவர்வர விடுத்த
பெட்ட கத்தையும் பொன்னையும் பிணக்கறக் கரியாய்ப்
பட்ட றத்தெளிந் துமக்கெமக் கெனப்பல ரறிய
வொட்டை வாய்திறந் துரைக்குமென் றபூஜகு லுரைத்தான். (23)

உரைத்த வாய்மையிங் கெமக்கியை வதுபடி றுளத்தோய்
விரித்துக் கேட்டரு ளொன்றன றபூஜகல் விரைவி
னிருத்தி யிப்பொரு ளனையிவ் வூரவ ரறியப்
பரித்த வொட்டகங் கரிபகர்ந் திடுமெனம் பகர்ந்தான். (24)

நன்று நன்றெனத் தோழரு முகம்மது நபியும்
பொன்றி கழ்ந்தெழில் குலவிய மனையிடை புகுந்தார்
கன்று புன்மனத் தபூஜகல் கிளையுடன் கடிதிற்
சென்று வெண்மலர் செறிதரு மாலயஞ் சேர்ந்தான். (25)

ஆல யம்புகுந் தழியுரு வெடுத்தபுத் ததற்குச்
சால மென்மலர்த் தொடையொடும் பலபணி தரித்துக்

கோல மார்ந்தெழத் தீபமுந் தூபமுங் கொடுத்துத்
தால மீதினிற் சிரம்பட விருகரந் தாழ்த்தான். (26)

விழுந்து தெண்டனிட் டெழுந்திரு கரம்விரித் தேத்திப்
பொழிந்த நீர்விழி தாவிரந் தேத்திய புகழான்
மொழிந்து வல்வினை தொடுத்திடு முகம்மதின் வாய்மை
யழிந்தென் சொற்பழு தறவா மருள்கவென் றறைந்தான். (27)

பரைத்த டங்கிகழ் திமஸ்கிறை வாவிடு நிதியந்
தரைத்த லம்புகழ்ந் திடஅபூ ஜகல்தனக் கெனவே
றுரைத்துத் தூங்கித ழொட்டைவாய் திறந்தெனை நோக்கி
யுரைத்த ளிடத்திட வேண்டுமென் பதுமெடுத் துரைத்தான். (28)

எதிரி னின்றுதன் றேவதை தனைப்புகழ்ந் தேத்திக்
கதிர்கொள் பொன்முடிக் கோயிலின் வாயிலைக் கடந்த
சதியன் றன்முக நோக்குத றவறெனச் செவந்து
கொதிகொ தித்தழன் றருக்கன்மேற் கடலிடை குதித்தான். (29)

அறறை நாளகன் றிடமறு தினத்தபூ ஜகல்தன்
சுற்ற மோடடைந் தானறுணைத் தோழர்க ளோடும்
வெற்றி நன்னெறி முகம்மதும் விரைவினி லேகிக்
கொற்ற மன்வா விடுத்தவ ரிடத்தினிற் கூண்டார். (30)

ஒட்டை வாய்திறந் துரைப்பதற் கெவர்முன முரைப்ப
திட்ட மாயுரை யெசுவபூ ஜகுலுட னியம்பக்
கட்டு ரைப்படிக் கரிபினை யெவர்களுங் களிப்ப
விட்டு ரைத்திடென் றுரைப்பதி யாமென விரித்தான். (31)

நன்று கூறுமு னென்றலு மபூஜகல் நடந்து
சென்று பூம்பொழி லொட்டகை யனைத்தையுந் திரட்டி
நின்று நீவிர்கள் சுமந்திவ ணிறக்கிய நிதியம்
வென்றி மன்னவ னெவர்க்கனுப் பியதென விரித்தான். (32)

கேட்ட பூஜகல் நிற்பவொட் டகக்கிளை பதிற்றும்
நாட்டி வைத்திடுஞ் சிலையென நவின்றில மறுகி
மீட்டுங் கேட்டலு நவின்றில வீரமும் வலியும்
போட்டுக் கேட்டனன் பிற்றையும் புகன்றிசைத் திலவே. (33)

பரித்த வொட்டகை பகர்ந்தில கரியெனப் பலரு
மிரைத்து மாமறை முகம்மதின் றிருமுகத் தெதிர்ந்து
பிரித்தி டாக்கரி யாய்பெரு வாயினைப் பிளந்து
விரித்து ரைத்திட விளம்புமென் றெடுத்துரை விரித்தார். (34)

நிகர ரும்பதி முதியவர் நிகழ்த்திடும் வசன
முகம்ம தின்செவிப் புகுதலு மனமிக மகிழ்ந்து
மிகுவி தப்புது மைகடா வொட்டையை விளித்துப்
புகலு மென்றன ரபூஜகல் கெடுமனம் புழுங்க. (35)

உரைத்த சொல்லுளந் தரித்திடக் கிடந்தவொட் டகங்க
ணிரைத்தெ ழுந்தற வளைநெடுங் கழுத்தினை நீட்டி
விரித்த வாலசைத் துவந்திரு விழிகளை விழித்துப்
பெருத்த வாய்திறந் தறபெனு மொழியினிற் பேசும். (36)

வரிசை நாயகன் றாதெனு முகம்மது நபியே
யரசர் கேசரி ஹபீபெனுந் திமஸ்கினுக் கரச
னிரசி தம்பணி மணிதம னியமிவை யனைத்தும்
பரிச னத்தொடு நமக்கனுப் பினரெனப் பகர்ந்த. (37)

உரைத ராவிலங் கினங்கரி யுரைத்ததென் றரவோர்
தெரித ராப்பெரும் புதுமைகொ லெனச்சிர மசைத்து
விரித ரநிறை பெருங்கடன் மேதினி யனைத்தும்
புரித ராதிப ரிவரெனப் புகழ்ந்தயல் போனார். (38)

மருந்தி லாப்பெரும் பிணிவளைத் தெனமதி மயங்கிக்
கரிந்து மாமுகம் வாய்வெளுத் தறத்தலை கவிழ்ந்து
திருந்தி லாமனத் தொடுஞ் சினத் தொடுஞ்செய லழிந்து
பொருந்தி லாதுதன் கிளையொடு மபூஜகல் போனான். (39)

கன்ன லஞ்சுவைத் தீனிலை நிறுத்திய ஹபீபு
மன்னர் மன்னவர் வரவிடு நிதியமு மணியு
நன்ன யம்பெறுந் தோழர்கள் சூழ்வர நபினார்
நந்த கத்தினிற் செறித்தனர் செழும்புகழ் தழைப்ப. (40)

மல்ல லம்புவி யிடத்தினில் தீனெறி வழுவா
தில்ல றத்தொடு முதிர்மறை யவரிர வலர்க
ளல்ல லற்றிடப் பெருநிதி யெடுத்தினி தருளிப்
பல்ல ரும்புகழ் தரநபி யிருந்தனர் பரிவின். (41)

ஹபீபுராஜா வரிசைவரவிடுத்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 10-க்குத் திருவிருத்தம் 774.



ஈமான் கொண்டவர்கள்

# ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம்.

——:[*]:——

மாசி லானருள் பெருகிய மக்கமா நகரி
லாசி லாநபி தீனிலை நிறுத்துதந் நாளிற்
பாச மற்றவ ரபூஜகல் கிளைபல பகுப்பாய்ப்
பூச லிட்டனர் பெரும்பழி நடுநிலை பகுந்தே. (1)

சிகையி னீண்முடி குயிற்றிவெண் சுதைநடுத் தீற்றி
நகையி லாத்தரு மேனிலை மக்கமா நகரின்
மிகைம னத்தொடு காபிர்க டினந்தொறும் விளக்கும்
பகையி னேடரும் பஞ்சமு முடன்பரந் ததுவே. (2)

பொறுத்த காலமுங் காபிர்க டொடுத்தவல் வினையு
மறுத்தி லாமையும் பீஸபீ லாக்களை மாய்த்து
நிறுத்துந் தீனென வேவலு மில்லையா னிதமும்
பொருத்தி ருப்பதெவ் வழியென வகத்திடை பொறுத்த. (3)

சொலத்த காப்பெரும் பகைதொடுத் தினத்தொடுஞ் சூழ்ந்து
குலத்தி னும்பிரித் தறநெறித் தீனிலைக் குரியோ
ரிலத்தி னும்வரப் பொழுந்திலா நமரினு லினியிந்
நிலத்தி ருப்பது பழுதென மனத்திடை நினைத்தே; (4)

மறுவி லாதநன் னெறிமறை தேருது மானை
யறிவி னுய்ந்தகு மதுதனித் தழைத்தரு கிருத்திப்
பிறவு முற்றதும் வருவது நிகழ்வதும் பேசி
யுறையு மிப்பதி பெரும்பகைக் காவன வுரைத்தார். (5)

உற்ற நும்மனத் திடன்பட வுறைபவ ருடனும்
வெற்றி மன்னஜா சிய்யுரை திருநகர் மேவிக்
குற்ற மின்றியங் குறைவது கருத்தெனக் குறிப்ப
முற்ற வேறுரை யாதது மானுஞ்சம் மதித்தார். (6)

ஷாகி றங்கிரன் னபியெனும் பெரும்பெயர் தரித்த
வருட மைந்தென வரவரு மிறஜபு மாதந்
தருய நேருது மானொடு றுக்கையா தமையு
மிருளும் போதனுப் பினர்ஹப ஷாவெனுந் தேயம். (7)

## ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம்.

திருந்துந் திண்புய நபிதிரு மகளுடன் சிறப்ப
விரிந்த பூங்குழன் மடந்தையர் மூவரும் வியப்பப்
பொருந்துந தீனவர் பதின்பரும் புகழுது மானும்
பிரிந்தி டாதுசென் றந்தநா டடைந்ததற் பின்னர். (8)

சந்த னந்திகழ் புயஅபித் தாலிபு தவத்தால்
வந்த ஜஃபறு மவருடன் மைந்தர்கள் சிலரு
நந்து வெண்டர ளந்திகழ் நதிஹபஷாபாற்
பிந்தி டாதொரு முறைமறை தனித்தனுப் பினரே. (9)

அன்ன மன்னமென் னடையினர் சிறுவர்க ளல்லான்
மன்னு மாடவ ரென்றொரு பஃதிரு வருமாய்ப்
பொன்னு லாஹபஷாவள நாடணி புரத்தி
லின்ன லில்லெனச் சேர்ந்தவண் மகிழ்வொடு மிருந்தார். (10)

உறைந்த மாந்தருக் கபஷிய ராசெனு முரவோர்
நிறைந்த நன்கலை யொடும்பல வரிசையு நிதியுங்
குறைந்தி டாதெடுத் தருளினர் மொழிபல கொடுத்துச்
சிறந்த தம்முத வினத்தினு மினத்தராயச் செய்தார். (11)

விதித்த தீனிலைக் குரியரை ஹபஷியர் வேந்தர்
மதித்து நன்கொடு முயர்த்தின ரெனும்வா லாற்றைக்
கொதித்த சிந்தைய னபூஜகல் குழுவொடுங் கேட்டுக்
கதித்த சூழ்ச்சியின் வேறொரு வினைகரு தினனே. (12)

வில்லு மிழ்ந்தசெம் மணித்தொடை திரண்டவெண் டாளம்
பல்ல வம்பொரு வாத்தம ணியத்துகில் பலவுஞ்
சொல்ல ரும்மிர தச்சுவை யொட்டகச் சுமையா
மல்லு றும்புயன் காத்தின்முத் திரையொடும் வைத்தான். (13)

ஓதிக் கேட்டறிந் தொழிகுமுக் காலமு முணர்ந்த
மூக றிஞரி லிருவரை யழைத்துமுன் னிருத்தி
யாத றத்தொடு சேர்த்தநல் வரிசையு மளித்துக்
கோத றத்தெளிந் தெழுதுபத் திரத்தையுங் கொடுத்தான். (14)

கொடுத்து நன்மொழி கொடுத்தந ஜாசிய்யாங் கோவுக்
தடுத்து நின்றளித் திடுவரி சைகளிவை யவன்சொற்

படுத்தி டாமதி யந்திரர்க் கிவையெனப்பகுத்து
விடுத்த னன்பெரு வஞ்சமும் படிறும்வி டாதான். (15)

அறும னத்தின னபூஜகல் கொடுத்தவை யனைத்து
மெறுழின் மிக்குய ரொட்டக மீதினிலேற்றித்
தறுகி லாதெழுந் திருவரு மரிதினிற் சார்ந்தார்
நறவு யிர்த்ததண் டலைதிகழ் ஹபஷிநன் னாட்டில். (16)

சென்ற தூதுவர் வரிசைக ளனைத்தையுந் திருத்தக்
குன்றெ னத்திரள் புயனஜா சியின் முனங்குவித்து
முன்றி லிற்றணித் தெழுதிய முடங்கலை யெடுத்து
நின்று நீட்டினர் நிருபர்க ணெருங்கிய சபையில். (17)

வரைந்த பத்திரப் பாசுர மக்கமா நகரி
லிருந்த ஹாஷிமா குலத்தொரு வன்றலை யெடுத்து
விரிந்த மந்திர வஞ்சக மாயங்கள் விளைத்துத்
தெரிந்த வேதமுஞ் சமயமு நிலைகெடச் சிதைத்தும். (18)

குடிபொ ருந்திலா திந்நகர்க் குலம்பழு தாக்கிப்
படிப குத்திடக் கொலையொடு பாதகம் விளைத்து
முடிவி லாப்பெருந் தேவத மாலய முழுது
மடிய றுத்திடத் துணிந்தனன் முகம்மதென் பவனே. (19)

அங்க வன்மொழிக் கொழுகின ரவனினுங் கொடியோர்
பொங்கு மவ்வுமை புகுந்தனர் ஹபஷிமா புரத்தைப்
பங்க மாக்குமு னவர்களைத் தண்டனை படுத்தி
யெங்கி ருக்கினு மிருக்கொணா தகற்றிடு மெனவே. (20)

இன்ன வாசக மனைத்தினும் கேட்டவ ரெவருந்
துன்ன லார்கொலோ சிட்டரோ வெனச்சிரந் தூக்கிப்
பன்னு வாரதின் மந்திரர் பகைத்தவா சகத்தாற்
*சொன்ன வாற்றினின் முடிப்பது துணிவெனத் துணிந்தார். (21)

அரசர் நாயகர் ஹபஷிந ஜாசியா மரசன்
பரிச னத்தவர் மொழியினும் மறிவினும் பார்த்தே
யுரைச மர்ப்பக முகம்மதின் வழியினுக் குரிய
வரிசை செய்திவ ணிருத்தலே கடனென வகுத்தான். (22)

---

* பகைத்தவாசக மக்கத்தால்வந்த விருவரின் சொல்லென்று கொள்க,

## ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம்.

மலைம னத்தபூ ஜகுலனுப் பியவெகு மானத்
தலைவ ரைத்தன திரும்பதி யிடையினிற் சாராக்
குலனு டனுமர் பதிக்கடைந் திடுமெனக் குறித்து
விலகி யங்கவர் கொணர்ந்தபல் பொருளையும் வெறுத்தான். (23)

சதும றைப்பொருண் முகம்மதின் வழியவர் தமைநல்
விதம னத்தொடு மனுசரித் தபூஜகு லிடத்திற்
புதிய ரைப்புறம் போக்கின னெனுமொழிப் புகழை
மதுகை வேந்தபீத் தாலிபு கேட்டுள மகிழ்ந்தார். (24)

வணக்க வாசகத் தொடும்ஹப சாசனை வாழ்த்தி
யிணக்கி நற்பொருள் பெறப்பல பயித்தெடுத் தெழுதி
யுணக்கும் புன்மனத் தபூஜகு லெழுதிய வோலைப்
பிணக்க றுத்தபீத் தாலிபு கொடுத்தனுப் பினரால். (25)

புதிய நற்பொருள் பெறத்தெரி கவிதையின் புகழான்
மதுர வாசக மெழுதிய துணர்ந்துள மகிழ்ந்து
துதிசெ யுங்கவி மாநெறிப் படுமறைத் தூயோர்க்
கதிவி தப்பல வரிசைசெய் தபஷா சிருந்தார். (26)

அந்த நாளையின் மக்கமா நகரவ ரெவரும்
வந்து நற்கவி மாவுரைத் தனரெனும் வசனம்
புந்தி கூர்தரக் கேட்டனர் சிலரதிற் பொருவாச்
சிந்தை யாயினர் நகர்க்கெனத் திரும்பினர் சிலரே. (27)

படைக்கை வேந்துது மானுடன் மனைவியும் பலருந்
தொடைக்கி ணங்கிய புயத்தவர் சூழ்வர நெறியி
னடக்க முன்மொழி பழுதென நவிறர நடுங்கி
யடைக்க லத்தினுங் காவினும் பதியைவந் தடைந்தார். (28)

புதிதின் மூவொரு பதின்மரு மூவரும் புறத்திற்
சதிய றத்தனி யவரவர் சார்பினிற் சார்ந்தா
ரதில பூசல்மா வென்பவ ரறிவினி லுயர்ந்த
மதியின் மிக்கபித் தாலிபை யடுத்துவந் திருந்தார். (29)

சினத்து வன்கொலைக் காபிர்க டிரண்டிகல் செருக்கு
மனத்தின் மிக்கபித் தாலிபு மதிமுக நோக்கி
யினத்தி னைத்தவிர்த் தபூசல்மா வென்பவன் றனைநும்
மனைத்த லத்தில்வைத் திருப்பது பழுதென வகுத்தார். (30)

பொய்த்த மாமறை முகம்மதை மனையிடை புகுத்தி
வைத்தி ருந்தனை யபூசல்மா தனையுநும் மனைக்கு
ளெய்த்து வைத் திருப் பதுபழு தெனவிக லிடாய்
மொய்த்த டர்ந்தன ரபூஜகு லொடுமுரண் மதத்தார். (31)

எடுக்கும் வாளயில் படைக்கலம் பலகரத் தேந்தித்
தொடுக்கும் பூசலிட் டடலபித் தாலிபைத் துரத்தி
விடுக்கு மென்பது மனையுட னகரையும் வெறுப்பக்
கெடுக்கு மென்பது மபூலகு பெனுமவன் கேட்டான். (32)

எனக்கு முன்னவன் றனையிடர் விளைத்திட லெவ்வது
மனக்கு றைப்பட ரிவைதவிர்த் திடரெனின் மதியை
நினைக்கு முன்பகி ரகுமது நெறிநிலை நிறுவிக்
கனக்க வைத்தலியா னலதில்லை யெனக்கழ றினனால். (33)

மோதும் வாய்மையி னபூலகு பெனுமவன் முரணி
யோதும் வாசகங் குபிரவ ருளங்கலை யுருவிப்
போது கின்றதென் றடர்ந்துநின் றவர்பொறி கலங்கித்
தீத கற்றியங் கவரவர் மனைவயிற் சேர்ந்தார். (34)

கறைத விர்ந்திடா மனக்குறை ஷியங்குலக் காபி
ரறவு நெரந்தகத் தடங்கின ரெனவற முதிர்ந்து
நிறையுந் தீனிலைக் குரியவர் மகிழ்ந்தநெஞ் சினராய்
மறைப டாமுகம் மதின்வழி வளர்த்திருந் தனரால். (35)

அரிய நாயகன் றாதுவா னவர்க்கிறை யணுகிக்
கிரியின் மீதுநின் றரும்பெயர் நபியெனக் கிளத்தும்
வருட மாறினின் மாறுகொண் டவர்மனங் கலையத்
தெருளு மேன்மையின் முகம்மதுஞ் சிறந்திருந் தனரால். (36)

பொருந்த மானிலத் துலவிய புகழுசை னயினு
ரருந்த வத்தினுட் பொருளென வருமபுல் காசீம்
விரிந்த மெய் நெறிச் சிநதையி னடுவுற விளங்கி
யிருந்த மென்மலர்ப் பதமுகம் மதுமினி திருந்தார். (37)

ஈமான்கொண்டவர்கள்
ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 11-க்குத் திருவிருத்தம் 811.



# மானுக்குப் பிணை நின்ற படலம்.



குயினிழல் பரப்பச் செவ்விக் கொழுந்தடை நறவஞ் சிந்தும்
வயிரவொண் வரையின் விம்மி வளர்ந்ததிண் புயத்து வள்ளல்
செயிரறு மறையின் றீஞ்சொற் செழுமழை பொழிந்து தீனின்
பயிர்வளர்ந் தேறச் செய்து பரிவுட னிருக்கு நாளில். (1)

அரியினஞ் செறிந்த போன்ற அறபிகள் குழுவி னுப்ப
னொருதனிச் சீய மொப்ப வுடையவன் றூதர் செல்வத்
திருநகர்ப் புறத்து நீங்கிச் செழுமுகின் முடியிற் றூங்கி
மருமலர் செறியுஞ் சோலை சூழ்ந்ததோர் வரையைச் சார்ந்தார். (2)

கொன்றையுங் குருந்துங் கார்க்கோற் குறிஞ்சியும் வேயுந்தெற்றித்
துன்றிய நிழலு நன்னீர் சொரிதரு மிடமுஞ் செந்தேன்
மன்றலொண் மலரு நீங்கா வனந்திகழ் வரையின் கண்ணே
சென்றன நெறிக்குங் காந்திச் செவ்விமெய் முகம்ம தன்றே. (3)

வனந்திரி விலங்கு மாய்த்து வன்றசை வகிர்ந்து வாரித்
தினந்தொறுங் கோலிற் கோலித் தீயிடை யமிழத்திக் காய்த்தித்
தனந்தனி யிருந்து தின்று தன்றசைப் பெருக்க லன்றி
யனந்தலிற் பொழுதும் வேறோ ரறிவென்ப தறிகி லானே. (4)

காலினிற் கழலு நீண்ட சுரியகா ளத்தின் விக்கும்
பாவினிற் வலையுங் கையிற் பருவரைத் தனுவுங் கூருங்
கோல்வெறி நணியுந் தோளிற் கூன்பிறை வாளு மென்மை
வாலுடைப்பறவை சேர்த்துங் கண்ணியு மருங்கிற் கொண்டோன். (5)

குறுவெயர்ப் புதித்த மெய்யுங் கொழுந்தசை மணத்த வாயும்
பறிதலை விரிப்புங் கூர்ந்த படுகொலை விழியு மாக
வறபினி லறபிவேட னடவியிற் றொடர்ந்தோர் மானைக்
கறுவொடும வலையிற் சேர்த்திக் கட்டிவைத் திருப்பக் கண்டார். (6)

குழைகுழைத் தெறியுஞ்செந்தேன் கொழுமலர்க்காவை நோக்கார்
பொழிமலை யருவி நோக்கார் புறத்துநன் னிழலை நோக்கார்
செழுமுகிற் கவிகை வள்ளல் செறிதரு மீந்தின் செங்காய்
மழையெனச் சொரிவ நோக்கார் மானையே நோக்கிச் சென்றார். (7)

அருளடை கிடந்த கண்ணு மழகொளிர் முகமுஞ் சோதி
சொரிநறை கமழ்ந்த மெய்யுஞ் சூன்முகிற் கவிகை யோடும்
வருவது தூயோன் றாதர் முகம்மது வென்னத் தேறிப்
பருவா னுழக்கு முள்ளத் தொடும்பிணை பகரு மன்றே. (8)

நெடியவன் றாதர் வந்தார் வேடனு னிலத்தி னந்த
முடறுயிர்க் கிறுதி யில்லை யுழையினத் தோடுஞ் சேர்ந்து
கடிதினிற் கன்றுங் காண்போ மெனமுகம் மதுவைக் கண்ணு
னெடிவரை யிமைமூ டாம னோக்கியே கிடந்த தன்றே (9)

பொருப்பிடைத் துறுகற் சார்பிற் பொரிபரைத் தருவி னீழன்
மருப்புடைப் படலைத் திண்டோண் மன்னவ ருடனும் புக்கு
நெருப்பிடைத் தசைவா யார்ந்து நின்றவே டனையுஞ் செம்மான்
றிருப்புதற் கருங்கட் டுண்டு கிடப்பதுஞ் சிறப்பக் கண்டார். (10)

இடைநிலத் துருக்கி விட்ட விரசிதம் பரந்த தென்ன
மடிசுரை யமுதஞ் சிந்த வடிக்கணீர்ப் பனிப்பத் தேங்கு
முடலகந் துருத்தி யொப்ப நெட்டுயிர்ப் புயிர்த்துக் காலிற்
றுடரொடுங் கிடப்பத் தூயோன் றாதுவ ரடுத்து நின்றார். (11)

கொடியடம் பிலைபை மானும் குளம்பின்மேற் சுருக்கும் புள்ளிப்
பொடியுடற் பதைப்பும் வீங்கிப் புதையுநெட் டுயிர்ப்பு நோக்கி
நெடியவ னிறசூ லுல்லா நெஞ்சுநெக் குருகிக் கானின்
பிடிபடு மானின் றன்பாற் பேரருள் சுரப்ப நின்றார். (12)

கதிர்விரி ஹபீபு நிற்பக் கானகத் தருக்க ளியாவும்
புதுமல ரலர்த்திச் செந்தேன் பொழிவமான் வருத்த நோக்கி
விதிர்சினைக் காங்கள் சாய்த்து மென்றழைக் கூந்தல் சோர
மதியழிந் திரங்கிக் கண்ணீர் வடிப்பன போன்ற தன்றே. (13)

குலத்தொடும் பறவை தத்தங் குடம்பையிற் புகுதன் மானை
நிலத்திடை கிடத்திக் கட்டி நின்றவேட் டுவனைக் கண்ணு
னலத்தொடுங் காண்ப தாகா தெனநடு நடுங்கி யுள்ள
முலைத்தறப் பெடையினோடு மொளிப்பன போன்ற தன்றே. (14)

ஏட்டலர் நறவ மாந்தி யிருஞ்சுரும் பிசைக்குந் தோற்றம்
வாட்டமின் முகம்ம திங்ஙன் வந்தனர் வருந்து மானை
மீட்டனர் வேட னீமான் விரும்பினன் பயங்க டீர்தார்
கூட்டுறைந் தொளித்தன் மாற்று மெனப்பல கூய போலும். (15)

நிறைவளஞ் சுரந்த கானி னின்றநந் நபியை நோக்கிக்
குறியவா லசைத்து நீண்ட கொழுங்கழுத் துயர்த்தி நீட்டி
மறைபடா மதியே வண்மை முகம்மதே யென்னப் போற்றித்
தறுகிடா தெவர்க்குங் கேட்பச் சலாமெடுத் துரைத்துக் கூறும் (16)

வல்லவ னுண்மைத் தூதே மன்னுமாலத் திதின் மாந்த
ரல்லலை யகற்றி வேதத் தறநெறி பயிற்றிச் சொர்க்கத்
தில்லிடை புகுத்தப் பூவி னிடத்தினி லுதித்த கோவே
டொல்லையி னெனது சொற்கேட் டுவந்தரு ளளிக்க வேண்டும். (17)

என்னு ரெனநீங் காத வினமுமென் கலையுங் கன்றுந்
துன்னிடக் கிரண்டு பைம்புற் றுறைதொறு மேய்ந்து நாளு
முன்னிய பசிக டீர்த்தோர் மிருகங்கட் குயிர்கொ டாமன்
மன்னிய மலையின் சார்பு மனப்பய மகற்றி வாழ்ந்தோம். (18)

இருநிலத் தாசைக் காயோ ரிளங்கன்றென் வயிற்று ருதான்
மருவிய கலையு நானும் வருத்தமுற் றிருக்குங் காலம்
பெருகுதீன் முகம்ம தேநும் பெயரினைப் போற்றல் செய்தே
னுருவமைந் திளஞ்சூன் முற்றி யுதரமும் வளர்ந்த தன்றே. (19)

தனியனென் னுயிருங் காக்குங் கலையுயிர் தானு மொன்று
யினிதினொன் றாயதென்ன விளங்கன்றொன் றீன்றே னின்ப
நனிகளி கடலிலாழ்ந்து நறுமலை யிடத்திற் சேர்ந்து
துனிபல வகற்றி னேன்முன் சூழ்வினை யறிகிலேனே. (20)

உள்ளுயி ரனையகன்று மொருத்தலு மியானு மோர்நாள்
வெள்ளமொத் தனைய மானி னினமுமோர் வெற்பின் சார்பி
னள்ளிலை யள்ளி வாய்கொண் டருப்பசி தடிந்து நீருண்
டெள்ளள வெனினு மச்சமின் றிநின் றுலவு நேரம். (21)

அத்திசைக் கெதிரின் மேல்பா லடுத்தொரு குவட்டின் கண்ணே
மத்தகக் கரியு மாய்க்கும் வரிப்புலி முழக்க நீண்ட
குத்திரத் தசனித் தாக்கின் குவலய மதிரக் கேட்டுத்
தத்தியெத் திசையுந் திக்குந் தனித்தனி சிதறி னேமால். (22)

கூடிய தூறும் பாரிற் குளித்திடக் குதித்து வல்லே
யோடிய திசையி னென்றை யொன்றுகாண் கிலதா யானும்
வாடிய மனத்தி னோடு மறியையு நோக்கா தாக்கை
யாடியிற் றுரும்பாய் வேறோ ரடவியி னடைந்திட் டேனால். (23)

அடவியி னடையுங் காலை யவ்வுழை கரந்திவ் வேடன்
றொடரிடும் வலையைச் சுற்றிச் சுருக்கிடப் புலிவாய் தப்பி
மிடலரி யுழையிற் சிக்கி மிடைந்தென மிடைந்து செவ்வி
யுடலுயிர் பதைப்பத் தேம்பி யுணர்வழிந் தொடுங்கா நின்றேன். (24)

வலையிடத் துறைந்த தென்ன மகிழ்ந்தெழுந் தோடி வந்து
நிலைபெற வடுத்துச் சாய்த்து நின்றெனை நோக்கி யாகத்
துலைவுறும் பசிக்கின் றென்பா லுற்றனை யென்னக் கூறிச்
சிலைகணை நிலத்திற் சேர்த்தித் தெரிந்தொரு பாசந்தொட்டான். (25)

திருக்கற நாலு தாளுஞ் செவ்விதிற் கூட்டியங்கை
வரிக்கயி றதனாற் சுற்றி மாறுகொண் டழுத்துக் கட்டிக்
கரிக்கர மென்ன நீண்ட கரத்தினாற் றூங்கி முன்னர்ச்
சுருக்கிய வலையை நீக்கித் தோளினி லெடுத்துக் கொண்டான். (26)

கலைமுனைக் கோட்டுச் செவ்விக் கலையுட லுயிரு மீன்ற
நவியுட லுயிரு மோர்மா னுடன்கொண்டு நடப்ப தொத்துச்
சவிபுறந் தவழுங் கோட்டுச் சார்பிலிவ் வனத்தின்கண்ணே
சுவையறு மொழியா னென்னைச் சுமந்திவ ணிறக்கி வைத்தான். (27)

கட்டுடன் கிடந்து நெஞ்சிற் கவலையுள் ளழிந்து மாறு
நெட்டுயிர்ப் பெறிந்து சோர்ந்து நிலத்திடை கிடக்கு நேரம்
வட்டவெண் கவிகை வள்ளல் முகம்மது நபியே யும்மைத்
திட்டியிற் றெரியக் கண்டேன் றிடுக்கமுந் தீர்ந்த தன்றே (28)

எனவிவை யுரைத்துப் பின்னு மெழினபி முகத்தை நோக்கி
மனநிலை வாக்கி னோடு முகம்மதே யென்னப் போற்றிப்
புனமுறை விலங்கின் சாதி யாயினுந் தமியேன் புன்சொற்
றனையருட் படுத்திக் கேட்டீ ரென்றுரை சாற்றிச் சாற்றும். (29)

இச்சிலை வேடன் கையி னிறத்தலை யுளத்தி லெண்ணி
யச்சமுற் றுரைப்ப தன்றிவ் வவனியிற் சீவ னியாவு
நிச்சய மிறத்த லல்லா லிருப்பவை நிலத்தி லுண்டோ
முச்சம் விளங்குந் தீனின் முதன்மறை முறைமைச் சொல்லோய்.(30)

கலையெனப் பிரிவி லாது கண்ணிமை காப்ப தென்ன
வலைவறக் காப்பச் சின்னா ளவனியிற் கலந்து வாழ்ந்தேன்
குலவிய மறிவு மீன்றேன் குறித்தினி யிருப்ப தென்கொ
லிலைநுனிப் பனியி னாக்கை யிறத்தலே நலத்தன் மன்னோ. (31)

அடவியிற் கிரியில் வீணி லவதியுற் றிறந்தி டாமல்
வடிவுடைக் குரிசி லேறும் மலர்ப்பதச் செவ்வி நோக்கிப்
படுபாற் கானில் வேடன் பசிப்பிணி தீர்ப்பதாக
வுடலிறத் திடுத லெவ்வெவ் விறப்பினு முயர்ச்சி மேலோய். (32)

வரிப்புலி முழக்கங் கேட்டு மானினஞ் சிதறித் தத்தந்
தரிப்பிட மறியா தொன்றுக் கொன்றுடன் சாரா தெங்கு
முரைப்பரி தென்னப் போந்த தாலென தொருத்த றேடி
யிரைப்பறு நெடுங்கான் போய்ப்போ யிருந்ததோ விறந்த தேயோ. ()

ஒல்லையி னோடி நீங்கா தொருத்தலின் றளவு மோர்ந்து
புல்லினைக் கறியா நீரும் புசித்திடா திருந்து தேடி
யல்லலுற் றழுங்கிக் கண்ணி னருவிநீர் சொரிய வாடிப்
பல்லவ மெரியிற் புக்க தெனவுடல் பதைக்கு மன்றே. (34)

பிடிபடு மிதற்கு முன்னே மூன்றுநாட் பிறந்து புல்லின்
கொடிநுனை மேய்ந்து நீருங் குடித்தறி யாத பாவி
மடிமுலை யிறங்கிப் பாலும் வழிந்தது குழவி சோர்ந்து
படிமிசை கிடந்தென் பாடு படுவதோ வறிகி லேனே. (35)

கோட்டுடைக் கலையி னோடுங் கூடிற்றோ வலதோர் பாலின்
மீட்டதோ வினத்தைச் சேர்ந்து விம்மிநின் றேங்கிற் றோகான்
காட்டிடைப் புலிவாய்ப் பட்டுக் கழிந்ததோ வென்னைத் தேடி
வாட்டமுற் றலறி யோடி மறுகிற்றோ வறிகி லேனே. (36)

தேங்கிய பசியால் வாடித் திரிந்ததோ விறந்த தோவென்
றேங்கிய வருத்த மல்லா லிவ்விட ரதனி லாவி
நீங்குமென் றுள்ளத் துள்ளே னெட்டுட லுடும்பி னாவி
தாங்கிய தரும வேந்தே தவறன்று சாத மன்றே. (37)

மன்னிய கலிமா வென்னும் வழிநிலை மாந்த ரியாரும்
பொன்னிலம் புகுதச் செய்யும் புண்ணியப் புகழின் மிக்கோல்
கொன்னிலைச் சிலைக்கை வேடன் கொடும்பசி தணிப்பே னென்றுட்
பின்னிய பிணிப்பு நீக்கிப் பிணையென விடுத்தல் வேண்டும். (38)

விடுத்திரேற் கலையைச் சேர்ந்து விழைவுறுங் கவலை தீரப்
படுத்தியென் னினத்துக் கோதிப் பறழினுக் கினிய தீம்பால்
கொடுத்தரும் பசியை மாற்றிக் குலத்தொடுஞ் சேர்த்து வல்லே
யடுத்தொரு கடிகைப் போதி லடைவ னென் றறைந்த தன்றே. (39)

மானுலை வழங்கக் கேட்டு மனத்தினிற் கருணை பொங்கிக்
கானவேட் டுவனை நோக்கிக் கன்றிடை வருத்தந் தீர்த்துத்
தான்வரு மளவு மியானே பிணையெனச் சாற்றி நின்றார்
தீனெனும் பயிரைக் காத்துச் செழும்புகழ் விளக்குஞ் செம்மல். (40)

பிரியமுற் றிரங்கிக் காட்டின் பிணைக்கியான் பிணையென் றோது
முரையினைக் கேட்டு வேட னெண்புயங் குலுங்க நக்கித்
தெரிதரு மறிவி னோடுஞ் சினத்தொடுங் கலந்து தேர்ந்து
கருமுகிற் கவிகை வள்ளல் கவின்முக நோக்கிச் சொல்வான். (41)

முள்ளுடைக் கானி லேகி முகமழிந் துச்சி வேர்வை
யுள்ளங்கா லளைப்ப வோடி யுடலுலைந் தொன்றுங் காணு
விள்ளரும் பசியான் மீளும் வேளையிப் பிணையை நோக்கி
யொள்ளிழை வலையிற் றூக்கிப் பிடித்திவ ணொருங்கு சார்ந்தேன். (42)

பெருத்தமான் றசையா விற்றைப் பெரும்பசி தவிர்ந்த தென்று
ளிருத்தியிங் கிருந்தே னந்த விருமனக் களிப்பை நீக்கி
வருத்தமுற் றிடுஞ்சொற்சொன்னீர்முகம்மதேயெவர்க்குமிச்சொற்
பொருத்தம தன்று விண்ணு மண்ணிலும் புகழின் மிக்கோய். (43)

கானிடை பிடித்த மானைக் கட்டவிழ்த் தவணிற் போக்கின்
மானிடர் பாலின் மீட்டும் வருவது முன்ன ருண்டோ
ஞானமு மறையுந் தேர்ந்தோர் செய்யுளு நாட்டிற் றுண்டோ
வூனமிப் பிணைச்சொ லையா வோதுவ தொழிக வென்றான். (44)

என்னுறு பிணையாய்ப் போன விரும்பினை கடிகைப் போதி
னுன்னிடத் துறும்வா ராதே லுன்பசி தீர்ப்ப தாகப்
பின்னிரண் டொன்றுக் கன்பாய்த் தருகுவன் பேது றேலென்
றன்னவன் றனக்குச் சொன்னா ராரணத் தமிர்தச் சொல்லார். (45)

காரணக் குரிசில் கூறுங் கட்டுரை செவியி னோர்ந்து
பாரினி லெவர்க்குந் தோன்றாப் புதுமைபார்த் தறிவோ மல்லாற்
சார்பினிற் சாரா லொன்றுக் கிரண்டுமே தருது மென்றார், பேரி
ணிற் பிணையாய்க் கொள்ளல் கருத்தெனப் பெரிதுட்கொண்டான். (46)

கள்ளமுங் காப்பு மாறாக் கருத்தின னுயிர்கட் கென்று
மெள்ளள விரக்க மில்லா வேட்டுவ னினத்தி னுள்ளே
னுள்ளம தறிந்துங் கேட்டீ ருரைப்பதென் னுயர்ந்த மேன்மை
வள்ளனும் மதுர வாய்மை மறுத்திலேன் விடுத்தி ரென்றான். (47)

வேட்டுவ னுரைப்பக் கேட்டு முகம்மது விருப்ப முற்று
வாட்டமுற் றிருந்த புள்ளி மானிடத் திருந்து பாரி
னீட்டிய காலிற் சேர்த்த துடரினை நெகிழ்த்துக் கானிற்
கூட்டுறுக் குழவிக் குப்பால் கொடுத்திவண் வருக வென்றார். (48)

இருந்துகான் மடக்கி நீட்டி யெழுந்துடன் முறுக்கு நீக்கி
மருந்தெனு மமுதத் தீஞ்சொன் முகம்மதின் வதன நோக்கிப்
பொருந்திய சலிமா வோதிப் புகழ்ந்துடற் பூரிப் போடுந்
திருந்தவே டனையும் பார்த்துச் சென்றது கானின் மானே. (49)

வெண்ணிலாக் கதிர்கா னென்ன மென்முலை சுரந்த தீம்பான்
மண்ணெலா நனைப்பச் சூழ்ந்த வனமெலாந் திரிந்து தேடிக்
கண்ணினி லினங்கா ணாது கலங்கியோர் வனத்தின் கண்ணே
யெண்ணரும் பிணையுங் கன்றுங் கலையுட னினிது கண்ட. (50)

மலைவற வினத்து ளாகி மனத்தினுட் கவலை நீக்கிக்
கலையினுள் வருத்தந் தீர்த்துக் கன்றினை யணைத்து விம்மு
முலையினை யூட்டி மென்மை முதுகுவா லடிநா நீட்டி
யலைதர வளைத்து மோந்து வேட்கையை யகற்றிற் றன்றே. (51)

கன்றது வயிறு வீங்கக் கதிர்முலை யமுத மூட்டி
நின்றதன் னினத்துக் கெல்லா நெடிபடுங் கானி லோடி
வன்றிறல் வேடன் கையிற் படும்வா வாறுந் தூதர்
வென்றிகொள் பிணையின் மீட்டு விட்டது மோதிற் றன்றே. (52)

பிணையென வுரைத்த மாற்றம் பிணைக்குல மனைத்துங் கேட்டுப்
பணைபடு கானி லுள்ள பதைப்பொடுந் தணுக்கி நிற்பத்
துணையெனுங் கலையி னங்கஞ் சோர்ந்துநெட் டுயிர்ப்பு வீங்கி
யணைதர வடுத்து நோக்கி யாற்றுவான் றொடங்கிற் றன்றே. (53)

மாறுகொண் டவர்கை தப்பி வந்தமா னினத்தின் சாதி
கோறலை விரும்பி முன்னு நார்கையிற் கூடிற் றுண்டோ
வேறொரு பகரேல் பார்ப்பை வெறுத்துமுன் னினத்தை நீத்து
மீறெனப் போதல் வேண்டா மெனுமுறை யியம்பிற் றன்றே. (54)

இணைத் தென்னைப் பிணித்தவேட னிதயத்துக் கியையப் பேசிப்
பிணைத்தன்னைப் பொருத்தி நின்றோர் பெரியவன் றூத ரிந்தத்
திணைத்தலத் தறிவி லாத சேதனச் சாதி யன்றே
யனைத்துயி ரனைத்துங் காத்தற் கவால தில்லை யன்றே. (55)

என்றுயி ரதனை வேட னிரும்பசிக் கிரைய வீந்து
நங்கபி பிணையை மீட்ப நன்மனம் பொருந்தி லேனாற்
பொன்னுல கிழந்து தீயு நரகினிற் புகுவ தல்லாற்
பின்னொரு கதியு முண்டோ பிழையன்றிப் பெருமை யன்றே. (56)

சிறப்புடைக் குரிசின் முன்னஞ் செப்பிய மாற்ற மாறி
மறப்பொடு மிருந்தே னாகில் வரிப்புலி யினத்தின் வாய்ப்பட்
டிறப்பதே சாத மல்லா விருப்பதற் கிடமற் றுண்டோ
வுறப்பெரும் விருப்ப மென்மே லிருத்தலை யொழித்தல் வேண்டும். ()

நதியிடை பெருக்கின் முன்னோர் நவ்வியி னடக்கு நாளின்
மதியிலி யொருத்தன் வள்ளன் முகம்மதின் வசன மாறிப்
புதியநன் னீரு ளாழ்ந்து நொடியினில் வீழ்ந்து போய
வதிஜய முலகில் விண்ணி லியாவரே யறிகி லாதார். (58)

ஈதெலா மறிந்து மென்னை யிவணிடை யிருத்தல் வேண்டி
யோதுதல் பழுதென் றோதி யுழைபின மனைத்துந் தேற்றிக்
காதலிற் கனையைப் போற்றிக் கன்றினை யதன்பாற் சேர்த்திப்
பேதுற லெனப்பா லூட்டி யெழுந்தது பிணையு மன்றே. (59)

இனத்தினை விடுத்து நீங்கி யிருங்களிப் பிதயம் பூப்ப
வனத்தினி லேகுங் காலை மறிமுன மறிப்பச் சீறிச்
சினத்தது தடுப்ப வோடிச் செவ்விமான் முகத்தை நோக்கி
யினித்தவாய் புற்றீண் டாத விளமறி யுரைக்கு மன்றே. (60)

மாதவம் பெற்று நின்போன் முகம்மது நபிதஞ் செய்ய
பாதபங் கயத்தைக்கண்டு பரிவுட னீமான் கொண்டு
போதலே யன்றி நின்னைப் புறத்தினி லகற்றி வாழே
னீதுமுத் திரையென் றோதி யெழுந்துமுன் குதித்த தன்றே. (61)

இறையவன் றாதைக் கண்ட வதிஜய மிதுகொ லென்ன
மறிமன மறுகி லாது வதைதனைப் பொருந்திச் சேற
விறுதியற் றின்ப நம்பா லெய்துமென் றகத்தி னெண்ணிச்
செறிவனங் கடந்து வேடன் றிசைதனை யடுத்த தன்றே. (62)

குருளையும் பிணையுங் கூடி வருவது குறித்து நோக்கி
முருகலர் புயத்தார் வள்ளன் முகம்மது மகிழ்ந்தன் பாக
விருளுறு மனத்த னை வேடனை யினிது கூவி
யொருபிணைக் கிரண்டுன் பாலில் வருவதென் றுரைத்திட்டாரால். (63)

அன்னது கேட்டு வேட னேக்கியன் புற்ற காலை
முன்னிய கன்று மானு முகம்மதி னடியிற் றாழ்ந்து
பன்னிய சலாமுங் கூறிப் பாவியெற் காகவேட்டு
மன்னிய பிணையை மீட்டு மெனுமுறை வழங்கிற் றன்றே. (64)

மாடுறைந் திவைமான் கூறமுகம்மது நபியும் விற்கை
வேடனை விளித்து நந்தம் பிணையினை விடுத்து நின்றன்
பீடுடை பசியை மாற்றிப் பெரும்பதிக் கடைக வென்றார்
வீடுபெற் றுயர்ந்து வாழ்ந்தே னெனமலர்ப் பதத்தின் வீழ்ந்தான். ()

பாதபங் கயத்தைப் போற்றிப் பருவர லகற்றி யாதி
தூதுவரிவரே யல்லா லிலையென மனத்திற் றாக்கி
வேதநாயகமே யென்பால் விருப்புறுங் கவிமாத் தன்னை
யோதுமென் றிருகை யேந்தி யுவந்துநின் றுரைப்ப தானான். (66)

கருமுகிற் கவிகை வேந்தே கானக வேட னென்னு
முருவினன் விலங்கோ டொப்பே னுள்ளறி வுணர்வு மில்லேன்
றெருளுறப் பாவியென்னைத் தீனிலைக் குரிய னென்னப்
பெரிதளித் திடுதல் நுந்தம் பெருமையிற் பெருமை யென்றான். (67)

மதிமுக மகிழ்ச்சி கூரமுகம்மது கலிமாச் சொல்ல
விதயமுற் றோதிவேட னினிதினி னீமான் கொண்டு
புதியனை வணங்கிச் செய்யுஞ் செய்தொழி லபொருந்தக் கேட்டு
நிதிமனைக் குரிய னாகித் தீனிலை நெறிநின் றானே. (68)

பெறுகதி நின்னாற் பெற்றேன் பெரும்பவங் களைந்தேன் மாறாத்
தெறுகொலை விளைத்து முனனஞ் செய்தொழி றவிழ்த்தேனீயு
மறுகலை யெறிந்து தேறு மனக்கலை யொடுகன் றோடு
முறுகலையிடத்திற் போய்ச்சேர்ந் தொழுகலை முயல்தி யென்றான். (69)

வானவர் பரவுங் கோமான் முகம்மது மானை நோக்கிக்
கானகஞ் சென்னீ யென்றார் கமலமென் பதத்திற் றாழ்ந்து
தீனிலைக் குரிய வேடன் றன்னையுந் திருந்தப் போற்றி
நானிலம் புகலப் பாரி னடந்தினஞ் சேர்ந்த தன்றே. (70)

தேனைக்குங் குமங்கள் சிந்தச் செழித்ததிண் புயத்து வள்ளல்
கானைக்குவ் விடத்திற் காட்டுங் கமலமென பதத்தைப் போற்றித்
தானைக்கும் பதிக்கு மியானே தலைவனென் பவர்போல் வேடன்
மானைக்கொண் டுவரப்போயீ மானைக்கொண் டகத்திற் புக்கான். (71)

துடவைநன மலரைத் தூற்றுந் தூய்நிழ லிடத்தை நீங்கிப்
படர்முகிற் கவிகை யோங்கப் பாருள தெவையும் வாழ்த்த
வடவரை யனைய திண்டோள் வயவர்க ளினிது சூழக்
கடிமனை யிடத்திற் புக்கார்ஹபீபிற சூலு மன்றே, (72)

மானுக்குப் பிணைநின்ற படலம் முற்றிற்று.

ஆ படலம் 12-க்குத் திருவிருத்தம் 883.



## ஈத்தங்குலை வரைவளைத்த படலம்.



சுருதியின் முறைவழித் துணைவர் சூழ்தரக்
கருமுகி னிழலொடுங் கருணை பொங்கிட
மருவுமெண் டிசைக்குமான் மதங்க மழ்ந்திட
விருநிலம் புகழ்நபி யிருக்கும் போதினில். (1)

காவினிற் கபுசுமோர் கையிற் குந்தமு
மேலிடுஞ் சட்டையும் விசித்த கச்சையுந்
தோலொரு தோளினுந் தூக்கி வந்தவ
னாலநந் நபிதமை யடுத்து நோக்கினான். (2)

தரியலர்க் கன்புறுஞ் சார்பினான் மறைக்
குருநெறி முகம்மதைக் குறித்தெ திர்ந்துநீ
ரிருநிலத் தெலரென வியம்பினான்பா
ருரநெரிந் திடச்செவி வுழக்குஞ் சொல்லினால். (3)

அச்சமொன் றின்றிநின் றறபி கூறலும்
வச்சிரப் புயமுகம் மதுதம் வாய்திறந்
திச்சகம் புகழ்தனி யிறைவன் றூதியா
னிச்சய மிதுவென நிகழ்த்தி னாரோ. (4)

ஆதிதன் றூதென வறிவ தற்கரும்
பூதலத் தென்மனம் பொருந்தி யன்பொடுஞ்
சாதமுற் றிடப்பொருஞ் சாட்சி யாமெனுங்
கோதறு குறிப்பெவை கூறுவீரென்றான். (5

காரணக் கரியுனக் கியையக் காண்கிலென்
றோரணத் துறுங்கலி மாவை யன்பொடும்
பூரண மனத்தொடும் புகல்வை போவெனச்
சீர்தரு மமுதவாய் திறந்து செப்பினார். (6)

அவனியி லெவர்க்குநன் கரிய வென்மனக்
கவாறக் காரணக் கரியுண் டாமெனி
னவியுமை யலதிலை யென்ன நண்பொடும்
பவமற நம்வழிப் படுவ னியானென்றான். (7)

நிலத்தினில் விண்ணினீ டிசைக்கு ணின்மன
நலத்தது கரியெவை நாட்டு வாயெனக்
குலத்துறு முகம்மது கூறக் கேட்டுநற்
சிலைத்தழும் பிருந்ததோ ளறபி செப்புவான். (8)

இருவருக் கெதிர்தர நின்ற வீந் ததின்
விரிதலைக் குலைமலர் வீழ்ந்தி டாதிவண்
வரவழைத் திடுவிரேன் மனமும் வாக்குமொத்
தருமறை மொழிவழி யாவ னிபா னென்றான். (9)

ஈந்தினை நோக்கிநின் றிறைவன் றாதுவர்
வாய்ந்தநிள கொலைபிவண் வருக வேண்டுமென்
றாய்ந்தநன் மறைதெரி யமுத நன்கனி
யேய்ந்தவாக் கினைத்திறந் திபம்பி னாரரோ. (10)

ஆதிதன் றாதுவ ரறையக் கேட்டலுஞ்
சோதிவெண் குருத்தொடுந் தோன்ற மேலெழுந்
தேதினுஞ் சிதைகிலா திழிந்து மாநில
மீதினில் விரிதலை விளங்கி நின்றதே. (11)

விரிதலைத் தருவடி நின்ற மென்குலைப்
பரிவொடும் பயப்பயக் குதித்துப் பாரிடை
யிருவிழி தெரிபவ ரெவாக்கு மின்புறத்
திருமுகம் மதுமுனஞ் சிறநது நின்றதே. (12)

அந்தர விரிதலைக் கமைந்த பூங்குலை
யிந்தமா நிலத்திடை யிறங்கி யிவ்வுழை
வந்ததிற் புதுமையு மறுத்துண் டோவெனச்
சிந்தையுற் றறபிநந் நபியைச் சிந்தித்தான். (13)

படித்தலம் புகழ்நபி பாதம் போற்றிநின்
றடிக்கடி புதுமையுற் றறபி யீந்தின
திடத்தினிற் குலைபொருந் திடச்செய் வீரெனத்
திடத்தொடும் பயத்தொடுஞ் செப்பி னனரோ. (14)

மழைமுகிற் கவிகையின் வள்ள னன்கெனக்
குழைதரும் விரிதலைக் குலையைப் பார்த்துநின்
னுழையினிற் செல்கென வுரைப்ப வோடிமுற்
புழைவழி நுழைந்தது பொருந்தி நின்றதே. (15)

மேதையச் சமுமுள விலங்கி னயதோர்
சாதியன் றீதொரு தருமுன் னதலும்
போதலும் படைத்தவர் புதிய நாயகன்
றாதுவ ருண்மையென் றடியைச் சூடினன். (16)

பாதபங் கயமலர் சிரசிற் பற்றிநின்
றுதியிற் சொலுங்கலி மாலை யன்பொடு
மோதினன் றெளிந்தன னுரிய நாயகன்
றாதுவர்க் கிவனொரு துணைவ னாயினன். (17)

ஈத்தங்குலை வரவழைத்தபடலம் முற்றிற்று.
ஆகப் படலம் 12-க்குத் திருவிருத்தம் 900.

---

## ஒப்பெழுதித்தீர்ந்த படலம்.

பரிவுறு நபியெனும் பட்ட மாகிய
வருடமே ழினிற்றின முஹற்ற மாத்தையிற்
றெரிதரும் பிறைமுத லிரவிற் சேரலர்க்
குரியவர் குறைஷிக ளொருங்கு கூடினர். (1)

கறைகெழு மனக்கொடுங் காபி ராகிய
குறைஷியந் தலைவர்கள் பலருங் கூட்டமிட்
டறபிக டம்முட னாய்ந்து வாய்மையான்
முறைதவ றிடுமொரு கரும முன்னினர். (2)

ஹாஷிமுத் தலிபென வடுத்துக் கூடிய
மாசறு மிருகுலத் தவரின் வாணிகம்
பேசுதல் சம்பந்தம் பிறவு நீக்கிவிட்
டேசறு சாதியின் விலக்கிட் டாரரோ. (3)

நெருப்புநீ ரிவையூத னீக்கி நீணிலத்
திருப்பவ ரெவருமங் கவர்க்கி டங்கொடா
துருப்பமோ டிகல்வதே யெவர்க்கு மூழென
வரைப்புற வொருமுறி வரைந்திட் டார்களால். (4)

சாதியின் விலக்கெனத் தவறி லாதெடுத்
தோதிய வொப்பெனு முறியை யூரவர்
மாதிர மடர்சகு பாவின் வாயிலிற்
றாதரு மறியவென் றெடுத்துத் தூக்கினார். (5)

கொடுமனக் குறைஷியங் காபிர் கூடியப்
படிநடத் திடுமங்நாட் பலன்கொண் மாமறை
பிடிபடுந் தீனவ ரியாரும் பேதுறு
துடனுயி ரெனவுவந் தொருங்கு கூடினார். (6)

தெரிதருந் தீநெறி யவருஞ் சேர்தரு
மிருவகை கிளைஞரு மிசைந்த பேர்களுந்
தருவெனத் தருமபுத் தாலிப் தம்புய
வரையென வளைந்தவர் வாழு நாளில். (7)

போதலர் மதீனமா புரத்தி னொடாறுங்
கோதுறு தவுசெனுங் கூட்டத் தார்கட்குங்
காதிய ஹசுறகுக் கிளைக்குங் கட்டறு
தோதிய பெரும்பகை பொழிந்த தில்லையால். (8)

இசையுநூற் றிருபது வருட மும்ஹசு
றசுவெனுங் கூட்டத்தா ரமைத்த வெற்றியே
திசைபுகழ்ந் தனஅவு சென்னுந் திண்மையோர்
விஷயமோ ராண்டினும் வேய்ந்த தில்லையால். (9)

இந்தவல் வினையினா விடைந்தவ் வெளசுளர்
தந்தம ரொடும்பலர் தனித்து சாவியே
சிந்தையிற் றெளிவொடுந் தெரிந்து பார்த்துநன்
மந்திர மீதென வகுத்துக் காட்டியே. (10)

மக்கமாநக ருறை மன்னர் தம்மைநம்
மொக்கலி லின்புற வுவந்து சேர்ந்துவந்
திக்கணம் ஹறசுறசை யெதிர்வ தல்லது
புக்கிட மிலையெனப் பொருந்தக் கூறினார். (11)

பெறுமுறை யீதெனப் பேசி நால்வரைத்
திறனொடுஞ் சேகரஞ் செய்து வம்மெனக்
குறைவற வரிசையுங் கொடுத்த யாசினை
யறமெனு மக்கமா நகர்க்க னுப்பினார். (12)

பெருகிய கிளையவு சென்னும் பெற்றியோர்
வரவிடுத் தவர்சிலர் மக்க மீதினி
லரிதின்வந் தனரென வறிந்து நந்நபி
பரிவுட னெழுந்தவர் பாலி னேகினார். (13

அங்குறைந் தவரகத் தன்பு கூர்தரப்
பொங்கிய சிலமொழி புகன்று பின்னரு
மெங்கினுந் தீன்படர்ந் தேற நன்மறை
தங்கிய நாவினா லெடுத்துச் சாற்றுவார். (14)

பற்றல ரிடரடப் படர்ந்திவ் வூரினி
லுற்றநீ ருள்ளிவந் ததனி னோங்கிடும்
பெற்றியுண் டெனதுரை பெற்றி ரேற்பெரும்
வெற்றியுண் டெதிடத் தெனவி ளம்பினார். (15

வள்ளலிவ் வுரைதர மதீன மாநக
ருள்ளவ ருள்ளகத் துவகை யூர்தர
விள்ளுறுங் கருத்தென வினவ நனமொழி
தெள்ளிய மதுரவாய் திறந்து செப்பினார். (16)

அரியவ னருளினா லமரர் கோனெனக்
கிருநிலத் தினினபி யென்னும் பேர்கொடுத்
துரியவே தமுமினி துதவி நன்னெறி
வரிசைநேர் வணக்கமும் வகுத்துப் போயினார். (17)

அகமகிழ்ந் திம்மொழி யனைத்தும் வேறிதென்
றிகழ்விலா துண்மையென் றிசைந்து நீவிர்யான்
புகழ்கலி மாநெறி பொருந்தி னீரெனிற்
பகையறும் வெற்றியும் படரு மென்றரோ. (18

நறைகமழ் முகம்மதாண் டுரைத்த நன்மொழி
திறனயா சறிந்துளந் தேறித் தன்வயி
னுறைபவர்க் கணிபெல வோதி வேண்டுவ
பிறநினை விலையினி யெனவும் பேசினார். (19)

நன்பதந் தரும்புகழ் நபியைப் போற்றியா
னென்பதி புகுதெமர்க் கியம்பி யொல்லையி
னின்பதம் வாநிலை நிறுத்து வேனென
வன்புற வரைத்தெழுந் தயாசு போயினார். (20)

தடந்திகழ் மதீனமா நகரைச் சார்ந்தினத்
துடனயி யுரைத்தவை யுரைப்பக் கேட்டவர்
திடப்பெற விஃதுநன் றென்னச் சிந்தையி
னிடம்பெறக் களிப்பொடு மிருக்குங் காலையில். (21)

கொடுஞ்சிலைக் கசுறசு வென்னுங் கூட்டத்தா
ரிடும்பகை யுடனிவ ரெதிர்ந்து தாக்கலும்
விடும்பரி படைக்கலம் வீழ்த்திக் காறளர்ந்
தடும்படை யொடுமுறிந் தவதி யாயினார். (22)

பாடினிற் கசுறச படையெ லாமுறிந்
தோடின ரவுசெனுங் கூட்டத் தோர்க்கெனப்
பீடுடைப் பெரும்புகழ் பெருகிச் சூழ்திசை
நாடடங் கலுந்தெரி தாந டந்ததே. (23)

நபிதமைக் கண்டுரை நடத்தி வெற்றியும்
புவியினிற் பெற்றனம் பொருந்தி னோமெனி
லெவர்நமக் கெதிரவர்க் கியைவ தேயென
அவுசெனும் பெருங்குலத் தவர்கள் கூறினார். (24)

முகம்மதின் தீனிலை வழிசெல் வோமென
வகமகிழ்ந் தவுசினத் தவர்கள் கூறலும்
புகழொடு மறுவர்க ளெழுந்து பொன்னில
நகரொரு மக்கமா நகரை நண்ணினார். (25)

மறுவறு மவுசெனுங் குலத்து மன்னவ
ரறுவரு நபிபத படுத்துச் செவ்வியி
னுறுகலி மாவெடுத் தோதி யன்பரா
யெறுழ்வலி யொடுமிசு லாத்தி லாயினார். (26)

வேறு.

வாருதி யெனவரு மதீனா மென்னுமவ்
வூரவர் நமர்க்குயிர்த் துணைவராகிய
பேரெனப் படைத்தனம் பெரிய ஞலென
வேர்பெற நபிமன மகிழ்ந்தி ருந்தனர். (27)

பின்னுதிரைக்கடனிலத்தில் விளங்குபுக ழுசைனயினொர்பெரும்பே ருன, மன்னவர்மன் னபுல்காசி மனத்தினுா வினுமறவா திருத்தி வாழ்த்து, மின்னவிர்செம் மலர்ப்பதத்தாண் முகம்மது தம் பெருமறைத்தீன் வேர்விட்டோடி, யெங்கிலமி மிசுலாத்தின் கொழுந்துபல படர்ந்தேறி யிலங்கிற் றன்றே. (28)

உலகடங்கத் தனியரசு செலுத்தும்பெரி யவனருளா லுயர்வானீந்தி, யலகில்கதிர்ச் சிறைச்சபுற மீலகுமதுறைந்தகுவ டடுத்தன் பாக, விலகுகலி மாவோதி மணித்துகில் செங்காத்திருத்தி வேதமீந்து பலமறிய நபியெனும்பேர் பரித்தாண்டு மிருநான்கும் படரு நாளில். ()

இறுமிகட்கும் பாரிசு நாட் டவர்க்கும்பெரும் பகையாகவிருந்தவ்வாண்டு, பறமு திர்ந்து பாரிசவர் வெற்றிகொண்டா ரெனும்வசனமக்க மீதி,லுறையும்பெருங் குபிரவாகேட் டெற்பூரித்திசுலாத்தி லுற்ற பேரைத், திறனடுத்த தெமர்க்கிழிந்த சிதைவடுத்த துமர்கெனவுஞ் செப்பினூரால் (30)

தருவைநிகர் முகம்மதுநன் னபியுரைத்தா ருறுமிகடஞ் சமர்க்காற் ருது, வெருவியிரு நிலத்தோடிப் பாரிசற முறியுமென விரித்த வாய்மை, யொருபொழுதும் பழுதாகா தென்னஅபூ பக்கரெடுத் துரைப்பக் கேட்டே, யிருமையினும் பலனறியா னிபுனுகல பெனுமவன்வந் தெதிர்ந்து சொல்வான். (31)

எங்கள்குலத் தவருரையே பழுதாகிப் பாரிசவ ரிரிந்தா ரென்னி, லுங்கடமக் கருள்வேனூ றொட்டகையீ தொட்டமென வுரைப்ப நோக்கி, யெங்கணபி முன்னுரைத்த வுரை தவறி யுறுமிகள்போ ரிடைந்தா ரென்னி, லுங்கடமக் களித்தலகீ தென்ன அபூபக்கரெடுத் தோதினூரால். (32)

இருவருஞ்சம் மதித்திகலி யொட்டியவொட் டகத்திறெடு மிருக்கு நாளி, லொருகவிகை நிலவவுறா மிகளடர்ந்துபாரிசவ ருடைந்தா ரென்னப், பெரிதுமொழி வயாவர்கேட் டிபுனுகல புடனுரைப்

பப் பெரிதி னீந்தா, னருவனரேந பொட்டகறா றடலரியே றென்னும
பூபக்கர்க் கன்றே. (33)

ஒட்டியொட்டம் பலித்த வொட்டைத் திரளொடும்வந் துயரு மப
பக்கரோங்கி, மட்டவிழ்திண் புயக்குரிசின் முகம்மதுதம் முனம்மிடப்பூ
மகிழ்ந்து நோக்கிக், கட்டியபொன் மதிட்கருபா நகரிடைவெங் குபிரார்
மனங் கருகி வாட, விட்டமுடன் சதக்காவென் றிரப் போர்க்கும் வறி
ஞோர்க்கு மீந்திட் டாரால். (34)

அன்பரா முகம்மதுவுக் கரியநபிப் பெயர்வாஞேர்க் காசரீந்த,
வொன்பதாம் வருடம்வரை யளவுமுயர் கருபாவி னெருங்கு தூக்கி,
வன்பரா கியகுறைஷிக் காபிரிடு மொப்புமுறி வசனமியாவு, மின்
புறா நின்றுசித லரித்ததெனப் பெரியதந்தைக் கியம்பி ஞரால். (35)

அரசாட லரியகு மதுரைத்தமொழி யபித்தாலி பகத்தி ஞோர்
ந்து, கரிசமிடுங் குலக்காபிர்க் குரைப்பவதி லவர்மனக் கறுப்பு நீக்கி,
விரைவினெடு மொப்புமுறி தனைக்கிழிப்ப வரும்போது வெருண்டு
கூறி, யெரியிடைநெய் யிட்டதெனச் சிலகாபிர் தடுப்பமன மியைந்தி
லாரே. (36)

சாதிவிலக் கொப்புமுறி பரிகரிக்கும் வார்த்தைசெ ரி தடவக் கே
ட்டுக், காதியெழுந் தபூஜகல்கண் செவநதுமனங கறுத்துமுகங்கடுத்து
நோக்கி, மோதுதலுங மேளாது கருபாவிற் றாக்கிவைத்த முறியை
வாங்கிப், பேதமறப் பார்ப்பளவின முன்னெழுது மெழுத்திலொன்
றும் பெற்றி ராதே. (37)

அல்லலறச் சிறந்தவரி யல்லாவென் றொருபெயரி னளவேயனறி,
யில்லையெழுத் தினியிதனை விருந்துபல னெனனெனவு மெழுதுநாளிற்,
பல்லருட னியான்பொருதத மிலெயனவு மெடுத்தோதிப பலருங
காண, வொல்லையினிற கிழிதெதறிநதான சாதிவிலக கெனும்பெயர்
விட்டோடிற் றனமே. (38)

இன்னிசைநன் மறைமுகம்ம திருங்கலிமாத் தனை விளக்கி யிருந்
தோர்க ளெல்லா, மன்னமருந திடநீருப பங்கியனி யாதவரோ டடுத்தி
டாமற், சொனனபடி சாதிவிலக் கொப்புமுறி யெழுதினமன் சூறு
வெனபோன, றனனிருகை வழங்காமன மாறுத பிணிபிடித்துத் தாழ்ந்
திட் டாஞல். (39)

ஒப்பெழுதித் தீர்ந்த படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-14-க்குத்-திருவிருத்தம்-939.



# புத்துபேசிய படலம்



நிலத்தரசுக் இதத்தநடுச் சிரத்தினணி யெனச்சிறப்பு நிறைமக்கா விற், குலத்தரச ரினிதுவப்பக் கலிமாவெண் டிசைமுழுதுங் குலவி யோங்கச் சிலைத்தடக்கை வயவேந்த ரினிதுசூழ்ந் திருக்கு நபி செவ்வி, நோக்கி, மலைத்தடத்தின் புயகுசைனு வெனுமறபி மகிழ்வினொடும் வந் தாற் றுனே. (1)

எதிரடுத்த குசையினுக்கன் பருளினொடுங் கரஞ்சாய்த் திட்டிருக் கை யிருந்து, மதியினுமும் மறையினுநேர்ந் தவரவர்கள் கருத்தறிய வல்லோய் நாளுங், கதிதருமென் புறக்கானின் வழியொழுகா திருந்த தென்னுன் கருத்தி னூடும், பதிவுபெறக் கலிமாவை யுரையெனநந் நபி யினிது பகர்ந்திட் டாரால். (2)

மானுரைத்த துடும்புரைத்த தமாவாசை யிடத்தினிறை மதிவந் தோடித், தானுரைத்த தறியேனே வுமதுவழி படுமவர்க டமைக்காணே னே, யானுரைப்ப திலைக்கலிமா விதயம்பொருந் தாப்பு கழ்நாவேற் றுவனே, தீனுரைத்த ஹபீபரசன் றடியினையோர் வடிவாக்குஞ் செவ்வி யோயே. (3)

அனைத்தையுங்கா ரணமலவென் றகத்திருத்தி வெறுத்தனையுள் ளருளினோடு, மனைத்தலத்தோ ருருத்தனைநீ வுணங்கினையவ்வுருத்தி ருந்தமணிவாய் விண்டு, கனைத்ததிரைக் கடனிலத்திற் பலர்புகழ வுரைக் குரைகட் டுரைக்கு மேலியா, னினைத்தபடி கலிமாவை யுரைப்பையோ வெனநபியு நிகழ்த்தி னாரால். (4)

நந்நபியிந் நெறியுரைப்ப குசையினெனு மறபிசிறு நகையினோடு, மென்னிடத்தி லாறுபத்தைந் தாண்டுவரை யிருந்துமன மினிதுகூறச், சொன்னதிலை யோர்மொழிமந் திரத்தடங்கித் தெய்வமுறை சொல்லு மோநீ, ருன்னிடவா சகத்தினொடு முரைக்குமென வுரைப்பதென்கொ லுறகித் தன்றே. (5)

பொன்னணிநன் மணிதூசு நறுமலர்கள் பலசொரிந்து புகழ்ந் திட் டேத்து, மென்றெடுமை யாதகுல தெய்வமும துரைக்கு

லைநேர்ந் தியம்பு மேயாற், பன்னுமறை வழியொழுகிப் படிதீண்டா
மலரடியைப் பரவி வாழ்த்தி, மன்னுமிசு லாமாகிக் குபிரகற்றித் தீனி
லைமை வளர்ப்ப னென்றான். (6)

திசைமுழுது மொருபுடையிற் கிடத்துங்கரு முகிற்கவிகைச்
செம்ம னேர்ந்த, குசையினைநின் மனத்தலத்தி லிருந்தவுரு வெடுத்தி
வணிற் கொடுவா வென்ன, விசைதரும்வண் டிமிர்தொடையல் புரண்ட
லைசய வேழுந்துமனை யிடத்தி னேகி, வரையறுநன் மணிக்கலன்க ளொ
டுபலதூ சணிந்துமலர் வனைந்திட் டானால். (7)

விரைத்தழைகள் சுமத்திநறும் புகைகமழ்த்தி விளங்குசெழுங்
கரத்திலேந்தி, யுரத்தினணைத்தொருதுகில்கொண் டுறப்போற்றிநடந்து
மறுகூடுலாவி, வரைத்தடத்திண் புயத்துநறை கமழ்ந்தமுகம் மதுதண்
மதி வதன நேரா, யிருத்தியொரு பாலிருந்தான் மும்மறையுந் தெரிந்
துமனத் திருத்தி னோனே. (8)

வைத்தபுத்தை முகநோக்கி யுனைவணங்கி யிருந்தோன்றன் மனது
கூர. வித்தலத்துள் ளோரறிய வெனதுவர வாறுமெனக்கி யைந்த
பேரு, மெய்த்தவுரை மறைப்பேரும் விண்ணினுமண் ணினுமறிய
விளம்பு வாயென், றுத்தமசற் குணநபிநா ரமுதமலர் வாய் திறந்தங்
கோதி னால். (9)

வெண்ணிலவு துளித்தொழுகு மதிவதன முகம்மதினை விளித்து
நோக்கி, வண்ணமலர் வாய்திறந்து பெரியோன்றன் றிருத்தூதாய் வந்த
கோவே. பண்ணருநன் மறைநபியே வானவர்பொன்னடிபரவப் படியின்
வந்தோ, யெண்ணமுறுபே ரொளியுமும தொளியில்லாக் கதிர்வடிவா
யிருந்த வேந்தே. (10)

அல்லாவின் றிருத்தூதர் வேதநபி முகம்மதென வகத்திற் கொள்
ளார், பொல்லாத நரகடைவ ருமதடியிற் பணிந்துகலி மாவைப் போற்
றிச், சொல்லார மனத்திருத்த வறிந்தவரே சிறந்த பொருட் சுவன
மாள்வா, ரெல்லாரு மெனைப்போல்வா ரறிவரிது சரதமென வியம்பிற்
றன்றே. (11)

புத்துரைத்த மொழிகேட்டு குசைனெனுமவ் வறபியுடற் புளகத்
தோடு, முத்தமணி யொளிமுகம்ம தடிபரவிக் கலிமாவை முழங்க வோ

திப், பத்திபெறத் தொழுகைமுதற் படித்துத்தீ னெனு மொழுங்கின் பாவி ேனாடு, மெத்தலமும் புகழ்ந்தேத்த வீமான் கொண் டிசுலாத்தி னிணங்கி னாரே. (12)

புத்துபேசிய படலம் முற்றிற்று.
ஆகப்படலம் 15-க்குத் திருவிருத்தம் 951.



# பிராட்டியார் பொன்னுலகுபுக்க படலம்.



தனுவின் மான்மத முலவிய முகம்மது தழைப்பப்
புனித மாமறை மதிகலி மாக்கதிர் பொழிய
வினிதில் தீன்றிசை விளங்கிட விருக்குமந் நாளி
லனில மொத்தபித் தாலிபுக் கடைந்ததா யாசம். (1)

வருத்த நாட்குநாண் முற்றிமெய் மெலிவொடு மயங்கி
யிருத்தல் கண்டுநந் நபிமன மிடைந்தரு கிருந்தார்
திருத்தி லாஅபூ ஜகுலொடு நகரவர் திரண்டு
குருத்த வெண்கதிர்ச் சுதைமனை யிடனறத் துவிந்தார். (2)

பெருக வந்திருந் தவர்களை விழித்துரை பிறழா
தொருவ ருக்கொரு பகையிலை யெனும்படி யொழுகி
யிருமெ னத்தலத் தவர்க்கினந் தவர்க்கெடுத் திசைத்தார்
தெருளுஞ் சீரபித் தாலிபென் றுரைத்திடுஞ் செம்மல். (3)

கடந்த மும்மதக் கரிதொடு குழியினைக் கடவா
தடைந்த வாறெனக் கிடந்திடும் பெரியதந் தையரைப்
படர்ந்த நன்கலி மாச்சொலுஞ் சொலுமெனப் பகர்ந்தார்
தொடர்ந்து வானவர் பரவிட வருமிற சூலே. (4)

காதி னுட்புகுந் தனவிலை யெனப்பினுங் கருதி
யோது நன்கலி மாவென முகம்மது முரைக்கும்
போதி னிற்றனி யழன்றபூ ஜகுலுடல் புழுங்கி
மோதி வந்தபுத் தாலிபுக் குரிமையின் மொழிவான். (5)

தந்தை தாய்தம ரொருகிய மொழிவழி தவிர்ந்திட்
டிந்த நாளினின் முகம்மதி னுரையினுக் கியைந்தீர்
பிந்துநாளையின் முன்னுரை மறைநெறி பிசகா
தந்த வாய்மையை மனத்தினி மறவலென் றறைந்தான். (6)

உரப்பி யாங்கரித் தபூஜகு லுரைத்திடு முறையிற்
பரப்பு நன்கதிர் முகம்மது பகர்ந்தது தெரியா
திரைப்பெ ருங்கட லெனவினஞ் சூழ்தர விறந்தார்
மரைப்பதத்தபித் தாலிபென் றழகுறும் வள்ளல். (7)

வட்டவாரிதிப் புவியிடை முகம்மது தமக்குப்
பட்ட மென்பவந் திறங்கிய வரும்ப டத்ததின்மே
லெட்டு மாதமும் பதினொரு நாளுஞ்சென் றிதற்பின்
சட்ட கந்தனை விட்டுயிர் பிரிந்தவண் சார்ந்தார். (8)

மறந்த யங்குவேற் காஅபித் தாலிபு மன்ன
ரிறந்த காலையிற் கடலுடைந் தெனநக ரிரங்கச்
சிறந்த மாதர்மை விழிமறை பொழிதரச் செருமி
யறங்கி டந்தநெஞ் சவரொடு மழுதிரங் கினரால். (9)

வரிசை நந்நபி முகம்மது வயிறலைத் திரங்கப்
பரிசனத்தவ ரடங்கலும் பதைபதைத் தேங்க
வாசரியாவரும் வந்தடுத் தெடுத்துநீ ராட்டிச்
சரசி னோர்வழி யடக்கினர் முடித்தனர் சடங்கு. (10)

பெரிய தந்தைய ரிறந்திடும் பருவரல் பெருகி
யரிய நாயகன் றாதுவ ரகத்தினி லொழுங்கி
வரிகொள் வண்டிமிர் செம்மலர் மரைமுகம் வாடி
யுரைதெ ரிந்திலர் போலிடைந் தகத்துறைந் திருந்தார். (11)

அகத்தி னிற்பெருந் துன்பொடு மிருக்குமுன் றுநாள்
வகுத்த நாயகன் விதிவழி குவைலிது மகளா
ரகத்தி னிற்புகழ் நிறுத்திவிண் ணகம்புக ழிலங்கத்
தகுத்தொ டும்பெரும் புதுமையிற் றிருவடி சாய்ந்தார். (12)

முடிவி லாதவன் றூதுவர் முகம்மது நபிக்கு
வடிவ மைந்தமெய்த் துணைவியாய் மகிதலத் திருந்து
கடிகொள் பொன்னக ரத்தினிற்கதிர்கொண்மா ளிகையிற்
குடிபு குந்தனர் கத்தீஜா வெனுங்குலக் கொடியே. (13)

நனைத தும்பிய மலர்ப்புய முகம்மது நபிக்கு
மனைவி யாகிய கதீஜா வெனுங்குல மயிலைப்
புனையும் பூந்துகிற் பொதிந்துநற் புகழொடு மேந்தி
வனையு மென்மணம் போலினி தடக்கினர் மகிழ்ந்தே. (14)

பேதை யர்க்கர சினையருட் பெரியவன் றாதர்க்
காத ரம்பெரு மயிலினை யெடுத்தினி தடக்கிக்
காத லுற்றயர் தீனிலை யவர்கலந் திருந்து
கோத றச்செயுஞ் சடங்குகள் குறைவற முடித்தார். (15)

இலக்கமுற்றிடும் பெரியதந் தையரிறந் திருந்த
வலக்கண் மேற்கொள வருந்திய காலையி லணியாய்
நிலைக்கும் பேரொளின் மனைவியு மிறந்திட நிலையாய்க்
கலக்க முற்றது மறைமுகம் மதுநபி கருத்தில். (16)

பிராட்டியார் பொன்னுலகுபுக்கபடலம் முற்றிற்று.
ஆக படலம் 16-க்குத் திருவிருத்தம் 997.

---



## பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம்.

ஆரணப்பொரு ளகுமது மவதியுற் றதனாற்
கார ணப்பல னறிந்தும்வஞ் சனையெனுங் காபிர்
பார னைத்தெறிந் திருகவுண் மதசலம் பரப்பும்
வார ணத்தினு மும்மடங் கெனும்படி வலித்தார். (1)

மிகைத்த வீறரி முழைகுந் தெனவிற னயினு
ரகத்திற் றன்தனி லடங்கின ரெனவறி கிலராய்ப்
பகைத்த புன்மனக் கொடியவர் பெரும்பகை தொடுத்தா
ரிகத்தி னும்மறு புரத்தினி மிவையிலை யெனவே. (2)

குறைஷி யங்குலக் காபிர்கள் விளைத்திடுங் கொடுமை
யறவு மேல்வளர்ந் தனகுறைந் திலஅபித் தாலி
பிறைவன் முன்விதி யமைத்திடும் படியில வணிறந்து
நிறையுந்திங்களு மூன்றெனத் தினநிகழ்ந் தனவே. (3)

காய முள்ளுறை யுயிரொடு மிருவருங் கம்புக்
காய தும்மினத் தவர்பகை யையுமனத் தடக்கித்
தூய நாயகன் தீனிலை பெருக்கிடுந் துணிவாற்
றாயி பென்னுமத் தலத்தினுக் கெழுந்தரு ளினரே. (4)

கவிகொள் வெண்சுதை மாமதிள் தாயிபி லிடுறு
அபுது யாலிலென் றிடும்பெயர்க் குறைஷியென் பவனை
நபிக ணாயகங் கண்டன ரவனெதிர் நடந்து
குவிகை கொண்டுபின் னிவரொடு மனைகுறு கினனே. (5)

மனையி னிற்கொடு போய்முகம் மதுதமை யிருத்தி
யினிய வாசகத் தன்பொடும் புகழ்ந்தெடுத் தேத்தி
வனச மென்மலர் செழும்பதத் திணைவருந் திடவே
தனிய னென்வயின் சார்ந்தவை சாற்றுக வென்றான். (6)

கண்ட போதினி லுவகையினி லிருகரங் குவித்துக்
கொண்டு நின்றுநன் மொழிபகர்ந் தனனெனக் குறித்து
வண்டு வாழ்மலர்ப் புயமுகம் மதுநபி மணிவாய்
விண்டு தேன்சொரிந் தெனச்சில மொழிவிளம் புவரால். (7)

ஆதி தன்னருள் வானவர்க் கரசனை யடுத்து
நீதி நன்னபி யெனும்பெய ரளித்துநீ ணிலத்தில்
வேத மும்மெனக் கருளிதீ னிலைவிரித் திடுமென்
றோதி விண்ணகத் துறைந்தனர் செழுங்கதி ருலவ. (8)

அந்த நாட்டொடுத் திற்றைநாள் வரையுநல் லறிவர்
புந்தி கூர்தரச் செழுங்கலி மாத்தனைப் புகட்டி
வந்து சூழ்தரு பவக்களை தவிர்த்துமண் ணிலத்தி
லுய்ந்து நற்கதி பெறுவதற் குறுதிசெய் தனனால். (9)

உன்னு நன்மறை முதற்கலி மாவெடுத் துரைத்துன்
றன்னை நல்வழி யவனெனுந் தகைமையிற் படுத்தி
மன்னுந் தீனிலை விரித்தறம் வளர்த்திட வேண்டிற்
றென்னு ளமதி னடைந்தனென் றுரைத்தன ரிறசூல். (10)

கதிர்தி ரண்டுரு வெடுத்தவ ருரைத்தகட் டுரைகேட்
டதிவி தத்தொடு நன்கெனச் சிரங்கர மசைத்துப்
புதிய மாமறைக் கையமி லெனப்புகழ் படுத்தி
மதியின் மேறுவைத் திசைந்திடுஞ் சிலமொழி வகுப்பான். (11)

எடுத்து ரைத்தவை யென்னினத் தவர்க்கெடுத் தியம்பி
யடுத்தி ரண்டொரு தினத்தினும் மிடத்தினி லணுகி
வடித்த வாய்மையி னெழுகுவன் மறைதெரி மதியோய்
படித்த லம்புகழ் நகரினிற் செலுமெனப் பகர்ந்தான். (12)

இனைய வாசக முரைத்தவ னிருப்பகம் மிறகூல்
வினைய முற்றதில் விடத்தெனத் தாயுபை விடுத்து
நினைவு நேரொடு தொழுதெழுந் திருந்துநன் னெறிக்கே
நனைகொண் மென்மலர் கானகத் தருத்தா நடந்தார். (13)

ஆல முமவெளி றிடக்கெடுங் கொடுமனத் தப்து
யாவி லென்பவன் சிறியவர்க் கினியவை யுரைத்து
மேலும் பேதைநெஞ் சவருட னிவரையும் விரவிக்
கோலும் வன்கதம் வரச்சில மொழிகொளுத் தினனால். (14)

வெறியும் பித்துமுற் றவனிவண் பெருவழி விடுத்தோர்
நெறியி டைத்தனி சென்றன னவன்றனை நேடி
மறியுங் காறலை தகர்ந்திட வலியகல் லெடுத்திட்
டெறியு மேகுமென் றுரைத்தன னாகிடை யெரிவான். (41)

வஞ்ச கக்கொடி யவனுரைத் திடுமொழி வழியே
பஞ்ச பாதகர் நடந்தரும் பாதையைக் குறுகிக்
கஞ்ச மென்பத முகம்மதைக் கடிதினில் வளைந்திட்
டஞ்ச லாதுகற் குணிலெடுத் தெறிந்துபின் றடர்ந்தார். (16)

கல்வி ஞானாஞ் சிரங்காங் கான்முகங் காணு
லெல்ல வன்கதிர் பொழிந்தெனப் பலதொடுத் தெறிந்து
பல்வி னைவித முதுக்கியு முறுக்கியும் படர்ந்தார்
சொல்லொ ணுப்பெரும் பாதகம் விளைத்திடுஞ் சூமர் (17)

இருமை யும்பத மிழந்தவர் செலச்சினந் தெறிந்து
கருணு தாவிபு மட்டினுந் தொடர்ந்தவர் கலைந்தார்
தருகை வள்ளனந் நபிமுகம் மதின்முழந் தாளி
லொருகல் லேறுபட் டூறுபட் டுதிர்ந்தன வுதிரம். (18)

ஊறு பட்டதின் வருத்தமும் பசியினுள் ளுலைவு
மாறு பட்டவர் தொடர்ந்ததி னடந்த மெய்ம் மலைவும்
பேறு பட்டமுந் தந்தவ னருளெனப் பெரிதின்
றேறு பட்டவ ணிருந்தனர் திருநபி யிறசூல். (19)

இருந்து மெய்வருத் தந்தவிர்த் தந்தரத் திடத்திற்
றிருந்த நோக்கினர் மங்குலின்ஜிபு ரீலைப்
பொருந்தக் கண்டுகண் களித்தனர் புதியவள் ளூதர்
விரிந்த வெள்ளிடை கடந்தணித் துறவிளங் கினரால். (20)

வந்த டுத்திறை யவன்சலா முரைத்துமெய் வருந்த
லிந்த மாநிலத் திற்றைநும் மினத்தவ ரிடரா
லந்த நாயக னமாரில் வரைக்கர சவரை
யுந்த மேவலுக் கோவின னெனவெடுத் துரைத்தார். (21)

இறும்பி னுக்கர சாகிய மலக்கும் திடத்தி
னுறும்ப கைத்திர ளொத்தனை யாகினு மொடுக்கிக்
குறும்பி னைத்தவிர்த் திடவரு குவமெனக் கூறிப்
புறம்ப ரந்தசெங் கட்கடை யருளொடும் போனார். (22)

உருப்பெ ரிந்தநல் வடிவவ ருரைத்தொரு நொடிக்குட்
பருப்ப தங்களுக் கிறைசெழுந் தடஞ்சிறை பரப்பித்
திருப்பு ரீலைக் கடல்வரை புவிதிடுக் கிடவே
விருப்ப முற்றுநந் நபியிடத் தடுத்தனர் விரைவின். (23)

வெற்ப டங்களுங் கரங்களிற் புரைந்துவிட் டெறிந்து
பற்பு தக்கட லிறைத்தொரு கடலினிற் புகட்டிப்
பற்ப மாக்கும்வெங் கனலையும் புகைபறப் படுத்தி
நிற்ப வீரமும் வலிமையும் படைத்தனன் னெறியார். (24)

உதய மாகிரிக் கொருதரந் தடவுவ ரொருகை
புதைய மேற்கிரி தடவுவர் விண்ணை.மண் புரளச்
சிதறித் தீவக மேழையுங் கடலிடை சிதைப்பார்
விதிய வன்றிவித் திடுமவை யெவையெனும் விரதர். (25)

ஒருநொ டிக்குளந் தாமடங் கலுந்திரிந் துலவி
யொருநொ டிக்குளிவ் வானகங் கவிந்தமட் டுலவி
யிரும னத்தொடும் வரவரம் படைத்தவ ரொழிலா
ரிருசெ விக்கொடுத் தேவலின் படிக்கிசைந் திருப்பார். (26)

சித்தி ரத்தடப் புயவரை முகம்மது திருமு
னுத்த மத்தொடு மொடுங்கிநின் றெருசலா முரைத்து
முத்த வென்கதி ரவரிரு மெனுமொழி கேட்டுப்
பத்தி யாயரு கிருந்தொரு மொழிபகர்ந் திடுவார். (27)

எத்த லத்துயி ரினுக்குகல் லுணவளித் திரங்கு
மத்த னென்னுறும் மேவலுக் கருளின னதனு
லித்த லத்தில்வந் தடைந்தன னினியருட் கடைக்கண்
வைத்தி ரேற்பணி விடைதரு கிலன்மறை மதியோய். (28)

அருந்து மாரமு தக்கலி மாவுரைக் கடங்கா
திருந்த வூரெவை பகைத்தவ ரியாவர்நும் மிதயம்
பொருந்தி டாத்திசை யெத்திசை பொருவராக் கதிர்மெய்
வருந்தல் செய்தவ ரெவர்தெரி தரவழங் கிடுமே. (29)

செப்பி னீரெனிற் செறுநர்க டிரளுமத் திசையு
முப்பு வாரியு ளமிழ்த்துவ னலதொரு வரையா
லிப்பெ ரும்புவிக் குளளரைத் திடுகுவ னெளியேன்
றப்ப றிநதிட வேண்டுமென றிரவொடுஞ் சொன்னூர். (30)

விண்டி னுக்கா சிலைபகர்ந் திடத்துளி விதிர்க்குங்
கொண்ட லங்கவி கைக்கிறை யகங்களி கூர்ந்து
மண்ட லத்தும துரைவழி நடத்திடின் மறைநேர்
கண்டு தேறுவ ரெவர்பொறை நிலத்தினிற் கடனே. (31)

இறைய வன்னருட் படிக்கிட ரடைந்தெதன் னிடத்திற்
குறையி தென்றுமா நிதத்தவர் தமைக்குறை படுத்தன்
மறையி னேரல வெகுளியை மனத்தினி லடக்கி
நிறையி னிற்பது பெரியவர்க் குரியநன் னிலையே (32)

மிக்க வன்குயிர்க் கொலைத்தொழின மனத்தினை விடுத்திட்
டிக்க ணத்தினல் வழிபடா ரெனிலிவர் பயந்த
மக்க ளாயினு நலவழிக் கொழுகுவர் மறையுந்
திக்க டங்களும் பரநதுதீ னெறிமுறை செயுமே. (33)

வான நாயக னேவலுக் குரியவ மகிழ்வினி
யானி னைத்திடும் பொழுதினில் வருகவிற் றையினுந்
தான மீதினிற் செலகவென றிசைத்தனர் தளரா
தான செய்கையீ தெனவெழுந தனர்மலைக் காசர். (34)

உள்ள மீதிலன் பொடுநபிக் குயர்சலா முரைத்து
வெள்ளி டைபபடர்ந தவணடைந் தனர்மலா விரிந்து
களள லம்பிய பொழில்செறி கற்னுத வூலிப்
வள்ள லாரிருந் தனாபுவி யிடையெழு மதிபோல். (35)

பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம்-முற்றிற்று.

ஆகபடலம் 17-க்குத் திருவிருத்தம் 1002.

---



# அத்தா சீமான்கொண்ட படலம்.



மறைகலை புகழ்ந்த செவ்வி முகம்மது தனித்துத் தாக
நிறையொடும் பசியுந் துன்னி நீணெறி யிருப்ப வவ்வூ
ரிறபீஆ புதல்வர் தம்மி லிருவர்க ளினிது நோக்கிக்
குறைவிலா மனத்தி னோர்ந்து மனையிடங் குறுகி னாரால். (1)

அன்னவர் தொழும்ப னத்தா சென்பவ னவனைக் கூவிக்
கன்னலஞ் சுவையின் மிக்காந் திருகையின் கனியை யேந்தி
யின்னணங் கொடுபோ யாண்டி னிருப்பவர் கரத்தி னீந்து
பன்னரும் பசியை மாற்றி வாவெனப் பரிவிற் சொன்னார். (2)

காசறுந் தட்டத் திட்ட பழத்தினைக் காத்தி லேந்தித்
தூசினிற் பொதிந்து தோளிற் சுமந்தரு நெறியை முன்னிப்
பாசடைத் தருக்க ளியாவும் பலமலர் சொரிய வாய்ந்த
வாசமு டலவுஞ் செவ்வி முகம்மது திருமுன் வைத்தான். (3)

கனியினைக் கொணர்ந்து வைத்தோன் செம்முகங் கவின நோக்கி
யினிதினி லிருக்கை யீநதிட் டெழிற் செழுங் கமலக் கையாற்
பனிமலாத் துகிலை நீத்துப்பழத்தினைத் தீண்டி யின்ப
மனையநல் பிசுமி லோதி யமுதென நுகர்தல் செய்தார். (4)

பண்ணினு மினிய தேன்சார் பழத்தினிற் பசியைப் போக்கி
யுண்ணிறை யுவகை கூர்ந்தெவ் வூரவ னின்பே ரேதென்
றண்ணலு முரைப்பச் செவ்வி யகமகிழ்ந் தத்தா சென்போன்
புண்ணியப்பொருளேயென்னப்போற்றிவாய்புதைத்துச்சொல்வான். ()

நள்ளென வுலகி னூழின் வருநசு றுனி மார்க்கத்
துள்ளவ னீன வாவென் றேருதய வூரி னுள்ளேன
தெள்ளிய னிறபீ ஆதன் றிருமனைக் கிணங்கன் சேர்ந்த
வளளிலை வேலை யத்தா செனபவ னடியே னென்றான். (6)

விரிந்தமுன் மறைக டேர்ந்து மெய்ந்நெறி முறைமை நாளும
பிரிந்திடா துறையூ னாசு நபியெனும் பெயரின் வள்ள
லிருந்தவூ ரவனோ வென்று ரிணிதின் முன் னவன்ற யின்னோர்
தெரிந்தவா றெவ்வா றென்னச் சிந்தையுட் சிந்தித் தானே. (7)

பொன்னுல கமரர் போற்றப் பூவிடை யிருந்த யூனு
சென்னுநன் னபியை நீவி ரெவ்வண மறிவி ரென்ன

நன்னிலை யொடுமத் தாசு நவின்றனன் வணங்கி லாத
மன்னவர்க் குருமே றென்ன வருமுகம் மதுபின் சொல்வார். (8)

படியிடத் தினில்யூ னூசு நபியெனும் பட்டம் பெற்றோர்
நெடியவன் றாத ரியோனு நபியெனு நிலைமை பெற்றேன்
வடிவுளோ யதனு லெற்கு மன்னுயிர்த் துணைவ ராகு
மடனபி மாரு மென்று ராரணங் கிடந்த வாயார். (9)

நபிகளுக் கரசாய் வந்த நாயக முரைத்த மாற்றஞ்
செவியினிற் புகுத வுண்மைத் திருநபி யிவரே யென்னத்
தவிர்கிலா துள்ளத் துன்னிச் சரணிணை யிறைஞ்சி யேத்திக்
கவினுறுங் கலிமா வோதிக் கண்ணிணை களிப்பநின்றான். (10)

மக்கநன் னகரில்வாழு முகம்மதுக் கத்தா சென்போ
னிக்கணத் தீமான் கொண்டா னெனுமொழி யிறபீ ஆதன்
மக்கள்கேட் டறவு நக்கி மாயவஞ் சகத்துட் புக்கிச்
சிக்கினன் றொழும்ப னியாமென் செய்குவோ மென்ன நைந்தார். (11)

மதிபகிர் நபிக்கன் பாக மந்திரக் கலிமாவோதி
யிதயமொத் தினிதீ மான்கொண் டிருமனக் குபிரை நீத்துப்
பதமலர் துதித்துத் தேடாப் பலன்கதி படைத்தே னென்னப்
புதியநல் வடிவ னாகிப் பொருநிலத் தாசு போனான். (12)

அத்தா சீமான்கொண்ட படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 18-க்குத் திருவிருத்தம் 1014.



## ஜின்க ளீமான்கொண்ட படலம்.

—:§:—

படர்ந்துவண் டின்தே னுண்டு செவ்வழி பாடுங் கஞ்சத்
தடந்திகழ் கற்று நஜீ பென்னுமத் தலத்தை நீந்திக்
கடந்தனிற் குபிரோன் றேறுங் களிறட ரரியே றென்ன
நடந்தனன் னகுலா வென்னுந் தலத்தினை நண்ணி னால். (1)

பொங்கிநின் றமா ரியாரும் பொன்னடி பணி யேத்த
மங்குலங் கவிகை வள்ளன் முகம்மது நகுலாத் தன்னிற்
றங்கினர் பறவை தத்தங் குடம்பையிற் சார வாவிப்
பங்கயங் குவியச் செங்கே ழலரிமேற் பறவை சார்ந்த. (2)

அலரிமேற் கடலுட் புக்க வடரிரு படலஞ் சிப்ப
நிலவுகொப் பளித்த தென்ன நீண்டமெய்ச் சோதி கால
நலனுறு நகுலா வென்ன நாட்டிய தலத்தி னோர்பாற்
சலதரக் கவிகை யோங்கத் தனித்தவ ணிருந்தா ரிப்பால். (3)

அலைகடற் றிரைக்கு நாப்ப ணொளியா சனத்தில் வைகி
யுலகெலாங் கொடுங்கோ லோச்சி யொருகுடை நிழலிற் றங்கிப்
பலகலை மருவலார்க்குப் படிறெனும் படைந டாத்துந், தலைமை
யன்சிறுமை கீழ்மை தனைப்பெரு மையதாய்க் கொண்டோன். (4)

கொலையினுக் குரிய தந்தை கோளுயிர்த் துணைவன் மாறு
நிலைகெடுங் காவுக் கன்ப னிந்தனைக்குற்ற தம்பி
யிலைபிழி மதுவுக் கீன்ற சேயினு மனிய னீண்ட
வுலகினின் மாயமெல்லா மோருரு வெடுத்து நின்றோன். (5)

எண்ணிறந் தனைய காலமிருந் திறை யேவன் மாறி
விண்ணில மிழந்து மெய்ம்மை விதிமறை தனக்கு நாணி
மண்ணிலத் திருந்து வாழுமானுட ரெவர்க்கும் வெய்ய
தண்ணிய னிபுலீ சென்னுந் தனிப்பெரு நாமத் தானே. (6)

மக்கடங் குழுவின் வைகி மந்திரத் தலைவர் சூழ
மிக்கஜின் சிலதைக்கூவி விறன் முகம்மதுவை நீவி
ரிக்கணத் திறனைப் போதி லெவ்விடத் துறைந்தா ரென்றென்
பக்கலி லுரைப்ப நோக்கி வம்மெனப் பரிவிற் சொன்னான். (7)

அருந்தவந் தவறி நின்ற வாசனீ துரைப்பக் கேட்டுப்
பெருந்தொகைக் குழுவி னோடும் பெரிதெழுந் தாழிசூழ
விருந்தவை யகத்தி காந்த மெட்டினுந் தேடிச் சென்று
பிரிந்ததி லொன்பான் ஜின்கள் போற படைந்த வன்றே. (8)

அற்றையிற் பொழுதி ராவில் ரகசியத் தொழுகை யன்பாய்
முற்றுற முடித்து வள்ளன் முதலவன் றன்னை யேத்திக்
குற்றமற் றிரந்து நின்ற வசனத்தின் குறிப்புக் காதி
லுற்றடுத் தொருங்கு நோக்கி யோரிடத் துறைந்த வன்றே. (9

தரிப்பொடுந் துவாவை யோதித் தனிநகு லாவி னோர்பால்
விருப்பொடு மிரப்பக் கேட்டு மிகமகிழ்ந் திதய நோக்கி
யிருப்பது நபியே வாய்கொண் டிசைப்பது புறுக்கா னென்னத்
திருப்புதற் கரிதாய் நின்று ஜின்கண் மெய் சிலிர்த்த வன்றே. (10)

இத்தினத் தினிலன் பாக வெழினபி கமலபாத
முத்திபெற் றீமான் கொண்டு முதற்பவந் துடைப்போமென்ன
வொத்தித மித்துத் தம்மி லொன்றுக்கொன் றுறுதிகூறிப்
பத்தியுள் ளிருத்தி நாட்டத் துடன் வெளிப்பட்ட வன்றே. (11)

பனியொடு திமிர மூடப் படவரு மிரவின் கண்ணே
தனியிருந் தெழின்மெய்ச் சோதி தயங்கிய நபிமுன்பாக
வினியவர் போலச் சென்று வந்தவா றெடுத்துக் கூறிக்
கனியென நெகிழ்ந்து நெஞ்சிற் கருத்தையுங் கூறலுற்ற. (12)

பின்னணித் தாதிதூதர் பிறப்பரொன் றுதிநூல்கள்
பன்னிய துளதின் றெங்கட் பார்வைகள் குளிரக் கண்டே
முன்னைநாட் பவங்க டீர்த்தே முகம்மதே யென்னப் போற்றிச்
சொன்னயக் கலிமா வோதிச் சுடர்ப்பதந் தொழுது போன. (13)

நன்கலிமாவை யோதி நறுமனக் களிப்பி னோடுஞ்
ஜின்கடம் மினத்தைச் சேர்ந்து சென்றது மறபு நாட்டின்
மின்கடந் திலங்குஞ் சோதி விரிந்தமெய் முகம்ம தென்னுங்
கொன்கதிர் வேலார்க் கீமான் கொண்டது முரைத்துக் கூறும். (14)

பூதலத் திடத்தின் மக்கா புரத்தினின் முகம்ம தென்போர்க்
காகித னருளாற் றூதென் றருநபிப் பட்டம் வந்து
வேதமு மிறங்கித் தின்பத் தீனெறி விளக்கஞ் செய்தார்
பேதம தன்று காணு திருப்பதும் பிழைய தன்றே. (15)

வஞ்சக னிபுலீசெம்போன் வார்த்தையுள் ளடக்கிப் பேதை
நெஞ்சின ராகித் தீயோ ரெனநிலை நின்றோம் வேறொன்
றஞ்சலித் தறியோம் நல்லோர்க் கவம்விளைத் தோமீ தெல்லாம்
நஞ்சுறை நரகம்புக்கு நெறியலா னலனு முண்டோ. (16)

நபிதிருப் பாதம் நண்ணி நன்னெறி முறைவ ழாதோர்
புவியிடத் தினிது வாழ்ந்து பொன்னுல காள்வ ரென்றார்
கவினுறும் பெரியோர் வேதங் காட்டிய நெறியு மீதே
தவிர்கிலா தெழுக வென்னச் சாற்றின ஜின்க ளன்றே. (17)

கூறிய மொழியைக் கேட்டுக் குழுவுட னிருந்த ஜின்க
டேறிய கருத்து ளொத்துத் தேர்ந்தெழுந் தவிட நீங்கிப்
பேறுடை மக்க மென்னும் பெரும்பதி யடுத்தோர் ஜின்னை
யீறிலான் றூதர்க் கன்பாய்த் தூதுவிட் டிருந்த வன்றே. (18)

நறைகொளுஞ் செவ்வித் திண்டோ ளபிநகு லாவை நீங்கி
யிறைவனே வலினால் வானோ ரெண்ணிலர் சூழச் செல்வங்
குறைவறு மக்க மென்னுங் கொழுநக ரதனின் வந்தார்
மறைபட விருந்து ஜின்கள் வரவிடுந் தூதும் வந்த. (19)

வந்தவா திருந்த செவ்வி மதிமுகம் மதுவைக் கண்டு
கந்தமென் மலர்த்தாள் வீழ்ந்து கைகுவித் தெழுந்துபோற்றிச்
சிந்தையின் மகிழ்ந்தன் மாகச் சின்களால் விடுக்க வந்த
சந்தியா னென்னைச் சாற்றிப் பின்னருஞ் சாற்று மன்றே. (20)

எங்கடங் குலத்தி லுள்ள ரெண்ணிலர் நகர்க்க ணித்தாய்
மங்குலின் கவிகை யோய்நும் மலர்பதங் கண்டு தீனி
னிங்கிதத் தொடுமீ மான்கொண் டேகுதற் கிசைந்து நின்றா
ரங்கெழுந் தருள வேண்டு மென்றினி தறைந்த தன்றே. (21)

ஜின்னிவை யுரைப்பக் கஞ்சச் செழுமுக மலர்ந்து வேதம்
பன்னிய பிசுமி லோதிப் பண்புட னெழுந்து வள்ளல்
பொன்னணி மாட வீதி நகர்புறத் தடுத்துக் கூண்டு
மன்னிய குருவின் வந்தார் மாநிலந் தழைக்க வந்தார். (22)

கருமுகி னிழற்றக் கஞ்சக் கதந்தரை படாது நானம்
பொருவறக் கமழவந்த புண்ணியப் பொருளைக் கண்டு
திருமுகத் தெதிர்ந்து ஜின்க டமரொடு மிறைஞ்சி வாழ்த்திப்
பருவர லகற்றித் தேறச் சிலமொழி பகரு மன்றே. (23)

வானகத் தமரர் செய்ய மலரடி பரவி யேத்த
நானிலத் தரிய வேத நபியெனும் பட்ட நம்பா
லானதற் குரித்தா யெங்க ளகத்தினிற் களங்க மென்னு
மூனமற் றிடவே றுண்மை யுறுதியொன் றறிய வேண்டும். (24)

வன்களங் ககற்றித் தீனின் வழிநிலை குறித்து வந்த
ஜின்களிற் றலைமை யான ஜின்களிவ் வுரையைத் தேற்றப்
பொன்கடந் தொளிருந் திண்டோட் புரவல ரிறசூ லுல்லா
வின்களிப் பொழுக நோக்கி யெடுத்துரை கொடுப்ப தானார். (25)

குவடுறை விலங்கி னாலோ கொழுஞ்சிறைப் பறவை யாலோ
தவழ்தரு முயிரி னாலோ தருக்களி னாலோ வுங்கள்
செவியறிந் திதயங் கூர்ந்து தெரிதர வென்னை யிந்த
லவனியி லுண்மைத் தூதென் றறியவேண் டுவதே தென்றார். (26)

பேதமற் றுரைத்தீர் சோதி பெருகுதீன் விளக்கே யிந்தப்
பாதையிற் றருவந் தெங்கள் பார்வையிற் கணித்தாய் நின்று
தூதுவ ரென்றோர் மாற்றஞ் சொல்லுமேற் கலிமா வோதிக்
கோதற மனத்து ளீமான கொள்வது திண்ண மென்ற. (27)

கடத்தின்மா னுரைப்ப நின்ற காரணக் குரிசி றாரத்
திடத்தினி னின்ற வஞ்சித் தருவினை யெதிர்ந்து நோக்கி
படித்தலத் துறைந்த வேரின் பற்றறா தெழுந்து வெற்பி
னடுத்திவண் வாவென் றின்ப வமுதவாய் திறந்து சொன்னார். (28)

பாசடை குழைத்த வஞ்சித் தருபடி துளைத்துள் ளோடி
வீசிய கவட்டுச் சில்லி வேரிலொன் றறாத வண்ண
மாசற வெழுந்து செவ்வி முகம்மதின் பாத நோக்கிக்
காசினி யிடத்திற் றோயக் கவினபெறப் படிநத தன்றே. (29)

பலனுறுங் கலிமாத் தன்னைப் பணரொனும் பலகை யார
நிலைபெறு மறபி னான் னெடுநிலத் தெழுதிச் சின்கள்
குலனொடு மினிது காணக் கொழுந்தழை குழைய வூர்ந்து
கலைமுகம் மதுதம் முன்கண் களித்திட நின்ற தன்றே. (30)

நின்றமா மரத்தை நோக்கி நெறிபட லெவருங் கேட்ப
வின்றெனை யிவர்கட் கின்னா ரெனவிடுத் தியம்பு கென்ன
மன்றலங் குரிசில் கூற மவரிலை குலுங்க வாடா
வெணறிகொ ளிறையோ னுண்மைத் தூதென விளம்பிற் றன்றே. (31)

சாடினி தெழுநது வந்து தவறிலா துறைத்த மாற்றங்
கூடிய ஜினக ளெல்லாஞ் செவிமனங் குளிரக் கேட்டு
நீடிய வுவகை யெனனு நெடுங்கட னீந்தி நீந்தித்
தேடிய பொருளி தென்னச் சேவடி சிரசிற் கொண்ட. (32)

சீதமென் கவிகை நீழற் றிருநபி யிறசூ லல்லா
பாதபங் கயத்தை முத்திக் கண்மலர் பரிவிற் சாத்திக்
கோதறுங் கலிமா வோதிக் குழுவொடு மீமான் கொண்டு
வேதநன் னிலைமை நீங்கா மெய்நநெறி மேவி நின்ற. (33)

கலைநெறி பகரும் வள்ளல் கானகத் தருவை நோக்கி
யுலைவிலா துனது தானத் துறைகென வுரைப்பத் தீனி
னலனுறு மபுல்கா சிம்தம் நல்லிசை திசைக டோறு
நிலைபெற நின்ற தென்ன நெறிசென்று நின்ற தன்றே. (34)

கணத்தொடும் ஜின்கள் வள்ளல் கமலமென முகத்தை நோக்கி
யிணைத்தநன் னெறியி னின்றே மின்றுதொட் டினிமே லுங்கட்
குணத்தக்க வுணவீ தின்ன தெனவெடுத் துரையு மென்னப்
பணித்துவாய் புதைத்து நின்று பண்புறப் பகர்ந்த வன்றே. (35)

பறவையில் விலங்கி லுள்ள படைப்பினிற் றக்பீ ரி
லிறையவ னிதித்த வண்ணத் திறந்ததென பவையு றுங்கட்
குறைபசிக் குணவென் றனபா யோதினர் கேட்டு மீட்டு
மறுவற வெங்கட் குற்ற வாகனத் துணவே தென்ற. (36)

தேறிய மறையினீ ரிஞ்சொல் தீனிலக் குரிய தூயோ
ரேறுவா கனந்தின் றற்ற தவையுள வவைக ளெல்லா
மாறுபா டனறி நுங்கள் வாகனத் துணவே யென்னக்
கூறினா பிணக்கி யானே பின்னையெனக் கூறுங் கொண்டல். (37)

விரிதரு மமுதச் செவ்வாய் திறந்திவை விளம்பக் கேட்டுத்
திருமுகத் ததிர்ந்த பன்னீ ராயிரஞ் ஜின்க டங்கள்
சிரமடி மலரிற் சேர்த்தித் தீனவர் தமையும் வாழ்த்திப்
பரிவொடு மகிழ்ந்து தத்த திசையினிற் படர்ந்த வன்றே. (38)

பரவையும் விசும்பும் பாரும் படர்ந்திருள் செறிந்து தோன்று
மிரவினிற் றிரண்ட ஜின்க ளினத்தினை யீமான் கொள்வித்
தரியட லேற தென்ன வழகொளி விரிதுக் காட்ட
மருமலாக் கரிய கூந்தன் மயிலுறை மனையில் வந்தார். (39)

நெருங்கிய கங்குற் போதி னிறைந்தவல் லிருள்போ தோதி
யிருங்கதிர் காங்க ளார வெடுத்தெடுத் தெறிந்து சிந்தி
யருங்கண மனைத்து நாணி யகல்விசும் பொளிப்ப நோக்கிக்
கருங்கடன் முகட்டில வெய்ய கதிரவன் றோன்றி னானே. (40)

காசினி யிடத்தி னற்றைக் காலையின் கடந்து டாத்து
நேசமுற் றுவந்து தீன்ஞ் ருடனினி துறைந்து ஜின்கள்
மூசிவந் தீமான் கொண்டு போயது முறை வழாமற்
பேசிநல் லுணவு மீந்த செய்தியும் பிறககச சொல்வார். (41)

மறச்சிலேக் காத்திர் தீனின் மானுடர் வாயின் மிச்சி
லிறைச்சியென் பனைத்துஞ் ஜின்கட் குணவென வீந்தேன்மேலுங்
கறித்தவன் பிறைச்சி மிச்சி லென்பதைக் களங்க மில்லாப்
புறத்தினில் வீச வியார்க்குங் கடனெனப் பொருந்தச் சொன்னார். (42)

பூமணம் பொருந்தக் காட்டும் புதுமைகண் டரிய ஜின்க
டாமதி யாது கூடித் தளத்தொடுந் திரண்டு வந்தீ
மானமனம் பொருந்திற் றென்ற வார்த்தையிற் புளகங் கொண்டு
தேமலர்ப் புயத்தார் போறறத் திருநபி யிருந்தா ரிப்பால். (43)

ஜின்க ளீமானகொண்ட படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 19-க்குத் திருவிருத்தம் 1057.



## காம்மாப் படலம்.



நரையொளி பிறங்க வுடம்பெலாந் திரைந்து நரம்புக டெறிந்திட வறந்து, தெரிதருங் கட்பா வையினொளி மழுங்கித் திரள்படப் பீழை யுஞ் சாடித், தரிபடா நாசித் துளேயினீர ததும்பத் தைத்தறக் கிழிந்த தோர் துணியு, மரையிடை கிடந்து சரிந்தடிக் கடிவிழ்ந் தவிழ்ந்திட வொருகரந் தாங்க. (1)

உடற்குறை கூனுஞ் செவித்துளே யடைப்பு மொருகையிற் றடிக் குளா தாவி, னடக்கையி னடக்குந் தலேக்கிடு கிடுப்பு நனிதர வசைந்து தள்ளாடி, மடிக்கடி யிளேப்பிற் குலுக்கிய கனைப்பு மறத்தவித் தெழுந் தகோலமுமா, யிடிக்கணுற் றொருவன் முகம்மது நபியை ரிருந்திடு மவையகத் தெதிர்ந்தான். (2)

உள்ளுறக் கிடந்த பல்லறப் பெயர்ந்த வுதட்டினில் வாயினீ ரொழுக, விள்ளுதற் கரிதா யொருசலாங் குழறி விளம்பினின் றனன்முக நோக்கி, வள்ளலும் பிரத்தி யுரைத்திவன் ரூமன் வங்கிஷத் துளனொரு வேடத், தெள்ளருங் குணத்தா லடைந்தன னிவன்கூறீதென மனத் திருத் தினரே. (3)

ஊன்றிய தடியிற் கிடந்துழன் றெருதுங்கி நின்றவ னுழைபினே நோக்கி, வான்றிகழ் புகழா திருமொழி கொடுத்து வரவழைத் தொருமருங் கிருத்தி, யின்றவ ரியாவ ரெவ்வழிக் குளநின் னிருங்

குலப்பெயரியா துனக்குத், தோன்றிய நாமமேதிலை விடுத்துச் சொல்
லென மீளவு முரைத்தார். (4)

நபியெனும் பெயர்பெற் றவர்க்கெவர் கருத்து நன்குறத் தெரிந்தி
டும் விசும்பி, னவரினும் புதியோன் றாதரின் முதலோ ரவனியிற் பின்
வரும் நபியு, ரிவர்கருத் தறியத் தெரிந்திடாப் பொருள்களிலை யெனக்
கருத்தினி லிருத்தித், தவறுவந் ததுந்தன் றலைமுறைப் பெயருந்தனித்
தனி விடுத்தெடுத் துரைப்பான். (5)

வானுல கடங்கத் தன்வசப் படுத்தி மறுவறும் பெயர்க்கிடர் விளைத்
துப், பானிற வளைவெண் டிரைக்கடற் பரப்பிற் பகையற வொருதனிக்
கோலாற், றனைனச் செலுத்தி யாசுவீற் றிருந்தோன் றணப்பிலாப்
பெரும்படை யுடையோ, னீனமுற் றொழியா மாயைகள் விளைக்கு மிய
லிபு லீசெனும் பெயரோன். (6)

அப்பெரும் புகழோன் றருதிரு மதலை யவனினு மும்மடங் காகி,
முப்பெரு நிலத்துந் தன்பெயர் நிறுத்து முறைமைய ஞளியா சனத்தா,
னெப்பருந் திறலா னிலாக்கிசென் றோங்கி யுறும் பெய ரினன்பெறும்
புதல்வன, கைப்படுங் கதிர்வாட் பெரும்படைக் கிறைவன் காபிமென்
றுரைத்தகா வலவன். (7)

காபிமென் மவன்றன் கண்ணிணை மணியாய்க் கருத்தினுள்ளு
றைந்த மெய்ப் பொருளாய்ச், சேயெனப் பிறந்தே னிசைபெறக் காம்மா
வென்னுமப் பெயரினன் சிறியே, னுபிரந் திருப்பேர்க் குரியவன் றானே
யமரருக் கரியநா யகமே, மாயிரும் புவிமா னுடரிடா களையு முகம்மதே
யெனப்புகழ்ந திசைததான். (8)

மருங்கிளி லிருந்து பகர்ந்தகாம் மாதன் வார்த்தைகேட் டகத்தி
னிற் களித்துத், தருங்கதிர்த் தாள நகையிற்புன் முறுவ றாவரு விருத்
தனை நோக்கி, நெருங்கிட வறந்த காறடு மாற நெடிது சஞ்சலத்தொடும்
வருந்தி, யிருங்கண மடுத்தென் னிடத்தினி லுறைந்த தென்னினை வன
வெடுத் திசைத்தார். (9)

முன்னெடுங் காலத் திப்பெரும் புவன முழுதினு மொருகுடை
நீழ, றன்னிடை படுத்தி நால்வகைக் கதத்த தளத்தொடு மொருதனிக்
கோலான், மன்னிய திசைகள் பொதுவறப் புரந்து மருவல ரிலையெனத்
தடிந்திட், டெனையொப் பவரிந் நிலத்தினி லிலையென் றிருந்தன
ஞளியா சனத்தில். (10)

ஒருதனித் திகிரி செலுத்தியெ நிலமு முள்ளடிப்படுத்திடு நாளிற் பொருவறுமதத்தாற் றவங்குண மிரக்கம் பொறைநிறைபுண்ணியம் பிறவுந், தெரிவரா திகழ்ந்து பவப்பழி தொடாச் செய்வழி முறைமையிற் செய்தேன், பெருகிய வலியுஞ் சீர்த்தியு முடையோய் பின்வருந் துன்பமொன் றறியேன். (11)

தீவினைக் குரித்தாய் வருந்தொழி லனைத்துஞ் செய்தரசிருக்குமந் நாளிற், பாவியென் னுடலு மிதயமு நடுங்கப் பார்த்தெனைக் கடிந்துவற் புறுத்திக், கூவிமுன் னிருத்தித் தாட்பெரு விரல்க ளிரண்டையுங் கூட்டுற நெருக்கி, நோவர விறுகக் கட்டிவைத் தெழுந்து போயின னொரு நொது மலனே. (12)

காலினிற் பிணித்த பிணிப்பினை வலிதிற் கழற்றின னோக்கினன் கழலா, தோலிடுங் கடகக் கரத்தினா லவிழ்த்தே னவிழ்ந்திடா தொருங் குநின் றவர்கள், மேலுற லகிர்ந்துங் கருவியா லறுத்தும் விரிந்தசெந் நெருப்பிடை கொடுத்து, நூலள வெனினு நெகிழ்ந்தில வதனின் வலியினை நுவலுதற் கரிதே. (13)

கட்டினான் மிகுதி வருத்தமுற் றொடுங்கிக் கலங்கினன் மலங்கின னெடுநாள், விட்டிடா திழைத்த பாவங்க டாண்டு வெகுண்டொரு கயிற் றுரு வெடுக்கப், பட்டதோ வலதென்னூழ் விதிப்பயனோ படிபுரந் திடும்பெரும் பலனோ, கிட்டிய தவத்தோர் முனிந்திடு முனிவோ வெனக் கிடந்தனன்மதி யிலியேன். (14)

அரசிழந் தெனது கிளையினிற் பெரியோ ரிடத்தினு மடுத்தன னவரா, லொருதிருக் கெடுத்து நெகிழ்க்கவும் பயமுற் றொடுங்கினர் பெருவரை யிடத்துங், குறைகட லிடத்து மெண்டிசை புரக்குங் கொற்றவ ரிடத்தினு மடைந்தே, னிருமென விருந்தி நோக்குவ ரலதென னிடர்தவிர்த் திடுபவ ரிலையே. (15)

அந்தரம் புவிமட் டலவியுங் காற்கட் டவிழ்க்கவல் லமையின ரிலையென், றிந்தனமெரியிற் கிடந்தென விதப மிடைந்திட வுடைந்தன னெளியேன், புந்தியற் றொடுங்கி யளவறுங் காலம் போயபி னவனியுன் மனுவிற், சுந்தரத் தொடும்ப ரறத்தொடு முருவாய்த் தோன்றின ராத மென் றொருவர். (16)

அவனியிலாத நபியெனுமப் பேர்பெற் றிருந்தன ரவரிடத் தேகித், தவிரகிலா திடருற் றனனென வெளியேன காற்றினன் வீக்

கினை நோக்கிக், கவாறப் பிணித்த காவல னலது கட்டறுப் பவரெவ ரென்னக், குவிதருந் திருவாய் விரிதர வுரைத்தார் கொடியனென் வலி குறைந் திடவே. (17)

இவ்வுரை பகர்ந்தா ராதநன் னபியென் றிருந்தனன் வருந்தின னதற்பின், குவ்விணி னபிமா ரென்னுமப் பெயர்பெற் றிருந்தவ ரிடந் தொறுங் குறுகிச், செவ்விதி னுரைத்தே னவ்வவ ரெவருந்திருநபி முகம்மதென் பவரால், வவ்விய தளைவிட்டகன்றிடு மலது மறுத்தெவர் தவிர்ப்பரென் றிசைத்தார். (18)

அன்னவ ருரைத்த மொழிமனத் தடக்கி யிருந்தன னறிவெனுந் துணையா, லெங்நெடுங் காலத் தெப்புவி யிடத்தி னினிதொடும் பிறப்ப ரென் றெண்ணிப், பன்னெடுங் கால மிதுநினை வலதுவேறுரை பகர்ந் திருந் தறியேன், மன்னிய புகழார் முகம்மது பிறந்தா ரெனுமுறை மறைகள்சொற் றனவே (19)

புவியினி லறத்தின் மக்கமா புரத்திற் பொதுவற வேதமு மிறங்கி நபியெனுந் திருப்பட் டமுந்தரித் தரிய நன்னிலைத் தீனெறி நடத்திக். குவிகுபி ரகற்றியிருந்தன ரென்னக் கோதிலா மனமகிழ்வுடனே, யிவ ணில் வந்தடைந்தே னினிவுனைப் பவங்க ளியாவையு மெளிதின்வென் றனவே. (20)

பதத்தி னிலடைந்த பாவியென் மனத்திற் பருவாற் களங்கறத் துடைத்துக், கதக்கொடு மிறுக்கி வைத்தபா தகன்றன் கட்டறக்கருணை யிற் படுத்தி, யிதத் தொடு முமது தீன்வழிக் குரிய னிவனென நிறுத் திமே லையினும், விதித்தசொற் கடவாப் படிநடத்திடுக வேண்டுமென் றுறைத்தடி வீழ்ந்தான். (21)

இரங்கினின் றிறைஞ்சி யுரைத்தவா சகத்தையிருசெவி குளிர்தரக் கேட்டு, நெருங்கிட விறுக்கி வைத்தவர் பெயரை நினைத்தரு ளொடு முறு வலித்து,மருங்கினி லொடுங்கியிருந்தகாம் மாவைவிழித்தணி மது ரவாய் திறந்துன், னுரங்கெட விடுக்கண் விளைத்தவரியாவ ருரையென முகம்மது முரைத்தார். (22)

கட்டிவைத் தகன்ற நாட்டொடுத் தவன்றன் பெயரினைக்கருத்தினி லறியே, னெட்டியெத் தலத்துந் திரிந்தன னிவ்வூருளனெ னவறிகி லேன் புவியின், மட்டறுங் குலத்தி லிக்குலத் தின்னோன் மகவென்று மறிகிலே னெதிர்ந்து, கிட்டிடி லுருக்கண் டெளிதினி லறிவே னெனக் கிளத் தினன்பெருங் கிளையோன். (23)

கருமுகிற் கவிகை நங்கபி காம்மா வுரைத்தசொற் கருத்தினிலிருத்திக், குருதியுந் தசையுஞ் சிதறுசெங் கதிர்வேற் கொழுந்தடக் கரத்த பித்தாலி, புரியகண் மணியாய் வருமலி தமையென் னுழையினிற் கொடு வரு கென்னப், பரிவினிற் றாதை விடுத்தன ரவரும பண்புற விரைவொடு மெழுந்தார். (24)

சிங்கவே றனைய அலிதிருக்க ரத்திற் செங்கதிர் வாட்கிடந் திலங்கத், தங்கிய மரவத் தொடைபுரண் டசையத் தானவன் புலிவரனைக்கி, யங்கமு மனமும் வெருவரத் திடுக்கிட் டலம்வர வெழுந்துவாய் குழறிப், பங்கமுற் றயர்ந்திட் டடிக்கடி நோக்கிப் பதங்கரநனிநடுநடுங்கி.

மன்னர்மன் னவரை முகம்மதை நோக்கி வாய்வெளி றிடவிழி சுழல, வெந்நிடை யொளித்திட் டொதுங்குற வொடுங்கி விறற்புலி யலிதமைத் தாண்டி, என்னையுங் கெடுத்தென் னரசையு மழித்திட் டித் தனைக் கியற்றிய சீமா, னன்னவ னலது வேறிலை யினம்வந்தடுக்கிலென் விளையுமோ வறியேன். (26)

மெய்ப்பொருண் மறைக்கு நாயகப் பொருளே விண்ணவருயிரினுக் குயிரே, யிப்புலி யிடத்தி லடைக்கல மடியே னெனைப் பிணித் தடல்வலி யெறிந்த, துப்பின னீதோ வடுத்தனன் சற்றேறு நின்றிட வருள் பணித்தென், கைப்பட றந்தங் கரங்கொடுத் துயிரைக் காப்பது கடனெனக் கரைந்தான். (27)

வெருவுறேல் காம்மா வெனக்கர மசைத்து விறற்புலி யலிதமை நோக்கி, எரிகதிர் வேலோய் நம்மிடத் தடைநதோ னீங்கிவனிடருறு மிணைத்தாட், பெருவிரற் றொடையை விடுப்பையென் றினிதின் பெரியவன் றாதுவருரைப்ப, வரியென மகிழ்ந்து நோக்கலுங் காற்கட் டற்றிடத் துன்பமு மறுந்த (28)

காற்றளை யகலப் பயங்கரமகற்றிக் காவலர் முகம்மதையிறைஞ்சிப் போற்றிநின் றமுத மெனுங்கலி மாவை யுரைத்துநல் வழியினிற் புகுந்து, தேற்றுநன் மறையின் முதியரைப் புகழ்ந்து செவ்விய ரலிபதம் வழுத்தி, மாற்றரும் வேடந் தனையும்விட் டொழிந்து மதிவலா னெனத் தனி நின்றான். (29)

சீதவொண் கதிர்செய் முகம்மதி னடியிற் சென்னிதைத் தடிக்கடி புகழ்ந்து, கோதற வெழுந்து தீனவ ரெவர்க்குங் குறைவறச் சலாமெ டுத் துரைத்துக், காதலின் றீன்றீன் விளங்கவென் றேத்திக் கடிமலர்ச் சோலையு நீந்தி, மாதம் பெருகு மனத்தினன்காம்மா மன்னுதன் றிசையினிற் போனான். (20)

காம்மாப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 20-க்குத் திருவிருத்தம் 1086.



# விருந்தூட்டுப்படலம்.



புவியி லின்பம் பொருந்திப் புகழ்பெறு
நபிமு கம்மது நன்பொடுந் தங்கிளை
யவர்கட் கன்புற் றரிய விருந்தெனக்
கவலு மென்றலிக் கோதினர் காமுற்றே. (1)

தூய தூதுவ சோதிய சொன்மறா
நேய முற்றெழுந் தங்கவர் நீண்மனை
வாயி றேறு நடந்துநல் வாக்கொடும்
போயி ருந்து விருந்து புகன்றனர். (2)

மறுவி லாறு முகம்மதுக் கன்புறு
மறிவ ரும்மவ ரையர்க்கு முன்னருஞ்
சிறி யதந் தைய ரும்மவர் சேய்களு
முறவி னுற்றவ ரும்மவ ரொக்கலும். (3)

வன்றி றற்புலி வாளலி முன்வர
மின்ற வழ்ந்தணி யாரங்கள் வீசிடத்
தொன்று தோன்றிய தூதுவர் மாமனை
முன்றி லெங்கணு மொய்த்திருந் தார்களால், (4)

சிறியர் பேதையர் தீய்ப்பசி தீண்டிய
வறிய ரல்லது வந்தவர் நாற்பலீ
தறிவர் ஹாஷிம் கிளைக்குயி ராயினோ
ரிறைவன் றாதுவர்க் கின்புறு மாந்தரே. (5)

எடுத்தி ருத்த லெனும்பதி னொறடை
கொடுத்த பாலுங் குடித்தொரு மேழகத்
தடித்த சைச்சுடு கோலினிற் றள்ளூழ
னெடுத்துத் தின்ப ரிவர்சிறி யோர்களே.. (6)

வரிசை வள்ளன் முகம்மது வந்துநின்
றுரிய கேளி ருடனுழை யோரையும்
விரியுங் காந்தி விரித்த விரிப்பின் மேற்
பரிவி னீணவை பந்திவைத் தாரரோ. (7)

மாற்ற லர்க்கரி யேறெனும் வள்ளலார்
தீற்று வெண்சுதை மாடத்துட் சென்றட
ஊற்றுப் பாலைபு மூட்டுக்கொண் டிருங்கனஞ்
சோற்றை யுங்கொடு வாவேனச் சொல்லினார். (8)

மருங்கு நின்றவர் மாம னையுட்புகுந்
தொருங்கி ருந்தவொ ருபடிச் சோற்றையுங்
கருங்க லென்னுங் கலசத்திற் பாலையுந்
தருங்கை வள்ள லிடங்கொடு சார்தனர். (9)

அருந்துஞ் சோற்றையும் பாலையு மங்கையி
லொருத்த ரேந்தி யுலாவுகின் றாரிவர்
வருத்த மின்றி வாவழைத் தாளெலா
மிருத்து கின்றன ரென்னெனக் கூறுவார். (10)

இற்றை நாள்விருந் தென்னவிவ் வூரினிற்
சொற்ற தில்லைத்தொன் மாமறைக் காரணத்

துற்ற செய்தி யறியவென் றன்னியோ
பற்றி னிவர் பாலமைத் தாரென்பார் (11)

இன்று வந்திவர் முன்றி லிருந்தனம்
வென்றி யாக விருந்து வழங்கிடுஞ்
சொன்றி யும்மிவர் காரணத் தோற்றமு
நன்று கண்டறி வோமினி நாமென்பார். (12)

இந்த வண்ண மிவர்க ளியம்பிட
வந்த நாயகன் றாதுவ ரன்பொடு
வந்த சோற்றையும் பாலையு மன்னவர்
சிந்தை கூறச் சிறந்தளித் தாரரோ. (13)

சேருஞ் சீனியுந் தேனுமொத் தாலென
மூர லும்மவை மூழ்கிய பாலையும்
வீரர் தங்கள் விலாப்புறம் வீங்கிட
வார வுண்டென ரங்கையில் வாரியே. (14)

மாத ருஞ்சிறு மைந்தரு மாந்தரும்
பேத மற்றதம் மில்லுறை பேர்களுங்
கோதி லாதுண்டு பாலுங் குடித்தினிப்
போதும் போது மெனப்புகன் றார்களால். (15)

உருசிக் கும்படி பாகஞ்செய் யோர்படி
யரிசிச் சோறு மரைப்படிப் பாலுநல்
வரிசை யாக வழங்க வழங்கவே
பெருகிற் றல்லது பின்குறை வில்லையால். (16)

ஆகங் கூர்தர வுண்டவ ரியாவரும்
வாய்கை பூசி மகிழ்தினி துற்றபின்
பாகு வெள்ளிலை பாளிதஞ் சந்தன
மோகை கூர வுவந்தளித் தாரரோ. (17)

சோதி நாயகன் றாதெனும் வள்ளலுக்
கோதெ லாமரி தோவென வேத்திநின்
ரோதிக் கையெடுத் துற்ற சலாமுரைத்
தாத ரத்தொடு மங்கவர் போயினார். (18)

விருந்தூட்டுப் படலம் முற்றிற்று.

---

ஆகப்படலம் 21-க்குத் திருவிருத்தம் 1014.

---

# நுபுவ்வத்துக் காண்டம்

முற்றுப் பெற்றது.

---

ஆகக் காண்டம் 2-க்குப் படலம் 45-க்குக்

கூடிய திருவிருத்தம் 2344.



இனி ஹிஜுறத்துக் காண்டம் வருவது காண்க.



மூன்றாவது

# ஹிஜறத்துக் காண்டம்.

## மதீனத்தா ரீமான்கொண்ட படலம்.

மணிதிரண் டனைய திண்டோண் முகம்மது மக்க மீதி
லணிபெற விருந்து வல்லோ னருளொடு மதீனத் தேகிப்
பணிபரித் துவந்த பாரிற் குபிரிருட் படலநீக்கித்
திணிசுடர் நிலாத்தீ னோங்கச் செய்தவை யெடுத்துச் சொல்வாம். (1)

கதிமனைக் குரிய தாரை காட்டுநல் வினையு மூழற்
பதிசெய்தீ வினையு மாறு பட்டொரு தலஞ்சேர்ந் தென்ன
விதிமறைக் கதிர்மெய்த் தீனும் வெங்குபிர்க் களையு மொன்றாய்ப்
பொதுவறக் கலந்து மக்கமா புரத்தினி லிருக்குநாளில். (2)

பாய்திரைப் பரவை சூழ்ந்த படிக்கணி திலத மாவி
யாயமக் காவின் ஹஜ்ஜி லணிபெற வைம்பத் தாறு
தேயமா னிடருங் கூண்ட திரளொடு மதீன மென்னுந்
தூயமா நகரத் தோரும் வந்தனர் துலங்க வன்றே. (3)

வால்வளைத் தாளஞ் சிந்தும் வாவிசூழ் மதீனா வாழு
மேலவன்அசு அதென்னும் விறலுடைப் படலைத் தோளான்
காலமுன் றுணரும் வேதக் கடலினுக் கெல்லை காணுஞ்
சீலநந் நபியைக் காணச் சிந்தையிற் சிந்தித் தானே. (4)

தன்னுயி ரென்ன நீங்கார் தலைமையி னுரிய தோழர்
பன்னிரு வருக்கு நேர்ந்த பண்புட னெறிகள் கூறிப்
பின்அக பாவென் றோதும் பெருந்தருத் துறைந்து காட்சி
மன்னிய முகம்ம தின்றன் மலர்ப்பதம் வந்து கண்டார். (5)

மக்கமா நகரில் வாழு முகம்மது பாதம் போற்றிப்
பக்கலி லிருந்தன் பாகப் பரிவொடுங் கலிமா வோதி
மிக்கதீன் பெருகிச் செல்வம் விளங்கிட வீமான் கொண்டு
தக்கநல் வணக்கத் துற்ற ஷறாத்தினைக் கருத்துட் கொண்டார் (6)

நல்வழிக் குரிய ராகி நடுக்கமொன் றின்றித் தங்கள்
கல்பினிற் கசடு நீத்துக் கரகம லங்க ணீட்டிச்
செல்வநந் நபினர் செவ்வித் திருக்கரத் திடத்திற் சேர்த்திப்
பல்விதம் வரினும் வார்த்தைப் படிதவ றிலமியா மென்றார். (7)

வெற்றிவாண் முகம்ம துள்ளம் வேண்டிய வார்த்தைப் பாடு
முற்றுற முடித்துத் தீனின் முறைமையிற் றலைவ ராகி
நற்றவ முடையீர் மேலு நல்வழி சிதையா வண்ண
முற்றொரு வரையின் றெங்க ளுடன்படுத் திடுக வென்றார். (8)

இதத்தநன் மொழிய தாய்ப்பன் னிருவரு முரைத்த மாற்ற
மதித்துமா மறையிற் றேர்ந்த முசுஇபை வள்ளல் கூவி
விதித்தநன் னெறிவ ழாமற் குறானையும் விரித்துக் காட்டிப்
பதித்தலத் திவர்குற் றோர்க்கும் நல்வழி படுத்து மென்றார். (9)

வடிவுறை அசுஅதோடு முசுஇபு மகிழ்விற் காம
ரடலரி யிறசூ லல்லா வம்புயப் பதத்திற் றாழ்ந்து
படரொளி குலவு மாடப் பதிகடந் தடவி நீந்திப்
புடைவளம் பலவு நோக்கிப் போயினர் மதீன மூதூர். (10)

கோட்டுடை மலரின் மன்றல் குலவிய மதீனம் புக்குத்
தோட்டிணை அசுஅதோடு முசுஇபு தோன்ற றானும்
பாட்டளி முரலுந் தாமத் தலைவர்பன் னிருவர் சூழ
வேட்டமுற் றுதிதூதர் விரித்ததீன் விளக்கஞ் செய்தார். (11)

இல்லகத் திருந்து தீனி னியன்மறை முறைவழாது
சொல்லிய முசுஇபோடு தொடைப்புயத் தசுஅ தும்மோர்
தொல்லிருள் கிடந்த தென்னச் சுடரவன் கதிர் புகாது
பல்லிய மளிக ளார்க்கும் பன்மலர்க் காவிற் புக்கார். (12)

தண்டலை யிடத்திற் புக்குத் தடத்தின்சம் பாத்து ளாடிக்
கொண்டுலுக் கவினச் செய்து குதாதனை வணங்கி யேத்தி
மண்டலம் புரக்கும் வள்ளன் முகம்மது தமையும் போற்றி
விண்டலை தடவுங் கோட்டுத் தருவின்வீற் றிருந்தா ரன்றே. (13)

உரந்தனி யுருகி யாதி யுறுதிரா யகனுக் கன்பாய்ச்
சிரந்தரை தீண்டத் தீனோர் செய்முறை வணக்கஞ் செய்தோர்
மரந்தரு நீழல் வைகு மாந்தர்க டெரியா வண்ணங்
காந்தழி ஜயித்து நோக்கிக் கறுத்தொரு காளை நின்றான். (14)

குறித்துநோக் கியசஃ தென்னுக் கொற்றவன் கருத்தி னூடு
வெறுத்திவ்வூ ரிடைமக் காவில் விளைந்தவல் வினைக ளெல்லாம்
பொறுத்தது காணுமென்னப் புழுங்கிப்பூம் பொழிலி னீழ
விறுத்தவர்க் கெதிர் கொடாம லெழுந்துபோ யுசைதைச் சார்ந்தான்.()

நறுங்கதிர் குலவு மாட மக்கமா நகரில் ஹாஷிம்
பெறுங்குலத் தொருவன் றோன்றப் பெரும்பகை விளைந்தவ் வூரு
முறங்கின செல்வ மாறி யொருவருக் கொருவ ராகா
மறங்கிளர் மனத்த ராகி மாறுபட் டிருந்தா ரன்றே. (16)

அன்னவன் மாய வஞ்ச மதத்தினு ளாயெ னன்னை
முன்னவள் மகனென் முன்னோன் முசுஇபோ டிணங்கித் தோன்றி
யிந்நகர் தனையு மார்க்கத் தீடுபட் டொழிய நின்றா
னுன்னுவ தென்கொ னள்ளா ரூன்புலா லுணங்கும் வேலோய். (17)

மதியிலி யவராய் மக்க மாநக ரவரைப் போலிப்
பதியினிற் புகுந்தும் பின்முன் பார்ப்பது பழுது கோறல்
விதியிது சாத மென்னச் சஃதுளம் வெகுண்டு செந்தே
னுதிர்தரும் படலைத் திண்டோ ளுசைதுநெஞ் சுழுக்கச் சொன்னான்.()

சாதுரை யெனும்வே லுள்ளந் தைத்திட மார்க்க மாறும்
பாதக மிவ்வூ ருள்ளும் படர்ந்ததோ பலருங் காணிற்
பேதுறு முன்ன மியாமே பெரும்பகை துடைத்துக் கோடற்
கேதுபோ தஞ்சொல் லென்றா னியனதற் கெடுத்துச் சொல்வான். ()

குரவரி லொருவன் முன்னோற் கொல்வதற் குலகங் கொள்ளா
தருமறை மாறி நின்றோ ராருயி ரிழந்தா ரென்னத்
தெரிவரு மாற்றா லுன்னைத் தெறுபவ ரிலையான் கொன்றாற்
பரிவுறும் பழியைச் சாருஞ் சாரவும் படுவ தன்றே. (20)

அன்னதான் மார்க்க மாறு மவருயிர் செகுப்ப வேண்டி
மின்னிய கதிர்வாட் டாங்கி விரைகெனச் சஃது வீறாய்ச்
சொன்னசொன் மறாது சைது கோறலைத் துணிந்து சென்றான்
மன்னிய மலர்த்தேன் றாது மாரியொத் துதிர்க்குங் காவில். (21)

மருங்கினில் விசித்த கச்சும் வலக்கரந் தாங்கும் வாளும்
கருங்கரிக் கரத்தி னீண்ட காந்தனி வீச்சுங் கோப
நெருங்கிய நோக்கும் வேர்வை நித்திலப் பணிப்பு மாக
வொருங்கினிற் சோலை புக்கு முசைதைக்கண் டைய முற்றார். (22)

இங்கிவ னிவ்வூ ருள்ளார்க் கியல்புறுந் தலைவன் வேகந்
தங்கிய மனத்தி னோடுஞ் சார்ந்தனன் சார்த னோக்கின்
வெங்கொலை விளைத்தல் வேண்டு மெனவுரை விரித்துச் சொன்னார்
பொங்குசீர் அசுஅ தென்போர் புண்ணிய முசுஇ புக்கே. (23)

வருபவன் றன்னை நோக்கி மனமறு குவதன் றல்லா
திருவரு ணம்பா லுண்டு தெருட்சியிற் சிறிது சொல்லால்
விரைவொடு மவன்ற னுள்ளம் விளக்குவன் காண்டி யென்ன
முருகுலா அசுஅ துக்கு முசுஇபன் புறச்சொன் னாரால். (24)

மாரித்தண் ணலர்கள் சிந்தும் வனத்தினில் வடிவா ளேந்தி
வீரத்தின் விழைவு கூரமென்மனம் புழுங்கி விம்மக்
கோரத்தின் கடைக்க ணங்கிக் கொழுந்தெழ வுசைது நோக்கிப்
பாரைத்தீன் படுத்தி நின்றோர் பயப்பட வெகுண்டு சொல்வான். (25)

வியனுறு மக்க மூதூர் வேறுபட் டொழியச் செய்தோர்
வயினுறைந் திவணின் வந்து வழிகெட மதீனத் தார்க்குப்
பயிலுத றெடுத்தீர் மாற்றம் பகர்வது தவிர்ந்து நீங்கி
யயலகல் வதுவே நுங்கட் கடனென வறிய வேண்டும். (26)

என்னுரை மறுத்திவ் வூரி லிருந்திரேற் குருதி சிந்த
மின்னவிர் வடிவாட் காவி விருந்துசெய் திடுவன் வேறு
பன்னுவ தென்கொல் சூழ்ச்சித் தருமத்தாற் பகர்ந்தே னென்றான்
பொன்னவி ரலங்கற் றிண்டோட் புரவல னுசைதென் போனே. (27)

கடுத்துநின் றுரைத்த மாற்றங் காவலன் முசுஇ போர்ந்து
தொடுத்தெடுத் துரைத்த வாய்மை யெங்கட்குச் சூழ்ச்சித் தாகு
மடுத்தவர்க் கறமீ தன்றோ வாயினு மொருசொற் கேட்டென்
னிடத்தினிற் சிறிது போழ்திங் கிருந்தெழுந் திடுக வென்றார். (28)

ஈங்கிவ னுரைக்கும் வாய்மை யிதமல தபித மேனும்
பாங்கொடு மறிவோ மென்றே யிதயத்துட் படுத்திக் கொல்லுந்
தீங்கினை யொருபாற் சேர்த்திச் செவ்விதி னிருந்தான் செந்தேன்
பூங்குலாய் விரிந்த சோலைப் புதுநிழற் பரப்பி னன்றே. (29)

ஒருவனை யிறசூல் தம்மை யுளத்தினி லிருத்தி யார்க்குந்
தெரிதரப் பிசுமி லோதித் தீன்முதன் முறைமைத் தாய
விரிதருங் குறானை யோதிக் காட்டினர் விளைந்த தீமைக்
கருவெனு நினைவு சிந்திக் கட்டழிந் தோட வன்றே. (30)

மூதுரை மறையின் றீஞ்சொன் முசுஇபாண் டுரைப்பக் கேட்டுக்
காதுளங் குளிர்ந்து பொல்லாக் கசடறிந் தறிவி னூழ்ந்து
பாதகம் பலியா வண்ணம் பாரிற் றொல் விதியி னாலிம்
மாதவங் கிடைக்கப் பெற்ற தின்றென மகிழ்வு கூர்ந்தார். (31)

நிலத்தும் விண் ணிடத்து முற்றோர் நின்றநன் னெறியு மீதே
சொலத்தகாத் தூயோன் றூதென் றுண்மையிற் சொல்வ தீதே
பொலத்தினி லமைத்த சொர்க்கம் புகுத்துவிப் பதுவு மீதே
நலத்தகு முறைமை யீதென் றகத்தினி னாட்டி னால் (32)

மனத்தினன் மகிழ்ச்சி கூர்ந்து முசுஇபைப் போற்றி மன்ன
ரினத்தினு முயிரின் மிக்கா யெனவெடுத் தினிய கூறிக்
கனத்தநூன் முறையின் வாய்த்த நபிகலி மாவை யோதிச்
சினத்திடர்க் குபிரை மாற்றித் தீனிலை நெறிநின் றாரே. (33)

உள்ளகம் பொருந்தி யீமான் கொண்டுசை தென்னும் வேந்தர்
வள்ளலா ரிருவர் செவ்வி மதியெனும் வதன நோக்கிக்
கொள்ளுமென் மனத்தினுற்ற குறிப்பெனுங் கரும மின்னே
விள்ளுதல் செவிகொள் வீரென் றணிபெற வியத்திச் சொல்வார் (34)

பூதலத் துயர்ந்த மேன்மைப் பொறையினி லறிவின் மிக்கான்
மாதவ னுரைக்கும் வேத வழிமுறை யொழுகி நின்றான்
காதுவெங் களிறே யன்ன கருதலர்க் கரியே றொப்பான்
சாதெனு மரச னிவ்வூர்த் தலைவரிற் றலைமை யானே (35)

மன்னுமென் னுயிரே யன்னான் மாற்றமே தெனினு மென்சொற்
றன்னுரை யென்னத் தேறுந் தன்மையன் வடுவொன் றில்லா
னன்னவன் கலிமா வோதி யாரண நெறிநின் றானே
லிந்நகர் முழுது மீமான் கொண்டதற் கைய மின்றே. (36)

பிடித்தொரு மொழியி னெஞ்சம் பேதுற வவனை நுங்க
ளிடத்தினில் வரச்செய்வே னியா னிதத்தொடு மினிய மாற்றந்
தொடுத்துரைத் தருங்கு றானைச் செவிவளைத் துளைக்கு ளோட்டிப்
படித்தநல் லறிவிற் றேற்றித் தீன்வழி படுத்து மென்றார். (37)

இருவருங் களிப்பக் கூறி யெழின்மலர்ப் பொழில்விட் டேகித்
தெரிதர வீமான் கொண்ட சிந்தையிங் புளகம் பூப்பத்
திருமருப் புயங்க ளோங்கச் செம்முக மலர்ந்து தோன்ற
வருவது நோக்கிச் சஃது மன்னவ னுளத்திற் சொல்வான், (38)

மடித்துத முதுக்கிக் காந்தி வாள்வல னேந்தி மீசை
துடித்திட வேகத் தோடுஞ் சென்றனன் றுணர்ப்பைங் காவை
விடுத்துள மகிழ்ச்சி கூர மெய்ம்மயிர் சிலிர்ப்ப நம்பா
லடுத்தன னவணி லுற்ற தறிகில மென்று நின்றான். (39)

இன்னணஞ் சஃது நெஞ்சத் தெண்ணிநின் றுலவுநேர
மன்னவ ருசைதும் புக்கார் மாமறை வதன நோக்கி
மின்னிய கதிர்வாட் டாங்கிப் போயது மீண்ட வாறும்
பன்னுக வென்றான் கேட்டங் கவரெதிர் பகர்வ தானார். (40)

பொழிலிடை புகுந்தே னின்ற புரவலர் தம்மைக் கண்டேன்
வழிவச மலது வேறோர் வடிவருந் தகைமை காணேன்
மொழிவபின் னென்று கேட்டேன் முன்னவ னசுஅு தென்போன்
பழிபடக் கோறல் வேண்டிவந்தனர் * பகைஞ ரென்றே. (41)

தாய்க்குமுன் னவடன் சேய்பாற் றரியல ரடைந்தா ரென்னும்
வாய்க்கொளாக்கொடியவெஞ்சொன் மனத்தினைவெதுப்பக்கண்க
டீய்க்கொளச் சினந்து சீறிச் செங்கரம் பிசைந்து நக்கி
மூக்கினில் விரலைச் சேர்த்தி முரணொடு மெழுந்து நின்றான். (42)

என்னுயிர்த் துணைவன் றன்மு னெதிர்ந்தவ ரியாவ ரேனும்
பன்னரும் விசும்பு லாவி படவிடுத் திடுவனென்னத்
தென்னுறுங் கதிர்வா ளேந்திச் சீற்றமுன் னடப்பச் சென்றான்
முன்னையூழ் விதியின் வண்ண முறைநெறி யறிகிலானே. (43)

செங்கதிர் வடிவாட் டாங்கிச் சென்றவன் றடவை புக்கி
யெங்கணுந் தெரிய நோக்கி யிகன் மரு வலரைக் காணான்
பொங்கிய மன்றறாங்கும் பொழிலிலவ் விருவர் தாமே
தங்கியங் கிருப்பக் கண்டான் றனித்தவண் சார்ந்து நின்றான். (44)

இரைந்தளி சுழலுங் காவி லிருப்பவர் தமமை நோக்கி
விரைந்திவ ணகன்று வேற்றார் புகுமிவை வினவிரேற் சேர்
கருந்திட வுடலம் வீழ்த்தி யாருயிர பறித்து றுங்கட்
பெருந்தமர் தமக்குங் கூடப் பிழைவிளைத் திடுவன் மாதோ. (45)

சாற்றிய தெனது தம்பித் தமையனென் பதனி னுனு
மாற்றலர்க் கொருசொற் றன்மம் வகுத்தமர் மலைவ தென்னத்
தேற்றுநல் லறிவோர் கூறுந் திறத்தினும்பொறுத்த தல்லாற்
கூற்றெனும் பழியை நாணிக் கூறின னலனியா னென்றான். (46)

---

* பகைஞரென்றது குலப்பகைஞராகிய பனீயாசிதாக் கூட்டத்தை.

மருவலர்க் கெனினு மோர்சொல் வகுத்தபா விளைப்ப வென்ன
விரிமறை யவர்கள் கூறு மெய்ம்மொழி யதனுன் வேண்டி
யொருநொடிப் பொழுதெம் முனைவ னுவந்தினி திருந்தோர் மாற்றந்
தெரிதரக் கேட்டுப் பின்னுன் றிறல்செலுத் திடுக வென்றார். (47)

முன்னவ னொருவ னீதி முறைமயிற் குரியன் மற்றோ
னின்னவர்க் காக வேண்டி யிருந்தறி குவமியா மென்ன
வுன்னிய வெகுளித் தீயை யுணர்வெனு நீரான் மாற்றிப்
பின்னெறி யிருந்து நீவிர் பிதற்றுவ தெவைகொ லென்றான். (48)

நகரினுக் குரிய னோது நாவினன் றெளிந்த நீரா
னிகரரும் வீரத்தானந் நெறியினுக் கமைந்தா னென்னப்
புகரற மனத்துட் கொண்டு பூரித்த * புளகத் தோடும்
பகரும் வேதத் துற்ற சொல்லினைப் பகுத்துச் சொன்னார். (49)

முறைமயிற் றிதகா வண்ண முசுஇபு பகுத்துச் சொன்ன
மறையுமம் மறையினுற்ற வழியுமவ் வழியி னுற்ற
பொறையுநல் லமிர்த மென்னச் செவிவழி புகுதக் கேட்டு
நிறைதர மகிழ்ந்து சஃது நெஞ்சநெக் குருகினாரே. (50)

ஆரமு தனைய வேதத் தருமொழி யகத்துட் டேக்கிப்
பேருணர் பொங்கி யாவுந் தோற்றிடாப் பெருக்கா னந்தக்
கார்முகிற் கவிகை வள்ளல் றீனெனுங் கடலு ளாழ்ந்து
வாரமுற் றறிவி னீமா னெனும் போகந் துய்த்தார். (51)

மாதவ ரிறசூ லென்னு முகம்மதை வாழ்த்தி வாழ்த்தி
வேதநன் னிலையிற் றோனறும் விதிமுறைக் கலிமா வோதிப்
பூதலத் துயர்ந்த நல்லோர் புகழ்ந்திட இசுலா மாகி
மூதறி வுடையவள்ளன முசுஇபைத் தழுவி னாரால். (52)

என்னுயிர்த் துணைவ நின்னை யிருங்கொலை நினைத்தே னென்ன
முன்னிருந் திருக ணாலி கலுழ்தர மொழிந்து முனமேனன்
பொன்னடி பரவி யிந்தப் புகழ்நிலை நிறுத்தித் தந்த
மன்னவ ருசைதென் றோதி மார்புறத் தழீஇயி னாரே. (53)

* புளகத்தான் முன்ன ருசைதிடத்திற் பகர்ந்த அரிய வேதத்தைப் பகுத்துச்சொன்னா, பகர்வேதம், வினைத்தொகை இதற்குப் பொரு ளாக்கா விட்டால் ஹதீது வேறுபடுமென் றறிக.

வே று.

முசுஇபை யசஅது தென் றயாமுன் னேனையு
முனைசதையுந் தணப்பிலா துவந்து கொண்டுசென்
றசைதருங் கொடிமறு ககன்று மாறடர்ந்
திசைதரும் வேலினார் மனையி னேகினார். (54)

மன்னிய செழுங்கதிர் மாடத் துட்கொடு
மின்னிய தவிசினி லேற்றி வீரத்தின்
முன்னிய மூவரு முவப்ப மூரலிட்
டின்னறை பாகொடு மினிதி னூட்டினா. (55)

வெள்ளிலை யரிபிள வீய்ந்து மேலவ
ருள்ளம துவப்புற வுழையி னோர் மனக்
களளம தறக்கலி மாவை நாவினின
விள்ளுதல் படுத்தித்தீன் விளக்கு வேனென்றார். (56)

அன்னது கேட்டகங் குளிர்ந்து மூவரு
மன்னிய விடத்தினிற புக்க மன்னவா
தம்முயி ரனுங்கிளை யவரைச் சார்பினி
லின்னலற் றிடவழைத் திருத்தி னாரரோ. (57)

இனத்தவர் குழுவினை நோக்கி யென்னைநும்
மனத்தினி லெவரென மதிக்கன் றீசொலும்
பினைத்தனி புகல்வனியா னென்னப் பேசினா
சினததடக் கதிரயி லேநதுஞ் செங் கையாா. (58)

சாதெனு மன்னவர் சாற்றக் கேட்டலும்
பேதுறு மனதொடும் பெரிது நைநதிவ
ரேதிவை யுரைத்தன ரோவென றெண்ணுறுங்
காதரத் தொடுமெதிர் கவல்வ தாயினார். (59)

இத்தலைத் தலைவரி னவர்க்கு நாயக
வுத்தமக் கிளைக்கெலா முயிரின மிக்கெனப்
பதியிற் கொண்டனம் பகர்வ தென்னுளப்
புதியிற தெளியுநீ ரெனப் புகனறனா. (60)

உறமுறைக் கிளைஞர்க ளொருப்பட் டியாவரும்
பெறுமொழி யறுதியிற் பேசி னாரிவை
மறைபகா முகம்மதின் பறக்கத தாலெனத்
திறனுறுங் கருத்தினிற் சிநதித் தாரரோ. (61)

பெருக்கிய இளையவ ரெவரும் பெட்புறத்
திருக்கிளர் நபிகலி மாவைத் தேர்ந்தெடுத்
துரைக்கிலீ ரெனினுமத் துறவுக் குண்மையுற்
றிருக்கில னியானென வெடுத்துக் கூறினார். (62)

இத்தகை யெவரெடுத் தியம்பு வாருமக்
கொத்தவை யெமர்களுக் கொத்த செல்வமே
வித்தக விவ்வுரை வெறுத்திட் டோமெனிற்
பித்தரொன் றலகினிற் பேச வேண்டுமே. (63)

என்றுரைத் தினியன புகன்று நந்நபி
மன்றலம் புகழ்பெறும் புதுமை வாழ்த்தியே
யொன்றிய திருக்கலி மாவை யோதியே
பொன்றிலாத் தீனிலே பொருந்தி னாரரோ. (64)

கனம்பயில் கொடைக்கரன் சஃது கல்பினி
லுனும்பொருள் குறித்துநல் லுணர்வு பெற்றிடுஞ்
சனம்பல ரெவரவர் தமக்கன் சாரிக
ளெனும்பெய ருலகெலா மிலங்க நின்றதே. (65)

மதீனத்தா ரீமான்கொண்ட படலம்-முற்றிற்று.

படலம்-1-க்குத்-திருவிருத்தம்-65.

——:*:——

# மதீனத்தார் வாய்மை கொடுத்தபடலம்.

——:[*]:——

உயர்புகழ் முகம்மதுக் கும்பர் கோனபிப்
பெயரளித் தாண்டுபன் மூன்று போர்பெற
நடமுற நடக்குமந் நாளில் ஹஜ்ஜினுக்
கியல்பெற யாவரு மீண்டி னாரரோ. (1)

அருவரைத் தடப்புயச் சஃதசு அதுந்
தரும நன் னெறியுசை துடனன் சாரிகள்
பெருகிய காபிரும் புறப்பட டெண்ணிலா
நரரொடு மக்கமா நகரை நண்ணினார். (2)

வாய்ந்தவெண் டிசையொரு மதீன மாநகர்
வேந்தரு மக்கமா நகரின் வீரரும்
போந்துகலி பாலினிற் புகுந்து தொன்முறை
யேய்ந்தஹஜ் ஜெனுநெறி முடித்திட் டாரரோ. (3)

மணமுர சொலிமறு மதீன மாநக
ருணர்வெழுந் தீனிலைக் குரிய ராருயிர்த்
துணைவருஞ் சூழ்தர வெழுந்து திண்சுடர்ப்
பணைதிரட் புயநபி பாத நண்ணினார். (4)

மல்லணி புயஅபித் தாலிப் மன்னவ
ரில்லுறைந் திரவினி லிருப்ப வொல்லையின்
வில்லணி தடக்கையப் பாசும் விண்ணகச்
செல்லலங் கவிகையா ரிடத்திற் சேர்ந்தனர். (5)

மதிதவழ் கொடிமதிண் மதீன மென்னுமப்
பதியுறை மன்னவர் பலரும் பண்புற
விதமொடு நபிசில மொழியி யம்பலுந்
துதிசெய்தப் பாசுவாய் விண்டு சொல்லுவார். (6)

தங்கிய மறைமுகம் மதுவைச் சார்ந்துதீன்
பொங்கிய நிறைநிலை பொருந்தி ளிரிணி
யெங்கடங் குலத்தினுக் கினிய வாருயி
ருங்களை யலதுவே றுலகி லில்லையே. (6)

மக்கமா நகருறை ஹாஷி மாகுலத்
தொக்கலின் முதியவாக் குறுகண் மாமணித்
தக்கமெய்ப் பொருளெனா தமக்கு ளாவிபின்
மிக்கவர் முகம்மதே யன்றி வேறிலை. (8)

தெறுபடை வீரத்திற் பொருளிற் செல்வத்தி
னுறுபவர் நமக்கெதி ரொருவ ரில்லையாற்
பெறுமொழி யொனறுள குறிப்பின் பெற்றியை
யறிவினோ டிரகசியத் தமைத்தல் வேண்டுமால். (9)

உரைத்திடு மொழியினை யுறுதி யாகவுள்
ளிருத்திவே றொருநினை வின்றி யாவருங்
கருத்தொரு கருத்தெனப் படுத்திக் காதுறப்
பொருத்தியென் மொழியினைப் பொருத்தல் வேண்டுமால். (10)

எனக்குயிர்க் குறுதுணை யீன்ற மாமணி
மனக்கலை யறிவினின் மதித்தி டாய்பொருள்
கனக்குமெய்க் காரணக் கடலிக் காசினி
தனக்கொரு திலதமொத் தனைய தன்மையார். (11)

பெரும்புகழ் முகம்மது பிறந்த நாட்டொடுத்
தரும்புவி யிடத்திற்றீங் கடுத்திடா வகை
வரம்பெறு மவரவர் வணக்கந் தன்னொடு
மிரும்பெருங் குலமெலா மிறைஞ்சி நின்றதே. (12)

கண்ணுறு மணியெனக் காமுற் றியாவரு
மெண்ணருஞ் சிறப்பொடு மினிது கூர்ந்தன
மண்ணலைக் குறித்தும ரடுத்துத் தீனெனும்
வண்ணமொத் தொழுகிநல் வழிபட் டாரரோ. (13)

அன்றுதொட் டும்மிடத் தடுத்துத் தீனிலைக்
கொன்றிய முதியவ ரொழுங்குஞ் செய்கையு
நன்றியும் வணக்கமு நயந்து நாட்குநாள்
வென்றிகொண் * முகம்மது விருப்புற் றாரரோ. (14)

மருப்பொதி சூடவைசூழ் மதீன மன்னவர்
விருப்பொடுந் தம்மன விருப்பும் வேறிலா
தொருப்பட வுயிர்த்துணை யுடைய ராக்குடி
யிருப்பது கருத்தில்வைத் திருத்தி னாரரோ. (15)

திருநபி முகம்மதுந் திருந்து நம்முறை
வருவது சாதமம் மதீனந் தன்னினுங்
கருதல ருளருறுங் கருத்தின் பெற்றியை
விரிதர வறிகிலன் விளம்ப வேண்டுமால். (16)

இன்னவை யனைத்தையு மெடுத்தப் பாசெனு
மன்னவ ருரைத்தலு மதீன மாகிய
நன்னகர்த் தலைவர்கள் கேட்டு நன்கெனச்
சென்னிக டுயல்வரச் செப்பு வாரரோ. (17)

நரபதி முகம்மதை மதீன நன்னகர்க்
காசென விருத்திபூ ரவர்க ளியாவரும்
விரைவின்குற் றேவல்செய் திருப்ப வேண்டுமென்
றொருவருக் கொருவர்முன் னுரைத்த துண்டரோ. (18)

---

* முகம்மது நயந்து உம்மிடத்து விருப்புற்றா ரென்றுகொள்க.

ஊக்கமுற் றெமதுளத் துள்ளு மாறுநும்
வாக்கினி லுரைத்தனிர் மதிக்கு மேலவ
னுக்கிய திஃதினி தொழிவ தன்றமர்
நீக்கிய கதிரயி னிருபர் வேந்தரே. (19)

நனிகளிப் பெய்தியெம் முள்ள நன்குற
வினியவை யிவையென விசைந்தோர் வாசகந்
தனியவன் றாதுவர் சாற்று வாரெனிற்
றினையள வினுமொரு சிதைவு மில்லையால். (20)

மறுவற வினையன மதீன மன்னவர்
நிறைபெற வுரைத்தவை கேட்டு நீணிலத்
திறையவன் றாதுவ ரினிய மாமறை
முறையொடுந் தெளிதர மொழிவ தாயினார். (21)

அரும்பொருள் வேதமுந் தீனி னுக்கமும்
பெரும்புவி யிடத்தினிற் பெருக நாளுமவ்
விரும்பதி யிடத்துறைந் திருப்ப வெண்மனம்
விரும்பிய துங்கடம் நட்பின் மேன்மையால். (22)

எமக்கனு வெனுமிட ரியவையு மேனுமர்
தமக்குவந் தவையெனுந் தகைமை வேண்டுமால்
கமைக்கருத் தொடுமெவ னுறைவன் காணுங்குங்
குமக்குவ டெனும்புயக் கொற்ற வேந்தரே. (23)

என்றுநன் னபியிவை யியம்ப வீறொடு
மன்றலம் பயபறு வென்னு மன்னவர்
நன்றுநன் றெனக்கலி மாவை நாட்டிய
வென்றியி னவையினில் விளம்பு வாரரோ. (24)

நிலமுறை தவறிலா நீதிமன்னவர்
தலைமுறை தலைமுறை வீரந் தாழ்விலார்
நலனுறும் புகழினர் நாம வேலின
ரலைவிலா ரெயர்குலத் தறிவின் செல்வரே. (25)

இத்திறத் தவர்களு மியாங்க ளும்முமை
யுத்தரத் தாடியி னுறையும் பாவைபோல்
வித்தக நெறிமுறை விளக்கு வோமிவை
யத்தலத் துறைந்தபி னறிய வேண்டுமால். (26)

இந்தநன் மொழிக்கிசையர் திறைவ நம்பதி
வந்திருந் தினிரெனின் மருவ லார்களா
லுந்திய பெரும்பகை யொடுக்கி வேர்வைகள்
சிந்திடு லுதிரமே சிந்தச் செய்குவோம். (27)

இவ்வணந் தவறிலா தியற்று வோமெனச்
செவ்வணக் கருத்தொடும் வலக்கை சேர்த்துவ
மைவணக் கனிகையீ ரெங்கள் வாய்மையிற்
குவ்வினிற் குறையிலை யென்னக் கூறினார். (28)

முகம்மது நபிக்கெதி ருண்மை வாசக
மிகலறத் திறல்பரு விசைப்பக் கேட்டிவண்
புகல்வது பொறுமினென் றுரைத்துப் புந்தியி
னகமகிழ் கைதமென் பவரி யம்புவார். (29)

இறையவன் றூதுவ ரிசைத்த நன்மொழிக்
குறுதிகொண் டெழில்பரு வுரைத்த மாற்றமே
பெறுமுறை யாயினு மின்னும் பேசினிற்
சிறுமொழி யொன்றுடென் றுரைத்துச் செப்புவார். (30)

மாரிவிண் டணிதிகழ் மக்க மாநகர்ச்
சீரியர் தமக்குமெம் மாயின் செல்வர்க்கும்
பேர்பெறும் வசனநிண் ணயத்தின் பெற்றியா
லீரமற் றுரல்லையி னிகலு மில்லையால். (31)

வரமுறுஞ் செல்வரும் வசனத் தாலெமர்க்
குரியவ ரியாவரு முரைத்த வாய்மையும்
பெரிகிய கிளையெனுந் தொடரும் பேரற
முரணொடு மன்பற முறிக்க வேண்டுமால். (32)

மறைமொழி குறித்துத்தீன் மெழிம ருதிவண்
குறைவிக ளொடும்பகை கொள்ளுங் காலையி
லுறமுறை யென்றும தளமி ரங்குமேற்
பிறமொழி யெடுத்தெவர் பேச வல்லவே. (33)

இனையன பலமொழி கைத மென்பவர்
மனநிலை தெளிதர வகுத்துக் காட்டலும்
நனிமுறு வலின்முகம் மதுநன் மாமறைப்
புனைதரு நாவினாற் புகல்வ தாயினார். (34)

ஆதிமுன் மொழிகலி மாவை யன்பொடு
மோதின ரொருதட னுயிரின் மிக்கவர்
பேதுறத் தீனிலை பிழைத்து நின்றவர்
தீதுற விருமையுந் தீய ராவரால். (35)

வரைத்தடஞ் சாயினு மதிதெறற் காயினுங்
கரைத்தெறி திரைக்கடல் சுவறிக் காயினுந்
தரைத்தலம் புரளினும் வாய்மை தக்கயா
னுரைத்தவை மறுத்தெடுத் துரைப்ப தில்லையால். (36)

முன்முக மலர்ச்சியின் மொழிந்து வேறொரு
வன்மமுற் றிடிலவை மறந்து மேலவர்
நன்மனத் தொடர்விடு நட்பு நாடொறுந்
தின்மையை வளர்ந்தறந் தெய்த்து நிற்குமே. (37)

சாலவு நட்பினைத் தணப்பி லாதவர்
மேலவர் நட்பினை வெறுக்கும் வாய்மையர்
சீலமொன் றின்றிய சிறுமை யாரென
நூலினும் வழக்கினு நுவலு கின்றதே. (38)

ஈதுமுத் திரையுமதி தயத் தெண்ணியத்
தீதறு மாமறைச் செவ்வி யோர்களி
லேதமிற் றலைவர்பன் னிருவ ரைத்தெரிந்
தாதரத் தேர்டுமிவ ணடைக வென்றனர். (39)

மல்வளர் புயமுகம் மதுதம் வாய்மொழி
கல்பினி லிருத்திநன் கென்னக் காவலர்
நல்வளம் பொருந்திய மதீன நன்னகர்ச்
செல்வர்தம் முறையிவை யெடுத்துச் செப்பினர். (40)

வேறு.

கேட்ட மனவை ரனைவரும் களவொளி வனப்பிற்
பூட்டு வார்சிலை வீரத்திற் குறைவுறுப் பொருளின்
வாட்ட மின்றிய ஹசுறசு வங்கிஷத் தவர்கள்
கூட்டத் தாரினி லொன்பது பெயரினைக் குறித்தார். (41)

கான்றி டுங்கதிர் வாண்மற வாதகை யினரா
யூன்று வெஞ்சின வீரத்தி னுடனபிறந் தவரா
யான்ற பேரறி வவுசுவங் கிஷத்தவ ரதனின்
மூன்று பேரையு முதன்மைய ரெனும்படி முடித்தார். (42)

இருகு லத்தினு முதியவர் பன்னிரு வரையும்
வரிசை நாயகன் றூதுவா முகம்மது நபிமுன்
விரைவி னிற்கொடு வந்தனா விறலுட னுலவித்
திரியுங் கேசரிக் குடன்படு முழுவையின் றிரள்போல். (43)

இலகு தீனிலைக் குரியரி னெழுபத்து மூன்று
தலைவ ரினுயர் தலைவர்பன் னிருவர்க டமக்கு
னிலைமை முன்னிலைத் தலைவராய் அசுஅதை நிறுத்தி
யுலகின் மேல்வருந் திறனெடுத் தியம்பி யுரைப்பார். (44)

மாறி லாதும திருகுலத் தினிற்சிலர் மறுத்து
வேறு கூறினு மிந்நகர்க் குறைஞர்கள் வெகுண்டு
சீறி னுமது புறங்காப் படைதிரண் டிடினுந்
தூறு தோன்றியின பறப்பெருந் துன்பமே வரினும். (45)

படைக்க லத்திரை யெறிந்தெதிர் வரும்பகைக் கடலைக்
கடக்கும் வேல்வல னேந்திய செழுந்தடங் கரத்தீ
ருடற்கு ளாவியொத் திப்பதிற் றிருவர்க ளுறைக்கீழ்
நடக்க வேண்டுமென் றுரைத்தனா நபிகணா யகமே. (46)

புகலு நன்மொழி யனைத்தையு மனத்துறப் பொருத்தி
யிகல றத்தெளிந் தாய்ந்துசீர் தூக்கியிந் நிலத்திற்
பகரு மிம்மொழிக் கீறிலை யெனநிலை படுத்தி
மகித லம்புகழ் மதீனமன் னவர்களா சம்மதித்தார். (47)

முத்த வெண்கதிர் முகம்மதே முன்னிலாத் திருவா
யுத்த ரத்தினி லறிவுபெற் றனமுள்ளந் தழும்ப
புத்தி பெற்றனம் பெருகிய கதிபெறும் பொருட்டா
யித்த லத்தெமக் கியம்புவ தியம்புமென் றிசைத்தார். (48)

* அந்த வேலையி லருளுடை யமரருக் கரச
ரிந்த மாநிலத் தரசெனு முகம்மதி னிடத்திற்
சிந்தை கூர்தர வாதிதன் றிருச்சலா முரைத்து
வந்தி ருந்தனா பிறரவ ரறிகிலா வண்ணம். (49)

இறைவன் றூதுவ வெனதுயிர்த் துணைவவிவ் விரவே
யறிவி னுலுயர் மதனியர் தம்மகத் துண்மை

---

* அந்த வேலையென்பது திக்கவியி லிக்காரிய மடங்கலு நிகழ்போ தென்று கொள்க.

யுறைய வாய்மையிற் பெறுகவொவ் வொருவர்பா லொழுங்கா
முறையி வர்க்குப்பி னிவரென மொழிந்துவிண் போனார். (50)

அவிரொ ளிச்சிறைச் சபுறயீ லருளுரைப் படியே
தவிசின் மீதிருந் தவரவர் வான்முறை தவறா
தெவரும் புந்தியின் மகிழ்வுற வலக்கர மீந்து
செவிகு ளிர்ந்தநன் மொழியொடு மறுதிசெய் கென்றார். (51)

மதியின் மிக்கநன் முகம்மதங் குரைத்தலு மதீனைப்
பதியின மன்னவர் முறைமுறை யெழுந்தடி பணிந்து
சிதைவி லாதநி மொழிகொடுத் தணிக்கரஞ் சேர்த்தி
விதுவுறு சூழுடு வினமுமொத் திருந்தனர் விளங்கி. (52)

திடங்கொண் முஹம்மதக் கரிக்குயிரப் பகையறச் செழுந்தீன்
மடங்க லேறென வருதிரண் மதீனமன் னவர்க
ளிடங்கொள் சிந்தையிற் றெரிதருந் தமியர்க ளினிமேற்
றொடங்கும் வீரத்தின் றிறமெனப் பணிவொடுஞ் சொன்னார். ()

என்று மிம்மொழி தவறிலா துறநிறை வேற்றி
நின்ற மன்னவர்க் காதிதன் கிருபையு நிறைந்த
வென்றியுஞ் சுவர்க் கமுமருள் குவனென விரித்தார்
மன்ற றானறிய மதுமல ரணிமுகம் மதுவே. (54)

கனைக்கும் வெண்டிரைக் கடற்புவி புகழ்அபுல் காசிம்
நினைக்குஞ் சிந்தையிற் பொருந்துற நிறைந்தநன் னபியைக்
குனிக்கும் வாசிலைக் காத்தொடு பணிந்திரு குலத்தோர்
தனிக்க டந்தரு களிறெனச் சாயினிற் சார்ந்தார். (55)

மதீனத்தார் வாய்மைகொடுத்த படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-2-க்குத்-திருவிருத்தம்-120.

---

* இருந்து மொழிந்து போயினா ரென்று மொருதொட ரிருகவி யாகவு முற்றுவினையை யெச்சவினை யாகவுங் கொள்க.



# யாத்திரைப் படலம்.



மண்ண கம்புகழ் முகம்மது மனங்களித் திருப்பப்
புண்ணு லாவயிற் காத்தரும் விடுதியிற் புகுதக்
கண்ண கன்புவிக் கெவைவிளைந் தனவெனக் கருத்தி
னெண்ண மோடமிழ்ந் தெழுந்திருந் தனனிபு லீசு. (1)

அற்றைப் போதிர வினிலணி மக்கமா நகரி
னுற்ற நன்னடு மறுகினி லுருத்தெரி யாமன்
முற்றுங் காத்தளித் திடுமவா மொழிந்திடு மொழிபோற்
சுற்று நாற்றிசை யடங்கலுந் தொனிபரந் திடவே. (2)

குறைஷி லாவள மக்கமா நகர்க்குறை ஷிகளே
யுறைவி மிந்நகர் முகம்மது மதீனத்து ளவரு
மறையும் வாய்மையின் வலக்கரங் கொடுத்தவ ரவர்க்கே
முறைமு றைப்படி யொன்றுபட் டொருமொழி முடித்தார். (3)

ஏதெ னிற்குறை ஷிகள றபிகளிவ ணிருந்தோர்
வேத னைப்படக் கொலைவிளைத் தாலயம் வீழ்த்திச்
சூது வஞ்சனைத் தொழிலொடு மாய்த்திடத் துணிந்து
போது கின்றன ரென்றுகூக் குரலொடும் புகன்றான். (4)

விரிந்த வீதிக டொறுந்தொறுங் கூக்குரல் விளக்கித்
திரிந்த மாயவஞ் சகன்றனை நோக்கிக்கண் செவந்து
புரிந்த நின்வலி கெடுக்குவன் காணெனப் புகன்றார்
சொரிந்து வானவர் புகழ்தர வருமிற சூலே. (5)

தேய மெங்கணு மிருள்கெடச் செழுங்கதிர் குலவ
மேய வாவியின் வனசங்கள் விரிதர விளங்க
மாய வஞ்சகன் கூக்குரன் மறுத்துவா யடைப்பக்
கூய வெத்திசை தொறுந்தொறுஞ் சேவலின் குலங்கள். (6)

ஒடிந்து வீழ்திரைக் குணகடற் கதிரவ னுதிப்ப
விடிந்த காலையின் மக்கமா நகரினின் வீரர்
கடந்த சொல்லொடு மதீனமன் னவர்களைக் கடிதி
னடர்ந் திவண்கொடு வருகெனத் தூதுவிட் டழைத்தார். (7)

உலவு நீள்கொடி மதீனமா நகரினி லுறைந்த
தலைவ ரிற்சில காபிர்க டமைவிளித் திரவி
னவித லன்றியோர் கூக்குரல் கேட்டனம் நடுவு
நிலைமை யற்றசொற் கேளுதி ரெனநிகழ்த் துவரால் (8)

மதின மன்னவ ரடங்கலு முகம்மது தனக்கு
முதிய சத்தியஞ் செய்தவன் தீனிலை முயன்று
பதியி னிற்கொடு போயெம ருடன்பகை விளைப்பப்
புதிய மாற்றமு முடித்தன ராமறைப் பொருட்டால் (9)

ஈது வந்ததென் னெமர்க்கிடர் நினைத்ததென் னிணங்காச்
சூதன் றன்னொடு பொருந்திய வாறதென் றொலையாப்
பாத கப்பழிக் கடிபிட முடித்ததென் பகர்ந்தீ
தோதக் கேட்டெவர் மனங்கொள்வர் நகைக்குமிவ் வுலகே. (10)

இந்த வாறுமெய் யெனில்கசு றசுவெனு மினமுஞ்
சிந்தெ னப்பெரு கௌசெனுங் குலத்தவர் திரளு
நந்து வெம்பகை முடித்திட மக்கமா நகரில்
வந்த தல்லது நல்வினைக் கலவென வகுத்தார் (11)

மாட மோங்கிய மக்கமன் னவர்வகுத் துரைப்பக்
கேடி லாமதீ னத்துறை காபிர்கள் கேட்டுக்
கூடுவெம்மினத் தவர்களி லிதிலொரு குறிப்பும்
நாடு வாரில ரென்கொலோ நீர்நவின் றதுவே. (12)

சமய பேதக முகம்மதென பன்றினை விளித்தோ
ரிமை நொடிபொழு தடுத்திரிந் தறிகில மியாங்க
ளுமை மறுத்தவாக் குண்மைக ளுரைப்பதெவ் வழியெம்
மமைதி யுற்றறிந் துமமிவை யுரைத்ததென னறிவால். (13)

இந்நி லத்தவர் மதீனமன் னவரொடு மிணங்கி
நன்னிலைப் படவிருப்பது பிசிப்புற நலியா
மன்னும் வஞ்சக முகம்மது மாயவிச் சையிரு
லுன்னி வந்ததக் கூக்குர லுரைத்திடு முறையே. (14)

அலது வேறிலை யெனச்செரு மதீனமன் னவர்கள்
பலரும் கூறின ரியாவருங் கேட்டிவை படிறென
றிலை யெனச்சிர மசைத்தவர்க் கினியன புகன்று
தலைவ மாரொடு மவரவர் சார்பினிற் சார்ந்தார். (15)

குறைஷி கட்கெதிர் மொழிந்திடுங் காபிர்கள் குலமு
மறைப டத்தனி யிருந்தமெய்த் தீனின்மன் னவரு
முறைமை யாக்கிய ஹிஜ்றிக்குக் குறைவற முடித்துப்
புறநி லத்தரு மவரவர் பதியினிற் போனார். (16)

பாத்த லத்தவர் போயபி னறமெனும் பழைய
புரத்தினி னுற்றவன் காபிர்கள் மதீனமா புரத்தோர்
திருத்துந் தீனிலை முகம்மதி னொடுந்திட வசன
முரைத்துப் போயவை யுற்றறிந் தொருங்கினிற் றிரண்டார். ()

இடுசு தைக்கதிர் மறுகினு மாவணத் திடத்துங்
கொடுமு டிப்பெருங் கோயில்க ளிடத்தினுங் குறுகா
ருடனு றைந்திடு மனையினு மதீனத்து ளோரைக்
கடிதிற் றேடினர் திரிந்தனர் சினத்தொடுங் கறுத்தே. (18)

தேடி யெத்திசை தொறுநதிரிந் தலுத்தொரு தெருவிற்
கூடி முந்திறென் பவரையிஞ் சகுதையுங் குறுகி
யாடை முந்திதொட் டீழ்த்துறக் கொடுமலக் கழித்து
வீடு றைந்தொளித் தவரிவ ரெனக்கொடு விடுத்தார். (19)

விரைந்து காபிர்கண் முன்கொடு விடுக்குமந் நேரங்
கரநது முந்திறென் பவரொரு திசைநெறி கடநதார்
பரந்து தேடின ரோடினர் காண்கிலர் பதைத்து
வருந்திச சஃதொருத் தரையுமே நெருக்கிட வளைந்தார். (20)

பற்று வார்சில ரடருவர் சிலர்காம் பதிய
வெற்று வார்சில ரிணைவிரன் மடக்கிமெய் வீசப்பக்
குற்று வார்சில ரடிக்கடி கொதித்தவ ரலது
சற்று மாறின ரலர்கொடுங் காபிர்க டாமே. (21)

அடிமி னென்பவர் சிலர்சில ராதகா திவரை
விடுமி னென்பவர் சிலர்சில ரவர்களை வெகுண்டு
பிடிமி னென்பவர் சிலர்சில ரிவனுயிர் பிசைந்து
குடிமி னென்பவர் சிலர்சிலர் காபிர்கள் குழுமி. (22)

ஒலித புஜகு னுத்துபா வுடனுமை யாவு
மலித ருங்குறை ஷிகளொடு மிவாமன மறுக
வலைவு செய்திடும் வேளையில் சுபைறுமா ரிதுவுங்
கலியி தென்கொனீர செய்தவை யெனக்கழ றுவரால். (23)

குற்ற மின்றிய ஒளசுடன் கசுறசுக் குலத்தோர்க்
குற்றி டும்பெருந் தலைமையிற் பெயரினி லுயர்ந்தோன்
பற்ற லர்க்கரி யேறிவ னெடும்பகை விளைப்ப
முற்று மோரமர் குலந்திர ளினுமுடி யாதே. (24)

மதின மானக ரவர்க்குமிப் பதியின்மன் னவர்க்கு
மிதம தன்றியே மிகலிலை யின்றிவன் பொருட்டாற்
புதிய வெம்பகை விளைந்தது போக்கவு மரிதிச்
சதிவி ளைத்தது தகுவதென் றெனவுரைத் தனரால். (25)

குவித ருங்குலத் தவர்சினங் கெடமதிக் குறிப்பாய்ச்
சுவைபறு மாரிது முரைத்தலு மிதயங்க டுணுக்குற்
றவம றிந்தில மெனவிடுத் தகன்றனர் மறைநேர்
தவமு யன்றிடு சஃதுவுஞ் சார்பினிற் சார்ந்தார். (26)

குறைஷிக் காபிர்கள் விளைத்திடுங் கொடியவல் வினையை
மறைத ரித்தநன் முகம்மதி னுடன்வகுத் துரைத்து
நிறைம னத்தொடும் பணிந்தெழுந் தவரிடம் நீங்கி
யுறையுந் தன்னகர் புகுந்தனர் சஃதெனு முரவோர். (27)

மகித லம்புகழ் சஃமதுமன் னவர்வள மதீனு
நகர்பு குந்தபின் செழுமறை முகம்மது நயினு
ரகம கிழ்ந்துதீ னவர்களை யழைத்தரு கிருத்திப்
புகர றத்தம துளத்தினி னினைத்தவை புகல்வார். (28)

வற்று ருப்புணற் றடந்திகழ் மதீனமன் னவரே
யுற்ற மெய்த்துணை யாயுடற் குயிரதா யுறுந்தீன்
வெற்றி யாய்வலி யாய்ப்புகழ் நிலைபெற விளக்க
முற்றும் நம்வயி னளித்தனன் றனிமுத லவனே. (29)

இந்த வூரினிற் குபிருழை யுழன்றன மினிமே
லந்த நற்பதி புகுவமே லெதிரடை யலரால்
வந்த வெம்பகை தடிந்திசு லாத்தினை வளர்த்து
நந்த மர்க்கெவ ரிணையெனத் தீனெறி நடத்தும். (30)

ஆதி நாயக னுரையவண் புகவரு மளவு
மேத மின்றியுங் கிருந்துபின் வருகுவ னியான்முன்
போதல் வேண்டுநம் மினத்தவ ரெனப்புகழ்ந் துரைத்தா
ரீது முத்திரைப் பொருளென யாவரு மியைந்தார். (31)

சோதி நாயகன் றிருமறைத் தூதுவ ரிறசூ
லோதும் வாய்மையு மறைப்பொரு ளெனவுளத் திருத்திச்
சாதி மன்னவர் மூவரு மிருவருந் தனித்துப்
போதும் வல்லிருட் பொழுதினும் பகலினும் போனார். (32)

உரத்தின் மிக்கபூ பக்கரு முமறுமு மாறும்
வரைத்த டப்புய வலியலிப் புலியும்வன் காபிர்
கரத்த கப்படும் பெயருமல் லதுசெழுங் கலிமாத்
திருத்துந் தீனவ ரியாவரு மதீனத்திற் சேர்ந்தார். (33)

மக்க மாநகர்த் தீனவ ரியாவரு மதீனம்
புக்கி னாரென மொழிபல பலபுறம் பொசிய
வுக்கு பாவுத் பாவமை யாவொலி துனைப்பத்
தக்க பேருடன் கேட்டபூ ஜகுலுட றளர்ந்தான். (34)

வடித்து மும்மறை தெளிந்தமன் னவரையும் வடிவா
ளெடுத்த வீரத்தின் றிறத்தவ ரினத்தையு மிகலாந்
தடுத்து நின்றவர் குலத்தையுந் தனக்குயிர்த் துணையா
யடுத்த பேரையும் விரைவினிற் றனித்தனி யழைத்தான். (35)

குறைவி லங்குலக் காபிர்க ளனைவருங் கூண்டு
நிறைத ரும்பெருங் குழுவினிற் புகமன நேடிச்
சிறிய வஞ்சகச் செய்கைய ரியாவர்க்குந் தீயோ
னிறைவ னேவலைத் தவிர்த்திடுங் கசட்டிபு லீசு. (36)

பொருமை யுள்ளவன் போலவும் வணக்கத்திற் புகழி
னறிவின் மிக்கவன் போலவு மறபிவர் கிடத்தின்
பிறவி போலவு முதிர்ந்தவன் போலவும் பிரியா
துறவி னுற்றவன் போலவு மனையினுற் றனனால். (37)

சாரு மெய்நரை யிறங்கிய முதியவன் றனைக்கண்
டாரு மிங்கிவர் பெரியரா மெனவகத் திருத்தி
யாரு மிங்கிரு மெனவுரை தனாமன மகிழ்வுற்
றீர முற்றிடு மறிவர்க ளிடத்தினி லிருந்தான். (38)

மருளி லாதுநன் மறைகளை மறுவறத் தேர்ந்து
தெருளு மேலவர் சிறியவ ரியாவர்க்குந் தெரியப்
பொருளுஞ் சொலனுமொத திருந்தன மொழிகளாற் பொருந்த
விருளும் புன்மனக் கொடியய னபூஜகு லிசைப்பான். (39)

வேறு.

மறுவெனப் பிறந்திவ் வூரிடை வளர்ந்த முகம்மது மாயவித்தை யினு, லறிவுறு வினைமேற் போட்டுநம் மினத்தா ரவர்சிலர் தமையகப் படுத்தி, யுறையுடன் திரத்தி னுருமுடித் திவையே புதுமையென் றுல கெலாஞ் செலுத்தி. நிறைபெறத் தனது பெயரையு நிறுத்தித் தீனையு நிலைநிறுத் தினனால். (40)

இனம்பெருத் திருந்து மிவைபரி கரித்தோ மிலையெனு மவமொ ழியுலகந், தனினிலை நிறுத்திவிட்டன மறிவுந் தரணியிற் பெருமையு மிழந்தே, மனமுழற் றுவ தென்னினி யவரவரக் குவந்ததாய் நினைத்தி டின் விளைந்த, வினைகளுஞ் சிதறி நமரவ ரெவர்க்கு மேன்மையும் வீடு முண் டாமல். (41)

வருந்தகை யிஃதென் றகுமதின் வலியை மாய்த்திட லரிதென மனைக்க, ணிருந்துபே தையர்போ லெண்ணின மேனினம் மிரும்புய வீரமும் பணையுந, திருந்திடா தினநந்தோய்ந் திகலவ ரெவருஞ் சிரித் திட வுலகமு நகைக்கு மருநதவத் துடையி ரீதலாற் பிழைவந் தடருவ தலதொழி யாதே. (42)

இகத்தினி லெவர்க்கு முடித்திட வரிதென றிருக்குமோர் வல் வினை யெனினு, மகத்தினி லொருமித் தெடுத்தொரு துணிவா யடுப் பதோர் முயற்சியுண் டாயின், ஜெகத்தினில் விளக்கும் புகழொடு முடி யுஞ் சிறியனென் வாக்கிற்செப் புவதென், பகுத்தறி வுடையிருங்கடம் மனத்திற் படுமொழி யலதுவே றலவே. (43)

முன்னைநா ளபித்தா லிபுவலின் பலகான் மொழிந்துவற் புறுத்திய தனைத்து, முன்னியுட் கணித்தா னிலன்கொடும் புலிவாலு நவிய தகை மையொத் திருந்தா, னின்னைநாட் டொடுத்தும் விடுவதன் றெனிதின் விட்டன மெனிலிரும் பதிபி, னென்னவன் முரணி லெவ்வள வெனினு மமைத்திட நமர்க்கரி தாமால். (44)

எள்ளுதற் கரிதாய் மிகுவலி படைத்திங்கிருந்தன னிதற்கு முன் னொருநா, ணள்ளிடை யிரவிற் றேவதன் மையினு னைமறு கிடத்தி னுஞ் சிறப்ப, விள்ளுதற் கரிதா யொருதொனி யெவர்க்கும் விளங்கி ற்று விடிந்தபின் றெுடித்துத், தெள்ளுநன் மொழியா லெவரையும் வினை வும் பொழுதினி லவைதெரிந திலவே. (45)

புரத்தினி லிரவிற் பிறந்தசொன னென்னற் பொழுதினிற் றெரிந்ததே தெனனில், வரத்தினி லுயாந்த மதீனமா நகரார் முகம்மதின் மார்க்கமன னெறியைக், கருத்தினிற் பொருத்தியுண்மை கொண்டவ் வூர் காக்குதற் கிவரையு மாசா, யிருத்துதற் கரிய வலக்கரங் கொடுத் தங் கெழுந்தன ரியாவரு மியைந்தே. (46)

அந்நெறி முறைமே முகம்மதுக் கீமான் கொண்டவ ரனைவருமதி னுப், பொன்னகர் புகுந்தா ரவர்களு மிவர்க்குப் பொருவிலா வரிசைக ளளிப்ப, மன்னியங் கிருந்து நாட்குநாள் தீனமறைபடா தோங்கிட வளர்த்தா ரிந்நிலத் திவனு மப்பெரும்பதியிற் போவதற் கிசைந்திருந் தனனல். (47)

புதுமறை வளர்க்கு முகம்மது மதீனப் பதியினிற் புகுவனேற் றொலையாச், சதிவிளைந் திடுவ தறுதிதன் வலியாற் றணிப்பவ ரிவணிலை யெவரும், பதியைவிட் டருங்கான் புகுந்தின மெனும்போப் பற்றறத் திரிவது மல்லாற், கதிபெறு தேவா லயங்களு நமர்தஞ் சமயமுங் காண்பதற் கரிதே. (48)

இந்தவல வினைகண் முடியுமுன் றமர்களெவர்களு மறையினூற் றெளிந்து, புந்தியிற் றெரிந்து செய்வது தவிரவெதனும் வினைபிறந் திடப் பொருந்தி, மந்திரப் பொருளாய்க் குலநலந் தழைக்க மாற்ற மொன் றுரைமினக வென்ன, நிந்தையும படிறுங் கொலையுமுள் ளழைத்த நெஞ்சின னபூஜகு லுரைத்தான. (49)

தலைவரிற் றலைவ னபூஜகு லெடுத்துச் சாற்றிய மாற்றமதனைத் துமுலைவுறக் கேட்டுப், பெரிதழிந் தொக்கு மொகதுமென றொருவருக் கொருவா, நிலைபெறத தேறி யிருக்குமவ வவையி னெஞ்சழன றொரு கொடுங் காபிர. கலைவலான சஙகைதச சிறைபடா விடுததல கருமமன றெனக்கழ றினனல். (50)

முறைததும் பியதை நிலைப்பதென் னினிமேன் முடித்திடுஞ் சூழ்ச்சியீ தென்ன, நிலைபெறத் தோங்தொத் தெவருமோர் கருத்தாய் நினைப்பது வினைதிற மலது, மறைபட விருந்து விரைவறத் தூங்கி வருத்திடும் பழியெனக் குறித்துப், பொறையுட னிருத்தல வினைக்கி டமகொடுத்தலெனப்புகன் றன்னொரு முதியோன். (51)

இதத்ததிம் மொழியே முகம்மதென பவனை யிருங்கொலைபடுத் தலே வேண்டும், வதைத்தவ ரிவாபொன றினரிவ ரொனுஞ்சொல் வழக் கினிற் றோன்றிடா வண்ணம், புதைத்தலுக் கிடமுற்றிருக்கு மோர்

வினையாற் பொருந்துவ தன்றிமேற் பழியாய்ச், சதித்திட லெவர்க்குந் தருவதன் றெனவே சாற்றின னதிலொரு தலைவன். (52)

நன்கில துறுஞ்சொன் முகம்மதைப் பிடித்தோர் மனையினினள் ளிரு ளடைத்துப், புனகமும் புனலுஞ் சிறிதுத விலவாய்க் போக்கு டன் வரத்துமில் லாம, வினைகணி னெவர்க்குந தெரிகிலா வண்ணமி ழைத்தமே லொல்லையி லிறப்பன, வனகொலை தொடரா மறவுமற்றொ ழுயு மெனவரைத் தனனொரு மதியோன. (53)

இல்லகத் தடைத்து மெனுமொழி யிபுலீ செனுமவன் கேட்டிள நகையடாய், நலலவை யுரைத்தீ ரடைத்தொரு பனைக்கு ளுள்பல கழிந தபின பாரக்கின, மெலலிணை படுத்தங் கிருந்தவர்போல வருகுவன் விரைவினிற் பசியே, தொல்லையி லிறப்பே தலன்றன வஞசனைக்கீ துயைல மொழிகலென றுரைததான. (54)

மற்றொரு தலைவன முகம்மதைப் பிடித்தோ ரொட்டையின் வெரி நுற வணைந்து, பற்றிய புகிரகரற் கொடுவரிக் குழுவு மடங்கலுங்கர டியும் பாம்புந, துறறிய வனத்திற போக்கிடி லவனற னுமழுந் தொலை திடு மிஃதே, யுற்றதென் றுரைத்தான கேட்டிபு லீசுண் டெவரொடு முரைப்பான. (55)

காட்டினில விடுததீ குடியறக் கெடுத்தீர கடுவிடப் பாநதளும் புலியும், கோட்டுடைக் களிறுங் கரடியின குழுவுங் கொணர்ந்து நமப தியினில விடுத்து, விடடுவன குலததி னெடுமவன படித்த விசனையி னுமிஃ தொழிக, நீட்டுவெண புகழீர மறுத்தொரு சூழ்சசி செப்பு மென் றுரைத்தனன றீயோன. (56)

அவரவ ருரைதத வசனமு மிபுலீ சானவ னுரைத்திடுந திறனுங் கவரறக் கேடடுப புநதியிற் றோநதுகாவல ரெவரையும் விளிததுப் புவியினி லெவர்க்கும பொருநதுற மாற்றம் புகன்றன ரியானுமென் கருத்துற், பவிதருஞ் சூழ்சசி யொன்றுள கேண்மினென அபூ ஜகல் பகாநதிடுவான். (57)

வங்கிடத் தொருவர் படைக்கல மெடுத்து முகம்மதைப் பொது வுற வளைநது. செஙகர மெடுததிட் டியாவரு மோஙகிச சினனபின னம் பட வுடலிற, பொஙகிய குருதி சிதறிடத துணிகள புரளப் புவியி னில வீழ்த்தி, நஙகளை கடிமேவாங கோததியை யுலகினடததுவோ நறை தரு புயத்தீர். (58)

இவ்வண முடித்தோ மெனிலொரு தீங்கு மியைந்திடா திரும்பழி சுமக்கி, னெவ்வொரு பெயருக் கொருபழி தொடர்வ ரெவருலகினிற் கொடுப் பவரியார், செவ்விதி னெறியே யலதுவே றிலையென் றிசைத் தன னியாவர்க்குந் தெரியப், பவ்வமுங் கொலையுந் திரண்டுருவெடுத்த பாதக னெனுமபூ ஜகுலே. (59)

அபூஜகு லுரைத்த மொழிவழி துணிந்தங் ககங்குளிர்ந் தனரனை வோருமம், புவியினி லெவரின் சூழ்ச்சியை நிகரப் படரெனப் புகழ்ந் திருந் திபுலீசு, குவிகுலத் தெவர்க்குங் குறிப்பினை யல்லது வேறிலை முகம்ம மதைக் குறுகிச, சவிமதி னமதீனப் புகுமுனம் விரைந்தித் தந்திர முடித்திடுமென்றன. (60)

இன்னவா றலது வேறொரு குறிப்பு மிலையெனச் சம்மதித் தெழுந்து, மன்னிய காபிர் மனையிடம் புகுத வரமுறும் வானவர்க் கிறைவ ரன்னறுங் கிரணச் சிறைபல வொடுக்கிப் படரிரு விசும்பி னின்றி ழுந்து, நன்னபி யிறசூல் முகம்மதி னிடத்தி னண்பொடு சலாமுரைத் துரைத்தார். (61)

மேலவன் றூதை முகம்மதை விளித்து வினைகொடுங் காபிர்க டிரண்டு, கோலிய பழியை முடித்திடத் துணிந்த குறிப்பெலாம் படிப் படி யுரைத்து. மாலவர் புதுமை மக்கமா நகரிற் றணிதிகழ் மதீனமா நகரிற். சீலமுற் றிருந்து நன்னெறி வழாது தீனிலை நிறுத்திடுமெனவும்.

கட்டுரைக் கடங்காக் காபிர்த மாவி கனந்திடு மெனனவு மிறை யோ, னிட்டமுற் றுயத்த திறங்கிய வசன மெடுத்துரைத் தெழின் முகம் மதுவை, மட்டறப் புகழ்ந்து பிறரவ ரறியா வண்ணத்தி னொருநொடிப் பொழுதின, விட்டொளி பரப்பிக் ககனிடைப் படர்ந்தார் விறல்பெறும விண்ணவர்க் கரசர். (63)

மங்குலிற் சுழலுந் துவசநீண் மாட மதீனமா நகரினி லுறைந்து வெங்குபிர் கடிந்து பீஸபீல செய்ய மேலவன் விதித்தன னென்ன, விங்கிவ ருரைத்த மாற்றமு மனத்தி னெண்ணிய நினைவுமொன் றாய்ச் சென், றகமு மகமு முவகைபுறங் குளிப்ப அகுமது யாத்திரைக் கியைந்தார். (64)

தருமுகம் மதுநம் மிறையவன் றூதாய் நபியெனும் பட்டமே தரி த்து, வருமுறை பதிஞை காண்டினின மாசத் தொகையினி லறபீவுலவ் வலினிற், றெரிதருந் தேதி யைந்தினிற் றிங்க ளிரவினிற் சிறப்பொடு மதீனப், பெருநகரக் கேக விருந்தன ரிஃது பிறந்தது காபிர்கடமக்கே.

இற்றையி னிரவின் முகம்மது மதினத் தேகுதற்கிசைந் திருந் தனரென், றெற்றரி லிபுலீ சுரைத்திடு மொழிகேட் டோரவ ரனைவருந் திரண்டு, பற்றறும் உக்பா வுத்துபா துதலப் பாதக னபுஜகு லுடனு, முற்றுறுங் கதிர்வாட் கரங்களி னேந்தி முரட்பெருங் கணத்தொடு மெழுந்தார். (66)

அறபிகள் குலத்தின் முதியர்போ லிபுலீ சானவ னவர்கண் முன் னடப்ப, வுறைதரும் பவத்துக் கொருவருக் கொருவ ருரைக்கொணுப் பாஷைக ளுரைத்து, மறுவறு மடங்க லேற்றினங் கிடந்த மலைமு ழைஞ் சினைக்கொறித் திரள்க, ளரவணைந் ததுபோற் காபிர்க ளெவரு மகுமது மனையினை வளைந்தார். (67)

தெருவினும் வாயிற் புறத்தினுங் கதிர்க டிகழ்சுதை மாளிகைப் புறத்தும், பெருகிய திருமுன் றிலின்செழும் புறத்தும் பிறங்கிய திரு மதிட் புறத்து, நிரைநிரை காபிர் செறிந்திர ணெருங்கி நின்றன ரிருந் தன ரவரி, லொருவரி னொருவர் பிரிந்திடா துறைந்தாங் குரவரிற் சில வர்சொல் லுவரால். (68)

இருந்திடந் தோற்று திமைக்குமுன் பறப்பனவர்களுந் தெரி கிலா தொளிப்ப, னருகி நந் தவரை மதிமயக் கிடுவ னறிகிலா வேற் றுரு வெடுப்பன், வெருவியிங் கெவரு நாவெழுங் காமல் விழித்தது வழி த்ததா யிருப்பக், கருவினைத் திடுவன முகம்மது படித்தமாயங்கள் கவ லுதற் கரிதே. (69)

இல்லகத் துளனோ புறத்தடைந் தனனோ வெவரறி குவர்வளைந்த வரிற், கல்லகங் குழைய விலங்கின மலையக் கற்றிடு மாயமந் திரத் தா னெல்லையி, னெதிர்ந்தா னெனிற்றொடர் பவரா ருயிர்செகுத் திட வளைந் திருந்தார், வில்லணித் தடக்கை வீரர்கள் பலபா னெனக்கொலே விளைவதென் றுரைத்தார். (70)

எடுத்தெடுத் தெவரும் வெருவுறா மாற்ற மியப்புதல் விடுத்திரில் லகத்துட், படுத்தனன் காந்துபோயின னலனோர் கடிகையி னமர் கையிற் படுவன், றெடுத்திடுங் கரும முடித்தனந் துணிந்ததுணி

வைவிட் டையுற லெனச்சொற், கொடுத்திபு லீசு காபிர்தம் மனங்கள் குறைவறத் திருத்தியங் கிருந்தான். (71)

உரப்பிய வுரைகண் மறுத்துநித் திரையை யொழித்திடுந் திசைதிசை பதின்ம, ரிருப்பிடம் பெயர்ந்து நின்றுநின் றலவி யெவ்வழியினும்விழி பரப்பும், காப்பிட மினிமற் றில்லைமா மதீனுக் காண்பது மரிதலன் மார்க்கம், விரிப்பது மொழிந்த தின்றென வுரைத்து வீறுட னபூஜகு லிருந்தான். (72)

நபிமுகம் மதவைத் தீவினை யிருளைத் துடைத்திடு நறுஞ்சுடர் மணியைக், கவ்வுதற் கரிய கொலைசெய நினைத்துக் காபிர்கள் வளைந்தவ ணிருப்பப், புவனமும் விசும்புஞ் செறிந்திருட் படலம் போர்த்தவவ் விரவினிற் றுயிலொன, றவரவர் கருத்துங் கண்களு மயங்கத் தலைகுழைத் தசைப்பவுந் தடுத்த. (73)

சாய்ந்துடன் முடக்கிக் கிடப்பவர் சிலர்வாட் டனைமறந் தணிமுகமுழந்தாட், டோய்ந்திடத் துயின்றோர் சிலருட னிமிர்த்துச் சுடரினைக் கருவிழி செருக, மாய்ந்தவர் போலக் கிடந்தவர் சிலர்வெண் மணியிதழ் விரிப்பவைம் புலனுந், தேய்ந்தர வொடுங்கிக் கிடந்தவ ரெவருந் திருமனைப் புறந்தொறுஞ் செறிந்தே. (74)

தனைமதித் தடர்ந்த காபிரின்குலமுந் தறுகண னெனுமிபுலீசுங், கனைகட லுறங்குங் காட்சிய தென்ன றங்கிய காலையி னுலக, நினையுமுன் னறியும் பெரியவ னருளா னெடுவிசும் பிழிந்துநந் நபியோர், மனையிடத் துறைந்தார் செவ்வியிற் சிதையா மணிச்சிறை வானவர் கோமான். (75)

மனறன்முங் கியபொற் புயமுகம் மதுவை விளித்திறை சலாம்வகுத் தோதி, யின்றிர வினினும் மனையினி லலியை யியல்பெறத் துயிலுதற் கியற்றிப், பொன்றிலாப் பசிய போர்வையிற் போர்த்துப் புறத்தினிற் காபிரகண முகத்தில, வென்றிகொண் டொருகை மண்ணெடுத் தெறிந்து விரைவினி லெழுமெனப் புகன்றார். (76)

அமரருக் கரசா மொழிப்படி திருந்த அலிதமை யணைமிசைபடுத்தித், தமரொடு மிருந்து மூன்றுநாள் கடந்தென் றன்வயின் சாருமென் றுரைத்துக், கமைதரு மிருகண் மணியினுஞ் சிறந்த புதல்வியர் தமக்குங்கட் டுரைத்துத், தமைவளர்த் துவந்த பாத்திமா வெனுமத் தாயர்க்கு முரைத்தெழுந் தனரால். (77)

திருமனைப் புறத்தி னின்றொரு பிடிமண் செங்கையி னினிதெடுத் தேந்தி, யொருதரம் யாசீ னோதிநாற் றிசையு முறங்கிய காபிரை

நோக்கி, யிருதிருக் கினும்வா யினும்புக வெனவென் றெண்ணியம்
மண்ணினை யெறிந்து, சொரிகதிர்ச் சுதைமா மனையிடங்கடந்து தோன்
றினர் நீண்டமா மறுகில். (78)

ஒருகதிர் நிகராப் பெரும்பதித் தெருவி னுலவிய தெனத்தனி
நடந்து, கருவிழித் துவர்வா யாயிஷா வெனும்பெண் கனியெனுங் கன்
னியைப் பயந்த, மருமலர்த் தொடைத்திண் புயத்தபூ பக்கர் மனைத்
தலை வாயிலைக் குறுகி, விரைவொடு மொருசொற் பிறந்திட வுரைத்து
விளித்தனர் முகம்மது நபியே. (79)

மறுவிலா வசன முகம்மதின் றிருவொலி யெனமனத்தினிற் குறித்
தெழுந்து, கிளைதந் நபியுளி னொருதா மெனிலு நினைத்திவ ணடைந்
தவ ரலரின், றிவிறைய வருளா லெண்ணினை யதனை யடைந்தன மோரா
வென வெண்ணிக், கறைகெழும் வடிவேல் வலக்கர னேந்திக் கடைத்
தலை யடுத்தனர் கடிதின. (80)

வேறு

உறும்பொன் றுறையாப் பொருந்தசையை யொளிரும் புவன
மடந்தையரின், சிறப்புற்றிருப்பச் செய்தவிற சூலை வரிசை நபிநாயே,
யறப்பொருங் கிருளிற் றனித்திவணி னடைந்த வரலா றென்யறபபொங்
கிருளிற் றனித்திவணி னடைந்த வாரா றெனசெவியிற், பிறப்பற
வுரைப்ப வேண்டுமெனப் பிரியமுடனினி றினிதுரைத்தார். (81)

உரைக்கு முறுதி மொழிகள்சில துளது மனையிற் பிறரவர்க,
ளிருக்கி லகற்று மெனவிறசூ லிசைப்ப வினவி னயலவர்கள், வருக்க
மிலையிங் கெழுகவென மனையிற் கொடுபோய்த் தவிசின்மலர், விரிக்கு
மணிப்பஞ் சணையிருத்தி வெற்றி யபூபக் கருமிருந்தார். (82)

இற்றை யிரவி னியாத் திரையென் றிபுலீ சுறிந்து காபிருடன்,
சொற்ற துணிவு மருவார்கள் சூழ்ந்து மனையை வளைந்ததுவு, முற்ற
துணைவா னவாக்கரச ருரைப்பின படியாற் பூழ்கியெடுத், தெற்றியெறி
ந்த வரவுமெடுத் திசைத்தார் மாலை மலர்த்தாரார். (83)

கோதுங் கதவெங் குபிர்க்குலத்தைக் குறைப்ப மதீன மாநகரிற்,
போது மெனுஞ்சொற் கேட்டுவந்து புகியேயான றாதே யினியிவ
ணிற், றீதுவிளையுந் தரிப்பதலச செல்வ தறனே யிமைப் பிற்றறு,
காதியானு முடனவருதல சாதமெனக் கட்டுரைத்தனரால். (84)

உறுமெய்த் துணைவ ரொருவனெனு முறையான் மிகவுமன மகிழ்
ந்து, செறுநரறியா நெறிவிரைவிற சேறல் வேண்டு மதற் கியையப்,

பெறுவா கனங்க ளிலையிருவர் தனித்துப் பெருங்கான் கடத்தனம்,
திறைவன் பரமென் றிசைப்ப அபூபக்க ரெடுத்தங் கியம்புவரால். (85)

உரத்தின் வலியிற் சுமைக்கிளையா தொட்டை யிரண்டென் னிடத்
திலுள, பரித்தற் குமக்கொன் றியானளித் தேனென்றார் நபியும் பரிவி
னொடும், பொருத்துங் கிறையம் பொருத்தி யெமக் கருளுமெனுஞ்
சொற் புகலமனஃ, திருத்தி யிஃதே நெறிமுறையென் றிணங்கி விரை
விற் கொடுத்தனரால். (86)

இருவர் மனமும் பொருந்தவரு மிளவ லொருவன் றனையழைத்
துத், தெரிய நெறிக்கூ லியுமளித்தொட் டகமுமவன்ற னிடஞ்சேர்த்தி,
முருகு துளிக்குந் தௌறுமலைப் பொதும்பிற் றினமூன் றகன்ற தற்
பின்,விரைவி னுலாந் தினத்திரவின் வாவென் றிவையும் விளம்பினரால்.

திரிகைக் கனியு மோதகமுந் திரட்டித் துகிலிற் பொதிந்துதம,
தருமை மகவா ரசுமாதன் னரையிற் கயிற்று லுறவிறுக்கி, வரிசை மனை
யார் கொடுப்பவெதிர் மருவா ருயிரை விசும்பேற்றுங், குருதி வடிவே
லேந்துமலர்க் கொழுஞ்செங் கரத்திற் கொண்டனரால். (88)

கொறிக டமைமேய்த் தாமீறைக் குறுப்பி னிடத்திற் றினந்தோறு,
முறைய வுரைத்தி ரெனச்சாற்றி யுயிரோ ருருக்கொண் டுற்றனைய,
சிறுவ ரப்துல் லாவெனும்பேர்ச் செம்மற் செழுஞ்செங் கரம்பிடித்து,
மறுவி கமழ்ந்த முகம்மதுட னெழுந்தார் மனையா டமக்குரைத்தே. ()

புகழோர் வடிவு கொண்ட அபூபக்கர் பொதிசோ றினிதேந்தி, யிக
லா ரறியா தெழுந்துநடு விருளின் மறுகூ டினிதுலா, முகிலார் கவிகை
முகம்மதுமக் கானங் கடந்து முரம்படர்ந்த, வகிரவார் நெறியிற் காற
டவி வந்தார் தௌறுமலைச் சார்பில். (90)

ஓங்க லடுத்தோர் பொதும்பரின்மூன் றுழுவை யுறைந்ததென நபி
யும், வாங்கு சிலைக்கை வள்ளகிபூ பக்க ரெனுமெய் மதியோரும், பாகங்
ரப்துல் லாவெனுமப் பாலனுட னுமினிதிருப்ப,வீங்குதிரை பைங் கடற்
குணபால் வெய்யோன் கரத்தினை விளாத்தனவால்; (91)

மறையு மதியும் பொருவாத வதன நபிமா ளிகைப்புறத்தி, னிர
வின் வளைந்து காத்திருந்தோ ரெழுமு னிபுலீ செழுந்தனனிற், திரை
விட் டணிவாய் முகத்தினுமண் கண்டான் றிகைத்தா னிருகரத்தால்,
விரைவிற் றுடைத்தான் வாய்ப்பூழ்தி யுமிழ்ந்தான் றனைமெய் மறந
தானே. (92)

அவதி யுறக்க மனைவோர்க்கும் வருமோவென்ன வதிஜயிப்ப,னெ
வரு மிருப்பத் தனிகரப்ப திவனோ வெனவா யிதழ்கறிப்ப, னுவர்மண
ணெவர்வா யினும்புகப்போ டுவனோவென்வு நகைத்துழல்வன், புவியிற்
பகையும் விளைந்ததெனப் பொருமி மனத்திற் புழுங்குவனால். (93)

எண்ணி யிடைந்து வளைந்துவிழித் திருக்கின் றீர்சாளெவர் வாய்
க்கு, மண்ணை யறைந்தான் முகம்மதென்போன் மாயம் விளைத்துப் புற
ம்போனான், பண்ணுந் தாயிலி யிறந்தவர்போற் கிடந்தாற் பயனும் பெ
றுவதுண்டோ, துண்ணென் றெழுமி னெழுமினெனச் சொன்னான்
மறித்துஞ் சொன்னானே. (94)

அதிருந் தொனியா லிபுலீசு மறையக் கேட்டு நடுங்கியுடற், பதறி
யெழுந்தார் சிலர்குழலிப் பகர்நதிட் டெழுந்தார் சிலர்முகத்திற், புதயக்
கிடந்த பூழ்தி துடைத் தெழுந்தார் சிலர்வாய் மண்ணையுமிழ்ந், திதென்
ன கொடுமை கொடுமையென வெழுந்தார் சிலர்நெஞ் சிடைந்தாரே. ()

குழுமிக் கிடந்தபல திசையுங் குழறி யெழக்கண் டபூஜகுலு,
முழுகிக் கிடந்த குலத்தினடு வெழுந்தான் முகம்வாய் முழுதினுமண்,
விழுமித் தொழிலியா தெனக்கேட்ப விரைவி னிபுலீசென் பவனியா,
னொழிய வெவர்க்கும் வாயினின்மண் விழுந்த தெனக்கட் டுரைத்தன
னால். (96)

எடுக்கு முவர்மண் ணெடுத்தினத்தோ ரெவர்வா யிடத்தும் புகு
த்திக்குடி,கெடுக்கும் படிக்குக் கெடுத்தெழுந்து கிளத்துந தனதுமறை
நெறியி, னடுக்கு மவர்கள் வயினடைந்தா னவனா லினிமேனம தினத்
திற், றொடுக்கும் பகையைத் துடைப்பவர்க ளிலையென் றிவையுஞ்
சொன்னானே. (97)

வேறு.

உரைத்தவை யனைத்துங் கேட்டங் கபூஜகு லொழியாத் துன்பம்
பெருத்துநின் றிடைந்து வாடிப் பிறாசிலர் தம்மைக் கூவித்
தரித்தவ ரெவரென் றில்லுட் சார்ந்துநோக் குகவென் றோத
வரித்திறற் குருளை போன்ற வலியல திலைவே றென்றார். (98)

இல்லுறைந் திரவின் கண்ணே யிருந்தனன் கண்கட் டாக
வொல்லையிற் புறத்திற் போந்தா னுறுதொலை கடந்தா னன்று
சொல்லருங் குவடுங் கானுஞ் சுற்றியே திரிவன் றேடிப்
பல்லரு யெழுக வென்றான் றிசைதிசை பாந்து போனார். (99)

பாடுறைந் திற்புக் கோனைப் பற்றிலார் வீணின் முட்சார்.
காடுறந் தெவர்கள் காண்பார் காண்பது மரிதென் றெண்ணி
விடிலாப் புகழ்சேர் வண்மை விறன்முகம் மதுவைத் தானுந்
தேடிய பெயர்கள் போலச் செல்லுந்தன் றிசையிற் சென்றான். (100)

ஆலயத் திடத்துந் தீதேறு ரணிமனை யிடத்துஞ் சேர்ந்த
சோலையி னிடத்துஞ் சீறார் சுற்றினந் துறைகற் சார்புங்
கோலமுள் ளீந்தின் கானுங் குரிசினந் நபியை மேலுங்
காலிட விடமின் றென்னக் காபிர்க டேடி னாரால். (101)

கிரிப்பொதும் பிருந்து மாறுக் கிளரொளி வனப்பின் மிக்கார்
மருப்புய னப்துல்லாவைக் கூவிமா நகரம்புக்கி
யிருப்பவ ரெவர்க்குந் தோன்றா தேதிலார் நடத்துஞ் செய்கை
விருப்புறத் தெரிந்து வல்லே விரைந்திவண் வருக வென்றார். (102)

அறநெறி வடிவங் கொண்ட அபூபக்கர் மதலை யான
சிறுவரும் பதியிற் புக்குச் செய்திக ளனைத்துந் தேர்ந்து
பொறையிடத் திவர்கட் கோதிப் பொருந்தலர் காண்கிலாது
முறைமுறை மூன்றுநாளு மிவ்வண்ண மொழியா நின்றார். (103)

கொறிகண்மேய்த் தாமி றென்னுங் கோளரி யெவர்க்குந் தோன்றா
இறைவன் றூதர் பால்வந் திருந்துபால் கறந்து காய்ச்சி
நிறையுறப் பருகச் செய்து நெறிவிடுத் தடவி சுற்றித்
திறனொடு நகரஞ் சேர்ந்து மீண்டுசென் றடைவன் மாதோ. (104)

நிலம்பிற ழாத நனனோர் நெறிமறை தவறா வள்ளல்
சிலம்புறைந் திருப்பக் கண்ட சிலம்பியப் பொதும்பர் வாயிற்
சலம்புரிந் திகலாநின்ற தரியலா நோக்கா வண்ணம்
பலனபெற மெய்ந்நூ லாரா வேய்ந்தது பரிவி னன்றே. (105)

முகம்மத ரிருக்குஞ் சார்பிற் சிலம்பினூன் மறைப்ப வோர்பாற்
புகைநிறக் குனறிச செங்கட் புறவினங் குடம்பை செய்திட்
டகடுறைக் கருவிட் டனபா யணிமணிச் சிறையாற் போர்த்துப்
புகாறச் சேவலோடும் பொருந்தியங் கிருந்த தன்றே. (106)

பொருந்துதல் பயிலாக் காபிர் திசைதொறும் புகுந்து தேடிக்
கருந்தடங் கொண்டதற் செவ்விக் கபினைபி னுலகங் காத்து
விரிந்ததீன் விளக்கஞ் செய்யும் வேதிய ரிறசூ லுலலா
விருந்தவா றாஞ்சி நின்ற விறம்பிடத் தடைந்தா ரன்றே. (107)

விரவிட வரிதாய் நின்ற வேய்வனத் திடத்துஞ் சாய்ந்த
பருவரைத் துறுகற் பாங்கும் பரிதியின் காய்பு காமற்
செருகிய கடத்துந் தேடிச் சேரலர் சிலம்பி றாலாற்
புரையறப் போர்த்து வைகும் பொதும்பரின் வாயில் வந்தார். (108)

கரத்திலேந் தியவை வேலுங் காலிணைக் கபுசு நீண்ட
வுரத்தினு முகத்துங் வேர்வை யுதிர்ப்பொடுங் காயிர் கூண்ட
வரத்தினை யிருகண் ணா மன்னபூ பக்கர் நோக்கித்
திருத்துமெய் யிறசூ லுல்லா செம்முகம் பார்த்துச் சொல்வார். (109)

இரவினி லிருளி னூர்விட் டிவணிடை யடைந்தோ மாற்ற
ருவரை யிடத்துந் தேடி யடைந்தனர் முழந்தாண் மட்டுந்
தெரிவது நமக்கிங் கன்னோர் திறத்தொடுங் கவிழ்ந்து நோக்கின்
விரைவொடுங் காண்ப ரென்ன வேதியர்க் கெடுத்துச் சொன்னார்.(110)

இருவர்நா மிருப்பப் பூமி னிருநதபல் லுயிருங் காக்கு
மொருவனம் மிடத்தை நீங்கா துடனுறைந் திருப்பக் காயிர்
தெரிதருங் கண்ணிற் காணச் செயலுமற் றுண்டோ வென்ற
ருவரை முழையிற் புக்கி யருக்சனைத் திருக்கும்வள்ளல் (111)

ஒருங்கினி னின்ற காபி ரொருவருக் கொருவ ரிந்த
மருங்கினிற் பொதும்பிற் புக்கு நோக்குவம் வருக வென்றார்
நெருங்கிய சிலம்பி நூலும் நீளசிறைப் புறவின கூடுஞ்
சுருங்கிடா தழியா தியாவா தொடருவர் பொதும்பி னென்றார். (112)

இப்படிச் சிலர் கூறக்கேட் டெவருமெம் மருங்குநோக்கி
மைப்படி கவிகை வள்ளன் முகம்மதைக் காண்கி லோமென்
றெப்புர வகன்ற நெஞ்சோ டுளைந்துலைந் தடவி சுற்றி
மெய்ப்பொடும் வெயாவை சிந்த விலங்கல்விட் டகன்று போனார்.(113)

முகம்மதின் புகழைப் போற்றி வகுலுதவா முபுல்கா சீநதன்
னகமலர் களிக்கு மாறு யணிசசிறைப் பறவை யாவு
மிகலவா போனா ரென்ன விதயங்க ளுறப்பூ ரித்துப
புகாறக் கூவிச் சுற்றிப் பொருப்பைவிட் டகன்றி டாதே. (114)

யாத்திரைப்படலம்-முற்றிற்று.

ஆக படலம்-3-க்குத்-திருவிருத்தம்-234.



# விடமீட்ட படலம்.



நகரைவிட் டகன்று கான்சூழ் நகத்திடத் துறைந்து தேடு
மிகலவர் கண்ணிற் காணா திருந்தவ ணிருக்குங் காலைப்
புகலபூ பக்கர் செவ்வி மடிமிசை பொருந்த வாசந்
திகழ்சிரஞ் சேர்த்தி வள்ளல் செழுந்துயில் புரிவ தானார். (1)

விடுங்கதிர்க் கனற்கண் வேங்கை மெய்பணை சிரத்தைநேர் சேர்த்த
மடங்கலே றென்னச் செவ்வி முகம்மது துயிலும் போதி
லிடங்கொளந் தாமு மண்ணு மிடைற நெருங்கி விண்ணோர்
நெடுங்கழை வரையைச் சுற்றிக் காவலி னிறைந்து நின்றார். (2)

மறைநபி துயிலா நின்ற மலைமுழை யதனின் கண்ணே
குருவளை யனேக மாங்கோர் வளையினிற் கொடுங்கண் வெவ்வாய்த்
தெறுநுனைப் புரைப்பற் புண்ணாச் சிறுபொறிப் படத்த செஞ்சூட்
டெறுழ்வலிக் கரிய பாந்த ளிருந்தளை நீட்டிற் றன்றே (3)

பொரியரைத் தருக்க ளியாவும் புதுமலர்சொரியுங் கானின்
கிரியிடைப் பொதும்பர் வாயிற் கேசரி யனைய வள்ளல்
வரிதருங் கமலச் செங்கண் வளரிடத் தரவு தோன்றக்
கரிமருப் புதிர்க்கும் வெள்வேற் கரத்தபூ பக்கர் கண்டார். (4)

படியடி பரப்பச் செய்யா முகம்மதும் பரிவு கூர
மடிமிசை துயின்றா ரிந்த வளையிடத் தரவுங் கண்டேன்
விடிவதெவ் வாறோ வென்ன வெருவிநெஞ் சுளைந்து போர்த்த
பிடைவையிற் கிழித்துச் சுற்றிப் பேதுறா தடைத்து நின்றார். (5)

அடைத்தவப் பிடவை நீக்கி யகுமதுக் கணித்தாய் வேறோ
ரிடத்துறும் வளையிற் சர்ப்ப மெதிர்ந்தது கண்டு தேங்கிப்
படத்தினி லொருபாற் சீறிப் பதுமமென் கரத்தை நீட்டி
விடத்தினிக் கஞ்சி யேதும் வெளியறப் புகுத்தி னரால். (6)

மற்றொரு வளையிற் றோன்ற வடைத்தனர் பொதும்பர் வாயிற்
சுற்றிய வளைக டோறுந் தோன்றிய துகிலைக் கீறி
முற்றினு மடைத்தா ரோர்பான் முழையினுக் காடை காணா
துற்றுள மிடைந்து வாடி யுருகினர் துயிற லோர்ந்தே. (7)

ஒருவனை யன்றி யாவு மடைத்தன முரக மீங்கு
வருமெனின் மறைப்ப யாது மிலைத்திரு வள்ள லார்நித்
திரைமறுத் திடுத னன்றன் றெனவுட றிடுக்கிட் டேங்கிப்
பருவரல் சுமந்து நின்றார் பணிவர வறிகி லாரே. (8)

இருமனம் பேதுற் றங்ங னிருப்பவப் புழையின் கண்ணே
விரிதரு கவைநா நீட்டிக் கட்செவி விரைவிற் றோன்றப்
பெரியவன் றூதர் தம்பால் வருமுனம் பெட்பி னோடு
மொருதிருத் தாளை நீட்டிக் காப்பதற் கொருமித் தாரால். (9)

மடிமிசை யிருந்த காந்தி மதிமுக மசைந்தி டாமற்
கடிநறை பொதுளுஞ் செவ்விக் கமலமென் வலத்தா ணீட்டி
விடவா வுறையும் பாலில் வெளியணு வெனினுந் தோன்றா
திடனற வுள்ளங் கால்கொண் டின்புற வடைத்தா ரன்றே. (10

புறப்படற் கரிதாய் வேகம் பொங்கிக்கண் செவந்து சீறி
மறைப்படும் வளைக்கு ளார்ந்த வல்லுட னெளித்து நீட்டிக்
குறிப்பொடு கெந்த நான்குங் குழைவற நிமிர்த்து வாய்விண்
டுறப்பட வுள்ளந் தாளிற் கவ்விய துரக மன்றே. (11)

கடிவழி யுதிரஞ் சிந்தக் காறளர்ந் தசைந்தி டாம
னெடியவன் றூதர் செய்யு நித்திரைக் கிடறி லாமற்
புடையினி லிருந்த சாப்பம் புறப்படற் கிடங்கொ டாம
லுடலணு நடுக்க மின்றி யிருந்தன ருணர்வின் மிக்கார். (12)

மிதிப்படும் வளையிற் காலை யிடுத்திலா கடித்து மென்னைக்
கொதிப்பொடு கெந்த நான்குங் குறைபடச் சீறிச் சீறிப்
பதிப்பொடு முடலை வீங்கிப் படுவிட மனைத்துஞ் சிந்தி
யதிர்ப்பொடும் வேக மீக்கொண் டடிக்கடி கடித்த தன்றே. (13)

மாசறத் தெளித்த பஞ்சின் வாய்ப்படு நெருப்புப் போன்றும்
வேசறச் சுட்ட சாம்பர் மீதுறும் புனலைப் போன்று
மூசிவெள் ளெயிறு சிந்த முரணாராக் கடித்த வாயி
னூசொடும் விடத்தின் வேக மாகத்தின் முழுது மேற்ற. (14)

பன்னருங் கொடிய வேகம் பரந்துட லனைத்துந் தாக்கிச்
சென்னியிற் பரப்பச் சற்றே சிந்தையின மயக்கந் தோன்றத்
தன்னிலை தளரா துள்ளந் தாளையும் பெயர்த்தி டாம
லந்நிலை யிருந்தார் செவ்வி யகுமதும் விழுத்தா ரன்றே. (15)

மதிபீடத் திரண்டு செவ்வி மரைமலர் பூத்த தென்ன
விதியவன் றாதர் கண்கள் விழித்தபூ பக்கர் தம்மை
யெதிரினி னோக்கச் சற்றே மயக்கமுற் றிருந்தார் கண்டு
புதியகா ரணங்க ளேது முளதெனிற் புகலு மென்றார். (16)

தடவரைப் பொதும்பி னீவிர் தண்மதி கடுப்பச் சாய்ந்தென்
மடிமிசை துயில வாதி வல்லவ னுரையா லிந்த
நெடுமுழை யதனி னேராய் நெட்டுடல் வளைக்கும் பாந்தள்
கடிதினிற் றலையை நீட்டக் கண்டனன் கவலை கூர. (17)

அப்பெரும் பாந்த ளிங்ஙன் வருமுன மடைப்பான் வேண்டி
யொப்பரு மதியின் காந்தி யுரித்தெனத் துகிலை சென்றன்
கைப்படக் கிண்டுள் ளோடிக் கரந்திட வடைத்தே னப்பாற்
றப்பொடும் வேறு வேறு புழைதொறுந் தோன்றிற் றன்றே. (18)

இனையன புழைக ளெள்ளா மாவெழுந் தெதிரத் துன்ப
மனதினிற் படரச் சோதிக் கலையினை வலிதின் வாங்கி
நனிபெறக் கிண்டு கிண்டு நலந்தர வடைத்து நின்றேன்
குனிசிலைத் தழும்பின் கையாய் கொடும்புரை யொன்ற லாமல். (19)

முடங்கிநீண் டிருளுள் ளார்ந்த முழையொன்றிற் றலையை நீட்டத்
தடங்கொள்கோ டிகமில் லாதாற் றாளினை நிமிர்த்துக் காலுந்
தொடங்கிலா வண்ண நீங்கா தடைத்தனன் றளைப்பற் பார்ந்தள்
விடங்கள்கான் றரிதிற் சீறி வெகுளியிற் கடித்த தன்றே. (20)

ஊறுபட் டுதிரங் கால வலதுளங் தாளைப் பற்றி
மாறிலா தின்னுந் தீண்டி வாங்கிய ததனா லுள்ளம்
வேறுபட் டிமைப்பி னேர மெய்ம்மயக் குற்றே னென்று
மீறிலான் றாதே யிங்ஙன் விளைந்தகா றிதெனச் சொன்னார். (21)

அளவுறு மரியே றென்னு மபூபக்க ருரைப்பக் கேட்டுப்
படர்பரு வரலுற் றுதி யளித்திடும் பயனு மோர்ந்து
புடையினிற் பொருந்துந் தாளைப் பெயர்த்திடு மெனப் புகன்றார்
வடிவினி னிகரின் றென்ன வந்தமா முகம்ம தன்றே. (22)

தரைத்தலம் புகல வீரந் தகத்தமை நினையா நீட்டு
மரைத்தடப் பதத்தை மெல்ல வாங்கினர் வாங்கச் சோதி
விரித்தசூட் டெரிகட் பாந்தள் விளங்கியவ் வளையை நீங்கித்
துருத்திநீர் வெளிவிட் டென்ன விரைவொடுந் தோன்றி நின்றே. (23)

நெட்டுடன் முடக்கி வாய்ந்த கழுத்தையு நிமிர்த்து நின்ற
விட்டறு விடத்தின் பாந்த டனைவிழித் தெதிர்ந்து நோக்கி
வட்டவா ருதிரு ளெட்டுத் திக்கினு மணிவா னத்து
மெட்டிய கீர்த்தி கொண்டோ ரினியன மொழிகள் சொல்வார். (24)

அருமறைப் பொருளாய் நின்றோ னமைத்தபன் னகமே யாங்கள்
வரையினோ ரிடுக்க ணுற்ற வந்திருந் தனமல் லாமற்
பரிவுட னுனக்கி யாது குற்றமும் பயின்ற துண்டோ
தரையினெம் முன்னோர் முன்னு ளியற்றிய தவறு முண்டோ. (25)

ஏதொரு குறையுஞ் செய்த தின்றிவை யிகழ்ந்தெண் ணும
னீதமில் லவரைப் போல நெடுப்புடை யதனின் வந்து
தீதுறக் கொடிய வேகந் தலைக்கொளச் சினந்து சீறி
வேதனை படவாய் வைத்த தென்னென விரைவிற் கேட்டார். (26)

வேறு.

மறையின் வாயுரை கேட்டெழின் முகம்மதை நோக்கி
நிறுவி நின்றிடு நெடுந்தலை நிலத்திடை சேர்த்தி
முறைமை யின்சலா முரைத்துமுள் ளெயிற்றுவாய் திறந்து
குறைவி லாதுளத் திருந்தவை யனைத்தையுங் கூறும். (27)

ஆதி நாயகன் றிருநபியே பிளணடியே
நீதி யன்றிலே தீண்டின னெடுங் காலம்
பூத ரத்தினெம் முன்னண சிலமொழி புகன்று
ரேதெ னச்செவி கொடுத்திட வேண்டுமெய் யெழிலோய். (28)

செவ்வி நாயகன் றிருவொளி யினிலுருத் திரண்டு
குவ்வி டத்தினி லுதித்தரும் புதுமையிற் குலவி
யவ்வி யங்களைந் தகுமது நபியென வழகா
யெவ்வெ வர்க்குநன் மறைநெறி நடத்துவ ரெனவும். (29)

அவர்க்கு நல்வழி யாயிசு லாத்தினி லானோர்
சுவாக்க மெய்துவ ரெனவுமச் சொல்லினைக் கடந்தோர்
பவக்க டற்கிடந் தலைதுவ ரென்னவும் பரிவி
னுவக்கும் வெற்றருச் சமயங்க ளொழிந்திடு மெனவும். (30)

பொருவி லாக்கடற் புவிநடு மக்கமா புரத்தி
னரிய நாயகன் றருமறை விளக்கியங் கிருந்திவ்
வரையி னுந்தணி வருகுவ ரென்னவு மதீனத்
திருந கர்க்கர சிருந்துதீன் றிருத்துவ ரெனவும். (31)

இனைய வாசகமனைத்தையு முணர்ந்துளத் திருத்திக்
கனியுஞ் சிந்தையுங் கண்களுங் களிப்புற நோக்கிப்
புனித மாக்குவ தென்றெனத் தினந்தொறும் பொருவா
நினைவி னோர்வழித் தவத்தொடு மிருந்தன னெடுநாள். (32)

இற்றை யின்முதன் மூன்றுநாட் டொடுத்திறும் பிடத்திற்
குற்ற மற்றபே ரொளியொடு மான்மதங் குலவி
வற்று ருப்புது மணத்தொடுங் கமழ்ந்தன மனத்தி
னுற்ற தேதெனக் குறித்திடா தொருவனை யுறைந்தேன். (33)

அந்த ரத்தினும் நிலத்தினும் பெருங்குவ டனைத்தும்
வந்து வானவர் புகழ்த்தர வருஞ்சல வாத்தைச்
சிந்தை கூர்தரப் புகல்வதுங் கேட்டுளந் தேறி
யெந்தம் நாயக ரிவணுறைந் தனரென விசைந்தேன். (34)

தொல்லை வல்வினை தொடர்பவங் களைந்துநற் சுவனத்
தெல்லை யின்பதங் கிடைத்ததின் றெனத்தவழ்ந் தேகி
யொல்லை யிற்குவ டடங்கலுந் தேடின னொளிருங்
கல்ல கத்துழை கண்டன னிருவிழி களிப்ப. (35)

வரைமு ழைச்சிறு வாயிலிற் சிலம்பிநூன் மறைப்ப
விரிசி றைப்புற விருப்பது நோக்கினன் விரைவிற்
பெருகுங் காப்பழித் திடுவதன் றெனப்பிரிந் தெதிங்கிப்
புரைய றத்தனி மற்றொரு வளையினிற் புகுந்தேன். (36)

சிறப்பு ழைக்குளென் னெட்டுட லொடுங்கிடச் செருகிப்
புறப்ப டுந்திசை யனைத்தை மடைத்தனர் புழுங்கி
வெறுப்பொ டும்மிருந் தொருவயின் மேவினன் விரைவின்
மறைப்ப டத்தடத் தாள்கொடவ் வளையையு மறைத்தார். (37)

வரையி னிற்புற மகலவு வழியிலா துமது
திரும லர்ப்பதங் காணவுஞ் செயலிலா தழிந்து
முரித ரும்படிக் குவட்டுளை யிடந்தொறு முடங்கித்
திரித லல்லது வெளிப்பட லரிதெனத் திகைத்தேன். (38)

போது தற்கிட மன்றியும் புதியனு யகன்றன்
றாத ரைத்தெரி சித்திட வரும்வழி தூர்த்த
பாதகத்தையு நினைத்துமைக் கொடுவிடம் பழுத்த
தீது றுங்கொடிற் றெயிர்ப்பறக் கடிததனன் சிறியேன். (39)

கொடிய காலமுற் றொருபல னிணைத்தவர்க் கடுத்து
முடியும் போழ்தினிற் றடுப்பவ ரெவரையு முாணித்
தடித னன்றெனு மறிவினாற் றடிந்தே யன்றிப்
படியி னோர்ந்தவ றிலனென வுரைத்தது பாந்தள். (40)

பாந்தள் கூறிடக் கேட்டலும் பதுமமென் மலரிற்
சேர்ந்த பொன்முகக் குளிர்ப்பொடுங் களிப்பொடுஞ் சிறப்ப
வாய்ந்த வாய்மையின் விளித்தரு குறவா வழைத்துக்
கூர்ந்த தம்மனத் துவகையிற் சிலமொழி கெடுப்பார். (41)

நெறியு ரைத்தனை கண்டனை நிலநெடுங் காலத்
துறவு கொண்டனை பவத்தொடர் துன்பமு மொழித்தாய்
குறைவ றப்பலன் படைத்தனை வாழ்ந்துநின் குலத்தோ
டுறைகெ னப்புக ழொடுமுரைத் தனர்மறை யுரவோர். (42)

வேத நாயக ருரைத்தலும் விடத்தெயிற் றரவம்
பாத மென்மல ரிடத்தினிற் சிரங்கொடு பணிந்து
கோத றக்கவி மாவெடுத் தோதிமெய் குழைத்துப்
பூத ரத்துறு நெடுவளை யிடைபுகுந் ததுவே. (43)

அரவ கன்றபி னெழிலபூ பக்கர்செம் மலர்த்தாள்
விரித ருங்கடி வாயினிற் கொடுவிட மகல
மரையி தழ்த்துளி நீரினை விரலினுல் வாங்கிப்
புகா றத்தட வினர்செழும் புகழ்முகம் மதுவே. (44)

இருள கற்றிய கதிரவன் கதிரென விதழிற்
பரிவு பெற்றிடு மயிர்தநீ ருடலெலாம் பரந்த
கரிய வெவ்விட மனைத்தையு மணுவுறக் கடிந்து
சொரியுங் காந்திகொண் டரியமெய்ம் மாசறத் துடைத்த. (45)

பன்ன கக்கொடு விடப்பெரும் பருவா றீர்ந்து
மின்னு செங்கதிர் வேலபூ பக்கரும் விறலார்
மன்னர் மன்னவர் முகம்மது நபியுடன் வரையி
னின்னி சைப்புக ழொடும்புதி யனைதொழு திருந்தார். (46)

விடமீட்ட படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-4-க்குத்-திருவிருத்தம்-280

———



# சுருக்கத்துத் தொடர்ந்த படலம்.

அடுக்க லின்புற மூன்றுநா ளிருந்துநா லாநாள்
விடுக்குஞ் செங்கதி ராதவன் மேற்றிசைக் கடலு
ளொடுக்கு மெல்லையி னத்திரி யிரண்டட னுவனு
மிடுக்க ணின்றி மெய்த் திடத்தொடு மவ்விடத் தெதிர்ந்தான். ()

கதிர்பு குந்திருள் பரந்தது தொத்திநன் கடிதி
னெதிரி னொட்டக மிரண்டுங்கொண் டடுத்தன னினியிவ்
விதிரு மென்மலர்க் கான்செறி வரையிடம் விடுத்துப்
புதிய தோர்நெறி புகவெழு மெனநபி புகன்றார். (2)

முத்தி னைத்திரு வாய்மொழி முறைமையிற் சிதகாப்
பத்தி யின்னபூ பக்கரு முகம்மதும் பரிவிற்
குத்தி ரப்புறம் விடுத்தெழுந் தனர்கதிர் குலவச்
சித்தி ரத்திரு மதியிருந் தெழுந்தன சிவண. (3)

துட்ட வலவிலங் கினங்களொன் றென்றினைத் துரத்தி
விட்ட வாய்க்குர லதிர்தரும் வரையிடை விரைவின்
பட்டகாரிருட் போதினிற் படரொளி குலவ
வொட்ட கத்தினை மேற்கொண் டனர்தூதர னுயர்ந்தோர். (4)

அறிவின மிக்கபூ பக்கரு மாமறை பவனும்
பிறிதோ ரொட்டக மேற்கொடு வதிந்தனர் பிறங்கிச்
செறியும் வலவிருட் கானிடை யாவர்க்குந் தெரியா
திறுகற் சினநெறி கொண்டனன் கூலியி னிளவல். (5)

நஞ்சு முளளெயிற் றரவுறை வரையினள் ளிருளிற்
பஞ்ச ரத்திருந் தெழுமரி யேறெனப் பரிவின்
கஞ்ச மெனமுக மலர்தரப் போயினர் கணியா
வஞ்சர் நெஞ்சகம் போனறமுட் சிறுநெறி வனத்தில். (6)

கூன வானுறு வெங்குவட் டிடையெழில் குலவும்
தான வாரண முகம்மதின் றனுவிற்றண் கதிரால்
வான வாவிர விபினகதி வெளமலை மலைந்து
கான வாரணக் குலஞ்சிலம் பினகடல் கடுப்ப. (7)

எயிற்று வல்விலங் கினங்கிரி கானெலா மெடுத்து
வயிற்றி டைப்படுத் திருந்தவல் லிருட்குல மறுகப்
பயிற்றும் வேதவா சகமுகம் மதைக்கொடு பரிவின்
கயிற்ற சைப்பிடா தேகின சுரிநெடுங் கழுத்தல். (8)

ஆவி போலுறு தோழரு மாசநா யகருங்
காவின் கானையும் வலைசெறி பொறைகளுங் கடந்தார்
பூவி ரிந்தசூட் டளகொடும் புள்ளினம் புலம்ப
வீவி லாக்கனைத் திரைகுணிக் கடற்றிசை வெளுத்த. (9)

மட்டு வார்பொழில் சூழ்தரு மக்கமா நகரம்
விட்டு நந்நபி கொடியவெங் கானிடை விளங்கப்
பட்ட காரண மெவைகொலென் றஞ்சியுட் பயத்தோ
டெட்டிம் பார்ப்போ லெழுந்தன னெடுங்கதி ரிரவி. (10)

இரவின் முட்செறி வனங்கடந் திரவி தோன் றியபின்
பரல்கி டந்தவெம் பாலையிற் பகனடுப் போதி
லொருகு றும்பொறை யிடத்தினி லறிவுறு முரவோர்:
விரைவி னேகியங் கிறங்கிறர் நிழலிலா வெயிலின். (11)

கடங்க டந்துமெய் வருந்தியங் கிருந்தகா வலர்க்கோர்
படங்க லின்புறம் விரித்திரிந் தனரபூ பக்க
ரடங்க லாரெனுங் குபிரறுத் திடவவ தரித்த
படங்க மேலெனத் துயில்புரிந் தனர்முக மதுவே. (12)

பஞ்சின் மெலலணை விடுத்தரும் பரலினிற் படுத்த
மஞ்சு லாங்குடை யரசரை நோக்கிவஞ் சகரான
மிஞ்சும் வலவினை யெனதிசை தொறும்விழி பரப்பி
யஞ்சி யையமுற றிருந்தனா துணையபூ பக்கர். (13)

செறிம யிரத்திரு கியமரு புடைச்சிறு
குறும றிததிர ளொடுமயிர்ப போர்வைதோட் கொண்டு
வெறிக மழ்ந்திவ ணிருப்பவரெவன வியந்து
தறிகை கோலகடை காலொடு சார்ந்து நோக்கினனால். (14)

அடைந்து நோக்கிய தொறுவனை விளித்தபூ பக்கர்.
மிடைந்த விக்கொறி யின்னதோ பிறரதோ விளம்பென
றிடைந்தி லாமொழி கொடுத்தலுந் திரிபுமென் னுருக்க
ளொடும் புறச்சில கூவியு முளதென வுரைத்தான். (15)

கூவி யின்கொறி விடுத்துநின் கொறியினைக் குறுகிப்
பாலி னைக்கறந் திவண்டரு கெனப்பணிந் தோடிக்
காலி னைத்தகைத் துறுங்கடை காலினிற் கறந்து
சீல முற்றவ ரிடத்தினிற் கொடுத்தனன் றிறலோன் (16)

வில்லு மிழ்ந்தமெய் முகம்மதுங் குயிலினை விடுத்திட்
டொல்லை யின்னெழுந் திருந்தயி னுயிரெனுந் துணைவர்
முல்லை மன்னவன் றருநறும் பாலினை முறையாய்ச்
செல்லு லாங்கரத் தளித்தலும் புசித்தனர் சிறப்ப. (17)

மந்த ரப்புய முகம்மது மதிமுக நோக்கிக்
கந்த மென்மலர்ப் பதமிரு கரங்கொடு தடவி
யெந்தை யீர்பவந் துடைத்தன னெனப்புகழ்ந் திடையன்
புந்தி கூர்தரக் கொறியொடும் வனத்திடை போனான். (18)

இருந்த நாயக ரிருவரு மிவணொடு நேரம்
பொருந்த நீதென வத்திரிப் புறத்தணை விசித்து
வருந்தி லாதெழுந் தருங்கட நெறிகளை மறுத்துத்
திருந்து நன்னெறி யிஃதென விரைவொடுஞ் சென்றார். (19)

இகன் மனத்தபூ ஜகல்விடு மொற்றர்க ளியாரும்
பகும னத்தொடும் பன்னெறி தொறுந்தொறும் படர்ந்தார்
சகியி லாதொரு கொடியவன் றனித்தொரு பரிமேற்
றிகைம றுத்தவ ரிருவரும் வருநெறி சேர்ந்தான். (20)

கிள்ளை வேகமும் வலக்கரங் கிடந்தவெள் வேலும
வெள்ளை மென்றுகிற் கஞ்சுக னைதருட வெயாவுந்
துள்ளி நாற்றிசை பாபயிய துணைவழி கருமாய்க்
கள்ள வன்மனத் தவன்வரும் வரவினைக் கண்டார். (21)

மாதி ரத்தினை யடர்த்ததிண் புயத்தபூ பக்கர்
சீத மெய்ந்நறை முகம்மது திருமுக நோக்கி
வேத னைத்தொழி லபூஜகல் திசைதொறும் விடுத்த
தூத ரின்னுள னலதுவே லறனெனச் சொன்னார். (22)

கசைபு றப்புடைத் திடப்புவி யதிர்ந்திடக்கலிமா
விசையுபு வேகமுங் கையினிற் சுழற்றிய வேலு
நசைவி டாதுகொண் டிவணடுத் தனவிக னடப்ப
விசைவன வேறினி யுரைப்பதின் றெனவு றசைத்தார். (23)

வலிய வெம்பகை வளைந்திடிற் றனித்தவர் மனத்தி
னலிவி லாதெதிர்ந் தடருதல் தீனடு நிலைமை
கலியி தென்கொலென் றையுறல் கலங்குத லீமா
னிலையும் வீரமும் புறம்விடுத் திடுபவர் நெறியே. (24)

இறுதி யற்றவ னொருவனு மிருவரிங் கெய்தி
மறமு திர்ந்தெதிர் வருபவ னொருவன் மற் றிவனுற்
பெறுவ தென்கொலென் றுரைத்தனர் தீனிலை பிரிக்குஞ்
செறுந ராகிய விலங்கினங் கெடவருஞ் சீயம். (25)

புறுக் கத்தும்பருந் துயவும்பா சடைத்தருப் பொரிய
மறுக் கதிர்க்கதி ரவன்சுடு நெடுஞ்சுர வழியி
னுறுக் கடும்விசை குசைப்பரி கடிதிற்கொண் டோடிச்
சுறுக்கத் தென்பவன் களிப்பொடு மடுத்தனன் றொடர்ந்தான். ()

அடுத்த வெம்பகை வனைமனத் திடையதி ஐயித்துப்
படுத்த மண்டலை நோக்கியிப்பாதகன் பரியை
விடுத்தி டாவிழுங் காவகைக் குளம்பினை விசித்துப்
பிடித்தி டென்றனர் தூதெனத் தீனிலை பிடித்தோர். (27)

ஈண்டு வல்லவன் றூதர்தந் திருமொழிக் கியைய
வேண்டு மல்லது வெருத்திட லரிதென விரும்பித்
தூண்டி வந்தவன் பரியினுற் குளம்பையுஞ் சுருக்கிப்
பூண்ட ரங்கெனப் பிடித்தது கடனடுப் புடவி (28)

புதிய சித்திர மெனப்புரி நூ லுடைச் குபலன்
சுதையி னுற்சமைத் திடுபரி யென்னவுங் கதுணுச்சாக்
குதியி லாதுனைத யாவளை முகங்குழை யாது
பதிய நினறது கொடியவன் விடுநெடும் பரியே. (29)

கடிய வெம்பரி நடந்தில வெனமனங் கனன்று
நெடிய மத்திகை விசைதர வங்கையி னிமிர
வடிய டித்தனன் காலினிற் புடைத்தன னனைய
கொடுமை யாற்றலை யசைத்தது நடந்தில குதிரை. (30)

வேறு.

தொலைதொடர்ந் தெய்த் திடுங்குணமோ கடுவிசையாற் குளம்புதுண்டப் பட்ட தோமெய், மலைதாவஞ் சனைவிளக்கு முகம்மதுசெய் வினைத்திறனோ மாய மியாதென, றலைவுறு நெஞ் சினனுகிக் கவிழ்ந்து

நோக்கலும்வேக மொடுங்கவாசி, நிலைபடநாற் குளம்பையும் பூதலம் புதையப் பிடித்திறுக்கி நெருக்கக் கண்டான். (31)

தூரகத்தின் பதத்தினிப்பூப் பிடித்திருப்ப தருமதுதஞ் சூழ்ச்சியா மென்,றெரியுமனம் வெகுளாது முகமலர்ச்சி கொடுப்பதர்போலினிது நோக்கி,வாகருணைக் குரிசினும்மைத் தொடர்வதிலை யிகன்மறுத்து மக் கமீதிற், பரிவுடன்செல் குவன்புடவி விளைக்குமிடர் தவிர்த்திரெனப் பணிந்து சொன்னான். (32)

சத்தியமும் பொறையுமன நீங்காத நெறிதவறுத் தரும வேந் தும், புத்தமுத மொழுகுமறை விளைந்திரு வாய்மலர்ந்து புடவிநோக்கி, யத்திரியின் றடைபடுத்தல் விடுத்தியென விடுத்திடமண் ணதிரத் தாவி, யெத்திசையுந் தடவிவரு மருத்தென்னத் தாள் பெயர்த்திட் டெழுந்த தன்றே. (33)

புன்மைகவர் வஞ்சகநெஞ் சினர்க்குமறை தினந்தோறும் புகட்டி னும், நன்மைபய வாரெனுஞ்சொற் பழமொழியைப் புதுக்குவன் போ னடுக்க நீங்கிக், கொன்னுனைவேல் கொடுதாக்கி முகம்மதினைத் தரையவீழ்த்திக் கொல்வே னென்ன, வன்மைமனத் தொடுமபுரவி தனை நடத்தி வெகுண்டுவந்தான் மதியி லானே. (34)

சினந்துவெகுண் டடற்பரிகொண் டடர்பவனை முகம்மதுதந் திருக்கணோக்கி, மனந்தனிற்புன் முறுவலொடும் வெகுளாது முன் போல்வன் பரியின் றளை, யினம்பிகுத்தி டெனவுரைப்பக் கொடியவ ன றனுயிர் பிடுங்கி யெடுத்துவாரிக், கனந்தனிலுட் படுத்தியுனும் படி முழுந்தா டெரியாமற் கவ்விற்றன்றே. (35)

கள்ளமிகல் பழிபாவ மாறுத கொடியசுறுக் கத்தென்றோது, முள் ளிரக்க மில்லாதான் முகம்மதுதந் திருப்பெயரை யுரைத்துக்கூவி விள் ளரிய குறைசெயினும் பொறுத்தளிப்ப துமதுமறை மேன்மையன்றோ தள்ளரிய தடைவிடுத்தி ரிகலேனென் றகம்வேறுய்ச் சாற்றினால்.

இகலெடுத்து வருமமுறைத் தவர்மறுத்தும் வணக்கமொழி யி சைத்தா ரென்னிற், புகலரிய பிழைபொறுத்தந் தவர்செயலுக் கியல் படுத்தல் புநதி நேரென், றகமதனி லகுமதுதா நினைத்தவனிதனை நோக்கி யாடன் மாவின், றகைதவிர்த்தி டெனவுரைப்ப வெவர்க்குந் தெரிதாத்திரியத் தள்ளிற்றன்றே. (37)

கடரிடத்திற் பதங்கனினை வறியாது வருவதுபோற் சுறாக்கத்
தென்போன், புடவிபரிப் பதம்பிடிக்கு முனம்வேகத் தொடுமெடுத்துப்
பொருவிலாத, வடவரைபோற் புயமுகம்ம தினைசெகுப்ப வேண்டு
மென மனத்திற் றாங்கிக், கடிதினிற்கை வேல்சுழற்றி யிமைக்குமுனம்
வரநபியும் கண்ணுற்றாரால். (38)

எடுத்தகொலைத் தொழின்மறுப்பத் தடையிருபோ தடுப்பமனத்
தினிலெண்ணாது, தொடுத்தவன்றன் மனவலியும் வாள்வலியு மதிஜ
யித்துத் தூயோன் றாத, ரடுத்தபகை களைதறிரு மதீனநகர்க் கேகிய
பின் னாதலென்றாற், கடுத்திகலி யிவன்விளைக்கு மபாறிவு தென்கொ
லெனக் கருத்துட் கொண்டார். (39)

சிந்தையினில் வெருவலற முரணாடிப் பின்னுமெனைத் தெறுத
றேறி, வந்தனன்றன் வீரமுங்கோ ரமுநடுங்கப் பற்றெனவாய் மலர்
ந்து கூறக், கந்துகத்தின் பதநான்கு மடிவயிறு மங்கவடிக் காலுங்கூட்
டிக், குந்தியசை வறவமிழ்த்திப் பதித்ததென வசுந்தரைவாய்க் கொ
ண்ட தன்றே. (40)

தள்ளாத வருத்தமுடற் றேலாத பயமிதயத் தடத்த டாகங்,
கொள்ளாத நலிதலையுந் துன்பமுடன் சூழ்ந்து குடிகொண்டு தோன்ற,
விள்ளாத துணிவுமத மதமூக் மிகனினைவு வெகுளிமானம், புள்ளாரும்
வேல்வீர மனைத்துமதி மறப்பப்புறம் போய் தன்றே. (41)

பாடலத்தின் பதமுமத னகடுமவன் பாடும்பதப் படியுந்தோன்றா,
தீடுபடக் கவ்வியது நபியினுரை மறுத்தோரை யெரிமீக்கொண்டு, சூடு
படு மழற்குழிவெவ் விடப்பாந்தட் பகுவாயின் றளைப்பற்பூண, வோ
டியர விழுங்குவதித் தரமெனச்சொல் வஃதுபோல வுணர்த்திற்றன்றே.

தலையசைத்து வால்வீசிப் புரவிபடும் பாடுமிரு தாளிறேனவின்,
மலையமனம் வேறாகிக் கைவேலை நிலஞ்சேர்த்தி வாயங் காந்து, சொலு
மொழியீ தெனவறியா தடிக்கடிவாய் குழறிவிழி சுழலவாடி, யுலைபி
லிடு மெழுகாகி யென்செய்வோ மிதற்கெனநினை றுருகினானல். (43)

அபூஜகல்த னுரைதேறி நாற்றிசைக்கும் பரந்தவர்போ லாகா
வண்ண, மிவர்திசையிற் கொணர்ந்திடுக்கண் விளைத்ததுநம் விதி
நோவதென்கொன் மாயச், சனிதாள வுருவெடுத்தோ ரிராங்கார்மேவிர
ங்கி யுரைசாற்றி னாலும், புவிவிடுவ தலவிறுதி முடிந்ததெனப் பொரு
மலொடு புலம்பினானல். (44)

மனைமனைவி புதல்வர்பொரு ளவைநினைந்து கண்ணீர்வார்ந்தொழு
கியோட, வினுமுகம்ம தினைப்பரவிக் கேட்கிலவ ரிரங்குவரென் றிதயந்
தேறித், தனியவன்றன் றிருத்தூதே முகம்மதுவே பொறைக்கடலே
தமியேன் கூற்றை, யுனதுசெவிக் கிடவேண்டும் வேண்டுமென விரக்க
மொடு முரைக்கின் றானால். (45)

என்போலுஞ் சிறியர்பெரும் பழியடுத்த குறைபிழையா யிரஞ்
செய் தாலும், பொன்போலு மனப்பெரியோர் பொறுப்பரெனு மொழி
தமியேன் புந்திக் கேற்ப, நின்பாலிற் கண்டறிந்தேன் சிறியேனுந் திற
த்தினெடிந் நிலத்தில் வாழ, முன்போலுங் காத்தளித்தல் வேண்டுமது
நினதுமறை முறைமைத் தாமால். (46)

உறுதியென மனத்திருத்தி யௌக்கிரங்கிப் புடவிவிடற்குரை
செய் தீரான், மறுமொழியில் லெனவகல்வே னினந்தேடி வருபவர்கு
மறைத்துக்கூறி, நெறியுடனன் குரைத்துமணி மூதூர்கொண் டணைகு
வனிர் ணயமீ தென்னைப், பெறுமவர்க டம்மானை குபலானை யுறுதி
யெனப் பிதற்றி னானால். (47)

நிற்குநிலை நில்லாது வசனமறத் திருமுறைநின் ணயமில்லேனால்,
லெற்குரைக்க நாவிலையோர் நொடிப்போதி லிருதானு மிறுமல் லாது
பொற்பரியி னுயிருமென துயிருமழி வதுசாதம் பொருவிலாத, நற்
குணத்தீ ரழித்தலுங்காத் தளித்தலுநின் கிருபையென நவிற்றினானால்

கலங்கிவலி யிழந்துரைத்த மொழியனைத்துந் திரண்டுதிருக் காது
ளோடி, யிலங்கியநன் மறைததும்பு மனத்துறையக் குறைபோக்கி யிர
க்கமூறி, விலங்கினத்தின் றலையிவன்காற் றலைவிடுத்தி யெனவிபுலை
விடுத்த லோடும், பிலங்கிடந்து பிறந்தெழுந்து வருபவர்போற் புரவி
யுடன் புறப்பட் டானால். (49)

வாசியுடன் முகம்மதுதாள் பணிந்துவரு நெறிமீட்டு மக்கநோக்கி
யாசடுத்த திவணிவனென் றவ்வழியும் விலங்கிவிரைந் தகலுங் காலைப்
பூசலிடத் தொடர்ந்துசிலர் வருபவர்க்கு நன்குரைத்துப் புறம்புகாமற்
பாசமுற வுடன்கூட்டிப் பரிவொடும்போய்ப் புகுந்தனனப் பதியின்
மன்னே. (50)

சுருக்கத்துத்தொடர்ந்த படலம்-முற்றிற்று.

ஆகப்படலம் 5-க்குத் திருவிருத்தம்-330.





# உம்மிமகுபதுப் படலம்.



காயும் வெஞ்சுரத் திடைதொடர்ந் தனன்மனங் கலங்கிப்
பாயும் வீரவெம் பரியுடன் வரும்வழி பார்த்துப்
போய பின்னபூ பக்கரு முகம்மதும் புளகித்
தேயி ழிந்தறி வுடன்றொழு தவிடம்விட் டெழுந்தார். (1)

கறையில் வெண்டிரை யுண்டவன் கவிகைமுன் னிழற்றக்
குறையு நீடருத் தளிர்த்தலர் நறவுகொப் பிளிப்பப்
பறவை யெங்கணுஞ் செழும்புகழ் பாடவொட் டகத்தின்
முறையி னேகின ரிறையரு ணிறைமுகம் மதுவே. (2)

சரைகொ ழித்தவெண் வண்டலு நெடியகான் யாறுந்
திரைய லம்பிய குறுஞ்சுனை யிடங்களுஞ் செறிந்து
விரைகொண் முல்லையம் பந்தரும் விளைநறா வுடைந்து
சொரியுங் கொன்றையுந் தோன்றிடச் சென்றனர் தூயோர். (3)

வேயி சைத்தொனி யிருசெவி குளிர்தர வெருவாக்
காயும் வெஞ்சின வாரணம் பொருவகண் களிப்பத்
தோயும் வெண்டயிர் நறுநறை நாசிக டுளைப்பப்
பாய ரிக்குல மெனநெறி குறிகிடப் படர்ந்தார். (4)

நிறையுஞ் சாமையின் போர்க்குவை வரைகளை நிகர்ப்ப
வறையு முல்லையம் பறைகட லமலையை யவிப்பக்
குறைவில் பாலடு புகையிரு விசும்பெனக் குலவப்
பறழின் வாய்த்தொனி யிடையறா திருந்ததோர் பாடி. (5)

வந்த ரும்பெரு மொட்டக மிழிந்தபூ பக்க
ரெந்தை யீரிளைப் பாறிமற் றேகுவ மெனனப்
பந்த ரின்றியோர் புறம்வெளி படும்பழ மனையிற்
சிந்தை நேர்ந்தவ ணடைந்தனர் தெரிமறைச் செம்மல். (6)

அம்ம லோதிவெண் ணூலினிற் பிறங்கிட வழகார்
கொம்மை வெம்முலை தாழ்ந்தணி வயிற்றிடை குழைய
வம்மி னியாவரொன் றொருமொழி வழங்கியங் கிருந்தா
ளும்மி மஃபதென் றிடும்பெயர் விருத்தைய ளொருத்தி. (7)

ஆயர் தங்குல விருத்தையை விளித்துநின் னகத்துட்
போயெ மக்குண வுளதெனிற் றருகெனப் பொருந்தாக்
காயும் வன்கலிச் சாமமும் வறுமையுங் கலந்து
மாயு மில்லின ளருள்வதொன் றிலையென வருத்தாள். (8)

திரைக்கு மெய்யினண் மனைப்புறஞ் செறிமயிர்க் கொறியொன்
றிரைக்கு நொந்தவ ணிருப்பக்கண் டிவ்வுரு மடியிற்
சுரக்கும் பாலிலை யோவென மகிழ்வொடுந் தூண்டி
யுரைக்க நந்நபி முகம்மதுக் கெதிரெடுத் துரைப்பாள். (9)

என்னி னும்முதிர்ந் தரும்பெரு நோயினா லிடைந்த
வன்ம லட்டது திரிவதற் குயிரிலா வறடு
தன்ம மில்லவண் மனையினிற் சார்ந்தநீ ரிசைத்த
லின்மை நோயினும் வலிதென வவசமுற் றிசைத்தாள். (10)

விருத்தை யென்னுமத் தொறுவிசஞ் சலமொழி விளம்பக்
கருத்தி னூடுற விரங்கிமா நோயினிற் கசிந்து
வருத்த முற்றமை மலட்டினைக் கொணர்கென வலிதிற்
றிருத்தி மென்மெல முகம்மது திருமுனம் விடுத்தாள். (11)

நிகரி லானருட் டூதுவர் நெடுங்கர நீட்டித்
தகையு மைமுது கிடத்தினிற் பயப்பயத் தடவப்
பகரு தற்கரி தாயிடந் தழைத்துடல் பருத்துப்
புகா றக்கொழுத் திளமையிற் செழுமையும் பொதிந்த. (12)

நிரைத்த செம்மயிர்க் குறங்குச ளகறா நிமிர்ந்து
விரித்த திறற்றிரண் டடிவயி றுறமடி வீங்கிச்
சுரித்த சின்முலை நீண்டுவிம் மிதத்தொடுஞ் சுரந்து
புரைத்த லநதிறந் தமுதெழுந் தோடின புவியில். (13)

முத்தி ருந்தவ டனைவிளித் தனைத்தகை முறையாய்
நாதத்தி ருந்தநல வமுதுகொள கெனநபி நவில
வாய்த்தி ருந்தது பசிக்கென வெழுந்துதன மனைக்குட்
பாத்தி ரந்தனை யெடுத்தனள் கறந்தனள் பாலை. (14)

வரங்கொண் மைம்முலை யினுமொழு கினவென மகிழ்வி
னாங்கி னுளளிருந தெடுத்தபாத் திரமடங் கவினு
மிரங்கும் பால்கறந் தணியணி நிரப்பின ளினியென்
கரங்கள் சோர்ந்ததென் றிடைநிலஞ் சேர்த்தினள் கடைகால். ()

அடுத்த கேளிருக் குரைத்தலு மவரவர் கரத்தி
னெடுத்த பாத்திரந் தொறுந்தொறுங் கறந்தினி தேகி
விடுத்த போதினு மொழுகிய சுரப்புமேன் மேலுங்
கொடுத்து நின்றது முகம்மது காரணக் கொறியே. (16)

வாய்ந்த மெல்லிடை யிடையர்தங் குலத்துறு மடவா
ளாய்ந்த வர்க்கிடர் விளைப்பவர் வளமெனு மடிப்பிற்
காய்ந்த பாலினை வடித்துவண டாமரைக் கரத்தி
னீய்ந்து நின்றன ளருநபினா துணையொடு மிறசூல். (17)

இதந்த ரும்பெரும் புதுமையை யருணபி யிறசூல்
பதந்த னிற்பணிந் திருங்கலி மாமொழி பகர்ந்து
மதந்த ழீஇயிசு லாத்தினி லாயினள் வணங்கி
நிதந்த ருநதவத் தொழுகையின் முறைவழி நின்றாள். (18)

இன்று வந்திவ ணிருவர்க ளிருந்தனர் கிழவா
டொன்று கண்டனர் பாலுரு வாக்கின் றுலகிற்
பொன்றி லாப்புகழ் விளைத்தனர் புதுமைகொ லெனவே
நின்று நோக்கினா பாடியிற் றெருறுவர்க ணிறைநதே. (19)

தேயுஞ் சிற்றிடை மடைந்தைய ளொருத்திதன் றிறத்தான்
மாய வன்குபிா போக்கிநந் நபிவழி வழுத்திப்
பாய ரிக்கயல் விழிமட வாரொடும் பாடி
யாயர் தங்குலத் தவரிசு லாத்தினி லானார். (20)

அற்றைப் போதினின் மக்கமா நகரவ ரறியச்
சுற்றுங் காவதங் கேட்டிடக் கவிதையின் றொடராய்ப்
பற்ற லார்குலங் கெடச்செழுந தீனிலை படர
வெற்றி கொணடொரு தொனிமுழங் கியதுவிண் ணிடத்தில். ()

மரும லர்ப்பொழின் மதீனத்தி னேகுமவ் வழியி
லிருவர் வந்தொரு முலலையம் பாடியி னிறங்கிப்
புரிவெண் ணூற்குழன் முதியவண் மனையிற்புக் கிருந்து
விரியுங் காரணப புதுமைகள் பலபல விளைத்தார். (22)

கதிகொள் காரணக் கண்டுகண் களித்தவ ணிருந்த
பொதுவர் தங்குலத் தொடுமிசு லாத்தினிற் பொருந்தி
யதிவி தத்தொடுந தீனிலைக் குரியவ ராகிப்
பதவி பெற்றுநற் செல்வமும் வளம்பெறப் படைத்தார். (23)

பலா பலன்றருந் தீனிலை மறுத்தவர் பலர்க்கும்
பலா யடைந்ததென் றிரும்பொருள் பிறந்திடும் வசனங்
குலாவும் வெங்குபிர்த் தலைவர்கள் செவியினிற் குறுகக்
சலா மதிக்கதி மறுமிரு ளௌனமுகங் கரிந்தார். (24)

அஞ்ச லின்றிவிண் ணதிர்நதிடு மொழியினை யாய்ந்த
விஞ்சை வல்லவர் தெரிதர முகம்மது விளைத்த
வஞ்சத் துட்படுஞ் சினகளி லொனறெனை மதித்து
நஞ்சுண் மீனென வொடுங்கினர் மக்கமா நகரார். (25)

விம்மி தப்புயத் தாயர்க டிரண்டுமெய் மகிழ்ந்து
செம்ம லாப்பதந் தொழுதினி திறைஞ்சிடத் தெருந்த
நம்பி னத்தினு முரியவௌன றினியநன் மொழிக
ளும்பி மலம்பதுக் கிசைத்தெழுந் தனர்மறை யுரவோர். (25)

உம்மிமருபதுப் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-6க்குத்-திருவிருத்தம்-356.





# மதீனம் புக்க படலம்



உதய மால்வரைப் பரிதியை நிகர்ப்பவொட் டகத்தின்
விதிய வன்றிருத் தோழருந் துணைவரு ளிரிபூ
வுதிருஞ் சோலையி னளியிசைத் திசைதிசை யோங்கும்
பொதுவர் முல்லையுங் குறிஞ்சியுங் கடந்தயல் போனார். (1)

மக்க மாநகர் விடுத்துநன் மதீனமா நகரம்
புக்கு தற்கிட மெனவரு நெறியினிற் புறத்தி
லொக்க லோடசு ஹாபிக ளௌவ்வொரு பெயரா
யக்கம் போக்கிபயின படைத்தவர் போலவந தடுத்தார். (2)

பின்னு மோர்பகற் போக்கிய நெறியினிற் பிரியா
மினனும் வெங்கதிர் வேலவர் நூற்றினு மேலார்
மன்னு மெய்யிடம் விடுத்தநல் லுயிரென வந்தார்
சொன்ன யம்பெறு முகம்மது மனக்களி துளங்க. (3)

வான கத்துடுக் கணத்திடை நடுவெழு மதிபோற்
கான்க வேங்கைக ணடுவருங் கேசரி கடுப்பச்
சோனை மாமுகிற் கவிகைநன் டிவலைக டூறற
நான மெத்திசை யினுங்கமழ் தாநபி நடந்தார். (4)

உகளும் வாளைகண் டனப்பெடை யொதுங்கும்வா விகளு
முகில டைந்துகண் படுத்தபைம் பொழில்களு முன்னிப்
புகைத வழ்ந்தவெண் மாளிகைப் புறம்பல செறிந்து
திகழும் பொன்னகர் மதீனமுந் தெரிதரச் சென்றார். (5)

வேறு.

வடவரை பொருவன மலிந்த மேனிலை
கடலென வொலித்ததா வணத்தின் கம்பலை
புடவியை யளந்தன போன்ற வீதிக
ளிடனற நெருங்கின மாட மெங்குமே. (6)

கலைவலார் மறையவர் கருத்தி லெண்ணிய
திலையெனு தரும்பொரு ளியாவு மெய்தலான்
மலைவி லாதரு ளியவள்ளி யோரினுந்
தொலைவி லாப்பெரும் புகழ்படைத்த தொன்னகர். (7)

தோரணத் தொடுங்கொடுக் காடு துன்னலால்
வாரண மதமலை மலிந்து நிற்றலாற்
காரணத் தொடும்வர வாறு காணலாற்
பூரணப் புவியெனப் பொலிந்த பொன்னகர். (8)

சுதையொளி மேனிலை துலங்கித் தோன்றலாற்
புதுமலர் தெருத்தொறுஞ் சிந்திப் பொங்கலா
லெதிர்பணிந் திடுவிருந் தினிதி னல்கலால்
வதுவையின் மனையென விருந்த மாநகர். (9)

உறுபகை வறுமைநோ யோட வோட்டிமேற்
குறைவற மனுமுறைக் கோன டாத்திநீ
ணிறைதரும் பெரும்புகழ் நிலைநி றுத்தியோர்
மறுவிலா தாசென விருந்த மாநகர். (10)

பொறிகளைந் தெனப் பவமைந்தும் போக்கலாற்
குறியுட னொருநிலை கொண்டு மேவலா
னெறியுட னெங்கணும் வாய்மை நிற்றலா
லறிஞரொத் திருந்தவ் வணிகொண் மாநகர். (11)

தெண்டிரை யாரமும் பூணுஞ் சிந்தலர்ல்
விண்டுபற் பலபல மொழிவி ளம்பலான்
மண்டிய வளந்தலை மயங்க லான்மது
வுண்டவ ரெனமதர்த் திருந்த வொண்ணகர். (12)

தானமு மொழுக்கமுந் தவமு மீகையு
மானமும் பூத்ததிண் மறனும் வெற்றியு
மூனமி லூக்கமு மொளிரக் காய்த்தநற்
றீனெனுஞ் செல்வமே பழுத்த சேணகர். (13)

அந்நகர் நாப்பணோ ரணிகொண் மேனிலை
தன்னிடத் திருந்தொரு காபிர் தன்மகன்
சென்னியை நீட்டியோர் திசையை
மன்னிய புயற்குடை வரவு கண்டனன். (14)

சூன்முகிற் கவிகையிற் பல்லர் சூழ்வர
மீளடு மதியென விளங்கித் தோன்றிய
தானவ னியாவனென் றுளத்திற் றுனுணர்ந்
தீனமின் முகம்மதா மென்று தேறினான். (15)

மதீனமண் ணிந்துமுன் மார்க்க நிண்ணய
விதியினை யினத்தொடும் வெறுத்து வேறொரு
புதியநின் னயத்தினைப் பொருந்து மாந்தர்கா
ளிதமுறக் கேண்மினென் றெடுத்துச் சொல்லுவான். (16)

கறுவெனுந் திசையையோர் கடிகை நீங்கிலா
துறுதெதிர் சென்றுபார்த் துலையும் வீரர்கா
ளுறுநெறி முகம்மதென் பவன்பல் பேருடன்
மறுத்தமைக் கவிகையின் வருகின் றானென்றான். (17)

மாதவ நபியிவண் வருகின் றாரெனக்
காதினிற் கேட்டலுங் களித்தன் சாரிகள்
சீதவொண் கவிகையின் றிசையை நோக்கியப்
பாதையி னிடமறப் பற்றி யேகினார். (18)

ஒருவருக் கொருவர்முன் னோடி யாவரும்
வருபவ ரிவ்வழி விரைவின் வம்மென
விருளறு மனத்தரா யெதிர்ந்து சென்னெறித்
திருநபி பதத்தினிற் சென்னி சேர்த்தினார். (19)

துன்னிய திரைக்கடற் *றோழர் நாப்பணி
னந்நபி பதங்களைப் †போன்ற நாடிய
மன்னவர் களிப்பினு ளேக்கு மாமுகப்
பொன்னிதழ்த் தாமரைக் காடு பூத்ததால். (20)

அல்லெனுங் குபிர்க்கச டறுத்துத் தீநெறி
யெல்லவ னெனவருந் தூத ரியாரையு
மல்லணி மார்புறத் தழுவி மான்மத
வில்லுமிழ் மேனியும் புயமும் வீங்கினர். (21)

இடாறுத் தடைந்தமு காஜி ரீன்களு
மடனுறும் வேற்கையன் சாரி மார்களு
முடனுவந் தொருவருக் கொருவ ரவ்வயி
னிடனுறக் காந்தமு மிரும்பு மாயினர். (22)

வரிசிலைக் குரிசிலு மதீன மன்னருங்
கருதலர்ச் செருக்குமு காஜி ரீன்களுந்
தருவென வருமபூ பக்கர் தம்மொடு
மரியவ னருளொடும் புறப்பட் டார்களால். (23)

நீடியகற் றுவெனு மெல்லை நீங்கியோர்
பாடியுங் கடந்துதம் பரிச னத்தொடுங்
கூடிய பனீயமு றென்னுங் கூட்டத்தை
நாடியங் கொருநெறி நடந்து போயினர். (24)

---

* தோழர் கடலாக, நபி பதங்களாக, முகம் தாமரையாக வென்னு முருவகமும், நந்நபி மரைமலரலர்த்தும் பதங்களைப் போன்றனென்பது வமமும், முகத்தாமரை மலர்ந்த காரணத்தாற் பரிதியாயினரெனவேது வும், இதிற்காரியத்தைக் காரணமாக்கியது. "ஆக்கந்தானே காரணமு தற்றே" என்னுஞ் சூத்திரத்துட்கோ ளென்றுணர்க.

† போன்றவென்னு முவ்மவுருபு, இறந்தகாலத் தஃறிணைப் பன்மை விகுதியொடு குறிப்பு முற்றுவினையாய் நந்நபியென்னுங் குணத் தொகையாகிய வினைமுதலைக்கொண்டது, பூத்ததாலென்னும் மூன்றும் வேற்றுமை, பதங்களைப் போன்றவென்னு மார்க்கப்பொருள் கொண் டது. ஆகையால், உருவகம், உவமம், ஏதுவென்னு மூன்று பெயரின் அலங்காரமும் பெற்றது.

வரிவராற் பகடுகள் வனச வாவியுஞ்
சொரிமதுச் சோலையுங் கதலிச் சூழலுந்
தெரிதரக் கண்டுசென் றின்பச் செல்வமே
தருகுபா வென்னுமத் தலத்தை நண்ணினார். (25)

ஆசிலா தவரொடும் றபீவு லவ்வலின்
மாசம்பன் னிரண்டினில் வதிந்த திங்களிற்
பாசமுற் றவரிடம் பரிந்து நந்நபி
வாசமுற் றுறைந்தனர் மகிழ்வின் மாட்சியால். (26)

ஏடவிழ் மாலையர் பலரு மேந்தலும்
பீடுபெற் றவ்விடத் திருப்பப் பெய்ம்முகி
லோடிய தெனநற வூற்றுந் தாருடை
யாடக வரைப்புயத் தலியும் வந்தனர். (27)

பண்டரு மறைப்புய ஹாம்பர் மாமுகங்
கண்டனர் பதத்தினிற் கரங்க ளேய்த்தனர்
விண்டன ராகுலம் வீறு மேன்மையுங்
கொண்டனர் மனத்தினுங் களிப்புக் கொள்ளவே (28)

திருப்பரு முயிருடற் சேர்ந்த தொத்தென
வரிப்புலி யலிதமை மார்பு றத்தழீஇ
யிருப்பமற் றவ்விடத் திருந்த மன்னரும்
பொருப்பெனும் புயங்களிற் பொருந்தப் புல்லினார். (29)

அவிரொளி முகம்மது மாலி போன்றவ
ரெவருமற் றின்புற விருந்தவ் வூரினிற்
கவிதரும் வெண்சுதை தயங்க வெங்கணுங்
கவினுறப் பள்ளியொன் றரிதிற் கட்டினார். (30)

ஆயவப் பள்ளியிற் றொழுதன் னோருட
னாயக நபிபதி னாலு நாளின்மேற்
றூயக மெனப்பனீ சாலி மென்னுமத்
தூயவ ரிருப்பிட மதனிற் றேனறினார். (31)

பணியமு றென்பவர் வாழ்ந்து பாவுக்கும்
நணிபுகழ் மதீனமா நகர்க்கு நாப்பணி
னணைமலர் வாவிசூழ் றுத்தா னைவனப்
புனையெழிற் குடியிடை பொலிய வைகினார் (32)

48

தரைபுகழ் வலிபனீ சாலி மென்னுமப்
புரவலர் தலத்தினி லிருக்கும் போழ்தினி
லரிஹறமு சாவும ருதி மாமறை
தெரியுது மாவொடும் வந்து சேர்ந்தனர். (33)

தந்தைய ரெனும்ஹறமு சாவுந் திண்புய
வெந்திற லுமறுது மாவு மேயபின்
புந்தியிற் களித்திரு புயங்கள் வீங்கிடச்
சந்தணி மார்புறத் தழீஇயி னாரரோ. (34)

மரைமல ரொடுமரை மலரை வைத்தெனச்
சரகணி முறையொடுந் தடக்கை தாங்கொடுத்
துரியபா றயிரொடு முணவு மீந்திடு
கரையிலா வுவகையங் களிப்பின் வைகினர். (35)

வேலிடுஞ் செழுங்கர வீர ராம்பனீ
சாலிமென் பவருறை தலத்தி னன்புற
நாலுநா ளிருந்துபி னவர்க்கு நன்கொடு
பாலினு மினியசொற் பயிற்றி னாரரோ. (36)

அத்தலத் துறைந்துபி னடுத்த வெள்ளிநா
ளுத்தமத் தமரொடவ் வுறைந்த பேர்கட்கு
மித்தலத் தின்றுதொட் டிறு நாண்மட்டுங்
குத்துபா வெனநபி குறித்துக் காட்டினர். (37)

மாமுகிற் குடைநபி வகுத்த வாசகந்
தேமலர்ப் புயத்தவ ரியாருஞ் சிந்தித்துப்
பூமரு வண்டெனப் பொலிய நந்நபி
தோமில்வண் குத்துபாத் தொழுவித் தாரரே. (38)

தூயவன் றாதரென் றெவர்க்குஞ் சொன்னிறீஇத்
தேயமெங் கணும்பெருந் தீனை வித்திய
நாயக முகம்மது நாட்கொண் டவ்விடத்
தேயுயர் குத்துபா வியற்றி னாரரோ. (39)

வெற்றிசேர் நால்வரும் வேந்தர் தம்மொடு
முற்றினி தோங்கியங் குறைந்த பேரொடு
மற்றைநா ளிருந்தவ ணகன்று பூம்பொழில்
சுற்றிய மதீனமா நகரிற் றேன்றினர். (40)

கதிரயி லேந்துமு காஜ்ஜி ரீன்களுஞ்
சதிபயில் புரவியன் சாரி மார்களு
முதிருதீன் தீனெனு முழக்க மார்த்தெழப்
புதியவன் றிருநபி புரத்திற் புக்கினார். (41)

வட்டவா னிழறர வந்த நந்நபி
யொட்டகை மேற்கயி றதனை யூரவர்
தொட்டனர் நெருங்கினர் சுமைகொண் டார்த்தனர்
விட்டில ரவரவர் விருப்பின் செய்கையால். (42)

பொன்மனை யிடத்தவர் பொங்கி யாவரு
மென்மனை யிடத்திற் கொண்டேகு வேனெனத்
தன்மனக் களிப்பினாற் சாற்றி வாகனத்
தின்மணிக் கயிற்றினை யீர்க்கின் றார்களால். (43)

வித்தக முகம்மதின் விருப்பின் மாட்சியாற்
றத்தமில் கொடுபுகச் சார்ந்த மன்னவ
ரத்தனை பெயரையு நோக்கி யத்திரி
சித்திர மெனத்தனி சிறந்து நின்றதால். (44)

கடுவிசைப் பரியினுங் கடிய வேகமாய்க்
கொடுவருஞ் சோகினைக் கூண்டி யாவரு
தொடுவதன் றெனக்கரந் தூண்டிப் பாசத்தை
விடும்விடு மெனநபி விளம்பி னாரரோ. (45)

பிடிபடுங் கயிற்றினைப் பிடித்து நீவிரகட்
டடைபடுத் திடிலது சாரந்தி டாதுநம்
முடையநா யகன்றிரு வுளத்தி னுன்னியே
வடிவுறு மொட்டகம் வருவ தீண்டரோ. (46)

கறங்கிய கடலெனக் களித்தி டாநகர்ப்
புறங்கிடந் துறையினு நடுவண் புக்கினு
நிறங்கிள ரொட்டக நினைவி னோர்வழி
யிறங்கிய விடத்தியா னிருப்ப னென்றனர். (47)

மாசிலா னருள்கொடு நடந்த வாகனப்
பாசமேற் குவிகரப் பதுமக் கொள்ளைகள்
காசில்வண் புகழ்நபி கழறுஞ் சொற்கதிர்
வீசிடச் சடுதியின் விரிந்து நின்றவால். (48)

கோதிலா தடர்ந்தெதிர் குவிந்த மன்னவர்
வீதியி னத்திரி விடுத்த பின்னெழிற்
சோதிமெய் துகள்படாத் தூத ரும்மறைப்
போதெனுஞ் செழுங்காப் பூட்டு நீக்கினார். (49)

இடந்தனி னின்றவ ரியாரு மின்புற
வடந்தனை விடுத்தன ரொன்றி மாசிலா
நெடுந்தட வரையென நின்ற வொட்டக
நடந்தது தனியவ னருளை நாடியே. (50)

சோதிமென் கொடியெனத் தோன்று மாமினு
மாதுல ராகிய பனீநஜ் ஜாறுகள்
காதர மறவருங் காணி யாகிய
பூதலத் திடைதனி பொருந்தி நின்றதே. (51)

நின்றுநாற் றிசையினு நோக்கி நேரிலா
வென்றிகொண் மெய்யசை யாது மெல்லென
வொன்றிய தாளினை யொடுக்கி நீடருங்
குன்றென வுறைந்தவண் படுத்துக் கொண்டதே. (52)

உறைந்தவொட் டகம்பின ரெழுந்தவ் வூரவர்
நிறைந்துநோக் கலுமெல நடந்து நீடொளி
குறைந்திலாத் தெருப்பல குறுகி நின்றது.
மறைந்திடா தொருதலை வாயின் மேவியே. (53)

கொடிமதிண் மாடவாய்க் குறுகிக் கோதற
நெடியவன் றூதரைச் சுமந்து நேரிலா
வடிவுற நின்றவொட் டகமவ் வாயிலின்
படியுறப் படுத்தது பலருங் காணவே. (54)

கொய்யுளைப் பரியவர் குழுமிப் பின்வரக்
கையினிற் றரித்தவேற் காவலோர் அபூ
அய்யுபு வாயிலிற் படுத்த வத்திரி
வையகம் புகழ்தர மறுத்தெழுந்ததே. (55)

எழுந்தவொட் டகம்விரைந் தேகித் தேன்மழை
பொழிந்தென நபிசல வாத்துப் பொங்கவே
யழுந்திமெய் யுறமுதற் படுத்த வவ்வயி
னிழிந்திடும் படியினும் படுத் திருந்ததே. (56)

ஓடுங்கிடத் தாண்மடிந் துறைந்த வொட்டக
நெடுங்கழுத் தின்சுரிப் பின்றி நீட்டியே
யிடங்கொள்வாய் பிளந்துநா வெடுத்து நின்றவ
ரடங்கலுஞ் செவிகொளக் கூப்பிட் டார்த்ததால். (57)

ஒட்டகைக் குறம்பொரு ளுணர்ந்து நந்நபி
வட்டவெண் டவிசின்மேல் வதிந்த மெல்லணை
விட்டிழிந் தரியதீன் விளக்கு மேன்மையி
னிட்டமுற் றவர்கெலா மெடுத்துக் கூறுவார். (58)

இன்றுதொட் டிறுநா ளளவு மென்னுயிர்க்
கொன்றிய நால்வரோ டுரைந்து தீனிலை
வென்றிகொண் டுறைவதித் தலமல் லாதுவே
றின்றும் மேலவ னிசைத்த மாற்றமே. (59)

சடுதியி னொட்டகந் தரித்த நீணிலத்
திடுமதிண் மனையெமக் கியற்று நாண்மட்டு
மடுதிற லபூஅய்யூ பன்சாரி யாரகம்
விடுதியென் றெடுத்துரை விளம்பி னாரரோ. (60)

முத்திரை யுகம்மது மொழிந்து காட்டிய
வுத்தரஞ் செவிப்புகுந் துணர்வு விம்மவே
யித்தவ மெய்திய தெனக்கென றன்னவர்
மத்தகக் கரியென மதர்ப்பு வீங்கினர். (61)

ஆதிதன் றிருவுளத் தாய வொட்டக
மோதிய மொழிவழி புணர்ந்து நன்னெறி
வேதிய ருரைத்தனர் விதியி தென்னவே
மாதவ ரியாவரு மகிழ்வுற் றார்களால். (62)

ஈரநன் மனத்துமு காஜி ரீன்களைக்
கார்நிழற் கவிகையார் கடிதிற் கூவியிவ்
வூரினி லவரவ ருறவின் றன்மையிற்
சாரிட மெவணவண் சார்மி னென்றனர். (63)

மாமறை முறைதெரி மதீன மன்னரைத்
தாமதி யாதவர் சார்பிற் சார்கென
நாமவேன் முகம்மதாண் டுரைப்ப நன்கென
கோமறு கிடந்தொறுங் குறுகி னார்களால். (64)

கவாறு புந்திமு காஜி ரீன்களு
மவரவர் சார்பினிற் புகஅபீ அய்யூப்
திவளொளி மாளிகைத் திசையை நோக்கிநன்
னபிகளி ருயக நடந்து போயினார். (65)

படரொளி விரிதரப் பதியின் வீதிவா
யிடனற நெருங்கினின் றெவரும் வாழ்த்தவே
யடல்பெறும் வீர ரபூ அய் யூபெனும்
வடவரைப் புயத்தினர் மனைபுக் காரரோ. (66)

மதீனம் புக்கபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-7-க்குத் திருவிருத்தம்-422.



## கபுகாபுப் படலம்.



மாரியங் கவிகை வள்ளன் மதீனமா நகரம் புக்குச்
சீரிய மறையின் றீஞ்சொற் செவ்வியோர்க் கினிதி னூட்டிக்
கூடிலைக் கதிர்வேற் செக்கைத் தீனவர் குழாங்கொண் டேத்த
வோணி அபுஅய் யூபி னில்லிடத் திருக்கு நாளில். (1)

அறத்தினிற் புகுந்து வேதத் தறிவினிற் குடிகொண் டோங்குந்
திறத்தினர் ஹம்மா றென்னுஞ் சீயமற் றொருவ ரேனும்
பெறற்கரும் வடிவன் மிக்கோ ரிளவல்லை பிடித்து விண்ணோர்
புறத்தினிற் காவலோம்பும் புண்ணியர் திருமுன் வந்தார். (2)

மந்தரப் புயமுஞ் சோதி வடிவுமேல் வளர்ந்து நீண்ட
சுந்தரக் கரமு மாறுச் சுடர்மதி முகமு நோக்கிச்
சிந்தையுட் களித்துத் துன்பத் திருக்கறத் திருக்குங் கையுங்
கந்தமென் பதத்திற் சேர்த்திக் கண்ணினீர் கலுழ நின்றான். (3)

பதத்தினி லிறைஞ்சித் தாழ்ந்து பணிந்துவாய் புதைத்துப் போற்றி
யிதத்தொடு சலாமுங் கூறி மிதினின் றவனை நோக்கி
புதித்தெழும் பரிதி யேய்ப்பா னுரைக்கரும் வடிவ னியாவன்
மதித்துரை யெனஹம் மாறு முகம்மதுக் கெதிர்ந்து சொல்வார். (4)

அடிமையிற் சிறியேன் வாழு மகத்தினி லிருந்து நுந்தங்
கடிமலர்ப் பதத்தைப் போற்றிக் கட்டுரைக் கலிமா வாழ்த்தி
நெடியவன் மறைநே ரின்சொ னிகழ்த்தினன் செவியிற் கேட்டுச்
சடுதியி னென்முன் றோன்றி விருப்பொடு சலாமுஞ் சொன்னார். (5)

அந்தமு முடிவு மில்லா வரியவர்க் குரிய தூதர்
வந்தமா வரவா றெல்லாம் வகுத்தெடுத் துரையா நின்றீர்
சந்திர வதன வள்ள றனைக்கண்ணுற் றெரிசித் துண்டோ
வெந்தைகேட் டிசைக்கு மாறே யாதெடுத் தியம்பு மென்றார். (6)

புதிய தோரழகு வாய்ந்த புரவல வேத வாய்மை
மதிவலோர்க் கேவ லாளாய் மலரடி விளக்குநாளுந்
துதிசெய்து பவங்க டீர்த்துத் தொல்வினைப் பகுதியானற்
கதிபெறத் தினமறாது கண்டுகண் களித்தே னென்றேன். (7)

கண்டன னென்னு மாற்றஞ் செவிப்புக ஹபீபைத் தேடிக்
கொண்டுற நடந்த பொற்றா ளிதுகொலோ வென்னக் கூறி
முண்டக மலரின் வாய்ந்த முகத்தையென் றாளிற் சேர்த்திப்
பண்டருந் திருவாய் முத்திப் பற்பல்கான் மோந்து கொண்டார். (8)

காலினை விடுத்து மாறாக் காரணர் வடிவை நாளு
மாலுறப் பருகுங் கண்க ளிவையென மணிவாய் வைத்து
மேலுற முகந்து முத்தி மெய்ம்மயிர் சிலிர்ப்பப் பூரித்
தோலவா றுதியை யொப்பா றுவந்தெனைப் புகழ்ந்து நின்றார். (9)

நந்நபி பெயர்கேட் டுள்ளக் களிநனி பெருகா நின்றா
ரின்னவர் வரிசை மேலோ ரென்பதை யிதயத் தெண்ணிப்
பின்னொரு மொழிகொ டாம லிவர்கரம் பிடித்து வல்லே
பொன்னடி யடைந்தே னென்றார் சூழ்ச்சியும் பொறையு மிக்கார். (10)

இசைத்தநன் மொழிகேட் டந்த விளவலை யினிது கூவித்
திசைத்தல மியாண்டி யாவன் சேயுனக் கிடுபே ரியாது
மிசைத்திவ ணடைந்த வாறும் விளம்பெனக் குரிசில் கூற
நசைத்தடக் குணக்குன் றன்னா னினியனநவில லுற்றான். (11)

வானவ ரேவல் பூண மாணிட வடிவாய் வந்த
தானவ அரசு செய்யத் தவமுயன் றழகு பெற்ற
கோனகர் மதீனத் துற்ற ஜூதர்கள் சூழுஉக்கொண் டேத்து
மீனயின் மறைகள் வல்ல பண்டித னெந்தை மன்னே. (12)

எந்தையு மாயும் பன்னா ளியற்றிய தவத்தால் வந்த
சந்ததி யென்ன வேறு தனையரில் லாது நாளும்
புந்தியி னுவகை கூரப் போற்றிநற் புராணந் தேர்ந்து
நந்தனில் கபுகா பென்னு நாமமு நவின்றிட் டாரால். (13)

உத்தமர் செல்வம் போன்று முளைத்தனு மாசொன் றில்லாப்
பத்தியர் தவமே போன்றும் பகாரும் விசும்பிற் றோன்றுஞ்
சித்திர மதியம் போன்றுஞ் செவ்விய ரிவரு ராகி
வைத்ததோ ருடம்பு போன்று நாட்கு நாள் வளர்த்திட் டாரால். (14)

பேதமை யகற்றிப் புந்திப் பெருக்கெடுத் தொழுகல் செய்யும்
வேதவா சகம்பு ராண காவிய விதிக ளியாவு
மோதென வோது வித்தென் னுளத்தினுக் கியைந்த தாகப்
போதரச் செய்து நின்றார் பொருவிலா வண்ணத் தன்றே. (15)

முன்னவ ரோதும் வேத மூன்றினுந் தெரிந்த நூல்கள்
பன்னெறி ஞான நூல்க ளினையன பலவுந் தொக்க
மின்னவிர் பேழை நூற்றின் மேலுமுண் டருங்காப் பின்றி
யென்னுளம் பொருந்து நான்மற் றவையவை தெருள்வன்மன்னோ

நாடொறுங் கருத்தீ தல்லால் வேறொரு நாட்ட மில்லேன்
விடுறைந் தோர்நா ளோர்பால் விரிகதிர் மணியிற் செய்த
மோடுயர் பேழைப் பூட்டின் முத்திரை விடுத்து வல்லே
தேடினன் கண்ணிற் காணாச் செய்யுளின் விருப்பத் தன்றே. (17)

அன்னவிற் பேழை யுட்க ணறையினா டகத்தின் வாய்ந்த
மின்னவிர் கிரணச் செப்பொன் றிருந்தமென் விரலாற் றீண்டி
யென்னிதென் றறிவோ மென்ன வெடுப்பமுத் திரைக டம்மாற்
பின்னரும் வைத்து மீண்டே தோவெனப் பேதுற் றேனால். (18)

சிந்தையி னையந் தோன்றித் தெளிவிலா தெம்மான் பாலின்
வந்துதாள் வழுத்தி யில்லின் வயங்குபொற் பேழை யின்க
ணெந்தையே யிருப்ப தென்னென் றியம்பினே னியம்ப லோடுஞ்
சந்ததி யென்னக் கூவி யன்பொடு சாற்று வானால். (19)

சொல்லிய கனகச் செப்பிற் சுடர் மணித் தொகுதி யேனு
மெல்லையி னிதிய மேனு மிழைபல வேனு மியாது
மொல்லைநீ யறியா வண்ண மொளித்த தென் றெள்ளல் வேண்டா
மல்லலம் புவியிற் செய்த தவத்தினால் வந்த மைந்த (20)

மாயமுங் கபடம் பொய்யு மறையெனத் திரட்டி முன்னா
ளாயதே வதத்தின் மார்க்கத் தறத்தினை வழுக்கிப் பேசுந்
தீயவ னொருவன் றோன்றித் தீனெனு மதமுண் டாகக்
காய்கதி ரவனைப் போற்றிற் காலத்தில் வருவ னென்றே. (21)

அன்னவ னறியான் மாந்தர்க் கடுபகை பெரிதுண் டாகு
மென்னமுற் பெரியோ ராய்ந்த வியன்மறை யதனுட் கண்டு
பன்னிநிச் சயித்துப் பேரும் புள்ளியும் பரிவிற் றீட்டும்
பொன்னின்முத் திரைநீ தீண்ட லன்றெனப் புகழ்ந்து சொன்னான்.

பண்டைமுற் பெரியோர் தேர்ந்த பழமொழி வழக்க மியாவுங்
கண்டறிந் திடுத னன்றென் றெண்ணிய கருத்தி னானு
மீண்டுநந் தையர்சொன் மாற்ற மென்பவோர் வெறுப்பி னானு
மண்டுமை யங்க டம்மால் வைகினன் சிறிது நாளால். (23)

இவ்வண நிகழுங் காலத் தெந்தைபே ரீந்தி னாறுங்
கவ்வையிற் பெரிது மாந்திக் கண்செவந் திதயம் வேறாய்ச்
செவ்விதி னுணர்வு மாறித் தெரிந்துரை பகர்கி லாது
வெவ்விய சீற்ற மிக்கொண் டிருந்தனன் வெறியின் மன்னோ. (24)

வெறியினாற் றந்தை வைகும் வேளையி லீன்றா டானு
மறிகிலா வண்ணம் புக்கி யறைதிறந் தரும்பொற் செப்பைக்
குறியொடு மெடுத்து வல்லே கொண்டொரு புறத்திற் சார்ந்து
செறியுமுத் திரையை நீக்கி நோக்கினன் சிறப்ப மன்னோ. (25)

பத்தியின் றந்தை கூறும் படிக்கொரு கடுதா சங்ஙன்
வைத்திருந் ததின்மே லோர்பால் வரியொன்றிற் கலிமா வென்னு
முத்தரம் பிறக்கத் தீட்டு மெழுத்தினை வாசித் தேர்ந்து
வித்தையும் வீடும் பெற்றோ மெனவிரு விழியிற் கொண்டேன். (26)

விரித்ததை நோக்கும் போழ்தின் விறனபி முகம்ம தென்னத்
திருத்திய பெயரும் வீறுஞ் சிறப்புமெய்ப் புதுமைப் பேறுங்
கருத்துறத் தெளிய வாசித் தனன்கடு தாசின் கண்ணே
யொருத்தருந் தெரியா வண்ண மொளியொன்று பிறந்த தன்றே. (27)

பதிவுபெற் றிருக்குந் தாராக் கணத்தொளி பலவும் வெய்ய
கதிரவ னொளியுஞ் சோதிக் கலைநிறைந் துவாவிற் றோன்றும்
மதியினல் லொளியுந் தூண்டா வண்சுட ரொளியுந் தோன்றும்
புதியபே ரொளிவுக் கேற்பப் பொருத்தினும் பொருந்தி டாதே. (28)

கண்களும் வழுக்கிக் கூசிக் காரணப் பயமுள் ளூறிப்
பண்கெழுங் கலிமா வென்னும் பத்திவே ரிதயத் தூன்றித்
திண்கொளு மீமா னென்னுஞ் செழும்பயிர் தழைத்து நீண்ட
மண்கொளாப் பெரும்பே ராசை மனதுறப் படர்ந்த தன்றே. (29)

தீனெனும் பெரும்பே ராசை மயக்கத்தாற் சிந்தை நேர்ந்து
வானவர் பரவும் வண்மை முகம்மதே முகம்மதே யென்
றூனறுந் திருநா மத்தை யடிக்கடி யுரையா நின்றே
னேனிலன் புலம்புற் றனென் றேங்கியாய் பதறி வந்தாள். (30)

மனப்பயம் பெருத்து வாடி மறுகுறு மனைக்கோர் மாற்றந்
தனைக்கொடுத் திலனியா னென்னச் சஞ்சலம் பெரிது முற்றி
யினத்துளா டவரைக் கூவ வெண்பிழை விளைந்த தென்னக்
குனித்தவிற் றடக்கை வீரர் திடுக்கொடுங் கூண்டு வந்தார். (31)

எதெனு மறியே னிங்ங னிருந்தனன் புலம்பு கொண்டான்
மாதவ முடையீர் பித்தோ வஞ்சனைத் தொழிலோ சூழ்ந்த
தீதெவை குறிப்பு நோக்கிச் செப்புமென் றினைய கூறி
வாதையிற் பதைத்துச் சோர்ந்து கண்ணினீர் வடித்து நின்றாள். (32)

அன்னையா குலத்தை நோக்கி யடுத்தவர் பலரு மேங்கி
யென்னையு நோக்கித் தாதை பாலிற்கொண் டேகு கின்றார்
முன்னனை மயக்கந் தீர்ந்து முகமலர்ந் திருந்தான் கண்டா
ரின்னவை விளைந்த தென்னென் றிடைந்தெதி ரோடிவந்தான். (33)

திடுக்கொடும் பதறி யேங்கிச் செங்கையாற் றழுவி வாய்விண்
டடிக்கடி யையனேயெ னையனே யென்னக் கூவி
வடிக்கணீர் பனித்து நிற்கு மாதையு நோக்கிச் சூழ்வி
யிடுக்கணே தென்னக் கேட்ப யாதொன்று மறியே மென்றார். (34)

எனக்குமுன் னிருந்து தாதை யிருகணீ ரொழுகப் பார்த்தின்
றுனக்குறும் வரலா றென்னோ டுரையென வுரைப்பப் பின்னர்
கணக்கருங் கலிகை வள்ளல் நம்பெயர் கருத்து ளூட்டி
மனைக்கணி னிருந்தோர்க் கெல்லாந் தெரிதர வகுக்க லுற்றேன். (35)

தெறுகொலைப் பவங்க ளியாவுஞ் சிதைத்துநற் கதியிற் சேர்க்கு
முறுபொரு டந்தை தாய ரூயிரெனு மனைவி கேளிர்
பெறுமனைக் குரிய மக்கள் பெறுவதற் குரைத்துக் காட்டா
ரிறுதியி னொழியாத் துன்பத் தெரிநர கிடையின் வீழ்வார். (36)

அரியபொன் மணிபூ ணுடை யாதியா மற்று முள்ள
பொருள்பல வெனினு மியார்க்கும வழங்குதல் பொதுமை யன்றே
வொருதிரு மொழியால் வாழ முலகென்று லதனைத் தோன்று
திருள்பட டறைத்தல் கல்லாப் புல்லர்க்கு மிழிவ தாமால். (37)

போகமுந் தரும நேர்ந்த புந்தியும் புகழின் பேறும்
வேதமுங் கலையும் ஞான விளக்கமு மனுவி னூலுங்
காதலிற் பயந்த மைந்தர் கருத்தினிற் சிறப்பச் செய்தல்
தாதையர் கடனே யன்றிக் காப்பது தகைமைத் தன்றே. (38)

என்னுளத் தவிசின் வாழு மிறையவன் றாதை யன்னோர்
நன்னிலைக் கனிமாத் தன்னை நாட்டியோர் செப்பின் வைத்தென்
றனையு நோக்கா வண்ணந் தடுத்தனை யையா வேறு
பண்ணுவ தெனகொல் பன்னிற் பழுதன்றிப் பயனு மின்றே. (39)

சேணுல கிருந்து வாழச் செயுநபி திருநா மத்தைக்
காணுதற் கரிதாய் வைத்த காரண மதனு முள்ள
நாணிநின வதன நோக்க நடுங்கின னனறி வேறு
பூணுவ திலையெ னையா வென்றிவை புகன்றிட் டேனால். (40)

அறவினு னுரைத்த சொல்லென் னையற்கு வேம்பாய்க் கண்கள்
சிறுபொறி தெறிப்பச் சேர்ந்து கனலெழச் சீற்ற மீக்கொண்
டுறுமொழி யுரைத்தா னல்ல னுரவர்க ணகைக்க மாறு
வெறிமருட் கொண்டா ரென்னச் சேயெனும் வேட்கை தீர்ந்தான். ()

முகம்ம தென்னுஞ்சொ லுவின் மொழிந்திட லென்னப் பேசி
யகமுகங் கைகா லேக்கா தலக்கழித் தடித்து வீழ்த்திப்
பகையருஞ் செவியிற் கொள்ளா வசைமொழி பலவுஞ் சாற்றிச்
சகியிலா தடர்ந்து நின்று னனற்பொறி தவழுங் கண்ணான். (42)

தாக்குவன் வருவன் போவன் றடக்கைக ளிரண்டுங் கொட்டி
மூக்கினிற் சோப்பன் வெள்ளை முறுவலி னிதழைத் துண்ட
மாக்கிடக் கறிப்ப னின்ற னுவியைக் கசக்கி வீணிற்
போக்குவ னெனனச் சீறிப புழுங்குவ னழுங்கு வானே. (43)

உறுக்குவ னசாவை நீட்டி யோங்குவ னுடலை யின்னே
நொறுக்குவன் காண்டி யென்ன நொடியினிற் பலகான் மீசை
முறுக்குவ னங்கை வாளான மோதுவ னென்றே யாடை
யிறுக்குவன் கடுபபன் கோபித் தெழுவன்மற் றிருப்பன் மன்னோ. (44)

அருந்தவ மியற்றிப் பெற்றென் னகத்தினு ளிருத்தி மேனி
வருந்திடா வண்ணம் போற்றி வளர்த்தனன் றாதை மாற்றம்
பொருந்திடா தழித்து மாய முகம்மதைப் புகழ்ந்தோன் பாரி
லிருந்தென்கொ லிறந்தாலென்கொ லெனறனை யிகழ்ந்து சொன்னான்.

ஒடித்தவன் மாறு கைகொண் டுதிரங்க ளொழுக வீசி
யடித்ததற் கடியேன் மேனி யசைந்தில கொடுஞ்சொற் கூறிக்
கடுத்ததற் கொல்கி நெஞ்சங் கலங்கில கருத்து ளாரப்
படித்தது கலிமா நாவிற் பகாநதுங் நாம மையா. (46)

பொற்புட னுமது நாமம் புகல்வதே யெற்கு வேலை
பற்பக றாதைக் கென்னைப் பங்கமே படுத்த வேலைப்
யற்பக லீன்றாள் கண்ணி னருவிநீ சொரிய வேலை
யிற்புறத் திருந்தோ ரியாரு மிரங்கவே வேலை யெந்தாய். (47)

இணையன கண்டோர் கேட்டோ ரெந்தையை நோக்கி மக்கள்
குணிதரக் கண்ணாற் கையாற் கோபித்து விடுத லன்றித்
தினமிது தொழிலோ நல்லோர் செவிக்கிது தகுமோ நுந்த
மனவெகு ளியையு மாற்றித் தண்டனை மறுத்தி டென்றார். (48)

மரபினுக் குரியீர் நநத மார்க்கநன் னெறியை மாறிக்
குருமுகம் மதுவென் றீமான் கொண்டன னதனை யின்னே
தெரிதரத் தவுபாச் செய்தாற் றீவினை மறுப்பே னல்லா
லெரிதா விவன்ற னாவி யேற்றுவன் விசும்பி லென்றான். (49)

பண்டைநன் னெறியை மாறி நின்றபா விகளைச் செய்யாத்
தண்டனை படுத்தல யார்க்குந் தகைமையென் றிதயத் தெண்ணி
விண்டவர்க் குரைகொ டாமன் மேலவ ரென்னைக் கூவிக்
கண்டிதத் தொடுமென் போடுஞ் சிலமொழி கழற லுற்றார். (50)

தந்தைமுன் னவர்கள் கொண்ட நெறிமுறை தவிர வேதம்
வந்ததென் றொருவன் மக்கா புரத்தினின் மாற தாக
நிந்தனை பெற்றா னன்னோன் பெயரினை நினைவிற் கொண்டாய்
புந்திய தன்று நுந்தங் குலத்துக்கும் புகழ தன்றே. (51)

மதிக்குநல் லறமுண் டாதன மானிட ராகிச் செம்பொற்
பதிக்குறுங் கதிபே றெய்தல் பாரினிற் றந்தை யென்போன்
விதித்தசொற் கடவா தனறி வேறுமந் திரமு முண்டோ
வுதிக்குநின் னுள்ளத் துள்ளும் பெயரினை யொழித்தல் வேண்டும். (52)

உறைந்தவிப் பதியுள் ளோர்க்கு முறிமறை தெரிந்த பேர்க்குந்
திறந்துரைத் திடுத நீது தாதைதன் செவிக்குந் தீதாய்ப்
பிறந்ததோர் மொழியை நீயோர் பொருளெனப் பிதற்ற றேறு
நிறைந்திலா வயதுக் கொத்த புந்திநீ நினைத்த தென்றார். (53)

அன்னையுட் டுயர நீங்க வையர்தன் வெருளி மாறத்
துன்னிய கிளைஞர் நெஞ்சந் றுன்புறு தமைய நாளு
மென்னையுங் காப்பார்போல வெடுத்தவர் கொடுத்த மாற்றந்
தன்னையுள் ளுணர்ந்தியானு சிலமொழி சாற்று வேனல். (54)

மண்ணகத் தடியுந் தோன்று மான்மத நறையு மாறு
விண்முகிற் கவிகை நீங்கா மெய்யொளி யிருளின் மாயா
நண்ணுமிப் புதுமை யெல்லா முகம்மது நபிக்கல் லாதே
யெண்ணிலா மக்க ளியாக்கை யெடுத்தவ ரியார்க்கு மினறே. (55)

வாரணத் தரசாக் கேற்ப வருமம வாசைப் போதிற்
பூரண மதியந்தோன்றி முகம்மதைப் புகழ்ந்து நந்த
மாரணக் கலிமா யானு மறைந்தனென் றுரைத்துப் போமாற்
பாரினி லைய மெய்தப் படுவதென் பகருவீரே. (56)

இறுதியில் புறக்கான் வேதத் தின்வழி சுவன வாழ்வு
பெறுவரென் றுதி வேத மூன்றினும் பேசிற் றென்றான்
மறுமொழி யோதுவே னென் றியாவர்வாய் திறக்க வல்லா
ருறுதியைத் தவிர்த்தல் செய்த வுலகினுக் கிழிவ தாமால் (57)

ஈதெலா மறிந்து மென்ற னிதயம்வே றாகி னுந்தம்
போதனைக் கடங்கே னவி பொன்றினுந் தாதைக் கேற்பச்
சூதரு முடன்று செய்யாத் துன்பமே செய்யச் சொன்மின்
வேதமு முணர்ந்து நீதி விளக்குதற் கமைந்து நின்றீர். (58)

மறுவிலா வேதநூலின் முகம்மதின் கலிமா வோதிப்
பெறுகதி பெறுவ தலலாற் பேசுநும் மாற்றந் தன்னு
ளிறுதியி னரக வாதி யெனும்பெய ரெடுப்ப தினறென்
றறுதியின மொழிந்து நினறே னுதிதன் னாதின் மிக்கோய். (59)

பன்னிய மொழிகள் கேட்டி யாவரு நகைத்துப் பாவி
சொன்னவை யறியா னூழிற் சூழ்வித்த துனப மாற்ற
மன்னவ ருளரோ வெனன வருமமுற் றெனது தாதை
தனனகம் பொருந்த வேறு சூழ்ச்சியிற் சாறறு வாரால். (60)

புதுநறைக் கனிபா றேனெய் நாடொறும் புசித்துத் தின்ப
ததிமது ரங்க ளியாவும் பசியின்றி யயின்ற தாலுங்
கதிர்விடு மணிபொன் னுடை பூண்டுகண் களித்த தாலு
மதிவலோய் பெரிது போற்றி வைத்துநீ வளர்க்க லாலும். (61)

மீறிய செல்வந் தன்னால் வெறிமதம் பெருத்து மேன்மை
யூறிய நினைவு போக்கி யுணர்வழிந் தொடுங்கா நின்று
மாறுகொண் டிசையா மாற்றம் வைகலும் பிதற்று கின்றான்
சீறுதற விர்ந்திக் கோட்டிக் கேற்பவை செய்தல் வேண்டும். (62)

கரியகம் பளத்தைப் போர்த்து வீக்கிய கலைக ணீத்தோ
ரிருடரு மனையி லாக்கி யாவரு முகங்கொ டாமற்
பொரிதரு முவர்நீ ரோடு கசந்தபோ சனமு மாக
வொருபிடி மூன்று நாளைக் கொருதர மளித்தல் வேண்டும். (63)

இத்தொழி வியற்று வீரே லிடும்பெனு மதத்தால் வந்த
பித்தமும் பிதற்று நீங்கும் பிறிதொரு தீங்கும் வாரா
துத்தம மிவைகொ லெனன வுரைத்தவர் பலரும் போன
ரத்தனு மனக்குட் கொண்டா னனையுமொத் திருந்தாளன்றே. (64)

அடுத்த நாளோர்பாழ் வீட்டி லடைத்துக்கம் பளத்தான் மூடி
யெடுத்தவர் நீருங் கைப்பி னியைந்தபோ சனமு மாகக்
கொடுத்தனர் மூன்றுநாளைக் கொருதரங் கொள்க வென்ன
முடித்தன ரீனமுரர் கேளீர் குழுவுடன மொழிந்த வாற்றால். (65)

உய்த்திட மூன்று நாளைக் கொருதர மிருளி னென்பால்
வைத்திடு முணவிற் சற்றே தீண்டிவாய் பெய்தே னவும்
பத்தியி னெயிறு முள்ளுநங் கண்டமும் படர்ந்து வேம்பின்
கைத்தது கூறக் கேட்டோர் செவியினுங் கசக்கு மன்றே. (66)

காசினி யிடத்தி னந்தக் கசப்பன்றிக் கசப்பு மில்லை
யோசைமாக் கடனீர் வைத்த வுப்புநீர்க் குவமை யென்ன
வாசினற் பசிமீக் கொண்டு மருந்திடப் பொருந்தி டாமன்
மாசுறு மிருளிற் றன்னந் தனியொடும் வருந்தினேனால். (67)

இருளடை மனையின் முன்ன மிருந்தபா லிதத்தை யேந்திப்
பரிவினல் லமுத மாகத் தருகெனப் பணிந்து நிங்கா
வரிசைநந் நபியே நுமபேர் பற்பல்கால் வழுத்தி வாழ்த்தி
யரிதினிற் கவிமா வோதி யங்கையா லருந்தி னேனால். (68)

வானகத் தமுத மென்பால் வந்ததோ மதுர மூறித்
தேனினு மினிதாய் வாசந் திகழ்ந்தன வுவர் நீராலைப்
பானமும் பொருவா வண்ண முருசிக்கும் படிக்கும் வாய்ந்த
தானமு முண்ண வுண்ணப் பொலிந்தன தமியற் கன்றே. (69)

ஒருபிடி யமுத முட்கொண் டுவரிழி நீரும் வாயாற்
பருகிடி னிரப்ப மாகிப் பத்துநாட் பசித்தி டாது
பிரிவிலிவ் வண்ணஞ் சின்னா ளுண்டுமொய் பெரிது பூரித்
தருவொடு மிருந்தேன் றாதை விடுஞ்சிறை யறையி லன்றே. (70)

திருந்திலா மதப்பித் தின்னந் தீர்ந்ததோ விலையோ வென்னக்
காந்தொரு பானின் றென்னை நோக்கினன் ஹபீபே நம்பேர்
வருந்திலா துரைப்பத் தாதை முன்னினும் மடங்கா யார்க்கு
மருந்திடாக் கசப்பு முப்பு மளித்தனன் மேலுமன்றே. (71)

கொடிதெனு முப்புங் கைப்புங் குவையத் தினியில் லாத
வடிநறு வமுத மாக வினி துண்டு வருமந் நாளி
லடிகளு மதீனா மூநார்க் கெழுந்தரு ளுவதா மாற்றஞ்
சடுதியி னெந்தை கேட்டுச் சாலையின் வந்து புக்கான். (72)

காலினில் விலங்குஞ் சேந்த கையினிற் றளையும் பூட்டிச்
சாலையை விடுத்துக் காலித் தொறுவர்கை சாட்டி நந்தம்
பாலினிற் கொடுபோ யேற்ற வேலையுட் படுத்து மென்னக்
கோலிய வெகுளி யோடுங் கொடுத்தன னென்னை யன்றே. (73)

இட்டகாற் றளையி னோடு மெண்பதின் காவ தத்தின்
மட்டெனக் கொடுபோய்க் காலித் தொழுவினோர் மருங்கிற் சேர்த்து
விட்டிடா வண்ண மாறு வேலைகள் பலவுஞ் சாட்டிக்
கட்டளை யாக வைத்தார் பசுத்தொழுக் காவ லோரே. (74)

காத்தினிற் றளிற் பூட்டுந் தளைவிடுத் திலர்கண் ணார
வருத்தமீ தென்று நோக்கார் வயிறள வுணவு மீயார்
பொருந்திடாத் தொழில்க ளெல்லாம் பூட்டுவர் தாதை யென்பா
லிருத்திய வெகுளி மாறுக் கொடுமைக்கெண் மடங்கு செய்தார். (75)

தொல்லைமுன் விதியாற் றோன்றுந் துன்பங்கள் விடுத்து நீங்கு
மெல்லைய தன்றி நீங்கா தென்பதை மனத்தி லெண்ணி
முல்லையம் பாடி யோர்க்கு முறைமுறை தொழும்ப னாகி
யல்லலுற் றுழைந்தேன் பன்னா ளருளடை கிடக்குங் கண்ணாப். (76)

அடிமையின் றொழில்செய் தங்ங னிருந்தன னருக்க னோடிக்
குடதிசை புகத்தி காந்தக் குலவரை தொடுத்து விண்ணும்
படியுந்தோன் றாத வண்ணம் விடம்பரந் தென்ன மூடி
யிடியொடு மழையு மின்னுந் தோன்றிட விருண்ட மேகம். (77)

அந்தவல் லிருளின் கண்ணே யையநுந் திருநா மத்தைப்
புந்தியி னினைத்துக் காண்ப தென்றெனப் பொருமி வாடி
நொந்திருந் தழுதேன் பூட்டுந் தளையெல்லாம் நறுங்கி நூறுய்ச்
சிந்தின மனத்திற் கூண்ட துன்பமுஞ் சிதறித் தன்றே. (78)

என்னிரு விழியி னுள்ளார்ந் திருந்தநன் மணியே தேற்றத்
துன்னிநுந் திசையை நாடி நடப்பமென் றுள்ளத் தெண்ணிப்
பன்னிய புவியி னெட்டிப் பத்தடி நடந்தே னிப்பான்
மன்னவ ரெனும்ஹம் மாறு தலைக்கடை வாயில் வந்தேன். (79)

மாதவ ரெனும்ஹம் மாறு மதிமுகங் கண்டே னானுங்
காதலித் திருந்த நெஞ்சுங் கண்களுங் களிப்ப நுந்தம்
பாதபங் கயத்தைக் கண்டேன் பருவர றவிரக் கண்டேன்
றீதரும் பெரும்பே ரின்பச் செல்வமுங் கண்டே னென்றான். (80)

செவ்வியன் கபுகா பென்னுஞ் செம்மல்சொல் லனைத்துங் கேட்டு
நவ்விமுன் னவின்ற தூதும் நகைமுக மலர வான்மட்
டெவ்விடத் தினுக்கு லாவு மிருஞ்சிறை யொடுக்கி நீண்ட
குவ்விடத் தினிதின் வந்தார் ஜபுறயீ லென்னுங் கொண்டல். (81)

ஒல்லையி னிழந்த னாதி யோதிய சலாமுங் கூறிச்
செல்லுலாங் கவிகை வள்ளற் சீதசெம் முகத்தை நோக்கி
யல்லவில் கபுகா பென்னு மன்பருக் குற்றபேறை
மல்லலம் புவனம் போற்றும் வானவர்க் காசர் சொல்வார். (82)

உலகிடத் தினில்அய் யூபென் றோதிய நபியு மெண்ணெண்
கலைதெரி கபுகா பென்னுங் காளையுஞ் சமான மாக
நிலைபெற வமைத்தே னென்ன விறையவ னிகழ்த்தி னானென்
றிலகிய வள்ளற் கோதிச் சப்றயீ லேகி னாரால். (83)

விண்ணவர்க் கரசர் கூறு மெய்ம்மொழி யெவர்க்குங் கூறிக்
கண்ணொனுங் கபுகா பென்னுங் காளையைத் தழுவிப் போற்றி
நண்ணிமுன் கொணர்ந்து விட்ட நாயகர் தமையும் வாழ்த்தி
மண்ணினுக் கழகு வாய்ந்த முகம்மது மகிழ்ந்தி ருந்தார். (84)

கபுகாபுப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 8-க்குத் திருவிருத்தம்-506.





# விருந்திட்டமான்கொள்வித்த படலம்

---

மதிமுகம் மதுதா யாமினைக் குரியமாதுலர் பனீநச்சா றுகளின்;
முதியரை யழைத்திந் நிலம்விலைப் படுத்தித் தருகென மொழிதலுமெ
வர்க்கும், புதியவ னெமக்கு விலைகொடுத் தருள்வ னும்மிடம் பொருள்
கொளோ மென்ன, விதமொடு முரைப்ப வவர்தமக் கெதிரி னபூபக்க
ரினிதெடுத் துரைப்பார். (1)

மபுய வரிசைமுகம்மது நயினார் வாழுமாளிகைநிலம் விலையா, நிற்
சயிற் றிடலே கருமமென் றுரைப்பயாவரும் விலைநிலப்படுத்தி, விற்பி
றழ் கனகக்காசுபத் தென்னம்பொருத்தலும் விறலபூபக்கர் புடனெ
டுத்தங் கவர்கரத் தளித்தா ரவர்களு நிலமளித் தனரால். (2)

தங்கமோ ரிரைந் தளித்தபூ பக்கர் வாங்கிய தலத்தினை யினிதின்,
கொங்கிருந் துலவு முகம்மது நபிக்குக் கொடுத்தன ரந்நிலத் திடத்தி
ன், மங்குறேய்ந் திலங்கும் பள்ளியு மனையும் வகுத்தெடுத் தியற்றிட
வருளிச், சிங்கவே றனைய அபூ அய்யூப் மனையி னிருந்தனர் குருநெறிச்
செம்மல். (3)

செழுமறைக் குரிசி லிருக்குமந் நாளிற் றிறல்அபூ அய்யுபை
விளித்துப், பழுதுறும் பசிதீ ருணவுள தெனிலிங் கருள்கெனப் பணி
த்திடப் பரிவி, னெழுதரும் வடிவோ யிறுவருக் குளதிவ் வுணவென
வெடுத்தளித் திடலு, மழையெனத் தருஞ்செங் கரத்தினில் வாங்கி
வைத்தொரு மொழிபகர்ந் திடுவார். (4)

இப்பெரும் பதியின் றலைவரிற் சிறந்த வியன்மறைப் பெரியவர்த்
தெரிந்து, முப்பது பெயரை யழைத்திவண் வருக வெனமுக மலர்ந்தினி
தேகி, யொப்பருந் திறனுந் தலைமையுஞ் சிறந்தோருவ ரிவரவரென
வோடிச், செப்பருங் குணத்தா லழைத்துமுன் விடுத்தார் செழுமழைக்
கவிகையார் திருமுன். (5)

மருமலர் புயத்தா ரழைத்துமுன் விடுத்த மன்னரை யுபசரித் திரு
த்தி, யிருவருக் கிருந்த வுணவினை யளித்தி யாவரு மயின்றிடு மென்ன
வொருமொழி யன்புற் றியனபி யுரைப்ப வொருவருக் கொருவருண்
மகிழ்வுற், றரியசெங் கரத்தாற் றிருவயி றாரவனைவரு மமுதுசெய் தன
ரால். (6)

உண்டிரு வருக்கிவ் வமுதெனை யிருந்தோ ரூரவர் முப்பதுபெய ருங், கொண்டிடவமுதுங் குறைந்தில விவர்தங் குறிப்பினையெவர்வ குத் துரைப்பார், வண்டிடாப் புதுமை புதுமை யிதென்ன யாவருமொப் படக் கலிமா, விண்டன ரீமான் கொண்டசு ஹாபி மார்களாய் வீடுபெற றனரால். (7)

முன்னரி னமுது குறைந்தில வளர்ந்த முப்பது பெயரினுக்கிர ட்டி, மன்னரை யினங்கொண் டிவண்வரு கெனன வழங்கலு மன்னவ ரெழுந்து, சொன்னவப் படியே யழைத்துமுன் விடுதார்தோன்றலு மகிழ்வுட னிருத்தி, யன்னவர்க் களித்த வதிஜயஞ் சிறப்பவன்புட னினிதெடுத் தளித்தார். (8)

நீண்டசெங் காத்தா லுவந்தெடுத் தருந்தி நிறைந்தது வயிறென் பர் சிலர்கை, பூண்டது மதுரம் விடுத்தில வெனவுண் டுதாங்கள் பொரு மினர் சிலர்மேல், வேண்டும் வேண்டாதென் றிருவிலாப்புறமும் வீங் கிட வருந்தினர் சிலர்பாற், கூண்டவரெவரும் புசித்திட முனைப்போ லிருந்தது குறைந்தில வமுதம். (9)

சிறியபாத் திரத்தி னிருந்தபோ கைநறுந் திருக்கையாற் றீண்டிடப் பெருகி, யறுபது பேரும் புசித்தன மின்னு மளவினிற்குறைந்தில புதுமை, பெறுவதிங் கினிமே லுயாதுள வுமது பெயர்கலி மாவலா லுலகி, லுறுபொரு ளிலையென் றனைவரு மீமான் கொண்டனருளத்து வகையினால். (10)

மறுத்தும்அவ் வபூஅய் யூபெனவோது மன்னவரை முகம்மது நவி ளித்து. நிறைத்தமு ரவினுக் கினம்பதி புகுந்து நீண்மறு கிடந்தெரு றுங் குறுகிக், குறித்ததிற் றெருண்ணூ றியன்மறை யவரைக் கூட்டி யிங் குறுகெனக் கூற, வெறுத்திடா தேகி யுரைத்த சொற்படியே வேந்தரைக் கொணர்ந்துமுன் விடுத்தார். (11)

வந்தமன் னவர்க ளனைவர்க்கு மினிய வாசகங் கொடுத்தருகிருத் திற், சிந்தையிற் பொருந்தி யான்றரு மமுது செய்துவந் தேகுமி னென்னப், பந்தியிற் படுத்தி யமலையை யெடுத்துப் பதுமமென்காததி னுற் றிருந்தக், கொந்தலர் மாவத் தொடைப்புயக் குரிசிலீந்தனர் குறை வற வனமே. (12)

ஈய்ந்தன ரெவரும் புசித்தன ரமுது மிருந்தது குறைந்திலவதனு லாய்ந்தகேள்வியர்கள் காட்சியிற் பெரியவதிஜய மெனச்சிரமசைத்

து, வாய்ந்தபே ரொளியு மான்மத நறையு மாறிலா திருந்தமண் ணகத்
திற், றேய்ந்திலாப் பதத்திற் கரங்களிற் பலகாற் றெட்டுமுத் தமிட்டு
வந் தனரால். (13)

பதமல ரதனிற் கண்மலர் பரப்பிக் களிப்பொடும் பற்பல்காற்
போற்றி, யிதமுறுங் கலிமா வெடுத்தினி தோதி யிதயத்தி னிடுநதிர
வியம்போற, புதியதோ ரீமா னெனுநிலை நிறுத்திப் பொருவிலாக் குரு
னவழி பொருந்தி, யதிஜயம் பிறபப முகம்மது தமக்கன் சாரிகளெனு
ம்பெய ரானார். (14)

ஒருபெரும் பதியிற் பெரியகா ரணமா யுலகெலா மறிந்திட மனை
க்க, ணிருவருக் கிருந்த வமுதினு லொருநூற் றெண்பது பெயர்க்கினி
தருத்தி, யருமறைக் குரிய நல்வழி யினரொன் றறைதரத் தீனிலை யமை
த்துப், பரிவுபெற் றிருந்தா ரவர்திரு மனையிற் பார்த்திவ ரெனுமிற
சூலே. (15)

விருந்திட் டீமான்கொள்வித்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 9-க்குத் திருவிருத்தம் 521.





## உகுபான் படலம்.



மலிபெரும் புகழான் அபூஅய்யூப் மனையின் மனமகிழ்ந் திருக்கு
மந் நாளி, னிலைபெறு மனையும் பள்ளியும் வனைநத தெனுமொழி தொழி
லவா நிகழ்த்த, விலைபுறும் பெயரிற் சைதையும் அபாறு பிகையுநண்
புடன்விரைந தழைத்தே, யலகில்வண் புகழ்சேர் மக்கமா நகருக்கனுப்
பினர் முகம்மது நபியே. (1)

மக்கமா நகர்விட் டுடன்வரும் பேரின் மனையுட னடைந்தவ ரல்லா,
ரொக்கலின் மனைவி யுடனவரப பெயர்க ளுயர்தரும் பள்ளியி னடுப்பப்,
பக்கலி னிரைத்துப் பந்தர்கள் வனைநதிங் கிருமின்க ளெனநபி பகர,மிக்
கவ ரெவரு மவ்வண முறைநது மேலவன் றனைத்தொழு திருந்தார்.()

ஆயிழை சௌதா அபூபக்கர் மனைவி தன்னொடு மாயிஷா அலியின்,
றாயெனும் வரிசைப் பாத்திமா நயினார் தரும்புதல் வியர்களெல்வரையுஞ்,

சேயினு மினிய வடிமைக ளிருவர் திருந்தலர் நோக்கிலா வண்ணம்,
நாயகப் பதியென் றோதிய மதீனு நகரினி லழைத்துவந் தனரால். (3)

மலையெனும் புயநந் நபியுடன் கூடி வந்தமன் னவர்மனை யனைத்தும், விலையற விற்றார் மக்கமா நகரா ரெனுமொழி யடைந்தவர் விளம்ப, விலைமலி கதிர்வேல் முஹாஜிரீன் களுக்கெம் மிறையவன் சுவனத்தி னிலவு, குலவுமா ளிகைக ளொன்றுக்கா யிரமாய்க் கொடுத்தன னென நபி யுரைத்தார். (4)

பொன்னக ரதனின் மணிமனை யெமக்குக் கொடுத்தன னிறையெனப் புகழ்ந்து, நந்நபி யுரைத்தா ரெனமுஹா ஜிரீனக னன்குற மகிழ்ந்தினி திருந்தா, ரிநநக ரடைந்த கன்னிய ரவர்க்கென் றியற்றிய மனைதொறு மிருந்தா, ரன்னமென் னடையி னாயிஷா வெனுமா னபூபக்க ரகத்தினி லிருந்தார். (5)

இருந்தநன் மனைவிட் டிடம்வலம் பிரியா தியற்கையாற் காபிர்தம் மிடரால், வருந்தமெய் நடந்த வவதியி னாலு மதீனத்தி னசல்பெரி தாலும், பொருந்திலாச் சலமேவற் றுமையதி னாலும் புரவலர் வனிதையர் சிறுவர், சுரந்தனி பிடிப்ப வுடலுலைந் தொடுங்கிச சோர்வுறத் துன்பமுற் றனரால். (6)

அடைந்தவ ரெவருஞ் சுரத்தினு லறநொந் தவதியுற் றனரென நபியுள், ளிடைந்திரு கையேந் தருந்துஆ விரப்ப விணிதிறை யவன்கபூலாக்கத், தொடாந்திடுஞ் சுரங்க ளியாவாக்குந தீர்ந்து துன்பமற் றிருந்தனர் சுகமே, நடந்தநாட் டொடுத்து வளம்பெறு மதீனு நகரினிற் சுரமென்ப திலையே. (7)

மக்கமா நகர முஹாஜி ரீன்களுக்கு மதீனத்தன் சாரிக டமக்கு, மொக்கலின் பிரியா தனந்தரத் தவரு முவந்தசும் பந்தரு மாக, மிக்கநந நபினூர் சேர்த்தன ரியாரும் விள்ளுதற கிடமற வுடலும், புக்கிய வுயிரும் போற் பிரியாதங் கவர்களும் பொருந்தியங் கிருந்தார். (8)

மதிமைமன் னவரு மக்கமா நகர மனனரு நால்வரு மடுத்த, பதியின்மன் னவரு முடனுறைந் திருபப வவையினிற பணபுற நோக்கி, யிதமுறப் பளளி யெடுத்தன மினியிவ் விறஜுபுமாத் தையின முதலாய், நிதிதரும் வேலீ ராசுரு நோனபு நோற்பதை நோக்குவீ ரெனவும். ()

இற்றைநாட் டொடுத்தைந் தொகுத்தினும் வாங்கென் றியற்றிய திருமொழி சிதையா, துற்றவ ரெவருங் கொணர்மின்க ளெனவுமுடை யவன றிருநபி யுரைத்தார், கற்றவல் லோர்க ளியாவரும் விரும்பிக் கருத்துறும் படிமுடித் துவந்தார், வெற்றியும் புகழுந் தழைத்தினி தோங்கி வீறுபெற் றிருக்கு மந்நாளில். (10)

முருகவிழ் தினவண் டிசைத்தகம் பலெமின் முழக்கறு நறுமலர்த் துடவை, விரிபரப் புடுத்த மதீனமா நகரின் கொறியுடைத் தொறுவரில் வியநந்தா, னுருளுலம் பொருத புயத்தின னூஃபா னென்னுமப் பெய ரினை யுடையோன், றிரளொருச் சிதகா முளரியி னடைந்து காப்பொ டுங் கொடுநிதந் திரிவான். (11)

கொறிநிரை திரட்டி கெடுவனம் புகுந்தோர் குவட்டடி மருங்கி னிற் பசும்புற், செறிதரு மிடத்தில் விடுத்தொரு தருவி னீழலிற் றனி சிறந் திருப்ப, நிரைதரு சீத்தம் பரந்தெனப் பொறையு மடவியு நிழல் செறி பொதும்பு, மறைதரு திடரு மருவிநீ ரிடமு மலிதரப் பரந்து மேய்ந் தனவால். (12)

காத்திரக் கோலு நீள்கடை காலுந் தரித்திடுங் கரத்தினிற் சிரத் தைச், சோத்துஃ பான்கண் டுயிறரும் வேளை சிறுசெவி பெரிய வாய்த் தீக்கட், கூரததவள் ளெயிற்றுக்கா னீண்டவால் வாரியார் கொடிப்புலி கொ டியவெம் பசியாற, போரத்ததன பொதும்பர் நீத்தெழுந் தருங்கான் புறத்தினன் னிரையைநோக் கியதால். (13)

காய்ந்தவெம் பசியால் விரைவுட னடந்தோர் கல்லடி யிடத்தி னிலொதுங்கி, வாய்ந்தகான் மடக்கிப் பயப்பயப் பதுங்கி வல்லுடல் சுருக்கிவா னிமிர்த்துப், பாய்ந்தொரு கொறியைப் பிடித்தது கானின் பரப்பெலாந் திசைதிசை வெருண்டு, சாய்ந்தன சிறுவாற் பேருடற் கவைக்காற் றுருவைக டலைமயங் கிடவே. (14)

தீயென மிளிரகட் கொடிப்புலி பேழ்வாய் சிக்கிய துருவையின் பலகால, வாயெனுந தொனிகேட் டருநதுயி லிழந்து மனத்திடுக் கொடுமெழுந் துஃபான, வீய்வுறுங் கொறியின் றொனியிதெனறேங்கி விரைவொடு மொருதிட ரேறிப், போயிரு நான்கு திசையினு நோக்கிக் கொறியினம் பொருந்தலகாண கிலனுல். (15)

சிதறின கூண்டு நிறைநில விரண்டு செவிகளு மடைப்பவித்திசை யிற், கதறிய தெனநின் றேடின னவணிற் காண்டனனன் கொறியொ

டும் புலியைப், பதறினன் சினையா டென்பகி னிரங்கிப் படர்ந்தனன் வெருண்டனன் படுமுள், ளுதறினன் றெறுறுவர்க் கூவினன் சிறுதூ றொடிபட வோடினன் றொடாநதே. (16)

எடுத்தனன் பெருங்கல் விண்ணெனத் தூக்கி யெறிந்தன னோர்த் தனன் கோலாற், புடைத்தனன் கொறியைக் கைவசப் படுத்திப் புலி யினை யொருபுறம் போக்கி, விடுத்தனன பாலான் மெலமெல நடந் தோ விரிமலர்ச் சினைத்தரு நிழலி, லடுத்தன னிருந்தான காணினிற் றொடர்ந்த வருநதவிப் பாறுதற்கனறே. (17)

மையினை விடுத்த கொடிப்புலி யடுத்த வரைப்புறத் துச்சியி னேறி கையினிற் றரித்த கோலொடு மிருந்த தொருவனைக் கடிதினி நோக்கி, வெய்யவா விரையோ னின்றெனக் களித்த புசிப்பினை விரும்பினால் வேறு, செய்யவு நினக்குத் தகுவதோ வென்னத் தெளிவுடனுரைத்து நின்றதுவே. (18)

மலிதரு மொழிகேட் டெண்டிசை யிடத்து மாசற நோக்கினன் பொருவா, தொலி செவிக் கறிவாய்ப் புகுந்தது மாந்த ரொருவரு மிவ ணிலை யிதோர், கலியெனத் திகைக்கும் போதினி லியானே கழறின னெனமறுத் துரைப்பப், புலிபகர்ந் திடுத லறப்பெரும் புதுமை புது மையென் றகத்ததி ஜயித்தான. (19)

எண்டிசை யிடத்துந் தொறுவரைக் கூவி யாவரு மிவணிடம் புகு மின், கண்டறி யாதோர் பெரியகா ரணத்தைக் காண்மினகள் பொருப் பிடை கிடைநது, கொண்டொரு புலியென னெதிரினி லறிவாய்க் கூறியமொழி ஜெக தலத்தும், விணடலந தனினுங் காண்பரி தெனன விரைவொடு முரைத்துநின் றனனால். (20)

ஆயர்க ளறிய விலங்கின முரைத்த தகிஜய மகிஜய மென்னக் கூறியபே ருவகைப் பொதுவனை நோக்கிக் கொடிப்புலி மறுத்தும்வாய் திறந்து, மாயிரும புவியி னிபாமெனடுத் துரைத்த மாற்றமே புதுமை யென் றுரைத்தாய், தூயநற் பெருமைப் புதுமையொன் றுளதிங் கித னிலுங் கேளெனச் சொல்லும். (21)

மக்கமா நகர்விட் டணிமனை மதீனு நகரினின் முகம்மது நயினார், புக்கின ரவாசொ லுண்மையென் றீமான கொண்டுளம் பொருந்தித்தீ னிலையைக், கைக்கொளா திருத்தல் புதுமையே யன்றிக் கானிடை விலங்கின மொழிவ, திக்கணம் புதுமை யெனவெடுத் திசைத்தலேழை மை யெனவுரைத் தகன்ற. (22)

புடவியின் மாந்த ரெனச்சட மெடுத்தோ ரேவலும் விலகலும் பொருந்தல், கடவதே யன்றி விலங்கின மறிந்து கழறுத லறிகிலோ மென்னின், மடமையின் மடமை யெனமனத் திருத்தி வன்குபி ரகற்றி நல் லுணர்வு, நடைதர நடந்தீ மானெறி தோனற நபிகளு யகமிடத் தடைந்தான. (23)

விலங்கினங் காத்து விலங்கினும் விலங்காய்த் திரிந்தனன் மெய்ம் மறை முதியோர், குலங்களு மறியே னின்றுநம் பொருட்டாற் கொடி பபுலி கானகத் துரைத்த, நலநெகிழ மறிவாற் குபிரினை யகற்றி நன் னெறி தீனினை பிடித்துப், பலனகளும் படைத்தீ மானிலை நின்றே னெனமலர்ப் பதப்பணிந தனனால். (24)

விண்டகத் துரைத்த கொடிப்புலி துருவாய் மேலவன் விதிமறை யிமான், கொண்டன னும்பா ரெனபபரா குழுமிப் புகழ்நதிடக் கொ ணடலைப் போற்றி, வண்டிமி ரலங்கன மனனவ ரெவாக்கு மனமகிழ் தாச்சலா முரைத்துத், தெண்டிரை யொலியின் மத்தொலி கறங்கு மாயாதரு சேரியிற புக்கான. (25)

உகுபான் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம் 10-க்குத் திருவிருத்தம் 546.

---



# சல்மான்பாரிசுப் படலம்.



பூண்டநன் கமலம்போற் காரண வரைகள் யுடையுடுத் திருந்த மக் காவிற, கூணடிருந் தெழுந்து மதீனமா நகரிற் குலத்தொடு மினிதுறப் புகுந்தோ, ராணடுசென் றதற்பி னருமது மறையோ ரணிதர விருக்கு மந நாளிற், காண்டகண் மளிப்ப வந்தொரு முதியோன் கட்டுரை யொடும்சலா முரைத்தான். (1)

வந்தநன் முதியோன் முகமலர் நோக்கி மறுமொழி கொடுத்தவ ணிருத்திச், சிந்தையிற் கனிவும் வணக்கமு மொழிக்கச் செய்கையும் பொறுமையுந் தரித்தா, னிந்தநற் குணத்தோ னியாவனென் றறிய வேண்டுமென றிதயத்தி னமைத்துச், சுந்தரப் புயத்தோய் நின்வர வெனக்குச் சொல்லுக வெனநபி யுரைத்தார். (2)

உரையெனு மொழிகேட் டும்பரின் முதியோ யுலகினுக்கொரு தனியாசே, சரநெறி நடத்து மறைமத களிறே தரியலர்க் கடலரி யேறே, பெருகிய குலமும் பெயருமென் பதியும் போறி வாளரிற் பருகி, வருமுளக் கருத்துக் கேண்மினென் றெருதுங்கி வாய்புதைத் துறைக்கலுற் றனனால். (3)

வேரியங் கனித்தேன் பொழிதர வோடி விடுநெடு மதகினில் வழிய, வாரிசக் கழனி வரிவரா லருந்தி மேதியின் மடுநடுக் குடையும், பாரிசென் றுரைக்கும் வளமைநா டுடுத்த புரிசைசூழ் பதியினிற் பிறந்தோ, னோரிசைந் தீன்ற ரிருவருஞ் சல்மா னெனவிடும் பெயரி னன் சிறியேன். (4)

அப்பெரும் பதியில் வளர்ந்தனன் சிலநா ளாதியி னூழ்வினைப் பயனு, லிப்பெரும் பதியோர்க் கடிமைய னானே னிப்பொழு திதற்கு முனயங்கூர், செப்பரு நூல்கள் பலபல வுணர்ந்துஞ் செவிவழி யொழுகிடப் பெரியோ, ரொப்பரு மறைநூ லுரைத்தவை கேட்டு முளத் தறி வொடுமிருந் தனனால். (5)

தெரிதரு மறைகண் மூன்றினும் பெரியோர் செய்யுளிற் கணித நூலிடத்து, மருளினி லுருவாய்த் தோன்றியே யாதத் தைம்பதின் றலைமுறைப் பின்னர், நார்களி னெளியி னுருவமைந் தாகி நபியவ தாரமென் றெடுத்து, வருமவர் தமக்குத் தெளிதரும் புறக்கான் மறைமொழி யிறங்கிடு மெனவும். (6)

அந்நெறி மறையின் முறைவழி யொழுகி நின்றவ ராம்பையர்ச் சேர்ந்து, பொன்னுல காள்வ ரென்னவு மறத்தோர் பொறிநெறித் தெரியழற் குழியிற், பன்னெடுங் கால மழுந்துவ ரெனவுந் தெரிந்தனன் பரவைசூழ் புவியி, னெந்நிலத் துதித்தா ரென்பதை யறிய வேண்டுமென் றெழுந்தன னெளியேன். (7)

நாற்கடற் பரப்பி னெண்டிசைப் புறத்தின் றேயங் டொறுந் தொறு நடந்து, நாற்கடற் கரைகண் டவர்கள்பா லடுத்துக் கேட்டனு நாதன நபியாய், மார்க்கமுங் கொண்டிவ் வறபினில் வருவ ரென்றுரைத் தனரவர் வகுத்த, தாற்கலை வல்லோய் காட்சியி னறிய வித்திசை புகுந்தன னடியேன். (8)

அறபெனுந் தலத்தில் ஞானவா ருதிக ளாமெனத் திசைதொறுந் துதிப்பக், குறைஷியங் குலத்தி லுதித்துநன் னூல்கள் கோத

றத் தெரிந்துநந் * நபினார், பிறவியெவ் விடமெங் கிருப்பவர்மார்க்க பெயரெவை யெனத்தெளிந் தறிந்து, நறைகமழ் புயத்தோய் றும்வ ழிப் படுதற் கிருந்தனர் பெரியர்க ணால்வர். (9)

மூதுரைக் குரிய சைதும்நன் னிலையின் முதியரில் உதிக்கத் தென் பவரும், வேதிய ரெனும்பேர் தருமுது மானும் விறலுடை யுபைதுல்லா தானும், பேதியா நினைவின் முகம்மதைக் காண்போ மென்றுமவ்வேட் கையின் பெருக்காற்; றீதிலா திதயங் களிப்புறத் தேடிப்போயினர் பல் பல திசையில். (10)

திறலுடை சைதும் ஷாமிராச் சியத்திற் சென்றருங் கணிதரைக் கேட்ப, நறைவிரி யலங்கற் புயத்திபு றாகீம் நன்னபி நடத்திய மார்க்க, முறைவழி முகம்ம தெனுநபி யறபின் வருகுவ ரெனவவர் மொழிய, வுறுதியின் றிரும்பிவருநடு வழியி னிறந்தனர் முறைமையி னுரவோய்.

உறக்கத்தென் பவருந் திசைதொறுந் திரிந்து மக்கமாநகரினி லுறைந்து, துறக்கமும் புகழுஞ் சுரிகுழற் கதீஜாவென்னுமத் தோகை க்கு நிதமுஞ், சிறக்குறும் புதுமைக் காரண மனைத்துஞ்செப்பி நல்வழிக் குரி யினராய், நறைக்கதிர்க் கமலப் பதம்பணிந் திருந்தா ரறியலா நடு நிலை மறையோய். (12)

மிகுமதி யுதுமா னென்பவ ருறாமிப் பதியினியின் மேவிநல்லறி வின், பகுமனத் தறிவோர்க் குரைத்துமங் கவர்க டெரிந்தநூல் படிப் படி கேட்டும், முகம்மது நபியாய் வருவாரங் கவர்தம் மார்க்கமே மார்க்க மென் றோதி, யிகலறு மந்நாட் டரசனுக்குவந்த வியன்மறைப் பெரி யாரா யிருந்தார். (13)

பெருக்குநல் லறிவி னுபைதுல்லா வென்னும் பெயரினர்காண்ட லின் பொருட்டாற், றருக்கொடுந் தெளிந்து மெண்ணிறந் தனைய சாத் திரங் கற்றுவல் லவரா, யிருக்குநற் றவர்பால் வினவியுங் கணி தத்திய வினான் மதித்துமேதேடித், திரைக்கடற் புடவித்திசையினிற் பதிக டொறுந்தொறு மினந்திரி கின்றார். (14)

இவ்வனந் திரிந்து தேடின பெரியோ ரெண்ணில நிலைதெலாமறி ந்து மைவணக் கவிகைமுகம்மது மதீனாநகரினில் வருகுவரென்னச்

---

* நந்நபினாரென்பதை, அந்நால்வர்களின் பன்மைத் தன்மை வாக் கியத் தொடராகக் கொள்க.

செவ்வியர் பலகாலுரைத்தலுந் தேறித் திருமறை முழக்குமா வணத்தின், கவ்வையு மொடுங்கா மதீனமா நகறிற் காத்திருந்தனன் சில நாளால். (15)

வேறு.

சரிமு கக்குட வளைக்குலஞ் சூலுளைந் தீன்ற
தாள வெண்டுளித் திரைபெறி தடந்திகழ் ஷாமின்
வருமெ கூதிக டலைவரி லிபுனுகை பானென்
றுரைத ரும்பெய ரினர்மறை யாவையு முணர்ந்தோர். (16)

உத்தி சூழ்தரு பாரிடை திசைதொறு முலவிப்
பதிக டோறினுந் திரிந்துநற் பழமறைக் குரித்தாய்
மதின மாநக ரிடைமுகம் மதுவரு குவரென்
றிறமித் தன்புறுங் கருத்தொடு மிவணில்வந் தடைந்தார். (17)

ஆதி நாயகன் றிருநபி வருவதிங் கணித்தென்
றோதி மாசறப் பனீகுறை லாவிடத் துறைந்து
நீதி நன்னெறி விலகுதற் பவநெறி நிகழ்த்திப்
போத நேர்தரக் காத்திருந் தனர்சில போழ்தால். (18)

இங்கி வர்க்குறு மறிவினிற் றலைவர்க ளிலையென்
றங்கை நீட்டிநற் பதம்பணிந் தவர்களா சறிப்பப்
பங்கமற்றவன் விதிவழி யிவருயிர் பருபகப்
பொங்கி வந்ததா யாசமென் றொருபெரும் புலியே. (19)

வீர மிக்குயர் பனீகுறை ளாவெனும் வேந்தர்
யாரை யும்விளித் தியனபி யொல்லையி னிவணிற்
சார்ந்தி றுற்றிட வருவர்செய் வினைப்பவங் களைந்து
சாரு நற்பெரும் பதவிபெற் றிடுவிர்க டாழ்நதே. (20)

முற்ற நாளிவ னிருந்தியன் முகம்மதைக் காணப்
பெற்றி லேன்வருத் தமும்பெருத் தனவினி வீந்தா
லுற்ற நீவிர்க ளென்சலா முரைமினென் றொதி
வெற்றி மன்னவர் சூழ்தர விறந்தன்ர் மேலோய். (21)

கயின் படைத்தகல் லிபுனுகை பானுமைக் காண
லிவண டைந்துகாத் திருந்தன னெனுமியல் வலியாற்
புவியின் மற்றொரு தேசத்திற் புகுந்திடா வண்ணஞ்
சவிகொண் மெய்யவர் வரூவரிங் கெனவிருந் தனனால். (22)

தெருளு மாந்தர்கள் சூழ்தர மதீனத்திற் செறிந்த
விருள றும்படி வந்தன ரெனுமொழி கேட்டு
மருளுஞ் சிந்தையிற் களிப்புற வுவகையின் மகிழ்ந்து
திரும லர்ப்பதங் காணுதற் கெழுந்தனன் சிறியேன். (23)

வள்ள லென்றுத வியநபி முகம்மதுக் கிமான்
கொள்ளு தற்கிசைந் தனனிவ னெனக்குறிப் பறிந்து
விள்ள லன்றிமுன் னெனைவிலை கொளுமவர் வெகுண்டு
தள்ளு தற்கிட மறமற மனத்தொடுந் தடுத்தார். (24)

தடுத்துத் தீங்கியற் றியதையுள் ளகத்தினிற் றரித்துப்
படுத்தும் பாடறி குவமென வவர்கண்முன் பரிவின்
விடுத்து ரைத்தில னும்பெருந் தீனிலை விருப்பால்
வடித்த நன்மறை வகுத்திசு லாத்தினை வளர்த்தீர். (25)

புதிய மார்க்கமென் றெடுத்தவ னிடத்தினைப் பொருந்தி
மதிம யங்கின னிவன்றனைப் புறம்விடா வண்ணம்
பதியி னிற்சிறை படுத்தலே கருத்தெனப் பரிவிற்
சிதைவி லாதெனைக் காவலி னகத்திடை சேர்த்தார். (26)

புறத்தி னிற்புகு தாதடைத் தருந்திடும் புசிப்பைக்
குறைத்து வைகலு மிதமறப் பேசியுங் கொடிதாய்ச்
செருத்துந் தீவினைச் செயத்துணிந் தவர்களை யன்றி
மறுத்தும் வேண்டுமென றெள்ளள வினுமதித் திலரே. (27)

ஈத லாற்பெருங் கொடுமையிற் றொடரிடர் படுத்துந்
தீதெ லாமொரு துயரெனக் குறித்திலன் சிறியேன்
காதும் வெஞ்சினத் தவரிவன் றீனிலை கருத்திற்
கோதி நின்றன னிடர்க்கடங் கிலனெனக் குறித்தார். (28)

அடிமை கொண்டவ ருரைவறிக் கேவலி னுளாய்
முடியி மேலவ னுட்கருத் தின்படி முடியும்
படியின் மாறுகொண் டிகலுமே லுடலுயிர் பதைப்பத்
தடிவ ரென்பதற் கையமி லெனவுரைத் தனரால். * (29)

---

* அடிமை யெழுவாயு, முடியுமென்னு முற்றுப்பய னிலையுமாகிய படர்க்கை வாக்கியமுலகின் மேல்வைத் தெடுத்துக் காட்ட லென்றுணர்க.

என்ம னத்தின்வே றிலைமுகம் மதுநபிக் கீமா
னன்ம னத்தொடுங் கொளப்பொருந் தினனென்னை நாடி
வன்ம னத்தினை வெறுத்தொரு வழிபடுத் துவிரேற்
சொனம றாத்தில னுரைமின்க ளெனத்தொகுத் துரைத்தேன். ( )

நன்று நன்றெனச் சிரமசைத் தனைவரு நபியா
தின்று தொட்டுமுந் நூற்றினிற் குறைந்திடா தீத்தங்
கன்றி னைத்துநீ ரிறைத்தவை பலன்படக் காய்த்து
நின்ற வண்பொழி லாக்கிநீ யளிப்பது மல்லால். (31)

ஆயி ரத்திரு நூற்றின்மே லைம்பதி னளவி
னேய தானவி ராகனென் றோதிய வெடையின்
றாய தங்கமு மளித்தி டீயற் றாதரென பவர்பாற்
போயி மானகொளத் துணிவது துணிவெனப் புகன்றார். (32)

இன்ன வாசக மிசைத்தவ ரிதயங்கட் கேற்ப
நன்ன யத்தொடுஞ் சிலமொழி நவினற வணீங்கி
மன்னா மனனவ நும்பத மடைந்தனன் மனத்தி
லுன்னி யேற்பவை யெற்குரைத் திடுகவென் றுரைத்தான். (33)

பாரி சென்னுமவ் வூரவன் பகர்ந்தசொல் லனைத்தும்
வேரி யம்புய முகம்மது கேட்டகம் விரும்பிச்
சாரு நல்வழிக் குரியனென றுளத்திடை தரித்து
மாரி போனறுநன மறைதரு வாய்திறந் துரைப்பார். (34)

இருநி லத்திடை பிறந்துநன் னபியென விவணின்
வருவ ரெனறனைத் தேடிய வுண்மையவ் லவர்க
ளரிதிற் காணகினு மிறக்கினு முமமத்தி னவராய்ப்
பெருகுந தீனிலச லாமத்துப் பெறுவாக ளென்றே. (35)

பழுதி லாதவ னுரைத்தநன் மறைமொழிப் படியே
தழுவி வெங்குபிர களைதர வேலைவலந் தரிததோய்
வழுவி முனவிலை கொண்டவ ருரைத்திடும் வழியே
யெழுதி நீகொடுத் திவணவரு கெனநபி யிசைத்தார். (36)

மன்னு நந்நபி யுரைத்தலுங் களிப்புடன் வாழ்த்தி
முனனு ரைத்திவண் விடுத்தவ ரிடத்தினின் முன்னிச்
சொன்ன சொன்னமுந் துடவையு மவதியி லளிப்பே
னென்ன வோாமுறி யெழுதியங் கவர்கரத் தீந்தான். (37)

மருங்கு நின்றசல் மான்றனை நோக்கிநீ வரைந்து
தருங்க டத்தமுந் தந்தனை யுனக்குறுஞ் சார்பி
னிருங்கு லத்தவர்க் குரைத்தெமக் கீதனு மியற்றி
யருங்க ணத்திசு லாத்தினில் வழிபடென் றறைந்தார் (38)

தண்ட ளிர்ப்பொழிற் பாரிசின் விலையெனத் தலைநாட்
கொண்ட பேரிடம் விடுத்துநந் நபியிடங் குறுகிப்
பண்டு ரைத்தவப் படிமுறைப் பத்திர மெழுதி
விண்ட ளித்தன னெனவுரைத் தனன்புகழ் விறலோன். (39)

மன்ற றன்றிய மதுமலர்ப் புயமுகம் மதுவு
நன்று நன்றென வெழுந்துசல் மானைமுன் னடத்திச்
சென்று தோழர்க ளுடனொரு துடவையைச் சேர்ந்து
நின்று கன்றெடுத் திவண்டரு கெனநிகழ்த் தினரால். (40)

ஈத்தங் கன்றுமுந் நூற்றையு மெடுத்தவ ரிருந்த
மாத்தி ரத்தினின் முன்புவைத் தனர்மன மகிழ்ந்து
தேத்த தும்பிய மலர்ப்புய மசைதரத் திருத்தும்
பாத்தி தோறினும் பதுமமென் கரத்தினிற் பதித்தார். (41)

ஆதி நாயக னபியுட னமைஸகு பிகளிற்
போத மேவிய முதியவ ரொருவரப் புவியிற்
சோதி வீசிய மாகதப் பாசடை துலங்குந
தீதி லாதெரு கன்றுநட் டினரவண் சிறப்ப (42)

எய்த்தி டாப்புகழ் நபிதிருக் கரத்தினி லெடுத்து
வைத்த கன்றுக ளியாவும்வா னுலகுற வளர்ந்து
நெய்த்த வீறெடுந் திரண்ட நெருங்கின நிறைகண்
மொய்த்த பூங்குலை சாய்த்தன காய்த்தன முழுதும். (43)

கலந்து நின்றமெய்த் தோழரி லொருவர்கை யார
நிலந்த னிற்பதித் திருந்தகன் றொன்றுமந் நிலையா
யுலந்து நின்றது கண்டுநந் நபியொளிர் கரத்தா
னலந்த ரும்படி யெடுத்ததை மறுத்துநட் டினரால். (44)

ஈத்தங் காவகம் பனிரண்டு வருடத்தி னியல்பாய்க்
காய்த்து நற்பலன் றருதல்போல் நபிசெழுங் கரத்தால்
வாய்த்து மாதம்பன் னிரண்டினிற் குறைவற வளர்ந்து
பூத்துக் காய்த்துநற் பருக்குலை யொடும்பொருந் தினவால். (45)

மதரா மூறிய பழக்குலை பொருக்கிலா வளைந்து
சிதறு கின்றன துடவைகண் டருங்களி சிறந்து
நுதிகள் வேல்வலந தாங்குசல் மான்றனை நோக்கி
யிதுகொல் நீயவர்க் களித்திடு நிதியமென் றெடுத்தார். (46)

சிறைகொள் வாரண மிடுஞ்சினை யளவெனத் திரண்ட
நிறையில் காஞ்சனத் திணிற்றிரு வாயுமிழ் நீராற்
குறைவி லாதுறத் தடவிநற் செழுங்கரங் கொண்டு
மறுவி லாதசல் மான்மலர்க் காத்தில்வைத் தனரால். (47)

இறைக்குந் தேன்கனித் துடவையு மவர்களுக் கீந்து
குறிக்கும் பொன்னையு முன்னரி னெழுதிநீ கொடுத்த
நிறைக்கு ளெவ்வள வவ்வள விந்தமா நிதியி
னறக்கி யீந்திடு கென்றனர் முகம்மது நபியே. (48)

பொன்னை வாங்கிவெண் டுகிலினி லிருகுறப் பொதிந்து
பன்னு நநநபி முகம்மதி னிருபதம் பணிநது
துன்னு தோழர்க ளியாரையு மினிதுறத் துதித்துத்
தென்னு லாமரைப் பதம்பெயர்த் தெழுந்தனன் றிறலோன். (49)

கொண்ட றாங்கிய துளவையுங் கனகமுங் கொடுத்து
மண்டு பூம்பொழிற் பொன்னகர் வாங்கினம் வாய்ப்பத்
தெண்டி ரைப்புவி யிடத்தினின் முகம்மதைத் தேடிக்
கண்ட பேறிதன் றுவகையிற் றெருத்தலை கடநதான். (50)

வருந்தி லாநிதி யளித்துமுன் விலையென வாங்கி
யிருந்த மன்னவன் மைந்தர்கண் மனையிடத் தேகித்
திருந்த வாய்புதத் தடிகள்சொற் படிமுறை சிறியேன்
பொருந்தி வந்தனன் கொண்மினென் றிசைதரப் புகன்றான். (51)

கேட்டு மன்னவ ரொல்லையி னெழுந்துகாய் கிளைத்த
தோட்ட முற்றினுஞ் சுற்றிநன் கெனச்சிரந் தூக்கிக்
காட்டின் மிக்கநற் றுடவைகைக் களித்தனை கடிதின்
வேட்ட பொன்னையுந் தருகென வெதிரா விளம்பினரால். (52)

பொன்ன ளித்திடென் றுரைதரத் துகிலிடை பொதிந்த
மின்னு மாடகக் கட்டியைத் தெரிதர விரைவிற்
சொன்ன சொல்லெடை மாட்டிய துலையினிற் றாக்க
நன்ன யம்பெற வெடைக்கெடை நறிக்கவைத் தனனால். (53)

எத்த லத்தினு நிறையென வியற்றும்வி ராகன்
பத்தி ரண்டுநூாற் றைம்பதென் றிடுமெடைப் படியே
தத்தி ரத்தினிற் பலபட நறுக்கியுஞ் சரியாய்
வைத்து மாடகக் கட்டிமுன் போல்வளர்ந் திருந்த. (54)

தனந்த னிக்குறை யொடுமளித் தனையினிக் கடிதுன்
கனிந்த தீங்கனி யொடுமளித் தனையினிக் கடிதுன்
மனந்த னிற்றுணிந் திடுமிசு லாநெறி மார்க்கத்
தினந்த விற்செலென் றிசைத்தலும் விரைவுட னெழுந்தார்.(55)

தொண்டெ னக்குறித் தாண்டவர் துடாறத் துடைத்துக்
கொண்டு போனபொன் னினிலனு வெனுங்குறை யாமற்
றிண்டி நற்புயம் வீங்கிடச் செழுமுக மிலங்க
அண்டர் நாயகன் றூதுவ ரவைபிடத் தானுர். (56)

சிறையெ னத்தனி யாண்டவ ருரைவழி திருந்த
நறைத ருங்கனி பொழிலளித் தவர்கண்முன் னடுவா
யறைத ருங்கன கத்தினை யளித்துமுன் னளவாய்க்
குறைவி லாதினம் வளர்ந்தபொன் னிதுவெனக் கொடுத்தார்.(57)

அடுத்த ளிச்சல் மான்றனை நோக்கியன் புடனே
தொடுத்த காரிய முடித்தருந் துன்பமுந் துயரும்
விடுத்த னைப்பதம் படைத்தனை வீடுறு நிதியு
மெடுத்து நீகொடு போவென வுரைத்தன ரிறசூல். (58)

இறைய வன்றிருத் தூதுவ ரீந்தபொன் னதனுல்
வறுமை யென்றில நிலத்திடை வாழுநா ளளவும்
பொறையின் மீதிடுஞ் சுடரெனத் தீனெனும் பொருட்டா
லுறையும் பாவமற் றமரர்கள் பதவியுற் றிருந்தார். (59)

பூணுந் தஞ்செல வடங்கலும் போக்கியும் புகழாற்
பேணு நல்லவர்க் கினிதெடுத் தருளியும் பெரிதி
னீணி லத்தினி னபிதரு கட்டிமா நிதிய
மாணு றத்தினி யிருந்தது நாட்குநாள் வளர்ந்தே. (60)

மாநிலம் புகழ் முகம்மது நபிபதம் வழுத்தித்
தீனி லைக்குரி யவரெனப் பெரும்புகழ் செலுத்தி
யானுங் காவுமோவ் வாதசல் மானெனு மாசர்
தான மிக்குயர் தலைவரின் வாழ்ந்திருந் தனரால். (61)

சல்மான்பாரிசுப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 11-க்குத் திருவிருத்தம் 607.



# கருபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம்.



நபியெனத் தீனிலை நடத்து நாண்முதற்
நபினுறும் பைத்துல் முகத்தி சென்னுமத்
தவிசினை நோக்கியே தக்கு பிறேடும்
புவியிடைத் தொழுகையைப் பொருந்தி நின்றனர். (1)

தூவத்தண் டுளிமழைக் கவிகைத் தூதுவர்,
தீவத்தும் புகழ்தர வணக்கஞ் செய்புநாட்
பாவத்தின் றிரள்கெடப் படுத்துத் தோன்றிய
காபத்துல் லாவைப்பின் காட்ட வில்லையால். (2)

மகிதலத் தினிலுயர் மக்க மாகிய
நகர்விடுத் தனிமதி னவை நண்ணிச்சூழ்
புகழொடுந் தீனெறி புரந்து வைகுநாட்
டிகழ்சகு பானென விளங்குந் திங்களில். (3)

மிக்கநற் றேதிமு வைந்தின் மேவியே
தக்கசெவ் வாயினி லுஹறு நேரத்தில்
ஹறக்கனை யிரண்டிறக் ஆத்துத் தான்றொழு
தொக்கலோ டிசைநபி யுறையு மொல்லையில். (4)

நிரைமணித் தடச்சிறை யொடுக்கி நீள்கதிர்
விரிதரு வெள்ளிடைப் படர்ந்து வேததா
வுரைதருந் திருநபி யிடத்தி னேர்நெடி
வரையினிற் சபுறயில் வந்துற் றாரரோ. (5)

இறையவன் கருபத்துல் லாவென் றெய்திய
துறவுயர் பள்ளியை நோக்கித் தான்றொழ
மறையுரை வழங்கின னென்ன மன்னபி
முறையிதென் றுனந்தக் கடலின் மூழ்கினார். (6)

முன்னரி ரண்டிறக் ஆத்து முற்றிய
பின்னரிற் கருபத்துல் லாவைப் பெட்புற
வுன்னினர் நோக்கின ரோதும் பாதியுந்
துன்னிய குழுவுடன் றொழுது வைகினார். (7)

வேறு.

பரிதி வானவன் விலகிய நெடும்பதி தனக்கு
நாலை போல்வளம் பெருகிய மதீனமா நகர்க்குந்
தெரிகி லாதுற நிமிர்ந்துமா றேய்தாத் திரண்ட
வரைக ளியானையும் பதுக்கையுந் திடருறு வனமும். (8)

இருநி லம்பிதுங் கிடக்கட லலைகிடந் தெறிய
நிரைம ணிக்கதி ரெறித்திட நெடுங்காத் தமிழ்த்தி
யொருநி லத்தள வாக்கியங் குறைந்தன ருடுக்கள்
செருகும் வானகங் கீண்டிட வருஞ்ஜிபு ரீலே. (9)

வேறு.

சூன்முகில் குலவிய வரையின் சுற்றெலாம்
வானவர் கோன்புவி யிடையின் மாட்டலாற்
பூநிமிர் கருபத்துல் லாவும் பூணெனுங்
கானமர் தூதர்கண் காண லாயதே. (10)

மதிதவழ் நெடுங்கொடி மதீன மாகிய
பதியினி லமைத்தவப் புதிய பள்ளியை
நிதிமதிட் கருபத்துல் லாவி னோரதாய்
விதியொடுந் திரித்துப்பின் விளங்கக் கட்டினார். (11)

இருசுடர் விலங்கிட விலங்கு நீள்கொடி
நிரைதரும் பள்ளியை நோக்கி நீணபி
யொருவனைத் தொழுதிரந் துவக்குந் திங்களிற்
றெரிதரும் புதுமையொன் றெடுத்துச் செப்புவாம். (12)

கருபத்துல்லாவை நோக்கித்தொழுத படலம் முற்றிற்று.

ஆகப் படலம் 12-க்குத் திருவிருத்தம்-619.



# ஓநாய்பேசிய படலம்.

நலனுறு மக்கமா நகரைச் சுற்றிய
மலைகளி னொருவரை யடவி யின்வயி
னிலைகொளப் பறழொடு நிறைந்த புள்ளிமான்
கலையொடுஞ் செறிந்துபுற் கறித்து நின்றதே. (1)

வள்ளுகிர் முடங்குவால் வளைப்பற் றாங்குர
னுள்ளொடுங் ககட்டவோ நாயொன் றெண்ணுனை
முள்ளரைக் கானிடை கிடந்து மூரிவெம்
புள்ளி மெய்ப்பிணையினை நோக்கிப் போனதால் (2)

கல்விரு புறத்தினுஞ் சிதறக் கால்வழீஇ
வல்லுர னிலம்படி வளைந்து சென்னிதாழ்த்
தெல்லையில் பசியொடு மெதிர மானினம்
பல்பல திசையினும் படர்ந்து போயின. (3)

பிணைக்குலந் திசைதொறுஞ் சிதறிப் போதுற
வணித்ததென் றொருபிணை யதனை நோக்கிவெண்
மணிக்கதி ரெனுமுகிர் நிலத்தில் வவ்வுறத்
துணித்துனு மம்பரிற் றொடர்ந்து போயதே. (4)

வடித்தநீர் தூங்குநாச் சுணங்கன் வாயினிற்
பிடித்தெனத் தொடர்ந்தது பெயரப் புள்ளிமா
னடித்தபந் தெனக்குதித் தரிதிற் சென்றபூ
நடித்திடு கருபத்துல் லாவை நாடியே. (5)

பட்டியின் வாய்நனி படரு மானின்வா
றொட்டது காணெனத் தொடரு மெல்லையி
னெட்டெனுந் திசைபுகழ்ந் தேத்துந் தீவினைத்
தட்டறும் ஹறமெனுந் தலத்து ளாயதே. (6)

இறையவ னமரர்க ளியற்றுஞ் சங்கையா
லறமெனுந் தலத்தின்மா னைய தீண்டினித்
தெறுகொலை விளைத்திட றீது செய்நெறி
முறையதன் றெனத்தனி முடுவ னின்றதே (7)

ஈனன பாசுபி யானு பின்பமு
மானமுந் தவிரபூ ஜகுலும் வன்கொலைக்
கானபஞ் சரசபு வானு மாண்டொரு
தானமீ தமர்ந்துநின் றவர்கள் சாற்றுவார். (8)

கானகச் சுணங்கன்வாய் கழிந்து போனதிம்
மானென விருந்தன மானு மொல்லையி
ஞனநல் ஹறமது ளாய தாலது
தானுநல் ஹறமதைச் சங்கை செய்ததே. (9)

வருந்திட நிதமுயிர் செருக்கும் மன்சுணங்
கருந்திடும் பசிவெறுத் தறத்தைச் சங்கைசெய்
திருந்தது மானுமிவ் வெல்லை யுட்படப்
பொருந்திநின றகம்புறம் போய தில்லையால். (10)

புதுமையிற் புதுமையீ தென்னப் பொங்கிநின்
றதிஜயத் தொடுமெவ ரவர்கள் கூறலும்
பிதிர்வி ரூயர்ந்தபற் பிளந்த வாயினீர்
குதிதரு நெடியநா நீட்டிக் கூறுமால். (11)

கருத்தினிற் புந்தியற் றிருக்குங் காபிர்காள்
பெருத்திடும் ஹறமதைக் குறித்துப் பிந்திமீண்
டிருத்தலைப் புதுமையென் றிசைக்கின் றீரெனத்
திருத்தியே யுரைத்திட மறுத்துச் செப்புவார். (12)

குதிமறுத் தறமதைக் குறித்து நின்றதே
புதுமையென் றிருந்தனம் பொருவி லாதநான்
மதியொடு மின்றுநீ யுரைத்த வாசக
மதனினும் புதுமையென் றறைந்திட் டார்களால். (13)

குறித்துநின் றெதிர்ந்தியான் கூறும் வாய்மையெப்
புறத்தினு மறிகிலாப் புதுமை யென்கின்றீ
ரறத்தினுக் குரியவ ஞணை யும்மிடத்
துறப்பெரும் புதுமையொன் றுளதென் றோதித்தே. (14)

கடத்துறை ஞமலிநீ காணொ ணுதெம
திடத்தினிற் புதுமையுண் டெனகின் றுயவை
திடத்துட னியாவர்க்குந் தெரியச் செப்பெனத்
தொடுத்தவர்க் கறிவுறச் சொல்லு கின்றதால். (15)

ஆதிதன் னொளியினிற் றரித்த ஞதிதன்
றூதென வுலகினிற் றோன்றி நின்றனர்
வேதமு மிறங்கின மெய்மை வேதத்தி
னீதமு நடத்தினர் நிகரு மில்லையால். (16)

அந்நபி நன்மறை யறைந்தீ மான்கொளச்
சொன்னவை யனைத்தையு மறுத்துச் சூழ்தா
ரின்னலைப் பொருந்தினீ ரீத லாவினிப்
பன்னரும் புதுமையொன் றில்லைப் பாரினே. (17)

முகம்மது நபியுரை மறுத்த மாற்றலா
முகமதி நோக்குதன் முழுதுந் தீமையென்
றிகலுறக் கொடுமொழி யெடுத்துக் காட்டிவிண்
புகுமலைக் கானினிற் சுணங்கன் புக்கதால். (18)

இணங்கிய நன்மொழி யெவர்க்குங் கூறியச்
சுணங்கன்வெங் கான்புகச் சூழ்ந்து நின்றிடுங்
கணங்களி லபூஜகல் கபடுங் கள்ளமும்
பிணங்கிய மனத்தினி னகைத்துப் பேசுவான். (19)

உடும்பைவன் பிணையினைத் தன்கைக் குட்பட
விடும்பினைப் பயிற்றிய முகம்ம தென்பவன்
கடம்படு ஞமலியின் கருத்தும் பேதுறப்
படும்படி பயிற்றுதற் பகர வேண்டுமோ. (20)

அறத்தினுட் படுநகர் மாந்தர்க் கன்பிலா
திறத்தலைப் படுநினை வெடுத்த வஞ்சத்தான்
புறத்தொரு நகரிடைப் புகுந்து மாயங்கண்
மறுத்திலன் விளைத்தனன் முகம்ம தாங்கொலோ. (21)

அயனகர்ப் புகுந்தன னகும தென்றியாம்
பயமற விருப்பது பழுது பற்றலார்க்
கியலுறு மிடங்கொடுத் திருத்தல் பாரிடை
வியனுறும் வீரத்தின் விழும மன்றரோ. (22)

மருவலர் வலிகெட வுடைந்து மற்றொரு
பெருநக ரிருந்தன ராயிற் பேதுறப்
பரநகர் வேந்தராற் பகைகண் மூட்டியுங்
கருவறுத் தவர்பகை களைய வேண்டுமால். (23)

திறைபல வழங்கினுஞ் சேர்ந்து கைகுவித்
திறையென நிற்பினு மினிது கூறினுங்
கறைகெழுங் கொடுமனக் கருத லார்தமை
யுறவென நினைத்திட லுணர்வுக் கீனமால். (24)

அடுத்துறைந் திலரென வெள்ள லன்றிக
லெடுத்திடு கருதல ரிருந்து நாட்குநாட்
டொடுத்திடும் வினையமுஞ் செயலுஞ் சூழ்ச்சியும்
விடுத்திடு மொற்றராற் றெரிய வேண்டுமால். (25)

வைகின னிந்நகர் வடுவுந் தீமையும்
பொய்யினின் முடித்தரும் புந்தி யோர்களை
வெய்யவ ராக்கினன் மேலுந் தீவினை
செய்கல னெனமனந் தேற லன்றரோ. (26)

பவ்வமூழ்த் திடுநெடும் பாரி னீங்கலா
தெவ்வுழை யிருக்கினு முகம்ம தென்பவன்
செவ்விய னலனவ னூக்கஞ் சீர்கெட
வெவ்வினை விளைத்திசை நிறுத்த வேண்டுமால். (27)

என்றவ ணினையன வியம்பச் சூழ்தா
நின்றவர் கேட்டிவை நினைவி தாமெனக்
குன்றென விரும்புயம் வளர்ந்து கொண்டெழ
வன்றிறற் பெரும்பகை மனத்த ராயினர். (28)

ஈரமில் லபூஜகு லென்னு மன்னவன்
சார்பினி லுறவினிற் றக்க வேந்தரும்
பாரிடை சிறுகுடிப் படையின் மாநதரு
மூரிடை படையொடு மொருங்கு கூடினர். (29)

ஓநாய்பேசிய படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 13-க்குத் திருவிருத்தம் 648.

---



## வத்தான்படைப் படலம்.

---

மாறரு நெடுவரை மக்க மாநகர்த்
தேறல ரினையன நிகழ்த்துஞ் செய்கையைக்
கூறரும் பெரும்புகழ் கொண்டன் மானபி
வீறுடை திருச்செவி விளையக் கேட்டனர். (1)

அரிகடஞ் செய்கைக ளனைத்துங் கேட்டருள்
பெருகிய மனத்தினிற் பிரிய முற்றெழில்
வரிசைமன் னவாகளை யழைத்து வம்மென
வுரைசெயத் தூதுவ ரோடி யோதினர். (2)

விற்கர வலியபூ பக்கர் வெற்றிசேர்
மற்புய ருமறுது மானல் வாளலி
சொற்பெருந் தோழருந் தூதென் றேறுவார்
முற்படு நபிதிரு முன்ன முன்னினார். (3)

மன்னுறை யறிவென விருக்கு மன்னவ
ரனைவரு மடுத்துறைந் திருப்ப வாரணத்
தனிநிலை யுள்ளகந் ததும்ப நந்நபி
யினியன மொழிகொடுத் தியம்பு வாரரோ. (4)

கொலைமனத் தபூஜகல் குழுவு மந்நகர்ச்
சிலையவ வீரருந் திரண்டு தீனவர்
மலைவுறப் போரமர் வளர்க்க வேண்டுமென்
றிலைமலி வேலினீ ரிருக்கின் றார்களாய். (5)

மாவிசும் பமரருக் கிறைவ ரிம்மதி
னாவினிற் போயமர் நடத்த வேண்டுமென்
றேவின னிறையென விசைத்த மாற்றமும்
போவதன் றிகல்கெடப் புரிதல் வேண்டுமால் (6)

வல்லவன் ஜிபுரியீ லுரைத்த வாய்மையிற்
செல்லவுந் தீனெறி விஷயஞ் செய்யவும்
நல்லவை நமக்கிவை யன்றி நாட்டமொன்
றில்லையென் றிசைநபி யிசைத்திட் டாரரோ. (7)

நாயகன் மறைவழி நடத்து நந்நபி
வாயகத் துதித்தசொன் மாற லின்றியே
சேயென நடப்பது திறமைத் தாமெனத்
தூயவ ரியாவருந் துணிவுற் றார்களால். (8)

போற்றிநின் றனைவரும் புந்தி யாமெனத்
தேற்றமுற் றியல்புடன் செப்ப நந்நபி
மாற்றல ரொனுங்குயிர் மாய்க்கும் பீஸபீற்
கேற்றவை யாவையு மியற்று மென்றனர். (9)

கொற்றவெண் கவிகையுங் கோலமார் துகில்
சுற்றிய வட்டமுந் தூங்கு குஞ்சமும்
கற்றையங் கவரியுங் கதிர்செய் மாமணி
வெற்றிவெண் டுவசத்தின் பேத வீக்கமும். (10)

தடமுறு பதலையுந் தவிலுந் தாளமு
மிடியென முழங்குபே ரிகையு மோர்புறத்
திடிமனுந் தகுணிதஞ் சிறந்த பீலியும்
வடிவுடை காளமும் வயிருஞ் சின்னமும். (11)

வட்டணந் தட்டிநீள் வள்ளித் தண்டைதோள்
கட்டிய தோர்பரங் கவசங் கேசகம்
புட்டில்கைச் சோடிணை தாக்குப்
பட்டினிற் பஞ்சுவைத் தடைகுப் பாயமும். (12)

பட்டையந் தோமரம் பாசு கப்பணஞ்
சொட்டைவா ளறபினுச் சுரிகை முப்பிடி
நெட்டிலைச் சூலங்கோல் பால நேமிசூழ்
கட்டுபத் திரஞ்சரஞ் சுழற்று கைக்கவண். (13)

ஆடலம் பரிபரிக் கணிக ளியானையுந்
தேடின ரியற்றினர் சேனை காக்குதற்
கீடுடை யவரிவ ரென்ன நந்நபி
கூடிய பெயரினிற் குறித்துக் காட்டினார். (14)

அரணடு கடகரி யனைய நால்வரு
மூரணடு பொருவுமு ஹமாறி ரீன்களுந்
தரியல ருயிருணன் சாரி மார்களு
நதிபதி நபியுட னிருக்கு நாளினில். (15)

செறுநர்வத் தானெனுந் தலத்திற் சேர்க்கிலாக்
குறைஷிகள் பலருங்க ணணிக் கூட்டமு
மறமுடன் றிரண்டன ரென்னும் வாசக
மிறையவன் றிருநபிக் கெடுத்துக் கூறினார். (16)

மாற்றலர் முதற்படை திரண்டு வைகிய
கூற்றினை யுணர்வொடுங் குறித்தஸ் காபிர்கள்
சீற்றமுற் றவ்வயின் செல்கு வோமெனச்
சாற்றலு முகம்மதுந் தகுமென் றோதினார். (17)

தீட்டிய செழும்படைச் சேனை வீரரை
வீட்டிவெங் களத்திடை பருந்துக் கேவிருந்
தூட்டிய வேற்கையு பாதா செய்தவங்
கூட்டிய தெனவுரு வெடுத்த கோலத்தார். (18)

காதலுற் றிரப்பவர் கருத்துத் தேக்குற
வீதலுக் கிசைந்தெடுத் தளிக்குஞ் செங்கையார்
போதமும் வீரமும் புகழுந் தாங்கிய
சாதனச் சகுதெனுந் தரும வேந்தரே. (19)

அன்னவர் தமைமதி னாவிற் காதியா
மன்னபி முகம்மதங் கிருத்தி வைத்ததாள்
பின்னிடா தடுஞ்சரம் பெய்யும் வீரர்க
டுன்னிட வெழுந்தனர் துதிக்க யாவுமே. (20)

குடைகளுந் துவசமுங் குழுமி யோங்கிடக்
கடுவிசைப் பரிக்குழாங் கலந்து முன்செலச்
சுடர்விடு படைக்கலஞ் சுமந்த கொற்றவர்
புடையெழத் திருநகர்ப் புறத்திற் றோன்றினார். (21)

படியிடத் தெழுந்துகள் புயலிற் பம்பவா
னிடியென முரசுபல் லியங்க றங்கக்கூர்
வடிநெடுங் கதிரயின் மலிந்து மின்னிடக்
கொடியவர் திசையினைக் குறுகி னாரரோ. (22)

சேனையும் வாசியுஞ் செருமிச் சூழ்தரு
கானர ணனைத்தையுங் கடந்து சென்றுக
னாணியர் குறைஷிக னடுந டுங்கவத்
தானெனும் பெயருடை தலத்தைச் சுற்றினார். (23)

ககனவெங் கதிரவன் கடுங்க டேளியிற்
புகவிட மிலையெனப் பொருந்து மன்னவர்
தொகுதியும் வாசியுஞ் சற்றுஞ் சேனையு
மகுதிகண் டுளத்திடை மலைந்திட் டானரோ. (24)

வருவதும் நிகழ்வதும் வகுத்துப் புந்தியிற்
பெருகிய தலைவருக் கெடுத்துப் பேசிநல்
லுரையினும் வழக்கினு மொத்த சூழ்ச்சியி
னுரவல னொருவனைத் தூது போக்கினான். (25)

சந்தென விடவருந் தலைமை மன்னவன்
வந்துநந் நபிபதம் வழுத்தி யூன்றிய
கந்தடு கடகளி றனைய காட்சியான்
சிந்தைகண் மகிழ்தர வெடுத்துச் செப்புவான்' (26)

இறையவன் றிருநபி யுலகுக் கின்புறு
மறைவழி யொழுகியவ் வணக்க வாசக
முறைமையி னடத்தியா முழுது மிவ்வயி
னுறைகுவ தலதுவே றுறுதி வேண்டுமோ. (27)

மருசுயென் றோதும்வத் தானி னேந்தலு
மிருபடைத் தலைவரும் வேறு றுதொரு
தகைமையிற் பணிவது சரத மின்றுநீ
ரிகன்மறுத் தணிநகர்க் கெழுக வென்றனன். (28)

உற்றுறைந் தவிணிவ னுரைத்த வாசகம்
வெற்றியென் றியனபி போரின் வேட்கையிற்
சுற்றிய திறற்படைச் சூர ரியாரையு
மிற்றையி னெழுகவென் றேவி னாரரோ. (29)

இங்கிதத் தொடும்பணிந் திசைத்த தூதுவ
னங்கனுழ் நபிமல ரடியி னிற்கரப்
பங்கயங் குவித்தரும் பதியிற் போயினன்
றிங்களங் குடையொடு மெழுந்த சேனையே. (30)

ஓட்டிய செழுமுகிற் கவிகை யூடுற
நீட்டிய வெண்கொடி நிலவு கான்றிடத்
தீட்டிய படைக்கலஞ் செறியச் சென்றொரு
காட்டினி லிறங்கினர் கார ணீகரே. (31)

இறங்கிய பாசறை யிருந்து வாரிவோற்
கறங்கிய சேனைமு ஹாஜி ரீன்களின்
மறங்கிள ரெண்பது பெயரை வாளொடு
திறங்கிள ரயிலொடு நீக்கி னாரரோ. (32)

கந்தமுங் கதிரும ரூத காட்சியர்
கொந்தலர் புயத்துபை தாவைக் கூவிநற்
சிநதையின் மகிழ்வுற விருத்தித் தேறிய
மந்திர மொழிசில வுகுத்துப் பின்னரும். (33)

கூடுமெண் பதுபெய ருடனுங் கோதற
நாடிநீர் மக்கமா நகரைச் சூழ்தரு
பாடிக ளனைத்தும்பாழ் படுத்துஞ் சூறைக
ளாடியிங் கடைகென வறைந்திட் டாரரோ. (34)

கரியினு மதர்த்தமு ஹாஜி ரீன்களை
மருமலர்ப் புயத்துபை தாவை மன்னபி
திருநய னங்களா னோக்கிச் சிந்தைவைத்
திருளறும் வெற்றிவெண் கொடியு மீந்தனர். (35)

கருதல ருறைபதி களைந்திட் டொல்லையின்
வருகென வினைஞரை விடுத்து வள்ளல்பாய்
துரகதக் குழுவொடுஞ் சேனை சூழ்தர
நரலையின் வளமதீ னாவை நண்ணினார். (36)

எண்ணொரு பதின்மரு மிலங்கி நீடொடை
வண்ணவொண் புயத்துபை தாவு மாறிலா
தண்ணறன் பதமலர் போற்றி யன்பொடும்
விண்ணெடுங் கடுவிசைப் புரவி மேற கொண்டார். (37)

எதிரமர் தொறுந்தழும் பிருந்த மெய்யினர்
கதிரயில் வாண்மற வாத கையினர்
விதியவன் மறைமுறை விளக்கும் வாயினர்
புதியவெம் பகைப்பதி யடுப்பப போயினார். (38)

வெற்றிவெண் கொடியொடும் வேக வாம்பரிக்
கொற்றவா குழுமிவந் தடருங் கொள்கையைப்
பற்றல ரறிந்துசீ றாரிற் பல்பல
தெற்றறக் குடியொடுஞ் சிதறிப் போயினார். (39)

இவுளியும் படையுமு ஹாஜி ரீன்களுந்
தவிசுறை யரசுபை தாவும் வந்தவை
யபுஜகல் மகனறிந் தரிய வேகத்தாற்
குவிதரும் படைக்கெதி கொண்டு நோந்தனன். (40)

மதிவர வழைத்தவர் விடுத்த மன்னருஞ்
சதியபு ஜகல்தரு புதல்வன ருணையுங
கதிபரி யொடுபடைக் கலத்தின கையொடு
மெதிருமக் கெமக்கென விருக்குங் காலையில். (41)

சதிவைத்த கருதலர் தளத்தி னூடிருந்
திதமித்த நபிகலி மாவுக் கின்புறு
மதிவத்தி பெனுமிகு தாதுமே வாம்பரி
யுதபதத்தும் வந்துபை தாவைக் கூடினார். (42)

மாதவ ரிருவரும் வந்த போழ்தினி
லாதாம் விடுத்தம ரரிக டனைபுறப்
பூதலம் புகழுமுக் காசு புத்திரா
காதகல் சகுதொரு கணைதொட் டாரரோ. (43)

அடுத்த நின் றவரிசு லாத்தி லாயது
மெடுத்ததோ ரம்பெய்தவ ரிருந்த வேகமுங்
கடுத்தலை யெடுத்தவர் கருத்துங் கண்டமர்
தடுத்தபூ ஜுகல்மகன் றளம்பின் வாங்கினான். (44)

வெட்டுக்குத் தெனுமொழி விளம்பி லாதொரு
மட்டினின றவாகளபின் வாங்கி ஞரினித்
தொட்டமர் வினைதகிடல் சூழ்ச்சித் தனமெனத்
தட்டல கயிலுவை தாவு நீங்கினா. (45)

மருவல ருடனிருந் திருவர் வந்ததும்
பொருசகு துக்கெதி ராது போயதும்
விருதுகொண் டிகலிடும் வெற்றிப போரினும்
பெரிதெனக் குழுவொடும பிரியத் தேகினா. (46)

மிகல்பெறும் வெற்றியின் மீஸ மீனுக்கா
யிகன்முதற் சாமுமொன றெய்து மனனவா
முகிறவழ் கொடிசெலத் தானை மொய்த்திட
நகாபுகுந் தருமது பதத்தை நண்ணினா. (47)

வத்தான் படைப்படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-14-க்குத்-திருவிருத்தம்-695.

—:*:—



# பாத்திமா திருமணப் படலம்.

—:[*]:—

திங்கள்வந் திறைஞ்சிப் போற்றி செய்தெகிர பேசப் பேசு
மங்குலங் கனிகை வள்ளல் வளம்பெறு மதீனாத் தனனிற்
பொங்குதீன் விளங்க நாளுங் காரணப் புதுமை யோங்கி
யெங்கணும் படரச் செங்கோ னெறியா சியற்று நாளில். (1)

விதியவன் மொழிம ருது விண்ணவர்க் காசர் கூறும்
புதுமறை யவர்கள் போற்றப் பொருவில்லா னவர்கள் வாழ்த்தக்
கதுவகிர் கரிய கூந்தற் காரிகை பாத்தி மாதம்
வதுவையின் வரலா றெல்லாம் வகுத்தினி துரைக்க லுற்றும். (2)

ஆதிநா யகன்றன் றூதர்க் கன்புறுங் கதீஜாவீன்ற
பேதையர் நால்வர் தம்முட் பெற்றபே றனைத்து மொன்றாய்க்
கோதறத் திரண்டு சோதிக் கொடியென வுருக்கொண் டோங்கி
மாதாக டிலத மென்ன மாநிலத் துதித்த பாவை. (3)

அதிர்த்திரை கடற்பா ரெங்கு மமுதத்தீன் றிவலை சிந்தி
யுதித்தெழு முகம்ம தென்னுந் திங்களி னுதயஞ் செய்து
பதித்தலத் துவக்கு மாதா பவக்கடற் றிமிர மோட்டுங்
கதிர்த்தடத் தீப மென்னக் கட்டழ கெறிக்குஞ் சோதி. (4)

ஆதிநா ளொளிவு வாய்ந்த வழகெலாந் திரட்டிச் சேர்த்த
பாதியிற் பாதி நூற்றோரா பங்கினிற் செம்பொ னொட்டின்
மாதரை வகுத்திம் மாதைத் திரட்டிய வண்ண மெல்லாந்
தூதுயிர்ப் புதல்வி யென்னப் படைத்தனன் சுருதி யோனே. (5)

சுற்றிளம் பரிதி வெய்யோன் சுவட்டிடச் சேப்புக் கேயப்
பெற்றனன் மடந்தை துண்டத் தழகினிற் பெற்றி லேனென்
றுற்றுள மொடுங்கக் கூனி யந்தரத் துலவி நாணி
மற்றுள கலையுந் தேய்ந்து நாட்குநாண் மறுத்தந் திங்கள். (6)

எண்ணருந் தவமுங் கற்பும் புகழுமின் றிறைஞ்சி யேத்தும்
பண்ணரும் வேத வாய்மைப் படித்தவ றுதவாக்கு
நண்ணருந் தருமமியாவுஞ் சொற்படி நடக்கு நாளுங்
கண்ணகன் புவியிற் பாவைக் கற்பெனு மாசுக் கனமே. (7)

சேணுல கிமையா நாட்டத் தெரிவையர் தமக்கு மிம்பர்
பூண்முலை யவர்க்கு மேக நாயகி யென்னப் பூவிற்
காணுதற் கரியோன்செய்தா னென்னிலிக் கவின்கொண் டோங்கு
மாணிழை மடந்தைக் குற்ற பெற்றியார் வகுக்க வல்லார். (8)

எல்லையி லழகு வாய்ந்த வேந்திழை கதீஜாவீன்ற
நல்லியற் கனக நாட்டி ஞரியர் திலத மனையாக்
கல்லடா கரிய வாட்க ணகத்திடை வரிக ளோடிப்
பல்லவம் பசப்புற் றென்னப் பருவமவந் திறுத்த தன்றே. (9)

வடிவுறுஞ் செம்பொற் பூவில் வாசம்வந் துறைந்த போலுங்
கொடிமல ரதனிற் சேர்ந்த கொழுநறு நிறைந்தபோலுங்
கடிநெடுங் கழையிற் செவ்விக் கதிர்மணி தரித்தல் போலு
மடிகடல் புதல்விக் கின்பப் பருவம்வந் தடைந்த தன்றே. (10)

வரிசையும் பேறும் வேத வாய்மையு முளா தன்றி
யரசருக் கரசர் செல்வத் தரும்பொரு ளனைய செல்வி
பெரியவ னருளால் வந்த பெண்ணினை வரைத லியாவனென்
றுரைகொடுப் பவரியா ரென்ன வுள்ளநெக் குருகு வாரும். (11)

தரியலர்ச் செருக்குஞ் வெள்வேற் சதுமறைத் தலைவ ரீன்ற
வரிவிழிக் கரிய கூந்தன மங்கைதம் வதுவை வேட்டுப்
புரிமுறுக் கவிழுந் தொங்கற் புயவரை யரசர் கூடி
யொருவருக் கொருவ ருள்ளிட் டுரைவெளிப் படுத்து வாரும். (12)

வடிவமு மொழுங்கு நீதி வணக்கமு மறிவும் பூத்த
கொடிமட மயிலைச் சோதிக் குலக்கொழுந் தனைய கற்பைப்
பிடிபடு மணத்திற் சேர்ந்து பேருவ கைத்தும் வாழ்த்தப்
படுமவ ரெவரோ வென்னப பற்பலகாற் பகரு வாரும். (13)

பிறநக ரரசர் செவ்வி பெண்கனி வதுவை வேண்டி
யறைதிரைப் பரவை யாடை யமபுவி முழுதுங் காத்து
முறைசெயுங் கார ணீகர் திருமுனை மொழியி னென்றன்
றுறவின ரிடத்திற் றீட்டு மோலைக ளனுபபு வாரும். (14)

எரிமணிக் கனகப் பூணு மிளநிலா வொழுகு முத்தப்
பெருமணி வடமு மெண்ணில் வெறுக்கையும் பெரிது முன்னர்த்
தருகுவம் வதுவை யொபபலாலளித்திடு லென்னத் தாழ்ந்து
கருதல ரரியே றன்னார் காதினி லோது வாரும். (15)

உரைபல ரினைய வண்ண முலகவ ரியம்ப வானோர்
மரைமலர் வதன வள்ளன் மங்கைதம் வதுவை வல்லோன்
றிருவுளப் படிய தன்றிச் செய்வதின் றென்னச் செவ்வி
திருமனத் திருத்தி யாருஞ் சாற்றுதல பொருந்தி லாரால். (16)

இவ்வித நிகழா நிற்ப வியைதரு விதியின் பண்பான்
மவ்வலங் குழலார் வாழ்க்கைத் துணையரு நயத்தை நோக்கித்
தெவ்வடர்த் தெறியும் வெள்வேற் சிங்கவே றனைய காளைச்
செவ்விய லலியாா காதல் சிந்தையி னூறும் பூத்தார். (17)

நகரவ ருரையுஞ் சூழ்ந்த நாட்டவர் விடுக்குந் தூதர்
பகருநன் மொழியு மற்றோர் தீட்டுபா சுரத்தின் கூறும்
நிகராரும் வள்ள லுள்ளத் திருத்திய நினைவு மோராது
வகையுறு தீற்றி னெண்ணத் தாலுளம் வருந்தி னாரால். (18)

மின்னுருக் கொண்ட கன்னி விளங்கிழை நலத்தை நாடி
மன்னர்க * ளுளந்தே றாது வதுவையின் மயக்குற் றோற்
பன்னெடு நாளிற் காம பனத்தினுட் படுத்திப் பாவை
தன்னைவைத் திருக்கும் வேந்தர் கருத்தையார் சாற்ற வல்லார். (19)

குனிசிலைப் புருவ வாட்கட் கொடியிடை கரிய கூந்தற்
கனியிதழ்ச சிறுவெண முரற் காரிகை நலத்தை நாடி
நினைவுநித் திரையும் போக்கி நீடொடு குழியி னாநத
நணிமதக் களிறு போன்று வேட்கையி னடுங்கி னாரால். (20)

குயினுறை சிகர மேருக் குலவரை யனைத்தும் வென்று
வயிரவொண் வரையின மீறு மாணெழிற் புயங்கள் சேநத
கயிரவ மனைய செவ்வாய்க் காரிகை மம்மா நோயால்
வெயில்படு மலரின் வாடி மெனமையின் மெலிந்த வன்றே. (21)

விண்மணி னமரா கோமான் மேதினிக் குரைத்த வேதப்
பண்கனிந தொழுகுஞ் செவ்வாய்ப பாத்திமா வென்னு மந்தப்
பெணகனி யுருவத் தாரந்த பேரெழிற கடலி லாழ்ந்து
கண்களின் மறுத்துத் தோன்று முருவனறிக் காணகி லாரே. (22)

கலிதடுத் துலகங் காக்குங் காவல ரினிதி னீனற
வொலிகட லமிர்த மொவ்வா வொணமொடி முகத்தின வாய்நது
மலிதருங் கருமை யுண்ட † வரிவிழிக கயல்கள பாய
வலியெனும் வலிய வீர ரகக்கடல் கலங்கிற் றன்றே (23)

---

* ஊழ்விதியுங் கண்காட்சியு மில்லாத புறமன்னருள்ளந் தேறாது மயங்குமானால், அப்பாவை தம்மையே, விதியுங், காட்சியுங்கொண்டு றுமன் புடைய மனத்திடத்தி, னெடுநாளாக வமைத்திருக்கு மலியாருள்ளப் பெருக்கத்தைச்சாற்ற வல்லாருண்டோ வில்லையென்க, இவ் விதமென்னுங் கவியானு, மிக்கவியின் மூன்றும் வேற்றுமைப் பொருளானு, மேது வலங்காரமும், இயாரென்னுமவி னாவி னெதிமறுத்த விடையால், என்று மினமைய தபாவ அலங்காரமும், அன்றியிரண்டுங் கலந்தமையாற் சங்கீரண அலங்காரமு மமையுமென்றறிக

† உருவெளித் தோற்றத்திற் சிறந்த வுறுப்பாகிய கண்களே யன்றி நாயகி நோக்கிய கணகளன் றென்றுகொள்க.

பற்றல ருடலந் தேய்த்துப் பஃறலைக் குருதி யூற்றும்
வெற்றிவா ளலியென் றோதும் வீரவெண் மடங்க லொரு
மிற்றசின் மருங்குல் பாத்தி மாவெனு மிளமான் றன்னால்
வற்றுறு வலியும் போக்கி மயக்குண்டு கிடந்த தன்றே. (24)

செறிகடற் பாரிற் றாண்டா மணியினுஞ் செவ்வி வாய்ந்து
நிறைதருங் கற்பி னல்லா ரிடத்தினி னிதமு மாறு
வறிவெனு நாது தனையோ டகமெனுந் துணையும் போக்கி
வறியரிற் றமிய ராகி வாளலி மவுல லுற்றார். (25)

கனிந்தினி தொழுகும் பெண்மைக் கரும்பைத்தேன் கனியைவாசம்
புனைந்தபூங் கதுப்பிற் றுஞ்சும் வண்டெனப் பொருகண் ணாளை
மனந்தனிற் குடிகொண் டுற்ற வாழ்வையென் னிருக ணீங்கா
வனந்தனை யிறைவா வென்பா லளித்தியென் றுரைத்து நின்றார். (26)

வனைகழற் செருவாள் வள்ளன் மனத்துறுங் காமத்தன்பும்
பனிமலர்ச் செருகுங் கூந்தற் பாவைதம் மெழிலுஞ் சூட்ட
நனைதரும் வதுவை வேண்டி நாடொறுங் கெஞ்சிக் கெஞ்சித்
தனியனுக் குரைத்தா ரல்லாற் பிறர்க்குரை சாற்றி லாரே. (27)

அரிந்துவெங் குபிரை யோது மாதிநூற் கலிமா வித்தி
விரிந்ததீண் பயிரை யேற்றும் விறற்படை யலியாம் வேங்கை
பரிந்திரு கரங்க ளேந்திப் பற்பல்கா லிறையோன் றன்பாற்
கரைந்துநின் றிரந்த வெல்லா முறக்கபூ லாய தன்றே. (28)

மூதிருட் படலஞ் சீக்கு முச்சுடர்க் கதிரு மொவ்வா
பாதலம் விசும்பு தூர்க்கும் படர்சிறைக் கருணைச் செங்க
ணாதரம் பெருக வாதி யருளின்வா னிழிந்து மெய்ம்மைத்
தூதரி னிடத்தில் வந்தார் துணையெனுஞ் ஜபுற யீலே. (29)

வந்தடுத் துறைந்து வண்மை முகம்மதே சலாமென் றோதிப்
பைந்தொடி கரிய கூந்தற் பாத்திமா பொருட்டால் வானி
லந்தமி லவன்றன் பாலி னிகழ்ந்தவை யனைத்துந் தேறும்
புந்தியின் மகிழ்வு பூப்பப் படிப்படி புகல லுற்றார். (30)

அரியவன் றிருமெய்த் தூதே யண்ணலே யிறையோன் சோதிக்
குருமணி யினத்தாற் போதாற் கொழுந்துகி லதனாற் செம்பொற்
றிருநகர் மனைக டோறுஞ் சிறப்பிக்க வருளிச் செய்தா
னுரையருட் படியே வானோ ரும்பரின் விளக்கஞ் செய்தார். (31)

பொன்னகர் விளக்கிப் பின்னர் புகழ்தா மகரு நாட்டி
* யென்னுட னிகரு பீல்மீக் காயிலுஞ் சாட்சி யேயப்
பன்னரு மலியார்க் கின்பப் பாத்திமா தமைநிக் காகு
முன்னிய தருத்து பாவின் முடித்தன னிறைவ னன்றே. (32)

இந்தநன் மொழியைம் நும்பா லியம்பென விறைவ னேவ
வந்தன னென்னப் போற்றி வானவர்க் கரசா கூறச்
சந்தன கதம்ப மாறாத் தடவரைப் புயங்கள் விம்மக்
கந்தடு களிற்றின் மீறி முகம்மது களிப்புற் றாரால். (33)

அடலபூ பக்கர் வெற்றி யரியும றுதுமா னொடு
ரிடாற வருமு ஹாஜி ரீன்களன் சாரி மார்க
ளுடனுறை மூதியோர்க் கும்ப ருற்றசோ பனத்தைச் செந்தேன்
வடிமலர்த் தொங்க றிண்டோண் முகம்மது வழங்கி னாரால். (34)

கனகநா டதனி லுற்ற காரண வமுதந் தேக்கி
யனைவருங் களிப்பு வெள்ளத் தாநந்தக் கடலின் மூழ்கி
யினையன நினைத்தோ மியாங்க ணினைத்தவை யிறையோன் செய்தான்
வனைகழ லலிதம் பேறின் மகிமையார் வகுக்க வல்லார். (35)

என்னுநன் மொழிகண் மிக்கோ ரினியன மகிழ்விற் கூறப்
பன்னகம் பேசப் பேசும் பார்த்திவ ரிறசூ லல்லா
தந்நகத் திருந்த வண்ண முடித்தனன் றனியோ னென்ன
மன்னபித் தாலி பீன்ற மணியினைக் கொணர்மி னென்றார். (36)

மருவலர் மதங்க டேய்க்கு மன்னவ ருரைத்த மாற்ற
மிருவர்கள் சென்னி மேற்கொண் டெழுந்தலி தம்மை முன்னிப்
பரிவினின் சலாமுங் கூறிப் பாவலர் வறியோர் வாழச்
சொரிதருஞ் செங்கை வேந்தே சோபனம் வருக வென்றார். (37)

மதுகைமன் னவர்கள் கூறுஞ் சோபன வசனந் தன்னை
யிதயத்தி னிருந்த வண்ண முடிந்ததோ வென்ன வெண்ணிக்
கொதிநுனைப் பகுவாள் வள்ள லெழுந்திரு குவவுத் திண்டோட்
புதுநறுத் துளிக்குந் தொங்கல் புயடர விரைவின் வந்தார். (38)

---

* என்னுடனென்னும், மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு, முடித்தன னென்பதை ஒன்றனோடியைந் தொருவினை யாதலென்னும் பொருண்மையாகக் கொண்டது, ஆகையால், அவர் மணமகன் புறத்தானும் இறைவன் மணமகள் புறத்தானு மற்றிருவருஞ் சாட்சியுமாகக் கொள்க.

ஆரண முழங்கும் பள்ளி வாயிற னவையி னண்ணிக்
காரணக் குரிசிற் கின்பக் கட்டுரைச் சலாமுங் கூறி
யூரவ ருடனு மோர்பா லுறைந்தன ருயர்ந்த வெற்றி
யோணிந் திலங்கும் பைம்பூ ணிளஞ்சிங்க மிருந்த தொத்தே. (39)

தமனியப் பதியிற் றாபாத் தருவயி னடந்த பேறு
மமரருக் கரசர் கூற நபியக மகிழ்ந்த வாறுந்
திமிரவெங் குபிரை யோட்டுந் தினகர னென்னுந் தூயோர்.
கமைதரு சீற்ற வேங்கை யலியகங் களிப்பச் சொன்னார் (40)

வானவர்க் கரசர் சொன்ன வாய்மையின் முதியோர் கூறுந்
தேனென மணத்தின் றீஞ்சொற் செவிவழி புகுத லோடுங்
கானமர் வேங்கை வள்ளல் கதிமணிப் புயமு நெஞ்சுந்
தானவ னருளீ தென்னத் தடப்பெரும் புளகம் பூத்த. (41)

திருத்திய கனகப் பைம்பூண் சேயிழை வதுவை வேட்டு
வருத்தமுற் றுணர்வு போக்கி நாடொறும் வருந்து நெஞ்சிற்
பொருத்துற நினைத்த வண்ணம் முடிந்ததென் றுரைப்பக் காலக்
கருத்தினிற் பெருகா நந்தக் களிப்பையார் கணிக்க வல்லார். (42)

அகலிடம் விளங்கு மைந்நா ளிரசிதத் தரிய காசு
மகமென வலிக்க ளுதி வதுவையை முடித்தா னென்னப்
பகருங் கற்பின மிக்க பாத்திமா செவியிற் சாற்ற
விகலறும் வேத வாய்மை முகம்மதங் கிசைந்தா ரன்றே. (43)

அருமறை முதியோ ரேகி யிறையவ னலியார்க் கின்பத்
திருமண முடித்தா னென்னச் செபுறயீ லுரைத்த வாறு
மருமலர் வாகைத் திண்டோண் முகம்மது மகிழ்ந்த வாறும்
புரிகுழ னவ்வி பாத்தி மாமுனம் புகன்றிட் டாரால். (44)

மறையவ ருரைத்த மாற்ற மதிநுதன் மடந்தை கேட்டின்
றிறையவன் முடிக்க வாறு மியனபி மகிழ்ந்த வாறு
முறையெனத் தலைமேற் கொண்டேன் முன்னர் நான்முழுதும் வல்லி
றறைவதொன் றுளது கேண்மி னெனுமுரை யருளிச் சொல்வார். (45)

சினவுவே லபித்தா லீபு சேயெனும் புலிக்கி யானே
மனையினிற் குரிய ளானேன் மகரிர சிதமைந் நூறென்
றுனுமொழி பொருத்த மில்லை யென்னுளத் துறைந்த வண்ண
மினிதுற வருள வேண்டு மெனுமுரை விளங்கச் சொன்னார். (46)

மடக்கையர் திலகம் போன்ற பாத்திமா வகுத்த மாற்றம்
படர்ந்த கேள் வியர்கள் வந்து நபிமுனம் பகரக் கேட்டுக்
கடந்தசெங் கதிர்வே லேந்துங் காவல ரெவரு முள்ளத்
திடந்தனி மகிழ்வு தோன்றி யிருந்தனர் பெரிதின் மன்னே. (47)

அவ்வயி னிமையா நாட்டத் தமரருக் கரச ராதி
செவ்விய மொழியி னோடுஞ் செகதலத் திருந்து கூற
நவ்விமுன் னெதிர்ந்து பேசு நாயக சலாமென் றோதிக்
கவ்வையங் கடலின் மிக்காங் களிப்புறக் கருதிச் சொல்வார். (48)

பொறைவளை கடற்பா ரெங்கும் போற்றிடும் புதல்வி யுள்ளத்
துறைநின்ற மகளைக் கேட்டு வருகவென் றும்பர் போற்று
மிறையவ னருளிச் செய்தா னென்றுரைத் தனரம் மாற்ற
முறைவழி விளக்கத் தூதர் மொழிந்தனர் பாவைக் கன்றே. (49)

மேலவன் வரிசைப் பேறாய் விளம்பிய மாற்றங் கேட்டு
நூலெனு மருங்குற் பேதை நூவலரு முவகை யெய்தி
ஞாலமும் விண்ணு நிற்க நாட்டிய தம்ப மென்னச்
சீலமுற் றறிவி னோடு மொருமொழி செப்பலுற்றாள். (50)

இறுதியிற் பவத்தின் மாத * வென்ஷபா அத்தினீ டேற்றம்
பெறமன்றுட் டருள வேண்டிப் பேரருட் கபூல்செய் தாமேல்
உறுதிநன் மகர்பெற் றேனென் றுரைத்தன ளுரைத்த மாற்றஞ்
சிறைகுலாம் வள்ளலாம் திருமுன் விண்ணப்பஞ் செய்தார். (52)

நபியைமாக் பாத்தி மாவை நார்புவி யவியை யெந்தப்
புவியினு முவந்தோர் செய்யும் பிழைபொறுத் திடுவ தாக
வவியும்பிற் கால மன்றுட் டருளுவ னென்ன வாதி
கவினுறச் சொன்னான் கேட்டுச் சபுறயீல் கடிதின் வந்தார். (52)

வானிழுந் தரிய வேத முகம்மதுக் குரைப்ப வன்னோர்
தேனிமி ரலங்கற் கூந்தற் சேயிழைக் குரைப்பச் செய்தார்
பானலங் கண்ணார் கேட்டு மகிழ்வொடும் பரிந்திவ் வண்ணந்
தான்வரைந் தளித்தல் வேண்டு மெற்கெனச் சாற்றி னால். (53)

கோதைய ருரைத்த மாற்ற மிஃதெனக் கொண்டல் கூற
மாதவர்க் குதவி கூறுஞ் ஜபுறயீன் மகிழ்வி னோடிப்
பூதலத் துறைந்த யாக்கை யுயிர்தொறும் பொருந்தி வாழு
மாதிமுன் னுரைத்து நின்று ரருட்கடை நோக்கி யன்றே. (54)

---

* என்மன் றுட்டத்தின்படி நிறைவேற்றுதற் காகவேண்டிப் பெரியகிருபை பொருந்திக் கொள்வாளுகி லென்று கொள்க.

பாவைய ருரைத்த வண்ணம் பச்சையங் கடுதா சின்கண்
மேவரக் கனக மையால் வரிபட விளங்கத் தீட்டிச்
சேவையி னினைவு மாறுச் செவ்விய ஜபுற யீல்பா
லீவதி தென்ன வோதி யிறையவ னளித்திட் டானால். (55)

வரைந்தபா சுரத்தை யேந்தி வாணிமுந் தமரர் கோமான்
கருந்தடங் கண்ணாக் கென்ன நபிதிருக் கரத்தில் வைத்தார்
விரிந்தபூங் கமல மன்ன மென்முகஞ் சேர்த்தி முத்திப்
பரிந்தொரு துணைவர்க் கீந்து பாசுரம் விளக்கென் றூரால். (56)

கொடுத்தபத் திரத்தை வாங்கிக் கொழுமலர்க் கணணி லொத்தி
விடுத்ததை விரித்துப் பைம்பொன் வரிமுறை விளங்க நோக்கி
யடுத்தவர் பிறர்மற் றுள்ளோ ரியாவரு மறிய வல்லே
தொடுத்தொரு மொழிவ ழாது வாசகஞ் சொல்ல லுற்றார். (57)

என்னடி யவரின் மிக்கா முகம்மதி னினிதி னீன்ற
பொன்னிழை தனக்கு மென்ற னலியெனும் புலிக்கு மின்ப
மன்னிய வதுவைக் கான மகரென இசுலாத் துற்ற
பன்னிகள் பவத்தி னுற்றோர் பல்லர்க்குங் குறைக ளற. (58)

இறுதிநா ளினின்மன் றுடித் தன்ஷபா அத்திலீ டேற்ற
மறைதொறும் விளங்கச் சொல்லு முகம்மதுஞ் ஜபுறயீலு
மறைநெறி மீக்கா யீலுஞ் சாட்சிய தாக நானே
மறுவறக் கபூல்செய் தேனென் றிருந்ததை வாசித் தாரால். (59)

பாரினின் முதலோன் வாய்மைப் பத்திரம் வரவ ளாகப்
பேருல கினிலிப் பேறு பெற்றவ ருளரோ வென்ன
வீரவேன் மடங்க லன்ன விறலுடை வள்ள லோடுஞ்
சீர்பெறு முதியோ ரியாருஞ் சிலிர்த்தன ருடல மன்றே. (60)

செவியகங் குளிரப் பொன்றும் றீட்டுபத் திரத்தை யேந்தி
யவையகம் விடுத்து பாத்தி மாவணி மனையை நண்ணிக்
கவினுறு மயிலே யென்ன வாசித்துக் காண்பித் தன்பி
னவமிவை யென்னப் போற்றுச் சிலமொழி நவில லுற்றார். (61)

வரத்தினி லுயர்ந்த பெற்ற மகுஷரு வெளியி லென்றன்
சரத்தினி லளிக்க வேண்டுங் காரண மதனு லீதை
யொருத்தருந் தீண்டா வண்ண முயிரென வோம்பி யோர்பா
லிருத்துமென் றிறகு லில்லா விளந்தளிர்க் கையி லீந்தார். (62)

அந்தநன் மாற்றங் கேட்ட வரிவையர்க் கமுத மன்னார்
செந்தளிர்க் கரத்தி னேந்திச் சென்னிமேல் விழிமேற் கொண்டு
மந்திரப்பொருளைச் செம்பொன்மணிச் செப்பினடைத்துக் கிட்டாப்
புந்தியு முயிரு மென்னப் போற்றுதல் பொருந்தி னாரால். (63)

பரம்பொருள் விருப்பி னீந்த பத்திர மகள்கைக் கீந்து
வரம்பெறும் வள்ளல் பள்ளி வாயிலி னவையி னண்ணி
யரம்பொருந் திலங்கும் வெள்வே லபூபக்கர் முதலா யுள்ள
தரம்பெறுந் தோழர்க ளெல்லா மினியவை சாற்று வாரால். (64)

மதுரமென் கனிக்குஞ் சீர்த்தி வாளலி தமக்கு மென்மை
முதலவன் மணநிக காகு முடித்தன னதனை பெந்தப்
பதியினுஞ் சிறப்பு வாய்ப்பப் பற்றல ரொடுங்க மேலு
மிதமுற வியற்றற் கேற்ற யாவையு மியற்று மென்றார். (65)

பேறுய ராதியாலி லாஞ்சனை பெற்ற சிங்கங்
கூறிய வசனங் கேட்டுக் கொற்றவ ருவகை யெய்தி
மாறிலா வளமை யோங்கு மதீனமா நகரை யினனே
வீறுயா சிறப்புச் செய்ய முறைபனை விளியி னென்றார். (66)

வேறு.

குழுவின மனனவர் விளித்தன ரெனக்குறித் தெழுந்து
தொழுது நின்றவை பணியென வலிமணந் துலங்க
முழுது மிந்நக ரறிந்திட மணமுர சறைக
வெழுக வென்றலு மெழுந்தனர் கடிமுர சினரே. (67)

கடிகொள வெண்சுதை சோகங்கள் கவினுறத் தடவி
நெடிய கந்தரத் தினிமலர் மாலைக ணிரப்பி
யிடியினின மிக்கதிர் முரசுக ளெடுத்தெடுத் தேற்றிப்
படிய ளந்திடுந் தெருத்தலை தொறுந் தொறும் படர்ந்தார். (68)

எடுத்த பேரொலி முரசொடு மொட்டகத் திருந்து
பிடித்த நன்மறைத் தீனொடு பெருந்துணி யாவு
முடித்த நலவழித் தொழுகையின விதிவழி முயன்று
தொடுத்து நாடொறும வாழ்கவென் றினையன துதித்தே. (69)

இறைய வன்றிருப் புலிக்குநந் நபியிளங் கொடிக்கு
மறுவி லாததிரு மங்கல சோபன வசனஞ்
செறியும் பேரொழி றதும்பிய திருநகர் மதீனத்
தறிவ ராடவ ரியாவரு மறிகவென றறைவார். (70)

கனந்த ருங்கொடை முகம்மதைக் கவினலிப் புலியைச்
சினந்த வேல்விழி பாத்திமா வெனுஞ் செழுங் குயிலை
நினைந்த கவ்வைக ளெவ்வையுந் தனிநிறை வேற
மனந்த னிற்றினம் புகழொடு முவப்புவைத் திடுமின். (71)

சுருதி நேர்தவ றின்றியைந் தொகுத்தினுந் தொழுயின்
வரிசை நன்னினை வொடும்ஸதக் காவழங் கிடுமின
பெருகு நல்லறி வினர்துஆம் பேறுகள பெறுமின்
றரையின மீறுற வாழ்ந்துச லாமத்துப் பெறுமின். (72)

அருவி நன்னதி யாடிநல் லாடைக ளுடுமின்
புரிகு ழற்கதில் புகைத்துவெள் புதுமலர் புனைமுன்
சொரிக திரப்பணி பலகளத் திடைசுமத் திடுமின்
விரைசெய் சந்தனங் குங்குமக் கலவைமெய்க் கிடுமின். (73)

இலங்க முன்றில்க டொறுஞ்செழும் பூமபந்த ரிடுமி
னலங்கொ ளாடைவி மானங்க டோரண நடுமின்
விலங்கன மாடங்கள் வயினவயின கொடிவிசித் திடுமின்
பொலன்கொ ணன்னகர்ச் சுவர்தொறுங் கோலங்கள் புனைமின்.()

மதுர முக்கனி தேனெய்பா றயிரொடும் வழங்கிப்
புதுவி ருந்தினாக் கிடுமின்க ளெனப்பல போற்றி
முதிரு நன்னகர்த் தெருத்தொறு முகிலிடை முழங்கி
யதிரும் பேரொலி யிடியெனக் கடிமுர சறைந்தார். (75)

முரச றைந்தவள ளுவர்தெருத் தலைதொறு மொழிந்த
வுரைசெ விப்புக நகரவர் பலருமுள் ளுவந்து
வரைசெய் மாடமுங் கூடமு மனைகளு மறுகும்
விரைசெ யும்படி புதுக்கிடத் துணிந்தனர் விரைவின். (76)

பொழிந்த பொற்பொறிச் சுணங்கலர் பூண்முலைக் கணிந்து
வழிந்த சந்தமுங் கூந்தலிற் கழிந்தெறி மலரு
மழுந்து கூடலி லூடலிற களைந்தபொன னணியு
மெழுந்து கட்படலந்தர வாரிநின றெரிவார். (77)

சிறுது ளைக்கதிர்ப் பொற்பல வணிநிரை செறிந்து
பிறையு மங்குலு முடுக்களுஞ் செருக்கிடப் பிணங்கி
நிறையு நெறிய மாடமு நிவந்தமே னிலையுந்
துறும ஆட்டகிற் பழம்புகைக் களங்கறத் துடைப்பார். (78)

தெரிந்த வெண்மணி நீற்றினைக் களைத்தறத் தெளித்துப்
பரிந்து நோக்குநர் கண்களும் வழுக்குற்றுப் பதைப்ப
விரிந்த பூங்குழ லார்கள்கண் ணடியின் விளங்க
விருந்த வாய்தொறு முருத்தெரி தரமெழுக் கிடுவார். (79)

மறங்கி டந்தசெங் கதிரவன் கதிர்களு மதியின்
பிறங்கி நீடுறு கலைகளு மோரிடம் பிரியா
தறங்கி டந்தநன் னகர்மதி டொறுமணி யணியா
யிறங்கி யெங்கணும் வழிநனெனக் கோலங்க ளிடுவார். (80)

நெருங்கிச சேந்தமென் விரலெனத் தளிர்களு நீண்ட
கருங்கண் போற்செழுங் குவளையு முககம லமும்பொன்
னுருங்கு பூத்தசெவ் வாயென வாம்பலு மொசியு
மருங்குல் போற்சிறு கொடிகளு மெழுதுவர் மடவார். (81)

சந்த னத்திர டருக்கனை கவைபுறத் தறித்துப்
பந்தி பகதியி னிறுவியொள் ளகில்வளை பரப்பிச்
சிந்து வெண்கதி ரிரசிதக் கிடுகுகள் செறித்து
மந்த மாருத மூலவிடக் காவணம் வகுப்பார். (82)

கழிக ளிற்பொதிந் தருமது நபிதிருக் கலிமா
வெழுது சித்திரப் பொற்கொடி யணிநிரைத் திடுவார்
வழுவி லாதபொன் மலையின்வி மானங்கள் வகுப்பார்
பொழுது போம்வழி யில்லெனத் தோரணம் புனைவார். (83)

கதிர்ம ணிக்கரும் பிளகமு கருங்கனி கதலி
பதிக மாதுளை தாழைமுட் புறக்கனி பனசம்
விதிரு வென்றளிர் மாச்செழும் பழங்கொழு விஞ்சி
மதுர மூறிய கனியொடுந் தூண்டொறும் வனைவார். (84)

பிரச மூறிய பன்மலகத் தொகுதியின் பிறங்கி
விரிக திர்ப்பல திரண்மணி வடத்தினும் விலையி
னரிய பொன்னிழைத் துகிலினும் பல்பல வணியாய்த்
திருந கர்ப்புற மெங்கணு மியற்றினர் சிறப்ப. (85)

பூந்து ணர்ப்பசுங் காயொடும் பழத்தினைப் பூகஞ்
சேர்ந்து பந்தரிற் றென்றலி னுதிர்ப்பன திரட்டி
வாய்ந்த பொன்னையு மாகத மணியையும் வாரி
யீந்த மேலவர்ப் போன்றன வீதிக ளெங்கும். (86)

அரத்த வாடையின் பசியமென் றுகிலுடுத் தணியாய்
நிரைத்தி ருப்பது மாமணித் தூண்டொறு நெடுவான்
றரித்த கொண்டலி னிடம்விடுத் திந்திர சாபம்
விரித்த பந்தரிற் புகுந்திருந் தெனப்பல விளங்கும். (87)

வெடித்த தாமரை மலரொடும் விரிந்தவெண் டாழை
தொடுத்துப் பந்தரிற் றுயல்வரத் தூக்கிய தோற்றம்
வடித்த நன்னறை யல்லியை யிதழொடும் வாயி
னெடுத்து மென்சிறை யெகினங்கள் படர்ந்தென விருந்த. (88)

வேரி யஞ்செழு மலர்களுந் தளிர்களும் விளங்கச்
சாரு நன்கதிர்ப் பன்மணிக் குலங்களுந் தயங்கக்
கூரு மாந்தர்தம் மனத்தினி னினைத்தவை கொடுப்பப்
பாரிற் கற்பக வனத்தையொத் திருந்தன பந்தர். * (89)

தாள மாமணி யரும்பின மீன்றுதா ரணியின்
பரிவு பெற்றிடும் பொன்னிதழ்ப் பன்மலர் பூத்து
மாக தச்செழு மணித்திரட் காய்க்குலை வளர்த்துப்
புருட ராகங்கள் பழுத்தன போன்றன பந்தர். (90)

வேறு.

காத்திர முசல நீள்கைக் கடகரிக் குலமு மாவும்
பூத்துணர் பொதுளு மாந்தர்த் தொகுதியு மெதிரிற் போதல்
வாய்த்தமெல் லிழையார் தீற்று மணியொளி மறுகு தோறுஞ்
சூத்திரப் பாவை போன்றும் வயின்வயின் றுலங்கு மன்றே. (91)

புதுமலர்த் தார்க ளூற்றிப் பூந்துகிற் கொடிகள் சேர்த்திக்
கதிர்மணி குயிற்றிக் கும்பக் கனகமா மகுடஞ் சூட்டி
விதிரிள நிலவு கான்ற மேணிலை மாட மியாவும்
வதுவையின் புதுமை நோக்க மலைகள்வந் திருந்த தொத்த. (92)

சீதசந் திரந்து காந்த நீரினிற் றேய்வை பன்னீ
ராதிமான் மதங்கற் பூர மளறெழக் கலக்கி வாரி
வீதியு மதிளு மாட வாயிலுந் தெளித்து வீசக்
கோதறுங் குளிர்ச்சி யெய்தி நடுங்கின கொடிக ளெல்லாம். (93)

---

* விளங்க-தயங்க-கொடுப்ப விருந்தன பந்தரென்று கூட்டுக.

வேறு.

சொரிந்த பூங்குழன் மதிநுதற் கயல்விழித் துவர்வாய்
முரிந்த தோளெனு மருங்கினர் முருகுகொப் பளிப்ப
விரிந்த சந்தகில் வயின்வயின் புகைத்திடல் விளங்கிப்
பரந்து போர்வையின் மூடின நீள்பெரும் பதியை. (94)

அங்க ராகமும் வரியளி மலரிடை யறாநாற்
றங்கி வீழ்தரு துகளுங்குங் குமச்செழுந் தாது
மெங்க ணும்பரந் திருநிலந் தெரிகிலா திருத்தல்
பொங்கு பொன்னிலம் வதுவையிற் சமைத்தன போலும். (95)

குதித்த தேன்குழன் மடந்தைய ராடவர் குழுமிப்
பதித்தெ ருத்தொறுங் கலவையுற் சேறுகள் படுத்தி
விதித்த காரண வதுவையின் மணவிதை விதைத்து
மதித்தி டும்பெருஞ் சிறப்பெனும் பயிரினை வளர்த்தார். (96)

சிந்து செங்கதிர் மணிதெளித் தெழுதுசித் திரத்தின்
கந்த மான்மதங் கமழ்தலின் கதலிகை வனத்தின்
விந்தை விந்தைசெய் தோரணத் தொகுதியின் வியப்பி
னந்த மானக ரல்லன போன்றிருந் ததுவே. (97)

மின்னி னங்கிரு வில்லொடு முகிலொடும் விரைவிற்
பொன்னந் தாமரை வாவியிற் புகுந்தெனப் புகுந்து
மன்னு விற்புரு வக்கருங் குழற்கொடி மருங்கா
ரின்ன லந்தர மூழ்குவ ராடுவ ரெங்கும். (98)

இலகு பொன்னொடு வெள்ளிவெண் பானைக ளேற்றி
நிலவு காண்றெனும் பாலினில் வாலரி நிறைத்தில்
வுலகி னூன்முறை யடுதொழிற் புதுமனை மூட்டி
யலகி லாப்பெரு நகர்தொறு மமலைக ளடுவார். (99)

கனியி னுஞ்செழுங் காயினும் பூவினுங் கலவாப்
புனித நெய்யினில் வெண்மலர்க் கரியபூங் குழலார்
சுனித மாகினற் பாகொடு மறுசுவை தூங்க
வினிமை கூடதர மணத்தொடுங் கறிசமைத் திடுவார். (100)

தேன வாந்தொடை மடந்தையர் குழலினுஞ் செருகி
நான மார்புய மாந்தர்க ளைசியு மமட்டித்
தான மானகர் மேனிலை யானையுங் கடவி
வான மீதினுங் கமழ்த்தின பொறிக்கறி வாசம். (101)

நனி விருந்தினர்க் கன்புட னெதிர்நடந் தழைத்துப்
பனிம லர்ச்செழும் பாயலி னிருத்திமெய் பணிந்து
மினுமி னென்றமுப் பழத்தினைத் தேனொடும் விரவி
யினிதி னூட்டுவர் வலிதினி லடிக்கடி யெவரும். (102)

உலவு பூம்புகை பொற்குடங் கமழ்கா லூட்டிச்
சொலவ ருந்தடத் தெளிதரு புதுப்புனல் சொரிந்து
பொலனி றத்தகுங் குமமுதன் முடிந்ததிற் புகட்டி
யிலகு வீதியின் முன்றில்க டொறுநிரைத் திடுவார். (103)

மருங்குன் மின்னுக்கு மின்னுபொன் னிழைத்துகில் வனைவார்
நெருங்கு பூண்முலை மலையினின் மலைவுற நிரைப்பார்
கருங்கு ழற்கருங் குங்குமக் கண்ணிகள் புனைவா
ரருங்க ரங்களி லாங்கொளுங் குருகெடுத் தணிவார். (104)

மாவ ருக்கையிக் கரம்பைபூங் கமுகுடன் வனைந்த
காவ கத்திடை மயிலெனக் குயின்மொழிக் கனிவாய்ப்
பூவை யன்னவர் கலவையும் பரிமளப் பொடியுந்
தாவ வெற்றுவ ரொருவருக் கொருவரைச் சருவி (105)

விரிசி கைக்கதிர் மணிவெயி லெறித்திட விடுபூச்
சொருகு கூந்தலின் மாலைக டுயல்வரத் துடிபோ
லருகு நுண்ணிடை யொடிந்திடு மெனும்படிக் கசையத்
திருகு ரும்பைக ளாடுவர் வயின்வயின் சிறப்ப. (106)

பாடு வார்சிலர் குயிலெனப் பாடலுக் கெதிரி
றாடு வார்சிலர் மயிலென வாடலுக் கழகாய்க்
கூடு வார்சிலர் கிளியெனக் கூடலின் குறிகண்
மூடு வார்சிலர் விரிதருங் கமலமென முகத்தார். (107)

பூசு வார்சிலர் கலவையிற் புதுவிரை கலக்கி
வீசு வார்சிலர் வீசலின் மெய்வழி வழியக்
கூசு வார்சிலர் கூசுவ தென்னெனக் குழைந்து
பேசு வார்சிலர் சிறுநுதற் பெரியகண் மடவார். (108)

பொருவி லாநக ராடவ ரரிவையர் போற்ற
மருமலர்ப்புய முகம்மதை யலிதமை வாழ்த்திக்
கருத லர்க்கரி யேறெனுங் காளையா கூடித்
தெருவெ லாமணப் பைத்துகள் சொலிச்சொலித் திரிவார். (109)

புகரி னன்னிரி யாசங்கண் முதலிய புகைத்துப்
பகரு நன்மறை முதியவர் பலபல திரளாய்
நகர மெங்கனும் வேதங்க ளோதிய நாத
மகர வாருதி திரையொலிக் கலிப்பினை மலைக்கும். (110)

கலிக்கு மாமறை முதல்வனிக் காகினைக் கருதி
யலிக்கும் பாவைக்கு முடித்திட வருமது மகிழச்
சிலைக்கை வீரர்க ணகரத்தி னியற்றிய சிறப்பை
யொலிக்கு மாகடற் புவியினி லெவரெடுத்துரைப்பார். (111)

மரைமல ரெகின துரவியின் சிரசின் மதிவதிந் தெனத்தனி வயங்கத், திரைமணி கொழிக்கும் வாவிசூழ் மதீனத் திருநகர் சிறப்பியற்றியபின், றருதெனு நபியு மூவரும் பெருகு சதுமறைத் தலைவருந் திரண்டு, வரியளி முரலுஞ் செழுந்தொடைத் திரடோண் மன்னவ ரலீமனை புகுந்தார். (112)

எரிகதிர் மனச மணிபதித் திழைத்த விரணியக் கடத்தினி லெடுத்து, முருகலர் நறையூற் றிருந்ததெண் ணீரை மறையிய முழக்கொடு முதியோர், மரகதப் பலகை நடுவுறை வயிர மடங்கலே றலிதமை வாழ்த்திச், செருகிய நீலக் கதிர்குடி யிருந்த சென்னியிற் சொரிந்தன ரன்றே. (113)

வெள்ளைமென் றுகிலாற் சிரசிடம் புலர்த்தி வில்லுமிழ் மெய்யினும் விளக்கித், தெள்ளிய மதியின் கதிரினை நூற்றுச் செய்தெனுந் துகிலிடை சேர்த்திக், கொள்ளைவெண் டாளங் குவித்தென வீரம் புகழொடுங் கூடியிருந் தென்ன, வொள்ளிய சவிக டிரண்டெனச் சருவந் தொளிதரச் சென்னியிற் றரித்தார். (114)

பேரெழிற் பயிரில்வனமுலை மடவார் கண்ணெனு மானினப் பெருக்கம், பாரினிற் புகுதா வேலியி னமைத்த படிகொலோ மரைமலர்ச் செழுங்கண், வீரவெண் மடங்கன் மரகத வளையுட் புகுந்ததோ வெனத்திறல் வியப்ப, வோணிந் திலங்கும் பசிய குப்பாய மெடுத்தினி தணிந்திடுஞ் சிறப்பே. (114)

மண்ணினிற் குபிரர் குலங்கரு வறுத்து வருமுயிர்ச் சுவையினை யறிய, வெண்ணிலா விடப்பன் னைகத்தி னுப்போ லியற்றிய விருபகுப் புடைவா, ளண்ணலார் மருங்கி லெழிற விருத்தி யணி

மணி யுதாரபந் தனமும், விண்ணிலாக் கதிரின் கச்சின்மேற் படுத்தி விசித்தனர் திறல்வய வீரர். (116)

மாகத வரையிற் சங்தொடு மருவி வந்ததோ வளைந்தபைங் கடலிற், றிரைகொலோ வணிந்த சருவந்து கான்ற செவ்விகள் வழிந்தொழு கியதோ, பொருவிலா வரிசைப் புலியவி மணத்திற் போர்த்திடும் பசியகஞ் சுகியிற், றாளவெண் மணியி னிரைநிரை வடங்க டயங்கொளி தரவணிந் ததுவே. (117)

வண்ணவொண் புயப்பைங் கஞ்சுகி யிடத்தின் வான்மணித் தாளமா விகையின், வெண்ணறை மலர்மா விகைபுனைந்தரிய மான்மதம் விதிர்த்திடுந் தோற்றந், தண்ணறும் பசுங்கற் பகமல ரிடையிற் சாலிக டெளித்திடத் ததைந்து, பண்ணிசை யிழற்று ஞிறினை மிருந்த பான்மையொத் திருந்தன மாதோ. (118)

அம்புய மலரிற் சேந்துசெவ் வரியார்ந் தருளடை கிடந்தகட் கடையின்,வம்பவிழ் சுரமா வுரைத்தமை யெழுதி மணிவடங் கிடந்தபொன் மார்பிற், கொம்பலர் மாவஞ் சந்தொடுங் குழைத்துக் குளிர்தாத் திமிர்ந் திகை விரலிற், பம்பிய திரைவா ருதியினிற் பிறந்த பருமணி யாழியுஞ் செறித்தார். (119)

அலங்கரித் தயினி சுழற்றிறு லவர்கட் கருத்தி மணியொடும் வழங்கி, யிலங்கிழை மடவா ரடைப்பைகோ டிகஞ்சாந் திநபருங் கினுமெடுத் தேந்தத், துலங்கிய கவரி வெண்ணிலா வெறியச் சுருதிவல்லவர் துஆ விரப்ப, நலங்கிளர் தீன்தீன முகம்மதென் றேத்த நரம்புளியவியெழுந் தனரால். (120)

மலரணை படுத்த துகிலின்மே னடந்து வானவர் மகளிரேத் தெடுப்பச், சிலைவல ரயித்தா விபுமனைக் குரிய திருநபி தமைவளர்த்து வந்து, பலனுறும் பாத்தி மாவெனு மடமா னிருவிழிப் பாவைகண் களிப்ப, விலகிய மடவார் குரவைக ளியம்ப வெழிலவி வாசிமேற் கொண்டார்.()

பேரிகை திமிலை குடப்பறை தடாரி பீலியார் திண்டிம முரசோர், பாரிசப் பதலை யிடக்கைகட் டியபீள் பணவம்வா ரணிதட மொந்தை, பூரிகை நவுரி காகளஞ் சின்னம் போர்வபிர கொம்புகைத் தாளம்,வாரிபு மலைப்பப் பேரிடி மயங்க மண்ணதிர் தாமுழங் கினவால். (122)

பரிதியின் கதிரான் மதியையேந் தினபோற் பவளக்கால் வெண்குடை நிழற்றத், திரடருந் துவசம் வெளியறச் செருகச் செம்மணித் துகில்செயா லவட்ட, மிருபுற நெருங்க விசிறிசாந் தாற்றி யிரைகடற் றிரையென மலிய, வருபடை நாப்ப ணெறிந்தபா வாடை வானமின் னெனத்திசை மலிய. (123)

வரைவிழி யருவி யெனக்கவுட் கரட மதங்கரைத் திருபுறம் வழிய, வெரிமணி வயிரக் கிம்புரிப் பெருங்கோ டிணைவளைப் பிறையினு மிலங்கத், திரள்பனை நெடுங்கைத் றுளைவழித் திவலை தெருத்திசை மழையெனச் சிதறக், கருவுடை மயிர்வாய்ப் பிடிக்கணந் தழுவிக் கடகரிக் குல நெருங் கினவால். (124)

மாருத மலைக்கும் விசையின விருபான் மலிந்தபக் கரையின வதிரப்,பாரினை யுடைக்குங் குளம்பின பொற்பூப் பலநிரை கேசபந் தியின, போரடர் சீரா வணியின பாகர் புந்தியி னமைந்தன பதினெண்,சாரிகை நடனப் புரவின் கணங்க ளெண்ணில தலைமயங் கினவே. (125)

மணிக்கண நிரைத்து வைத்திடுங் குடுமி வானகத் திரவியின் மிளிரப்,பிணித்தபொற் காந்தி யுமிழ்தருங் கொடிகள் பெருந்துகட் படலங்க டுடைப்பப், பணித்தலை நெளியத் தரைத்தலங் குழியப் பரியொடுந் திசைபறப் பனபோற்,கணித்துரைக் கடங்காத் தெருத்தலை நெருங்கக் கலித்தகோ ளரிவண் டில்சளே. (126)

பத்தியி னெடும்பொற் சட்டக மமைத்துப் பருவயி ரம்பல பதித்து, முத்தணி நிரைத்துத் துகிரமணிச் சிறுகான் முறைபட நிறுவிப் பைங் கதிரார், சித்திரப் படமேல் விரித்தணி யலர்கள் செறிதர மாலைகணாற்றி, வைத்தபொற் சிவிகை பலபல மருங்குஞ் சிறந்திட வீதியின் மலிந்த. (127)

வடிநற வருந்தி வரியளி சிலம்பு மலர்த்தொடைப் புயத்தபூ பக்கருடனும றெனும்பே ரடலரி யேறு முலப்பொரு தோளுது மானுங், கடமலை கடவி நிலம்பிதிர்த் தெறியுங் கவனவாம் பரிகளிற் கவினு, ரிடு கொடை கவிப்பக் குழாத்தொடு மலித மிருபுடையினுஞ் செறிந தன ரால். (128)

இயன்மறை நபித மவயவ மெனலா யின்புறு முகாஜிரீ னென்னும், பெயர்களு மன்சா ரிகளெனும் வரிசைப் பேறுடைத் தலைவர்

மன்னவரும், வயவரிக் குழுவுங் கொடுவரித் திரளுமலிந்தன தெருமி
சை மலிந்து. முயலகன் மதியின் குடையொடு கொடியு மொய்த்திடச்
செறிந்தன ரன்றே. (129)

கருதல ருயிருண் டேன்மரு நெடுவேற் காவல ரொருபுறநெருங்கப்
பரிசையு மேக மின்னென வொளிரும் பட்டையத் தவரொருமருங்கும்,
நிரைநிரை குனிய வில்லினர் சிலம்பு நெடுங்கடல் படர்ந்தெனப் பரக்க,
வாசருஞ் சூழவலி யெனு மரியே றுடலம் பரிநடத்தினரால். (130)

ஆரணக் கிழவர் பேருடைத் தலைவ ராடவர் காளையர்சிறுவர், வா
ரணி களபக் குவிமுலைக் கதிர்ப்பூண் மங்கைய ரவரினின் முதியோ,
ருரினி லிருந்த நாற்குலத் தவர்மே லுரிமையர் தொழும்பி லுள்ளவருங்,
காரணக் குரிசி லலிவரும் பவனிக் கடலிடை கடலெனக் கலந்தார். ()

வே று.

பதச்சிலம் பலம்பச் சூழ்ந்தபைம் பொன்மே கலைக ளார்ப்பக்
கதக்களிக் கரியின் கோட்டுக் கதிர்முலைப் பணிகண் மின்னப்
புதுக்கடி நறவஞ் சிந்தும் பூங்குழன் மாலை சோர
மதிக்குலங் கடல்பூத் தென்ன மங்கையர் திரண்டு மொய்த்தார். (132)

ஆடலம் பரிக்கு வேந்த ரலிவரும் பவனி வேலை
யூடுறை யமுதந் தானே யெழுத்ததின் வேர்விட் டோடிக்
கூடுறும் பவளச் செவ்விக் கொடிகிளைத் ததுவோ வென்ன
வேடவிழ் மலர்பூங் கூந்த லிலங்கிழை யவர்கண் மொய்த்தார். (133)

கண்ணெனுங் கயல்க டாவக் களமெனுஞ் சங்க மார்ப்ப
வெண்ணகைத் தரள நக்க விரியிதழ்ப் பவள மின்ன
வொண்ணிலப் பசலை கால வொளிர்நுரை யாலை சிந்தப்
பெண்ணெனிங் கடலந் தானே யிடனறப் பெருகிற்றன்றே. (134)

சவிவிரற் றளிர்க ளீன்று தண்ணகை யரும்பு பம்பித்
திவளொளி வதனம் பூத்துத் தேனளி முரள மாதர்
குவிபெருந் தானை நாப்பண் கூண்டவை பலியென் றேதும்
பவனியின் றருவை நோக்கிப் பலகொடி படர்ந்த தொத்த. (135)

நிறைமணி குயிற்றும் பொன்மே னிலைவயி னெருங்கு மாத
ரறைசிலம் பலம்பச் செஞ்சீ றடிநிலந் தோயா தாலு
நறைமலர் புலரா தாலு நாட்டங்க ளிமையா தாலு
மறைமுத லவன்பொன் னாட்டு மங்கையர் போல நின்றார். (136)

முறைமையி னணிய நின்றார் வதுவையின் முழக்கங் கேட்டுப்
பொறைபொரு தனத்திற்சூட்டும் பொன்னணி யொருகையேந்திக்
கறையளி முரலுங் கூந்தற் கண்ணியோர் கையி லேந்தித்
திறையிடு பவர்கள் போலச் சிலர்தெருத் தலையின்வந்தார். (137)

அல்லெனுங் கூந்தல் கையா லடிக்கடி முடித்து வாய்த்த
தில்லென மறுத்து நெற்றித் திலகந்தொட் டியற்றும் போழ்திற்
கல்லெனு மோதை கேட்டுக் கடுப்பினிற் கைக்கண்ணாடி
யொல்லையி னெறிந்து நாணிச் சிலரொளித் தொருங்கு நின்றார். (138)

விள்ளருஞ் செக்கர் வான்போல் விரிதருங் கலைகள்வீக்கித்
தெள்ளுறுசெஞ் சாந்தும் பூசிச் செம்மணிக் கலன்க டாங்கி
வள்ளறன் னழகைக் கண்ணாற் பருகிய மாத ராகத்
துள்ளுறுங் காமத் தீமே லொளிர்வது போல நின்றார். (139)

கடற்பெருஞ் சேனை சூழக் கடகரி மலைகணைப்பண்
சுடர்க்கதி ரவனை யொப்பத் தோன்றிய வலிதஞ் செவ்வித்
தடப்புதுப் புனலி னஞ்சந் தரும் விழிக் கயல்கள் போக்கி
யெடுத்தணி வளையும் வீழ்த்திச் சிலரிட ரிடைப்பட் டாரால். (140)

சிற்றிடை யொசியச் சோதிச் சிறுநுதல் வெயர்ப்ப வாய்ந்த
முற்றிழை முலைகண் விம்ம முருகயின் றளிக ளார்ப்ப
வெற்றிவா ளலியென றேதும் வேந்தர்கோன் பவனிபோந்து
பொற்றொடிக் காந்தட் செங்கை மடந்தையர் புகலலுற்றார். (141)

மாயிரு ஞாலம் போற்று மன்னபித் தாலி யீன்ற
சேயலி மெய்யின் வாய்ந்த திருவடி வழகை நோக்கிப்
பாயரி கருங்கட் செவ்வாய்ப் பாவையீ ரிமையா நாட்டத்
தாயிரங் கண்கள் வேணு மெனச்சில ரறிவிற் சொல்லார். (142)

குவிதருங் கடலந் தானைக் குபிர்கட லுடைக்கத் தோன்று
மவிர்கதிர் வடிவாட் செங்கை யலிதிரு மணமென் றேதுள்
கவினுறுங் கனக நாட்டுக் காட்சியைய பாத்தி மாவா
லவனியின் மாந்தர் காண வரும்பலன் கிடைத்த தென்பார். (143)

வாமுறுஞ் சுவன மாதர் மலரடி பாவிப் போற்ற
வாசுவீற் றிருக்குஞ் செவ்வி யணிவிழாக் காணப்பெற்றாங்
கருமுகிற் கவிகை வள்ளல் கனகநா டதனி னாளை
வருபவ னியுமியாங் காண்போ மெனச்சிலர் மவுலு வாரால். (145)

பேரொளி யழகு வாய்ந்த பொண்ணினை மணப்பப் பூமி
றொழி லவரொன் றெண்ணி யிருந்தன ரிவரை நோக்கின்
சீரணி பெறுமம் மங்கைச் செவ்விக்குச் செவ்வித் தூயோன்
பாரிலெண் மடங்க தாகப் படைத்தனன் காணுமென்பார். (145)

அருமறை மணத்த வாயு மருளடை கிடந்த கண்ணுந்
திருமதி முகமு நீண்ட திரண்மணி வயிரத் தோளுந்
தருவெனச் சிவந்த கையுந் தாமரைத் தாளும் வாய்ப்பப்
பெருகிய வழகை யெல்லா மொருத்தியோ பெறுவ னென்பார். (146)

வீதியி னழகோ வந்த வேந்தர்கோ னழகோ சூழ்ந்த
மாதவ ரழகோ யாது பெரிதென மதித்துச் செல்வா
ராதிதன் றூத ரீன்ற வரிவைதம் மணதகின் கோலம்
பேதமொன் றினறிக் காணப் பெற்றதே யழகென்பாரால். (147)

எயிறுக ணிறையா மார்பி னிளமுலை முளையாக் கண்க
ளயிலென வரிகள் சேரா வளகமு முடியிற் கூடா
தொயில்வரை மெய்யிற் பூழ்தி பூத்துந் துடையாக் காமப்
பயிரெனத் தோன்றும் பேதைப் பருவத்தி னொருத்தி வந்தாள், (148)

கனைகடற் படையு நீண்ட கவிகையுங் கொடியுஞ் சூழ்ந்த
வனைகழ வரசர் நாப்பண் வருந்திற லலியு நோக்கிய
புனைமணிப் பரியின் மீது புரவல ரிடத்திற் கூட
வெனையும்வைத் திடுமினென்ன விருவிழி யிசைந்து நின்றாள். (149)

ககனமும் புவியும் போற்றுக் காவலன் புலியைச் செவ்வி
யகுமதின் மருக ரான மலியெனு மாசையாக
மகிழ்வுறப் பரித்தல் செய்யும் வாசிமே விருத்த னம்மாற்
றகுவதன் றென்று சாற்றித் தாயர்க ளணைந்துப் போனார். (150)

கரும்பெனு மொழியா ளாசைக் கவின் முனைத்தென்னத் தோட்டுக்
குரும்பையின் முலையாண் மாயன் கொலைகள வென்ப சற்றே
யரும்பிய விழியைப் போலு மகத்தின னமலை மாறப்
பெரும் படைப் பவனி நோக்கிப் பொதும்பையென்றொருத்திவந்தாள்,

பருந்தெழுங் கதிர்வாள் வள்ளற் பதுமமென் முகத்தை நோக்கி
கருந்தடங் கண்ணு நெஞ்சுங் களிப்புற நாணின் மூடித்
தெரிந்தொரு வடத்தை யேந்திச் சேவகர் மாபிற் பூட்டி
யிருந்ததி லிவையும் பூட்டென் றொருத்தியோ டிசைத்து நின்றாள். ()

புத்தமு தகளும் வாயும் புதுமதி முகமுஞ் சேர்ந்த
கொத்தலர்க் குழலுஞ் செம்பொற் குவிமுலைச் சுணங்கு நூலி
னெய்த்தசிற் றிடையுங் காந்தி வளைநிறைந் தெடுத்த கையின்
வைத்தொரு கிளியு மேந்தி மங்கைய ளொருத்தி வந்தாள். (153)

வள்ளறன் வதன நோக்கி மதிமயக் குற்றுக் காம
முள்ளுறுந் தீயான் முத்தஞ்சுடச்சுட வொருங்கு சிந்திக்
கள்ளவிழ் கோதை நல்லீர் கதிர்மணி முத்த மென்ப
தெள்ளள வெனினும் பூணா தெறிமின்க ளெறிமி னென்றாள். (154)

வாரறுத் தெழுந்து வீங்கும் வன்முலைப் * பூணுஞ் சாந்துங்
கூரயில் பொருது நீண்ட கொடிவரி விழியின் மையுங்
காரென திரண்ட கூந்தற் காட்டணில் வரிவண் டார்ப்பப்
பேரணி மடந்தை யென்னும் பெண்கொடி யொருத்திவந்தாள். (155)

வாங்குவிற் றடக்கை வேந்தர் வாளலி வதன நோக்கிப்
பூங்கொடி வருந்தி நெஞ்சத் தறிவெலாந் துயரம் போர்ப்பக்
கோங்கிள முலையின் செம்பொற் கொடியென வென்னைச் சூழ்ந்த
பாங்கிய ரெங்கே யென்னப பாங்கியர் தம்மைக் கேட்டாள். (156)

காழ்த்தடக் களிறு சூழ வந்தகா வலரை நோக்கி
வீழ்த்தன ளறிவை நாண விருப்பினான் மெல்ல மெல்ல
வீழ்த்தனள் வாரா தலோ வென்னையே பாலிற் சூழ்ந்து
வாழ்த்திநின் றவரை யெல்லாம் வைதுகொண் டரிவை நின்றாள். ()

பெரும்படைத் தலைவர் சூழ விரும்பிரான் வதன நோக்கி
யரும்பிய துயர வெள்ள மடிக்கடி பெருக லாலே
வரம்பெறு நாணும் போக்கி மதிமயக் குற்றிவ் வள்ளற்
றிரும்பலிற் சொல்வே னென்னச் சினந்தொரு தெரிவைபோனான் ()

குலிகமார் செப்பிள் வாய்ந்த கொங்கைக டதும்ப வந்து
மலிதருந் தொடையல் சிந்த வடகங்க டயல நோக்கி
யலியினச் சோர மாத ரலியென விருதத னன்றென்
றொலிதர வுரைத்துச் செவ்வி யொழுகுபே ரிளம்பெண் போனாள்.

---

* பூணுஞ் சாந்து மையும் பெரிய வணியாகவுடைய வொருத்தி யார்ப்ப வந்தாளென்று கூட்டுக.

எய்த்தநுண் ணிடையீர் வேந்த ரேறலி யகலா தென்றன்
மைத்தடங் கண்ணு ளானூர் மறுகினின் மறுகி நீவிர்
கொத்தலர் தூற்றி வாழ்த்திக் கூண்டவை குறிக்கிற் பேதைப்
புத்தியென் றிருகட் கையாற் பொதிந்தொரு பூவை போனாள்.

சொரிநிலாக் கவிகை நீழற் சுடரவன் கடுப்பத் தோன்று
மாசகே சரியை நோக்கி யழகெலாம் விழியா லுண்டு
வருதுயர் வெறியின் மீறி வாயிதழ் வெளிறக் கண்சேந்
திருள்குழன் மாலைசோர விதயநொந் தொருத்தி போனாள். (161)

இன்னன மடவார் கூறி யிதயநெக் குருகுங் காலை
பின்னிய கொடியும் வீசுங் கவரியும் பிறங்கத் தாங்கும்
பன்னகம் வருந்தத் தூளிப் படலமேழ் கடலுந் தூர்ப்ப
மன்னவ ரலியுல் லாவு மற்றொரு மறுகு சார்ந்தார். (162)

பல்லிய முகிலி னார்ப்பப் பரிக்குழாம் பரந்து பொங்கச்
செல்லுறழ் கரடக் கைமாத் தெருத்தொறு மலிய மாறா
நல்லியன் மறையோர் போற்ற நடனவாம் பரியின்மீது
வல்லிய மலியுல் லாவும் வானவர் வாழ்த்தப் போந்தார். (163)

நரர்புலி யலியார் வந்தார் நபிதிரு மருகர் வந்தார்
ரரியபித் தாலி யீன்ற வாணினி லழகர் வந்தார்
பரிவலி வீரர் வந்தார் பாத்திமா கணவர் வந்தார்
திருவுலா வென்னப் போற்றித் திருச்சின்ன மியம்பிற் றன்றே. (164)

கள்ளவிழ் மாவ மாலைக் காளையர் பலரும் போற்றப்
பள்ளியின் வாயற் புக்குப் பாத்திஹா வினிதி னோதி
யள்ளிலை வேற்கட் பாத்தி மாவெனு மழகு வாய்ந்த
தெள்ளுதே னமுத மன்னார் திருமணப் பந்தர் வந்தார். (165)

அரம்பொரும் வேற்க ணல்லா ராலத்தி களித்து நிற்பக்
குரவையெம் மருங்குஞ் சூழ்ந்த குரைகட லென்னப் பம்ப
முரசுட னெளரி கொம்பு விண்முக டுடைத்துப் பொங்கப்
புரவல ரலியுல் லாவும் புரவிவிட் டிறங்கி னாரால். (166)

அடிமிசை பனிநீர் சிந்தி யம்பொன்மென் றுகிலா னீவ
வடிமறை யவர்கள் வாழ்த்த வானவ ராமீன கூறக்
கடிமல ரமளி போர்த்து ஹபீபுகண் களிப்பச் செவ்வி
யிடுசுடர்த் தவிசின் மீதி லலியினி திருந்தா ரன்றே. (167)

அலங்கலும் பணியுஞ் சாந்து மாடகத் துயிலு மேந்திச்
சிலம்புகள் சிலம்பப் பைம்பொற் சேயிழை யவர்கள் கூடிக்
கலன்கதி ரெறிப்ப வேத காரணர் மனைவி யாகப்
பலன்பெறுங் கதீஜா வீன்ற பாத்திமா விடத்திற் புக்கார். (168)

இறையவன் றூத ரீன்ற விருவிழி மணியைச் சோதி
மறைபடா விளத்தைச் சேணின் வானிடத் துறையா மின்னைக்
கறைபடா மதியை நாளுங் கவின்குடி யிருந்த கொம்பைப்
பொறையென வளர்ந்த கற்பைப் பூம்புன லாட்டி னாரால் (169)

மின்னைவெண் சோதி சுற்றிக் கிடந்தன துகிலை வீக்கிப்
பன்னருங் கருமேகத்தின் வெண்முகிற் படர்ந்த போல
நன்னெடுங் கூந்தற் காட்டி நறும்புகை கமழ வூட்டித்
தென்னுலை மணியின் சோதிச் சீப்பிட்டுச் சிறப்பிட் டாரால். (170)

முகமதிக் கிடைந்து சுற்றி முதிருட் படல மியாவும்
புகுமிட மிதுவென் றேதும் புரிகுழ லதனிற் சாந்துந்
தகரமும் விரவி வெண்பூத் தனித்தனி சிதறி வாய்ந்த
சிகழிகை முடித்து வாசச் செழுமலர்த் தொடையல் வேய்ந்தார். (171)

நுதற்பிறைக் கதிரக ளோடி மேகத்தி னுளைந்த தென்னப்
புதுக்கதிர்த் தாளச் சுட்டி பிணைநுதன்மேற் சாத்துஞ் சாந்திக்
கதத்தடற் படைவாள் வள்ளற் கவினுறப் புருக நாளு
மதர்த்தரி படர்ந் தண்ணின் மையெடுத் தெழுதி னாரால். (172)

மடற்றிகழ் காதிற் செம்பொன் மணிப்பணி நிரையிற் சேர்த்தி
மிடற்றெழில் கவர வந்த மின்னென மிளிர்ந்து தோன்றுஞ்
சுடர்ப்பிறை வடத்தைச் சூடிச் சொரிகதிர் வடங்கள் சேர்த்துக்
கொடிக்கரும பெழுதுதோண மேற் கொழுமணிக் கோவை சேர்த்தார்.

ககனமும் புவியு மில்லைக் கவின்பழுத் தொழுகுங் கையின்
மகிதல முழுதும் விற்கும விச்சிரக் கடகம் பூட்டிப்
பகிரொளி காந்த ளங்கை விரலெனும் பவளக் கொப்பின்
முகிழலர் பூத்த தென்ன முத்துமோ திரங்க ளிட்டார். (174)

நதிக்கரை கடற்குட் பாரின விளைந்தன மணிக ளெல்லாஞ்
செதுக்கிப்பொன் னிழைப்பிற் கோத்த வடத்தொடுஞ் சோலை யாக்கிக்
கதிர்க்கட வுளும்வான் பூத்த கணங்களுஞ் சசியுங் கூடிப்
புதுக்குடி யிருந்த தென்னப் பொருந்துமே கலையுஞ் சேர்த்தார். (175)

வடிநறு வனசப்போது மாவிளந் தளிரு மொவ்வா
வடிமிசை பூட்டும் பஞ்சி னலத்தக மலர்த்தி நாளும்
பிடியின நடையைக் கற்பான் பெட்புறும் மதத்திற் செம்பொற்
சுடர்மணிச் சதங்கை தண்டை பாடகஞ் சூட்டி னாரால். (176)

பொன்னினு மணியி னாலும் பூந்தொடைக் கற்றை யாலு
மின்னினை மறைத்துச் சற்றே வெளியிடை கிடந்த தெல்லாந்
துன்னிய களபச் சேற்றாற் றடவிமெய் துலங்கச் செய்து
கன்னியர் சூழ்ந்து வாழ்த்திக் கண்ணெச்சில் கழித்திட் டாரால். (177)

மரகதச் சுடரைச் சேர்ந்த மாணிக்கக் கொழுந்தைப் பூவிற்
பிரிவுறாப் பொன்னை மின்னைப் பெண்ணலங் கனியை யெய்தாப்
பாகதிப் பேறை வாழ்வை பாத்திமா வெனு மந்த
வாசிளங் குயிலைப் பூவி னணைமிசை நடத்தி னாரால். (178)

அணிக்கலங் கலைவச் செப்புக் கோடிக மடப்பை யேந்திப்
பிணைக்கருங் கண்ணார் சூழப் பிறங்குசா மரைக ளேந்தக்
கணிப்பிலாத் துஆவு மாமீ னெனுஞ்சொலுங் கடலபோ லார்ப்ப
மணக்கடி முரச மார்ப்ப முகம்மது மகளார் வந்தார். (179)

வந்தபொன் மயிலை யின்ப மறைநபி யெனுமவ் வள்ளற்
சிந்தையுங் கண்ணு மாரச் செழுங்களி பெருகி யோடச்
சுந்தர வருவி மாறாச் சுடர்வரை யிடத்திற் றோன்ற
வந்தரத் திழிந்த மின்போ லவ்விடத் திருத்தி னாரால். (180)

மலிபொலன் கிரியிற் சோதி மணியினை யிருத்தல் போல
அவ்விடத் திருத்தும் பாவை யழகுகண் டுவந்து மேலை
ரொலிகடல் கிளர்ந்த தென்ன வுறவவ ரெவருஞ் சூழ்ந்து
பலனுற வாழ்த்தி வாழ்த்திப் பாத்திஹா வோதுங் காலை. (181)

மெய்யொளி பரப்புஞ் சோதி விரிசிறை யொடுக்கி யார்க்குந்
துய்யவ னருளின் மேன்மைச் சிபுரியீ லெனுநந் தோன்ற
லுய்யுமா நிலத்தின் மாந்தர்க் குற்றந்தா ருவகை கொண்டு
வையகம் விளங்குந் தீனின் முகம்மதி னிடத்தில் வந்தார். (182)

தருமுகம் மதுவுக் கின்பச் சலாமெடுத் துரைத்து மேலாம்
பொருளெனு மிறையோன் றன்றுற பொன்னுல கத்தினுற்ற
வரிசையும் வானோர் வாழ்த்து மகிழ்ச்சியின் கூறுல ஹின்கள்
பெருகுமா நந்தத் துற்ற பெற்றியுங் கூறு வாரால். (183)

இன்றையி னிரவிற் சோதி யிலங்கிய சுவன நாடு
முற்றினுஞ் சிறப்பித் தன்பாய் முறை முறை வானோ ரியாரும்
வெற்றிவா ளலிக்குஞ் செவ்வி விளங்கிழை தமக்குந் திட்டி
சுற்றிவிட் டெறியு மென்னத் துய்யவ னுரைத்தான் மன்னோ. (184)

வல்லவ னுரைம றுமெ லெண்ணில்வா னவர்கள்கூண்டு
சொல்லருஞ் சுவன நாட்டுச் சுடர்மணி மனைக டோறும்
பல்லவத் துணர்ப்பைங் காவும் வீதியும் பல்பல் கோடி
யெல்லவ னிருந்த வென்னமணிவிளக் கியற்றி னோரால். (185)

வானவர் மகளி ரெல்லா மணவினைக் கோலஞ்செய்து
தானவன் பெயரின் வண்ணன் பயித்தொடுஞ் சலவாத் தோதிப்
பானமுங் கனியுங் கொண்டு பன்மணி யூச லேறித்
தீனவர் தமையும் வாழ்த்திச் செறிந்தனர் விண்ணி னம்மா. (186)

மறைமொழிக் கலிமாத் தீட்டும் வாயின்மா ளிகையி னுள்ளுள்
ளறைதொறுந் திறந்து வன்ன பேதபட் டாடை கோடி
முறைமுறை யெடுத்துத் தேனோ முகிழ்நனை யிருந்த செவ்வி
நறைமலர்த் தொடையும் வாய்ப்ப நனமணிக் காத்திற்கொண்டார் (187)

மூதிருள் கடியுங் காந்திச் சிதுறத்துல் முந்தஹாவென
றோதிய தருவின் பாலி னுபாலி பெயரும் பாத்தி
மாதிரு பெயருங் கூறி வானவர் காவக ளாரச்
சோதிநின் றெறியத் திட்டி சுற்றிநின் றெறிந்திட் டாரால் (188)

ஹபுகுநறும் பனிநீர் சந்தம் புழுகு நான் மதங்கற் பூர
பனுவிரிந் தொழுகும் பொற்பூ வானவர் மகளி ரேந்திக்
கதிர்மணிக் கதீஜா வின்ற கன்னியை யலியைப்போற்றி
விதமுறத் திசைக டோறுஞ் சிதறினர் விளங்க வன்றே. (189)

பெருந்தரு வடியிற் றிட்டி கழித்தெறி பிடைவை யெல்லா
மருந்தவ முடைய வள்ள லகுமதே யுமகசீ மான்கொண்
டிருந்துபின் கணவ ராக வருமவர்க் கீவோ மென்ன
வருந்திலா தமரா மாத ரெடுத்துவைத் திருக்கின் றாரால். (190)

நறைவிரி கனக நாட்டி னடந்தசோ பனங்க ளீதென்
றறிவுறவானோர் சோமா னுரைத்தன ரதனைக் கேட்டு
மறைநபி களிப்பா நந்த வாருதி தனனின் மூழ்கி
யிறையவன் தனைப்போற்றி யாவர்க்கு மியம்பி னாரால், (191)

அருளபூ பக்கர் வெற்றி யடலரி யுமறு கத்தாப்
தெருளுறு முதுமான் மாற்றச் செவ்வியோ ரெவருங் கேட்டுப்
பெருகிய புதுமை யென்னப் போலி தமையும் பெண்மை
யாசையும் பெரிது வாழ்த்தி யகக்களி பெருகி நின்றார். (192)

முகம்மது நபிநூர் வாழ்த்த மற்றமன் னவர்கள் வாழ்த்தப்
புகலருங் கற்பின் மிக்க பூவைய ரெவரும் வாழ்த்த
நகுமணிக் கொம்ப ரூரு நார்புலி யலியு மின்ப
மகிதலம் புகழ்ந்து போற்ற மணவறை வைகி னூரால். (193)

வே று.

இருவரு மணவறை புக்கி யின்புறப்
பெருகிய மகிதலத் துறைந்த பேரிருள்
வெருவுறத் திசைதிசை யொளிப்ப வெவ்விய
பரிதிவா னவன்கதிர் பரப்பத் தோன்றினன். (194)

அடிதிரை வளைமணி யெறியு மாளிவாய்க்
கடிமனை விரிதர விடிந்த காலையிற்
படியினும் பெரும்பொறை பாத்தி மாதிரு
வடிவுறும் புதுமணக் கோல வாயிலின். (195)

தடியுலர்ந் துடனரம் பெழுந்து தாங்கிலா
மிடியினன் பசியடைத் திருக்கு மெய்யினன
பிடிவிர லூருவிலாப் பீற லாடையன்
கொடுகிய குளிரின்வந் தொருவன் கூயினன். (196)

கூயவ னியாவெனன் றெழுந்து கோதையா
நாயகி யெதிர்நதுபக் கிறை நனருறச்
சாயிபு பதமலர் வருந்தத் தக்கவென
வாயிலின் வந்தென மவுலு வீரென்றார். (197)

கடிமனை யிலெனக் கருதி வந்தனன்
வடிவுறு மயிலனீர் வயிற்று றும்பசிக்
கொடுமையுந் தவிர்த்துடற் குளிரு நீங்கவோர்
பிடவையு மருள்கவென் றெடுத்துப் பேசினன். (198)

வறியவ னுரைத்தசொற் கேட்டு மாமயி
லறுசுவைக் கறியுட னனை மீந்துமேற்
குறையற வியற்றிய புதுக்குப் பாயமும்
பெறுகவென் றளித்தன ளறிவின் பெற்றியால். (199)

இகலறு மனத்தவ ரீந்த போசன
மகமகிழ் தரவயி ருரா வுண்டுநற்
றகிலையு மொல்லையிற் புனைந்து தோமறும்
புகழொடும் வாழ்த்திபக் கிறு போயினன். (200)

ஆதில னகன்றபி னுதி தாதெனு
மாதவ முகம்மது மருவ லார்தமைக்
காதபூ பக்கரு முமறுங் கல்வியி
னோதமில் குணத்துது மானு மியார்களும். (201)

இனையன பெயரும்வந் தெய்த நனமலா
புனைதரும் பாத்திமா வென்னும் பூங்கொடி
தனியெதி ரெழுந்து சலாமென் றோதினை
ரனைவரு மறுமொழி கொடுத்தன புற்றனர். (202)

மணியொளி முகம்மது மகளை நோக்கிநன்
கிணை மணிப் பணியொடும் புதிய தின்றியே
பணிமொழி யீரொரு பழங்குப் பாயத்தை
யணிவதென் னெமத்தெடுத் தருளு வீரென்றார். (203)

தந்தையீர் துகிலிலாச் சஞ்ச லத்தினல்
வந்தன ளொருபக்கீர் வழங்கி னேனென
விநதெனு நுதலிய ரியம்பச் செவ்விய
மந்தரப் புயநபி மறுத்துக் கூறுவார். (204)

இரவல ரிடத்தினிற் பழைய தீந்துநற்
புரியிழை மென்றுகிற் புதுக்குப் பாயத்தை
மருமணக் கோலத்தின வணைய வேண்டுமென்
றுரைதர மறுமொழி யுரைப்ப தாயினர். (205)

அழகிய தெவையுமல் லாவுக் காகவே
விழைவுடன் கொடுத்திட வேண்டு மென்றுநும்
பழமறை வாக்கினுற் மகர்ந்த தாலரோ
மழைதவழ் கொடையனீர் வழங்கி னேனென்றார். (206)

பாத்திமா வெனுமயில பகரக் கேட்டலர்த்
தேத்தரு புயநபி கிழ்ந்த மசெய்கையால்
கோத்திரத் தவர்செழு முகங்கள் கோதறப்
பூத்தசெந் தாமரைக் காடு போன்றவே. (207)

ஆண்டகை யலிமனைக் கம்ம நின்னையான்
கூண்டவ ருடனுமே கூட்டிச் செல்வதற்
கீண்டுவந் துறைந்தன னென்ன யாவருங்
காண்டருங் காரணர் கழறி னாரரோ. (208)

தந்தைய ருரைதரத் தருமவீ டெனுஞ்
சிந்தையிற் களித்தொளிர் செவ்வி யோங்கிய
விந்தெனு நுதன்மனை யிருந்த யாவையு
மந்திரக் கிழவர்முன் வைத்து நின்றனர். (209)

மாணெழி லரியபீங் கானும் வார்தலை
காணியும் பாயலுங் கதிர்கொள் வெள்வளைப்
பாணியிற் றிருகையும் பரம தானியும்
பூணிழை வைத்தலும் புகழ்ந்து நோக்கினார். (210)

வயவரி யலிதிரு மனையிற் சேருதற்
குயர்முறை முகம்மது மொளிர்செங் கையினால்
வியனுறு திருகையை யேந்தி னாவிற
வியலபூ பக்கரும் பாயை யேந்தினார். (211)

உற்றவாக் குதவிய ருமறு வெள்ளிழை
நற்றலை யணையினை யேந்தி னாருயர்
வெற்றிசே ரடலுது மானு மெய்ம்மனப்
பற்றொடு மெடுத்தனர் பரம தானியே. (212)

கதிர்தரு பெரியபூங் கானைக் கையினின்
மதிவல ரெனுமு சாமா வெடுத்தனர்
பதுமமென மலர்முக பாத்தி மாபதம்
பொதிதரு கபுசுடன் புறப்பட் டாரரோ. (213)

வல்லிய மெனுமலி மனையின வள்ளலார்
செலவெனு மொல்லையின் விரைவிற் சேணிழிந்
தெல்லவன கதிரினுஞ் ஜபுற யீலெழின்
முல்லைவெண் ணகைபயின் முனறி னண்ணினார். (214)

பரவா சரியலி மனைக்குப் பாத்திமா
திருமண மனைக்கும்பா வாடை செய்தன
வரகதிச் சபுறியீ லெனனும் வள்ளறம்
விரிகதிர்ச் சிறையினை விரித்து நின்றனா. (215)

மன்னவ ரியாவரு மருங்கு சூழ்வரக்
கன்னியுந் தொடும்பதக் கபுசு தன்னொடு
மின்னிய சிறையெனு மாடை மீதினி
னன்னலங் கனிதர நடந்துபோயினார். (216)

மறைநபி மகடமை யலிதம் வாயிலிற்
சிறையினி னடத்துதல் செய்து வானவர்க்
கிறைககன் புகுந்தன ரியாரு மின்புறப்
பொறையெனு மனைவயின் பொலிய வைகினார். (217)

கொணர்ந்தவை யாவையுங் கொடுத்து மன்னவர்
மணந்தரு மலியையு மயிலன் னாரையு
மிணங்கிடப் போற்றிவாழ்த் தெடுத்தவ் வில்லிடந்
தணந்தவ ரவருறை சார்பிற் சார்ந்தனர். (218)

சலிலமுஞ் சீரமுந் தழீஇய தன்மைபோ
லொலிகடற் புவியினீ டூழி வாழ்கென
வலியை யுமகளையும் வாழ்த்தி யன்பொடு
மலிபுகழ் முகம்மது மனைபுக் காரரோ. (219)

சொல்லுடன் பொருளெனச் சுருதி நான்முறை
யில்லுறைந் தொருவருக் கொருவ ரின்பமுற்
றல்லெனுங் கூந்தலு மரசர் சீயமு
மல்லலம் புவியிடை மகிழ்வின் வைகினார். (220)

பாத்திமா திருமணப் படலம்-முற்றிற்று
ஆகப் படலம்-15க்குத்-திருவிருத்தம்-915.

—*——*—

## சீபுல்பகுறுப் படலம்,

இறையவன் றூதரு மியார்க ளுல்வரு
மறைவழி பெருக்கிய மன்ன ரியாவரு
நிறைதர விருக்குமந் நாளி னோரல
ருறைபதி யிடத்திருந் தொற்ற ருற்றனர். (1)

கடற்கரை சீபுல் பகுறுவென் றோதிய
விடத்தினி லபுஜகு லுடன்முன் னூறிய
லடற்பரி கபடமா யடைந்த தின்றென
மடற்றுளைச் செவிப்புக வாழ்த்திச் சொல்லினர். (2)

ஒற்றர்க ளுரைத்தவை யுணர்ந்து தீனிலை
வெற்றிசேர் வேந்தருக் குரைத்து வேறுகொள்
பற்றல ரெனுமிருள் பருகும் வெங்கதிர்க்
கொற்றவ ரடல்ஹமு சாவைக் கூவினர். (3)

புடவியிற் பறப்பன போலு முப்பஃ
தடல்வயப் பரியுட னயில்வில் லேந்திய
மிடலுடை வீரர்கள் சிலரும் வெண்ணிலாச்
சுடர்விடு துவசமுந் தொகுத்திட் டாரரோ. (4)

வயிரொளித் திடப்படை மன்னர் சூழ்வர
வயிலொடுஞ் சென்றவ ணடர்ந்த புஜகல்
செயுமமர் வலிகெடச் செயித்து வம்பென
வயிரொனுஞ் சிறியதந் தையருக் கோதினர். (5)

கருதலாச் செகுத்திவண் கடிதின் வம்மென
வரசர்கா யகநபி யளித்த வாசகஞ்
சிரசின் மேற் கொண்டமு ச'வுஞ் சேனுலாய்
வரும்விசைப் பெருந்திறல் வாசி மேற்கொண்டார். (6)

பாகதிப் படையொடும் படைக்கு ழாத்தொடும்
வாமுறு முகம்மதை வாழ்த்தி வாண்மருக்
கரதல ரெனும்ஹமு சாபெய் கார்முகிற்
பொருதிரைக் கடற்கரை யிடத்திற் போயினர். (7)

உவமையின் மிடல்ஹமு சாவந் துற்றவை
யபுஜக லறிந்தடற் பரியுஞ் சேனையுங்
குவிதரப் பொருமமர்க் கோலந் தன்னொடும்
புவிதுக ளெழவெதிர் புறப்பட் டானரோ. (8)

தவிசுறை முகம்மதின் சிறிய தந்தையும்
பவுரிகொள் கவனவெம் பரியும் வீரருந்
துவசமுந் துலங்கிடச் சூழ மாகரி
யபுஜகல் வருமிடத் தெதிர்வ தாயினர் (9)

இருவர்தஞ் சேனையு மெதிருங் காலையிற்
றிருகுநெஞ் சபூஜகல் சேனை புக்கிருந்
தரிதினிற் றனித்தமு சாவென் றோதிய
மருமலர்ப் புயத்தின ரிடத்தில் வந்தனன். (10)

மறைநபி முகம்மதி னிடத்து வன்குபிர்
செறுநர்க ளிடத்தினுஞ் சேர்ந்த பண்பினன்
கறைகொள்வஞ் சகங்கப டடைந்த கல்பின
னிறமொழிச் சூதினன் மசூதிய் யென்பவன். (11)

தருத்தனை யுறழ்நபி சிறிய தந்தையர்
கருத்திலுக் கேற்பவை கபடந் தோன்றிலா
திருத்திநன் மொழியொடு மிசைவ தாகவே
பொருத்தினன் றவிர்த்தனன் போரின் கோலமே. (12)

உள்ளுறை வஞ்சகத் துறதி கூறியே
தெள்ளிய னெனவெழுந் தரிதிற் சென்றபி
னள்ளிலை வேலபூ ஜகுலுஞ் சேனையும்
புள்ளுவத் தவர்தலம் புகுத்திய போயினன். (13)

தடத்திரட் புயத்தமு சாவுந் தண்டுறைக்
கடற்கரை சீபுல் பகுறவை நீங்கிநீள்
கொடித்திர ளொடுங்குரா கதங்கண் முன்செல
வடற்படை கொடுமதி னனி லாயினர். (14)

எறிதிரைக் கடற்கரை யிடத்திற் சென்றதுஞ்
செறுநர்வந் துற்றது மசூதி செய்கையு
முறைமையின் முகம்மது முன்பு கூறினார்
சிறியசிதந் தையரெனுஞ் செவ்விச் சீயமே. (15)

சீபுல்பகுறுப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 16-க்குத் திருவிருத்தம் 930.





# புவாத்துப் படலம்.



சீபுல் பகுறு வெனுந் தலத்தின் செய்தியைக்
காவலர் முகம்மதங் கறிந்து கல்விசேர்
நாவல ருடனினி திருக்கு நாளினில்
வேவுகொண் டொருவர்வந் திறைஞ்சி விள்ளுவார். (1)

முன்னர்நம் முன்னல மொழிந்த பூஜகல்
தன்னுடன் பொருந்தியங் கவனைத் தப்பவிட்
டொன்னலர் தமக்குபி ருடனும் போன்றவ
னின்னைநாட் புவாத்துவி னிருக்கின் றுனென்றார். (2)

ஒற்றர்வந் துரைத்தவை யுணர்ந்து நந்நபி
நற்றவ முடைமையீர் நன்று நன்றுநம்
வெற்றிசே ரியார்களும் பரியின் வீரரு
மிற்றையிற் பகற்பொழு தெழுக வெனறனா. (3)

அகிலமன் புறுமதி னுவுக் காதியாய்ச்
சகிமன சாயிவைத் தனிய தாகவைத்
திகல்படைக் கோலங்க ளியற்றி யாவரும்
புகழ்நபி முகம்மது புறத்தி லாயினா. (4)

அறைதவில் பேரிகை முரசு மார்த்தெழ
முறைமுறை கொடிப்படை படாந்து முனகெலச்
சுறவெனும் வீரரும் பரியுந துன்னவே
யிறைநபி முகம்மது மெழுநது போயினா. (5)

உண்ணுநீர் காவத முலவித் தேடினுங்
கண்ணினிற் காண்பரி தான கானகம்
விண்ணினிற் புதுப்பன லன்றி வேறொரு
மண்ணிற் கூவலி லாப்பு வாத்துவே. (6)

தோடாறுங் கேண்மையின் மசுதிய் யென்னுமக்
கொடிய வனுறைந்தபு வாத்துக் கோட்டையைச்
சடிலமுஞ் சேனையுஞ் சதுரின சுற்றிட
வடிவுறு நபியவன் வைகி னாரே. (7)

உய்புநன் மதியில் துறைந்த வூரினை
வையகம் புகழ்நபி வளைந்த காலையில்
வெய்யவன் பூதலம் விளக்கி நீள்கதிர்க்
கையினை யொடுக்கிமேற் கடற்புக் கானரோ. (8)

இரவினிற் படைவளைந் திருப்பக் கீழ்த்திசை
விரிதர வெளுத்தது விரைவி நந்நபி
யரியவர் றொழுபஜ்று றடுத்த தீட்புனற்
றருகவென் றுரைத்தனர் காபிர் தன்னையே. (9)

ஏடலம் பியபுய நபியி னைசத்தனு
மூடிய கடங்களுந் துருத்தி மூட்டையுந்
தேடின ரில்லெனத் திசையுட் பாடியு
மோடினர் நீருறை யொருங்கு காண்கிலா. (10)

மீண்டனர் சடுதியின் வேத நாயக
கூண்டவிப் பதிபுறக் குறுகி யெங்கணு
காண்டில னீரெனக் கழற நந்நபி
மீண்டுநீர்த் துருத்தியைக் கொணாமி னென்றனர். (11)

தருகெனு முறைவழி சாபி றெல்லையிற்
பறகுநீ ரற்றதோர் றுருத்திப்பையினைத்
திருமுனம் வைத்தனர் தொட்டுச் செவ்வியோர்
சுருதிமந் திரத்தினிற றுஆச்செய் தாரரோ. (12)

மண்ணுறும் பாண்டமொன் றெடுத்து வம்மென
வண்ணலா ருரைத்தலு மோடி யவ்வயின்
றண்ணுறு தொடைப்புய சாபிர மனனவ
ருண்ணிறை களிப்பொடு முவந்து வைத்தனர். (13)

புதுநறும் பானையின் வாயிற் பொற்புறப்
பதுமமென் கரவிரற் பரப்பு மூடிநின
றிதமுறுந் துருத்தியை யெடுத்துக் கையினமேல்
விதமுறக் கவிழ்த்தென விளம்பி னாரரோ. (14)

விடுமென வுரைத்தலும் வெறுந்து ருத்தியைக்
கடநிறை விரலினமேற் கவிழ்ப்ப வுள்ளுறைந்
திடுதுளி யொன்றினமே லின்றி வீழ்ந்தது
படுமிட நீரெனும் பானமை தோனறவே. (15)

கையின்மே லொருதுளி கான்ற போழ்தினின்
மெய்யொளி முகம்மது பிசுமி லோதினர்
செய்யமென் விரலிடை நான்கிற் சேணதி
பெய்புனல் லருவிபோற் பிறந்தெ ழுந்ததே. (16)

சுருதிவல் லவனருள் சுரந்த நந்நபி
விரலிடை நதியெனப் பிறந்த வெள்ளத்தாற்
பரவுறற் பாலையைப் போக்கிப் பண்ணைசூழ்
மருதநன் னிலமென வளமுண் டாயதே. (17)

பரிகளொட் டகஞ்சுமை பரித்த நந்திக
ளரிதினிற் குடித்தரு மயாவுந் தீர்ந்தன
திருநபி முகம்மதுஞ் சேனை வீரரும்
வாரதி யிடத்தினிற் றெழுது வாழ்த்தினார். (18)

இவ்வண மூன்றுநா ளிருக்கு மெல்லையின்
மைவணத் துள்ளத்து மசூதிய் யென்பவன்
செவ்விய ரறிகிலா தொளிதநுத் தேடருங
கவ்வைசெய் நெடிபடு கானம் போயினன். (19)

ஓங்கிய நெடுங்கடத் தொளித்துப் போயின
னீங்கிருந் தென்பல னென்ன நந்நபி
தாங்குருமு புரவியுந தானை வீரரும்
வாங்குமதி னெனமதி னுவில வந்துற்றார். (20)

புவாத்துப்படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-17-க்குத்-திருவிருத்தம்-950.

——*——



## அசீறுப் படலம்.



வானவர் பரவிய வள்ள நந்நபி
தீனெனும் பெருமபெய ராசு செய்யுநா
ளீனவன் குபிரவ ரியற்றுஞ் செய்கையைத்
தானறிந் தொருவர்வந் தலையிற் சாற்றுவார். (1)

வரைசெறி மக்கமா நகரின் மாற்றலர்
திரகமு மணிகளுஞ் செம்பொ னுடையுந்
தரளமு மிருவிலைச் சரக்குந் தாங்கிய
பரிகளு மெருதுமொட்டகத்தின் பந்தியும். (2)

காமரியு னிரைநிரை காவ லாளரு
மாமதி வலசில வணிக மாக்களும்
பூமணஞ் செறிதரு பொழில்கள் சுற்றிய
ஷாமினுக் கனுப்பினர் சமய மீதென்றூர். (2)

உற்றுள வறிந்தவவ் வொற்ற ரீதெனச்
சொற்றவை செவிப்புகத் தூயன் றூதுவர்
வெற்றிகொள் வேலினர் வியப்ப விம்மொழி
பெற்றன மெனத்தனி மறையிற் பேசினர். (4)

தலைவருக் கிம்மொழி சாற்றி வேதநூன்
மலிதருங் கேள்வி யபாசல் மாதனைப்
பலவளங் கெழுமதி னவிற் பண்புற
நிலைதர முதன்மையி னிறுத்தி னாரோ 5)

விரிகதிர் வேலினர் வளைந்த வில்லினர்
சுரிகைபட்டயமழுச் சுமந்த தோளினர்
பொருவினூற் றைம்பது புரவி தம்மொடும்
வரநபி யெழுந்தன ரமரர் வாழ்த்தவே. (6)

அறைதவில் பம்பை தடாரி யார்த்தெழ
முறைமுறை காகள முழக்க மோங்கிட
மறுவறும் வெண்கொடி யுலவி வள்ளலார்
சிறியதந் தையர்முனஞ் செல்லச் சென்றனர். (7)

உள்ளமுங் களித்தமு சாவென் றோதிய
வள்ளல்வெண் கொடியுடன் மகிழ்ந்து முன்செலப்
புள்ளினு நனிவிசை புரவி சூழ்வரக்
கள்ளவிழ் மலர்ப்பொழில் கடந்து போயினர். (8)

அடவியும் பாலையு மருவிக் குன்றமுங்
கடகரி வனங்களுங் கடந்து போயிகல்
படுகொலை மருவலர் நடத்தும் பாதையி
னிடனசீ ருவெனுந் தலத்தி னெய்தினர். (9)

வற்றுறுப் பெரும்புகழ் மக்க மாநகர்ப்
பற்றலர் ஷாமினுக் கேகும் பாதையிற்
சுற்றினு மிறங்கினர் சுருதி வாசகக்
கொற்றவ னபியொடும் படைக்கு ழாங்களே. (10)

இலகசீ ருவினி லிரண்டு நாளிருந்
துலவிய வொற்றரா *லுணரு மொல்லையிற்
பலபல திசையவர் படர்ந்து சாலியே
நலனுறு முகம்மது நபிமு னெய்தினார். (11)

முதல்வநம் படைவர மூன்று நாட்குமுன்
பொதியெரு தொட்டகம் புடையிற் பொங்கவே
நிதியொடும் போயின நிகரில் ஷாமெனும்
பதியினுக் கெனப்பதம் பணிந்து சொல்லினார். (12)

பாதிசை திரிபவர் பகரக் கேட்டவண்
கரநதி தருநபி யிருக்குங் காலையிற்
பெருகுமவ் விடத்தவர் கூடிப் பெட்புற
மரைமல ரிணைப்பதம் வந்து நண்ணினார். (13)

பேர்பனீ முதலசு வென்னும் பேருட
னார்பனீ லமுறத்தென் பவரு மாண்டுறப்
போரறத் தன்மையிற் படுத்திப் பொற்புட
னூர்கெழும் புயநபி தருக்கின் மீண்டனர். (14)

முரசமும் பேரிய முழங்கத் தாவிய
பரிகளு மன்னவர் பலருஞ் சூழ்வர
நரலையை நிகர்திரு நகரை நோக்கியே
வரும்வழி யினிலொரு வசனங் கேட்டனர். (15)

துறுமலர்ப் பொழிறிகழ் மதீனஞ் சுற்றிய
சிறுகுடிப் பாடிக டிடுக்குற் றேங்கிடப்
பெறுநிரை யனைத்தையும் பிடித்துத் தெவ்வரிற்
குறுசெனு மவன்கொடு போயி னானென்றே. (16)

குரைகட லெனநிரை கொண்டு போயதோர்
தருமுகி றவழ்சபு வானென் றோங்கிய
வரையடி வாரத்தை நோக்கி மானபி
பொருவில்வெம் படையொடும் போயி னாரோ. (17)

* உணராநிற்கு மொல்லையி லென நிகழ்காலங் கொள்க.

இறையவ னுரைவழி யியற்றுந் தூதுவர்
மறைமுதிர் படையொடும் வருகின் றாரெனக்
குறைசெனு மவனிரைக் குழுவு முரும்விட்
டுறைவதில் லெனவொளித் தோடி னாரோ. (18)

வலனுற வருஞ்சபு வானெ னும்பெரு
மலையடி வாரத்தின் வந்தவ் வூரிடை
நிலைகொளு நிரையெலாங் கொண்டு மீணபி
சிலையபிற் படையொடுந் திரும்பி னாரோ. (19)

கல்லடை கிடருமுட் காடுங் கண்ணுறுச்
செல்லடை நெடுவரைத் திகிரிச் சூழலு
மெல்லவன் கதிர்கிடந் தெரியும் பாலையு
முல்லையுங் கடந்தொரு பொழிலை முன்னினார். (20)

சேந்தன செழுங்கனி சிதறச் சிந்திய
வீந்தடர் பொழிலிடத் திறங்கி நந்நபி
யாய்ந்தநல் லறிவின ரமச்ச ரின்புற
வாய்ந்ததோர் பத்திரம் வரைந்து கட்டினார். (21)

அகிலமன் னப்துல்முத் தலிபுக் கன்புறு
மகள்மகன அப்துல்லா வென்னு மன்னனை
யிகலறு மனத்தவ ரிருத்தி முத்திரை
தகுதியிற் பத்திரங் கொடுத்துச் சாற்றினார். (22)

பாடிபத் துனுநகு லாவிற் பாங்குறக்
கூடியங் குறைந்துகைக் கொடுத்த பத்திர
மூடிய முத்திரை முறித்துப் பாசுரஞ்
சூடிய வுரைவழி துணிமி னென்றரோ. (23)

கண்ணெனப் பிரிவின்மு ஹாஜி ரீன்களி
லெண்மனை யவர்மொழிக் கிணங்கச் சேர்த்தினி
துண்மகிழ் தரவவ னுறைகு வீரென
மண்ணகம் புகழ்முகம் மதுவ னுப்பினார். (24)

நாயக ருரைத்தவை யுளத்தி னூட்டிநற்
றாயவ ரெண்மரும் பரிவிற் சூழ்வரப்
பாயரித் தவசமுன் படரப் போயினர்
சீயமொத் தப்துல்லா வென்னுஞ் செம்மலே. (25)

தந்தைதம் முன்னவ டருமத் தால்வரு
மைந்தரை யவணிடை யனுப்பி மன்னர்கோன்
சிந்திடத் துயர்மனை சிதறத் தாக்கிக்கைப்
பந்தென வருந்திறற் பரியின் மேற்கொண்டார். (26)

திறல்வய வீரருஞ் சேனை மன்னரு
மறையொலி திசைதர வருமவ் வேலையி
லறமிலி யொருவன்வந் தடுத்தி யாவர்க்கு
மிறையவன் றாதர்மு னியம்பு வானரோ. (27)

முன்னவர் முட்மறை மொழியி னீறினி
னன்னயி யொருவருண் டென்னு நாட்டத்தாற்
சென்னிலந் தொறுந்தொறுந் திரிந்துங் காண்கிலா
திந்நிலத் தெதிர்ந்தன ஞாழி னேவலால். (28)

மண்டலம் புகழ்தரு முகம்ம தேநிழற்
கொண்டலங் கவிகையுங் குறிப்புங் காட்சியுங்
* கண்டவன் பொருட்டியோ காசா னீகமொன்
றுண்டெனி லெனக்குவே றுறுதி யில்லைபால். (29)

என்றவ னுரைத்தன னேகன் றூதுவர்
வென்றிகொ ளறபியை விளித்துச் சேணிடை
நின்றவத் தருவினைக் கூவி நிண்ணிடத்
தொன்றுமென் றிசைதர வுரைத்திட் டாரரோ. (30)

தூதுவ ருரைவழி யறபி தூரத்தின்
மாதரு நிலையினை நோக்கி வாவெனக்
கோதறக் கூறினன் கூற வத்தருப்
பூதலம் விரிதரப் புறத்தெ ழுந்ததால். (31)

எழுந்தருப் பணர்சினை யாவும் பின்னரின்
விழுந்திட வேராமுன வீட்டி மேதினி
யழுந்திட வூர்ந்ததி ஜயிப்ப வாசலச்
செழுநதெனடைப் புயநபி திருமு னின்றதே. (32)

வந்துநின் றத்தரு மண்ணுள் ளோர்களு
மந்தரத் தமரருங் கேட்ப தாகவே
சுந்தரம் பெறச்சலாஞ் சொல்லி யிநநிலத்
துய்ந்தன னெனக்கவி மாவுமோதிற்றே. (33)

---

* கண்டவனென்று வினையா லணையும் படர்க்கைப் பெயராற்றன்னைச் சுட்டிக்கொண்டா னென்க.

இருவகை மொழியுங்கேட் டறபி யீங்குறை
தருவினை முன்னுறை தானஞ் சேர்தா
வருளுகென் றுறைத்தன னாதி தூதரு
மொருமொழி செல்கென வுவந்து கூறினார். (34)

வதுவரைப் புயநபி வசனங் கேட்டனு
முடைமா மிலையிலொன் றுதிர்த யாமலே
படர்பணர் துயல்வரச் சலாம் பகர்ந்தக
மடைவபோ லோகிமுன் னிடத்தி னாபதால். (35)

தருப்புது மைகடரத் தந்த நந்நபி
திருப்பதத் தினிற்சிரஞ் சேர்க்கத் தன்மன
மொருப்படச் செழுங்கலி மாவை யோதிநல்
விருபபொடு நெறியிசு லாத்தின் மேவினார். (36)

காரணக் குரிசில்நுங் கமல மாமல
ரீரடி யினுஞ் சஜதாச்செய் தேத்தியிப்
பாரிடைப் பலன்பெறப் பரிவி னோர்விடை
தாருமென் றுரைத்தனன் றழைந்த புந்தியான். (37)

அறபியிவ் வுரைதா வழகின் பேறுறத்
தறைசிரம் படச்சஜ தாச்செய தேத்துவ
திறைவனுக் கல்லது யாந்தாக் கில்லென
முறைமையின மறைவழி மொழிந்து காட்டினார். (38)

நுன்னிதழ்த் தாமரைப் பாதந் தொட்டியா
னென்னிரு விழிசிர மேத்த வாயினு
முன்னுளத் திசைந்தரு ளுரைசெய் வீரெனப்
பொன்னகங் காவலர் பொருந்தி னாரோ. (39)

அருமறை முகம்மதி னம்பொற் றாளிணை
யிருவிழி வைத்துமுத் தாடி யாவர்க்கும்
பிரியமுற் றொருசலா மோதிப் பெட்புடன்
வரிசைபெற் றறபிவாழ் பதியிற் போயினான். (40)

வழிபடு மவனைநல் வழியி லாக்கிமேற்
சுழிபடு புரவியும் படையுந் துன்னவே
யழிபடாப் பெரும்புக ழரசர் கேசரி
பழிபடா திருந்துவாழ் பதியை நண்ணினார். (41)

அசீறுப்படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-18-க்குத்-திருவிருத்தம்-991.

——ஃ[*]ஃ——



# பத்றுன்னகுலாப் படலம்.

---

மழைதவழ் கவிகை வள்ளன் முகம்மது தீனைப் போற்றி
யெழில்பெறு மப்துல்லாவு மெண்மருங் கூண்டு சுற்றிச்
சுழியெறி யாறுங் கானுஞ் சுரங்களுங் கடந்து செந்தேன்
பொழிதரக் கனிக டேங்கும் பொழிலிடை யிறங்கி னாரால். (1)

நபிதமை விடுத்து மூன்று நாளினி லிறங்குங் காவிற்
கவினுற வெழுதிக் கட்டித் தருங்கடு தாசை யேந்திப்
புவிபுக ழப்துல் லாநற் புரவல ரெவருங் கேட்டுச்
செவியினின் மகிழ்ச்சி கூரத் தெரிதர வாசித் தாரால். (2)

மக்கநன் னகரார் ஷாமுக் கனுப்பிய முதலு மற்று
மிக்கவத் திரியு மாவு மீண்டவண் வருநாண் மட்டும்
புக்கியங் குறைந்து கானிற் போவதற் கிடங்கொ டாமற்
றிக்கறப் பறித்து வெட்டித் திரும்புமென் றிருந்த னரே. (3)

விரிந்தவா சகத்தை கேட்டு விரைந்தெழுந் தரச ரியாரும்
பரிந்ததா யிபுக்கு மக்க மெனும்பதி தனக்கு நாப்பண
வரந்தரு நபினார் சொன்ன பத்றுன் னகுலா வென்னும்
புரந்தனி லிறங்கிப் பாதைப் புறந்தொறுங் காவல் வைத்தார். (4)

பாயரி போன்று சின்னாட் பாதைகாத் திருப்பச் சாமிற்
போயின சரக்கு மாவு மொட்டகைக் குழுவும் பொங்கித்
தாயுபுக் கிப்பாற் பட்ட தெனுங் குறிப் பறிந்து தத்த
மாயுத மெடுத்துச் சேர்த்துப் புரவிமே லாயி னாரால். (5)

பொன்னுநன் மணியுந் தூசும் புரவியொட் டகத்தி னேற்றிக்
கொன்னுறைக் கதிர்வாட் டாங்கிக் குமாரும் வருத னோக்கி
மின்னிலங் கியவேற் செங்கை முகம்மது விடுத்த வேந்தர்
பன்னக ரெளியத் தத்தும் பரியொடு மெதிர்ந்து கொண்டார். (6)

செயலறு மருவ லாருந் தீனவர் படையுந் தாக்கிக்
கயினுறை கழித்த வாளின கண்கடைக் கனலக் காதி
வெயிலவன் கதிரிற் றாண்டும் வெஞ்சரந் தொடுத்து நீண்ட
வயிலொடு மயில்க ணீட்டி யடுஞ்சமர் விளைத்து நின்றார். (7)

அமரிடை வெகுண்டு சீறிக் காயிரி லம்றென ரேருதுங்
குமரன்முன் னெதிர்ந்து தாவக் கோளரி யப்துல லாகண்
டிமைசுட விழித்து முன்ன ரேகித்தம் வாளால் வாசிச்
சுமைகெட விரண்டு துண்டங் படவுட றுணித்து நின்றார். (8)

மருவல னம்றென் போனு மாண்டபி னிருவர் தாக்க
விருவருக் கிருவ ரேகி யெதிர்ந்துமற் போரிற் சேர்ந்து
தரையிடை வீழ்த்தி வெளவிக் கட்டுத றனைக்கண் டேங்கி
யொருவனு மோடி னனமற் றுளாதிசை சிதறி னாரால். (9)

தாரையி னெதிர்ந்த நான்கு தலைவரி லொருவன் வீந்தான்
வீரர்க ளிருவர் தீனின் வேந்தர்கை யினிறாட் டுண்டார்
போரெதி ராது மற்ற வொருவனும் புறத்திற் போனான்
வாருதி போல வந்தோர் திசைதிசை மறுகி னாரால். (10)

ஒட்டகத் திரளு மேறும் புரவியு மொளிர்ந்த சேர்த்த
பெட்டகத் தொகையுஞ் செல்லப் பிடித்தவ ரிருவர் செங்கைக்
கட்டுட னடத்திச் செவ்வேற் காளைய ரினிது சூழ
பட்டவி முலங்கற றிண்டோள் மன்னவர் புறப்பட்டாரால். (11)

எண்ணெணுத் திரகுங் கைக்கொண் டெண்மரு மிலங்கும் வேற்கை
யண்ணலென் றிசைக்கு மீரத்தி பத்துல்லா வெனனும் வேந்தும்
விண்ணினுந் திசையுந் தீனதீ னெனுமொழி விளங்கக் கூறிப்
பண்ணமை விழைபாட் டெய்தும் பதியெனு மதீனஞ் சேர்ந்தார். (12)

அறைகட லவனி காக்கு முகம்மதி னிடத்தை நண்ணி
முறைமுறை பணிந்து போந்து நிகழ்ந்ததை மொழிந்து சேர்ந்த
சிறையுடன் பொதிபிற செய்த திரக்கத்தினை சுருக்கி காட்டித்
தறுகிலா தெழுந்து போற்றி யவரவர் சாரிற் சார்ந்தார். (13)

பூரலிட் டடைய லாரைப் பொருதுவெல் லுவதற் காகா
மாசமேபத் ததிற பொன்னை வைத்தனர் சின்னாட் பின்ன
ராசிலான கருணை கூர வாபதுறைதான் றிறங்கை யாலே
பாசமுற் றவர்கட் கெல்லாம் பகுந்தினி தளித்திட் டாரால். (14)

பிடித்தருஞ் சிறையிற் பட்ட பெயர்தலை விலைப தாகக்
கொடுத்தரும் பொன்னுன மக்கா புரத்தவர் கொண்டு போனார்
வடித்தசொன் மறையோர் வாழ்த்த மன்னவ ரினிது போற்றத்
தொடுத்ததீன விளக்கஞ் செய்து தூதுவ ரிருந்தா ரன்றே. (15)

பதனுனைக் கதுலாப் படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-19-க்குத் திருவிருத்தம்-1006.

———:*:———



# பதுறுப் படலம்.

நெறியொடும் புறக்கா ணன்னோர் நிகழு * மவ் வருடந் தன்னிற்
பெறுகதி றமலா னென்னப் பெருகிய நோன்பு தன்னை
யுறுதிகொண் O டெவர்க்குஞ் செவ்வி யுறப்பறு லாக்கி னேனென்
றிறையவ னருளி னுயத திறங்கிய ? தெவர்க்கு மன்றே. (1)

உள்ளுறைந் தெவர்க்குந் தோன்றா துலகெலா நிறைந்த மேலோன்
விள்ளுதற் கரிய வேத வழிமுறை விதித்த நோன்பை
வள்ளனந் நபியு நாலி யார்களு மற்று ளோருந்
தெள்ளிய மனத்தி னோடுஞ் சிறப்புடன் முடித்து வந்தார். (2)

பறுலெனு நோன்பு நோற்று பதினே ழாய
குறைவற வெள்ளி நாளிற் குத்துபாத் தொழுத பின்னர்
மறுவறு மொற்றா தம்மில் பதுறா வென்னும் வீரர்
முறைவழி தவறா வள்ள முஹாசிரீ னெழுந்து நின்றார். (3)

வியர்மெய்த் தொய்யும் பூண விசித்தகச் சையுமா கத்தி
னயாவொடு மிணைவில் வைத்தா யாதித தீனை மாறுவ
கயவர்தஞ் செய்கை யாதுங் கடந்தனை யென்ன யார்க்குந்
துயரநபி முகம்ம திப்ப லொதுங்கிவாய் புதைத்துச் சொல்வார். (4)

மருக்கமழ் சோலை சூழு மக்கமா நகரின் வாழ்வு
பெருக்கிநந் தீனை மாறு பேசிய தலைவர்க் குற்ற
வுரககமு மணியுந் தேச வாணிபத் துறுதியான
சரக்குகளி னொன்றுன் முன்னா ளொழுங்குடன் போயதன்றே. (5)

அந்தக ரடைந்தி லாப மிரட்டித்து மதிக மாகிப
பின்னரந் நாட்டுக் கேய பெருஞ்சரக் கனைத்துங் கொண்டு
மன்னிய புரவி யேறு வரிநெடுங் கழுத்த லையாவுந்
துன்னிடச் சுமைக ளேற்றித் தொகுதிக டொகுதி யாக. (6)

---

* அவ்வருட மென்னுஞ் சுட்டு, முன்னைய முப்போரையு முடைய ஹிஜுறத் திரண்டாம் வருடத்தைக் குறித்தது.

O எவர்க்குமென்றது, முசுலிமாகிய எவர்களுக்கு மென்றும்.

? எவர்க்கு மென்றது-ஆலத்திலுள்ள எவர்களுக்கு மென்றும் பொருட் படுத்திக் கொள்க.

இருநிதிச் செல்வர் நாற்ப திலக்குறுந் தலைவர் சூழ
மருமலர்த் தொடையல் வேய்ந்த வரைப்புயன் கறுபு மைந்த
னருளறம் பயிலாச் சிந்தை யபாசுபி யானு மாகத்
தெரிவருஞ் செம்பொற் குப்பைத் திரளொடும் வருகின் றூரால். (7)

ஈதுபோ னமக்கு வாய்த்த திலையொரு காலத் தேனு
மாதவ விஃதென் றோதி வாய்புதைத் தொருங்கு நின்றார்
சூதர மொழியார் சிந்தை தொட்டமெய் யெழில்சேர் வள்ளல்
காதினுட் புகுந்து மாற்றங் கருத்தையும் வியத்திற் றன்றே. (8)

தனுச்சர வேக மானும் பசுபசா சாற்று மாற்ற
நனைச்செழுந் தொடையல் வேய்ந்த தோரநால வருக்குங் கூறித்
தொனிச்சதிர கடலந தானைத் தொகைப் படைத் தலைவ ரியாரு
மினிச்சடு கிபினென் முன்னர் வருகவென் றிசைமி னென்றார். (9)

அடையல ரிடியே றன்ன அபாலுபா னுவைச் செம்பொன
மடறிகழ் கமல வாவி மதீனமா நகாக்கு மற்றப்
புடைபடு நகாக்குஞ் செங்கோற் புரந்தர ரிவரே யென்ன
விடையறா மறைபின் றீஞ்சொன் முகம்மதாண் டிருத்தி னாரால். (10)

வேறு.

பழுதி லாதமெய் முதலவன் பறலெனப் பணியுந்
தொழுகை நேரிமா மெனச்செயுந் தொழினமுறை சிறப்பப்
பொழிபு நன்மறை நாவினர் புகலுநா லைவையும்
வழுவி லிபுனுமமி மக்குத்தூமைத் தலைமையாய் வைத்தார். (11)

வேறு.

வீரவெண் மடங்க லென்னும் விறலபூ பக்கர் வேக
மாருத மடங்கத் தாவும் வயப்பரி யுமறுஞ் சேந்த
கூரயி ருங்குங் செங்கைக் கோவுது மானும் வெற்றித்
தாரெழும் வடிவா ளேந்துந் தடப்புய அலியும் வந்தார். (12)

இயன்மறை தெரிமு ஹாஜி ரீன்களெண் பத்து மூன்று
பெயருமன சாரி மாரிற் பேர்பெறுந தலைமை மிக்கோ
ருயரிரு நூற்று முப்பத் தொருபெய ரவருங் கைவா
ளயருறு வெற்றி வீரத் தவருட னீண்டி னாரால். (13)

இருபுறக் காடதர்ரை மதசலமிறைத்து நிற்கும்
பொருகரிக் கணங்க ளென்னப் புலிக்குழாந் திரண்ட தென்ன
வரையிடை கிடந்து சீறு மடங்கலேற் றினங்க ளென்ன
விரிகடற் றானை சூழ வேந்தர்க டாண்டுமொய்த்தார். (14)

திரைக்கடற் கடுப்ப வேந்தர் சேனைகொண் டண்டத் தாவும்
பரிக்குழர் நெருங்கச் சேந்த படைக்கலன் செறிந்து மின்ன
மருக்கமழ் படலைத் திண்டோன் மலையென வளர வள்ள
லருக்கனொத் தெழுந்து வெம்போ ரணிகல னணிய லுற்றார். (15)

தண்ணொளி விலகி வீசும் சபூசெனுந் தலைச்சோ டிட்டு
வெண்ணிலாக் கதிரிள் கற்றை மின்னினைப் பொதிந்த தென்ன
வண்ணவெண் சறுபாற் றெட்டு மருங்கினிற் சுருக்கி வீக்கிக்
கண்ணொளி கவருஞ் சோதிக் கஞ்சுகி கவினச் செய்தார். (16)

ஓலியல்மே லிருத்திச் செவ்வி யொளிருங்குற் றுடைவா ளென்னுங்
கலிபினைச் சேர்த்த காட்சி கருதல ருயிரை நாளும்
பலியெனக் கருளவீ ரென்னப் பருமணிக் கச்சின் கையான்
மலிபுகழ் மருங்கு சேர்ந்து வருடுவ போன்ற தன்றே. (17)

திருநபிக் கேவல் யானுஞ் செய்குவ னென்ன வெய்யோன்
வெரிநிடத் துறைந்த போல விளங்குகே டகத்தைச் சோத்துத்
சொரிகதிர் வயிர மாலைத் தோள்வரை யிடத்திற் றோன்றி
பொருகிறை கிடந்த தென்னத் தனுவொரு புறத்திற் கொண்டார். (18)

வெய்யவன் கதிரின் வேக விசையின வேத வாய்மை
பையனுக் கொன்று நூறா யிரமென வமைந்த வேவல்
செய்வன திகாந்த மட்டுஞ் செல்வன திறத்த வெண்ணில்
பெய்சரக் காபூ றென்னுந் தூணியிற் புறத்திற் சேர்த்தார். (19)

மறுவிலு லைகபத் தென்னு மாவயி ரத்திற் செய்த
குறைசுனுத் தண்ட மேந்திக் குலக்கொழுந் தனைய கற்பிற்
பொறைமயில் கதீஜா வீந்த பொலன்மணி வேலுந் தாங்கி
யிறைவனை வாழ்த்தி யேத்தி முகம்மது மெழுந்தா ரன்றே. (20)

தாவிடின் மனத்தை யொக்குந் தாக்கிடி னிடியே றொக்கு
மேவிடிற் றிகிரி யொக்கு மெதிர்ந்தவர்க் கிரியை யொக்கும்
பூவிடத் தடலின் வங்கூழ் போன்றிடும் சக்பென் றோது
மாவினைக் கொணர்மி னென்ன முகம்மது சரணம் வைத்தார். (21)

கடலினைக் கலக்க வென்றோ கதிர்துகள் படுத்த வென்றோ
வடவரை தகர்க்க வென்றோ மண்ணிலம் விளக்க வென்றோ
வடையலர் பதியை யின்னே யந்தாத் திடுக வென்றோ
தடமுறுங் கடின வாசி தான்பெயர்த் திட்ட தம்மா. (22)

உவரியுண் டெழுந்த காரி னொலித்தவொட் டகத்தின் பேரி
புவியிட மதிரப் பொங்க முரசங்கள் புடையி னார்ப்ப
நவுரிகா ளங்கள் சின்ன நாலையின் கலித்து விம்மப்
பவுரிகொள் பரிமுன் செல்ல நடந்தது பதாதி வெள்ளம் (23)

பரிசைகே டகம்வாள் சொட்டை பட்டயஞ் சரிகை தண்ட
மெரிசெய்வேல் சவளங் குந்த மிடுசரத் தூணிவல்வில்
வரிசையி னிரையி னேந்தும் வயவரும் பரியு மற்றும்
விரலிட மின்றி யெங்கு நெருங்கின படையின் வெள்ளம். (24)

மண்களி லரசு வைகும் வன்குபிர்க் களைக டீர்த்துப்
பண்கெழு மிறசூல் வேதப் புகழ்முனம் படர்ந்த தென்னக்
கண்களித் தமரார் வாழ்த்தக் கடிநினுக் காபென் றோதும்
வெண்கதிர் வெள்ளை வெற்றிக் கொடியைமுன் விரித்திட் டாரால்.

மிடலுறும் வெற்றி யுக்கா டெனுங்கொடி விசம்பு கைக்கொண்
டடனபி முன்பு செல்ல வலிமுனங் கொடியொன் றேகத்
தடமுறு மதீனா வேந்தர் தம்முனங் கொடியொன் றேக
விடனறக் கவிகை வெள்ள மெங்கணும் பரந்த தன்றே. (26)

பரந்தகல் விசும்பு தோன்றா மறைத்தன படல தூளி
விரிந்தவப் படலதூளி மறைத்தன கொடியின் வீக்க
நிறைந்தன கொடியின் வீக்க மறைத்தன கவிகை நீத்தஞ்
சொரிந்தன கவிகை நீத்த மறைத்தன கவரித் துள்ளல். (27)

படர்திரைக் கடலி னோதை கடந்தன படையி னோதை
புடைபடும் படையி னோதை கடந்தன புரவி யோதை
கடுவிசைப் புரவியோதை கடந்தன கரியி னோதை
தடவரைக் கரியினோதை கடந்தன சலவாத் தோதை. (28)

உலம்பொரு தோளிற் றனது மலைக ளுகுத்த தேனுங்
கலன்பல வணிந்த மெய்யி னழிந்திடுங் கலவைச் சேறும்
விலங்கலின் புறத்துந் தாவும் வெம்பரி விலாழி நீரு
நிலன்படப் பிறந்த சேற்றா னெடும்பனை போன்ற தன்றே. (29)

கடிமலர்க் குவளைக் காடுங் கமலமும் நெரிந்து சிந்தக்
குடைகொடி செறிந்த தொப்பக் குருகின மிரியல்போகப்
புடைபடுங் கதலிச் சூழல் பூங்கரும் படவி மாய
மடைசெறி தடங்கள் சூழ்ந்த மருதம்விட் டகன்று போனார். (30)

நீட்டிலை யிடறு சாய்த்த நெடுங்கதிர்த் தினையின் சார்பிற்
கோட்டலர் கமழுங் கூந்தற் குறத்தியர் கவண்கல் லேந்திப்
பாட்டிசை மிழற்றுஞ் செவ்வாய்ப் பசுங்கிளி கடியு மோதை
கேட்டினி தாமாத் துஞ்சுங் கிளைவரைச் சாரல் போந்தார். (31)

ஆம்பலங் குழலின் வாப்பைத் தாயர்க ளிசைக்கு மோதைத்
தேம்பினி மதுரத் தீம்பால் செவிமடுத் தினிது மாந்தி
வாம்பரி வீர ரியாரு முகம்மதின் சலவாத் தோதிப்
பூம்பொழிற் கொன்றை வேலி முல்லையுங் கடந்துபோனார். (32)

விரிபரற் பொரிசெம் பாலை வெறுநிலங் கடந்து விம்மி
முரிதருந் திவலை தூற்று முகிற்றுடை நிழலி னேகி
யெரிவிழிப் பேழ்வாய் வெண்பன் மடங்கலேற் றினங்கள் போன்றோர்
வரையிடை வயவர் சூழ முகம்மதுட் றிறங்கி னால். (33)

வடிசுதை தீற்றுமாட மதீனமா நகரின் வள்ளல்
கொடுவரி யினங்கள் போன்ற குழுவுடன் பாதை நாப்பண்
படைகொடு முறைந்தா ரொன்னும் பருவா லொற்றர் கூற
வடலபா சுபியான் கேட்டோ ரடவியி னிறங்கி னானால். (34)

எண்ணிறந் தனைய செம்போ னிடுஞ்சுமைத் தொகுதி யாவுங்
கண்ணென வொருங்கு சேர்த்துக் காவலி னிருந்து நேமி
மண்ணகம் பரவு மக்கமாநக ராசர்க் கெல்லாம்
விண்ணபத் திரத்தைத் தீட்டி விரைவுட னனுப்பி னானால். (35)

பத்திரஞ் சிரசி னேந்திப் பாதைவிட் டொருபாற் சென்று
குத்திரப் புரங்க ணீந்திக் கொடுமாச் சாத்தி னேகிப்
புத்தொளி விரிக்கு மாட மக்கமா புரத்தின் வேந்தர்
மொய்த்தபே ரவையி னண்ணி வைத்தனன் முடங்க லன்றே. (36)

அபுஜகல் முதன்மற் றுள்ளோ ரனைவருந் திரண்டு வைகிக்
கவினுறும் ஷாமுக் கேகி வருமவர் கடிதிற் மீட்டி
யிவண்விடுத் தனுப்பு மோலை தனைவிரித் தியம்பு கென்னச்
செவிவழி புகுதக் கேட்டோர் செவ்வியன் வாசிக் கின்றான். (37)

ஷாமெனும் பதியை நீந்தித் தலைவர்நாற் பதின்மர் சூழ
வேமமும் பண்டமியாவுங் கொண்டியான் வருவ கேட்டு
மாமதி னவின் வைகு முகம்மது படைகோ டெய்திப்
பூமனு முபய மார்க்கப் பொறைபிடத் திறங்கி னானால். (38)

இன்னணம் பதியி னுள்ளோ ரியாவருந் திரண்டு பூவிற்
புன்னரும் படைகொண் டண்டிப் பாதையி னாப்பண் வைகு
மன்னவன் முகம்ம தென்போன் வலிகெடித் தவனை வீழ்த்தி
நந்நிலை யெடுத்துச் சீர்த்தி நாட்டுத றுணிதல் வேண்டும். (39)

இல்லெனி லெம்மோ டுற்றோ ருயிர்செகுத் தெனையு மாய்த்துச்
சொல்லரும் பணியும் பண்டத் தொகுதியுங் கவர்ந்து வாரி
யொல்லையிற் கொடுபோய்த் தன்னூ ருறைகுவ னுறுதி யென்ன
மல்லலம் புயத்தான் மீட்டும் பாசுரம் வாசித் தானால். (40)

ஓலைவா சகத்தைக் கேட்டங் குயர் பதித் தலைவ ரியாரு
மாலையும் புயமும் வாகுவலயமுங் குலுங்க நக்கிச்
சீலமு மறனுந் தேய்த்த சிறுவரி லொருவ னின்னே
சாலவும் வலிய னென்றாற் சாற்றுவ தென்கொண் மாதோ. (41)

அடவியிற் கரந்து பாதை யவர்களைத் தடித்து முன்ன
ருடைமைகோ டுறைந்தா னம்மாற் காப்பதொன் றின்மை யாலே
படையொடு மின்னும் வந்தா னினிப்பகை தவிர்த்தி டேமாற்
புடவியின் முகம்ம தென்போன் புகழ்நிலை நிறுத்து வானால். (42)

அருநிதிக் கிடையூ றுய்வந் தடுத்தவன் றன்னை யின்னே
பொருதடர்ந் தவனை வீழ்த்தி யாவினின் புகுத்தே மாகிற்
பாவைசூழ் நிலத்தி னந்தம் படைக்கலன் சுமந்த கையி
னாரமென்னும் வீரமென்னு முயர்குடித் தலைமை யென்னும் (43)

எனவெடுத் திசைத்த மாந்தர்க் கெதிரிருந் தகத்தி னக்கி
வினையமுற் பயித்த புந்தி யபூஜக லென்னும் வீரன்
மனமுமுள் ளறிவு முட்க வயிறகு மறனும் பூணச்
சினமொடுங் கண்கள் சேப்ப வொருமொழி செரிந்து சொல்வான். (44)

பிதந்தநாட் டொடுத்து வாய்வீண் பேசுவ தலது நம்மான்
மறந்தாப் புகழே தேனும் வாய்மையின் முடித்த துண்டோ
அறிந்தவிர் நமர்கட் கெல்லா மாண்மையின் பெயருமுண்டோ
வெறுந்தலை தடவன் மாமறம் விடுமின்கள் விடுமி னென்றான். (45)

ஆட்டிறத் தனையவீர னபூஜகு லுரைத்த மாற்றங்
கேட்டலுந் தலைவ ரெய்தாக் கோபத்தீக் கிளரப் பொங்கி
நீட்டிய வுயிர்ப்பு வீங்கி நெடுங்கரம் பிசைந்து விம்மித்
தோட்டுணை வரைக ணோக்கி வீரத்திற் றுணிந்து நின்றார். (46)

மறித்தெதிர் பாதை புக்கு முகம்மதின் சிரத்தை யின்னே
தறித்தபா சுபியான் றுன்பந் தவிர்த்திடே மாகி லியார்க்குங்
குறித்துயிர்க் குயிராய் நின்ற குபலெனுந் தம்பிரானை
வெறித்தழற் குழியில் வீழும் வீணர்க ளாவே மென்றார் (47)

தனதுயிர்த் தலைவரிந்த வஞ்சினஞ் சாற்றத் தீமை
புனையபு ஜகுலென் றோதும் புன்மையன் றானும் வாளான்
முனைமுகம் மதுவை வீழ்த்தி முடிதுகள் படுத்தே னின்
மனைவியைப் பிறருக் கீந்த மதியிலி யாவே னென்றான் (48)

அரசபூ ஜகல்சொன் மாற்ற மனைவர்க்கு மிஃதே யென்னப்
புரவல ரெவரு மொத்துப் பொருபடை யாவுந் தத்த
நிரையொடும் வருக வென்ன முரசநீண் மறுகு தோறும்
விரைவொடு மறைக வென்றா ரன்னது விளக்கி னாரால். (49)

முரசதி ரோதை கேட்டு மொய்ம்பக ருள்ளோ ரெல்லாம்
விரிகதி ரெஃகங் கூர்வாள் வின்மழுச் சவளங் குந்தங்
கரதலத் தேந்தித் தாவுங் கடும்பரித் திரளினோடு
முருளறுங் கருபத் துல்லா வெனுமிடத் தெய்தி னாரால். (50)

கேடக மருங்கு சேர்த்துக் கிளரொளி வடிவாட் டாங்கிச்
சோடணிந் தரிபு செம்பொற் சுடர்மணிக் கடகம் பூண்டு
தேடரும் வெற்றி மாலை சென்னியி னிலங்கச் சூடி
யாடலம் பரியி னேறிச் சபைத்து மவணின் வந்தான். (51)

வெஞ்சின மடங்க லென்ன வெகுளியி னெழுந்து சேர்ந்த
கஞ்சுகி யணிந்து சந்தக் கதம்பமான் மதங்கள் பூசிச்
செஞ்சுடர் மணித்தண் டேந்தித் திரண்மணிப் புயங்கள் விம்ம
வஞ்சினங் கூறித் தாவும் வாசிமே லுமையா வந்தான். (52)

பணியணி பலவுந் தாங்கி வச்சிர வுடைவாட் சேர்த்துக்
கணைசொரி தூணி வீக்கிக் கார்முகங் கையி னேந்தி
யணியணி வீரர் சூழ வாலயம் புகுந்து தாழ்ந்து
பணிதரக் குபலைப் போற்றி யுத்பத்தும் பரியின் வந்தான். (53)

சுரிகையை மருங்கு சேர்த்துச் சொரிகதி ரிலைவே லேந்திக்
குரகத நடத்தி வெல்வேற் குமரர்கள் பல்லர் சூழ
வரியென வெகுளி பொங்கி யாண்மையும் வலியுங் கூறி
விரிதருங் கவிகை நீழ லபூஜகல் விரைவின் வந்தான். (54)

இன்னன வேந்த ரோடு மெண்பஃ தரசர் மொய்ப்ப
வந்நக ரறபிக் காபி ராயிரம் பெயர்கள் சூழ
மன்னிய சீறா ருற்ற மைந்தர்க ளெவரு மீண்டப்
பொன்னக ரென்னு மக்கா புரத்தினிற் புறத்துற் றாரால். (55)

காணுதற் கிறுதி யில்லாத் திறத்தினர் கவலும் வெற்றிப்
பூணின ருயிரை யீந்து புகழினை நிறுத்தும் பொற்பார்
மாணுறுங் கிரியுங் கீறி வகிர்ந்தெடுத் தெறியும் வல்லார்
சேணுற நிவந்த ஊழித் தீயையு மவிக்கு நீரார். (56)

புடவிதொட் டெழுந்து வானிற் போவன போன்று மேன்மேற்
படர்திசை யெட்டு மெட்டிப் பறப்பன போன்றுந் துள்ளிக்
கடிதிரை யுவரி யேழுங் கடப்பன போன்றும் வாசை
விடுவிடென் றதிர்ந்து தாவும் வெம்பரிக் குழுவின் வேகம். (57)

பரிகளிவ் வண்ணஞ் சான்ற நிலம்பரப் பின்றித் தோன்ற
வெரிவிழி கலுழ வேந்த ரிளையருங் குழாங் கொண் டண்ட
வரமுறும் வெற்றி வள்ளன் முகம்மதை வெல்வே னென்னப்
பொருபடைப் பெருக்க நோக்கி யபூஜகல் பூரித் தானால். (58)

வயிரொடு சின்ன மார்ப்ப வலம்புரி முழங்க வாரி
டொமுகி லிடியே றென்னப் பேரிகைக் குழாங்கள் பொங்க
வெயிலவன் கதிர்க டோன்று வெள்ளை வெண் கவிகை மொய்ப்பத்
துயல்வருங் கொடிக டுன்னத் துரகத நடத்தி னாரால். (59)

கறக்கடல் பரந்த தென்னக் கடந்தெழுஞ் சேனை வெள்ளப்
பத்துக ளெழுந்து மேகப் படலங்க ளனைத்து மூடி
மதித்தவெண் டிசையுந் திக்கும் வானினுஞ் செறிந்து நாளு
மதிர்த்திரைப் பரவை வேலை யலையையுஞ் சுவற்றிற் றன்றே. (60)

பவளங்கள் குலை சாய்த் தென்னப் பழுத்தசெஞ் சாலிக் காடுந்
தவளவெண் டாளஞ் சிந்துஞ் சலஞ்சலத் தடமுங் காவுந்
திவளொளிக் குவளைக் காடுந் திசையெலாம் வழிய தாக
விவளவென் றெண்ண வொண்ணா தெழுந்தன சேனை வெள்ளம். (61)

அடவிக ணெரியக் கானி னாறுகள் சேற தாகப்
புடைபடு மிரும்புங் கல்லும் பொடிபடு நூறதாகப்
திடரிடங் குழிய தாகக் குழியிடந் திடர தாகப்
படர்கொடி விசும்பு தூண்டப் படைக்கட னடந்த தன்றே. (62)

கவிகையி னெருக்க மென்கோ கவரியி னெருக்க மென்கோ
சிவிகையி னெருகக மென்கோ செழுக்கொடி நெருக்க மென்கோ
குவிபரி நெருக்க மென்கோ கொற்றவர் நெருக்க மென்கோ
சவுரியர் நெருக்க மென்கோ யாதெனச் சாற்ற மாதே. (63)

விரிபெருங் கடலந் தானை வெள்ளமீக் கெழுந்து பாலைப்
பால்வழி கடந்து வேற்றுப் பாடிக ளகன்று முட்சார்
பொரியரைக் காடு நீந்திப் பொருப்பிட மனைத்தும் போக்கி
யிருளறக் கொழிக்குங் கானியற் றிடத்தினி லிறுத்த தன்றே. (64)

அரியுளைக் கேச பந்தி யாடலம் பரிக ளியாவு
நிரைநிரை நிரைத்துப் பேரிச் சுமைநெடுங் கழுத்தல் சேர்த்து
முருகுமிழ் வெற்றி மாலை முரட்படை வேந்தர் வீரர்
வரிவயப் போத்துச் சூழ்ந்த மடங்கலின் வைகி னால். (65)

விண்கணி னமர ரியாரு மெல்லடி பரவிப் போற்று
மொண்கதி ருருவ வள்ளற் குறுபகை யாகிக் கூண்ட
புண்கதி ரெஃகு மேந்தும் புரலவர் முகநோக் காது
கண்களைப் புதைத்து வெய்யோன் மேற்றிசைக் கடலு ளானான். (66)

கதிரவன் கடலிற் புக்கான் கங்குலங் காலைப் போழ்தி
னதிர்கட றயிலு மாறா யனைவருந் துயில்வ தானார்
சதிவர வறியாச் சிநதை யபூஜகல் தானு மற்றக்
கொதிநுனை வேலி னேருங் கொடுங்கன வடுப்பக் கண்டார். (67)

வெருவருங் கனவு தோன்ற விழித்தெழுந் தாச ரியாரு
மொருவருக் கொருவர் விள்ளா துள்ளத்தி னொடுக்கா நின்று
ரெதிகதிர்ப் பரிதி வெய்யோ னெழுந்தன னெழுந்த பின்னர்
முரசுசங் கொலிப்பப் பொங்கி யெழுந்தது முரித் தானை. (68)

கடுநடைப் புரவி வெள்ளத் தொட்டகங் கலித்துப் பொங்க
மிடலுடைக் கதிரவெள் வேலும் வில்லொடு மிடையத் தாங்கிப்
படரரி யினங்க ளென்னக் காளையர் பல்ல ரேக
விடுகொடை கவிப்ப மன்ன ரேகியோர் புறத்திலானார். (69)

ஷாமினின் றெழுந்த பின்னர் தம்படை யலதுவெற்றி
மாமதிட் புரிசை மக்க மாநகர்ப் படையி னோடு
மாமதி யறியாச் சிந்தை யபூஜகல் வந்தவாறுந்
தோமறு மொற்றர் வள்ளன் முகம்மதுக் கறியச் சொன்னார். (70)

வேறு.

இருவ கைப்பெரும் படையும்வந் தடுத்ததென் றிசைப்ப
மரும லர்ச்செழும் புயநபி முகம்மது கேட்டுத்
திருகு வெஞ்சினத் திருநிலம் பிளந்துமண் சிதறப்
பொரும ருமத கயமென விருக்குமப் போழ்தில். (71)

முகிற்ப ரப்பிய நிழல்வரு முகம்மது தமக்குப்
பகுப்ப தற்கிட மில்லெனும் பரம்பொரு ளருளா
லிகற்ப டும்பகை யிரண்டிலொன் றமதுகை யிடத்தி
னகப்ப டுத்தின னெனுமொழி யிறங்கிய தன்றே. (72)

ஒக்க லின்புக ழபூபக்கர் தமையர சுமறை
மிக்குத் தாதைமற் றுளமுதி யாரையெதிர் விளித்துப்
கக்க லின்புற விருத்திவிண் ணினும்புகழ் பரப்புந்
தக்க வாய்மையின் முகம்மது சாற்றுவ ரன்றே. (73)

படரும் வெம்பகை யிரண்டிலொன் றமதுகைப் படுமென்
றுடைய நாயக னுயத்து மிறங்கின துலவிச்
சுடரும் வேற்படை யபூஜகல் தனைத்துணி துணிப்பப்
புடவி மேலமர் விளைப்பதோ வல்லது புகழீர். (74)

அரும்பு மென்மலர் வாவிசூழ் ஷாமிருந் தடுப்ப
வரும்பெ ரும்பொரு ளனைத்தையும் படையுடன் வளைந்து
கரம்ப டுத்திடத் துணிவதோ கருத்தினிற் றெளிந்து
விரும்பி ரண்டிலொன் றுரைமின்க ளெனுமொழி விரித்தார். (75)

வனையு நீண்முடி முகம்மது முரைப்பவண் டாளம்
புனையு மாயினர் கருத்தினுண் மதியெலாம் பொருத்தி
நினைவி னேர்வழி யிஃதுமுத் திரையென நிறுத்திக்
கனைகொள் வாம்பரி மன்னபூ பக்கர்கட் டுரைப்பார். (76)

அறமு மின்பமும் வளர்த்திடு முலகெலா மளிப்பத்
திறன ளித்திடுஞ் சேரலர் பகையையுஞ் சிதைக்கும்
வெறுமை கண்டவர் தம்மைமேன் மையரென வியத்து
நிறையி லாப்பெரும் புகழ்தரு முலகினி னிதியே. (77)

என்று நீர்மையிற் சாமினி யிருந்தவ ணடைந்த
பொன்னை யாம்வசப் படுத்துத னன்கெனப் புகழு
மன்ன தோற்றுதெற் கெனவினி துரைத்தனர் மகிழ்வி
னன்ன தேகருத் தெனவிரு வருமறைந் தனரால். (78)

மாது லன்முதன் மூவரும் வழங்கிய வசனங்
காதி னுற்றருங் காரணர் கருத்தினுட் படுத்திச்
சீத நன்மொழி யொடும்பல ருடனினந் தெரிந்து
போத மின்புறச் சொலுமின்க ளெனுமொழி புகன்றார். (79)

மந்தி ரத்தினிற் றலைவரு முரிமைமன் னவருந்
தந்தி ராதியன் ஸாரிக ளெனுந்தகை மையரு
நந்தம் புந்தியி னடத்துதல் பழுதென நடுங்கிக்
கந்த மெண்புப நயிதிரு முனங்கழ றுவரால். (80)

மேல வன்றிரு மொழிவழி யுலகினை விளக்கிக்
கோன டாத்திய செழுமுகிற் கவிகையங் கோவே
கால மூன்றையுந் தெரிந்தறங் கருத்தினுக் கிசைவ
போலும் புந்தியிற் சொலுமவ ரெவரும் புவியில். (81)

அடிகள் புந்தியி னிருந்தவை யுரைக்கிலவ் வழியே
முடியு மெங்களா லுரைப்பதென் முரணடை யலரைத்
தடிமி னென்றலுந் தடிகுவ மெமர்கடம் முயிரை
விடுமி னென்றலும் விடுகுவ நுந்திரு வுளத்தால். (82)

உயிர்க்கு றுந்துணை யவர்களிவ் வுரையெடுத் துரைப்பக்
குயிற்கு லங்கவி தருநிழல் வருபெருங் குரிசில்
வெயிற்ப டுங்கதி ரவனெனத் தீனிலை விளக்கக்
கயிற்ப டும்பொரு ளெனவொரு மொழிகழ றுவரால். (83)

பந்தி நீடிய தெருத்தொறும் பலமணி குயிற்றி
யிந்து தீண்டிய மேனிலைச் சாமினி யிருந்து
வந்த பொன்னொடு மாந்தரைச் செலும்வழி மறித்து
நந்தத் தாக்குத விருப்பப்பின் னொருமொழி நவில்கேன். (84)

மக்க மாநக ரவாபூ ஜகுலுரை வழியி
னொக்கல் கூட்டுற வறபிக ளெவரும்வந் துறைந்தார்
புக்கி யங்கவர்ச் செகுத்துநம் புகழ்நிலை நிறுத்தற்
கிக்க ணந்துணி வதுபெருங் கருமமென் றிசைத்தார். (85)

மதித்தி டாப்பெரும் பொருளொளி யினில்வடி வழகா
யுதித்த நந்நபி யுரைத்தவு முயிரொவு முரவோர்
கதித்த மாக்கட லெனும்படி யகங்களிற் களிப்ப
விதித்த திம்மொழி துணிவது மிவையென விசைத்தார். (86)

புடைக்கும் பேரொலிப் பல்லியந் தொடுகடற் பொருவக்
கொடிக்க ணங்கிரண் டிருவிசும் பிடைவெளி குறைப்பப்
படைக்க லத்தொடு மெழுந்துபோய்ப் பதுமறெனும் பதலை
யடிக்குக் கீழ்ப்புறத் தெல்லையி னிறங்கின ரன்றே. (87)

ஆதி நீண்மதிள் ஷாமினி லிருந்தவன் தவரும்
பாத வத்திட முகம்மதங் கிறங்குபா சறைக்குக்
காத மாமெனக் கடற்கரைப் புறத்தினிற் கடிதி
னேத மின்றிய பெருநிதி யொடுமிறங் கினரால். (88)

விரைசெய் மெய்நபி பாசறை யடுப்பத்தென் மேல்பா
லருவி யாறும்வண் பொருப்புமுண் டதற்குமப் புறத்திற்
பரியுஞ் சேனையு மிடைதர வபூஜகல் படையு
மொருவ ருந்தெரி யாவண மவணில்வந் துறைந்த (89)

வரையி டத்தினுங் கடற்கரை யிடத்தினும் வனத்தும்
பெருகுஞ் சேனைகொண் டிறங்கிவெம் *பேரமர் விளைப்ப
வொருவர் தம்படைச் செய்தியங் கொருவர்தம் படைக்குத்
தெரிகிலா திருந்தனர் செழுந் திறல்வய வேந்தர். (90)

பற்ற லாருறை யிடந்தெரி தரச்சில பகுப்பா
யொற்ற ரைத்திசை திசைவிடுத் தனரவ ரோடி
வற்று றுப்பெரு நதிகளும் வனங்களு மலையுஞ்
சுற்றிப் பார்த்தவர் வரும்வழி தனிலொரு சுரத்தில். (91)

நறவு தூற்றிய பொழிறிகழ் மக்கமா நகரி
னறபிக் காபிர்கள் பெருஞ்சுமைத் திரளினொட் டகமும்
பிறவுங் கொண்டிவண் வருதல்கண் டிமைப்பினிற் பிடித்து
வெறிக மழ்நபிமெய் முகம்மதின் றிருமுனம் விடுத்தார். (92)

இறுங்கு கோதும்பை நென்முத லியபல வேற்றிப்
பிறங்க லின்வனம் விடுத்தரும் பெருஞ்சுர வழியின்
புறங்க டநதெவ ணேகுவிர் புகலிட மியாதென்
றறங்கி டந்தசொன் முகம்மதங் கவர்களைக் கேட்டார். (93)

* அமர் விளைக்கவந் திறங்கிச் செய்தி தெரியா திருந்தனரென்க.

பருகு றுக்கொடும் பாலையிற் பெரும்புனல் படுத்து
முருக ரூதமெய் முகம்மது திருமுக நோக்கி
யிருகி ரூமலை மக்கமா நகரிடத் திருந்து
வருகி றேமென வுரைத்தன ரறபிவங் கிடத்தார். (94)

விலகு நீள்கதிர் கதைநிலைச் சாமினை விடுத்துக்
குலவு மொட்டகத் திரளொடும் பலருடன் கூடி
யிலகும் வேற்கைய பாசுபி யானவ னுறைந்தான்
சொலுமி னீவிரென் றுரைத்தனர் நபிபிற சூலை. (95)

துடவை சுற்றிய ஷாமினைத் துறந்தவ ருறைந்த
விடமு மெல்லையு மறிகில மபூஜகு லென்போ
னுடனெ ழுந்துத் பத்துசை பத்துமை யாவும்
படையும் வெம்பரிக் குழுவிட னிறங்கினர் பரிவின். (96)

பதுறு மாமலைக் கப்புற மிருக்குமன் னவர்க்குப்
புதிய போசன வருக்கங்க ளிவைகொடு போந்தே
மிதுகொ லியாமறிந் தவையென வறபிக ளியம்பச்
சுதின மின்றென வுரைத்திறை யவன்றனைத் துதித்தார். (97)

அறபிக் காபிர்க டமையொரு தலத்தினி லாக்கிப்
புறம டைந்தக லாதவன் காவலிற் புகுத்தி
யிறுகக் கட்டிய வொட்டகைச் சுமைகளை யிறக்கி
மறுபு றத்தினி லிருத்துமென் றனர்முகம் மதுவே. (98)

வலிய வீரர்க ளெழுந்து நந்நபிமொழி வழியே
பொலிவு றுஞ்சுமை யனைத்தையு மொருபுறத் தாக்கிக்
கலின வாம்பரி யறபிக டமையுமக் கணத்தி
லொலிகொள் பாசறைக் குள்ளுறப் புகுத்தின ரொருங்கே.

கவசம் போலுங்கண் போலுநற் காயத்தி லுறைந்த
றுவலு தற்கரு முயிரொனுந துணைவரை நோக்கி
நபிக ணாயக மகக்களி நனிகனிந் தொழுக
மவுல லுற்றனர் தெரிதர வொருதிரு வசனம். (100)

கூறு மக்கநன் னகரவர் குழுவுடன் கூடி
மாறு கொண்டிவ ணடைந்தன ரொல்லையின் வளைந்து
பாறு கொண்டுண வெஞ்சமர்க் களத்திடை படுத்தற்
கீறி தனறிப்பின் வேறொரு சமயமு மிலையால். (101)

இற்றைப் போதினில் வாய்த்ததிங் கடலிறை யோனும்
வெற்றி தந்தனென் றுயத்து மிறக்கினன் விரிநீர்
வற்று றுக்கடற் புவியினில் தீன்பயிர் வளர்க்கப்
பெற்ற மென்றிய னபிமனம் பிரியமுற் றுரைத்தார். (102)

ஈது முத்திரைப் பொருளென யாவரு மிசைந்து
மோது போலை மடுக்களுஞ் சுனைகளு மூருகார்
தாது குத்தவெள் ளருவியு மலையடிச் சார்புங்
காது மாற்றலர்க் கிடமறக் காவலிற் பொதிந்தார். (103)

அற்றைப் போதுபுக் கடைந்தபின் பாசறை யனைத்தும்
பற்ற லார்க்கிட மறத்தலைக் காவலிற் படுத்தி
வெற்றி வேந்தர்க ளிருந்தன ரிருளற விளக்கி
யொற்றை யாழிவெய் யவன்கதிற் விரித்துதித் தனனால். (104)

விடிந்த காலையி லபூஜகு லெனுமடல் வீர
னடைந்த பாசறை யெழுகவென் றெழுமா சதிரக்
கடந்த தும்பிய களிறெனு மாசருங் கணமும்
படர்ந்த வெம்பரிக் குழுவுட னெழுந்தனர் பரந்தே. (105)

கோல வட்டவெண் கவிகையு நெடுங்கொடிக் காடு
மால வட்டமுங் கேகயப் பீலியு மணியாய்
வேலை வட்டவெண் டிரையெனக் கவரியின் வீச்சும்
நீல வட்டவொண் விசும்பிட னறநெருங் கினவே. (106)

பேரி காகள மதிர்தர அபூஜகல் புறப்பட்
டார வாரிதி முகம்மது திசையறி யாமற்
பாரின் மினகுலம் பரந்தென வேலொளி பரப்பி
வீரர் சூழ்வர வரவுகண் டவர்விளம் புவரால். (107)

இகன்ம னத்தபூ ஜகல் பெரும் படையுட னெழுந்து
தகைவி னம்படை யுறைவது தனையறி யாம
லகல்வ தன்றிநம் மெதிரடுத் தடைந்தன னெனுஞ்சொற்
பகர்வ தாயினர் முகம்மது திருமுனம் பணிந்தே. (108)

ஒன்ன லார்படை யுறுவதென் றுரைவழங் கிடவே
கன்னி மாப்பெருந் தொகுதிக டமையலங் கரித்து
மின்னு குற்றுடை வாளெடுத் தரையினில் விசித்து
மன்ன ரியாவரும் போரமாக் கோலங்கள் வனைந்தார். (109)

உதித்த திங்களின் சவிகெடக் கவிகைக ளொளிரப்
பதித்த லத்தினும் விண்ணினும் கொடித்திரள் பறப்பக்
கதித்த வெம்பரி வீரர்கள் வேந்தர்கள் கடிதி
னிதத்த நன்மறை முகம்மது நபியுட னெழுந்தார். (110)

சின்னம் பூரிகை பேரிகை தவில்பறை திடிம
னின்னி யம்பல முழங்கலிற் புவிசெவி டடுப்ப
மன்னர் போரணி கலனொளி பருதியின் மலிய
நனை யசல வாத்தொடும் வாழ்த்தொடு நடந்த. * (111)

கொதிகொள் வேலினர் வரிப்புலிக் குழுவெனக் குழுமப்
பதலை யின்புறம் விடுத்தடற் படைகொடு நடத்தி
யெதிரி லான்றனை யொடுமொரு திடரைவிட் டிறங்கிப்
பதுறெ னுநதலத் தாயினர் முகம்மது நபியே. (112)

ஹபீபு தம்பெருஞ் சேனையுங் கவிகையுங் கொடியு
மபூஜ குலுடன் வருபவ ரெவருங்கண் டறிந்தா
ரபூஜ கலபெருந் தானையுந் துவசமு மார்ப்பும்
ஹபீபு வேந்தரும் வீரரும் விரைவிற்கண் டறிந்தார். (113)

திருகு வெஞ்சினக் கடகரி யனையவா திரளை
யரசா கேசரி யெனவரு மகுமது நோக்கி
யிருநி லத்தினிற் றருவெனு மிருகர மேந்திச்
சுருதி வல்லவன் றனையிரந தொருமொழி சொலுவார். (114)

உன்னு முன்றிரு மறைபடி றெனவுமில் வலகி
லெனனை யுந்திருத் தூதனு மலவென விழிவாய்ச்
சொன்ன காபிர்க ளடைந்தன ரிவருட றுணிப்ப
மினனும் வாள்வலி யெனக்கரு ளெனவிளம் பினரால். (115)

இந்த நனமொழி யிறையவ னிடத்திரந் தேத்தி
யந்த ரத்தினி லமரரா மீனொலி யதிரக்
கநது கத்திருந தருமறை பாத்திஹா வோதிச்
சுநத ரப்புயத் துணைவரை யருளொடு நோக்கி (116)

பேத வஞ்சமன் னவர்கடம் பெயர்களைக் குறித்துச்
சோதி மேன்கர மெடுத்திரு நிலத்தினைத் தூண்டி
யேத முற்றுயிர் விடுமிட மிஃதிஃ தெனவே
பூத லம்புகழ் திருநபி வாக்கினிற் புகன்றார். (117)

---

* நடுநிலைத் தீவகமாய் நின்று போரணியாகிய எழுவாய் நடந்த வென்னும் வினைநிலை யுரைத்திற்று.

கருத லார்படு களமிது தலமெனக் காட்டிச்
சுருதி நான்முறை பெருக்கிய நாவினர் சூழ
விருது நீள்கொடி யிருபுற முலவிமேல் விளங்கப்
பருதி போற்பெரும் புகழ்நபி படையணி வகுப்பார். (118)

கடக சித்திர லெறிந்தரும் புலவராக் கதிர் வேற்
பிடிக்கும் வெற்றியஸ் ஹாபிக ளினிற்சில பெயரை
வடிக்கு மாமறை யவரிடத் தினில்வர வழைத்து
நடிக்கும் வெம்பரி யவருளந் தெரிதர நவில்வார். (119)

செறுநர் வெம்படை யடரினு மிவண்சித காமல்
விறல்கொள் விலவினிற் பொருவதல் லதுகதிர் விரிவா
ளுறையை நீக்கலென் னுரைபிறந் ததற்பினென் றுரைத்து
நெறியி னோரிட நிறுத்தினர் நிலைதவ றுதார. (120)

நிகரின் மன்னவர்க் கினிதுரைத் தொருகல நிறுத்திச்
செகத லப்புக ழபூபக்கர் செழுமுக நோக்கி
யிகல றார்தனி முதலவ னுதவி நேர டிவணிற்
ககனி ழிந்தம ராதிபர் வரவுகண் டனறல். (121)

ஓங்கல் போலுமை யாயிர மலக்குக ளுடனே
நீங்கில் பஞ்சகல் யாணியிற் றமனிய நிறத்த
பாங்க ரின்சரு வநதனிர் தநம்படைக் கலன்க
டாங்கி விண்ணிடை யெதிர்ந்தன ரிருவிழி தழைப்ப. (122)

ஏந்த லுருமிரச் சபுறயீ லிவணம ரடுத்து
வந்து நினறனா வெற்றியும் பிடித்தலாள் வடிவு
மந்த நாயக னமக்களித் தனனென வறைநதா
ரிந்து வநதெதிர் பகர்தரப் பகிர்தரு மிறசூல. (123)

அலியை யுட்புகழ் தரும்ஹமு சாவையு மடல்வாள்
வலியும ரிக்குபை தத்தையு முன்றணிவகுத்துச்
சிலைகொள் வெம்பரி வீரர்கள் கணப்பல செறிய
நிலைகொ ளும்படி தாமுமோ ரணியென நின்றார். (124)

அபு ஜகல்மு தலுத்பத்து மவன்மக னெலீதும்
பவுரி வாம்பரி சைபத்தும் பெருபடைக் கடலு
நவுரி பம்பைக ளார்த்திட நாலுகை யாகப்
புவன மெங்கணு நடுங்குற நடத்தினர் புரவி. (125)

முதிரும் பூசல்கொண் டிருபெரும் படைகளு முன்னி
யெதிருங் காலையி லபூஜகல் கரமெடுத் தேந்திப்
பதியி ருந்துற முறைகளைப் பழித்தபா தகரைச்
சதிப டுத்திரை வாவெனத் தனியிராந் தனறல் (126)

எட்டிக் கொண்டெமக் குமக்கென விருக்குமவ் விடத்திற்
சுட்டிக் கொண்டவ ரிவரெனப் பெயர்களை தொகுத்துத்
தட்டிக் கொண்டுகை யேந்திநின் றிரந்தவன் றனைத்தான்
றிட்டிக் கொண்டது போலிருந் தனசொலுந் திறனே. (127)

உறாசி னத்துப் பத்துசை பத்துட னொலீது
முறுகு வெஞ்சின வெகுளியிற் புருவங்கண் ரூரியத்
தெறிக னற்பொறி தெறித்திமை விழிக்கடை தீயத்
தறுகி லாதுமுன் னடத்தினர் துரகதத் தளத்தை. (128)

தேன றிகழ்நதபொற் புயவரைச் செழுந்திற லலியு
மூன்ற தும்புவே லுபைதத்து மனையல ருடலங்
கீனற வேல்ஹறமூ சாவும்வெம படைகொடு கெழுமி
மூன்று பேருமமூவாக ளெதிரின்முன் னினரால். (129)

படாதென் கீழ்த்திசை யிறைபவன சுடுகெனற் படையும்
வடவை யும்வெகுண டெதிர்மலைந தெணவளை கிரியும்
புடவி யுளவிழக் கடல்சுவ றிடப்பணி புரள
விடன றததலரி தாககின வெதிரிந படையும். (130)

முரசு துநதுமி திண்டிம முருடுமல் லாரி
பெரிய காகள நவுரிபூ ரிகைதவில பேரி
யிருவ கைபபட யினுங்கிடந தெழுநதபே ரோதைக்
குரவு ரோப்பெருங் கடலொலி காணகிலா தொளித்த. (131)

பரிக்கு ரத்தினு மாடவர் தாளினும் பரித்துத்
துரக்குந திணவளை யுருளினும் பிறநதவத் தூளி
யெரிக்கும வெங்கதிர் வெய்யவ னிடநதெரி யாம
னெருககி நினறது திசையினும் விசும்பினு நிறைந்தே. (132)

படல தூளிகண் மேகத்தி னிறைநதபஃ றிசையு
மிடிக ளொத்தவின றொலி வீரக ளெதிர்நது
தொடுகை வாளொலி மினனெனப் பலதுடி துடிப்பக்
கடிகொண் மாமழை சொரிநதெனச் சொரிந்தன கணைகள். (133)

பரவை யொத்தன சேனையி னிரைநிரை படர்ந்த
திரைக ளொத்தன வாவுவெம் பரித்திரைச் சுறவின்
விரைவை யொத்தன வேந்தர்க டிரிந்தவை விரிநீ
ரரவ மொத்தன நெருங்கிய படைதரு மரவம். (134)

மிதித்துஞ் சோடணி முகத்தினிற் றாக்கியும் விரலிற்
குதித்த கொட்பினும் வீதியிற் றிரிந்துங்கொன் னுனைவாள்
பதித்த திண்கர வீரர்க ளுடலுயிர் பதைப்பச்
சதித்துத் தாவின திரிந்தன சிலசில சடிலம். (135)

இடியி னொன்றொலி யெனவெழுந் தனுமணித் திமைப்பிற்
படியின மட்டிகி ரிகளெனக் கறங்கெனப் பலகா
னெடுநி லஞ்சுழல் வளியென நினைநதிக் கனைத்துங்
கொடிய வெம்படை யிடைதிரிந் தனசில குதிரை. (136)

வெடித்து மண்டையின் மூளைகள் சொரிபமெல் லிதழைக்
கடித்த பற்பல வுதிராதரக் கனல்விழி கலங்கப்
பிடித்த கையொடும் வினமுறி தாக்குடர் பிதுங்க
வடித்த பந்தெனத் திரிந்தன வாடலம் பிரிமா. (137)

வேலிற் றாக்கினர் விலலினிற் றாக்கினர் விரிமுக்
கோலிற் றாக்கினர் வாளினிற் றாக்கினர் குடங்கைத்
தோலிற் றாக்கினர் சுரிகையிற் றாக்கினர் தூத்திக்
காலிற் றாக்கினா தாக்குறும் போமாக் களத்தில். (138)

உரத்தி னுஞ்செழுந் தோள்வரை யிடத்தினு முயாவேற்
கரத்தி னும்மலா முகத்தினுங் கழுத்தினுங் கரிய
சிரத்தி னும்மிதழ் கறிததிடும் வாயினுஞ் சினமங்
குரித்த கண்ணினு மொழுகின வருவியொத் துதிரம். (139)

கால சூறையி னொத்தெதிர்ந் தெழுசூர கதத்தின்
மேல றுநதன வளைமுக மறுநதன மிதிகா
லுல றுநதன காயத்திற் குருதியி னனைநது
வால சூரிய னெனநின்ற வீரர்கை வாளால். (140)

காந்து வெவ்வழ லெனப்படைக் கலனகளைக் கடிந்து
போநத மள்ளாக ளாவிபை விசும்பிடை போக்கிப்
பாய்நத மாக்களி னுரங்களை யிருவகிா படுத்தி
வேநதா டாரயினும புகுந்தன வயவாகை வேல்கள். (141)

கேட கத்தையுந் தாங்கிய காத்தையுங் கிடந்த
சோடி ணைப்படு மிரும்பையு முரத்தையுந் துளைத்துள்
ளோடு றப்புகுந் திருந்தவல் லுயிரையு முருவித்
தாடி யப்புறம் போயின வீரர்கைச் சரங்கள். (142)

கொடியொ டிந்தன விரிகுடை நுறுங்கின குணிலா
லடிப டும்பறை பேரிகை யுடைந்தன வரசர்
முடித கர்ந்தன சோடுக ளுதிர்ந்தன மூரித்
தடமு றுங்கரத் தேந்திய வீரர்கைத் தடியின். (143)

மூசி வண்டுடைத் தும்பையந் தொடையலை முடித்துத்
தூசி நின்றவர்த் துணித்துவெங் கொடிப்படை துரத்தி
வாசி யின்குழுக் குறைநதிடப் பிணக்குவை மலிய
வீசி நின்றனர் சிலசில திறல்வய வீரர். (144)

வாடை கொண்டுறும் பரியொடும் வீரரை மாய்த்து
நீடும் வேல்கெட விடுத்தவ னிலத்திடை கிடந்த
ஆடல் வெம்பரித் தாளெடுத் தொருகையி லாக்கிச்
சாடு கின்றனன் வயவரை யதிலொரு தலைவன். (145)

வெற்றி வாட்கணை பொருதழிந் திடலும்வெஞ் சினத்தின்
முற்றி நின்றனன் கண்டொரு திறலவன் முன்னி
யிற்று வீழ்ந்திடத் தோளினை வாளினு லெறிந்தா
னற்ற தோளெடுத் தவன்றனைச் சிதைத்தன னவனே. (146)

அடுத்துப் பிற்புறத் தூணியிற் கிடந்தவம் புனைத்துந்
தொடுத்து மள்ளரைத் துணித்தறத் தொடுசர மிலவான்
மடுத்து மார்பகங் கிடந்தவம் பனைத்தையும் வாங்கி
விடுத்து நின்றனன் சிலைகுழைந் திடவொரு வீரன். (147)

பம்பு மாக்கடற் றனைக ளிரிதரப் படுத்தி
வெம்பு மாத்திர ளொன்றொடொன் றடித்தற வீழ்த்திக்
கம்ப மூடெறிந் திருகவுண் மதசலங் கரைக்குந்
தும்பி யிலலெனச் சலித்துநின் றனனொரு சூரன். (148)

கூறும்வெங்கணை யனைத்தையுந் தொலைத்துக்கூற் றுடைவாள்
வாரி சச்செழுங் கரங்கொள வெகுண்டொரு வயவ
னூர மார்பினில் வேல்கொடு தாக்கின னவனை
வீர வேலுற *நடந்துகொன் றனனொரு வீரன். (149)

---

* கரங்கொள வொருவீரன் மற்றவனை நடந்து கொன்றன னென்க.

பாரின் வெங்களத் திடைவெறுங் கயனெனப் பரியை
யூரவிட் டடர்ந் தெதிர்த்தனை வெகுண்டுவண் டுறுக்கி
மூரி வெம்பரி யுடனவன் வாயினு மூக்குஞ்
சோரி கொட்டிடப் புடைத்தன னதிலொரு சூரன். (150)

அச்சு வத்தினும் வீரர்கள் புயத்தினு மழுந்தத்
தச்ச வாளியும் வேலும்பைங் குருதிகள் சாய்ப்ப
விச்சை யின்களத் திடனறத் திரிந்தவ ரெவரு
மிச்சி லென்றுறை வாள்கழற் றிலனொரு வீரன். (151)

நீல மாமுகிற் றுணியெனுங் கேடக நிரையின்
பால்பு குந்துட றலைகர மிருவகிர் படுத்திக்
கோலி நின்றமன் னவன்றனை யெதிரினிற் குறுகி
வேலி னாலெடுத் தேந்தின னொருவய வீரன். (152)

பெய்யும் வில்லிதென் மல்லின ரெவரெனப் பேசி
யைய மற்றவன் றனையொரு வீரன்சென் றடுத்துச்
செய்வ தீதென வீழ்த்தினன் சிரத்தினைத் திருகிக்
கையி னேந்திநின் றாடினன் னெதிரமர்க் களத்தில். (153)

ஆவி யோசின மோபெரி தெனவறி கிலனபோர்த்
தாவிப் போக்கினன் கரத்தொடு மிருதுணைத் தாளும்
பூவின் மேற்கிடந் தார்ப்பொடும் வயவரைப் புகழ்ந்து
கூவி யோய்ந்திலன் போர்வரு கெனவொரு குரிசில். (154)

முடக்கு வாற்பகு வாயரி யேறென முனியுஞ்
சுடர்க்கண் வேங்கைக ளெனச்சில வீரக டுறுமிக்
கடக்கும் வெற்றியி னினையன வமர்செயக் கடிதி
னுடைக்கும் வெம்பரி வீரருக் காசவந் துற்றா. (155)

கால மாருதப் பரியினை விரையினிற் கடவி
யால காலமொத் தாசரைப் பிணக்குவை யாக்கி
மேலுந் தாக்கிவெம் பரியினந் தரையினில் வீழ்த்திக்
கோல மார்கதிர் வாளினிற் கூறுசெய் தனரால். (156)

கருக்கொள் காரிடி யெனக்கரு தலர்கள்கட் டழிய
முருக்கும் வேளையுக் காசகை யாயுத முறிந்து
செருக்கொ டுந்திரிந் துறவிய பரியினைத் திருப்பி
யருக்க னொத்தநம் முகம்மது நபியிடத் தானார். (157)

பால டுத்தவுக் காசசெம் மலர்முகம் பார்த்தோர்
கோலெ டுத்துநந் நபியவர் கரத்தினிற் கொடுப்ப
மால டுத்தகைக் கேந்திய வுடன்வடி வாளாய்ச்
சூல டுத்தமை மின்னினுஞ் சுடரிலங் கியதே. (158)

மன்னர் மன்னபி கொடுத்தகைக் கோலொரு வாளா
யிந்நி லம்பெற விருந்தகைக் கரத்தினி லேந்திப்
பொன்னி லங்கிய குசைப்பரி யொடும்படைப் புகுந்து
முன்னர் தாக்கினு மும்மடங் கெனமுருக் கினரால். (159)

நீளும் வேலறுந் தனகதை யறுந்தன நிருபர்
தோள றுந்தன சோடருந் தனதுர கதத்தின்
றாள றுந்தன கேடக மறுந்தன தலைவர்
வாள றுந்தன குடைகொடி யறுந்தன மாதோ. (160)

மாறு பட்டவர் சிரத்தினு முரத்தினு மலிய
ஆறு பட்டன வுதிரங்க ளேற்றெடுத் தொழுகிச்
சேறு பட்டன நெடுநில மணியொடு திறனும்
வேறு பட்டன பட்டன காபிர்கள் வீரம். (161)

தலைகு விந்தன கரத்துணி குவிந்தன தரியார்
சிலைகு விந்தன படைக்கலங் குவிந்தன திரளி
னுலவு வெம்பரி யுடனடல் வேந்தர்க ளுடல
மலைகு விந்தெனக் குவிந்தவுக் காசகை வாளால் (162)

உக்கி ரப்பரி நடவிவெள் ளுருமென வுரறிக
கைக்க டுத்தலை விதிர்த்துவெங் காபிர்கள் சூழ
மிக்க சைபத்தென் மேருறிய விறலரி வீரன்
புக்கி னன்றிரு நபிதுணை யவர்பொரு மிடத்தில். (163)

அடர்ந்து சைபத்து வரவுகண் டடலரி ஹம்சாத்
திடந்த ருங்கதிர் வாளினை நோக்கிக்கண் செவந்து
தொடர்ந்து சூறையிற் றிரத்துவெம் பரியினைத் துரத்தி
யிடந்த ரும்பெருங் களத்திலங் கவனமுன் மெதிர்ந்தார். (164)

மாறி லான்றிரு நபிக்குறைத் திடுங்கலி மாவை
வேறு கொண்டனை புந்தியற் றனைமுனம் விதித்த
வீறு நாளிலை யோவினை சூழ்ந்ததோ வெதிர்ந்தாய்
கூறு கூறென நகைத்தவன முனங்குறு கினரால். (165)

நீங்க ருங்கிளை யிழந்துமுன் னெறிநிலை ததறிக்
கிதீங் னுட்படும் பதகவென் றிருவிழி செவப்ப
வோங்கும் வாளெடுத் தசைத்திகழ் கறித்துவண் டுறுக்கிப்
பாங்க ரிற்கரங் கெனத்திரித் தனன்வயப் பரியை (166)

வரவு வெம்பரி யிழந்தெனை யொருதரம் வணங்கிச்
சேவ கத்தினைத் தவிர்பிழை யலவெனத் தீங்கி
னேவல் கொண்டனை விடுத்தபொய் முகம்மதி னிடத்திற்
போவ தற்கிட மிலைபிறந் தனைநொடிப் போதில். (167)

ஈது முத்திரை யறிகென சைபத்தென் பவனங்
கோதி நின்றனன் கேட்டனல் வெகுளியுற் றனைப்போல்
வாது ரைப்பதின் ரமாறி குவனென வகுத்துக்
காதும் வாளையுந் தோளையு நோக்கிக்கண் செவந்தார். (168)

கொதித்த கண்ணெரி தவழ்தரக் கொடுங்கதிர் வாளன்
மதித்த மன்ஹமு சாதிரு மணிமுடி யிலக்கா
யெதிர்த்துத தாக்கினன் ருக்கலுங் கேட்கத் தேந்தி
யதிர்த்து வீசினா வீசலுந் தாங்கின னவனை. (169)

கையில வேலெடுத் தெறிந்தனன் கதிர்முடி ஹமுசா
மெய்யிற் சோட்டினிற் ருங்கின கடுப்பினில் வெகுண்டு
செய்ய வெங்கதை யெடுத்தடித தலும்படச் சிதறி
யைய மற்றற நொறுங்கின கேடகமன்றே. (170)

கட்டு வாம்பரி யினைப்பரி முகத்தொடுங் கடவி
வெட்டு வாரெறி வார்மணி வேலினை வேலிற்
றட்டு வார்புடைப் பார்திரி வார்தடக் கதையா
லொட்டு வார்திறஞ் சாயத்தில ரொருவருக் கொருவர். (171)

மடித்து வாயிதழ் கறித்துசெம் மணிக்கதை யோங்கிப்
புடைத்த னன்ஹமு சாதிருக் கொடிவிலாப் புறத்தீ
விடிக்கு நேரெனு மடியினிற் சினந்துவா ளெறிந்தா
ரடற்ப ரிக்குசை யொடுமவன் கரமறுந் தனவால். (172)

கரந்த றிந்திட வோங்கினன் மறித்துமக் கதையு
முரந்தி கழந்தவன் சிரமும்பொற் சோடட னுடலும்
பரிந்த பக்கரைக் குதிரையு மிருபகுப் பாக்கி
விரிந்த பாரிடத் தினிற்கிடத் தினரொரு வீச்சில். (173)

வீரன் கைபத்து மடிந்தன னெனும்வெகு ளியினாற்
கோர மாமத காடவெங் களிறெனக் கொதித்துக்
காரின் மின்னெனு மயிலொடும் பரியினைக் கடவிச்
சாரும் வெம்படை யதிர்தர வொலீதுவந் தனனால். (174)

பச்சி ரத்தஞ்செஞ் சேற்றழ றெழநெடும் பாரின்
வச்சி ராயுதங் கொடுவரு மொலீதுவ மறுக
வச்சு வத்தொடு முதன்முறைச் செருவினை யாட்டுக்
கிச்சை யினபடி கிடைத்ததென் றலியும்வந் தெதிர்ந்தார். (175)

கலின வாம்பரி வீரரி லெனதுகை யறிய
வலிய வஞ்சக முகம்மதே யெதிரீவால் வேண்டுஞ்
சிலையுந் தண்டமுங் கட்கமுந் தரித்தொரு சிறுவ
னலிவி லாதிவ ணேவெதிர் பவனென நகைத்தான். (176)

படைக்க லத்தொடு முனையும்வெம் பரியையும படியி
னடித்து வீழ்த்துவ தரிதல வெதிர்த்தனை யாயிற்
பிடித்து நோக்குவ திலையுன துயிர்க்கொரு பிழையா
யிடுகக ணெய்துமுன் சாரிட துறைகவென் றிசைத்தான். (177)

அறிவின் செய்வினை தவிர்வினை யறிகிலா தவரே
சிறுவர் பூவினிற் சிறுவரா யிருந்துஞ்செவ் வியதீன்
முறைமை நின்றநல் வணக்கமு மொழுக்கமு முதிர்ந்தோர்
மறனு மாண்மையும் பெரிதென அலிவகுத் துரைத்தார். (178)

தருமமென்றுரை வழங்கின னம்மொழி தனைநீ
வருமமென்றுகொண் டிகழ்ந்தனை யுனைவரைந் திறக்கி
யெரிமு ணுக்குவன் காண்டியொல் லையிலென விசைத்தான
பொரியுஞ் செநதழல் செழுமிய குழியிடை புகுவான. (179)

நாய கன்றிருத் தூதெனு முகம்மது நபியைக்
காயும் மஞ்சக் கொடியவனென றுரைத்தகட் டுரைக்குந
தீயி னிற்புகுத் திடுவனென் றெனைச்செறுத் ததற்கும்
வாயினைக்கிழித் தெறிவன்கண் டறியென வகுத்தா. (180)

இசைத்த வாசகங் கேட்டலு மிருவிழி கனலக்
கசைத்த லம்பொடி படப்பரி யுடைததிதழ் கடித்து
விசைத்தி டக்காக கேடகங் குலுக்கிவெங் கதாவா
ளசைத்தெ திர்ந்தன னுடல்வெம் பரிப்புலி யலியை. (181)

எறிந்த வாளலி கதையினிற் றுக்கவெண் பகுப்பாய்
முறிந்து வீழ்ந்தது மற்றொரு வேல்கொடு முனிந்து
பறிந்து போம்படி விடுத்தனன் பன்மணிக் கதிரி
னிறைந்த கேடகத் தெற்றவு முற்றதங் நெடுவேல். (182)

அயிலுங் கட்கமு மறுந்தன வெனமன மழுங்கி
யெயிற துக்கிநக் கடித்துநின் றவன்றனை யெதிர்ந்து
பயிலும் வெம்படைக் கலனுள வெனிலினம் பாரொன்
றியற ருந்திரு மறைநபி மருகர்நின் றிசைத்தார். (183)

உற்ற வாசகங் கேட்டலும் வலியதண் டோங்கிச்
சுற்றி விட்டெறிந் தனனபிடித் திடக்கையாற் சுழற்றி
மற்ற வன்புயத் தெறிந்தனர் வனை துடர்ச் சோடு
மற்றி றுந்ததத் தண்டமு நுறுங்கிய தன்றே. (184)

பின்னு மோர்வடி வாளினைக் கரத்தினிற் பிடித்து
மன்னு வாம்பரி யலியின்மே லீட்டினன் மறுத்துங்
கொன்னு னைக்கதிர் வாளினிற் றுங்கினர் கொதித்துச்
சின்ன பின்னங்கள் படுத்திடப் பரியினைத் திரித்தார். (185)

ஒலிக்கும் வெம்பரி துரத்திட வூழிவெங் காலு
மலியும் வெவ்வழல் விடையு மெதிர்ந்தன மலைந்து
கலியின லும்படைக் கலத்தொளி திசை திசை கதுவப்
புலனு றைந்தவ ரதிஜூபித் திடும்படி பொருதார். (186)

கன்றி ராமனத் திறத்தவ ரிடுபடைக் கலன்க
ளொன்றோ டொன்றெறிந் தழற் பொறிதெறித்திடவொளிவரும்
வென்றி வாளலி செழுங்கர விசைதரும் விரைவிற்
குன்று போல்வீழ்ந் தவிந்தன னெலீதெனுங் கொடியோன். ()

கலின வாம்பரி மிசைகாக் கடுத்தலை யுடனு
மொலிது வீழ்ந்தது கண்டுத்து பத்தெனு முரவோன்
புலியெ னும்படி சினந்தெழுந் தடற்புரி புடைதது
வலிய வீரர்கள் டொருமமாக் களத்திடை வந்தான். (188)

உதபத் தென்னுமக் கொடியவ னடந்தவுக் கிர்த்தி
னெதிரெ ழுந்துமை தத்தெனும் புரவல ரேகிக்
கதிர்கொள் வாள்கொடு தாக்கினா கதையினிற் பிடித்து
முதிரும் வெங்கதி ரயில்கொடு முனிந்துமோ தினரல். (189)

அள்ளி லைக்கதிர் வேலினை வாளினு லறுத்து
வள்ள ருக்கலுந் தாக்கினன் செழுங்கதிர் வாளால்
விள்ள ரும்படி யொருவருக் கொருவர்வாள் விதிர்ப்பக்
கொள்ளி வட்டங்க ளெனத்திரிந் தனகுர கதங்கள். (190)

காற்றை யொத்தன விசைவனிற் றுக்கினிற் கருவா
னேற்றை யொத்தன வெகுளியி னெரியையொத் தனவாற்
சீற்ற முட்கொடு மெழுந்தன பறந்தன தெரிந்து
சாற்றும் பேரெவ ரிருவர்தங் குதிரையின் சாரி. (191)

சக்க ரத்தினும் வேலினும் வாளினுந் தாக்கு
முக்கி ரத்தினி லிருவர்மெய் யினுமொழு குதிரங்
கக்கி நின்றன ஊறுக ளிடனறக் கலிப்ப
மிக்க வெஞ்சமர் விளைத்தன ரிருவரும் விரைவின். (192)

விரைவி னிற்பெரும் போரினை யிருவரும் விளைப்ப
வரியெ னுநதிற லவியும்வெம் பரிஹறமு சாவு
மொருநொ டிக்குள்வந் தடுத்தன ருத்பத்தென் பவனை
யுருநி லத்திடை வீழ்த்தின ருதிரங்க ளழிய. (193)

வேந்தர் மூவரு மிறந்திட அபூஜகல் வெகுண்டு
காந்து வெங்கனல் விழியெரி தாக்கரம் பிசைந்து
மாய்ந்தி டும்பெருங் களத்திடை தீனவர் மறுகப்
பாய்ந்தி டும்புலிக் கூழுவென நடத்தினன் படையை. (194)

ஆட லர்பரி யொடுந்திறற் பரிகள்வந் தடர்த்த
நீடும் வேலுடன் வேலவ ரடர்த்தனர் நெருங்கிச்
சாடும் வாளுடன வாளின ரடர்த்தனர் தாக்கிக்
கோடும் விலலுடன வில்லின ரடர்த்தனர் குழுமி (195)

விடுகை யம்பினுங் கதையினு மழுவினும் விடமார்
நெடிய வேலினுஞ் சக்கரத் தினுமுட னெரியப்
படுக வண்கவி னெறியினு முரத்தினிற் பதியத்
தொடுச ரத்தினும் விசும்பினை யிடறைத் தூர்த்தார். (196)

வன்பி றந்திடச் செலுந்திறத் தவாசெழி மாயிற்
பொனபி றநதபன் மணிசிறி திமைத்தன பொருபா
ரின்பி றநதசெந் தூளியி னிடைபல கோடி
மின்பி றந்தெனப் பிறந்தெனவாளொளி விளக்கம். (197)

பெருகும் பல்லியத் தொலிப்பினும் படைக்கலன் பிணங்கி
மருவு மார்ப்பினும் வருஞ்சிலைக் கலிப்பினும் மலிந்த
புரவி யார்ப்பினும் வீரர்க ளார்ப்பினும் பேரி
னிருதி றத்துமன் னவர்களுந் தலைமயங் கினரால். (198)

முருகி ருந்தபங் தொடையலுஞ் சருவந்த முடியுங்
கருகும் வட்டவொண் பரிசையு மணிபல கலனும்
விரித ருஞ்செழுந் துகிலுங்கஞ் சுகியும்வெம் பரியும்
குருகி நீரினி னனைந்துசெந் நிறத்தினைக் கொடுத்த. (199)

வில்லின் வீழ்த்திட மாய்ந்தனர் சிலர்சிலர் வெகுண்டு
மல்லின் மாய்ந்தனர் சிலர்சிலர் வேல்கொடு மார்பிற்
கல்லி மாய்ந்தனர் சிலர்சிலர் வாக்கினிற் கலிமாச்
சொல்லி மாய்ந்தனர் சிலர்சிலர் சோரிவெங் களத்தில். (200)

படர்ந்து கொன்றனர் சிலர்சிலர் ரிழிந்துவெம் பரியை
நடந்து கொன்றனர் சிலர்சிலர் நடையுமற் றொழிந்து
கடந்தி ருந்துகொன் றனர்சிலர் சிலர்மனங் கனன்று
கிடந்து கொன்றனர் சிலர்சிலர் வீரர்கள் கெழுமி. (201)

அண்டர் நாயகன் மறைநெறித் தீனிலை யவரு
மிண்டு பேசிய அபூஜகல் காபிர்வெம் படையு
மண்டு போரமர் விளைத்திட முகம்மது நபியோ
கண்டு வேகமற் றண்டெனச் சிவந்தகட் கட்டைகள (202)

வேறு.

சேவைசெய் தமரா நிதமடி பரவுஞ் செவ்வியர் கருத்தினை யறிந்தின், றேவலுக் கியைவனியானெனப் புடவியிருவிசும் பிடத்தவர் கேட்பக், கூறிய துணர்ந்து மாமறை யளித்த கொற்றவன் றளைப்புகழ்ந் தேத்தித, தாவருமேகந் தனைக்கடிந் துலவுந் தடப் பரிவிடுத் திறங்கினரால். (203)

திருமொழிக் கியைவ னியானெனப் பணிந்து செப்பியபுடவி மண்ணதனி, லொருபிடி கரத்தி னெடுத்தினி தேந்தி யுடையவனறிருமறை யுரைத்துப், பொருமமாக் களத்திற் காபிரை நோக்கிப் புழுங்கிய சினத்தொடு மெறிந்து, குரகதத்தேறி வேல்வலந் தாங்கிக்குரைகடற் படைநடத் தினரால. (204)

எறிந்தமண் டாவித் திசைதிசை செருகி யிருவிலம் பிடனறப் பரந்து, செறிந்த வெங்களத்திற் காபிர்கள் முகத்துஞ் செவந்தகண்களினும்வா யினும்போய், மறைந்தன விழுந்து வலிகளுங் கெடுத்து மண்டின வதிற்றலை மயங்கி, யறைந்தலேபே ரொலியுஞ் செவிகளிற் ரேன்று தறப்பவந் தறிவழிந் தனரால். (205)

பொருப்பிடை கிடந்த வரிப்புலிக் குழுவும் பொருவரா மடங்கலேற் றினமு, மொருப்படத் திரண்டு நடந்தெனத் தீனேரியாவருமொருமுக மீண்டத், தெரிப்பருந் தொகுதித் தலைவரும் பரியுந்திரளுறுஞ் சேனையு மிடைந்து, மருப்புடைக் கரட மதகரியனை யமன்னர்கண் முறிந்தனர் மயங்கி. (206)

நிரைநிரைப் பரியின பிணக்குவை மலிந்த நிருபர்க ளுஉற்குறை மலிந்த, விரிகதிர்ப் பூணு மாரமு மலிந்த வெற்றிவெம் படைக்கலன்மலிந்த, குருதியு மலிநத குடாத்துடர் மலிந்தகொற்றவர் மணிமுடிமலிந்த, முரிதருஞ் சிரசின் மூளைகண் மலிந்த மொய்த்தவெண் ணிணங்களு மலிந்த. (207)

முரசமு மலிந்த காகள மலிந்த முரிவெம் பேரியு மலிந்த, பரிகளு மலிந்த வாவணைத் தொகுதிப் பாசறை முழக்கமு மலிந்த. திரைகடலெனும்பே ரோதையு மலிந்த வீரர்கள் சேவக மலிந்த, அரசருமலிந்த வாகையுந் திறனு மாண்மை மலிந்தன வன்றே. (208)

சம்பினம் பரந்த வோரியும் பரந்த தசையினுக் கொன்றொ டொன்றடர்ந்து, வெம்பிய ஞமலிக் குளங்களும் பந்த விசும் பிடத்திடன்றநெருங்கிச, செம்பருந தினமுஞ் சகுந்தமும் பரந்ததிரள் கருங்கொடிபல பரந்த, பம்புவா ரிதிபி னலைகள் பரந்த பாசறைப் பெரும்பறந்தலையின். (209)

வரைகளி னேறிப் பொதும்பரிற் புகுந்து மறைந்தனர் சிலரயிலெறிந்து, புரவிவிட் டிறங்கி முள்ளுடை நெடுங்கான் புகுந்தனர் சிலர்பிணக் குவையி, னிகைகளிற் பதுங்கிக் கிடந்தனர் சிலர்தந் நினைவழிந்துழன்றவர் சிலரா, லெரியழற் பாலை யிடந்தொறு மோடியினைப்பினி லிறந்தவர் சிலரால். (210)

தெறுகளத் துயிரை முதலிடு பவருந் திசைதிசை சிலவழிந்தவரு, முறுகொலைக் களநின் றாபுகுந தவரு மன்றியொண் சிலையயில் கதிர்

வா, ளெறிதா வெதிர்ந்த தலைமைமன் னவரினெழுபது பெயரினைச் சினந்து, மறுவது மறைநந் நபிதமக்குடைய மன்னவர் பிடித்தனர் மாதோ. (211)

அடிநிலந் தெரியா முகம்மதுநபியின் பிதாபின்னை அப் பாசையுநிகரா, வடிவிறு மபித்தா லிபுதருமலிமுன் வந்தவுக் கபிலையுங்கதிபி, னடவுவாம் பரியா ரிதுதரு திருச்சேய் நௌபலென் பவனையு முன்னர், பிடிபடும் பெயரி னிவரையு நபிமுன் பிடித்துவந் தனர்வய ரவந்தர். (212)

பிடித்தமன் னவரை முன்னுற நடத்திப் பெரும்படை யனைத்தை யுந் திரட்டி, முடித்தவெம் போரிற் காகள முழக்கி யுறைந்திடும் பாசறை முன்னி, யடித்துடைத் திறந்த தீனவர் பதினன் கமருறுந்தலைவர்க டடையு, மெடுத்தினி தடக்கித் தொழுதிருந் தனர்மேலிரவியு மறைந் தன னன்றே. (213)

விடிந்தபின் காலைக் கடன் கழித் திறசூல் விரைவினி லிபுனு மஸ்வூதைத் திடந்தரு மொழியா லழைத்தரு கிருத்தித தீயவனபூஜகுலென் போ, னுடைந்தொழு கினனோ வலதிறந் தனனோ ஆறுபட்டிடைந்தனனோவென், றிடந்தரும் பெரும்பா சறையினுங் களத்துந் தெரிந்திவண் வருகவென் றிசைத்தார். (214)

தூய்வ னிறசூல் நபியினி துரைத்த சொல்லினைச் சிரசின் மேலேற் றிச், சீயமொத் தெழுந்து வரிப்புலி யனைய தீனவர் நால்வருகளுடனு, மாயிரு விசும்பும் புவனமும் புகழார் மன்னவ ரிபுனு மஸ்வூது, போயி னர் பறவைப் பந்தரிற் கிடந்த பொங்குசெங்குருதி வெங்களத்தில்.()

மெய்புழன் றிறந்து கிடந்தவ ரொருபால் விலாப்புடை திறந்தவ ரொருபாற், கைபிழந் தரிகிற் கிடந்தவ ரொருபாற் காற் றாணையிழந் தவ ரொருபான, மையு முஞ் சிரசற் றுறைந்தவ ரொருபான் மணிக்கு டர் சரிந்தவ ரொருபம், லெய்யும்வன் சரங்க டுளைத்திடக்குருதி யிழிந் திருந் திறந்தவ ரொருபால். (216)

காலினை மடக்கி வாயித ழதுக்கிக் கவ்விவெள் ளெயிறுகளிலங்கப் பாலுறும் பரியின் குலம்பல வீழ்த்திப் படருயிர் விசும்பினிற் படுத்தி, மாலுறுங் காட மதமலை துளைக்கும் வயிரவொள் வேலினையூன்றி, மே லுறு மமருங் கொலவனென பவனபோ லிருந்த பல்வீரருங் கண்டார்,

குற்றுடைக் கதிர்வாள் நூரகத வயிற்றிற் கிளித்திடச்சாய்ந்தவண் கிடந்த, முற்றிய முனையின்றிறத்தவ னலகைக் குலத்தொடு மருந்திட முரணிப், பற்றிவெங் காத்தாணிணைக்குடர் பிடுங்கும் பான்மையொத் தனன்பல நோக்கி, வெற்றிவெண் மலர்த்தார்ப் புயத்தவர்மகிழ்ந்து திரிந்தனர் வீரவெங் களத்தில். (218)

கந்துகக் கழுத்தை முரிதர நெருக்கி யெறிந்தவன் களனறக் கவப் பட், டிங்தெனு முகப்வா ளிலங்கிட வவண்சாய்ந் திருந்திறந் தவன்றனை நோக்கி, தந்தின னலனென் றிகலனுஞ் சுணங்கு நடந்தருந் திடக்கடி தொதுங்கிச் சிந்தையின் வெருவுற் றடிக்கடி நோக்கித் திரிவனபலவுங் கண் டனரால். (219)

எள்ளிட விடமற் றளந்தறி யெண்சா ணுடம்பினி மிடனறநெ ருங்கி, யள்ளிலை நெடுவா ளிருளுறைந்திருந்த ஆடவர் தோற்றமங் கடைந்த, வள்ளுகிர் சுணங்கு மிகலனுந் திரிந்தவிடத்தின் முண் மாவும் வங் திணங்கி, யுள்ளுறுங் களத்திற் கிடப்பன போன்றுங் கண்டனர் பலபல வொருங்கே. (220)

பறவைகள் குலவுஞ் சிறைநிழற் பந்தர்ப் பக்கரைப் பரியணை சாய் ந்து மறமுதிர் சினக்க ணிமைப்பில விழித்து மணிவிரன் மீசையிற் சேர்த்திக், குறைவற வலகை நடம்பல பயிலக் கொடுங்களக் குருதிநன் னிலத்தி, னிறையுயிர் போக்கியர்சுவீற்றிருந்த விடங்களு மிறைந்தன கண்டார். (221)

இடருறு மிகல னென்று டொன்றிகலி யிரைத்தெழுங்கு ரைப் பிணக் கஞ்சித், துடர்படுங் குடர்வாய்க் கவ்விவின் னிடையிற்சுழன் றெழும் பறவையின் ரேற்ற, மடிபடுங் கொடிய மாருத விசையினுயி டைப் புரிமுறுக் கறுந்து, விடுநெடுங்கயிறும் படமுமொத் தெழுந்து விளங்குதல் மலவுங்கண் டனரால். (222)

மல்லுயர் திணிதோள் விடலைக டாங்கும் வட்டவொண் கரிய கேட கங்க, ளெல்லையி னிழிந்த குருதியிற் கிடந்தங்கிலங்குவ தெழிறாச் செவந்த, வல்லிசே தாம்பற் றடத்திடை மிதந்த வாமையின் புறமென வொளிர, வில்லணி தடக்கை மறத்தில்தீன் விளைத்த வெற்றிமன்னவா கள்கண் டனரால். (223)

அலர்நகை முகங்க வெண்ணில பரந்து கிடந்திடுங் குருதியஞ் சாற்றி, னிலவுவெண் கவிகை யிடையிடைபதிந்து நிறைந்திலங்குவளை பைந் தடத்துட், பலவிதழ் விரித்துச் செந்நறுந் துளிர்ந்த பதும மென் சாட்டிடை புகுந்து, குலவிய வனத்தின் குலங்கள் வீற்றிருந்த கோல மொத் தனவுங்கண் டனரால். (224)

அரசர்க ளணிந்த முத்தவெண் மணிக ளுதிர்ந்துபைங் குருதியஞ் சேற்றில், விரிகதிருமிழ்ந்து கிடப்பன வென்றாழ் விழுங்கிய செக்கர் வானிடத்திற், பெருகிய தாரா கணம்பல கோடிபிறந் தொளி விரிப்பன போலுந், தெரிதர நோக்கி யடிக்கடி மகிழ்ந்து திரிந்தனர் சிலவய வீரர்.

கங்கமுங் கொடியுஞ் சகுந்தமு மோரிக் கணங்களு மிகலனுஞ் சணங்குஞ், செங்கலத் திடைகுற் றுயிருட லருந்தத் தெறித்திடுங் குருதியிற் றிரிவ, வெங்கதிர் நெடுவே லூறுகள் படமெய் வருந்திட வீரரைப் போன்று, மெங்கணும் பல்கண் டடுபடைக் கலன்களிடு நெடும்புலத்திடை திரிந்தார். (226)

ஏற்றிய சிலக்கை கறித்திடப்பறிபட் டெழுந்தவம் பூறுபட்டி டைந்து, சேற்றிடைகிடந்து மூச்சொடு முனங்கித் திகைப்பனவோ ரிகழ் பலவு, மாற்றரும் வீரா கதைபடத் தெறித்த மண்டைகண் மூளை யின் வழுக்கிக்காற்றுனை முறிந்துபயப்பயத்திரியுநரிக்குலம் பலவுங் கண் டனரால். (227)

ஒலிதெனும் வேந்த னிறந்தபேரிட முமுக்குபா வீந்தவெங்கள மும், பலியென வுச்சத் திறந்திடு மிடமும்சைபத்து படும்பறந் தலையும் நலிதலில்வீரச் செருக்கினி லுமையா நடந்தெதிர்ந் திறந்திடு மிடனும், வலிதருமுமாரு விறந்தசெங் களமும் வகுப்புற வினிது கண்டனரால்.

மறமுதிர் வீரர் தாண்மடித் தெதிர்ந்து மண்டமர் கடந்து சூழ்ந் திறந்து, புறமிடங் குவிய வுறவின ரெவரும் போர்க்கடன் கழித்த வண் கிடப்பக், குறையுயி ருடலங் குருதிகொப் பளிக்கக் கொடுஞ் சமர் பல விளை யாடித்தெறுகள நாப்ப ணபூஜகலகிடப்பத் தீனவரினிது கண்ட னரால். (229)

கண்களிற் சேப்பு நுதலினில் விசர்ப்புங்கரியமை மீசை யின்மு றுக்கும் புண்பட விதழிற்பற்பல் காற்சினந்து பூட்டிய கொடிய வெள்ளெயிறு, மண்பட வொழுகுங் குருதியினனைவும் வடுப்படு

முடலமு முயிர்ப்பும், பண்பொடுங் தெரியக் களத்திடை கிடந்தபா
தக னிடத்திலுற் றனரால். (230)

செல்வமுந் திறனும் புறத்தளித்தனையே தீவினைப்பயிர்விளைத்
தனையே, நல்வா மனைத்தும் பாழ்படுத் தினையே நடுநிலை தனைத் தவ
றினையே, பல்பொருட் சுவனப் பதியிழந்தனையே பாழ்ங்குழிக் குடல்
வளர்த் தனையே, சொல்விதம் விடுத்துப் பவமெடுத் தனையேசூழ்வினை
தனையறிந் திலையே. (231)

வீரவெங் களிறே யடலரி யேறே விறறபெருஞ் சமர்க்குறும்புலி
யே, பாரினிற் சிறந்தமக்கமா நகரிற் பரிவுறும் வீரருக்கரசே' காணக்
குரிசின்முகம்மது நபிதங்கட்டுரை மறைக்கலிமாவை, யீரமுற்றிசைந்து
மனத்தினிலிருத்தா திடும்பெனு மிடர்விளைத் தனையே. (232)

மேயின் கலிமா வுரைத்துறுந்தீனை விரும்புவை யெனின் முகம்ம
தும், பாலினிற்கொடுப்போய்ப பருவாறவிர்த்துப் பரிவுறுதலைமை
செய்குவரீ, கோலிய பகையை விடுத்துநன் குரை யைக்கூ றெனக்கூற
லுங் கொதித்து,வாயெயி றிலங்க நகைத்தட லிபுனுமஸ் வூதுளம் வெகு
ண்டிட மவுல்வான. (233)

இறுதியிற் கலிமா வுரையென வெதிரி லுரைத்தனையிழிந்த சாதி
களிற்,றொருவரின் குலத்துக் குறமதி யெடுத்துச் சொல்லினை யுனைவி
சும்பேற்றப். பெறுமவ ரிலையென னிடத்தினிலின்று மியாவர் தானெ
ன்னிடிப பேசார், தெறுசொலை விளைத்தி யெனவிழி சிவந்து செவி
க்கொளா வசையொடு முரைத்தான். (234)

வசைமொழி யுரைப்பக் கடுதினில் வெகுண்டு மறுங்குடைவாளினை
வாங்கி விசையுடன் முடி தனைப்பிடித் தீழ்த்து விறற் கொழுற்கரத்தி
னிற் சுற்றி, யசைவுறுஞ் சிரசை யறுத்தவே றுக்கி யவனுடனெழுவர்க
டமையும், பசைபறும் பாழ்ங்கூ வலினிடை படுத்திவிட்டனர் பலன்
படை யாமல். (235)

அபுஜகல் சிரத்தைக் கரத்தினிற்றாக்கி யள்ளலங் குருதியிற் றிரு
த, கவிசிறைப் பறவைக் குலங்களு மிரியக் கணத்தொடு நரிக் குலமொ
துங்கச், சவிதருங் கொடியுங் கவரியுங் குடையுங் தாளிணையிடறிட
நடந்து,புவியிடை பரந்த பறந்தலை கடந்து போயின ரிறங்குபாசறையின்

மறத்தினைத் தொடுத்துத் தீவினை விளைத்து வஞ்சகம் பலபல வியற்றி,
யறத்தினை வெறுத்த கொடும்பெரும் பதக னபூஜக றலையிஃ தென்ன,
நிறுத்திய தீனி னுலகெலாம் புரந்த நீணபி முகம் மதுவென்னுந்,திறத்
தவர் திருமுன் வைத்தனர்கதிர்வே லேந்திய செழுங்காதலத்தார். ()

ஆதியைப் புகழ்ந்து காபிர்தம் வலியு மற்றது தீனெனும் பயிரின்,
கோதறுங் கொழுந்துங் குவலயம் படர்ந்த தின்றென யாவர்க்குங் கூ
றித், தீதுறுங் கொடிய பாதகன் சிரசை யகற்றுபி னெனச்செழு மறை
யின், மூதுரைதெரிந்த புரவல ருடனு மிருந்தனர் மூன்றுநா ளவணின்.

வற்றுறு வளமை மக்கமா நகரார் வந்தது மெதிர்மலைந்தவணி னுற்
றது மெழுவருடன பூஜகல்த னுயிரிழந் ததுவும்வெஞ் சமால், வெற்
றியு மியாவும் வரிப்பட வெழுதி விரைவினின் மாறுதயிபையா, வொற்
றர்கை கொடுத்து மதீனமா நகருக் கனுப்பின ரெவரினு முயர்ந்தோர்.

வடிவுறுஞ் சாபை வெளியுறு நபித மக்களில் றுக்கையா வென்
னுங், கொடியிடை யுதுமான் மனைவிய ரென்னுங் குயின்மொழித்திரு
மயி லிறந்து, படியினி லடக்கி யாவருந்திரண்டு பள்ளி யினிருக்குமப்
போதி, லுடைபட பதறிற் பொருதுவென் றெழுது மோலையைக் கொ
டுத்தன ரோட்டார். (240)

புவியினிற் புதுமைக் காரண மதீன புரத்தினி லுறைந்தவ ரெவ
ரு, மபுஜகல் படைகொண் டெதிர்ந்திறந் தனனென றழகுற வாசகம
றிந்து, நபிதிரு மகளா ரடைந்தன ரெனுமந நடுக்கமுங் கலக்கமு மகற்
றிக், கவலுதற் கரிய வாநந்தப் பெருக்கின் களிக்கடல் குளித்துமூழ்கி
னரால். (241)

பதுறெனும் புடவிவரையடி விடுத்தம் மாற்றல ரிடத்தினிற் பறித்
த, கதிர்கொளுந் துள்புக் காறெனும் வாளைக் காதலத் தெழிறா வேந்
திக், கொதிநுனை வடிவேன் மன்னவர் சூழக் குதிரையின் றெருகுதிகந்
தீண்ட, வதிரமுர சமும்பே ரிகைகளு மார்ப்ப வருமது நபியெழுந்தன
ரால். (242)

தானைக ளீண்டக் கொடித்திரண் மலிய வருநபிதமைமுகநோ
க்கிக், கானகம் விடுத்தோர் காவதத்திடத்திற் கடற்கரைப் புறத்த

பாசுபியா, ஹூனுடல் வதைத்து மாநிதி யனைத்துமொல்லையிற் கொள்வ மென, றினிதின் றீனவ ரொருவ ருரைத்தனர் கேட்டுச் சிந்தையிற் பொருந்தின ரன்றே. (243)

எழுந்திவண் வருமுனி ரண்டிலொன் றுக்கைக் கிறைவசப் படுத்தின னெனுஞ்சொன், மொழிந்தனி ரவையே முடிந்தன வினிமேன் மூளும்வெஞ் சினந்தினை முற்றி, யழுந்திடப் பொருக லறிவலவென அப்பா செனுந் தருதையர் மொழியச், செழுந்திற னபியு மிஃதுநன் றென்ன நிதியின்மேற் சேறலை விடுத்தார். (244)

நுதிகொளுங் கதிர்வேற் காபிரை பதுறி லடர்ந்தமுந் நூற்றுடன் பதினுன், கிதமுறுந் தலைவர்க் கும்பர்மா ரயமுண் டென வியல்பொடு முரைத்துக், கதிகொளும் பரியுந் தானையு நெருங்கக் கானகம் பலபல கடந்து, சதுமறை முழக்க மார்த்தெழ மலீக்குச் சபுறுவாந் தலத்தில் வந் திறுத்தார். (245)

குறைந்திட லொடுங்கிப் போயின மருவார் பாசறைக் கொள்ளையின் றொகையு, மிறந்திடு மெழுப தருந்திறல் வேந்த ரிடுகலன் களும் படைக் கலனுஞ், சிறநதவெம் பரியும் ஸ்கு பிக ளெவர்க்குந் தெரிதரப் பகுந்தெடுத் தளித்தார், புறந்தரு களத்தின் முத்திரை படைத்துப் புகழ்பெறு முகம்மது நபியே. (246)

அறபினின் மலீக்குச் சபுறுவாந் தலம்விட் டடப்பெரும் படை புறஞ் சூழ, இரௌகா வெனுமத் தலத்தினில் வரும்போழ் தியல்பெறு மதீனமன் னவரும், புறநக ரவருந் திரண்டெதிர் பணிந்து பொங்கிய முழக்கொடுஞ் சூழ, நறவுகொப் பளிக்குந் துடவைசூழ் நகரி னண்ணினர் முகம்மது நபியே. (247)

மறையவர் வாக்கின் பயித்தொலி முழங்க வானவ ரினிதுவாழ்த் தெடுப்பக், கறைகொளுங் கதிர்வேற் காளையர் சூழக் கவிகையுங் கவரியு மலிய,முறைமுறை பேரி தவில்பறை திடிமன் முருடுசச் சரிமுரா சதிர, விறையவ னருளால் வெற்றிகொண் டிறசூ லிலங்கிய நகரின்வந் தன ரால். (248)

மடலவிழ் வனச வாவிசூழ் மதீனு வந்தபின் மற்றைநாள் பதுறிற், பிடிபடு மவரைக்கொணர்கெனக் கூறப் பெருஞ்சிறை சாலையினண்ணிக்,

கடிதினி லெழுப தாசர்க டமையுங் கையினிற் றளையொடுங் கொடுவங்,
தடல்பெருங் குரிசின் முகம்மது நபிமுன் விடுத்தன ரணிவய வீரர். ()

ஆரிது புதல்வ னலிறையும் பதகனுக்கு பத்தெதன் பவன் றனையு,
மூரினிற் புறத்திற் பாறையி னுப்பண் டலைகளாந் திடுகவென் றுரைப்ப,
வீரர்கள் வெகுண்டு பிடித்தகைக் கயிற்றின் விசைவொடு நடத்தியவ்
வுழையிற், சோரிநீ ரொழுக விருவர்க டலையுந் துணித்தருங் கழுவினிட்
டனரால். (250)

நற்றவ முடைய முகம்மதின் கலிமா நாவினி லியற்றிடா தெதிர்
ந்த, பற்றல ருழையி னிருவர்க டமையும் பாழ்ங்குழி யிடைப்படர் படு
த்தி, மற்றவ ரறுபத் தெணமர்க டமையு மாசில் அஸ்தாபிக ளென்னுங்,
கொற்றவ ரெவருங் களித்தினி துவப்பக் கொடுத்தனர் பகுந்துபங்
கியற்றி. (251)

உறுதலை விலைநா லாயிரந் திருகமொவ் வொருவருக் கினிதளித்து,
மறுவற மீண்டு மக்கமா நகரார் போயினர் மன்ன ரப்பாசு, மறிவுறு மபி
த்தா லிபுமகன் றனக்குமா ரிதுமக னவுப லுக்கு, முறையின் றமக்குந்
தலை விலையாக மீண்டனர் முதுபொரு ளளித்தே. (252)

அண்ணலங் களிற்றை முகம்மதை வளர்த்த வடலபுத் தாலிபு திருச்
சேய், வண்ணவொண் யுயனுக் கயிலையுஞ் சிறந்த ஆரிது மகனவு பலையு,
நண்ணிய புகழ்சேர் மக்க மாநகருக் கனுப்பிநந் நெறியி னப்பாசு,முண்
ணிறை கலிமா வோதியீ மான்கொண் டுவநதினி துறைந்தன ரன்றே.

தருவுரை பகர வெதிருரை பகர்ந்த தருநபி சிறியதந் தையரு,மரு
வுநன் மலரு மெனவரு புறாக்கான் மார்க்கநன னெறிமுறை பயின்று,
செருவடன் மலியன் னாரிக டமக்குஞ் செவ்விய முகாஜி ரீன்களுக்கு,
மருமருந் தனைய வுயிரெனப் பொருந்தி யன்புட னினிதிருந் தனரால்.

வரத்தினிற் சிறந்த கருபத்துல்லாவி னுபசம் சத்தினீர் வழங்குந்,
தரத்தி னுக்குரிய ராதலாற் பிரியாத் தொன்முறை வருதலா னபிக்கும்,
புரத்தினுற் றவர்க்குந் தனித்தனி யுரைத்துப் புதியவன் றனைப்புகழ்ந்
தேத்திக், காத்தடங் களிறப் பரசெனு முரவோர் கடிகொடம் பதியிடை
புக்கார். (255)

முதலவன் விதித்த விறமலா னென்பு முடிவினி லியாவரு மறிய,
அதிஜயம் பிறப்பப் பித்துறுப் பறலென் றுய்த்தும் நபிக்கிறஞ்

கியதான், மதிவல ரெவரு மவ்வழி முடித்து மகிழ்ந்தனர் தீனெனும் பயிரும். பதிவுபெற் றிருந்து தழைத்தன செல்வம் படர்ந்தினி தோங் கினவன்றே. (256)

பதுறுப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 20-க்குத் திருவிருத்தம் 1262.





# சவீக்குப் படலம்.



ஆரண முறையின் தீனெறி பெருக்கி யகுமதுற் றுறையுநாளிற், காருறை பொழில்சூழ் மதீனமா நகரிற் சூதரிற் கயினுக்கா ஹெறன்னும், வீரர்கள்கூட்டம் வாய்மையை முறித்து வேறொரு தலத்திடை புக்குப், பாரினில் தீனுக் கிடர்நடத் தினர்க ளெனுமொழி பகர்தரக் கேட்டார்.

நாயகர் செவியிற் புகுதலுந் தலைமை நண்பருங் கடுவிசைப்பரியுஞ், சாயகச் சிலைக்கை வீரருஞ்சூழத் தடக்கதிர் வேலெடுத் தேந்திப், போய வருஙறந்த பதியினை வளைந்து புரிசைக டுகளெழப் படுத்தி, மாயவன் காபி ரெவர்களு நடுங்க மண்கொளா விடுக்கண் செய்தனரால். (2)

பொருளெனப்படுத லியாவையுங் கவர்ந்து புறம்படர்க் கயினுக்கா ஹெறன்னும், விரிபெருங் கூட்டத் தவரினை யுபைசேய் விறல் பெறு மப்துல்லா விடத்திற், பரிவுறச் சாட்டிக் கொடுத்து விட்டதற்பின் பண் புறு மதீனமா நகரின், மருமல ரணிந்த தீனவர் சூழவந்தனர் முகம்மது நபியே. (3)

கோதுறங் கயினுக்காஹெறனு மவர்கள் கூட்டத்தின் காரணமாகக், காதிய நசுறு னிகளெகூதிகளால் காபிர்க ளுடன்படக் கலப்ப வோதிய, மறையி லுன்மையென் றுரைக்கு முறவுகள் வேண்டலிரென்ன, வாதிக ளுடைத் திறங்கின நபியு வன்புட னினிது வந்தனரால். (4)

## வேறு.

வலிகொடு காபிரை பதுறின் மாய்த்துநன்
னிலைகெடுங் கபினுக்கா றவரை நீந்திடர்
நலிவற முகம்மதாண் டிருக்கு நாளினிற்
பொலிவுறச் சிலமொழி புகலு வாமரோ. (5)

ஷாமினிற் புக்குமா நிதியந் தன்னொடு
மாமதின் மக்கமா புரத்தின் வைகிய
சூமன பாசுபி யானவன் சொல்லினுற்
றுமவொண் புயத்தவர்க் கெடுத்துச் சாற்றுவான். (6)

பொன்னுநன் மணியுமொத் திலங்கும் பொற்பினுற்
கள்ளிய காமுறுங் காளை வீரர்க
ளென்னுயி ரனையரிப் புரத்துக் சாதியா
மன்னவர் பதுறினின் மடிந்திட் டாரரோ. (7)

பொழிதருஞ் செழுமுகிற் பொருப்பின் சார்பினிற்
கழுதுக ணடம்பல காண வீணினில்
வழுவுறு மொருவனுக் காக மன்னவ
ரெழுவரும் படையுட னிறத்தல் வேண்டுமோ. (8)

வயமுறு முகவிபி னிறந்த மன்னரோ
டியல்புற வுயிரினை யீந்தி டாதொளித்
தயல்புகுந் தனனென வனுகி லாவவப்
பயனுற வுலகமும் பழிக்கு மேகொலாம். (9)

துனிதவிர்த் துதவிசெய் தவர்க டுஞ்சயா
னனிமல பொருளுட னகர நண்ணிபென்
பணிமலர்ப் பஞ்சணை படுத்து நாடொறு
மினியன வுண்டியுண் டிருத்தல் நன்றரோ. (10)

வீணினி லவருயி ரிறத்தன் மேயினன்
பூணரும் பழியெனும் பொறையுந் தாங்கின
னுணினை வீழ்த்தின னகைக்கு மாயின
னுணினில் வலியனென் றறைய வேண்டுமோ. (11)

உதவிசெய் பவர்க்குயி ருதவி செய்குதல்
விதியுயி ருதவியின் வீழ்த்தி நின்றவர்க்
கிதமுறப் பழிகொளா திருத்த லும்பரின்
பதவியு மிகையிவண் பலனு மில்லையால், (12)

போருறும் பெரும்படை யுடனும் புக்கியச்
சோல ரணிகெடச் சிதைத்துத் தீனெனும்
வோற முகம்மதை வீழ்த்திடே னெனிற்
பாரிதன் முகத்தினைப் பார்ப்ப தில்லையால். (13)

வாரியின் பெருங்கிளை மலிவி னாலுமிப்
பாரினிற் பல்பொருள் படைத்து மாண்பினுங்
கூரும்வை வேற்படைக் கூட்டத் தாலுந்தன்
வீரியத் தினுமிவை விளம்பி னானரோ. (14)

இன்னன பலவெடுத் திரைத்தவாசக
நன்னிலை மக்கமா புரத்தி னண்புறு
மன்னிய வேந்தர்க ளெவர்க்கு மார்புறுங்
கொன்னுனை வேலினுங் குளித்து நின்றதே. (15)

இவர்மொழிக் கின்னண மியைந்தி லோமெனிற்
புவியினிற் செல்வமும் புகழும் வீரமு
மவமென யாவரு மகத்தி னுட்கொடு
குவிதருங் கணத்தொடுங் கூற லுற்றனர். (16)

அருந்திற லபுஜகு லுடனம் மாண்மையும்
பொருந்திறல் வீரமும் பொன்றிப் போயதென்
றிருந்தன மின்றுநீ யியம்பு மாற்றத்தான்
விரிந்தநங் குலத்தவர் வெற்றி வீரமே. (17)

இன்றுநீ துணிந்தனை பிறந்த மன்னவர்
லன்றிறற் பழியினை வாங்கினோ மினி
நன்றியும் விளைத்தனம் நமர்க்கு நாடொறும்
வென்றியுண் டென்பதும் விளம்ப வேண்டுமோ. (18)

செழுந்திறற் சேனையுஞ் சேனை வீரரும்
வழிந்திடுங் குருகிவேன் மன்னர் தம்மொடு
மொழிந்திடு முறைவழி முன்னி யிற்றையி
னெழுந்திட வேண்டுமென் றிசைத்திட் டாரரோ. (19)

நள்ளுறு நகரவர் நவிலும் பெற்றியின்
வள்ளுரத் தபாசுபி யானு மாசிலா
வள்ளிலை வேலெடுத் தாடன் மாவொடும்
புள்ளெழ விரைவினிற் புறப்பட் டானரோ. (20)

சூரகதப் போரணி குழுமிச் சூழ்தர
விரிகதி ரெஃகினர் விறைவின் முன்செலச்
சொரிகணை விற்கதை சுரிகை வாள்சுமந்
தாசர்கள் சிலர்திரண் டரியி னீண்டினார். (21)

அடற்பரி யிரண்டுநூற் றாசர் தம்மொடும்
படைக்கலன் வீரரும் பரந்து முன்செலக்
கொடிப்படைக் குழுவொடுங் குடைகண் மொய்த்திடக்
கடற்படு பல்லியங் கறங்கப் போயினான். (22)

கைத்தண்பு மனத்தினன் ஹறுபு தன்மகன்
மொய்த்தெழும் பெருந்துகண் முகிலின் விம்மிடப்
பைத்தல நெளிதரப் படைகொண் டண்டியே
யெய்த்திடா ததிரத்தொடும் சவீக்கி னெய்தினான். (23)

வயமுறு நபியுறை மதீன மாநகர்க்
கியல்புறக் காதநான் கென்னு மெல்லையு
ளுயர்சவீக் கெனுந்தலத் துழைபின் மாவொடு
பயமற விறங்கினன் வகுத்துப் பாசறை. (24)

பரித்திர ணிரைநிரை படுத்திப் பாங்கரின்
விரித்தொளிர் படங்குகள் விளங்கக் கோட்டிநல்
லரித்திர லாசருக் கமைதி காட்டியூ
டிருத்துமங் காடியு மிருத்தி னானரோ. (25)

கறங்கிய மேற்கடற் கனலி புக்கபி
னிறங்கிய பாசறை யிடத்திற் சூழ்தர
மறங்கிளர் வீரரை வைத்தி யாவரு
முறங்கிய காலையி னொருவ னாயினான். (26)

தன்னுறு வகற்றிவேற் றுருவந் தாங்கிவிற்
கொன்னுனை வாளொடுங் குந்த மேந்திப்பின்
முன்னிடந் தெரிகிலாக் கங்குன் முன்னிநற்
பொன்னியன் மதீனமா புரம்புக் கானரோ. (27)

அரசர்தம் வீதியு மாவ ணங்களும்
குரிசிறன் வாயிலுங் கடந்து கோமகன
வரும்அகுத் தபுயக னில்லின் வாயிலின்
கனைபுரள் கதிர்மணிக் கபாடந் தீண்டினாள். (28)

புதுமணிக் கதவினிற் புடைத்தி டத்தொனிக்
கதழ்வுறச் செவியினிற் கலப்பக் கேட்டெழுந்
துதிர்நறைத் தொங்கன்மார் புலவ வந்துநின்
றிதமுறக் கவிழ்நதிருட் டறுத்து நோக்கினான். (29)

கதிபிறி தொன்றிலா ஹறுபு பெற்றிடும்
பதகனென் றறிந்தவன் பகரும் வாசகத்
தெதிரொடுத் தழைத்திடல் பழுதென் றெண்ணிமா
மதியொடு மெழுந்துதன் தனைபுக் கானரோ. (30)

நின்றனன் கூயின னெடிது தன்மனங்
கன்றியிங் கொருவரும் காண்கிலோமென
மின்றிக ழயிலொடு வேறு வீதியிற்
சென்றனன் றனித்தொரு வாயில் சேர்ந்தனன். (31)

பலதிசை யினுமெலப் பார்த்திவ் வில்லினு
மிலருளர் மாந்தர்க ளென்ன வெண்ணிய
மலெவொடு மசுக்கமின் மகனில் வாயிலி
னிலையுறும் கதவினைப் புடைத்து நின்றனன். (32)

கங்குலங் காலையிற் கதவைத் தீண்டுதற்
கிங்கடைந் தவரெவ ரென்ன வில்லுறை
மங்கையாக் குரைத்தெழுந தரிதின் வந்தொளி
றுங்கிய விருளிடை நோக்கி னனரோ. (33)

கலைப்பவ னெனவரும் ஹறுபு மைந்தனைத்
தலைக்கடை கண்டுகை பிடித்துத் தானிறை
யிலத்தனிற் கொணடுசென றிருத்தி யின்புறு
நலதொடுஞ் சுவையொடும் புசிபபு நல்கினான். (34)

உண்டிலை தின்றுபசி னுறுதி யாகவிம்
மண்டலத் துளவையு முகம்ம தென்னும்பேர்
கொண்டவற் குறும்படைக்கு றிப்புற கொள்கையும்
விணடெமக் குரையென விளம்பி னனரோ. (35)

முகம்மதின் மார்க்கமும் வலியும் வெற்றியு
மிகலவர் பணிவும்போ ரியற்றுஞ் செம்மையும்
பகைபிறு திலையெனப் பகரும் பெற்றியும்
வகைவகை தெரிதர சக்கஞ் சொல்லினான். (36)

சாற்றிய தனைத்தையும் ஹறுபு தன்மகன்
றேற்றமுற் றுணர்ந்துசிந் தித்து நன்கென
மாற்றவ ரறிகிலா தெழுந்து வல்லிரு
ளாற்றிடை குறுகிப்பா சறையி னாயினன். (37)

உதித்தநன் கிளையினுக் குரிய ரியாவரு
மதித்திடும் திறத்தினர் மன்னர் நால்வரைக்
கதித்தபுன் மனத்தினன் ஹறுபு தன்மக
னிதத்தொடு மழைத்தரு கிருத்திச சொல்லுவான். (38)

முகம்மதி னுறைமதி னாவிற் சூழ்தரு
திசைதிசைச் சிறுகுடி நிரைகள் சேர்த்தவண்
டுகள்படப் பலபொருள் சூறையாடி நிட்
றிகலவ ருயிர்செகுத் திடுமி னென்றனன். (39)

மன்னன் பாக்கி யான்சொல் வாசகஞ்
சென்னியிற் கொடுசில பெயர்க டம்முடன்
மினையில் வேலொடும் வீர வாளொடும்
பன்னருங் கங்குலிற் பரந்து போயினார். (40)

பரிகளைக் கங்குலிற் கரந்து பற்றியும்
நிறைகளிற் றொருவரை நெருக்கித் தாக்கியும்
விரைவொடு மெதிர்த்தவர் தலைகள் வீழ்த்தியும்
தெரிதரா தொளித்தருங் குறும்பு செய்தனர். (41)

கல்லடர் பொருப்பிடை காலிக் காரரும்
பல்லரும் திரிதரும் பாதை யோர்களு
மெல்லையிற் சிறுகுடி யிருக்கின் றோர்களும்
சில்லறை பெரிதென நபிமுன் செப்பினார். (42)

தேங்கமழ் தெரியலா ரீதென் செய்கையென்
றூங்குறு பொற்றரை யறியக் கேட்டலும்
பூங்கழ லிறைஞ்சிவாய் புதைத்து மென்மெலப்
பாங்குறும் செவிகொளப் பகரு வாரரோ. (43)

குரகதத் தொடும்சில படையுங் கூட்டியே
வரையிடை சவீக்கெனுந் தலத்தில் வந்திருந்
திருமன ஹறுபுத னிளவ லிவ்வணம்
விரைவினிற் பகைபல விளைக்கின் றனென்றார். (44)

பற்றல ரெனுமொழி செவியிற் பற்றலும்
வெற்றிய பாலுபா றுவை வீறொடு
மற்றெறி னகரினுக் காதி யாகவைத்
துற்றவெஞ் சமர்ப்படை யுடனெ ழுந்தனர். (45)

குவிபெருஞ் சேனையும் பரியுங் கூட்டமுங்
கவிகையுந் துவசமுங் கலப்பப் பல்லிய
முலரியி னொலித்திட முகம்ம துஞ்செழும்
புவித்திசை யதிர்தரக் கடிது போயினார். (46)

பொழின்முகில் வரையிடை பதுரிற் போரினில்
வழிதிண மறுதவேன் மன்னர் வெம்படைக்
குழுவொடுங் கருக்கறு வென்னக் கூறிய
வெழிறருந் தலத்திடை யிறங்கி னார்களால். (47)

மறைநபி முகம்மது மற்ற யார்களுந்
தெறுகொலை வீரருஞ் சேனை மாக்களு
மறைகட லெனவடுத் தனர்க ளீண்டென
கறுபுதன் றிருமகன் காதி லோதினார். (48)

அள்ளிலை வேலொடு மகும தின்படைப்
புள்ளெழக் கறுக்கறுப் புலத்தி னுற்றவை
விள்ளலும் கறுபுதன் விடலை யாக்கமு
முள்ளமும் வீரமு மொடுங்கி னனரோ. (49)

பொங்கிய தானையும் புரவிக் கூட்டமுந்
தங்கிய பொருளுமத் தலத்தின் விட்டுவிட்
டங்கவ ரொருவரு மறிகி லாநடுக்
கங்குலங் காலையிற் கரந்து போயினான். (50)

கரந்துபோ யின்னர சென்னுங் கட்டுரை
பரந்தின் பாசறை முழுதும் பாய்கதிர்
விரிந்தன விடிந்தன விரைவி னெங்கணுஞ்
சரிந்தனர் குழுவொடுந் தறுகண் வீரரே. (51)

சரந்தருந் தூணியுந் தனுவுந் தண்டமு
மரந்தட வயிலுந்தா வச்சு வங்களும்
பரர்தவெண் படங்குபா சறையும் வீதியு
மிருந்தன போயின ரியாரு மென்னவே. (52)

வானவர் பரவிய வள்ளன் மானபி
யினமல கறுக்கரு வெல்லை நீத்துவந்
தானதோர் சவீக்கினி லரிகள் காண்கிலார்
கானலர் படங்கும்பா சறையுங் கண்டனர். (53)

கருஞ்சகுந் தமுங்கொடிக் கணமுங் கங்சமு
முரைஞ்சிடக் கொடியொடு நடந்த வொள்ளியோர்
பெருஞ்சம ரெணுமொரு பெற்றி காண்கிலா
ரருஞ்சுர வழியினைப் பாறினாரோ. (54)

கட்டுவாம் புரவியும் படைக்க லன்களும்
வட்டவெண் கவிகையு மிரச வர்க்கமு
மொட்டகைத் திரள்களு மொளிர்நி சானியும்
விட்டபல் பண்டமும் விரைவின் வாரினார். (55)

சிறியரும் பெரியருஞ் சேனை வீரருங்
குறியொடும் பலபொருள் கொள்ளை கொண்டதிற்
றறுகிலா கறுபுசேய் தருமத் தாலனேறு
வறியவ ரெவர்களும் வலிய ராகினார். (56)

கொள்ளையின் பலபொருளனைத்துங் கைக்கொடு
கிள்ளையின் றிரளொடுங் கிளரும் வாளயின்
மள்ளர்கள் சூழ்தர வள்ள னந்நபி
நள்ளுறை யரியென நகர நண்ணினார். (57)

சவீக்குப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 21-க்குத் திருவிருத்தம் 1319.





# குதிரிப் படலம்.

---

கொற்றவெண் கவிகை நீழ லுலகெலாங் குளிரச் செய்து
வெற்றிகொண் டிசுலா மோங்க விறனபி யிருக்கு நாளிற்
பற்றலர் தேயந் தோறும் பற்பல்கா விருந்து சாவு
மொற்றரி லொருவர் தோன்றிச் சிலமொழி யுரைப்ப தானார். (1)

மதினமா நகரிற் றென்கீழ்த் திசையினில் வளமை யோங்கக்
குதிவயால் வனச வாவி சூழ்தரு குதிரி யென்னும்
பதிபணி சுலைமுக் கூட்டத் தாரினிற் பல்லர் கூண்டு
விதிமுறை மறையின் மாற்றம் பொய்யென வெறுத்து மன்னோ. (2)

நன்னயக் கலிமா வென்னு நாமநா நாட்டு மாக்கள்
சொன்னெறி வழுவ தாக்கித் தூடணித் திகல தாக
மன்னரும் பெயருங் கூறும் வாய்மையு மதித்தி டாமற்
பன்னருங் குறும்பு மேற்கொண் டிருந்தனர் பரிவற் றென்றார். (3)

புவியிடந் திரிந்து நாளும் புகலுவோ ருரைத்த மாற்றஞ்
செவிவழி புகுத லோடுஞ் செவ்விய ரிறசூ லுல்லா
இபுனுமபி மக்குத்தூ மென்னு மிளவலை நகரி னாட்டிக்
கவனவெம் பரியுந் தானைக் கணத்தொடுங் கடிது போனார். (4)

மதிதவழ் சிகரக் கோடி வரைபல கடந்து நன்னீர்
நதிசில கடந்து மாறா நள்ளிருட் கான நீந்திக்
கதிரவன் கதிரி னாலெண் காவதங் கடந்து வல்லே
குதிரியென் றோங்குஞ் செல்வக் கொழுநக ரடுப்பப் புக்கார். (5)

பூவலர் பொய்கை வேலிப் புறம்படர்ந் திலங்கச் சூழ்ந்த
காவணி மதீன மூதூர் காவலர் வரவு கேட்டுக்
கோவுடன் குடியுங் கூடுங் கூட்டமுங் குலைந்து தத்தஞ்
சேவக மிழந்து நான்கு திசையினுஞ் சிதறிப் போனார். (6)

பற்றலர் பதியை நீங்கிப் பஃறிசை படர்ந்தா ரென்ன
வுற்றவ ருரைப்பத் தீனோ ரொண்புயங் குலுங்க நக்கிக்
கற்றைவெண் ணிலவு காலுங் கவிகையுங் கொடையு மோங்கக்
கொற்றவ ருடனு மேகிக் குதிரியி னிடத்தி லானார். (7)

கூடிய குதிரி வாழ்க்தோ ரொட்டகங் குதிரை காலி
யேறுமே முகங்க ளெல்லா மினத்தொடு மொருங்கு சேர்த்து
மாறரு மணியும் பொன்னு மாடையு மினிதின் வாரி
வேறினி யில்லை யென்னக் கவர்ந்தனர் விரைவி னன்றே. (8)

மட்டறும் பண்ட மியாவு மலிதரச் செறிந்து வைகு
மொட்டகைத் திரளி னேற்றி யுறுநிரை யனைத்துஞ் சேர்த்து
விட்டுமுன் னடத்தி வேந்தர் வீரர்வெம் பரியிற் சூழக்
கட்டழ கெறிக்குஞ் சோதிக் காவலர் புறப்பட் டாரால். (9)

ஓலவா ரியின்ற டாரி முரசங்க ளொலித்துப் பொங்க
நீலவொண் கவிகை மேக நிழறரச் சலவாத் தார்ப்பக்
கோல்வளை யாது செய்து குவலய முழுதுங் காத்த
மாலையொண் புயத்து வள்ளன் மதீனமா புரத்தின் வந்தார். (10)

கருதலர் பதியிற் புக்குக் கவர்ந்தபல் பொருளும் பங்கிற்
பிரிவிலா யார்கட் கீந்து பிடித்தவொட் டகைபைஞ் ஞூற்றின்
வரிமறை முறைநா னூறும் வான்முறை யினிதி னல்கிப்
பரிவினின் மற்ற நூறுந் தம்வசப் படுத்தி னாரால். (11)

கோதுறு மருவார நாட்டின் கொள்ளையின் முதல்க ளெல்லா
மாதவ தீனர்க் கீந்து வானவர் பரவி வாழ்த்தத்
தீதறச் செல்வ மோங்கச் செழுமறை நாளும் பொங்க
வாதிதன் கிருபை தாங்கி யருமது மிருந்தா ரன்றே. (12)

குதிரிப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 22-க்குத் திருவிருத்தம் 1331.

---



# தீயமருப் படலம்.



பானலங் கழனி சூழ்ந்த நசுதெனும் பதியி னுளுங்
கோனிலை பொருந்தி வாழுங் கத்துபான் கூட்டத் தாரைத்
தீனிலை படுத்த வேண்டுஞ் செயலினைக் கருத்துட் கொண்டார்
மாநிலம் பாதந தோயா வள்ளன்மா முகம்ம தன்றே. (1)

மலர்தலை யுலகம் போற்று மதீனமா நகரந் தன்னி
லிலகிய புகழ்சேர் வள்ள லியலுது மானை வைத்துப்
பலகதிப் பரியி னோடும் படைக்கலத் தாசர் சூழப்
புலவர்க ளினிது வாழ்த்த முகம்மது புறப்பட் டாரால். (2)

குறைவற நசுதில் வாழுங் கத்துபான் கூட்டத் தாரை
மறைவழி யிசுலா மாக்கி மாதமொன் றிருந்த பின்னர்
கறைநிணங் குருதி மாறுக் கதிர்வை வேல் வீரர் சூழ
நறைமலர்த் துடவை போர்த்த மதீனமா நகரில் வந்தார். (3)

நறுக்கனித் துடவை சூழ்ந்த மக்கமா நகரின் வாழ்வோ
ரறுக்கதிர் புரிசைச் சாமி னியாத்திரை யகற்றிப் பின்ன
ரிறுக்கினிற் றெழில்செய் கின்ற தென்னுமச் செய்தி யாவு
மறுக்கனக் கவிகை வள்ளன் முகம்மதுக் குரைத்தார் மன்னோ. (4)

சிலையயிற் படைக டாங்குஞ் செல்வரும் பரியுங் கூட்டிப்
புலியெனும் காரி தாதன் புதல்வனைத் தலைமை செய்து
நலிவற மக்க நாட்டார் வரும்வழி நாப்பண் வைகி
வலியுட னிருந்து வெட்டிப் பறித்திவண் வருக வென்றார். (5)

காரிதா தவத்தின் வந்த கண்மணி செய்தென் றேதும்
வாரிச வதன மன்னர் முகம்மது பாதம் போற்றிக்
கூரிலைக் கதிர்வே லேந்திக் கொலைமத களிறு போலப்
பூரிகை பேரி யார்ப்பப் படையொடும் புறப்பட் டாரால். (6)

கனவரை கடந்து கான்யா றுகள்பல கடந்து மாறாச்
சினவரிப் புலியு லாவித் திரிவனம் பலகண் டேகி
நனைபொழிஞ் சூழி ருக்கு நாட்டுக்கும் வரிசை மக்க
மெனுநக ரதற்கு நாப்ப ணிருந்தநீ யமறைச் சார்ந்தார். (7)

கொய்யுளைப் பரியும் வீரர் குழுவுமோர் வனத்தி னுக்கி
மையலங் களிறுபோன்ற காரிதா மதலை நான்கு
பையல்க ளோடுந் தாமப் பதியிடை யிருக்குங் காலைப்
பொய்யுறாச் செல்வ மக்கா புரத்தவர் வருதல் கேட்டார். (8)

அடவியி னிருந்த சேனைத் திரளுமச் சுவமுங் கொண்டு
கடிதினி லெழுந்து மாறாக் கதிர்ப்படைக் கலன்க ளேந்தி
வடிவுறும் காரி தாதன் மதலையங் கெதிரி னேகி
நெடிபடு கானஞ் சூழ்ந்த நெறியிடை மறித்து நின்றார். (9)

பன்னரும் கதியிற் றுவும் பரியொடுஞ் சேனை யோடு
மன்னபா சுபியானென்னும் பெயரினன் வந்து தாக்கி
யுன்னுமுன் சைதுக் காற்று துடைந்துமற் றெவையும் போக்கித்
தன்னகங் கலங்கி மக்க மாநக ரொல்லை சார்ந்தார். (10)

வட்டலர் சோலை சூழி றுக்குமா நகரைச் சார்ந்த
நாட்டுவா ணிபத்துக் கேற்ற நன்னயப் பொருள்க ளியாவுங்
கூட்டிய பரியினோடு மொட்டகைத் திரளுங் கொண்டு
தீட்டும்வே லவர்கள் சூழ மதீனமா நகருஞ் சேர்ந்தார். (11)

பாதையிற் பறித்த வெற்றிப் பலன்படு பொருள்க ளெல்லா
மாதவன் காரி தாசெய் முகம்மதி னிடத்தி னீட்ட
வேதநன் மறையி னுற்ற விதிப்படி தீனர்க் கீந்து
பூதல மனைத்தும் போற்றப் புகழ்நபி யிருந்தா ரன்றே. (12)

கியமறப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 23-க்குத் திரு விருத்தம் 1343.



# அபீறுபிகுவதைப் படலம்.

——:*:——

மக்கமா நகரில் வாழுங் காபிரி லொருவன் மாறு
விக்கின மென்ப யாவும் விளைத்திடுங் கொடிய நீரான்
மைக்கலந் துயருஞ் சோலை கைபறில் வாழ்வோ னுளுந்
துக்கமு மிழிவும் வீணும் விளைப்பது துணிந்து நின்றோன். (1)

கள்ளமுங் கொலையும் பொய்யு நிந்தையுங் கள்ளு நீங்கா
துள்ளகத் திருத்தி வாழு முயிர்த்துணை யாகக் கொண்டோன்
வள்ளனந் நபிதந் நாமம் வழுத்திய மாந்தர்க் கெல்லா
மெள்ளள விரக்க மில்லா திடும்புகள் விளைத்த சூமன் (2)

கதிபெறுந் தீனுள் ளோரைக் கண்ணினுங் காண மேவான்
பதிதொறு மருவார்க் கேயப் பண்புறு முதவி யானோன்
சதிமனத் திபுலீ சென்போன் றனையரி லொருவன் போல்வான்
அதபறி வென்ப தில்லா வகத்தபீ றுபி கென்போன். (3)

இனையன பண்பி னோன்றன் செய்கையு மியற்கை யாவு
மன்னுற வைக றொறும் வரிசையங் குரிசில் கேட்டுப்
புனைகழ லுதைக்கு தந்த புதல்வரில அப்துல் லாவைத்
தனியழைத் திருத்தித் தோன்று மறையினிற் சாற்று வாரால். (4)

அழிவுறு நெறிமேற் கொண்ட காபிர்க ளறித றென்று
வழியபீ றுபி தன்னைக் கைபறிற் புகுந்து வல்லே
யிழிவுமற் றிடரு நீங்கக் கோறல்செய் திவணி னீவிர்
குழுவுடன் வருக வென்று ரன்னது கருத்துட் கொண்டார். (5)

ஆரண நெறிம றுவன் ஸாரிகள் பதின்மர் சூழ
வாரணி முலையார் சிந்தை மயக்குறும் வனப்பு வாய்ந்த
தாரணி புயங்கள் விம்ம அப்துல்லா தயங்குங் காந்திக்
கூரயில் காத்திற் றுங்கிக் குரகத மேற்கொண் டாரால். (6)

குரிசினங் நபியைப் போற்றிப் பதின்மர்தங் கூட்ட நீங்கா
விரைவுட னெழுந்து போந்து விலங்களும் வனமு நீந்திக்
கருதல னிருந்து வாழுங் கைபறென் றோது மூரின்
புரிசையின் புறத்தி னுற்றா வணிகரைப் போன்று மாதோ. (7)

புரிசையுள் ளுறைந்த பேர்க்கும் புறநகர் புகுது வோர்க்கும்
வான்முறை வேட்ட யாவும் வாணிபத் தொழிலின் மாறி
யொருவரு முழையிற் புக்கி யுசாவுதற் கிடங்கொ டாம
லிருளினும் பகலு நீங்கா திரண்டுநா ளிருந்து மாதோ. (8)

மாசறப் பின்னர் மூன்று நாளில்விண் மணிவில் வீழ்த்தி
யோசைமேற் கடலிற் புக்கி யுலகமு மிருளுங் காலைக்
காசறு மப்துல்லாவென் றோதிய களிறு காவிற்
றாசியிற் றெறுறுவி னோடுங் கரந்துசூழ் புரிசை புக்கார். (9)

செருக்கொடும் புகுந்து வாரி வாயிலின் றிறவு கோல்வைத்
திருக்குமவ் விடத்தைக் காணு திரவினிற் கரந்து நோக்கி
யுருக்கறுத் திலங்கும் வேலோ ருறைபிட மனைத்து நோக்கி
மருக்கமழ் வீதிபுக்கு நடந்தனர் வயங்க மாதோ. (10)

மன்னவர் மனைக ணோக்கி மாநகர்க் காவலாளர்
துன்னுமவ் விடங்க ணோக்கித் தூத்தபீ றுபி கென்போன்
றன்னகப் புரிசை வாயிற் றன்னையு நோக்கி நோக்கிப்
பொன்னணி மனையு மந்தப் புறத்தையு நோக்கி னாரால். (11)

மாவங்கள் கிடந்து லாவு மணிப்புய வரையின் வள்ள
லிரவங்கு புகுந்து சாவி யெவ்விட மனைத்து நோக்கி
யாவங்க ளொடுங்கு மட்டு மாயத்துப் பலகா லோதிக்
காவங்க மிதுகொ லென்னக் களித்தொரு புறத்தி னின்றார். (12)

நள்ளிருட் காலை யாய திஃதென நடந்து சாவி
யுள்ளுறைந் துறங்குமொன்னார் தமைக்கடந் தொளித்தோர்பாலி
றள்ளரும் பலகை தாங்கிய பேழையிற றடக்கை நீட்டிக்
கொள்ளருங் காப்பு வாய்ந்த திறவுகோ லனைத்துங் கொண்டார். (13)

அவ்விட மகனறு மெல்ல வடிபெயர்த் தொதுங்கி நீங்கிக்
கௌவைக டோன்று நீண்ட கபாடத்தின வாயி னண்ணிச்
செவ்விய திறவு கோலாற் பூட்டினைத் தீண்டி நீத்து
நொவ்விதிற றிறந்துள் ளாய கரப்பையாா றூவல வல்லார். (14)

செறித்த பொற் கதவ மெல்லா மிமைப்பினிற் றிறந்து மூடிக்
குறித்தனை வாயில் புக்குக் கூண்டவா துயிற னோக்கி
யெறித்த வென் காந்திமாட மெங்கணுந் திரிந்து பள்ளி
யறைத்தலந் திறந்துள ளாகி யடுத்தொரு புறத்தி னின்றார். (15)

திரைத்துகி லடுத்தன் ஞேணித் திரையினை யுணருங் காலை
விரித்தசெங் காந்திச செவ்வி யெரிவிளக் கவிந்த பின்னர்
வரித்தடங் கண்ணி ஞளு மன்னனும் விழிப்பதாக
விருத்தல்கண் டிருந்தா ராங்கோ ரிளம்புலி யிருந்த தொத்தே. (16)

இருவருந் துயிறல் கொள்ளா திருந்தன ரிருளுமாய
வருளிவாட் டடக்கை நீட்டி யோககிஞே மாகிலம்ம
வரிவையோ வவஞே வாவி யளிப்பவ ரென்ன வின்னே
தெரிவரி தென்ன மாழ்கிச சிநதையிற் றேம்பி ஞரால். (17)

கங்குலி னெதிர்நது தாவும் போதினிற் கடிதி ஞவி
மஙகையே வழங்கி ஞளேல் மாநில முழுதுங் கொள்ளாப்
பங்கமும் பவமுந தூறும் பழிபும்வந தடையுமென்ன
வங்கையிற் பிடித்த வாளை யணிநிலஞ் சோத்தி ஞால. (18)

கொல்வதற் கிசைந்து நினறேங காலையுங் குறுகிப் போய
மல்வளர் புயத்தி ஞனு மங்கையுந தெரித றேன்று
விலவிடுத் தகனறு சாபி னெய்தியங் குறைநது நாளைச்
செல்வதெவ் வண்ண மென்ன வடிக்கடி தெருமந தாரால். (19)

கொற்றவ னவி போவ தன்றிவை குறித்து நோக்கி
நிற்றனம் மாவி யென்ன விடைந்திடைந் தெண்ணுங் காலைக்
கற்றையங் கரிய கூந்தற் கன்னியை விளித்து மன்ன
னுற்றறி யென்பான் போலச் சிலமொழி யுரைப்ப தானான். (20)

பன்மணிக் கலன்கள் பூண்டு பரிமளந் திமிர்ந்து வாசச்
சின்மலர் செருகுங் கூந்தற் சேயிழை யொருத்தி யென்பாற்
பின்முகந் திரும்பி யேறு மொழிபல பிதற்றிப் பேசி
வன்மமுற் றிருப்பக் கண்டேன் கனவென வழங்கி னானால். (21)

கூறிய மொழியைக் கேட்டுக் கொவ்வையங் கனிவாய்ப் பேதை
வேறொரு மாதை யுள்ளம் விரும்பினை யதனா லிந்தப்
பேறுடன் கனவு காணப் பெற்றனை யென்ன வூடிச்
சீறிய வெகுளி பொங்க விருவிழி சிவந்து நின்றாள். (22)

அறக்கடிந் துரைப்பக் கேட்ட வாடவ னவளை நோக்கிப்
பெறற்கரும் பெண்மை நல்லாய் பிறிதொரு மாதையாவி
பிறக்கினு மிறப்பதல்லா லினைத்தில னெளிமைப னென்னனந்
திறக்கரும் வெகுளி மாற வூடலை திருத்தி னானால். (23)

ஊடலைத் திருத்தி யனானோ னுரைத்திடுந் தொனியும் வாய்ந்த
பேடைமா மயிலன் னாள்வாய் பிறந்தசொற் றொனியு நீங்கிக்
கூடுறா திருக்குந் தானக் குறிப்பினை யுணர்த்தக் கேட்டுப்
பீடுற நலிதல் போக்கி மனத்தினிற் பிரியமுற்றார். (24)

இருந்தவ ரெழுந்து வீழ்த்த திரையினை வீழ்த்துட் புக்கி
யரிந்திடுங் கதிர்வெள் வாளை யங்கையிற் பூட்டி யனானோன்
றிருந்தவங் கவனுக் கோது மொழிவழி சென்று செந்நீர்
சொரிந்திட வெறிந்து நின்றா ரூரக லடித மன்னார். (25)

ஊறுபட் டெழுந்து வாய்விண் டொப்பியாங் கரித்திவ் வில்லின்
வேறுபட் டெவரோ கொன்றா ரெனனவாய் வெருவிக் கூவ
வேறுபட் டவரியார் கொன்றா ரெவரென விடைந்து மாந்தர்
தேறுபட் டிலராய் மாழ்கி மனையிடஞ் செறிந்தார் மன்னோ. (26)

எறிந்தொளித் திருந்தோர் காயஞ் சிறிதென மனத்தி னெண்ணி
யுரைந்துசா வுவர்போ லாங்கி னுறவுவா ளோங்கிப் பின்னுங்
குறைந்துயிர் மீளத் தாக்கிக் கூரிருட் காலை கூண்டு
நிறைந்தவ ருடனு நின்று பயப்பய நீங்கி னால். (27)

மறந்தரு கொடிய வஞ்ச மனத்தபீ றாபி கின்னே
யிறந்தன னுயிர்பெற் றானென் றிரண்டிலொன் றறிவோ மென்ன
திறந்தரு மப்துல்லாவென் றோதிய திருப்பேர் மனனர்
நிறந்தரந் தெரியாக் கங்கு னின்றன ரொருபா லன்றே. (28)

இருந்தன ரவர்கொ லென்பா ரிபாவரிற் புகுந்தா ரென்பார்
தெரிந்திலன் காணு மென்பார் தீபமு மிலையோ வென்பார்
காந்தவ ருளரோ வென்பா ரொருவருங் காணோ மென்பார்
சொரிந்தது குருதி யென்பார் சோர்ந்தனன் மன்ன னென்பார். (29)

உண்டிலை யாவி யென்பா ருயிர்துடிக் கின்ற தென்பார்
விண்டனன் மாற்ற மென்பார் விழித்தனன் காணு மென்பார்
கண்டவ ருளரோ வென்பார் காயத்திற் பிழைப்பி லென்பார்
மண்டலம் புகழும் வேந்தே மாயமோ விளைந்த தென்பார் (30)

என்னினிச் செய்வோ மென்பா ரிடைந்திடைந் தேங்கி நிற்பார்
பன்னுவ தெனகொ லென்பார் பழிமுடித் தவரா ரென்பார்
முன்னையூழ் விதிகொ லென்பார் முனையகத் திறந்தி டாது
மனனவ னாவி வீணில் வழங்கினான் காணு மென்பார். (31)

மடிந்தன னென்னு மாற்றம் வழங்கிடக் கடலி னாப்பண்
படர்ந்தவெண் டிரையிற் றத்திப் பன்மணி நிதியத் தோடு
முடைந்திடுங் கலம தொப்ப மன்னவன் மனைபு ளாங்கு
மிடைந்திடைந் திரங்கி யேங்கி யெழிந்துகொல் லென்ற தன்றே. (32)

மாற்றல னிறந்தா னென்ன மனமகிழ்ந் துவகை பொங்கிப்
போற்றிநந நபியை வாழ்த்தி யப்துலலா பூரிப் போடுந்
தோற்றிடா தொதுங்கி வாய றொறுங்கடந் தெளிதி னேகித்
தீற்றிவெண் ணிலவு காலும் புரிசையின் வாயிற் சோந்தார். (33)

புரிசையின் வாயி லாலும் பொதியிருட் காலையாலும்
வரிமுறைப் படியிற் காலை வைத்திடத் தவறி வீழ்ந்து
தரிபடற் கரிதா யோர்தா ளொடிந்ததத் தாளினோடும்
விரைவொடு மெழுந்து சாநும் விடுதியை நண்ணி னாரால். (34)

மூரியங் கணைக்காற் கீழ்பான் முகிழ்தரும் பரட்டின் மேல்பாற்
சாரபற வொடிந்த காலைத் தனறலைப் பாகிற் சுற்றித்
பூரிணி லெவர்க்குந் தோன்றா துறைந்தன ருறைந்த பின்னர்
பாரிருட் படல நீத்துப் பகலவ னுதயஞ் செய்தான். (35)

கதிரவ னெழுந்தோர் சாம மிருந்தவண் கடந்து வல்லே.
பதின்மருந் தாமு மாக வேறொரு பாதை பற்றி
முதிர்தரு முளரி நீந்தி முகிலுறை வரைக ணீங்கி
மதுரமென் மறையோர் வாழ்த்த மதீனமா நகரின் வந்தார். (36)

நகரினிற புகுந்து வேத நாயகர் பதத்தை நண்ணிப்
புகுமிடத் துறைந்த செய்தி யாவையும் புகன்று காலிற்
றகைபடுத் தொடிந்த வாறு தன்னையு முரைத்து நின்றார்
மகிதலம் புகழுங் கீர்த்தி மன்னவ ரப்துல் லாவே. (37)

கொடியவஞ் சகத்தைச் சூழ்ந்த குணத்தபூ ரூபி காபி
முடிவினைக் கேட்டு தீனின் முரட்பகை தவிர்ந்த தென்ன
நெடியவ னிறசூ லுல்லா நேரலர்க் கரியே றன்னோ
ரொடிபடுந் தாளை நோக்கி யோதிச்செங் கரத்திற் றொட்டார். (38)

என்பற முறிந்து தோலு மிழந்தொரு நரம்பிற் றூங்கித்
துன்புறுந் தாளி னீண்ட திருக்கரந் தொட்டு நீவ
வன்புறப் பொருந்திக் காய மென்பதோர் வடுவு மின்றி
முன்பிருந் ததனிற் செவ்வி மும்மடங் காயிற் றன்றே. (39)

கடங்கரைத் திறைக்கும் வெற்றிக் களிறெனு மப்துல்லாவை
யிடம்பெற விருத்திச் செய்யும் வரிசைக ளனைத்து மீந்து
தடங்கடற் புடவி காத்துத் தரியலர்க் கரியே றென்ன
மடங்கலா சனத்தின் வைகி முகம்மதாண் டிருந்தா ரன்றே. (40)

அபிரூபிகு வதைப் படலம்-முற்றிற்று.
ஆகப்படலம் 24-க்குத் திருவிருத்தம் 1383.



# அசறூர்பிறந்த படலம்.



மருந்தெ னுங்கலி மாவுரை விதைத்து மக்காவி
லிருந்து மாமதீ னவிடத் தினிதெழுந் தருளித்
திருந்த வாண்டொரு மூன்றினில் தீன்பயிர் விளைத்துப்
பொருந்து நாளினி லுற்றவை யினிற்சில புகல்வாம். (1)

ஒலிகொண் மாக்கடன் மணியெனு நபியுயிர்க் குயிராய்
வலியும் வீரமும் வெற்றியுந் திரண்டொரு வடிவாய்
நிலனு தித்துய ரும்பரின் வரிசையி னிறைந்த
குலவு நீள்புக ழுமறுகத் தாபெனுங் குரிசில். (2)

அருந்த வத்தினி றீன்றெடுத் துவந்தபெண் ணரசைக்
கருந்த டங்கயற் கண்ணியை நறுமொழிக் கனியை
வருந்து மெல்லிழைக் கொடியைமென் பிடிநடை மயிலைப்
பொருந்து மாரமு தையபு ஷாவெனும் பூவை. (3)

குறைவி யக்குலக் காவினி லுறைந்தகோ குலத்தைப்
பொறையு நீதியு மொழுக்கமும் விளைத்தபொன் னிலத்தை
யுறையுங் கற்பினுக் குறையிடத் தினையொளிர் மணியை
மறையி னோர்நபி முகம்மது வதுவையின் மணந்தார். (4)

புரந்த ராதிபர்க் கரியும றருள்புதல் வியரைத்
தெரிந்த நன்மொழி தரும் ஹபு ஷாவெனுந் திருவை
வரைந்து நந்நபி யின்புறும் வாரியின் மூழ்கிப்
பிரிநதி டாநலம் பொருந்தியுண் டிருந்ததற் பின்னர். (5)

பூத லம்புகழ் தருங்கதீ ஜாபுதல் வியரின்
மாத ருக்கர சும்முக்குல் தூமணி விளக்கைக்
கோதி லாவுது மான்மனங் களிப்புறக் கொடுத்தா
ராத ரத்துடன் மகிழ்ந்தினி துறைந்தன ரன்றே. (6)

மறமும் வீரமு மிலகிய வேலுது மானுக்
குறையு மாவியின் மிக்குயிர் புதல்வியை யுதலிக்
கறைகொள் வெங்குபிரக் குலங்கடிந் தருங்கலி மானை
நறைத ரும்புவி யிடத்தினி னடத்துமந் நாளில். (7)

மல்வ ளர்நதெழும் புயனுசை மாவரத் துதித்த
செல்வி யையெழில் ஸையினபைப் பொறைச்செழு மமுதை
பல்வி தத்தொடுந் திருமண முடித்திசை பரப்பி
யில்வ ளத்தொடு முறைநதனர் ஹபீ பெனு மிறசூல். (8)

செருகு பூங்குழற் செயினபைத் திருநபி மணந்த
வருட மங்கையாக் கரசெனும் பாத்திமா வயிற்றிற்
கருவெ னத்தரித் தும்பரின் பேரொளி கவின
முரியு மெல்லிடை தெரிதரக் கருப்பமு முதிர்ந்த. (9)

கடைந்த வேல்விழி வட்டணித் தெழின்முகங் கசங்க
நடந்து நாலடி வைத்திடிற் பசந்தமெய் நலிபத்
திடந்த ராதுள மிடைந்திடத் தெரியல்க டியல
மடந்தை யர்க்கர சியரக்கரும் வருத்தமுற் றனரால். (10)

இறம லான்பதி னைந்தினில் வெள்ளியி னிரவின்
மறுவில் கற்புடை பாத்திமா வெனுந்திரு மடமா
னறமும் வெற்றியு மோருரு வெடுத்தென வரிதிற்
பொறையு யிர்த்தள ரொளிதா வொருபுதல வனையே. (11)

பொருவி லாமுத லவன்றிருப் புலியெனு மலிக்குப்
பெருகுஞ் செல்வத்துட் பிறந்தது மகவெனக் கேட்டு
முருகு லாவுமெய் புளகெழ முகமதி யிலங்க
வரிசை நந்நபி வந்தன ரவர்திரு மனையின். (12)

ஆர ணத்திரு நாவினர் சூழ்தர வடுத்த
கார ணக்கட லெனுமுகம் மதுசெழுங் கரத்திற்
பூர ணக்கதிர் பிறங்கிய புதல்வனை யேந்திக்
கூரும் வேல்விழி மடநதையா விரைவினிற் கொடுத்தார். (13)

தீங்க கற்றிய மகள்மகன் வலத்திருச் செவியின்
வாங்கு ரைத்திடக் காதினிற் காமத்தும் வழங்கிப்
பாங்கு றக்கமழ் தருநறும் பரிமள மெடுத்துத்
தாங்கு மென்சிரத் தினிலழ குறத்தட வினரால். (14)

பொன்னி லத்துறு மவர்களா மீனெனப் புகல
வின்னல் போக்கிய முதியவ ரிருகையேத் திரப்ப
வுன்னு மாமறை வாழ்த்தொடு மொருதுஆ வோதி
மன்னர் மன்னபி கொடுத்தனர் போரநதனா மனையில் (15)

தெரித ரத்தின மேழினிற் செழுப்புவி புரக்கு
மரசர் நாயகர் மகள்மனை யடுத்தரும் புதல்வன்
கரிய மென்சிர மயிரினைக் களைவித்தவ விடையி
னிரசி தம்ஸதக் காவென வெடுத்தினி தளித்தார். (16)

கொறியி ரண்டறுத் துடன் அக்கீக் காவினைக் கொடுத்துப்
பொறையின் மிக்குயர் மருத்துவப் பூங்கொடி தனக்குத்
தறுகி லாதொரு குறங்குமோர் தமனியக் காசும்
பெறுக வென்றினி தளித்தனர் நூதரிற் பெரியோர். (17)

முசுலி மானவர் செயுந்தொழிற் சடங்குகண் முடித்துத்
திசையெ லாம்புகழ்ந் துரைதரப் பேசிய செம்மல்
வசைய றுங்கரத் தெடுத்தரும் பேரனை வாழ்த்தி
யசனெ னச்செழுந் திருப்பெயர் தரித்தன ரன்றே. (18)

உருவு மந்தமு நிறமுமந் நபியென வொளி
மரும கச்செழுங் குழவியுஞ் ஜிபுரியீ லணுகி
யிருடொ றுமணித் தொட்டிலை யசைத்தரு கிருந்து
வரிசை செய்திட நாயகன் வளர்த்திட வளர்ந்த. (19)

இந்த மாநில மடந்தைய ரெவருமீ டேற
வந்த நாயகி பாத்திமா தருதிரு மகவைச்
சிந்தை கூர்தரு முவப்பொடு தினந்தினம் போற்றி
யந்த நாயகன் றா துவ ரிருக்குமந் நாளில். (20)

அசனார்பிறந்த படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 25-க்குத் திருவிருத்தம் 1403.



## அபூத்தல்ஹாவிருந்துப் படலம்.

மருவலர்க ளுயிரருந்தி யூணனுங்குங் கதிரிலைவேன் மன்னர் சூழத், திருமறைநந் நபியிருக்கும பள்ளியிடத் தெய்திமுமச் செவ்வி நோக்கி, யொருவருக்குந் தோன்றாது பசியுடனிங் கிருந்தனரென் றனனி நீங்கா, விரைவினபூத் தல்காசென றில்லவனை விளித்தொரு சொல்விளம்பு வாரால். (1)

பதலைமுச லிகையுரைப்ப வுரைத்தநபி பசிதீரப் பண்பி னோடு, முதவுதற்கே தெனினுமனை யிடத்துளவோ வெனவுரைப்ப வுள்ளங் கூர்ந்து, மதுரமொழி கியகோதும் புறட்டிமூன் றுளவெனமான் வழங்க வாங்கி, யதபுடனந் நபியிடத்தி னல்குமென அனசுகைபி லளித்திட் டாரால். (2)

மோகத்தை வாங்கியன சுவந்துதுகி லிடைபொதிந்து முருகு வாய்ந்த, போதெனுமென பதக்குரிசி லிடத்தேக முகம்மதுநற்

புளகத்தோடுங், கோதிலபூத் தல்காவோ வனுப்பினர்நீ கொணர்ந் தெனவை
கூறென் றேத, வாதரத்தி னிவரவர்கை கொடுத்ததுவுங் கொணர்ந்த
துவு மறைந்திட் டாரால். (3)

அனசுரைத்த மொழிகேட்டு நன்கெனதீ னவர்சூழ வரசர் கோ
மான், வனசமலர்ப் பதம்பெயர்த்து வரிசைபபூத் தல்காதன் மனையி
னேக, வெனபுதுமை யிஃதெனவந் தெதிரிறைஞ்சிக் கொடு போயங்கி
ருத்திச் சார்ந்தோர், தமையுமுப சரித்துறைவு மிற்புகுந்து மனைவியர்க்
குச் சாற்று வாரால். (4)

இகத்தினுமப் பரத்தினுமபே றுடையர்நம தில்லினில்வந் திருந்
தாரிந்த, ஒகுத்தினினன் குணவருள வறியவரா யிருந்தன மென்றுரை
த்த லோடு, மகத்தினிலுள் ளதுமிலது மிலையவனு மன்றாது மறிவர்
நம்மாற், பகுத்துரைப்ப தென்கொலெனப பசுங்கொடியுங் கணவனு
டன் பகர்ந்தாள் மன்னோ. (5)

துணைவனுங்கா தலியுமிவை யுரைத்துமனத் துயரொடுந துன்புறு
மப் போதின், மணமுலவு தனுவள்ள லினிதினும்மு சுலை மெனனும
யிலைக் கூவி, யுணவிளதே தெனினுமிவண் டருகவருந தீனவர்களுடனு
மியானு, மணிபெறவிங் கிருநதருந்தி யெழுவ மென முகமனொடுமருளி
னாரால். (6)

நனிபுதுமைக் குரிசிலுரை தாமகிழ்ந்து கனிமொழிசன் னுதலார்
நின்ற, அன்சுகையி னிருந்ததையோர் பாத்திரத்தி னெய்புடனங் கையி
னேந்தி, மனனுயிரின மிக்கசெழுங் கணவரிடத் தினிதளிப்ப வாங்கி
யன்னோர், கனைகடலுண் டெழுங்கவிகை நிழலில் வருபவரிருகண் களி
ப்ப வைத்தார். (7)

முன்னர்வைத்த பாத்திரத்தி னிருந்தமோ தகத்தைநறை முளரிக்
கையாற், பன்னருந்துண் டப்படுத்தி நெய்தோய்த்துப தினமாதமைப்
பண்பு கூர, வின்னமுது செய்கவென முகம்மது நந நபியிசைப்ப வினி
திளேக்கி, யன்னவாகள் கையார வாயார வயிறார வருந்தி னாரால். (8)

பதின்மரொடுத் தருநதியும்பாத் திரத்தளவு குறைந்திலபின் பஃது
மாந்த. ரிதமுறவந் திருநதருநது மெனவுரைப்பச் சொற்படியே யினிது
மாந்தப், புதுமையுடன் மேனமேலும் வளாநதன விப்படியுணவிற் பொ

ருவி லாத, மதிவலரெண் பதுபெயருக் களித்தனர்வின் ணினும்புகலு முகம்ம தன்றே. (9)

அரைவலற்றுக் காற்றுத மூன்றுறட்டி யெண்பதுபேர்க் களித்து மீறிக், கரைத்தும்பிக் கிடந்தசெழும் பாத்திரத்தை நோக்கி மனங்களிப்புற் றேங்கி, விரைவினுடன் மனையிடத்திற் கொண்டநந்து மெனவுரைப்ப விரும்பி யேந்தி, யாசாபூத் தல்காவு மனையிடத்திலுளரெவர்க்கு மளித்திட் டாரால். (10)

வரிசையபூத் தல்காவு மனைவியும்மு சலைமென்னு மபிலன்றனும், பாவியிரு பதம்போற்ற வுயிர்த்துணைவ ரெனுமரசர் பலருஞ்சூழக், குரிசினபி யெழுந்தருளி யுவந்ததிரு மனைகுறுகிக் குறைகடவா, விருநிலத்திற புகழோங்க தீன்பெருகப் புவிபுரந்தங் கிருந்தாரன்றே. (11)

அபூத்தல்கா விருந்துப் படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-26க்குத்-திருவிருத்தம்-1414.

---

# உகுதுப் படலம்.



சிகர மேருவிற் சுடரெனச் செழும்பொழில் மதீனு
நகரி னந்நபி தீனெறி நடத்துபந் நாளின்
மகர வாரியின் மலிதரு படையுடன் மருவா
ருகுதில் வந்தெதிர்ந் தமர்வினைத் தவையெடுத் துரைப்பாம். (1)

மடிவில் வானக ளுகடரு மக்கமா நகரின்
கடிகை மன்னவன் ஹறுபுத வியஅபா சுபியா
னடலு றுந்தனி யரசாக ளெவரையு மழைத்து
நடுவு றும்படி கருத்தினுற் றவைசில நவில்வான். (2)

பதுறின் மாண்டவர் பழிகொளா திருத்தலே வடுவா
லதனி னும்வடுப் போய்பொரு ளனைத்தையு மிழந்த
திதுவ தனறியு மினம்வடு வெதிர்பொரா திருத்தல்
புதுந ருத்துளித் தொழுகிய செழுமலர்ப் புயத்தீர். (3)

உதிக்கு மேலவ ரொருவர்க்குத் தீங்குறி னுறைந்த
பதிக்கு மப்பெருங் குலத்துக்குந் தீங்கெனப் படுமான்
மதிக்கும் வெற்றியுண் டெனிலவை முதல்வரன் முறையாய்
துதிக்கு மெவ்வுல கிடத்தினுஞ் சுடர்வடி வேலீர். (4)

இறந்த மன்னவர் துணைவரும் புதல்வரோன் பவரு
நிறைந் திருந்தனர் நிதியமுங் கணிப்பில நிறைந்த
திறந்த ருந்துணி வுளவெனிற் பகையெனுந் தீஞோ
புறந்த ரும்படி முடிப்பது மரிதல புகழீர். (5)

இந்த வல்வித மனைத்துநம் மிடத்தினி லிருந்தும்
புந்தி யற்றிவ ணிருந்தன முணர்விலோம் புனியின்
மந்தி ரத்தொழி லொன்றலான் முகம்மதென் பவனுக்
கெந்த வெவ்வித மிருந்தது கதிரிலை வேலீர். (6)

மதுகை மன்னவர் பதறிலென் பொருட்டினின் மாண்டா
ரெதிரும் வன்பழி சுமப்பதுந் துடைப்பது மியானே
புதல்வர்க் கும்முயிரத் துணைவர்க்குந் தேடிய பொருட்கும்
பதியின் மன்னர்க்கு மென்னெனத் துணிவொடும்பகர்ந்தான். (7)

கரைத்த மும்மதக் களிறெனும் ஹறுபருள் புதல்வ
னுரைத்த வாசகங் கேட்டலு மபூஜகு லுதவுங்
கிரித்த டப்புயன் வீரத்தின் மருவிலிக் கிரிமா
பரித்த சொல்லினைப் பகர்ந்தனை யெனப்பக ருவனுஞ். (8)

தநதை யர்க்குறு முறவினாக் கொருதவ றடுக்கி
னந்த வேளையி னுயிரையு மளிதகிட லழகாற்
றந்தை தன்பழி கொளற்கிசை யாதவன் றனையு
மநத மன்மக னெனபது மிதுவுமோ ரழகால. (9)

வடுவுந தீமையுந் தந்தையர் பழிகொளா வழுவு
நடுவில் செய்கையுந் தேயங்க ணகைத்திடு நகையு
முடிவி றுன்பமு முனையறம் பேடியென பதுவு
மிடுநி லத்தினி லெனக்கலாற் பிறரவர்க் கிலையால். (10)

பிறங்க லும்மவன் பெயரினிற் பிதிர்த்துவிட் டெறிவன்
கறங்கு வாரிதி யாயினு மவனை பெயர கழறி
னிறங்கெ டுத்தள ருக்குவ னோல ருயிருண்
டுறங்குஞ் செங்கதி ரயிலெடுத் தேநதிய வுரவோய். (11)

இன்று பற்பல வீரத்தின் வாய்க்கொளா தெடுத்து
மன்று ளோர்செவிக் கின்புற மாற்றங்கள் வழங்கல்
நன்ற தன்றுதீ னெனுமவர் நாமங்க டொலைக்கு
மன்று கண்டறி சமர்த்திற மெனவெடுத் தறைந்தான். (12)

கொடிய வஞ்சக னபூஜகல் சேயிவை கூற
மடிவில சிந்தைய பாசுபி யானுள மகிழ்ந்து
முடிவு கண்டனன் தீனவர் தமக்கென மொழியத்
திடவ யப்பரி கலபருள் புதல்வன்செப் புவனால். (13)

வாட்டி றத்தினும் வீரத்தின் வலியினு மதியா
வாட்டி றத்தினு மெடுத்தெடுத் தறைந்ததே யன்றி
யீட்டும் வஞ்சக முகம்மதின் மாயங்க ளொதிராந்து
கூட்டு நம்படை யுடைக்குமென் பதுகுறித் திவிரால். (14)

வினைய வஞ்சகன் முகம்மது வினைத்திடு மாயந்
தனைய ழிததிட வல்லவர் தமைச்சவ தரித்து
நனிகொள் வெம்படைக் குழுவொடும் போரமர் நடத்த
நினைவு வைத்திட வேண்டுமென் றுரைநிகழ்த் தினனால். (15)

கறுபு புத்திரன் கழறிய மாற்றமுங் கடிதின்
முறுகி வெஞ்சினத் தபூஜகல் மகன்மொழிந் ததுவும்
முறும மர்ப்புலி கலபரு ளுபையுரைத் ததுவும்
பொறைம னத்துணர்ந் தியையுற காலிது புகல்வான். (16)

மாயவஞ் சனைத்தொழில் வருமெனின் முகம் மதுமன்
றூய தன்குலத் தவர்களும் வெறுப்பவந் தாமா
யேயும் வல்லிருட் போதினி னகரினை யிழந்து
போயதென் றொளித்துமுள் ளடவியின் புறத்தில். (17)

வஞ்ச னைத்தொழி லென்றிவ னுரைத்தவை மதிக்கி
னஞ்சு மாண்மையி னவர்தொழி லுரைப்பது மலவாற்
றஞ்ச மற்றவ னுடைந்திட வினநதள நடத்தி
யஞ்ச லாதமர் விளைத்திடல் வெற்றியி னழகால். (18)

உருக்கொள் வெஃபொறிப புரிசையும் வானுறு மேரு
நெருக்கி டாவரை யிடங்களு நீண்டமா நிலத்தின்
மருக்கொ ளும்பொழில் காத்திட வாரியின் வளைவி
னிருக்கும் போரணைவைகளும் பெரும்படைக் கிலையால். (19)

அறபு மக்கநந் நகர்ப்படை கொடுமுகம் மதுவைத்
தெறுவ தற்கிட மிலையினுச் செழும்பொரு ளதனாற்
புறந கர்ப்பெரும் படையெடுத் தொல்லையிற் பொருது
மறமும் வெற்றியு நிறுத்திடத் துணிவது வழக்கால். (20)

முத்தி ரைப்பத மிஃதென நினைத்திரேல் முனையும்
புத்தி யும்நமர் செல்வமும் வலிமையும் புகழும்
பத்தி யுங்குலச் சமயமும் பழுதிலா தினிதி
னெத்த லத்துமெந் நாளினும் விளங்குமென் றிசைத்தான். (21)

வலிய வீரத்திற் சூழ்ச்சியிற் றிறத்தினின் மதிக்கு
மொலிது சேயிவை யுரைத்திட யாவரு முவந்து
நிலை கொளும்படி யுரைத்தனை யெனப்பல நிதிய
மலகி லாதவ னுரைப்படி யினிதெடுத் தளித்தார். (22)

குலித ருத்துணை யவரொடு பொலிதருள் குரிசி
லபஃதி தேயத்திற சென்றரு நிதியளித் தடலி
னுவமை யில்லென வுறுசமா வீரரைத் தெரிந்து
திவளும் வேற்படை யுடனணி சேகரஞ் செய்தான். (23)

அடரும் வெஞ்சம ரிடத்தினி லடித்துணை பெயரா
மிடலு டைத்திற லபஃதிவெம் படையொடும் விளைந்த
கடக யத்தட லினர்களு னத்தெனுங் கூட்டப்
படையொ டும்புறப் பட்டனன் காலிதென் பவனே. (24)

வீர மிக்கக ளுனத்துக் கூட்டவெம் படையுங்
கார்நி றத்தப ஃதிப்பெரும் படையுடன் கலப்பக்
கோர வாம்பரி யொலிதுசெய் தவத்துறுங் குரிசின்
மாரி யம்பொழின் மக்கமா நகரினில வந்தான். (25)

காலி தென்பவன் பெரும்படை யுடன்வரக் களித்துச்
சூலின் வானமின் னெனுங்கதிர் வேலபா சுயியான்
பாலிற் சூழ்தரு பாடியிற் பெரும்படை திரட்டிக்
கோல மார்குர கதத்தொடுங் கூட்டமிட் டனனால். (26)

வருக ளுனத்துக் கூட்டமும் வளைந்தவா ருதியைப்
பருகுங் காரக்குல மெனவரு மபஃதிவெம் படையும்
பிரிவி லாப்புற நகர்பெரும் படைகளும் பெருகி
யரிய மானக ரிடனற மலிந்தன வனறே. (27)

மறந்த ருங்கதிர் வேலொடுங் களத்திடை பதறி
விறந்த மன்னவர் மைந்தருங் கேளிரென் பவருங்
குறைந்தி டாப்பெருங் குறைஷியங் காபிரின் குலமு
மறந்த ராமனத் தொடுஞ்சமர்க் கோலங்க ளானார். (28)

சுரிந்த பங்கியர் சேந்தகண் ணினர்மலைத் துளையின்
விரிந்த வாயினர் வெள்ளெயிற் றினரிருள் விடத்தின்
கரிந்த மெய்யினர் திரட்டுணைத் தாளினர் கபடம்
பொங்கு நெஞ்சின ரிருக்கமெள் ளளவினும் பொருந்தார். (29)

சீற்றங் கூண்டுருக் கொண்டெனத் தோன்றிய திமலோர்
சாற்றொ ணாத்தறு கண்மையு மறனுமே தரித்தொ
ரூற்ற மிக்கவெவ் வசியினும் வலிமைய ருணர்வின்
மாற்ற மென்பது செவிப்புறந் தனினும்வைத் தறியார். (30)

இனைய தன்மையர் அபஷிகள் குலத்துவ ரிதயத்
துணிவி லாதுழு வாயிரம் பெயரவர் சூழக்
குனிசி லைக்கைக ளனத்தென் பவர்பல குழும்பப்
புனையும் வெற்றிகொண் டெழுந்தன னலீது தன் புதல்வன். ()

அடவி யிற்படை புறநகர்ப் படையவ னுறவி
னுடையர் மிக்கொடு வரும்படை பகயினி னுடைந்தோர்
படைப டைக்கலத் தொடுநெருங் கிடப்பரி செறியக்
குடைக வித்திட வெழுந்தனன் கறுபுதன் குமான. (32)

மக்க மாநகர்க் குறைஷிமன் னவர்களும் படையு
மொக்க லும்முயிர்த் துணைவரு முறமகப் படையு
மிக்க போற பிக்குலக் காபிரு மிடையத்
தக்க வன்மனத் தெழுந்தன னபூஜகல் தனையன். (33)

அலங்க லம்புய வீரன் பாசுபி யானுங்
கலனகொண் மெய்யொளி பிறழ்தரக் காலிதென் பவனு
மிலங்கு நீளயிற் செழுங்கா ணிக்கிரி மாவு
நலன்கொ ளும்பெரு நகரம்விட் டணியொடு நடந்தார். (34)

நிலன திர்ந்திடப் பணித்தலை பணித்திட நீண்ட
மலைபி திர்ந்திடச் சிறுபொறை யமிழ்ந்திட வழிபோய்க்
குலவு மெண்டிசை திடுக்கிடக் குலமணி சிதறிச்
சலதி மாநிலம் பரந்தெனப் பரந்தது தானை. (35)

சேனை யுந்திறல் வேந்தருந் திரளொடு நடப்ப
வானும் வானகத் துலவிய விசும்புமண் ணகமும்
கானும் பேர்வரைக் குடுமியுந் திகந்தமுங் கடலுப்
பானு வெல்லையு மறைத்தன வெழுந்துகட் படலம். (36)

குவளை மைவிழி மாதர்கள் சுகத்தடங் குளித்துக்
கவள மார்கட கரியினு மதத்தெழுங் காயிர்
திவளும் வேலொடு நடந்திடுஞ் சேனையங் கடலுட்
டவள மாமுகில் யர்ந்தெனச் செறிந்தசத் திரங்கள். (37)

குதைகொ ளுங்கொடு மரங்கரம் பிடித்துவைக் கொழுங்கோல்
புதையு மாவங்கள் வெரிநிடைப் பூட்டிய புருடர்
பதம்பெ யர்த்திட விடமரி தெனும்படை நெருக்கின்
கதலு நீள்வனம் போன்றன கதலிகைக் கானம். (38)

நெய்வ ழிந்தசெங் கதிரிலை வேல்கொடு நேடி
மைமு கிற்குடை முகம்மதை மாறுகொண் டிகலி
மொய்ய மர்ச்செலல் பழுதென யாவையு முனிந்து
கைம றித்தன போன்றன குழைந்தவெண் கவரி. (39)

வேத நாயக முகம்மதின் தீனிலை விரும்பாப்
பாத கக்குபி ரவருடற் பாழ்ங்குழி படுத்தப்
பூத லத்தினில் வம்மின்க ளெனத்தளி புழுங்கி
யாதி வானவர்க் குரைத்தென முரசங்க ளதிர்ந்த. (40)

பரவை மாநிலஞ் சுமந்தவெம் பரிகளைப் பரிகள்
விரைவின் வேகத்திற் சுமந்தன வேந்தரை வேந்தர்
மரும லர்ப்புயஞ் சுமந்தன வாட்களை வாட்கள்
பெருகு மூணிணஞ் சுமந்தன பிறங்கொளி பிறங்க. (41)

பரியொ டும்பரி மிடைதலிற் பாரிட மிலையாற்
றெரியும் வீரர்கண் மிடைதலிற் செலும்வழி யிலையாற்
புரியும் வெண்குடை மிடைதலில் வெயிற்பக லிலையா
லெரியுஞ் செங்கதிர் வேன்மிடை தலிலிரு ளிலையால். (42)

வாய்ந்த வெற்றிசற் றுண்டெனக் காட்டின வதன
மேய்ந்த துற்குறி காட்டின வேந்தர்க ளிடத்தோள்
காய்ந்த வெஞ்சினங் காட்டின வீரர்கள் கடைக்கண்
பாய்ந்து வெணபணிச் சுமைபயங் காட்டின பரிகள். (43)

ஆறு கொண்டென திசைவெளி யடங்கலு மரிதிற்
சேறு கொண்டன வாசியின் வாய்நுரை சிதறி
நீறு கொண்டன வரைகளு மடவியு நெருங்கி
மாறு கொண்டயன் காபிர்தம் பெரும்படை வரலால். (44)

கணித மில்லெனத் தொகைபல வயிரங்கள் கலந்த
பணியி மைத்தன வேந்தர்க டோட்பரு பதத்தின்
மணியி மைத்தன வாளயி லிமைத்தன மதித்த
அணிவ குத்தெழும் படையினை நோக்குதற் கமைந்தே. (45)

கொடியு மாலவட் டங்களும் விரிந்தவெண் குடையும்
புடைப ரந்திட வெழுந்துகட் டுதினைப் போக்கி
யடிகொள் மல்லிய முருமென வதிர்ந்திட வகன்ற
படியு முள்விழ நடந்தது சேனையம் பரவை. (46)

கரைசெய் மாநதி யிடங்களுங் கடங்களுங் கடந்து
வரையு மவ்வரைச் சாரலும் வனத்திடை கிடந்த
திரைசெய் பேரொலி மடுக்களுந் திடர்களுங் குறுகி
யரசர் நாயக முகம்மது சதுர்த்தல மடுத்தார். (47)

புகா றும்பெரும் பாடியுஞ் சிறுகுடிப் புறமு
மிகலெ னத்தனி பயத்தெடும் வயிறலைத் தேங்கிப்
பகரு மாநரு மைந்தரு மடவியிற் படா
வுகுதெ னும்மலை யிடத்தினிற் படையொடு முறைந்தார். (48)

குவியும் வெள்ளியம் பொருப்பெனப் படங்குகள் கோட்டிப்
பவுரி வாம்பரித் தொகைபல நிரைநிரை படுத்தி
யவிரும் பொன்னொளி விரித்தநி சானிக ளமைத்துத்
திவளு மாவணம் வகுத்தரும் பாசறை செய்தார். (49)

ஹறுபு மைந்தனு மிக்கிரி மாவும்கா லிதுவுந்
திறல டற்பெரும் படையுட னுகுதினிற் செறிந்து
மறமு திர்நதிகற் கிறங்கின னெனவொரு வசன
முற்ச மர்ப்புலி முகம்மது காதினி லுறைத்தார் (50)

பூத லம்புகழ் மதீனமா புரத்தின்கீழ் புறத்திற்
காத மாமெனக் காபிர்க ளடைந்தவை சுழற
வேதி லர்க்கட லரியெனு நபியிறசூல்கேட்
டாத ரத்தசு ஹாபிக டமையழைத் துரைப்பார். (51)

கருத லாரிவ ணடுத்தடைந் தனர்குயிர் களோதற்
கரிய நாயக னருளும்நம் பானுள வடலிற்
றெரியும் வீரத்தின் வானுரு மேமென்றனுந் திறலீ
பிரவி னியாமொரு கனவுகண் டனமெனை விசைப்பார். (52)

கேடின் முன்றிலிற் பசுவறுத் திவண்கிடப் பவும்போ
ராடன் வாளின்வாய் தாரைசற் றறவுதிர்ந் திடவு
மூடுமென் னுடற் சோட்டினிற் காமுரு கிடவு
மேட லம்புயத் தீரிவை காண்டன னியைய (53)

அகத்தின் வாயலிற் பசுவறுத் திருப்பக்கண் டதனாற்
செகுத்தி டற்கரு மென்னுயிர்த் தோழரிற் சிலபே
ருகைத்த டர்நதுவெங் காபிரக டிரள்கெட வொடுக்கி
மிகுத்த வீரத்தி னுயிரிழந் திடுதலும் வேண்டும். (54)

ஓங்குஞ் செங்கதிர் வாளதின் முனைசற் றாசற் றுதிரப்
பாங்கிற் கண்டதென் னுதிரத்தின கலப்பினா பரிவாற்
றங்கும் வேலெடுத் தரிகளைச செகுத்துவெஞ் சமரின்
வாங்கி டாதுநின் றுயிரினை வழங்கவும் வேண்டும். (55)

தரித்த சோட்டினிற் காம்புகுந் திருப்பதென் றனுவின்
விரித்த ரூறுபட் டுதிரங்க ளொழுகவும் வேண்டு
மொருத்த னம்மிடத் துளனவ னுதவிகொண் டிவணிற்
றிருத்தும் வெற்றியு முளசெழுஞ் சேவகத் திறத்தீர். (56)

அறபிக் காபிர்தந் தானையு மபஷிவெம் படையும்
புறந கர்ப்பெருஞ் சேனையும் புரவியின் றிரளுங்
ஹறபு மைந்தனு மபூஜகல் மகனும்கா லிதுவு
முறறசி னத்தொடுங் கொடுமனு யுகுதினுற் றனராய். (57)

இற்றைப் போதினி லுமெழுந் தெடுத்தெதி ரேறிப்
பற்ற லாருட னெதிரமற் விளைத்திடல் பழுதான்
முற்று நம்படை கொண்டிவ ணிருந்துநம் மூதூர்
சுற்றி யெங்கனுங் காத்துட னுடைறவது துணிவால். (58)

திருக்கு றுங்கருத் தடைலற் சினத்தொடுங் கெழுமி
யிருக்கு நம்மிடத் தினும்வரு வாரெனி லெதிர்நது
முருக்கி நம்புகழ் நிறுத்துதல் கடனென மொழிந்தார்
மருக்கொ ழுந்தொடை தயல்புயநூதா வள்ளல். (59)

குரிசி லிவ்வுயிரை தரப்பெருந் தீனவர் குலத்துக்
க்ர்சர் நால்வரு முயீறெனுந் தோழமை யவருந்
தெ்ரியக் சேட்டரு நினைவொடு மொளிர்சிரந் தூக்கி
யுரையி னுணர்ந் தேற்பவை யிஃதென வுரைப்பர். (60)

தீனை மாறும்வெங் காபிர்க ளுறைவிடந் தேடி
யீன மின்றிவெந் திறன்மறங் கெடப்பொரு திகலி
நூணி றைந்தவாய்ப் பேய்மகிழ் தரவிருந் தூட்டி
வானு மேத்திடப் புகழினை நாடொறும் வளர்த்தோம். (61)

அந்த நாளொழிந் தவரடு படையொடு மரிதிற்
சிந்தை தேறியிப் போதுநந் தீனவர் திகைப்ப
வந்து பாசறை யிறங்கின ரெனிலவை மறுத்துப்
புந்தி யற்றிவ ணுறைவது முறையல புகழீர். (62)

காத மாமெனத் தீமையர் பாசறை காண்டும்
வாதி யாதிருந் தோமெனி லவமொழி வளருங்
கோது றும்மஃ தன்றியு முனைத்திறங் கோடு
நீத மன்றிவ ணிருத்தல் போய்ப் பொருவது நினைவால். (63)

என்று மிவ்வுரை யிறையவ னடிடிவ ரியம்ப
மன்னு மாமறை முகம்மது கேட்டுள மகிழ்வுற்
றன்ன தேகருத் தெனமொழிந் தினிதொடு மரிதிற்
பொன்னு லாந்தடத் தாள்பெயர்த் தெழின்மனை புகுந்தார். (64)

இல்லி டத்தினி லுறைந்தருஞ் செழுந்துகி லெடுத்து
வில்லு மிழ்ந்தமெய் யிடத்தினி லழகுற விசித்துச்
செல்லெ லுங்கரத் தாசிரச் சபூகினைத் திருத்தி
யல்லெ லுந்திறக் கரூம்பொற்கஞ் சுகியையு மணிந்தார். (65)

வெருட்டு மன்னவ ராண்மையு நோக்கிய விழியு
மருட்டு மைக்கருங் கிடுகொடுங் கொடுமர மணிந்தா
ரருட்ட மூரிய தொடையலம் புயவகு மதுபா
விருட்டொ டும்பிறை தோன்றிய வெனக்கிடந் திலங்க. (66)

தரைதி டுக்கிடப் பணித்தலை கெளித்திடச் சதுர
வரையு மூடுரு விசசெனறு திசைகளு மருட்டிப்
பரவை யேழுநீ ரறக்குடித் தளறெழப் படுத்தி
விரைவி னெய்துகோற் றூணியும் வெரிநிடை யணிந்தார். (67)

பொருத ரத்தவர் மனத்தினில் வெருக்கொளப் புகலுந்
திரும ருங்கினில் வாளொடுங் கானகஞ் சேர்த்து
மருவ லாருயிர் பருகியூ றுண்டுறை வடிவெ
லொருகை யேந்தின ரிருகரம் பொருந்திய வுரவோர். (68)

அரிய வானவ ரெவருநீள் புவியிடத் தவருய்
வருடு கின்றசெந் தாளிணைத் தாமரை மலரைப்
பருதி வெங்கதிர் மூடுவ போன்றன பரிவிற்
பொருவி லாதசெங் கபுசினை விரைவொடும் புனைந்தார். (69)

ஆக மெங்கணு மழகுறப் படைக்கல னணிந்து
மாக மீதெழு மதிதரை நடந்தென மனைவிட்
டோகை கூர்தர நடந்துபள் ளியினிடத் துறைந்த
வாகை யந்திருத் தோழர்க ளிடத்தினில் வந்தார். (70)

அடுப டைக்கொடுங் காபிர்க ளடைந்தது மரிதிற்
கொடிதெ னக்கன வுரைத்ததுங் குறித்தெடுத் தாய்ந்து
முடிவி லாப்பெருங் காரணர் திருமுக நோக்கி
மடிவில் சிந்தையர் கேண்மினென் றொருமொழி வகுப்பார். (71)

பொருந்து நன்னெறித் தீனிலை பயிற்றிய புகழோய்
திருந்தி லாவழித் தீமையர் படைக்கெதிர் சேரா
தரந்த தும்பிய படையுடன் கெழுமியிவ் வூரி
னிருந்து போர்பொரு குவதுநன் கெனவெடுத் திசைத்தார். (72)

இன்ன வாசகங் குறித்தெடுத் தாய்ந்துளத் தெவரு
முன்னி முன்னரிற் செலப்பழு தெனவுரைத் தீரில்
முன்னி யப்படைக் கெதிர்த்தனன் றெனமுடித் தீரா
லன்ன வாரியைந் தடுபடைக் கலனெடுத் தணிந்தேன். (73)

மெய்யி னுபுதஞ் சேர்த்துவந் தாலமர் மேவி
வைய கம்புகழ் தரப்பொரு திவண்வர வேண்டு
மைய முற்றிருப் பதுநபி முறைமையவர்க் காகா
வெய்ய தன்மையாஞ் சீர்த்தியை நாடொறும் விளைத்தீர். (74)

ஆகை யாமலர்க் கோலம்விட் டிருப்பதன் றடங்கா
வேக மீக்கொளும் படையெழக் கடிதினில் வேண்ட
லோகை யென்றுரைத் தருளினர் கேட்டன ருவந்து
லர்கு றும்படி தெளிந்துசம் மதித்தனர் வயவர். (75)

பொருந்தி நின்றவ ரியாவரு மொருப்படப் புகழு
மருந்தி றற்படை யொடுமினி தெழுகவென் றறைந்து
தருந்த டப்புய விபுனும்மி மக்குத் தூமைத் தவங்கொண்
டிருந்த நன்னகர்க் கரசென வியற்றின ரன்றே. (76)

பேத மற்றஷவ் வாலென வுரைத்திடும் பெரிய
மாத மேகிரண் டினில்வெள்ளி வாரத்தின் வணங்கி
யோது குத்துபாத் தொழுதபின் மறைபிய மொலிப்பத்
தீத றம்படி யெழுந்தனா ஹபீபெனுஞ் செம்மல் (77)

நிரைநி ரைப்படி தீனவ ரிதயங்க ளெகிழ்ந்து
விரைவி னிற்கைக ளேந்தியா மீனொலி விளம்பத்
தருவெ னத்தருந் தூதருந் தடக்கர மலர்த்தி
யருற றைச்செழும் பாத்திஹா வோதின ரன்றே. (78)

காயு மேற்கனல் வடவையு மவிதரக் காயும்
பாயு மேற்றிசை வெருவவான முகட்டினும் பாயு
மேயும் வன்கிரி யுடைத்தருங் குளம்பினு லெரிந்து
தோயும் வெண்டிரைக் கடற்குழி யேழையுந் தூர்க்கும். (79)

மருத்து வேகத்தின் முன்னும்வெங் கதிரினை மருட்டுங்
கருத்தின் வேகத்தை யேய்ந்தவெந் திறத்தகண் ணடங்காத்
திருத்து சித்திரத் துடையவச் சுவமகிழ் சிறப்ப
வரத்தி றத்தினர் கொணர்ந்தனர் நபிமுகம் மதுமுன். (80)

மாதர் தம்மன மொத்தகந் துகத்தின்வத் திரத்தைத்
தாது குத்தசெந் தாமரைக் கரத்தினுற் றடவி
வேத மன்னர்தீன் தீனென வேத்திட விரைவி
னுத ரத்துடன் மகிழ்ந்தினி தேறின ரன்றே. (81)

நிலைகொ ளுந்தவத் தறிவினன் மாக்களு நீண்ட
கலைவ லாளரும் பதத்துணை யேத்திடக் கவினுர்ந்
திலகு நன்னுதற் சிற்றிடை யவர்பலாண் டிசைப்பப்
பொலன்மு கட்டினின் றமரர்கண் மலர்மழை பொழிந்தார். (82)

வேறு.

மறைவினை யாடி காளேம் மறுத்தழும் பிருந்த நாவார்
பொறையுட னறிவும் பின்னிப் புரண்டுகொண் டிருந்த நெஞ்சர்
ரிறையவ னேவல் வண்மைக் கறதொடு மியைந்தா வேகத்
துறையினுக் குருமே ரூர்த்துத் தோன்றினுந் துவைக்கு நீரார். (83)

வெற்றியிற் புகழிற் போரின் வேட்கைய ருறுந் தேடும்
பற்றினர் நடுவி னுற்ற பண்புறுந் தகையர் வேண்டுங்
குற்றமி லழகு மெய்யிற் கொழும்படைக் கலன்க டாக்கிச்
சற்றொரு வடிவுண் டென்னச் சாற்றவுந் தகைமை யோரே. (84)

இனையன கூறுந் தன்மை தீனவ ரேழு நூறு
புனைமணித் திண்டோள் வேந்தர் பொருபடைக் குழுவி னீண்ட
கனைபரி சூழ மற்றக் காவல ரெவருந் தத்தஞ்
சினமுறும் படையி னோடு யடந்தொறுந் திரண்டு மொய்த்தார். (85)

அறந்தலை மணக்குஞ் செங்கோ லாசுமேற் கொள்ள வாசி
நிறங்களித் துவகை கூற் வளைமுக முயர்த்தி நீட்டி
திறங்கெழுஞ் செழுநர் நெஞ்சந் திடுக்கிடக் கனைத்துத் தாளைப்
பிறங்கெரி தவழ்கட் பாந்தள் வெருக்கொளப் பெயர்த்த தன்றே. (86)

நெடுந்துளைப் பெருவாய்க் காளத் தொலிதிசை நிமிர்த்த வாரார்
கடுங்கடிப் பிடுகட் பேரி யிடியெனக் கலித்த வோசை
விடும்படை யியங்க ளியாவும் விரிதிரை யொடுங்க வார்த்த
திடங்கலும் வேந்தர் தண்டஞ் செறியிடந் தோன்று மன்றே. (87)

கணைமழை பெய்யு மூரிக் கார்முகங் கருத லார்த
மணியுரங் கிழித்த நேமி யரத்தநீர் குடித்துச் சோரி
மணங்கம ழுயிரெனய் யுண்டு வாய்கிடந தெரியுஞ் சூலத்
தணிவிலாத் திறஞ்செய் தண்டஞ் சேவகர் தாங்கி னூரால். (88)

காரெனச் செறியத் தூளி கடலெனச் சலவாத் தோத
நீரெனப் பரக்க வாசி நெடுவரை மாடங் கொண்டோர்
பாரெனக் கிடந்த வெற்றிப் பதிமறு கெல்லை நீங்கிப்
போரெனக் களித்து வேட்டுப் பொருபடை படர்ந்த தன்றே. (89)

மண்ணியல் வளாக மெல்லாம் வயப்படை தடவி நின்ற
பண்ணியற் கொடிக ளெல்லாம் பயோதரந் தடவி நின்ற
வெண்ணிய திசைக ளெலலா மெழுந்துக டடவி நின்ற
விண்ணிடந் தடவி நின்ற மிகுசல வாத்தி னோதை. (90)

மாற்றலர் திறமுங் கூறும் வாய்மையு மொடுங்க வெற்றி
யூற்றமு மொடுங்கத் தேறு வுள்ளமு மொடுங்க வந்த
தோற்றமு மொடுங்க நின்ற தொன்னெறி யொடுங்க மாறுச்
சீற்றமு மொடுங்க வேத தீனவ ராத்துச் சென்றார். (91)

திடந்தருந் தூதர் கோமான் சேனையம் பரவை பாரி
னடந்தபே ரார்ப்பி னெட்டுத் திசைநடுங் கினவே தண்ட
மடங்கலு மசைந்து விண்ணு மடிக்கடி யதிர்ந்த கோர
விடங்களை யரிதிற் கக்கி யனந்தனும் வெருக்கொண் டானால். (92)

தண்டம்வே லொடுகுந் தம்வாட் டனுப்படை மிடைந்த பாயுந்
திண்டிறற் பரியி னோடுஞ் சேவகர் மிடைந்த வண்கைக்
கொண்டவெண் குடைக ளோடுங் கொடித்திரண் மிடைந்தவெங்கு
மண்டுபே ரியங்க ளியாவு மஞ்சொடு மிடைந்த வன்றே. (93)

காரண மென்ப யாவும் ஹபீபுதம் மிடத்திற் காட்டப்
பூரணப் புளக மியாவுந் தீனவர் புயங்கள் காட்ட
வீரமில் வெகுளி யாவு மிருவிழிக் கடைகள் காட்ட
வாரண மொழிக ளியாவு மணங்குவாய் காட்டிற் றன்றே. (94)

சுதிகளொத் திசைகள் பாடிச் சுரும்புணுந் தொடையற் றிண்டோ
ளிதமுறும் வேந்தர் சேனை யிரைதிரைப் பரவை யொத்த
கதிரவன் றன்னை யொத்த கணிப்பிலா வட்டங் கோடி
யதிகளை யொத்த சூடுஞ் சருவந்த மௌலி யன்றே. (95)

வேறு.

அல்லுங் கல்லுமொத் தனமனக் குபிரவர் படையிற்
செல்லுஞ் செல்லுமென் றேவின விசிறியின் றிரள்கள்
கொல்லுங் கொல்லுமென் றுரைத்தன பல்லியங் குழுறல்
வெல்லும் வெல்லுமென் றாடின விடுநெடுங் கொடிகள். (96)

வட்ட மிட்டன வீதியிற் றிரிந்தன மகிழ்விற்
கொட்ட மிட்டுநின் றாடின வெண்டிசை கூச
வெட்டு மென்னவு மெழுந்தன போரென விகலும்
விட்டி டாச்சின வேந்தரைச் சுமந்துவெம் பரிகள். (97)

மேக வெண்குடை சுற்றினு முற்றினும் விரைவிற்
காக முஞ்சகுந தமும்பறந் தோடின கடிதி
னேகும் வாம்பரி யொடுமற மனரொடு மியைந்து
சோகுங் கூளியு நிறைந்துகொண் டேகின தொடர்ந்தே. (98)

மலைய வெம்பகை முடித்தரும் புகழுண்டு மறுத்து
முலகிற் கான்றன வாய்நுரை தரும்பரி யுடன்ற
வலைக டற்படை செல்வழி யடங்கில வதனாற்
பலநெ றிக்கொண்டு படர்ந்தன ரொருநெறி படர்ந்தோர். (99)

அரிய வன்றிரு வாக்கினு னுரைத்த வாரணத்தின்
விரியு நூற்கலை யாவுமீ மானுமே வேண்டித்
திருவி னொடொரு மனத்தினிற் றுங்கிய தீனோர்
புரவி மேற்கொண்டு தாங்கிட மகிழ்வொடும் போந்தார் (100)

செருக்கெ னுங்கடற் குடித்துநெய் கமழ்ந்துதீத் தழற்கொ
டிருக்கும் வெம்படைக் காபிர்தந் திறத்தொடு மிதயம்
வெருக்கொ ளும்படி முகம்மதும் விறல்ஸஹா பிகளுந்
தருக்கி னோடும் வந்துற்றனர் சவுத்தெனுந் தலத்தில். (101)

தீனை மாறியிப் பெரும்பகை விளைத்திடுஞ் சிறியோர்
தானையும் நமத நீகமு மடுந்திறற் சமரை
யீன மின்றிநோக் குவமெனச் சேயொடு மெழுந்தார்
மானை யுங்கயன் மீனையு மருட்டுகண் மடவார். (102)

தூத ராகிய யூதப நோக்கியே தொடர்ந்த
நீத ராமெனு மதகரித் தொகுதியை நேடி
யாத ரக்கய முனியொடும் பிடிகள்வந் தனைய
மாத ராவிமைந் தருங்கலந் துதநுவந் தனரால். (103)

பொருவி லாசவுத் தெனுந்தலத் திறங்குமப் பொழுதி
லரிய வெம்படைத் தலைவரில் அப்துல்லா வென்போன்
முரியும் புன்மனத் தவன்முனு பிக்கினின் முதியோன்
வெருவி வேறொரு நினைந்தனன் புகழினை வெறுத்தான். (104)

மக்க நன்னகர்க் குடந்தையென் பதுதலை மதித்து
மிக்க ரூமன்றன் கலைப்பினி லகப்பட்டி வெகுண்டுந்
தக்க நன்மதி யகற்றியே யுளந்தடு மாறி
யொக்க லோர்முகம் பார்த்திழி தருமொழி யுரைப்பான். (105)

இன்று மாற்றலர் தண்டினே டெதிர்வதற் கெழுவ
தன்று காணென வுரைத்தன னியாவரு மதனைக்
கன்றல் சொண்டனிர் மறுத்தனி ரினியென் கொல் கரைவ
தொன்றி யானினி வருவதில் லெனச்சினந் துரைத்தான். (106)

உரைத்துத் தன்னைக்கொண் டொழிநகில னொடொரு முறு
நிரைத்த சிந்தையன் சிறிதுபே ரிதயமு நெகிழத்
திரைத்த வாசக மறையினிற் பயம்பெறச் செவியிற்
சரைத்து விட்டனன் முறித்தனன் போவதுங் கலைத்தான். (107)

டட்கூ மிட்டவெம் படையின் மூப் பகுப்பினிற் குறித்து
நாட்டி யோர்பகுப் பருந்திறல் வீரரு நணுக
வேட்டல் கொண்டழுந் தேகின னடங்கிலா விரிநீ
ரோட்டங் கூவனீர் கொண்டெழுந் தோடிய தொத்தே. (108)

வஞ்ச நெஞ்சிபு லீசுதன் மதலையை மாணும்
வெஞ்சொணவின னுபைமக னப்துல்லா வெருள்வுற்
றஞ்சி யேகின னென்றுளத் தெண்ணில ரழன்று
நஞ்சுண் வேற்படை யெழுகவென் றகுமது நவின்றார். (109)

வேறு.

ஆர்த்தன பேரி தானை யெழுந்தன வலரி வெண்டூள்
போர்த்தன கயங்கண் மூச்சு முட்டின புழுங்கி யெட்டும்
வேர்த்தன மேனி நீரற் றுலர்ந்தன மேகம் வாரி
தூர்த்தன பெயர்ந்தன நேமி யனந்தனுந் துணுக்கி யம்ம. (110)

காலினிற் செறிந்து மீச்சென் றிலங்கிய கவிகைச் சோலை
மேலினிற் புயலை யொப்ப வெண்கொடி படர்ந்து செல்ல
வாலெழிற் கவரி தூங்க நடந்தவாட் டானை யெங்கு
மாலமொத் தெழுந்த காபிர் தண்டினை டடுத்த தன்றே. (111)

ஆண்டுவந் தெழுந்த சேனைக் கடலினை யளந்த கண்ணுற்
காண்டலுந் தொழுகை வல்லோர் தம்படைக் கடலு நோக்கித்
தூண்டுமப் படைமு னீதோர் துளித்துணை யிலவென் றெண்ணி
வேண்டிற மலைதல் கொண்டா ரேதென விளம்பு வேனே. (112)

அடுத்தவை காட்டுகின்ற பளிங்குபோ லகத்தி னூடு
தொடுத்திடு நலித வியாவு முகத்தினுற் றோன்றக் கண்டு
நடுத்திற நிலைமை பூண்ட நாயகக் குரிசி லன்னோர்
விடுத்திடும் வீரம் பூண வொருமொழி விரையிற் சொல்வார். (113)

இன்றுநீர் காபிர் தம்மோ டெதிர்ந்திடி லொருமுந் நூறு
நன்றிவா னவர்கள் வந்து நம்படைக் குடன்று செல்வ
ரன்றெனிற் காபிர் நம்மே லடர்ந்தன ரெனிலைந் நூறு
வென்றிவா னவர்க ணின்று வென்றியை விளைப்ப ரன்றே. (114)

ஆதிதன் னருளின் வண்ணத் தமரீண் டிழிந்து காபிர்
பேதுறப் பொருவ ரென்று லீதலாற் பெலனு முண்டோ
காதர நினைப்ப தென்கொ லென்றனர் காட்சி மேவு
மாதவ ரெவரும் போற்ற வொருவனை வழிகொண் டாரால். (115)

பூசல்செய் திணங்கா ராவி போக்கிடிற் புகழுண் டன்றிப்
பீசபீ லென்று வீந்தாற் பேறுண்டா மென்ன நெஞ்சி
னேசமுற் றிதுவு மெண்ணித் தூதரு நினைந்து சொன்ன
வாசக மதுவுங் காதிர் கொண்டனர் மானம் பூண்டார். (116)

யாவரு மொரும்பட் டீண்ட வெங்கணுஞ் சேனை செல்லத்
தேவர்கண் முன்பின் னேகப் பல்லியஞ் சிலம்பிப் பொங்க
வாவிய பரியுஞ் சூழ வுருதெனு மலையிற் போந்தார்
பாவையர் மைந்த ரோடு வந்தொரு பாலி னின்றார். (117)

துன்னடல் சுபைபி றீன்ற தூயபு துல்லா வென்னு
மன்னவ ரவரோ டைந்து பத்தடன் மாந்தர் சேர்த்துப்
பின்னணி யாக வோர்யா னிறுத்தினர் பிரிவி லாது
மின்னணிந் திலங்குமேகக் குடைநிழல் விளங்க நின்றார். (118)

குற்றமேற் கொண்ட காபிர் கொடும்படை யதனோ டுற்று
முற்றுந்தோற் றோடி னுலு மல்லது முரண்டி யாங்கள்
வெற்றிகொண் டனமென் றூலு மியாவரே வெருவி னுலு
மற்றொரு தலத்திற் கால்கள் வைத்திட ரெனவுஞ் சொனனார். (119)

சொல்லின னின்ற பின்னர் துணையபூ பக்க ரென்னுங்
கல்லின லூறுசெய்தோட் காளையு முமறு மின்னே
வெல்லலாங் காபிர் தம்மை யெனவெகுண் டிருவ ரும்போ
ரெல்லையி னமைந்து முன்ன ரிரண்டணி யென்ன நினறார். (120)

வெண்ணிலாக் கரிய தென்ன விளங்கிவின் ணிமிர்ந்து வியயோ
றண்ணுடற் றங்க வீசுந் தவளவெண் கொடிமு ளீண்ட
வெண்ணிடத் தடங்கா நின்ற பேரொளி யிறைமேயான் றனமு
னண்ணிய ஹூபீபு தாமு நடுவணி யென்ன நினறார் (121)

மலையசைந் திடினு நீண்ட மண்ணதிர்ந் திடினு முன்ற
னிலையசைந் திடேனீ யென்ன வுபையினை நெடிது கூறி
யலைகடற் படையோ டும்பின் னணியென நிறுத்தி னன்பின்
னுலைவிலா தவனு நின்றான் வரும்விதி யுணரமாட்டான. (122)

கடுவிட மனைய வேசக் காலிது வலப்பா னிற்ப
விடமருங் கெல்லை மேவி யிக்கிரி மாவு நீற்ப
வடுசமர்க் கிடியே றென்னு மபாசுபி யானபோர் வேட்டு
நடுவணி யென்ன நின்று னடுநிலை யறிகி லாதான். (123)

முன்னணி யென்ன நின்ற மூவரு மூழி யூதை
யென்னவே யுயிர்ப்பு வீங்கி யெரியெழச் செவப்பக் கண்க
ளுன்னிய சேனை யெல்லா மொருங்குற நடத்தல் செய்தார்
செந்நிறக் குருதி பூாவேல் தீனருந் தாக்கி னுரால். (124)

வே று.

பேரி யார்த்தன திண்டிம மார்த்தன பெருமல்
லாரி யாத்தன பம்பைக ளாாத்தன வடங்கா
வீரி யம்புரு டாாத்தன விடந்தொறும் விரிநீர்
வாரி யம்முகி லசனியு மாாத்தன மான. (125)

வயங்கு வேற்படை மன்னரு மாந்தரும் வாவு
மயங்க ளோட்டின வீரருந தாக்கினா ரதனு
லியங்கு தூளிவிண் ணுண்டென மறைத்தன வெங்குந்
தியங்கி வானெடுஞ் சேட்டிளம் பருதியுந் திகைப்ப (126)

தடவ ரைப்புயத் திறுஞ்செழு முடியினுந் தாங்குங்
குடைகண் மீதினு நெஞ்சினு முதுகினுங் கொழுந்தீ
யடருங் கண்ணினும் பாய்ந்துகத் திரிந்ததே யனறிப்
புடவி மேறகுராம் படமிதித் திலசில புரவி. (127)

வெண்ணி றததவெம் பரிசில கொடியபோா விளைப்பத்
தண்ணி லாத்தரு படைக்கலன் கொடுமைந்தா தாக்கப்
புண்ணி றைநதன குருதிநீா பொழிநதன புதிய
திணண வெம்பரி யெனத்திசை திசைதொறுநதிரிந்த. (128)

படைக்க ணநதலை தெடக்குதித் தெழுநதுமுன் பாயுங்
கடைக்கண் டீபுகு மறமன்னா முடியினைக் காலா
லுடைக்குஞ் சககர மெனசசுழ றரும்விண்ணி னுயருந்
துடைக்கும் போரினை யடிக்கடி சிலசில துரங்கம். (129)

சூலம் வாட்டனு சக்கரம் பத்திரஞ் சுரிகை
வேலந தோமரம பட்டையங கதைகுந்தம் விசிகம்
பால மீட்டிகொண டிருபடை வீரரும பரிவின்
ஞாலங் கீழ்விழத் தாக்கினா நோக்கினா நடுங்க. (130)

எய்து நினறன ரெறிநதன ரடித்தன ரிருங்கற்
பெய்து நினறனா குற்றின ரறுததனா பேசி
வைது நினறனா பிளநதன ருடலஙகண் மகுடங்
கொயது நினறனா படையினல் வீரரகள் குழுமி. (131)

வசையொ டும்பெரும் வஞ்சனை பேசிய மன்னர்
தசையுஞ் சோரியு முண்டுண்டு பேய்பசி தணிப்ப
விசைகொள் வெம்பரி நடத்திவெம் போரவிளை யாடி
யசனிம் யமெனத் திரிந்தனர் சிலசில வரசர். (132)

திறந்த தும்பிய வேலினிற் சரத்தினிற் றேக
மிறந்து போகினும் வீரங்க ளிறந்திடா திருந்த
மறங்கொண் மைந்தர்க ளொருவருக் கொருவர் போர்மலைப்ப
நிறந்தி றந்தன நிறநதெரிந் திலசெந்நீர நீத்தம். (133)

எய்பு மென்றொரு வீரனமுன் னிற்பவோ ரிளவல்
வெய்ய வன்சரம் விடுத்தனன் முதுகினும் விளங்கப்
பைய நோக்கினன் கடுத்தினன் பாவையர் படைக்கட்
செய்ய வேலினும் வலியதோ வெனக்களி சிறந்தான். (134)

கொலலுங் கூர்க்கணை குதைமட்டு மார்பிடை குளிப்ப
வல்லை வாங்கின னேக்கினன் வளைவுற மறுத்துஞ்
செல்லும் புண்வழி யோட்டியே வளைவினைத் திருத்தி
வில்லி னுண்டொடுத் தெய்தன னவனொரு வீரன. (135)

பொருவ தொனனையான் சரிசரி திறத்திரென் வியக்தி
லுருவ வாளியி னெய்தநீ ராயினி லுமக்கே
வரிய வாரமும் மடைக்கலஞ கரும்விரு தனுவுந
தருவ னென்றவன கூறின னவனொரு தலைவன. (136)

சாலுந் தண்கதி ராபபியோா தோளினிற் றபனன
வாலி னம்பிறை வைத்துக்கொண் டிருந்தன மான
வால முடடிய சக்கரம் புயத்தினி லடுப்ப
மேலிற சோணிதந தரவொரு வீரனபோற விளைத்தான். (137)

அற்ற சக்கர மெறிந்தன னொருவனங் கதனை
வெற்றி செய்குவ னெனவொரு வீரனோ வேலா
லெற்றி னுனவை யெற்றலும் முடபுக் கிருநத
முற்றும் வாரணத் தோட்டியா வெனசசமர் முனைத்தான். (138)

சதைய ராவிய வாளினில் வேலினிற் றனுவி
னுதய வாம்பரிக் காலினிற் கருநதலை யுருண்ட
குதையம் பெங்கணு முருவிட விருங்குவ லயத்திற்
புதைய வீழ்ந்திட லடிக்கடி துடிததன புரவி. (139)

வேறு.

செங்கை வாளி விடுப்பவோர் செம்மற
னங்க மும்பிளந் தாவியு முண்டரோ
தங்கி லாதுபி னப்புறந் தாவியே
மங்கை மார்த மனத்தினுந் தைத்ததால். (140)

சுடுச ரங்க ரெந்தன சொரிநீ
ருடலி லெங்கணு மூற்றெடுத் தோடின
தடவி ழுந்திடத் தாங்கருந் தன்மையான்
முடித கர்ந்தன கொட்டின மூளைகள். (141)

விடம முத்திய வேல்கள்ப டத்துடர்
குடல்ச ரிந்தனர் மைந்தர் குராகதத்
துடல்பி ளந்துதி ரங்களை யுண்டன
தடம லர்க்கையின் விட்டெறி சக்கரம். (142)

தூண்டு வெம்பரி நெஞ்சுந் துளைத்தறக்
கீண்டு மைநதனை யுங்கிழித் தேறிப்போய்
நீண்ட வாணிசி றப்பு நிகர்த்தன
வீண்டும் வீரர்க ணீட்டிய வீட்டிகள். (143)

தாளி ரண்டு தலைகளி ரண்டறற்
றோளி ரண்டு துரகமி ரண்டுபே
ராளி ரண்டென வாக்கிய வெங்கணும்
பாழி மொய்ம்பினர் வெட்டிய பட்டையம். (144)

இருத்து தீப்பொறி யேறிய கண்ணினு
முருத்து வாயை மடித்தவு தட்டினும்
பெருத்த தொளினும் வேகம் பிறங்கிய
கருத்தி னுள்ளினும் பட்டக வண்கலே. (145)

பறந்து பாய்பரி வீரர் பறித்தவா
ளெறிந்த கையினு மார்பினு மெங்கணு
மறந்த ருப்படைச் சூலத்தை மாட்டிடத்
துறந்த வாய்க டொறுநிணந் துன்னின. (146)

வெற்றி வாளினில் வீசிட வீரர்மீ
புற்ற சந்திரன் வீழ்ந்தன ஞெத்தென
வற்று வெண்குடை வீழ்ந்தன வந்நிலாக்
கற்றை வீழ்ந்தன போன்ற கவரிகள். (147)

கண்ணி னெங்குந் திரிந்திகல் காளையர்
திண்ணி றைந்த வுடற்றொறுஞ்சேர்த்திய
புண்ணிய னெங்கும் பொழிந்தன சோரியான்
மண்ணினெங்கு மறைத்தன வாமரோ. (148)

வேகம் பற்றிக் கிடந்தகை வீரர்த
மாகம் பற்றிக் கிடநத பலப்பிணைச்
காகம் பற்றி யிழுத்துடல் கவ்விடச்
சோகம் பற்றித் தொடர்வன வெங்குமே. (149)

சுணங்குஞ் சம்புந் துரப்பப் பறவையின்
கணங்கள் விண்ணிற் பறப்பக் கருங்கொடி
நிணங்க ளுண்டு வயிற்றை நிறைத்தன
பிணங்க டின்று கொழுத்தன பேய்களே. (150)

வேறு.

இன்னன மாநத ரியாவரும் போர்செய் திடும்வேலை
மன்னிய சேனை யாதும லைப்பப் பிறழ்வாசி
யுனன நடத்திச் சேணுயர் குன்றி னறைசீய
மனனகு தாதா வென்றொரு தோழ ரவண்வநதார். (151)

அநதமில் கேள்வி யாரண மும்பே ரறிவூரு
மநதிர முங்கை வந்துகி டக்கு மலர்வாயா
புந்தித னிற்பொய் யென்றசொ லொனறும் புகலாதார்
செந்திரு வன்னு டன்குடி யென்றுந் திரடோளார். (152)

ஒருவனை நாளுஞ் சிந்தைத னிற்கொண் டுணர்கின்றோ
ரரிய நபிக்கே ருயிரென வந்தோ ரடலூருஞ்
செருநடு நின்று வெற்றிசெ யுங்கைத் திறல் வல்லோ
ருருமென வார்த்துத் தீப்பொறி சிந்தி யுமிழ்கண்ணார். (153)

மாவை நடத்தும் வேகமு டைத்தீர் மதிகெட்டீர்
பாவமு டைத்தீர் வேறும னத்தீர் பகைநாளுங்
கூவி யழைத்தீர் தீனுணர் வித்துங் குறியாதீ
ரியாவருமென்முன்போர்செய்மி னென்றங்கிவைசொன்னார்

சொன்னமொ ழித்தீ யங்கவர் காதிற் சுடமேன்மேல்
வன்னி யுயிர்த்தா லென்னவு யிர்த்து மறமன்னர்
முன்ன மெதிர்நதோர் சினனவனீது மொழிகின்ற
தென்னென வூழித் தீயினை யொத்தங் கெதிர வந்தார். (155)

கல்வினை றிந்தா ராழியெ றிந்தார் கனலென்னச்
செல்லெயில் குந்தம் பல்படை யாவுஞ் செலவிட்டார்
வில்லை வளைத்தா ரம்பினை விட்டார் மிகமேன்மேற்
சொல்லுவ தென்கொன் மைமழை மாரித் துளிபோல (156)

வரிசிலை யாலும் பகழியி னாலும் வடிவாருஞ்
சுரிகையி னாலும் புரவியி னேறுந் தொழிலாலும்
பரிசையி னாலுங் காயிர்க ளேவும் படையாயு
மரிதரி தம்ம பூழ்தியெ ழச்செய் தவணின்றார். (157)

காலினை யொத்த வாசிந டத்திக் கடிதேறு
மாலமெ திர்த்த தென்ன வெதிர்த்தங் கனியென்னும்
வேலை மறுக்கங் கொண்டிட வேவீ சினர் விண்ணிற்
சூலுறு மஞ்சின் மின்னென வீசுஞ் சுடர்வாளால் (158)

நிலைக ளிழந்தார் படைக ளிழந்தார் நெடிதங்கைச்
சிலைக ளிழந்தார் குடல்க ளிழந்தார் திடரென்னத்
தலைக ளிழந்தார் குடர்க ளிழந்தார் தடமார்தோண்
மலைக ளிழந்தா ருயிர்களி ழந்தார் மறமன்னர். (159)

தெருட்டுச் சிங்க மன்னரு தாதா செருமீதி
னருட்டங் கிலைக ணபஷித் திறன்மன் னவரெல்லாஞ்
சுருட்டுப் பங்கி திண்ணுட றுண்டம் படவீழ்ந்தா
ரிருட்டுத் துண்ட மெங்கணும் வீழ்ந்த தினையென்ன (160)

வீர ரொருத்தர் வந்தன ரெல்லா மிகவீழ்த்தச்
சூர மிகுத்த காயிர்க ளெல்லாந் தொலையாத
போரின் மிகுந்தார் சூழ வளைத்தார் பொருவில்லா
வீர மிகுந்த வெந்நர கத்தி னிடை வீழ்வார். (161)

வேலும் மழுவுஞ் சூலமு மோட்டி விறல் செய்யுங்
கோலும் வாளுங் குந்தமுங் கொண்டோச் சினரம்ம
காலுந் தோளு முகமு மெய்யுங ளமுங்கை
மேலு மெங்கு மூடின மிகவுந் தெரியாமல. (162)

அன்னவை யேவும் படையினி லோரம் பனலென்ன
வுன்னியி லக்கும் பரிசையி னுஞ்சென் றுருவிப்போய்
மன்னவர் மன்னர் கண்ணினி டத்து மறிவுற்ற
பொன்னிற முற்றுந் தாமரை புட்பக் கியதென்ன. (163)

ஆங்கது தைத்துங் கோபம ீனத்து மகலாமற்
றுங்கினர் வாயைக் கவ்வி மடித்துத் தைதபலம்
வாங்கினர் வாங்கும போதினிற் பாவை மணியோடுந்
தேங்கின கண்ணீ ரோடின முற்றுஞ் சிதைவுற்ற. (164)

வல்லே வலக்க ணிற்றதை யோர்கை மலராலே
மெல்ல வமைத்துப் போரினை நீத்து வெளியுற்றுச்
செல்லுயா வானிற் கவிகை நிழற்றத் திகழ்கின்ற
வில்லுமிழ் மேனித் தூதர்முன் வந்தார் விறல கொண்டார். (165)

விண்ணுங் கண்டா ரெண்ணு ரெண்ண மிகுபோர்செய்
துண்ணுங் கைவாள் கண்டார் தேகத் தொளிர்கின்ற
புண்ணுங் கண்டார் கொண்ணுனை யம்பிற் புழைபட்ட
கண்ணுங் கண்டார் வெதவ றத்தின் கரைகண்டார். (166)

வெற்றி யுணர்ந்தீ கற்று மறிந்தீர் மிகைபாவக்
குற்ற முணர்த்தீர் தீனிலே முற்றுங் குடிகொண்டீர்
துற்றிய காயம் பீஸபீல் தீருந துயரெய்தப்
பற்றுதல் வெண்டா மென்றனர் வேதப் பயஹாம்பர். (167)

வாச முணர்த்திச் சோதி விளக்கும் வடிவத்தார்
பேசிய முற்றுங் காதினி லுற்றுப் பிரிவில்லா
நேச மனத்துட் கொண்டகு தாதா நிலேநின்று
தூசை யொதுக்கிப் பைய வொர் மாற்றஞ் சொல்கின்றூர். (168)

வேறு.

துய்யபோர் முன்னின் றங்கந் துளைபடக் கீண்டு நீண்ட
கையிழந் திடினுஞ் சேர்ந்த கண்ணிழந் திடினு மென்று
மையனே துயர்கூர்ந்த துள்ள மஞ்சுவ தாண்மை யன்றே
வெய்யகோ லீக்கி நாளுஞ் செய்யகோல் விளைத்து நின்றோய். (169)

மன்னவன் றன்னைப் போரின் வடுப்படக் காட்டி விட்டுப்
பின்னரோா வழியி னெய்தும் பேடியிற் பெரிய துகும
பன்னிய காய மெய்திப் பருவர லெய்தி னின்றே
னன்னதா லடியேன் றனபத் தழுங்கிலே னின்னுங் கேளீர் (170)

அன்றுநான் கொண்டு வாழ்ந்த வரிவைதன் விதியி னாலே
பொனறிய லின்று கொண்ட பூவையோ விளமை நாளு
மொன்றிய பருவத் தன்னு ளுடலோா பொழுதுந தாஙகாண்
முன்றினி லியாருங் கேட்க வுடம்பினுல வசனங் கொண்டோய். (171)

நஞ்சினை யமைத்து பெய்யா நாட்டமென் றுரைத்த கண்ணாள்
கொஞ்சிய கிளியைப் போலக் குழறிய குதலை வாயாண்
மிஞ்சிருட் படலந் துண்ட விதுவினுக் குடைந்து பின்ன
ரஞ்சிவந் தொளித்த தெல்லா மளகமாய்க் கொண்டு நின்றாள். (172)

வாங்குவெஞ் சிலைக்கை தன்னால் தலைக்கணை மறைத்துத் தேடி
யாங்கவ ளிடத்திற் போனா லருந்துய ரெய்த நோக்கித்
தீங்குறுங் கண்ணா னென்றே சிந்தையிற் கொவா னெனத்
தாங்கின னல்லால் வேறு தாங்கிலேன் றமியே னென்றார். (173)

கேட்டுள மகிழ்வு பூப்பக் கிரியெனப் புயங்க ளோங்க
வாட்டமின் மனத்தி னீங்கு வம்மென விருத்திக் கையா
னீட்டியூ றுற்ற கண்ணை நீவின ரெவருங்காணத்
தோட்டுமுண் டகத்தை மற்றோர் கமலத்தாற் றுடைத்தொத்த (174)

ஊறுபட் டுதிரங் கான்ற நயனமுள் ளகன்று செவ்வி
மீறிமுன் னிருந்த கண்ணின வீறுகொண்டவணி யுள்ளோர்
பேறிதென் றதிஜ யிப்ப யாவர்க்கும பெரிய னான
வீறிலா னருளின் வண்ணத் தொளிசிறந்திலங்கிற் றன்றே (175)

முன்னவிர்ந் தொளிரும் வாட்கை விறலகுதா தாவிற றோன்று
மன்னவர் முதலாய் வந்த வழிவழித் தோன்ற லியார்க்கும
பின்னைநா ளெல்லை மட்டு நோக்கொன்று பெரிய தாக
நந்நபி பறக்கத் தாலே நல்கின னிறையோ னன்றே. (176)

அரியகண் வடுவுந் தீர்ந்துள ளகமகிழ்ந் தளவில் லாத
பெருவலி யெய்தி யொட்டார் பெருஞ்சமா கடப்பே னென்னச்
சொரிகனற் பொறிபு ரோஞ் சுடவிழித் திமைப்பிற் செல்லும்
பரியெனுங் காற்றி னேறிப் பதாகினிக் கடலுட் புக்கார். (177)

தானையி னடுவட் சென்று தாக்கினர் தாக்க லோடுஞ்
சோனைமும் மாரி யென்னப் பொழிந்தன சோரி சென்னி
மீகனனத் திகழுஞ் சோதி முடியொடும் வீழ்ந்த வெங்குந்
நூநிறப் பரிகள் வேக முயிரொடுந் துறப்ப வீழ்ந்த. (178)

இனையன போர்செய் வேலை யெண்ணலாக் கிடியே றன்னார்
முனைசம ரெதிர்த்தோர் தங்க ளிறுதியின முடிவு கண்டோர்
குனிசிலைத தழும்பின கையார கொற்றவேற் சகுசு மைந்தர்
வனைகழ லிலங்கு தாளா ரப்துலலா மெனனு மன்னர். (179)

கருத்தினுஞ் சிரத்தின் மீதும் ஹரிபுசெங் கமலபாத
மிறுத்திநல் பிசயி லோதி யிலங்கும்வாட் கரத்தி னேந்தித்
திருத்திகழ் புயக்கா லீது சேனையிற் சீய பொப்ப
வொருத்தருந் தனிச்சென் றூரூங் குறுசமா விளைந்த தன்றே. (180)

தீய்ந்தன கவரி கண்ணிற் றீப்பொறி தெரிக்க மைந்தா
மாய்ந்தனா பரிகண் மண்ணின் மடிந்தன புண்ணிற் சோரி
சாய்ந்தன பிணத்தின் குப்பை தழைத்தன குன்றமொப்ப
வோய்ந்திலாச் சினத்தின் வீர ரோங்கிய தாரை வாளால். (181)

அன்னது கண்டோர் வீர னனலெனப் புழுங்கி யாவும்
வெந்திடத் தொளிர வீக்கி யூழிவெங் காலை யொத்த
மன்னிய பரியி னேறி வஞ்சினங் கூறி வாட்கை
மின்னிட விரைவின் வந்தான் வீரத்தி னிறுதி யிலலான். (182)

இன்றுநீ போரசெய் தாய்வந தெதிர்த்தவ ரியாருழ் வீழ்ந்து
பொன்றின ரல்லா னினறு பொருகுந ரில்லைக் கண்டாய்
வன்றிறன் முற்றுங் கொண்டாய் வாளினி லொபபி லாதாய்
வெனறியை விளைத்து நின்று பிடியினை வெதுப்பும் கண்ணாய். (183)

ஆதலா லுனது வீர மனைத்தையு மறியோ மென்னக்
காதலாய் வேட்டு வநதென வெஞ்சமாத் திறனுங காண்டி
நீதனி நிற்ப தென்னோ நீண்டவெம் படைக டாங்கிப்
பூதல மறிய வினனே யென்னுடன் பொருதி யென்றான். (184)

வந்தென்மு னின்று சற்று மலைவிலா துரைத்த மாற்றம்
வெநதிறன் மனன ரேனும் விளம்புவ தரிது கண்டாய
சுந்தரச் சிரமுங் கையுந தோளொடு வலியு மற்றுச
சிந்திடா முனனம் வநத நெறியினிற் சேறி யென்றா (185)

வீசுவாள சகுசி பெற்ற சநததி வெகுளி யோடும்
பேசிய மாற்றங் கேட்டு பெருவரை நெரிய வாசை
கூசிட வுலக முட்கக் கொடுமரங் குழைய வாங்கி
மாசறு கணையொன றெய்தான மைமுகி விடியே றென்ன. (186)

வெஞ்சர மதனைத் தன்கை வெஞ்சரத் தறுத்து மற்று
நஞ்சுறு கணையொன றெய்தான் நலிவிலா தவனு மாங்கு
பஞ்செசன விலக்கி விட்டுப் பாய்பரி கடிதி னேவிச்
செஞ்சுடர்ப் பரிதி யென்னச் சாரிகை திரிந்தான் மன்னே. (187)

நிலங்கிழி படமாதர் தூண்டி நேரெதிர்ந் திகழ தூக்கி
விலங்கிவில் லுமிழும் வாளால் வீசினார் வீசலோடு
மலங்குளைக் கலின மாவு மாங்கவ னுடலுஞ் செந்நீ
ரிலங்கிய வாளுங் கூட விரண்டுகூ றாய தன்றே. (188)

வாட்டெறித் திடப்போர் நின்ற மன்னபு துல்லா வென்னுஞ்
சேட்டிளஞ் சிங்கங் காபிர் சேனையங் கடலை நீந்தி
மூட்டெரி கனலக் கண்கண் முகங்குறு வெயர்வு சிந்த
நாட்டிசை கொண்ட வேத நாயகர் முன்னர் வந்தார். (189)

மண்டமர் கடந்த வைவேன் மன்னரு ளுயிரை வாய்வைத்
துண்டசெங் கதிர்வாட் டுண்ட முற்றதை யிருகண் ணாரக்
கண்டுள மகிழ்ந்து வேறு படைக்கலங் காண்கி லார்கைக்
கொண்டென ரீத்தம் பாளை யீர்க்கினைக் குதாதன் றாதா. (190)

எடுத்ததோ ரீத்தம் பாளை யீர்க்கினை யப்துல்லாகை
கொடுத்தனர் விரும்பி வாங்கிக் கொண்டபோ தெழுல்கு லாவுந்
தடித்தென மிளிர்ந்து வெய்ய தழலெனக் கதிர்கண் மேன்மேல்
விடுத்துவெங் கூர்மை தாங்கி வாளென விளங்கிற் றன்றே. (191)

சுரிகையைக் கரத்தி லேந்திச் சூறையிற் சுழலும் வேகப்
பரியினை நடத்தி வேத நந்நபி பாதம் போற்றி
யரியொன்று மினமேன் றேந்திப் புகுந்தென வநேக வேலை
வெருவுறத் தாக்கி னார்மேல் விண்ணவர் மகிழ வன்றே. (192)

பேயினுக் குணவு காட்டி யுயிருண்டு பிறங்குஞ் செய்ய
வாயுதங் கையிற் காட்டி யடிக்கடி வெகுளி யென்னுந்
தீயல் விழியிற் காட்டிச் சென்னியிற் றும்பை காட்டி
வாயினிற் சபதங் காட்டி வந்தனர் வீர ரெல்லாம். (193)

புண்ணிட முற்ற மேனிக் காபிர்கள் புழுங்கி யார்த்து
மண்ணிட மில்லை யென்ன வந்துவந் துயிர்த்துக் கையா
லெண்ணிட மில்லை யென்ன வெறிந்தனர் படைக ளெல்லாம்
விண்ணிட மில்லை யென்னத் தூர்த்தன விரைவி னெங்கும். (194)

வலத்தினு மிடத்து முன்னா மருங்கினும் பின்னர்ப் பாலுஞ்
சொலத்தகா தென்ன வந்து சுற்றின ரடர்த்து நின்றார்
நலத்தகு தீனர் தாமு நகையொடும் வெகுளி யோடும்
வெலத்தகு வாட்கை யேந்திப் போர்வினை யாடலுற்றார். (195)

கற்றையம் வால்க ளற்ற கவிகுளம் பற்ற வாம
முற்றபே ருடலு மற்ற வுரத்தொடு முதுகுமற்ற
வற்றநீள் செவியு மற்ற வளைமுக மற்ற காலுங்
கொற்றவெங் கோடை யென்னத் திரிதரு குரக தங்கள். (196)

பீடுறும் வலியி னோடுங் கிடந்த யுறங்கற் றோள்கள்
சேடுறு நகையாற் பூட்டுமிகழொடுங் கிடந்த சென்னி
கேடகத் துடனுங் கைகள் கிடந்தன வடிக ளம்ம
மாடகக் கழலி னோடுங் கிடந்தன வடிக ளம்ம. (197)

கொடியொடு கவரி வீழ்ந்த குடையொடு சிவிறி வீழ்ந்த
விடியென முழங்கி யார்த்த வியம்பல வீழ்ந்த செவ்வி
முடியொடு தொங்கல் வீழ்ந்த வீழ்ந்தமுத் தாரமெங்கும்
படியினி லிடமில லெனனப் பருநதொடுஞ சருநத மாரப்ப. (198)

வீரமு முண்ட மாரு வெற்றியு முண்ட வேவுங்
கோரவாம பரியின வேகக் குணத்தையு முணட வெய்ய
போரையு முண்ட மானப் புகழொடு வறமு முண்ட
காரணத் துடையா தநத காரண வடிவாண மனனே. (199)

விண்ணினைப் பிளக்கு நீண்ட மேருவைப் பிளக்குந தாழ்ந்த
மண்ணினைப் பிளககும வானத திடியையும் பிளக்கு நோக்குங்
கண்ணினைப் பிளக்கு நாளுவ கருததினிற பொருவோமெனனு
மெண்ணினைப் பிளககு மெனறு வியாவரே யெதிர வல்லார். (200)

கநதாக் கவிகை வள்ள றாணையடிக் கமல நாளும
வநதனை செய்யுஞ சிஙகங கடைதரு மத்தை யொத்தார
சுநதரப் புயகா லீது மனனபா சுபியா னேவும்
வெநதிறற் சேனை யெல்லாம் வெண்டையி னொத்த மன்னே. (201)

குறைவியங் காபிர் தாமும் ஹனுனைத்துக் குழுவுள் ளோரு
மறமனு காத வனனொரு சபஷிமன் னவர்க டாமுந
திறனுடைத் தலைவர் தாமுஞ செமமையி லரசர் தாமு
முறைமுறை யணிக ளோடு முறிநதனர் மலைநது மாதோ. (202)

வேறு.

செருமடிந்தன சிரமடிந்தன கருதியெங்கணுங் கழுதுனறின
பருதிமண்டல மணையபண்பெனக், குருதிமண்டின குடாமிதநதன ()

வானமீதினும் பாயுமாவெலா, மானவேகமு மளியநூறின
சேனை மாரியிற் சோரிவீழ்தரச், சேனைவீரருஞ் சிதறியோடினர்(204)

ஓடினர்சில ருண்மயங்கி மெய், வாடினாசிலர் வலியகானினைத்
தேடினாசிலர் செருவினின்றுமுன், வீடினர்சிலா வீரர்வீரரே. (205)

நின்றுபோர்செயு நேரலாரெலாஞ், சென்றபின்னருந் தீனரியாவரு
வென்றி வாசியு மின்செயாரமுந், துன்றுபாசறை சூறையாடினர்(206)

பரிவொடுஞ்சமர் பார்க்கவந்தமைக், கரியபூங்கழற் காலவேல்விழி
யரிவைமாதருமாடனமாதருந், தரியலாரகள் பாசறையேமேவினா.(207)

சித்திரந்திகழ்செய்யமோலியும், பத்திபாயொளி பைம்பொனாரமு
நித்தி லங்களு நிகரிலாதன, வத்திரங்களும வவ்வி னாரரோ. (208)

அலையெடுத்தெறிகுருதியாற்றிடை, விலையிடற்கரிதனையவேலொடு
சிலையெடுத்தனா திறமடுத்ததிண், மலையடுத்ததோள் வலியவீரரே. ()

கவரியும்பலகவிகையும்பல, சிவிகையும்பலசிவிரியும்பலதுவடருங்
கொடிபலவுநதோனறலாற், குவிதரும்படி கொள்ளைகொண்டனர்.(210)

சிறிய நூலிடைத தெரிவைமார்களுங், குறைவிலபாசறை கொள்ளை
மேவியந, குறைதல் கண்டன ருனமென்னுமோா, மறுவில் பினனணி
மைந்த ரியாருமே. (211)

அலையினுந்திகழறிவதங்கிய, கலையுணர்ந்தமெய்ஹபீபுரைத்திடுஞ்
சொலையுணர்ந்தனரபுதுல்லாநெடு, மலையதிர்ந்தினுமனமதிா திலாடு. ()

அற்றுடைத்தவேலம்துலாவொடு வெற்றிசெய் துற வீராபத்தலான்
மற்றநாற்பது மைந்தருமவண், நிற்றவெஙகணுஞ் சூறை யாடினர். ()

தூதர்பாசறை சூறையாடிய, போதெரலீதருள்பூசலே றனைவாத
பாசுபி யானைவாவென, வோதியேமறுத தோதுவானரொ. (214)

நெய்மறந்திலா நெடியவேலொடு, வைமறந்திகழ் வாண்மறந்தனர்
மெய்மறப்பநம்முதுகுவெட்டியகைமறநதனர் கொள்ளை கண்டதால். ()

திருவுறுந்தனிச்சீயமொத்தவர், மருளுறுந்திறல்தீனின்மனனவாரி
யதெய்துறுமளவில்பாசறைப் பொருளைநாடினராவல்பொங்கியே.(216)

சீலமேவிலாச் சிறிதுபேசொம, மாலமன்னவ னுங்குநின்றனன்
சாலநந்தமா தானையாகிய, வேலையைக்கொடு மீளவேண்டுமால். (217)

கண்டு போவது கவ்வையன்றினி, மண்டு தானையை வதைத்து வெற்றியைக், கொண்டுபோதலே குறிப்பேனுவிவன், விண்டுரைத்தனை மெய்ம்மையே யென்றுன. (218)

சொல்லி வாகினிதூண்டி காலிது, வில்லுறுங்கா வீரர்தம் மொடுமல்லல் வந்துற மப்துலலாவையும் வல்லேவந்து வளைந்து கொண்டனன்.

வேறு.

அல்லி னுனுறு வெடுத்தன போன்றெழும் ஹறபெறிப்
பல்லர் சூழ்தாக் காலிது போரினிற் படுப்ப
மல்லி னூறுதோ ளசைதர நகைத்துடல் வளைந்த
வில்லி னுலினித் தொலைப்பனென் றப்துல்லா வெகுண்டார். ()

வெப்பு வீசிய கனற்பொறி தெறித்திட விழித்துச்
செப்பு வாயிதழ் கறித்துவெஞ் சினத்தினைக் காட்டி
யப்பு மாரிகொண் டிறைத்தன போற்சா மளித்துத்
தப்பு ருதொரு சரங்களிற் றலைகளைத் தடிந்தார். (221)

வெய்ய வன்சா மியாவையும் விடுத்தனர் விரைவிற்
கையின் விலலன்றிப் படைக்கலன் மற்றென்றுங் காணுர்
செய்வ தேதெனு நின்றனா திகைத்தனர் சிரித்தா
ருய்ய லாம்வகை யூழ்வநது தொடாந்தக்கா லுண்டோ. (222)

திவளும் வேல்கணை யினமெனக் காலிது சினந்து
தவிர்கி லாதற நெருக்கினன் பிடித்தனன் சணத்தி
னபுதுல் லாவொடு பதின்மர்தந் தலைகளு மறுத்துக்
குவல யத்திடை வீழ்த்தினன் குருதிநீர் கொழிப்ப. (223)

ஆண்டு வீநதவ ருடைகொண்டு மகிழ்நதிட லீகர
தூண்டி யெண்டிசை திடுக்கிடப் பேய்கணந் தொடாக்
கூண்ட தீனவ ரொடுமுகம் மதுதமைக் கோறல்
வேண்டி வநதனன வளைந்தனன் வளைநதிடும் வேலை. (224)

மான முள்ளவன் போலவும் வணக்கத்தின் மதித்த
தீனன் போலவு மறபியைப் போலவுஞ் சிதைந்த
வீன வஞ்சக மாயவன் கொடியவ னிதமி
லூன முற்றகண் ணினனெனுடர்ந் தெவரையு முலைப்போன். ()

வந்து தீனவ ருடனின்று மணிக்கரங் கோர்த்து
நொந்து சென்னிவைத் தடிக்கடி யாரையு நோக்கிக்
கொந்துலாவிய முகம்மது சடந்தொறுங் குருதி
சிந்த வீந்தனர் காணெனக் கூவினன் றிகைப்ப. (226)

திக்க னைத்தினுந் தெரிதரக் கூவியுட் டெளியா
தக்க நீர்தரக் கிடந்தைய கோவென வழன்று
விக்கி வாய்குழ றிக்கொண்டு வயிற்றினை விரைவி
னெக்கி யேங்கிநின் றழுதனன் புலம்பின னிரங்கி. (227)

படியில் வீழ்ந்தெழுந் துடலெங்கு மடிக்கடி பதறிக்
கொடிய வஞ்சகர் சூமன்வந் தழுதிவை கூற
மடிவி லாமென தீனவ ரியாவரு மலைந்து
விடிவ தென்னென வோடினர் முறிந்தனர் மிகவும். (228)

முற்றுந் தீனவர் சூமன்றன் வாய்மையின் முறிய
வுற்ற நந்நபி யபூபக்க ரடலும றுதுமான்
வெற்றி சேருமப் பாசமு சாமிசு ஹறபுவு
மற்று நாலைந்து மைந்தரு நின்றனர் மாதோ. (229)

காலி தோர்புறத் தினின்று பொருவதுங் கலைந்து
வேலை போவபோல் தீனவர் பறிந்தது மேன்மேற்
கோல மாநபி வீந்தன ரென்றதுங் குறித்துத்
தாலங் கீழுறக் காபிர்கள் மீண்டுவந் தனரால். (230)

பொன்றி யூனபொழி களத்திடை வருகின்ற போழ்தில்
வென்றி வெண்குடை கவரிபே ரிகைபல வீழ்ந்த
தொன்றி லாதெடுத் திருபடைத் தலைவரு முயர்ந்த
நன்றி செய்நபி தமைவந்து வளைந்தனர் நலிய. (231)

பட்டை யத்தினும் வாளினும் வில்லினும் பரந்த
நெட்டி லைத்தலைச் சூலத்தி னுந்தசை நிறைந்த
வட்ட நேமியி னுங்கவண் சுலவினும் வாய்ந்த
கட்டு பத்திரத் தினுங்கொண்டு நீட்டினர் கடிதின. (232)

வெந்தி றற்கரங் கிழித்தழன் றோடின வேல்கள்
சந்த னம்பட ருரங்களிற் புகுந்தன சரங்கள்
சிந்த மைந்தர்தஞ் சென்னியை யுநட்டின திகிரி
காந்த ரத்துண மிடியென வீழ்ந்தன கவண்கல். (233)

இன்ன தன்மையின் வடுப்பட தீனவ ரிதனைற்
பின்னை யேதுமங் குணர்ந்திலர் சினங்கணைற் பெய்து
மின்னி லங்குவே லடல ஹமுசாவெனும் வீரர்
சின்ன மாக்குவ னென்றகை கொண்டனர் சிலையை. (234)

எடுத்த விற்குணஞ் செவியுற வாங்கிமுன் னிகலி
யடுத்த சேனைமேல் விடுத்தனர் பலசர மவைபோய்த்
தொடுத்த வில்லையுஞ் சரத்தையுஞ் வேலையுந் துணித்துக்
கடுத்த வேந்தர்தம் முடியொடு முடியையுங் களைந்த. (235)

மாரு தத்தினை யொத்தெழும் பரியொடும் வலிய
வீரர் தம்மையும் வீழ்த்தியு மூன்சுவை வேண்டி
யாரம் வீற்றிருந திலகிய மணிமுடி யரசா
பாரத் தோட்பருப் பதத்தினும் புகுந்தன பகழி. (236)

துற்று வெஞ்சர மெய்தெய்து தூணியுந் தொலைந்த
வெற்றி வாட்படை யெறிந்தெறிந் தழிந்தன விலக்கிப்
பற்றுங் கேடகஞ் சிதைந்தன மற்றும்வெம் படையு
முற்றும் போயின நின்றன வான்விதி முடிய. (237)

விலகு தற்கரி தெனுஞ்சரம் போயும் போர் வேட்ப
நிலையி லாச்சம யந்தனைப் பொருளென நினைந்த
விலகு திண்கழல் வேந்தர்கள மூவரு மிரங்கா
தலகில் வேற்படை யாவையு மேவின ரன்றே (238)

கொடிய நஞ்செனத் தீயென வுருமெனக் கொதித்த
படைய னியாவும்வந் தடல்ஹமு சாவுடற் பாங்கி
னிடமுண் டில்லெனப் பாய்ந்தன துளைத்தன வெந்து
முடைய வன்விதிப் படியலால் வேறென்ப துண்டோ. (239)

கையுங் குன்றெனுந் தோளும்வல் லுரத்தொடுங் கழுத்து
மெய்யுந் தாளும்போன னெற்றியுந் துண்டமும் வெரிநுஞ்
செய்ய நோக்கமு மீதெனத் தெரிந்தில திரண்ட
குய்யம் பூண்டவர் படைக்கலன விடுத்தவங் கொடுமை. (240)

மெல்ல நின்றுநின் றசைந்தசைந் துணர்வுமே லாட
இல்லல் லாவையும் ஹபீபையு முளத்தினி லிருத்திக்
கல்லு நன்மொழி வாக்கினி லடிக்கடி கலிமாச்
சொல்லி வீழ்ந்தனா போயின ருரைந்தனர் சுவனம். (241)

இன்ன வாறுதீ னவர்சில ரார்ப்பொடு மிகலிச்
சின்ன பின்னம்பட் டுயிர்விடுத் தணியுடல் சிரையப்
பொன்னின் மாநகர் புக்கினர் புக்கியுங் காபிர்
பின்ன ரும்படை யொடுங்கவ ணெறிந்தனர் பிறங்க. (242)

விசைகொண் டெண்டிய கவண்கல்வெம் போரினை விளைப்ப
வசையி லாதடன் முகம்மது மார்பினும் வாம
மிசையு நெற்றியி னுஞ்சென்று தாக்கின விதனாற்
றிசையு மாசையு மிரங்கிட விருந்தனா தியங்கி. (243)

ஈதலாதொரு கவண்கல்கீழ் வாய்ப்புறத் திலங்குஞ்
சோதி மூரலுஞ் சிதைத்திடச் தைத்தது தொகுத்த
பூதலத்தினி லுணர்வுடன் சாய்ந்தனர் பொருவா
மாதி ரத்தொடு மதியொடும் பேசிய வள்ளல். (244)

பத்தி மீறிய தீனவர் படவுமக் கவணாற்
றதறி தத்தியிற் படரொளி முகம்மது தமக்குங்
கத்த னேவலிற் றணிவந்து கருதிய தென்று
லெத்த லத்தினு மியாவரே துன்பமி லாதார். (245)

வண்டு பாண்செயுந் தொடைப்புயக் கருபெனு மன்னர்
கண்டு வீந்தன ரோவென மனத்தினிற் கலக்கங்
கொண்டு தூதர்மு னணுகின ரணுகலுங் குறித்து
விண்டி லாதுற நோக்கினர் தாமரை விழியால் (246)

ஆய்ந்த நெஞ்சினர் கருபுகாண் டலுமட னயினார்
வியந்த தின்றுநந் தீனவ ரேபெறு விஷயந்
தீய்ந்து போம்படி சென்றினி ரோதிகைத் தனிரோ
சாய்ந்து போகின்ற தென்னெனக் கூவினர் தழைப்ப. (247)

வாருமென்றவ ரடிக்கடி விளிக்கின்ற வாய்மை
பாரு நம்மையும வகுத்தளித் தவனருட் படியாற்
றேருங் காவத வழித்திசை கேட்டனர் தீனோ
ரியாரு மீண்டனா ஹபீபைவந் தணுகின ரெங்கும். (248)

உன்னும் வஞ்சகன் கலபருண் மகனுபை யென்னு
மன்ன னீதெலா முணர்ந்தனன் றுணுக்குற்று மயங்கிக்
கன்ன மீதுகை வைத்தனன் கலங்கினன் முகம்ம
தின்னு மேயிருக்கின்றன னோவென வெண்ணி (249)

மறந்த துமபிய முகம்து சமயதெவ் வலியோ
டிறந்து போயின னென்றிவ ணிருந்தன னின்னே
பிறந்த தோமொழி யென்றுகண் சிவந்துகை பிசைந்து
சிறந்த வேலெடுத் தார்த்தனன புழுங்கினன் சினந்தான். (250)

கட்டு வாய்மையின் முகம்மது தனைஹறயாத் துடனே
விட்டுப் போதவற் கெளியஞோ வெஃனமனம் வெருண்டு
மட்டி லாதபல் பாசைகள் கூறுவெவ் வாசி
யெட்டி யேறின னடத்தினன் பணிபயந்திரங்க. (251)

பண்டு தோன்றிய முகம்மது பரியினி லேறி
வண்டு றுங்கிமேல் வருபவன றனையெதி மறியா
தெண்டி சையினும் புகழ்தர விடுமினக ளென்ன
விண்டு நினறன ரவனுமாங் குற்றனன விரைவின். (252)

முனனர் வநதடல் வாளினி லோங்குமுன முஃலி
மன்ன ராரிது வேலினை நபிகையுன வாங்கித்
தெனனு லாவிய பிடங்கினை னீட்டினா திறல்சே
ரன்ன வன்களத் திடையினிற் பட்டன வனறே. (253)

காய மினறருங் களத்திடை பட்டன கண்டான
கூபி ஞனினி யென்செய்கு வேனெனக் குழறிய
பாயும வெம்பரி புடைத்தனன படையொடு முறிநது
போயி ஞனிதோ கொனறனன் காணெனப் புலம்பி. (254)

போது கினறவன் றனைவிழித் தடிக்கடி புலம்பி
யோது கினறனை வெருண்டனை பயந்தனை யுடைந்தாய்
சீத காதுனறன களத்திடை காயமுந தெரிவ
தேது மில்லையென் றுணாத்தினர் மருங்கினி லெவரும். (255)

உற்றவ வாசகங் கூறின ரோதென வுணர்ந்தீர்
குற்றி ஞன்குறைத் தான்பெரும் வஞ்சனைக் கொலைசெய்
தெற்றி ஞனுயவ தேதுவல லுயிரையு மெளிதிற
பற்றி ஞனனன்று சாயநதனன விழுநதனன மடியில். (256)

ஒடுங்கி வாய்புலர்ந தாதெய்வ மேயுனை யுவநது
தொடஙகிப் பூசைசெய் திடுபல னியாவுமே தோன்றி
யிடங்கொண் டிபபடி யோவநது முடிநததென றேங்கி
நடுங்கித் துன்புற்று வீந்தனன் போயின னாகம். (257)

மாறு கொண்டவ ரிடத்தினி லேகினன் மருண்டு
கோறல் செய்தனன் காளெனத் திருபினன் குழறி
யூறுங் காண்கிலம் விழுந்தனன் வீந்தன னுழன்ற
வாறி தேயெனக் கலங்கினர் பெருங்குயிர் வயவர் (258)

என்ன பாவமிங் கென்செய்கை யேதுவன் மாயம்
வன்னி யொத்தெழு கினத்தினன் வீந்திடும் வகையென்
றுன்னி யுன்னிநெஞ் சகத்தெழு மறிவையு மோட்டித்
தன்னை யும்மறந் துடைந்தனர் கடைபடு தயிரின். (259)

வீடிப் போனதன் றவன்விடும் வஞ்சமும் விதியுங்
கூடிக் கொண்டங்ஙன் மூட்டுத றணிந்தது கோற
னேடிப் பாய்புலி யடங்கிய போனபி னின்று
னோடிப் போவது கருமமென் றனைவரு முரைத்தார். (260)

விண்டு ளாவிய நறுங்கொடிப் படலமும் விரிந்த
கொண்டல் கீழ்தரக் குலவிய குடைகளுங் கொதித்து
மண்டு போர்செயும் படைக்கலன் களுமண்ணில் வழங்கி
யொன்றி யாய்ச்சென்று போயின ரரசர்தம் மூரின். (261)

தூசு விட்டெரிந் தோடினர் சிலர்வழி தூண்டா
வாசி மேற்கொண்டு பறிந்தனர் சிலர்மன மேங்கி
யானை தோறினு மோடினர் சிலர்கண் முதுகு
கூசிக் கூசினின் றோடினர் சிலர்பெருங் குயிர் (262)

மூண்டு வந்தெழுங் காபிர்க ளியாவரு முறிய
மாண்ட யங்கிய முகம்மது மனைத்திசை வாய்மை
தேண்ட தீனவ ரியாரையு மொருப்படத் திரட்டி
யாண்டி ருக்கின்ற சகுபெனுந் தலத்தினி லானார். (263)

வீய்ந்த தீனவ ரெவரெவ ரெனநபி வினவ
வாய்ந்த நெஞ்சின ராறுபத் தைந்தெனு மரசா
மாய்ந்து போயின ரவர்களிற் றலைமைய னவர்கள்
காய்ந்த சீற்றத்த ரேழு பெயரெனக் கரைந்தார். (264)

இந்த மன்னவர் தம்மையங் கறிந்தறிந் தெடுத்து
விந்தை யாம்படி யடக்குதற் கெழுந்தனர் விரைவின்
வந்து செங்கள நோக்கினர் நோக்கலு மருண்டார்
சிந்தி வீழ்ந்தன ருருத்தெரி யாதெனத் தியங்கி. (265)

ஈறி லந்தவன் றிருநபி யின்னண மிருந்த
வாறு கண்டொரு தீனவர் தமைவர வழைத்துத்
தேறி யிக்கள நடுநின்ற வாங்கினைத் திருந்தக்
கூறு மென்றனை ரென்றலும் வாங்கினைக் குறித்தார். (266)

உற்ற வாங்கிதங் கேட்டலு மொருதலை யெடுத்துச்
சுற்று நோக்கின கண்டமு சாவெனத் துணிந்து
கொற்ற மேற்கொண்ட தீனரு முகம்மதுங் குறித்து
வெற்றி யாம்படி யெடுத்தடக் கினாமண்ணில் விரைவின் (267)

அரச ரன்றிமற் றெவரையு முகம்மதாண் டாங்காங்
கிருவர் தம்மையோர் குழிதொறு மடக்கிவித் தியல்பின்
முரச மார்த்தெழ வெற்றிவெண் கொடிசெல முன்னி
வரைகடந்துபல் வளமதி னாவினில் வந்தார். (268)

உருதுப்படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-27-க்குத் திருவிருத்தம்-1682.





# அமுருப்படலம்.

செங்கோ லெனனுங் கொழுங்கொம்பிற செழுந்தீ னென்னும் பயிரேற்றி, யெங்கோண் முகம்ம தெனுநபியு மெழில்சேர் மதீனத்தினி திருப்பச, சங்கா மையினமேற் றவழ்கினற தடஞ்சூழ் மக்கமாநகரில் வெங்கோற் றிருந்து மபா சுபியான் செய்கை யனைததும் விளம்புவாம்.

ஓயாக் காற்றின் சருகென்ன வொதுங்கி மெலிந்து புறங்காட்டிச், சாயா நினற தானையொடுந தன்னூர் புக்குத் துயரொன்று, மாயாக் கடலில் வீழ்ந்துமதி மயங்கி யேது மறநதெனறும், வீயாசசமயங் குலத்தோடு மவிநத தென்ன வெம்பினன். (2)

பாரைக் காட்டுமி டநதோறு மீமானீரிற் படர்நறுந்தீன், வேரைக் காட்டி யெழுக்கதிறல் வீரான் முகம்ம தெனுமுன்னர், போரைக் காட்டு

நஞ்சேனை பொருது வெருவி யுடைந்துபின்ன, ரூரைக் காட்டி நின்ற தல்லா லூக்கங் காட்டிற் றிலையன்றே. (3)

காணாத் திறனுங் கொடுஞ்சமருங் காட்டுங் காலா ளொடுமிவுளி, மாணார் வயவ ரொடுஞ்சுற்றார் மற்ற வேந்த ரொடுஞ்சற்று, நாணு தென்றும் போர்வெஃகி நடந்த தெல்லாம் பார்க்கிலவம், வீணே போன தன் றிமற்றோர் வெற்றி கண்டோ மிலையன்றே. (4)

திறந்தா னென்கொ றுணிவென்கொல் செல்வ மென்கொன் மான மென்கொன். மறந்தா னென்கொல் படையென்கொன் மன்னர் வய வாள் வலியென்கொ, லறந்தா னென்கொ றெய்வமென் கொலந்தோ வெல்லா மவமேயென் றிறந்தா, போலப் புலனொடுங்கி யினைய மனத்தி னியம்பினான. (5)

தனியே கிடந்து பெருமூச்சிற் றளர்ந்து பலகா லெண்ணி மிகத் துணியே பெருக வுறைந்திடுதல் சூழ்ச்சமன்று சேனையொடுங், குனியா சிலைக்கை வேந்தரொடுஞ் சென்று கோளார குறும்படக்கி, முனையோ டினனும் வரவேண்டு மென்ன வெழுந்தான் முனையில்லான. (6)

வேலை யென்னுஞ் சேனைவெள்ளம் விபுலை பரப்பின் மேற்பரப்பக், காலமுகிலா ரிடியெனனக் கணிப்பி னெறும்வாச சியங்கதறப், பாலை நிலமுங் காணிலமுங் கடந்துதிறல பாசுபிபான, சாலைபொழிலரு ழிறவுஹா வென்னுந் தலத்தின வந்தனனால். (7)

ஹறுபு தருசேய் மெலிந்து புறங் காட்டு மறுத் தளதரோடு மிறவுஹாவின் வந்திறங்கி யிருந்தா னிருந்தா னெனச்சொன்னா, பொறுமைப் பயிரின மேலவளாத்துப் புகழா மெனனு மலர்காட்டி, மறுமைப்பயவிக்கனியுதவும் வள்ளல் கேட்டார் மகிழ்வுற்றார். (8)

வீரம் போட்டுப் படைக்கலனும் போட்டு மிகுந்த பெருஞ் சமய, வாம்போட்டுப் புறங்காட்டு மன்னன மீண்டும் வந்தன னென்றீரம் பூண்ட மனத்தவரோ டியம்பி யுகுதி னெழுந்ததிறல? வீரரெவருமெ ழுகவென்றார் வென்றி சிரசின் மேற்கொண்டார். (9)

சொன்ன மொழிகேட் டெழுபதடல வேந்தர் தொகையில் சேனை யொடும், துன்னும் பலவாச சியமுழங்க வெழுந்தா ரினிய தோழரொடு. மன்னர் முகம்ம தெனுநபியும் வாசி யதனின் மேலேறிப், மினனுங் கவிகை நிழல்கவிப்ப வெழுந்தார் விரிசா மரை யோங்க. (10)

வெற்றிக் கொடிமுன் செலச்சேனை வேலை நடப்ப வண்டினங்கள், சுற்றுமிரங்கத் தீயென்னத் தோன்று மரைவா விகள்கடந்து, தெற்றும் வளமை தருமதினுத் தென்பா லிருகா தவரையாறு, முற்றுமேவி யமுருவி னிருந்தார் முகம்ம தெனுநபியே. (11)

ஆண்டு சிறந்தசிற்றாருக் கதிபன் குசாயிக் கூட்டத்துளன், வேண் டுந் தீனோர் தமக்குநன்மை வேண்டாக் காபிர் தமக்குமிதப், பூண்டநன்ப ணியாவருக்கும் பொதுவாய்நின்றோன் மகுபதெனத், தூண்டும்பெயரோ னிவன்றிருமெய்த் தூதர்திருமுன் வந்தனனால். (12)

வந்தா னடியிற் கைகுவித்து வணங்கி யாண்டோர் பாலிருந்து, யிந்தாதனேக மொழி வினவிப்பேசிமகிழ்ந்து பலவாழ்த்திக், கொந்தா ராசே யெனப்போற்றி யெழுந்து கோர மேற்கொண்டு, கந்தாடசல மெனக்களித்துச் சென்றான் கருணைக் கடலானே. (13)

சிலையைத் தெய்வமெனவணங்குஞ் சிறுமை யதனைத்தெருண்ட றியா, தலையுற் றிடுவன் குபிராச ரடைந்த பெரும்பா சறை யேகி, யிலை யிற்சிறந்த வேற்கையபா சுபியானிருக்கையெய்திநறுங், குலனுற்றெ ழுகார் முகநோக்கிச் சிறிது வசனங் கூறுவனால். (14)

மானம் போக்கித் திறனறியா வயவ ரொடுவாம் பரியோடுங், கானு மலையுங் கடந்திங்ஙன் வந்தாய்வெனறி காண்பரிது, நானஞ்சிறந்த திருத் தூதும் வந்தார நலிந்து நின்றனையா, லூனமினி மேல் விளைவதென் னோ விதியை யுணர மாட்டாதாய். (15)

முன்னே வலிதி னெழுவருயிர் முடித்தாய் பழியுமேற்கொண் டாய், பின்ன ரளவி லாநிதியுங்கெடுத்தாய் திறனும் பிழைப்பித்தா யின்னு மிவர்தம் மாவிவிண்ணி லேற்றத் துணிந்தா யிவணிருந்தாய் மன்னுப் பதியிற் செல்கென்ன வுரைத்தான் மகுப தென்போனே. ()

சொல்லா மென்னு மிடிகாதிற் சொருக வாயீ ரம்புலர்ந்து, கல்லா மென்னு நெஞ்சமிகக் கரைந்துள் ளிருந்த மதியோட்டிப், பல்லாயுத மும் வெண்குடையும் பரியுந் திறனு மற்றுமுள்ள, தெல்லா மறந்து போயினனங் கிருந்தா ரொருவ ரில்லையன்றே. (17)

கிள்ளை யிருப்ப மறமிருப்பக் கிடையாக் கீர்த்திதானிருப்ப, வெள் ளமனைய சேனையொடும் வேந்தன் வாய்மை தனில்வெருவி, யுள்ளங்

கலங்கி யோடினனென் றுணர்த்தக் கேட்டு நபியென்னும் வள்ளல்பெ ரும்பா சறையேகிப் பண்டமனைத்தும் வௌவினரால். (18)

தேறு வறியோர் தனம்படைத்த செல்வரென்ன மகிழ்வெய்த, வீறார் நிதியம் பகுந்தளித்து வேட்டு நாண்மூன் றிருந்தென்று, மாறாப் புண்ணீர் குடித்தெரியுமடலூர் வேற்கையகுமதுத, மாறுவோசை யியங் குமுற மதினு நோக்கி யெழுந்தனரால். (19)

வெள்ளைக் கலிரித்திரளிட்ட மேகக் கவிகை விசும்போங்கத், தன் னிக்கவனப் பரிநடப்பத் திரண்டுதொகையி லாத்திறன், மள்ளாசெறிய வரும்வேளை முன்னர் வலிதின் பிடிபிடித்துத், தள்ள அபா அசாவென் போன் வந்தான் கொடிய தறுகண்ணன். (20)

கண்டா ரயிர்த்தார் கொடியனெனக் கனன்றார் பிடித்தார் மனத்தி ரக்கம், விண்டார் கயிற்று லிருகாமும் விசித்தா விசித்துச் செழுங்காத் திற, கொண்டார் நபினுர் முன்விடுத்தா நோக்கி யிவன்போற்கொடிய வனெங், குண்டாவென்ன சிரமசைத்தார் சினநதா ருளத்தினகைத் தனரால். (21)

பொல்லாமனத்தன் வாய்மையில்லாப் புலையனெவர்க்குமிகப் பொய் யன். கல்லாக் கசடன முன்பதுறக்களத்திற் பிடிபட் டிரக்கமுறக், கொல்லாதரிய தலைவிலையும் வாங்கா விட்டோரங் குறிகொள்ளாதெல்லா மறந்துகாபிருட னிகழ்ந்தான்வசையுமியம்பினனல். (22)

மின்னார் வேலீரிந்நாளும்வேவுபார்க்கவிங்குவந்தான், கொன்னர் வாளா லிங்கிவனைக் கோறல் செய்மினெனச்சொன்னர், பன்னுவுறவாய் கடித்துறுக்கிப்பற்றிக் கொடுபோயோர் மருங்கிற், சென்னீரொழுக வாளெறிந்தார் திரும்பா நரகந் தனிற்போனன். (23)

கொடியோ னவனை விண்ணிடத்திலேற்றி மனத்தின் குறை தீர்த் துத், தடியோ டுணுண் டுடல்செவந்த தடவேல்வேந்தர் பலர் சூழப், படியோ டெழுந்த மலையோடும் பகாநத திருநந் நபியிற சூல், வடிவார் சோலை சூழ்ந்திருந்த மதினு நகரில் வந்தனரால். (24)

அமுறுப்படலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-28க்குத்-திருவிருத்தம்-1706





# கருபுவதைப் படலம்

——ः[*]ः——

துய்யநந் நபியிற சூல்வன் மாநகர்
வையகம் புகழ்தர விருப்ப வங்கொரு
செய்யநற் றாதரிற் றிறமை பூண்டவர்
பொய்யிலோர்மொழி புகலு வாரரோ. (1)

வண்டரி திண்டிசை முரல மாமயி
லுண்டிரு செவியிளு லுறங்கு மாடமுட்
கொண்டிலங் கியசுகு ரெவன் றோதிய
விண்டுறு பலவளம் விளங்கு மூரினில். (2)

இருந்தனன் தீனருக் கிடுக்கண் செய்நிலை
பொருந்தினன் கொலையோடு பழியும் பூண்டனன்
றிருந்திலா வழியினிற் சேறன் மேயின
னருந்தவ மியாவையு மழித்த தீமையன். (3)

ஆமதி யிலனற மறுத்த புன்மையன்
கோமதத் துறைந்தனன் குணமென் றுன்னிய
நாமமுங் கெடுத்தன னரகந் தேடிய
சூமனு மகிழ்வுறச் சூழ்ச்சி சொல்லுவன். (4)

வடிவுடை யசுறப் மதலை யாயின
னிடருறும் பகைக்கரு பென்னும் பேரினன்
கொடியனெ கூதியங் குலத்திற் றோன்றின
னுடலெனப் பவத்தினு லுருவங் கொண்டனன். (5)

இன்னதன் மையனலீ றென்னுங் கூட்டத்தோர்
மன்னன்வெங் குபிரினின் மனத்தை யோட்டினன்
பண்ணுவ தென்கொலப் பாவி செய்கையை
யுன்னவும் பழுதிதென் றுறைத்து நின்றனர். (6)

வேயுரை கேட்டலும் வேந்தர் மெல்லவெந்
தீயெனச் சினத்தினை வளர்ப்பக் கண்ணினிற்
காயெரி யுமிழ்ந்தனர் நகையுங் காட்டினர்
வாயினைக் கறித்தனர் மன்ன ரியாவரும். (7)

புண்டரும் படையொடு புரவி சூழ்தர
வெண்டிசை யிருந்துக ளெழுந்து போர்த்திட
மண்டலங் கீழுற மகிழ்ந்து போயினா
ரண்டமோ ரிரவினி னரிதிற போயினார். (8)

வெற்றிமேற் கொண்டுவிண் ணெழுந்த மூதெயில்
சுற்றிய நகரினிற் றெருகையில் சேனைகொண்
டுற்றனர் வளைந்தன ருண்ணு நீரையும்
பற்றின ரடிக்கடி பகையை மூட்டினர். (9)

கொள்ளையங் குடிதொறுங் குறுக லார்கட
முள்ளமு நெருப்பெழ நெருப்பை யூட்டினர்
வெள்ளமொத் திருந்தனர் விரியு மொண்சிறைப்
புள்ளுமந் நகரினிற் புகாத வண்ணமே. (10)

ஆங்கது கண்டு கஃபென்னு மாண்டகை
வீங்கின னுயிர்ப்பினால் வெய்து யிர்த்தனன்
ஏங்கினன் மனத்தினில் வெருவல் சஞ்சலத்
தேங்கின னென்செய்வோ மென்ன வெண்ணியே. (11)

மல்லணி புயத்தினர் சூழ வஞ்சக
னெல்லையில் விளங்கிய பதண மேறினன்
செல்லெனுங் குடைநிழ றிகழு மாநபி
யொல்லையி னிருந்தன ருற்று நோக்கினான். (12)

கொடிநெடு மூதெயில் கொம்மை யேற்றிய
விடியெனுங் கல்லினை யேந்தி யாவரும்
புடையினின் றிடுநபி பொன்றிப் போதரப்
பிடரியிற் றள்ளுவ மென்னப் பேசினான். (13)

மறையினிற் பேசிய வாய்மை விண்ணிடத்
துறையினிற் ஜபுறயீல் விரைவி னோர்ந்துபோம்
முறையொடுஞ் சொல்லினர் முடிவி லாததீ
னிறையவரிந் தப்புறத் தேகி நின்றனர். (14)

இதமுற நின்றனன் கோற லெய்துமுன்
கதமொடு மேகின னென்கொல் காணென
வதிஜய மெய்தின னாதி முன்செயும்
விதியினை மதியினால் விலக்க லாகுமோ. (15)

இங்கிருந் தினிப்பகை விளைத்தி டாமுன
மங்குசென் றகுமதி னடியிற் சேர்குதற்
றங்கிய வறிவெனத் தானே சூழ்தர
வெங்கடு மனத்தினன் விரைவி னெய்தினான். (16)

ஆரண விளக்கினை யறிவின் கொண்டலைப்
பாரினைத் தாங்கிய பருப்ப தத்தினைக்
காரணக் கடவுளைக் கரையிலா வருள்
வாரியைத் தொழுதடி வணங்கி னானரோ. (17)

செறுத்தன னினைத்தவெந் தீமை யாவையும்
பொறுத்தன ரிருத்தினர் புளக மெய்தினர்
குறித்திடாக் கீழ்மையர் செய்யுங் குற்றமே
வெறுப்பது பெரியதர் மேன்மை யாமெனா. (18)

ஓரிடத் திருந்தன னொக்க லோரெனும்
வேளினைக் கல்லும்வே லென்ன வந்தனன்
பாரிடத் துறும்பழி செய்யும் பாதக
நீரினன் சிறிதுரை நீட்டு வானரோ. (19)

அருந்தவ மழித்தெழு மடைய லாரொடுந்
திருந்திய நெறிசெலுந் தீனர் தம்மொடும்
பொருந்துத லில்லையா மரிய பூதல
வருந்தலை நீக்கிய புகழின் மாட்சியீர். (20)

இதமுற விருவகைப் பெயர்கட் கென்றுமே
பொதுமன ( ) மியைந்தனம் பொய்யி தன்றொரு
விதிதவ றிலமென மெய்ம்மை பேசிலாச்
சிதைவுறு மனத்தினன் றெரியக் கூறினான. (21)

சொல்லிய வாசக மியைந்து தோமறச்
சொல்லுநின் பதியென வணங்கிச் சென்றனன்
வில்லுமிழ்ந் திருட்டினை வெருட்டு மெய்நபி
யெல்லையில் படையொடு மதீன மெய்தினார். (22)

---

( ) இயைந்தனம், தவறிலம், என்னுந் தன்மைப் பன்மையவன் குடிகளையுந் தழுவியது.

வேறு.

வானவர் பரவுந் துணையடிக் கமலவள்ளலாண் டிருந்தன ரிப்பா, லீனமில் வலிக்கு மறனொடு விதிக்கு மிறுதிநாட் டேடிவெங் கொலையு, மூனமும் பழியும் பாவமு நாளு முயிரெனத் தாங்கினன் வெய்ய, கோனிலை புரந்தோன் கருவெனுநாமக் கொடுமையன் குறித்தவை யுரைப்பாம். (23)

வாய்மையு மறந்தா னன்றியு நீத்தான் வான்முறை வழியெனப தெறிந்தான், தீமையே நினைந்தான் செய்வது துணிந்தான் றீனவைக் கோறனமேற் கொண்டா, னையமதிப பெரியோர் நன்றியாயிரந்தா னருளினுங் கீழ்மறந தவர்க்குங், காய்மனத் துடனும் புன்மையே செய்யக் கருதுமென்பவை விளக்கினனால். (24)

நெய்யொடு தசையி னூனொடு பழகு நெடியபேய் வேலேந்தியகாபிர், வையகவெளி யெவரையுங் கூவி வகைவகை மந்திரம் பேசி, வெய்யபோர் விளைத்துக் களந்தனி லலகை விருந்துண்டு விரும்புற வளித்துச, செய்யதீ னவர்த மதத்தொடு வலியுந் தேய்த்தெறி குவனென வெழுந்தான.

புன்மைவே லேந்திக் கொலையெனுங் கவசப் போர்வை மேற்போட்டுவெங் கபட, வன்மையாம் நெடிய வாளகம்விசித்து வஞ்சவெம் முடியிணைத் தாங்கித், தொனமதப பரிசை யோரபுறத் தணிந்து துணிவெனுங் கழலடி சேர்த்துத், தின்மையாம் படைகளெங்கினு நடப்ப வெழுந்தனன் பாவமாய்த் திரண்டான. (26)

மறத்தினிற் சிறந்தங் கறத்தினைக் கடந்த மள்ளர்நாற் பதுபெயரி னிதின், புறத்திடைசூழக் கருவெனுஞ் சூதன புரவியினேறியங் கெளிதிற், சிறந்த கட்பெரிய சுழலசெவித் தூங்க றிரிவனம்பல பலகடந்து, நறைத்தடஞ்சூழக் கவினபெறுமக்க நன்னக ரடைந்தனனன்றே. (27)

இக்கிரிமாவை காலிதெனப் பவனை பிசைபுட பறுபருள் சேனை, யொக்கலிற் சிறந்த தலைமைய ரவரை யுவப்பொடு மழைத்தினிதிருத்தி, மிக்கநந்நயினோர் வந்ததுந்தனமேல வெகுண்டதும் போயதும் வெருவித், தக்கநன் னினைவிற் றனுமங்குற்ற தன்மையுமெடுத் தெடுத்துரைத் தான். (28)

சொல்லியாங் கவர்க்கு வாய்மையும்பேசித் துணிவுட னெழுந்தணி மதீனத், தெல்லையில் வேநதா ஜமாதாகளியாரு மிருந்தன ரவரொடு மினிய, பல்லுரையாவும் பேசவும்வேண்டு மெனநினைந் தாத்தொடு பழகுங், கொல்லுலை வேற்கை மள்ளர்கள்சூழ நடந்தனன் குலவுத்தோள் வீரன். (29)

தண்ணில வுமிழுந் தாளவெண்மணிக டயங்கிய தடத்தொடு நிறைந்த, மண்ணைசூழ் சுகுறாவெனு நகரேகிப் பாவையாக் கணிவிளக் கெனன, வெண்ணெய்யார்ந திருண்ட நெறியறற்கூநக வில்லவ ருடன் வர வெழுநது, மண்ணிடம் துதிக்கும் பொனனுல கென்னுமதீனமா நகரில்வந தனனால். (30)

வாயினின்முக மன்கூறியுண் மனத்தின வஞ்சக மியற்றிமே லெரியுந, தீயினுங் கொடிய தன்மைய ரவர்க்குஞ் செம்மையிலாத வெஞ் ஜமாத, ரேயிடத் தொருமா மனையிடத்திருநதா னெரிவிடப் பணிவிரிச் சிகமு, மாயருநரகம் புகுவதற் கெழுவ தலலது வேறறிடம் போகாம்.

கடனெனு நோன்பு நோற்றிடுமவைக் காண்டொறுந தொடுந்தொறும் விரைவிற், றடநதொறும் போய்ப்போய் சூழ்குவன ரொழுகை தகுமவர்க் காணினுநயனங, குடங்கையின மறைந்தங் கேகுவன் தீனின் கோதையர் தமையழைக் கிருததிச, சடந்தணி கருக விழிதரு வார்த்தை சாற்றுவன சாற்றுக வொழியான. (32)

ஆரணமோதுந் திருமொழி கேட்கி னகறலைச் செவிபுதைத் தகல்வான், காரணநபிகூ றியற்றுத றெறிந்துங் கட்டுரை வாய்மையெனத் துரைப்பான, ஞாணி தனிலோர் தூதருமினறு தனியவ னெனபது மினறு, நீரணி நகரத் துறைகுப லல்லா னிகரினி வேறிலின் றென்பான். (33)

இன்னனபேசி தீனருக் கிடுக்கண் செய்தவ னிருநதன னிதனை, மன்னாமன, னபிகேட் டகங்கறுத் தவனறன வாய்மையி னிணங்கல னினிமே, லுன்னுவ தொனகொ றவமுடைதீன ரிவாகளி லொருவரை யேவிக, கனனிய ரிரங்கப பாதகனுவி களைவது கருத்தெனக் குறித்தா.

ஆதிநாயகன்ற னேவலின் படியே யன்றிமற் றேதொன்று நினையா, நீதியின மருவுந் தீனவரியாரு நிறைதாக் கூவிமுன னிருத்திச், ஜமாத

ரிற் கொடிய ஜூதன்றன் செய்கை துன்புரையாவையுந் தொகுத்து
வேதமா மமுதமொழுகிய வாயால் விடமென வுரைத்தன ரன்றே. (35)

நஞ்சினுங் கொடிய மொழிசெவியோட நாட்டங்கள் சிவந்தழ றெ
றிப்ப, வெஞ்சினந் தலைப்பெய் தருமதை நோக்கித் தீனிலைவேண்டில
ஞவி, யெஞ்சிடச் சடுதி முடித்திவண் வருவனென்றன ரொருவர தறிந்
து, தஞ்சமென் றுலகந் தாங்கின ரதனைச் சம்மதியெனக் கழறினரால்.

நன்றுநீ மொழிந்த தாயினுமடியே ஞவிறற் றேவரீர் மேலுங்,
கன்றிய மனத்தோ டருங்குறை யியம்பிக் களைகுவன் கொடுமையஞவி,
வென்றியாம் படிக்குத் திருவுள மருளிவிடை கொடுத்தருளவும் வேண்
டு, மென்றனர் சய்மா வெனுமுயிர்த் தோழரீன்றருள் முகம்மதென்
பவரால். (37)

அகத்தொடு முகமு மிகக்களிப்பேற மருமது மகிழ்ந்தணி விஷ
யந், தொகுத்தடை கிடந்த பருப்பதத் தோளாய் நீதுணியாத தொன்
றுளதோ, விகத்தொடு பாமுஞ் சுகத்தொடுதுயரு மெழுவகைப் பிறப்
பொடு யாவும், வருத்தவ னுதவி யடுத்துற வேகுவாயென விடைகொடு
த்தன ரால். (38)

மையினு மிருண்ட கருஞ்சிரத் தணிவெண் மகிடந்தென நறு
மிழைப்பா, வையமற் றணிந்து கஞ்சுகிமேனி யழகுறப் போர்த்துமுன்
டகமாங், கையினி லசாக்கோ லொன்றினைத் தாங்கிக் காலினைக் கபுசி
னிற் புகுத்தி, வெய்யவஞவி களைதரக் களித்து பிசுமிலென் றெழுந்த
னர் வீரர். (39)

வேதமு ஞான நீதியுமோது வீதியு மியாவரு மேவும், போதமு
மாயும் பாவலர் வீதிப் போக்கையுங் கடந்துநன மனத்தி,ஞதாம் பெரு
கக் களபமெய்வீச வறிவொடு தருமமு மகற்றுஞ், ஜூதரிற் கொடிய
பாதகனிருந்த சுடர்மனைக் கடைத்தலை புகுந்தார். (40)

ஆங்கவ ணொருபால் விலைசொலற்கரிய வணிமயிர்ப் படமொன்று
விரித்துப், பாங்குட னிலவம் மஞ்சனையதன்மேற் பரப்பியொ ரொருகி
னிற் சாய்ந்து, வீங்கிள முலையார் முலைக்குறி யணிந்த களபத்தினவிற்
றிருந் தடந்தோட், டேங்கண்ணி சூடி யரியென விருந்தான் தீனரு
முன்னரீண் டினரால். (41)

காண்டனன் முகத்தை நோக்கின னெடிய கைகுவித்திரு மிரு மெனனும், பூண்டவெந் துயரின்வாடிய பெயரைப் போலவு மிகமுக மொடுங்க, நீண்டவெம் மூச்சுமடிக்கடி யுயிர்த்து நினைவினை யடக்கிமுற் மமயப், வேண்டின னிறுதி யோலைகொண்டு வந்த வீராருமோரிடத்திரு ந்தார். (42)

அடையலர் தமக்கோர் கொடுமைசெய் யிடியே யருங்குயிர வர்க ளுக் கரசே, குடிபுறந் தழுவுந் தடக்கையங் களிறே கோனி லைக்குரிய வெங் கோவே, வடவரைக் குவடு சாயினுஞ் சாயா மன நிறைந்தெழு மதி மலையே, மிடிமையின் றமியேன் மொழிசெவி கேட்பவேண்டுமென் றுரைவிளம் புவரால். (43)

இனத்தினிற் போய்ப்போ யுரைப்பதற்கு குடலங் கூசுதங் குறை ப்பது மிழிவென், மனத்தினுட் டுயர நீங்குமென் றுன்னி வந்தனனு கையா லீண்டு, குனித்தெழு மதியந் தவழ்தரு கூடகோபுர மிலங்குமிவ் வூரிற், றனித்தனி விருந்தேன் முன்னாந் நாளிற் றேன்றினன் முகம் மதென் றெருவன். (44)

தூதெனத் தோன்றி வந்தனன் மாயத் தொடர்வலைச் சுருக்கினு ளாகி, மாதவ மிழிந்தே னுலைய மிழந்தேன் வணக்கமொன் றொருமுறை யெடுத்து, தீதுற நிலத்தில் விழுந்தெழுந் திருந்து சென்னியும் புண் ணுலை வுற்ற, வேதனை யானேன் கேளிரு மிழந் தேன் விதியினை விலச் குவ தெவரே. (45)

உலகினி லெவருஞ் செய்கிலாத் தன்மை யுண்டுபண் ணிக்கொண்டு விதியென், றலகிலா நிதியந் தனைச்சதக் காவென் றவா வர்க்களித்தனன் பறித்து, நிலையிலா தடியேன் வெறுங்கையு மானேனென்பது நினைந்தில னின்னு, மலைவுற தீனர்க் களித்திடு மென்றுமேனெதென வறைகுவ னையா. (46)

தொன்றுதொட் டுவந்த வடிவுறுஞ்சமயந் தூடணித்திடும் பவ மெல்லா, மின்றுதொட் டடியேன் கவலையுள் ளழிய விப்படி யியற்றிய வினிமேற், பின்றொட ராது கொடுமையுஞ் செய்யாப் பேதையர் மனங் குழைந் திரங்குந், தென்றிகழ் வடிவோய் நின்முகங்கண்டேன் றீர்ந்த தென் றுன்பமென் றிசைத்தார். (47)

கண்ணினீர் ததும்பமெய்யெனப் பேசுங் கட்டுரை காதினிற் கேட்டான், றிண்ணிய காங்கா றட்டியே சினத்தான் றீப்பொறியுகவிழி செவந்தான், வெண்ணிலா மௌலித்தலையினை யசைத் தான் விலாவிற வெடிபடச் சிரித்தா, னுண்ணிறை மனத்தின வெஞ்சினமுற்று ளுழ் விதி முடிவினை யறியான். (48)

வரையெனத் திரண்டு பெருமையு முரணும் வளர்தர வெழும்புய சல்மா, அருமையி னுதித்து முகம்மது வென்ன வழங்குறவருஞ் செல்வ மகனே, விரைவுற நீயும் பேதுறவஞ்ச வேலியிற் கிடந்துழன் றனையோ, பரிவினி லவனுற் குறைஷியோர் பட்ட பாட்டையுங் கேட்டறிகிலையோ. (49)

பத்தியி தென்னக் காரண மென்றோர் பாசுரத் தெவரையும் விசித்து, வத்திரம் பலபன் மணியொடு நிதியும் வழக்கொடுங் கணக்கொடும் வெளவி, நித்தமுங் கெடுப்பன் றமரின்மேல் வாஞ்சை நினைவறக் கருத்தையுங் கலைப்பன், வித்தக வறிநீ முடிவினுங் கூட்டி வேண்டிலா நரகினில் விடுவன். (50)

தெள்ளிய மதியோ யான்சொலும் வார்த்தைச் செயமலாற் றீதெனப் போகா, துளளுறை யறியாய் துனபுவந் தினை முலைப்பது பின்னரிற் காண்பா, யெள்ளிநா னுரைபப தென்கொலா கையிறை வியம்புவதிருக்கவென் னிடத்திற், றள்ளருந் துயருந் தாங்கிநீ வந்த தன்மையையுரையென வுரைத்தான். (51)

ஆலய மறந்த தீனுடை ஹபீபுக் கன்பொடு முவப்பொடும் ஸதக்காச், சாலவு மருளிக் குடியொடி யானுஞ் சஞ்சலம் புகட்டிய வணக்க, வேலையு மறந்து நமமிடஞ் சார வேணடுமென றெண்ணின னதற்கும், காலினும் வலியோய் பதினகலத் தவசங் கடன்றா வேண்டுமென் றிசைத்தார். (52)

சொல்லினை யுணாந்து நீமன மகிழ்ந்து தொன்னெறிப் படிகரம் பிழ்த்த, வல்லவ டனையென னிடத்தினி லினிதி னீடுவைத்திடி னுரைப் படியே, யொல்லையிற் றருவ னுறுதியென் றுரைத்தா னுமியொடு கரியையவைத் தூதுங், கொலலுலை வடிவேல விட்டெறிந் தனபோற் கொடுநா கினிற்குடி புகுவான். (53)

நிறையினிற் பொறையி னினைவினின் மான நிலைமையிற் புகழினிலருளி, லறிவினிற் பொருவிலாத மெயப்பெரி யோயவமொழி யாவரு

மறியக் குலைபட வுரைத்தீர் சொல்வதென் றென்றார் கொடியவன் கேட்
டுவந் தீன்ற, சிறுவர்க ளவரை யாயினு மென்ற னிடத் தினிற் சேர்த்தி
யென் றுரைத்தான். (54)

ஆவியென் றுதித்த தனையரைப் பிடித்தங் கடவைத் திடினவா
வரோ, மேவியமான மிழிதரத் துயரின் விற்றிடுந் தொழும் பரென்
றுரைத்து, நாவினிற் சுடுவ ராதலா லிஃது நன்மையன் றிருங்கதிர்
வீசித், தாவிய வுடைவா ளுவமையிலாது தருவனும் மிடத்தினி லடி
யேன். (55)

தருவதும் பகலே கொடுவரமாட்டேன் றாணிமேற் றிசைக்கடற்
சார, விருளுறும் பொழுதின் மறைதர விவண்வந் தீடுவைத் திடுவ
னென் றுரைத்தார், பிரியமுற் றதனுங் கேட்டுள மியைந்து பிறழ்ந்
தொளி வீசுமெய் யணியோய், விரைவுடன் மனையிற் சேறியென் றுரை
ப்ப மிகமகிழ்ந் தெழுந்து போயினரால். (56)

வீரனுமனையிற் புக்கின னரிய விரிசிறைப் பறவைக ளனைத்து,
மார்வமு மொடுங்கிக் குடம்பையி னடைய வாயிரங்கரங்களுஞ்சுருங்கிப்
பாரெனுங் கரையினிருட்பட மெறிந்து படர்திரை செறிகடற் றடத்து,
நீரிடைமறைய மூழ்கினன் சேநத நெடுங்கதிர்ப் பரிதி வெய்யவனே.

ஆதவனேக வுடுக்கண மனைத்து மகவிரு விசும்பிடஞ்செறிய வேத
முள் ளுறைந்த நாயனை பறுலின் விதிமுறைத் தொழுகையை முடித்
துக், கோதறு மபூதத் தொடுமுண வருந்திக் குற்றுடை வாளினையே
ந்தி, மாதிரப் புயநன் முகம்மதைப்போற்றி யெழுந்தனர் முகம்மதென்
பவரால். (58)

நம்பினுக் குரியோ ருயிரென வாய்ந்த நால்வரைச் சடுதியினழைத்
துப்,பெட்புறக் கூட்டியுடன்வர வேகிப்பேதையன்மனைத் தலைக்கடையி,
னுட்புறத் தொருபா லிருத்திமற் றவருமொருபுறத் திருந்துவெம் புலி
போற், கட்புலன் கதுவா விருளினிற் போற்றிக் கருபெனக் கூவின
ரன்றே. (59)

கேட்டனன் மனையு ளிருந்தனன் பகலே கிளத்திய வாய்மையின்
படியே, வேட்டலுற் றுயவந்தான் சொன்மொழி தவறு மேன்மைய னொ
ழுக்கமு முடைய, னீட்டியபுகழா னிவனென மனத்தி னினைந்தனன்

களபமுமணிந்து, நாட்டமுற்றினிதினெழுந்தனன் னெழலுநன்மொழி
மனையவ ளவில்வாள். (60)

மையினு மிருண்ட விருளுறக் கொடிது மனத்தினி னினைக்கொ
ணுக் கபடும், பொய்யும்வஞ் சகமுங் கொலையொடு சூதும் பொருந்திய
செறுநருண் டதலாற், செய்யமாண் பமைந்த திறன் மிகு, துணைவர்
சேறலுக் கொருவருமிலையா, லையகோ துணையே யருங்குலக் களிறே
வாருயிர் தாங்கிய வரசே. (61)

நோக்கியவிழியும் வேயெனுந்தோளு, நெய்துற வலத்தினிற் றுடி
த்த, தீக்கொடுங் கனலொன் றெய்தவு மறிந்தேன் செந்நிறக் குருதிவா
கமுகின், மூக்கினிமேலதோ தோற்றிய தின்னே முற்றிய வினைப்பய
னியாதென், றேக்கமுற் றிரங்கி யடிக்கடி நோக்கி யிருமிரு மிருமென
விசைத்தாள். (62)

மனையவள் மொழிகேட் டணிமுடி துளக்கி வாளெயிறிலங்கிட
நகைத்துக், கனியிதழ்த்தேனே பெண்மதி யதனாற் கழறினையுலகினி
லெனக்கோர், தனிமையு முளதோ வினைபுமிங் குளதோ கஞ்சலமதி
தனை யகற்றென், றினையனவுரைத்துக்கடைத்தலையேகி முகம்மது முன்
னர்வந் திருந்தான். (63)

வஞ்சக னிறுதி கொண்டுவந் திருந்த முகம்மது கருபினை நோக்கி,
மிஞ்சிய நறைசேர்கலவையற் புதமாம்வீசுவ தேனென வினவக், கொஞ்
சிய கிளியிற் கூறுமென்மனையாள் கூட்டிய பரிமளமதனை, யெஞ்சலில்
புகழோய் மிடற்றனி லணிந்திங் கெய்தினன் வேறிலை யென்றான். ()

அவ்வுரை கேட்டு மனமகிழ்ந் திருந்த வவனியிற் பரிமளமிவை
போ, லெவ்விடத் தினுமியான் காண்கில னெளியேனென வெழுந்
தெடுத்தவனுவி, வவ்வுற நினைந்து மோர்ந்துபார்ப் பவர்போல் வாள்
கொடு வயிற்றிடை வழங்கக், குவ்வுவ வீழ்ந்தாருயிர் துறந் தான்
குணமிலாப் பாதகக் கொடியோன். (65)

குருதிநீர் துடைத்து வாளுறை புகுத்திக் கூடிய நால்வருஞ் சூழ,
விரைவுடனெழுந்தங் கவர்மனை போந்தர் வீந்தவன் மனையிடத்துறை
யும், சுரிகுழற்பணைத்தோட் பிறைநுதற் கனிவாய்த்துணை முலைக்கொ

டியிடைக் கரிய, வரிவிழிச் சிறுமான் மயிலனா ளுரியமன்னவன் வரவி னைக் காணாள். (66)

சென்றனன் பின்னே வந்திலர் கொடிய தீவினைப் பயனணுகினவோ, கன்றிய மனத்துள் தீனெனுஞ் செறுநர் கையுறக் கலங்கி நின்றனரோ, பொன்றிகழ் முலையா ராசையங் கடலுட் புக்கிமெய் சோர்ந்துடன் றனரோ, வென்றிவை புலம்பிப் பொருக்கென வேகியெஞ்சினன் றனை யெதிர்ந் தனளால். (67)

கண்டனள் பதறி வீழ்ந்தன ளாகங் கலங்கினள் சேர்ந்தன ளறிவு, விண்டன ளுயிர்ப்பு வீங்கினள் பதைத்து விம்மினள் வயிற்றிற் குற்றி னளெற்றினள் பூழ்தி, மண்டினள் புலனு மொடுங்கினள் கண்ணீர் வடித் தனள் துடித்தனள் மடமான். (68)

அய்யகோ தமியே னகத்துறை நிதியே யாடவர் திலகமே யரசே வெய்யகோ ளரியே மருவலரிடியே வேண்டியான செய்த புண்ணியமே, செய்யநன்மாற்ற மூரத்தவை தடுத்தாய் தீஙகுறு மென்பதுந்தெளியா, தெய்தினை வீணி னிறந்தனை தனித்தே னேழையே னெனப்புலம் பின ளால். (69)

இன்னன புலம்பு மெல்லையிற் கேளி ரியாவருந் திரண்டிவணீண் டிக், கன்னியே வரலா றேதெனக் கேட்பக்கழறின ளுற்றவையனைத்து, மன்னவ ரெவருமதிஜெயித் தூரியவாரண விதிப்படி யரிதின், மினனா ளிரங்க வெடுத்தடக் கினர்மேல் வெய்யவன் குணதிசை யெழுந்தான.

கதமுறு வென்றிக் களிறெனுந் திறல்சேர் முகம்மது ஹபீபுசெங் கமலப், பதமலர் தொழுது வினையமுண் ணிறைந்த பாதகச் கருபினை யிரவின், வதைசெயுங் கபட மொழிமுறை யுரைப்பவரும்பெரும் பகை முடிந் தனவென், றிதயமுள் ளுவந்து மணிபல தூசோடிருநிதியீந் தன ரன்றே. (71)

கருபு வதைப் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-29-க்குத் திருவிருத்தம்-1777.





# சுகுருப் படலம்.

பொன்றின னெனத்தும தடற்புள கெறிந்து
நன்றுவகை கொண்டுள நயந்தினிய தூதர்
சென்றுசுகு ருவினை வளைந்துசிறை கொண்டு
வென்றிகொ டெழுந்துவர வேண்டுமினி யென்றார். (1)

மாறமது கேட்டுமற மள்ளர்க ளெழுந்தார்
வேற்றுவமை சொல்லரிய வேதருமெ ழுந்தா
ரேற்றமவர்வ யப்புரவி யெண்ணில திரண்டு
நாற்றிசை தொறுந்துகள் பரந்திட நடந்த. (2)

விரிதிரை யெனத்தொகுதி வெண்மரை யிரட்டக்
கருமுகி லுறக்கதலி கைத்திர ளுடங்க
விருளறு மதிக்கவிகை யெங்கணு மிலங்கத்
தரைதொறு மிருண்டென நிழற்குவை தழைத்த. (3)

வண்டுநற வுண்டிசை பயின்றுவளர காவுந்
தண்டரு புனற்சிறை கிடந்த தடமற்றுங்
கண்டுபல சேனையொடு காணரிய தூதர்
கொண்டெழிலி லங்குசுகு ருவினை யடைந்தார். (4)

விண்ணினை யடர்ந்துகதிர மேவவரி தாகி
மண்ணினி லுயர்ந்தபெரு மால்வரையை மானத்
திண்ணிய வெயிற்புறம் வளைந்தனர சினத்துக்
கண்ணிய திரைக்கடல் பரந்தன கடுப்ப. (5)

மாசற விளங்குதிறன் மன்னவரும் வெற்றி
பேசுமற மள்ளரொடு வெட்புற நடத்துங்
காசொளி பரப்புகலி னப்புரவி சுற்றப்
பாசறை வகுத்தனர் படங்குக ணிரைத்தே. (6)

தூவிய வனப்பெடை யிணத்தொடு துயின்ற
வாவிமல ரோடைசிறை வண்டிசை முரன்று
மேவிவளர் கின்றபொழி லெங்கணும் விரும்பி
யேவுறுசி லைக்கைவய வீரர்களி ருந்தார். (7)

முறித்தனர் குலைக்கதலி முத்தமுதிர் கன்னல்
பறித்தனர் தடக்குவளை பைங்கமல நெய்த
றறித்தனர் சினைப்பலவு தாழைபனை சூதங்
குறித்துவய னெற்கதிர்கள் கொய்துகுவை செய்தார். (8)

கொந்தலர்க டய்புமிதில் குங்கும சோகு
கந்தநிறை செண்பகம கிற்கடுவு டுப்பை
சந்தனம கிழ்குரவு சாதிபிவை யெல்லா
மிந்தனமெ னத்துணிசெய் தெங்கணுமெ ரித்தார். (9)

பத்தியொளிர் வெண்சுதை பரப்பியெழில் கொண்ட
பித்திகை தொறும்படை பிறங்கியனல் பெய்யும்
வித்தையினி யற்றுபொறி மேவியுய ரிஞ்சி
முத்திகை படுத்தினர் முகம்மதவ னன்றே. (10)

ஓதவுண ரெண்ணிருபத் தோர்பக லடங்காச்
சூதருறை கின்றவெயிற் சுற்றினு மிருப்பப்
போதமன மஞ்சினர் நடுங்கினர் புலம்பி
வேதனை யுழன்றனர் மருண்டனர் வெகுண்டார். (11)

மக்கநக ரத்தினுறை சாபிரு மதீனு
மிக்கமுனு பிக்குகளு மேபிவா தபக்குத்
தக்கதுணை யுற்றிலரெ னத்தனி சலித்தே
திக்கறிய வேகவுல கொடுத்தனர் திறத்தோர். (12)

உடுத்தகலை யன்றுபொரு ளொன்றையு மெடாம
லெடுத்தகைபி லாயுதமெ றிந்துசெலு மென்றார்
விடுத்தவர் நடப்பநபி மெத்தவு மிரங்கிக்
கொடுத்தனரை யொட்டகை சுமப்பநெல்கு றித்தே. (13)

குற்றமுறு வன்னாகு சேர்கொடிய கஃபு
சுற்றமெனு மள்ளர்சிலர் சோபமொடு ஷாமி
னுற்றனர்கள் மற்றவ ரொருங்கொடு திரண்டு
வெற்றிபெறு கைபர்நகர் மேவினர்க ளன்றே. (14)

வாசிமணி தூசுபணி மாடைகுடை வானில்
வீசுகொடி சாமரைகை வேல்படைக ளெல்லா

நேசமுறு செல்வநிறை மன்னரைநி றுத்திப்
* பாசமுறு பேதையர்கள் பாலினித ளித்தார். (15)

இஞ்சியினி ருந்தபொரு ளெட்டுணையு மின்றி
நெஞ்சின்மகிழ் வுற்றுமிடி யர்க்குதவி நேச
மிஞ்சுபய ஹாம்பர்மற வேந்தர்படை சூழ
வஞ்சமற வேமதின் மாநகரின் வந்தார். (16)

பிறங்குபத ணத்தெயில்பி டித்திவ ணடைந்த
மறங்கெழுமன் ஸாரிக ளுவப்புற மகிழ்ந்தே
யறங்குலவு கத்தனருள் பெற்றசில வாயத்
திறங்கின தவத்துறை முகம்மதி னிடத்தே. (17)

சுருப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 30-க்குத் திருவிருத்தம் 1794.

——— * ———



## பதுறுசுருப் படலம்.

——— ✻ ———

போற்றும் வேதநூற் புண்ணியர், மாற்ற மீறவே வாழுநாட்
சாற்று துல்கயி தாவெனு, மேற்ற மாதமா மேல்வையில். (1)

உகுதெ னும்படை யுற்றிடத், தகவி லாப்புறந் தந்தநா
ளிகல பாசுபி யானெனுந், திகழ்த ரும்மவச் செய்கையன். (2)

பதுறி னிற்பலர் வந்திடுஞ், சதுர்மி குத்திடுஞ் சந்தையி
லிதமொ டும்நபி யெய்திறற், கதமு டைத்திறங் காணலாம். (3)

என்ன வஞ்சின மீறவே, சொன்ன வஞ்சகத் துட்டனு
மன்ன நாளினி லன்புறு, மன்னர் சூழ்வர வந்தனன். (4)

மொன்பன் மாமணி பூடண, மென்ப யாவையு மேயவ
னங்பி ஞலவி டத்தில்வைத், தின்ப மாகவி ருந்தனன். (5)

* பாசமுறு பேதையர், இப்பொருள்கள் வேண்டிய மிடியரென்று கொள்க.

ஊறுபு பெற்றிடுங் கான்முளை, மறுபு றந்தரப் பதுறினி
னிறுபு யத்தொ டீண்டினனென, வுறுபு யத்தர்மு ளேதினர். (6)

செவியிற் கேட்ட திறனபி, புவியு ளோர்கள் புகழ்ச்சியா
னவிலு மாமதி னத்தினி லபுதுல் லாவை யழைத்தனர். (7)

புரவி சுற்றிடப் போர்மனர், பரவி மெய்ப்பதம் பற்றிட
விரைவின் மெய்க்கதிர் வீசிட, விரவி யொப்ப வெழுந்தனர். (8)

படிய திர்ந்தெழு பல்லிய, மிடிமு ழக்கென வெங்கணு
மடிப டப்பகி ரண்டமும், வெடிபடத் தொனி வீசின (9)

குடைநி ழற்றவெண் கொடிசெல, விடையி டக்கய மெய்திட
வடமி ருத்தம னவரெலாம், புடைவ ரத்தனி போயினர். (10)

விண்க டந்தவே தண்டமுங், கண்க டந்தெழு கானமு
மண்க டந்துபோய்ப் பதுறினி, னெண்க டந்தவ ரெய்தினர். (11)

மறைமு ழக்குடன் பதுறினி, லிறைய வனபி யெய்தலும்
ஊறுபு சேயுரங் கண்டிலா, னறிவு போய்மன மஞ்சினன். (12)

தீட்டு வேல்குடை திண்பரி, யீட்டு பண்டமற் றென்பவும்
போட்டு விட்டவன் பூமிபார்த், தோட்ட மாய்விழுந் தோடினன். (13)

ஆசை யுற்றமு னையினர், பூசல் முற்றமுன் போயினர்
மோச னப்பத முற்றினர், பாச றைப்புறம் பற்றினர். (14)

பற்று பல்பல பண்டமு, மற்ற வெம்படை வாசியுங்
கொற்ற வீரர்முன் கொண்டுவந், துற்ற பல்சரக் குள்ளதும். (15)

ஆட்டைக் கெண்டின மம்புவிக், கூட்டத் தோர்பலர் கூடியப்
பேட்டைக் கேற்றிவிற் பீரெனச், சூட்டு மோலியர் சொல்லினர். (16)

கற்ற தீனருங் காபிரு, முற்றுப் பூசல்பார்ப் போமென
மற்றுள் ளோர்களும் வந்ததால், விற்ற தேதொகை மிஞ்சவே. (17)

குதிகொ ளும்பரிக் குப்பமோ, டதிக வீரர்மற் றரசரு
முதிய காரண முகம்மது, மதின மீதினில் வந்தனர். (18)

பதுறுசுகுருப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 31-க்குத் திருவிருத்தம் 1812.



# உசைனார்பிறந்த படலம்.

---

வந்த தெண்ணிய ஹிஜுறத்து நான்கெனும் வருடஞ்
சிந்தை கூர்தரக் கசறெனுந் தொழுகையைச் செய்த
லெந்த நாட்டினு மேருநர் மேல்பறு லென்ன
வந்த மில்லவ னாரண மிறங்கின வன்றே. (1)

கூறு மவ்வரு டந்தனிற் குலஅபூ வுமையா
பேறி னால்வரும் பேதைய ரும்முசல் மாவை
மீறு மாரண விதிப்படி தீனவர் வியப்ப
வீறி லானபி திருமண முடித்தன ரியைந்தே. (2)

பின்னு மவ்வரு டஞ்சகு பானெனப் பேசு
மன்ன திங்களிற் றேதியோ ரைந்தினி லழகா
மின்னு பூணணி பாத்திமா வயிற்றினில் விளங்கி
யுன்னு காரணத் துடனுசை னார்நிலத் துதித்தார். (3)

உயிரெனத் திரண் டுவகை கூர்மகள் வயிற்றுதித்த
செயிர றும்புகழ் பேரனை மடிமிசை சேர்த்தி
வயமி குந்தவா ளசன்றனக் களித்தநல் வரிசை
வியனு றும்படி செய்தனர் தூதரின் மேலோர். (4)

காயும் வெங்குபிர்ப் பகையினை வேறாக் களைந்து
தேய மெங்கணு நீண்டசெங் கோலினைச் செலுத்தி
மேய வெண்புகழ்ச் சுதையினாற் றிசையெலாம் விளக்கி
யாயும் வேதநந் நபிமகிழ்ந் திருக்குமந் நாளில். (5)

பொருவி லாத்திறங் குடிபுகு மடலலிப் புலியைப்
கருவெ னத்தரித் தீன்றெடுத் துவந்துநற் கதியின்
மருவி யோருரு வழுத்திய பாத்திமா மயங்க
வருமை மேனியி னடிக்கடி வந்ததா யாசம். (6)

இருந்த நாட்சரி யெனமலச் சடத்தையிங் கிருத்தி
வருந்தி நாடொறு முகம்மதை மகவென வளர்த்துத்
திருந்து மேன்மையார் விறலபித் தாலிபின் றேவி
பொருந்தி னார்மனம் விசுப்பினிற் குடிபுகப் போத. (7)

காரணத் தொடுந் தீன்மிக வாழ்கெனக் கழறிப்
பூர ணச்சசி வயனுமிற சூலையும் போற்றி
யார ணக்கலி மாவினை யடிக்கடி யியம்பித்
தார ணித்தலம் விடுத்துவிண் ணுலகினைச் சார்ந்தார். (8)

ஆவி போதரக் கேளிரும் பிறருமற் றவர்தந்
தேவி மார்களு மக்களு மனையிடஞ் செறிந்து
நாவி னுற்பல விரங்கிமெய் சோர்ந்துள நலிய
மேவு நீர்விழி வழிதரக் கலுழ்ந்தனர் மிகவும். (9)

வண்டி றைப்புன லாட்டிவித் துச்சுறு மாவுந்
துண்ட வாண்முகத் துனைவிழி தீட்டிவெண் டூசு
கொண்டு மெய்புறப் போர்த்தபின் குலத்தவர் குழுமி
யணடர் போற்றிய நபியுட னெடுத்தன ரன்றே. (10)

மன்னும் மோரிடத் தினில் வைத்து வல்லவன் விதித்த
தென்னு மாரண முறைப்படி தொழுவித்தங் கெடுத்தே
யுன்னு மந்திர மெனுங்கலி மாவுரை யொலிப்பத்
தன்னி லியாவருந் துன்புறக் கபுறில்வைத் தனரால். (11)

மருவு லாவிய கபுறில்வைத் திடமுகம் மதுவுள்
ளுருகி வாடிமெய் சோர்ந்துகெட் டுயிர்ப்பெறிந் திரங்கி
யருகி னிற்படுத் தங்கையி னுலுற வணைத்துந்
திருவி ளங்கிய முகத்தொடு முகத்தினைச் சேர்த்தார். (12)

தந்தை வாட்டமுந் தாயெனும்வாட்டமுந் தவிர்த்துப்
புந்தி கூர்தர வந்ததா யேயெனப் போற்றிக்
கந்த மான்மதம் வீசுகுப் பாயத்தைக் கழற்றி
விந்தை யாம்படி போர்த்தவ ணெழுந்துமண் வீழ்த்தார். (13)

அடுத்து நின்றிடுந் தீனவ ரகுமறை நோக்கிக்
கடுத்த வெங்குபிர் களைதருங் காரணக் கடலே
படுத்தெ ழுந்ததும் போர்வையிற் போர்த்ததும் பரிவின்
விடுத்தி யம்புமென் றுரைத்தலு மவர்விளம் புவரால. (14)

அன்பி னுலுறப் படுத்தது கபுறட ராமற்
பின்பு தூசினிற் போர்த்தது பிருதவு சிடத்தின்
பின்பி றந்தவெண் டுகிலினைப் பெறுகவும் வேண்டி
யின்ப மாயிவை · கெப்தன னியாதிறு லென்றார். (15)

அலைத்த டக்குவ லயத்தினிற் றிறங்கெழும் ஹாஷீங்
குலத்து சித்தமங் கையர்க்குமுன் றீனினைக் குறித்து
நலத்தின் மெய்க்கதி தருமிசு லாத்தினை நணுகி
நிலைத்து வெங்குபிர் மதத்தினை நெகிழ்ந்தத ளாலும். (16)

வேறு.

சாப றுகைலலி யென்னுந் தன்மைசேர்
மாபுகழ் மைந்தர்மூ வரையு மங்கையர்
தீபமென் றொளிர்சுமா றைவைச் செவ்விசேர்
தாபர மாமும்மு ஹானித் தாயையும். (17)

ஈங்கிவை யுரைத்தவை வரையு மீன்றெடுத்
தோங்கிய வரிசையு முயர்ந்த பேறுமே
தாங்கிய தாலென தருமைத் தாயர்க்குப்
பாங்கொடு வரிசையிப் படிசெய் தேனென்றார். (18)

திருநபி தருமொழி செவியிற் கேட்டவு
மொருவருக் கொருவருள் ளுவகை கூர்ந்துநற்
பரிவொடும் பாத்திமா வோதிப் பண்புடன்
மருவிய மனையிடம் வந்து புக்கினர். (19)

மறைமுறைப் படிசடங் கமைத்து மாசறக்
குறைபடு துயரினைத் துடைத்துக் கோதிலா
திறையவன் றனைப்பணிந் தின்ப மாட்சிபெறந்
றறிவுட னபியர சாரு நாளினில் (20)

உசைனார் பிறந்தபடலம்-முற்றிற்று.

ஆகப் படலம்-32-க்குத்-திருவிருத்தம் 1832.



## தாத்துற்றஹாக்குப் படலம்.

—:*:—

வதுவையிற் கொடையிற் போரின் மலிந்தமும் முரச மாரு
ததிர்தரு மதீன மூதூ ரண்ணல்தாத் துற்ற ஹாக்குப்
பதியினில் வாழுங் கத்து பானெனுங் கேளிர் தம்மே
லெதிர்பொர வேண்டு மென்ன வெழுந்தனர் விரைவி னன்றே.(1

பேரிகை முரச மார்த்த பெருந்தவின் முருடு மார்த்த
பூரிகை சின்ன மார்த்த பொங்குகா ளங்க ளார்த்த
வீரியர் தீன்தீ னென்ன விளம்பிய மொழிக ளார்த்த
வாரணக் கலிமா வார்த்த வண்டரு மார்ப்ப வன்றே. (2)

பாய்ந்தன பரிக ளாடிப் பறந்தன கொடிகள் வானிற்
றோய்ந்தன குடைகள் பாலிற் றுலங்கின மறைக ளொன்றித்
தேய்ந்தன படைக ளெங்குஞ் சிறந்தன சிவிகை போரின்
வாய்ந்தன மள்ளர் தூளி மறைத்தன வாசை யம்ம. (3)

செறுத்தடர்த் தானைமீதிற் சென்றுசென் றெதிர்ந்தோர் மார்பை
யறுத்தறுத் துதிரச்சேறுண் டனல்குடி யிருந்த வெள்வேல்
பொறுத்தன தடக்கை கண்கள் புகைந்தன சினமேற்கொண்டு
கறுத்தன தீனருள்ளங் கலங்கின காபிர நெஞ்சம் (3)

எண்ணறு சீற்ற முட்கொண டெழுந்ததீ னவர்க ளெங்கு
மண்ணிடஞ் செறிந்து செல்ல வாய்மையே சிரசிற் சூட்டு
முண்ணிறை யுடைய வேந்த ரொண்டிறற் பரியிற் சூழக்
கண்ணகன் ஞாலங் காற்குங் காரணத் தூதர் போந்தார். (5)

அரிவையர் மனத்தை யொத்துள் ளலைசெறி தடமு மற்று
மருமணங் கமழ்மெய்த் தூதா மனமெனக் குளிர்ந்த காவுங்
கருதலர் நெஞ்சிற் றீய்ந்து கனலெழுஞ் சுரமு நீந்திப்
பொருபடைப் புணரியோடு நசுகெனுந் தலத்திற் புக்கார். (6)

வரையெனச் சிமுதமென்ன வாகினி யென்னு முன்னீர்க்
கரையெனப் படங்கு கோட்டிக் கால்படக் கிடந்துலாவித்
திரையென வொளிர்ந்து செம்மை சிறந்தவெண் கொடிகணாட்டி
யரசருக்கரசர் நீண்ட பாசறை யமைத்தா ரன்றே. (7)

திறனிறை பொறையுமொன்றாய்த் திரண்டுரு வென்னத்தோன்றி
யறன்வழுவாத செங்கோ லகுமது கேள்வரோடு
நறைமலர்த் தடஞ்சூழ் வண்மை நசுறினீண் டினர்களென்னக்
கறைகெழும் வடிவேற்செங்கை கத்துபா னவரறிந்தார். (8)

ஆங்கவ ருணர்ந்துசேனை யனைவரு மொருங்கிற்கூடித்
தாங்கரு மயிள்வாள் குந்தஞ் சக்கரம் பரிசைதண்ட
மீங்கிவை யாவுமேந்தி யியம்பல வார்ப்ப மற்றோர்
யாங்கில்வந் திறுத்தார் வெய்யோன் கரமெதிர பனிவந்தென்ன. (9)

முனைப்பதி யமைத்துக் காயிர் மொய்த்திவணிருக்கு மெல்லைக்
குனிப்புறும் சிலைக்கைதீன ரியாவருங்குழுமி நிற்பத்
தனிப்பிறை யழைத்துமுன்னஞ் சாற்றிய விறசூலென்று
நினைப்பரும் பொருளேயேந்தி லூறநினைத் தொழுதுநின்றூர். (10)

அவ்வள வயினோர்வீர னழுக்குறு மனப்தன் தீனர்
செவ்விதினோக்கி நிற்குஞ் செயலறிந் தவகைபூத்து
வெவ்வினைத்தொகுதி முற்றும் வேரறக் களைதற்கின்னே
கவ்வைவந் விதவிற்றென்னக் கட்கடை செவந்து போனன். (11)

கடிதினிற்போவான் றத்தங் காயிரை நோக்கிவீரம்
வடிவெடுத் தனையமான மன்னர்காள் விஷய வாகை
குடிபுகு திருந்த திண்டோட் குரிசில்காண் மனத்திற் றாக்கிப்
யடியனேன் கூறுமாற்றங் கேண்மினென் றறைகுவானல். (12)

வந்தவெம் புதியமார்க்க முகம்மது முதன்மற் றுள்ளோர்
பந்தனையாக யாரும் படைக்கலன் றுறந்து மோனஞ்
சிந்தையி னமைத்துவேறு தெரிந்திடை நோக்கா வண்ணஞ்
சுநதரச் சென்னி மண்ணிற றேய்வுறத் தொழுது நின்றூர். (13)

இருதிறத்தவரும் போரி லெய்துவ தென்கொல் விணின்
பெருமையினிறை தெய்வம் பிரித்தது காணுமின்னே
வரிசிலையுழவ ரோடும் போயவண் வணங்கு வோரைக்
குருதிநீர படியிற் சிநதக் கோறலே யழகி தென்றன். (14)

அன்னதுகேட்ட வீர ரணிமுடி துளக்கி யாகத்
துனனியித் தீனாதங்க ளேழ்பு டி வுணர்த்திற் லெண்ணப்
புன்னினை வதனையுற்றுப் பொருக்கென வெழுந்தா ராங்கு
மன்னிய பறலென றேத்தும் வணக்கமு முடிநத தன்றே. (15)

மண்ணினிற் படிந்தெழுந்த வணக்கமு முடிந்த பின்னர்
கண்ணினு ணர்ந்து மேனமேற் கருததழிந் துவகைபோக்கித்
தண்ணளி யில்லாநெஞ்சா ரஞ்சலத் தழுங்கி நினறு
மெண்ணிய படியேயைகவந தெய்துமோ வெளிதினம்ம. (16)

துணிகிடங் குழன்ற வஞ்சச் சூதரி லொருவனுளும்
வினையமுற் றிறைநது நின்றேன சூழ்ச்சியே விளைக்கு நீரான்
மனவலியுடையீர் முற்றுமதிமாந துணைவ தென்கொ
லினியன மாறமொழி கேண்மினென் றியம்புவானல். (17)

அன்னது போயதாலென் னசறெனுந் தொழுகை யொறுண்
டின்னுமத் தொழுகைதீனோ ரென்பவர்க் குரியதன்றோ
மன்னிய புலன்களைந்து மனவெளி வளியிற் செல்லப்
பன்னிய நிலத்தின் வீழ்ந்து பத்தியின் முடிக்க வேணடும். (18)

குத்திரம் விளைவித்தாலுங் கொலைத்தொழி லண்மினாலும்
பித்துழன் றவர்போனின்ற நிலையன்றிப் பிறிதுநோக்கா
ரத்தரு ணத்தினைகி யாங்கவ ராவி சோரச்
சித்திரவகையின் வீழ்த்தித் தெறுதலே கருமமென்றான். (19)

நனறிதென் றுவகைகூர்ந்து நகைமணித் தொடைறல் வேய்ந்த
குன்றெனப் பணைத்து வீங்குங் குவவுத்தோட் குமரரெல்லா
மின்றொடும் பகைவேறின்றி யிற்றுறத் துடைப்போ மென்று
வன்றிறல் தீனோர்செய்யும் வணக்கமே நோக்கி நின்றார். (20)

ஈங்கிவரிருப்ப வானோர்க் கிறையிறை யருளின் வண்ணத்
தோங்கிய விசும்பைநீந்தி யுறுபொரு ளுணர்த்தும் வேதந்
தாங்கிய வெழிலா யத்துத் தலைமிசை கொண்டிழிந்தார்
நீங்கரும்பயம்வந் தெய்து நிலத்திடை தொழுதற்கன்றே. (21)

ஆரணப்பொருளை யோர்ந்த அளவினில் அசறு தோன்றப்
பூரணத்தொழுகை கொண்ட புணரபொடு பாங்கெல்லோர்க்கு
நேருறவிளங்க வள்ளனின்றதீ னவாகடம்மைத்
தாரணி பிடத்திரண்டு பாகமாய்த் தனிபிரித்தார். (22)

ஒன்னலர்க் கெதிரோர் கூட்ட முறமற்றோர் கூட்டமெளமு
மென்னநின றுறஇ மாமா யியனபி தக்பீர கட்டி
நன்னிலை றக்கூவினோடு சுஜூதினை நடத்தி ரண்டாம்
பினனிலை யெய்த அனனோர் நிம்யத்திற் பிரிதல்கொண்டே. (23)

மற்றுளகரும் மெல்லாந் தாங்களாய் முடித்து மாற்றார்
உற்றுளதிசைபோல் நிற்க வுற்றவக் கூட்டம் வநது
பற்றியின் தக்பீர்கட்டித் தொடாநதிடப் பயில்றக் கூவு
நற்றுறை சுஜூதுஞ்செய்து நாயகரிருப்பின் மேவ. (24)

ஆங்கிவ ரொழுந்தி ரண்டாம் றக்அத்தை யடுத்துச்செய்து
பாங்கினோ டிருப்பின் மேவித தொடாநதிடப் பரிவின் வள்ள
லோங்கிய சலாமைக்கொண்டு முடித்தன ருறைத்த வாறே
யீங்கியற் றியதிரண்டி றக்அத்தின கசுறுமனறே. (25)

தீனரீரணியாய் நின்று தொழுதெழுஞ் செய்கைநோக்கு
யானவித் தொழுகையேதென் றறிந்திலே மரிய தாமான்
மாநிலத் தனின்முன்னேனுங் கண்டதெம் மதத்துங் காணே
மேனிவை செய்ததன்மை யாதெனத் தெளிதலம்ம. (26)

மாயமோ கபடோ சூதோ வஞ்சமோ மதித்திடாது
பாயமோ வினையமோமேற் பகையினை மூட்டறுனோ
தூயவிஞ் சையினியற்றுஞ் சூழ்ச்சியோ காட்சியோவெந்
தீயெனு றதத்திற் செய்யுஞ் செய்கையோ வெனத்திகைத்தார். (27)

இன்றிவண் விளைந்ததன்மை யாதெனத் தெளிவோ மென்பார்
நின்றினிப் பயனென்ன னென்பார் நேரலர் தடக்கை வாளார்
பொன்றுத றிண்ணமென்பார் புகழொடு வலியும்வீட்டிச்
சென்றியாம் பிழைப்போ மெனபார் சேரலே கருமமென்பார். (28)

உடைந்துடைந் தின்னமாற்ற முரைத்துரைத் தவலித்தேங்கி
மடிந்தபுன் மதியராகி வாய்வெரீஇ மனந்தள்ளாட
வடர்ந்துவந் தெதிர்ந்தகாபி ரீனவரும் வீரமானந்
தடிந்துகைப் படைதுறந்து தம்மிற்று மிரிந்து போனார். (29)

கதிதருமிசுலா நண்ணு கத்துபா னவர்கடத்த
மதியினை வெறிதினேக்கிப் பரிந்தன ரென்னுமாற்றந்
துதிதரு வேதநீதித் தூதர்காதாரக் கேட்டு
மதினமா நகரைநாடி யெழுந்தனா வலலே மன்னே. (30)

காயுநற்கனியும் பற்றிக் கறித்துண்டு களித்துக் கொம்பிற்
பாயமாக் கடமங் கோற்றேன பகுபபுற வுடைந்து சிந்தி
வேயுதிர் முத்தமீக்கும் வெறிகமழ் விலஙக ணீநதித
தீயவெங் கானல்வேய்நத செநநிறச சுரத்திற் புக்கார். (31)

வேறு.

நீர்வறந்துகன லேபரந்துதரு நிழலின்றிபடி யோடுறப்
பார்விளந்துவிட ரேநிறைந்துபணி யேமிகுந்துவெளி மீதில்வெண்
டோசெறிந்துசுழல்கா ளுடர்ந்து லவுசேணிமிந்து வளர்தீயவெஞ்
சூர்மலிந்துவிளை யாடணமிஞ்சுகழ றேய்வரும் கொடிய கானமே. (32)

காரையும்பெரிய வாகையுந்திருகு கள்ளியும்மாரிய வெள்ளிலும்
வீரையுங்கரிய மோவையும் நெடிய வேலுமுதிய சூரலுஞ்
சீரையுஞ்சிறிய பூளையுஞ்சினைய மாவழுமபசிய குரவமும்
யாருணின்றலவை யொடெரிந்து நிறைபத்திரங்களுமுதிர்த்தவால்.

சூட்டுசுட்டுமிக வெகுதித்துமறி சோபமுற்றடிகள் பாவமா
பாடுபட்டுவெளியோடியெய்த்து வெகுபார் வையுற்றிடையுமேகொலோ
கோடுபட்டுமலர்காயுதிர்த்துவிளை கூவனுற்றுவிடுவோரொடும்
வாடுபட்டுல வேமிகுத்ததரு மாறுபட்டலவ் வனத்தரோ. (34)

செந்தரைப்படுநி லஞ்சுடக்கழுகு சேனமென்பதடி வைத்திடா
தந்தரத்தினிலெ ழுந்தகட்டி னில் டித்தடிக்கடி பறந்தன
சுந்தரக்கரிநெ டுங்கயத்தொடுசு ருண்டுவெந்துடல் சுரித்தன
வந்துகானல்சுடல் வாசையானை முசமாறுகொண்டுபுற மிட்டவால்(35)

ஆலமொய்த்ததுளை மூரல்கட்செவியணிப் பொறிக்கடி கைநெட்டரா
ஞாலமுற்றுமணியே யுமிழ்த்துடலெங்நாளும் விட்டுரிகிடப்பவை
காலமொய்த்தெரிகளே யிறைத்தசுடு கானல் வெப்புமெய் பொறுக்கலா
தோலமிட்டுதிர மாழைகக்கியுட லேயெரித்துரிவ போலுமே. (36)

உலைகி டந்தசனல்புகையெழும்பாலு ருப்பமுற்றவை தரிக்கிலா
தலையெரிந்துவரு கடல்படிந்துகுளி ரறலருந்தியுடல் கருகிநீண்
மலையடைந்துதிசைதொறுமுலைந்துவெளி வரிதிரிந்துந் னிகதறியே
குலைகுலைந்துநிறை பயமிகுந்தழுதுகுயின்கணீரொடு திரிந்ததால். (37)

பீடுகொண்டபுலி மாதுவெம்பரில் பிறங்குசெந்தழல் வெதுப்பினு
லாடையென்றுமிகு தன்மையெய்தவுவ ராழிவேட்டுறவணிந்தனள்
கோடுகின்றதுளை மூரனெட்டுடல் குழைத்திவ்வெம்மையி
னுணங்கி வெஞ்சேடனுந்தலை வெடித்தொராயிரமுஞ் சென்னியென்ன
வகிருற்றனன். (38)

மங்குலிற்றிரித ருங்கதிர்ப்பருதி வானவன்கரமு மேபுகா
தங்கியம்கடவுள் வெங்கதத்தொடு மடர்ந்துவந்தரசி ருந்திடும்
பொங்குகூளியிர தங்களல்லது பொருந்திடாதபடு நிலமதிற்
றிங்கண்மெய்ப்புகழ்விளங்குவள்ளனபி சேனையங்கடனடந்ததால். (39)

வாயுலர்ந்துகுளிர் நாவறந்துவெகு வாய்மயங்கிவத னங்கரீஇக்
காயநொந்தருவி டாய்மிகுந்துவரு காறளர்ந்துளம் வருந்தியே
யாயவெங்குபிர் துடைத்துவண்புக ழுடைந்ததீனவர்க ளியாவருந்
தீயவன்சுரம கன்றிருந்தொரு சிறியகானிடை யிறங்கினர். (40)

காசடர்த்தசுர மேவிடுத்ததழல் காய்தரச்சடுதி வந்ததால் (வர்
வாசமொய்த்தமகுபூது மெய்த்தகிறலியார்கண் மற்றவர்கண்மன்ன
நேசமுற்றகாவானகளவைத்துநிறை நீடருத்தொறுநிலாவொளித்
தூசினைத்தரையினை மேல்விரித்துமிகுசோபமுற்றுவிழிதுஞ்சினர். (41)

### வேறு.

இன்ன வீரர்து யின்றிடு மெல்லையிற்
றுன்னு காபிரிற் றோன்று மொருத்தன்கூ
துன்னு வஞ்சநி றைந்த வுளத்தினன்
றன்னி னத்தர்முன் றன்றிஞ் சாற்றினான். (42)

ஆடல் மிக்க அறபியெ னுங்குலத்
தூடு தித்த வுழையரு வப்புறத்
தேடி வன்றிறல் தீனின்மு கம்மதை
வீடல் செய்திவண் மீள்குவ னியா னென்றே. (43)

கூறி னானெழுந் தான்கொடு மைக்குறித்
தாறு நீர்த்தட மும்மல ரோடையு
நீறு பாலையு முல்லையு நீந்தியே
யீறில்தினர்து யிலிட மெய்தினான் (44)

சேனை முற்றுந் தெரிவுற நோக்கினா
னான முற்ற நபியுழை வாளவைத்
தூன கற்றி யுறங்குதல் கண்டன
னீன முற்ற விழிதொழிற் செய்கையான். (45)

சிந்தை நன்கருள் கூர்ந்து திறன்மிகு
மந்த வீர ரனைவரை யுங்கடந்
திந்து நேரிற சூல்கண் வளரிடம்
வந்து வந்து மனத்தினி லுன்னினான். (46)

மின்றி றந்தவை வாள்கொடிவ் வீரனை
யின்று கோறல் கருமமென் றெண்ணியே
துன்ற ருங்குணத் தூதர்கை வாளினைச்
சென்றெ டுத்தடற் செங்கையிற் சேர்த்தினான். (47)

அக்க ணத்தி னருமறை யுட்கொளு
மிக்க தூதர் விரைவின் விழித்தனர்
புக்க வஞ்ச வனத்தன்பொ ருக்கென
வுக்கி ரத்தோ டொருமொழி பேசுவான். (48)

மண்டு செம்புன லாடிய வாளுநீ இக்
கொண்டு தீனர் குறை பட வையிரு
துண்ட மாக வுனைத்துணிப் பேனது
கண்டி யாவர் விலக்குவர் காணென்றான். (49)

உறைகொ ணூந்தக தன்கையி னயின
விரல்கே ழிஇவைய வீரருந் துஞ்சினர்
பெறுக நீயெதி ரிம்மொழி பேசினே
யிறையனே யெனைக் காப்பன்மற் றில்லென்றூர். (50)

அன்ன காலையி னங்கவ னேந்திய
மின்னு கோணம் விரல்கள் செயப்புற
மின்னு செங்கை பறித்துமண் வீழ்ந்தன
வுன்னு மப்படி கொல்லவு கெண்ணுமோ. (51)

விடுத்த மண்ணிடை வீழ்ந்தவை வாளினை
யெடுத்து வள்ள லினியுன தாருயிர்
படுத்து விண்ணுல கேற்றுவன பாரினிற்
றடுத்து நிற்பவ ரியாரெனச் சாற்றினூர். (52)

பேத டர்த்திப் பிடர்பிடித் தூநதவன்
சூத மைத்தித் துணையிவண் மேவலால்
வேத ணைப்பட முன்செய் வினைப்பயன்
றீத டுத்ததெ னத்திகைத் தானரோ. (53)

அறத்தின் மிக்க வருட்கட லையனே
குறித்தி டாது குறைமொழி பேசிமுன்
செறுத்து நின்றவெந் தீமைய னியானினி
மறுத்து ரைப்பவிம் வாயுமுண் டாகுமோ. (54)

படிபி டித்திடப் பாய்பரி யேவிமு
ளிடர் விளைத்தசு றுக்கத்தெ னுமனக்
கொடியன் றீமை பொறுத்தருள் கொற்றவ
அடியன் செய்பிழை யும்பொறுத் தாட்கொள்வாய். (55)

பிறர்க்க டாதபெ ரும்பிழை நெஞ்சினிற்
குறிக்கு நீர்மையன் செய்தவிக் குற்றமே
மறைக்க னின்று வளரிறைக் காகநீர்
பொறுக்க வேண்டு மெனச்சரண் பூண்டனன். (56)

வீழ்ந்து நின்ற அறபி யொருவற
வாழ்ந்த கேள்வி யருமை திருத்திமுன்
சூழ்ந்த வாய்மைத் துணைவரைக் கூவியே
தாழ்த்த செய்கையன செய்வகை சாற்றினூர். (57)

வனைக ழற்கழன் மைந்தர்க ளியாவருந்
துணிகொண் மாற்றஞ் செவியுறத் துன்னுவார்
வினைய முற்று விடுப்பவந் தோனென
வினைய மாற்ற மெடுத்தெதிர் கூறுவார். (58)

பாதம் பற்றிய கஃபெனும் பாவியா
னேத முற்று மிளைத்தது மெண்ணிலா
நீத மற்றபி றுபிசெய்நிந்தையும்
பூத லத்துண் மறந்தனிர் போலுமே. (59)

கடமு டைத்தெழு கைம்மலை மாவையுள்
விடமி குத்த பணியைமின் னரினைப்
படிறி ழைத்த பகைஞரைக் கொற்றவ
திடனு றப்புவி தேற முடியுமோ. (60)

கருத்தில் வஞ்சக முங்கொலைக் கள்ளமு
மிருத்தி யொன்றைமு டிப்ப ரிதமுறத்
திருத்தி யொன்றை முடிப்பர் திடத்துடன்
பொருத்தி யொன்றை முடிப்பர் புகழ்ச்சியோய். (61)

தணிந்தி லாத வினையின் சமர்த்திறந்
துணிந்து செய்குவா தூய புகழினை
யணிந்த மேலுளோய் கேட்டி யகப்படிற்
பணிந்து தாழ்குவர் பற்றலர் செய்கையே. (62)

கவினு மன்பு முரக்கமுங் காணுறத்
தவிர்கி லாத பயமுந் தனிமையும்
புவியின் வீழ்ந்தவ ணக்கமும் போற்றலார்
நவிலும் வார்த்தையு நஞ்சென வேண்டுமால். (63)

ஆகை யாலிவ்வ ருங்கொலைப் பாதக
னேகி லாதிவ ணின்னுயிர் சோர்தரச்
சேக றுந்தட வாளிற் சிதைத்திட
லோகை யென்றிது ரைத்தனா வீர ரால். (64)

அறனும் வாய்மையு மன்பு மிரக்கமுந்
திறனும் வீறுங் குடிகொண்ட செய்கையோர்
மறமி குத்தவர் வாய்மொழி கேட்டுளங்
குறைவி லாது நிறைமொழி கூறுவார். (65)

கொலையும் வஞ்சமுங் கொண்டுவெங் கோறலி
னிலையி னின்றனர் நின்னப யம்மென
வலிதின் வந்து வணங்கின ரேயெனி
னலிவி லாதவர்க் காக்கவு நன்றரோ. (66)

காட்டு திண்மற னிங்கதிர் வாளையும்
போட்டு விட்டெதிர் நின்று புலம்பியே
தாட்டு ணைத்தவஞ் சாந்தவிவ் வேழையை
வீட்டி னுலதில் வெற்றியுண் டாகுமோ. (67)

மிஞ்சு திண்மைசெய் மேவலர் கையுறி
னஞ்செ னத்திற் லின்பமங் நாளபோ
அஞ்ச லென்றப யங்கொடுத் தாலுயிர்
துஞ்சி னும்புகழ் வைகலுந் துஞ்சுமால். (68)

அன்பி னுக்கொரு வேலி யவமெனுந்
துன்பி னுக்கருந் தூய மருந்துமீ
றின்ப முற்றற வீண்டிய மெய்த்தவம்
வண்ப கற்றிய வாள்பொறை மாட்சியே. (69)

கல்வி யாசறக் கற்றுணர்ந் தீகைசோ
செல்வ மீறுசி றப்புடை யோரிடஞ்
சொல்லு நீர்மைப் பொறையெனுந் தூய்மையோன
றில்லை யேலுற் றெழும்புகழ் வீயுமால. (70)

புன்றொ ழிற்கொலை வித்தை பொருந்திய
மனறி றத்து மனத்தவர் மெய்புனர
குனறி நிற்பக் குறைகள பொறுத்துநன்
னன்ற ளிக்கி னசைபெரி தாகுமால். (71)

ஆதி யோன்முன ருளிய வாய்மைசோ
நீத வேத நெறிமுறை நினறுநா
மேத மேபொறுத் தின்றுவிட் டாலவன
சூதும் பொய்மன நனமையுஞ் சூழுமால. (72)

என்னு நன்மொழி யின்னன பன்னியே
யன்ன வனறுய ராறறிச் செலவிடுத
துனனு தோழ நுடனெழுந தொலலையின
மனனு கானக நீங்கி வழிக்கொண்டார். (73)

## வேறு.

வால்கு ழைத்தெழில் வனைநெடு மாமுகங் கோட்டிக்
கால்வ ளைத்திரு செவிநிமிர்த் துந்துகந் துகங்கள்
சூல்ப டைத்தமை வரைநிகர் துணைப்புய வேந்தர்
மேல்வ ரப்பரித் தெழுந்தன வளியினும் விரைவின். (74)

மதந்தி றந்தொழு கிருகவுட் புகர்முக மலைபோல்
விதம்பெ றும்வரி யுடல்வளை யுகிர் வியாக் கிரம்போற்
கதந்த ரும்முடங் குளைகெடு வாலரிக் கணம்போற்
றேய்பெ யர்த்தழ கொடுநடந் தனர்வயப் படைஞர். (75)

வாய்ந்த நீண்டகந் தாத்தின யெறிதரு மயிரின்
வேய்ந்த கூன்புறத் தினபிடர் மகத்தின விரிந்து
சாய்ந்த வாலின கவையடிச் சுவட்டின தளரா
தேய்ந்த மெய்யின வொட்டைகள் விரைந்தன வெழுந்தே. (76)

திரண்ட கூரம ரூப் புடையவல் விடையினத் திரளு
முரண்ட யங்கிய வேசரிக் குலம்பல முழுது
மிரண்டு பாலினுஞ் சுமை பொறுத் தணியணி யெழுந்த
தூரண்ட மேவிய படுகரு மடவுயுங் குறுக. (77)

தந்தி ராதிபர் சேனைகா வலர்படைத் தலைவர்
மந்தி ராதிபர் திரண்டிரு மருங்கினு மலியக்
கந்த மான்மதம் பொருந்தியெண் டிசைதொறுங் கமழச்
சுந்த ரானன மொளிர்தர வேகினா ரூதா. (78)

ஆன காலையி னறநெறி தவறிலா வருளார்
தீன ராகிய வீரரிற் சிறந்த மெய்ப் புகழார்
மான வாய்மையார் மண்டமா துடைத்தவை வாளார்
தான மூறிய சாபிறென் றொருநெடுந் தகையார் (79)

பரவி னேறுபே ரொட்டகம் பதாக்கினிக் கடலுள்
விரைவி னேகிலா தலக்கணுற் றலைந்து மெல்லடியார்
யொருவி நிற்பது கண்டுதம் முயிரத் துணை யனையார்
வருத்த மட்டவ ணின்றனர் முகம்மது நபியே. (80)

குறிய வானெடும் பதம்பெருங் குன்றொறு நடத்தி
நறிய பூந்தொடை யிணைப்புய சாபிர்முன் னணுக
நிறைப தாகினி யுடனவா வின்றிநீ ரெற்றிபிற
றறுகி நின்றதென் னுரையென வெதிர்மொழி சாற்றும். (81)

தாங்கி லாதரு நோயினி லிடைந்துமெய் தளர்ந்து
நீங்கி ருதடர் வங்கொடு வரடுமே நிறைந்து
தேங்கி ஞொடொறு மெலிந்துவன் மூப்பினிற் றேய்ந்த
தூங்க லொட்டக நடத்தில விரைந்திலன் றாபோய். (82)

என்ற வாசக மிருசெவி கேட்டய மிழிந்து
வென்றி சேர்புகழ் சாபிர்சோ கத்துமுன் மேவி
நின்று நாசியின் வடத்தினை யிழுத்தினி துடனீா
சுன்றி லாதுசென் றேறுமென றுரைத்தனா ஹறபே. (83)

தீய வங்குநோய் வரடுமூப் புறுதுனி சிதைந்து
போய கனறுள மலத்தெழி லிளமையில் பொருந்தி
யாய மெய்மயிர் சிலிர்த்துட றடித்தடன் முகுத்துத
தூய கோணடலின வெகமுற றெழுநதது சோகம். (84)

அடிபெ யாத்திடா மூப்புறு சோகமென் பதனை
வடிவின் மிக்கெழ விளமையு ணியற்றிய மகிமைத்
திடம டுத்ததின மனனவா சுணடதி ஜயிப்பக்
கொடைப்ப டைத்தவன காநபி பரியினமேற கொணடாா. (85)

காபிா கனடருச் சேனையங் கடலைக் கடந்து
கோப முற்றிய வயவரும் பரியுமயின குழமத்
தீப மொப்பிலா வொளிதரு நபியெனுந திறலோர்
காத லெருட்டக முனசெல மதீனத்திற சாநதாா. (86)

இலகு பல்வள மதீனத்தி லேகவிப பாலைக
கொலையி னின்றன னியற்றிய தீமையைக் குறித்து
மலகில் கீாத்திசூழ் முகாமது வுடுதத லுமனுமம
நலவி லாதுள மகிழ்நதுதன றிசையினி னடநதான. (87)

இருந்த மாயவெங் குபிரிடை யிழன்றபே ரிழிபுப்
பொருநதி தீமையு மயலிலாப புனமையும் போக்கி
மரிநது போன்றநல வழியினை யனதினின மதித்துத்
திருநதி நாடொறுங் கேளிருசூழ வாழ்பதி சோநதான. (88)

உறவின் மிக்கவைந் தரையுறு துணைவரை யுரிய
மறமி குத்திடுங கேளிாக டமைவா வழைத்து
முறைமை யாகவோ ரிடத்தினி லுவநதுமுன னிருத்தி
யறிவு மீறிய வாய்மையீா கேண்மினென றறைவான (89)

ஈங்கு ளெஞ்சினங் கூறியி சொற்படி யெழுந்து
நீங்கி லாதகா னியாறுமவெம் பாலையு நீந்தித்
தீங்கு ருதியா னேகிய நெறியினில தீனோ
ராங்கி யாவருந துயில்வது காண்டக மகிழ்நதேன் (90)

தேட ரும்பொரு ளடித்தலத் திடறிய திறம்போ
லோடி யின்றிமர் தமைத்தெற வருநட வையினிற்
கூடும் வல்வினை மூட்டிய திவனெனக் குறிகொண்
டாடல வென்றிசே ரகமது துயிலிட மடுத்தேன். (91)

தருவிற் சாத்திய வாளினைத் தடக்கரத் தேந்திக்
கரிய வள்ளுறை கழித்தலுந தூதர்கண் விழித்துத்
தெரிய நோக்கினர் நோக்கலுங் காதலந் திருகி
யிருநி லத்திடை விழுந்தழு நாநதக மிமைபபின். (92)

கண்ட கத்தையு மூகம்மது திருசசெழுங் கரத்திற்
கொண்ட டாதகிடத் தெருமந்து மருண்டுளங் குழைநது
மண்ட லத்திலென் பிழைதவிர்த் திடிகென வணங்கி
விண்டு ரைத்தன னவைபொறுத் திருத்தினா மேலோர். (93)

மருங்கி ருநதநீன் னனவ ரனைவரும் வலிதி
னெருங்கி வநதுருத தராத்தனை வீழ்த்தமுன னோநதார
தருங்கை வள்ளலா ரங்கவா கதத்தினைத் தரித்தே
யொருங்கு போவென விடுத்திட மீண்டிவ ணுறைநதேன. (94)

எண்ணு தற்கரும் பெருமையிமை யியற்றியு மிரங்கித
தண்ணெனன வாய்மொழி கொடுத்தளித் தடைக்கலந தநதார
புண்ணி யதனிமே னிறவாக் கல்லதிப் பொறுமை
யொண்ணு மோமற்றி யாவாக்கு முத்திரு ழுலகில (95)

வெருவு றும்மனத் துன்பமுப் விளைவுறு பயமு
மருளுந தீர்கிலா மயக்கமு மாற்றியன ஞோதம்
பெரிய வன்னரு ளாலென துயிரதநத பெறறி
யருளி னுக்கெதி ருதவிநம் மாற்செய்ய ராமோ. (96)

சிருமை செய்பவர் நாணுறக் கொடியவன தீமை
பெருவ ரெனமது நல்வினை யியற்றிய பெரியோர
முறையி னல்வழி பெறுவரென் பதுமுன மெடுத்த
வுறைக ழித்தவை வாளெனக் குரைத்திட புணர்நதேன். (97)

தகைமை சேர்மனப் பொறையினு லுந்தய வாலு
மகிமை மீறிய வாத்தினு லும்வலி யாலு
நிகரி லாதபே ரறிவினு லும்வலி யாலு
மகமு லாவிய விறையவ னபியென லாமால். (98)

வைய முந்திசை யும்பெரு வானமும் வானத்
தைய ருந்திரை யாழியு நாருமற் பகலும்
வெய்ய னுஞ்சசி யும்பிற வும்விரை மேனிச்
செய்ய ரின்றெனி லின்றென யாவுந்தீய் வுறுமால். (99)

வான்மு றைத்திற நடவிய மறையுரைக் கலிமா
வுரைசெ யத்தகா வானவ ராயினு மொழியா
நிரைய முற்றுழன் றழுந்துவ ரெளிலவை நினையா
வொருவி விட்டநா முய்வதத் திரமவை யுறையீர். (100)

சிந்தை கூர்ந்தவ ரருள்செயிற் சேணுடில் வுகு
முநது வான்சரா சரமுமோர் குறைவின்றி யுமக்கு
நொந்து நோக்கிடி னவையெலா மொருங்குட னூறி
தெந்து தாழ்நதொரு நொடியினிற் றுகளதாய் வீழும். (101)

குறையில் வாய்மையும் வணக்கமுங் கோதறு குணமு
நிறையு மானமு மிரக்கமுங் கொடையுநன் னெறியும்
பொறையும் வீரமும் போதமும் நீதமும் புகழு
கறையு மோருரு வாய்த்திரண் டெழுமுகம் மதுவே. (102)

இன்ன தன்மையோ ரறையுமை மதீனத்தி னேகிப்
பொன்னந தாமரை யிணையடி சிரசின்மேற் பூட்டிக்
கன்னல் போன்மொழி திருக்கலி மாவுரை கழற
லன்ன தேகருத் தன்னதே யழகென வறைநதான். (103)

தேர்ந்த கூறிய மொழியுணர்ந் தறிவினிற் றேறி
யோர்ந் தியாவரு மிவரொடு மொல்லையி னெழுந்து
வார்ந்து நீண்டெழுந் திவ்வனங் கடந்தணி மருதஞ்
சார்ந்த பல்வள மதீனமா நகரத்திற் சார்ந்தார். (104)

உம்பர் கோனகத் தனைத்திட தாரண முணர்ந்த
விம்பர் கோனபி கமலச்செஞ் சேவடி யிறைஞ்சிக்
கும்பி மாற்றுந் திரக்கலி மாவுரை கூறி
நம்பு யுள்ளகத் திருத்தியீ மானினி னயந்தார். (105)

ஒருவ னுயனல் லாலிலை யுரியதூ திவரா
விருமை யும்பல னெய்துமென் றியல்புறுந் தொழுகை
கருதி நோன்பொடு பறுலுசுன் னத்துகள் கற்று
மருவி மற்றுள முறையெலாம் படித்தனர் வயவர். (106)

பவமுந் தீமையும் வஞ்சமும் கொலையொடு படிறு
மவமும் வேரறத் துடைத்தருந் தீனவ ராகிப்
புவியின் மீதடி தோய்தரா முகம்மதைப் போற்றித்
தவமுங் காட்சியு மெய்தியங் கவர்தலஞ் சார்ந்தார். (107)

தாத்துற்றஹறாக்குப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 33-க்குத் திருவிருத்தம் 1939.

——(*)——



## சாபிர்கடன்றீர்த்த படலம்.

——(*)——

அனையவர் போய பின்ன ராசவத் தொடையல் வேய்ந்த
பணிவரை யனைய தோளார் பகைதடிந் திலங்கும் வேலார்
தனிமழ வரியே றன்னார் சாபிறென் றோதுந தக்கோர்
நணிபுகழ் தழுவி நின்ற நபிமுனம் வந்து சொல்வார். (1)

அண்டநா யகவென் றந்தை யறிவிலா யெகூதி யோர்பாற்
பண்டை நாளினிய வீந்தின் பழமறு பஃது கோட்டை
கொண்டனர் பலிசை யாக வாங்கவை கொடுக்கு முனனம்
விண்டன ருயிரை யையா மேலவன் விதியின வண்ணம். (2)

என்னுழை யவர்க ளீண்டிப் பொலிகட னீகென் றுன்னிப்
பன்னினா முதல்கொண மியாவென் றடியனேன் பகா முன்னஞ்
சொன்னசொற் படிநல் கெனனத் தடுத்தனர் துணிந்து நின்றார்
மன்னவிவ் வருட மெற்கு வருபலன் சிறிது மனனே. (3)

பலிசையு முதலு நூற்றைம் பதின்கல மாகு மெண்ணி
லலைவிலா வாண்டு நான்கி னாயினு மருள மாட்டேன்
மலிதரு காட்சி யெய்தி வானுறு நடந்த மேலோய்
மெலிவுளே னலிதன மாற்ற வேண்டுமென் றிதனைச் சொன்னார்.

வரையகத் திருந்து பேறும் வரிசையும் பெற்ற வள்ளல்
புரையட ரெகூதி யென்னும் புன்மையோர் தம்மைக் கூவிப்
பரிவுடன் கடமை முற்றும் பற்றுமின் பொறையி னென்ன
வுரைதர விதயத் தெண்ணு மறுத்தன ருணர்வி லாதார். (5)

அறத்தினைத் திரட்டி வேறோ ராணுரு வமைத்த தென்னுந்
திறத்தின ராதி தூத ருயிரெனச் சிறந்த கேளிர்
யுறத்திடை சூழச் சாயிர் பொறிவரி வண்டு கிண்ட
வெறித்துணர் தாது துன்றும் வேரியஞ் சோலை புக்கார். (6)

அடல்புரி சாயிர் தம்மை யருகினிற் கூவி யீந்தின்
றுடைமையின் கனிக டாருத் தொறும்பரித் தீட்டு மென்னப்
படிபுகழ் ஹபீபு சொன்ன சொற்படி படர்ந்து செந்தேன்
குடி புகுங் கனிக ளியாவு மரந்தொறுங் குவித்து வைத்தார். (7)

அக்கணத் தெகூதிக் காயிர் தம்மையங் கழைத்து முன்ன
மிக்கறுங் கடமை யாவும் விருப்புற வெவருங் காண
விக்குவை தன்னி னீவி ரளந்துகொண் டேகு மென்றார்
புக்கியாண் டன்னோர் தங்கள் பொலிகட னடந்து போனார். (8)

விதம் பெறுங் குவைகயின் மற்றோர் குவையினின் வேண்டு நாற்
பதின்கலப் பழமுங் காயிர் பண்புட னளந்தும் நீடற் [றைம்
புதந்தரக் கனிக ளொன்றுங் குறைந்திலப் பொருவி லாதீன்
மதந்தரு நபிகள் கோமான் மகிமையார் வகுக்க வல்லார். (9)

தருத்தொறுங் குவித்து நின்ற பலகுவை யனைத்துஞ் சாயிர்
கருத்தினிற் களிப்பு மீறி மகிழ்ந்துகைக் கொண்டு போற்றிச்
சிரத்தினை யடியின் வீழ்த்திச் சென்றுதம் மனையிற் புக்கார்
வரத்தின்மே னின்ற வேத வள்ளலு மனையிற் போந்தார். (10)

சாயிர் கடன்றீர்த்தபடலம்-முற்றிற்று.

ஆகப்படலம் 30-க்குத் திருவிருத்தம் 1949.

---



# முறைசீக்குப் படலம்.

---

இன்னகா ரணமியற்றி தீனின் மறை முறையொழுகி யிருக்கு மெலலை, நன்னிலைமை தவறாத சாரணரி லொருவரவ ணணுகி நாளுந் துன்னுதவ வானவர்க டொழிமறிய வொளியுருவாய்த் தோன்றி நின் றோ, யென்னுரைக் சோட் டருடியென விணையடியிற் கரந்தாழ்த்தி யினைய சொல்வார். (1)

சேல்பாய பேதிவெருண் டோடவளை யுடைந்து, முத்தஞ் சிந்தச் சோதிக் கால்பாயுங் கரைத்தடஞ்சூழ் முறைசீக்கு வெனுநகரிற் கணிப் பிலாத, வேல்பாய வடுச்சிறந்த திண்மைநல மேணியர்கள் மேன் மேல் வென்றி, மால்பாய்ந்து கொண்டகுல முஸ்தலிக்குக் கூட்டமெனு மாந் தர் மன்னே. (2)

தேறிமன மாங்கவர்க டாங்கடொழு தேவதமே யன்றி மற்றோர், வேறுமொரு தேவதமே யில்லையெனப் பாரிடத்தின் வெருண்டுநாளு, மாறுகொண்டு பெரியோருக் கிடர்விளைத்து மறைநான்கு மறந்தியாரு ங், கூறிய வாசகமுமி யம்பிமதத்திருந் தனர்வெங்கொடுமை பூண்டர்.

தானமரு ளிறைநீதி யறிவுபொறை யெட்டுணையுந் தாங்கிலாதா, ரீனமுறு வெங்கொலையு நிந்தனையும் வஞ்சகமு மியைந்து நின்றார் தீன் வர்க டமைக்காணிற் கோறலன்றி வேறுமொழி செப்பிலாதார், மான மிலர் புன்மையெழும் வஞ்ச நெஞ்ச ரியாவரும் வணங்கிலாதார். (4)

இத்தகைமை பூண்டுநந்தந் தீனோருக் கிடுக்கணிலை வியற்றி நாளு ஞ், சத்துருவா மெனவிருந்தா ரிங்கிதனை யறிமினெனச் சாற்றலோடும், பத்திபெற நிறைமனத்திற் கொண்டுகளிப் புறமகிழ்ந்து பரிவினோடு, மந்திரியு மன்னரொடு மன்னவரு மெழுகவென வறைந்திட்டாரால். (5)

ஆரணத்தின் முறைதவறாத் தோழரில பாதற்றால் ஹப்பாறை யளவிலாத, தோரணவண் மறுகுதரு மதீனநகர்க் காதியெனத் தோன்ற நாட்டிப், பூரணவெண் மதியனையோர் கரைபோட்டு பார்ப்பவினை பொ ருவிலாத, காரணத்தி னின்றதவஆபிஷா வுடன்போகக் கண்டதன்றே.

அன்னநிறை மயிலெழுகக் கன்னியாகள் புடைசூழவாதி தூத,
ரொன்னுநபிக் கரசெழுக காட்சியொடு காரணமு மெழுகத் தாழ்வின்
மன்னவர்க ளெழுகவெழும் பரிவேந்தர் திரண்டெழுக வரத்தினியார்க,
டுன்னுபரி யொடுமெழுக வெழுந்தனபோய்த் திசைதோறுந் தூளி
யம்மா. (7)

துன்றடல்வாம் பரிநடந்த துன்னலர்க டசையோடுந் தோயுமாவி,
தின்றுமிழும் வைவேலின்மன்னவர்க ணடந்தனர்வெந்தீமை மற்றும்,
வென்றிநடந் தனபுடையின் வீரநடந் தனவிறசூல் மேனிவீச, மற்
றனடந் தனபடைக ளியாவுநடந் தனவானர் வாழ்த்த மன்னோ. (8)

சென்னிமதி யெனச்சருவங் திலங்கவடி வுறுமுடலிற் சிறந்த
வெள்ளை, மின்னனிகஞ் சுகியிலங்கப் பிடரிடைமுத் திரையிலங்க விரும்
பிநாளும், பன்னுமறை வாயிலங்கக் கருணைவிழி மீதிலங் கப்படையி
னோசை, கன்னமுற வேயிலங்கப் பரிசுமப்பவேகினர் வண்ஹபீபு மன்
னோ. (9)

பெரிய முலைச் சிறியவிடைப் பவளவிதழ்த் தரளநகைய பிறழும
வாட்கட், கரியகுழற் பிடியினிடைச சிலையினுதற் செழுமைதருங்கணிப்
பின் மாத, ரிருபுறத்து மடைப்பைமணிச் சிவிறிமரை நறும்பேழை
யிணைய வேந்தப், பொருவரிய வழகுமயி லாயிஷாவெனுங்கொடியும
போனா ரன்றே. (10)

விண்ணைமறைத் தனகொடிகண் மேகமறைத் தனகுடைகள்விரும்
பிநோக்குங், கண்ணைமறைத் தனகவரி கடலைமறைத தனவியத்தின்
கணிப்பி லோசை, மண்ணைமறைத் தனதூளி வெயிலை மறைத்தன
வொளிசேர் வாட்கள் பேசு, மெண்ணைமறைத் தன தானை யிரவிமறைத்
தனமுகம்ம தெழில்கொண் மேனி. (11)

வேந்தர்மறை யோர்கண்முசு லிம்கடவு மாந்தர்நெடு வெய்யோ
னென்னக், காந்துகதிர் வாளுழவர் மற்றெவையுங் காபிரிகல் கருதா
நின்று, நீந்துபுவித் தாரையிடஞ் சிறிபதெனவோ தானைநெருக் குற்ற
தென்றோ, பாய்ந்துகவி குளம்புபடா தெழுந்துவிண்ணிலேகின வெம்
பரிகண் மன்னோ. (12

தாணிசிறி தெனக்கிடந்த பெரும்பதியின் றெடுத்துவந்த தருமவேந்தர், மருதநிலங் கடந்துநெடுங் கழுதுகுடி யிருந்தசுர வனமுநீந்தி, விரிதருவாய் மலர்த்தேற லருவிசொரி வரைகடந்து விரிநீரென்னப், பொருவரிய வளம்படைத்த முறைசிக்கு வெனுநகரப் புறத்துற்றூரால்.

அந்தரத்தி னகடுரிஞ்ச நீண்டநிசா னமைத்துமதி யனைய காந்திச், சுந்தரவெண் படங்கியற்றிச் செவ்விநிரைப் படிதூகந் துலங்கச்சேர்த்தி விந்தைபெறப் பீடிகையும் வகுத்துமறைமாந்த ரொடு வேந்தர் சூழக், கந்தமுல வியதூத ருறைந்தனர்நற் றரும நெறி கடந்தி லாதார். (14)

மாறுகொண்டு தீனவரு முகம்மதுவு மற்றெவரு மதீன நீந்தி, யாறுகொண்டு வந்துமனத் தெண்ணுமன் முனைப்பதியு மமைத்தாரென்னக், கூறுநக ரவர்க்குமனம் வெகுண்டனகண் சிவந்தன தீக்கொதிப்ப வாயை, யூறுதரக் கடித்தனபல் பிசைந்தனகை பொடித்தனவு ரோமமெல்லாம். (15)

தாங்கினர்வெம் மறமுக்க மமையாத கோபத்தீத் தழைப்ப மேன்மேல், வீங்கினாபோர கிடைத்ததென வடிக்கடிபோய் மெலிந்திருந்த விலங்கிற் றேள்க, ளோங்கினாக ளியாமெழுமுனப் படைமீண் டெய்திடுமோ வெனன வெண்ணி, வாங்கினவர்கள் கூாமையினை நோக்கினர்கள் படையாவு மாநதர் மனனே. (16)

மெய்த்தலத்திற் கஞ்சுகியு மேற்கவச முமவிசித்து விரிதீச் சூலநெய்த்தலைவேன மறித்தறிகை தண்டுதனுச் சக்கரமின் னெடியவாளுங் கைத்தலத்தி னேநதிவிசைப் பரிசூழ வீண்டினர்வெண் கடுவாய்ப் பாந்தட், பைத்தலங்கீ ழுறநெளியத் திரண்டுநடந் தனவுததிப்பதாதி மன்னோ. (17)

படபடெனக் கொடியாடக் குடைாவிப்ப மரையெறியப் பரிகள் பாய, மடமடெனப் பேரிகைமற் றியங்குமுறக் காபிரொடு மதிப்பில் சேனை, திடுதிடென வீண்டியதென் றரியமறை யெழுது கொடிச் சீயமினனே, யெடுமடென தீனுவநத போர்வேந்தர் சேனையோடு மெதிர்ந்தாரன்றே. (18)

அடுத்தனவெம் பரிபரிநெடுந தானையொடுஞ சேனையொடுமங் குமிங்கு, மடுத்தனவாண் டிருபடையு மொருபடையீ தென்ன வணி

லயங்க மாந்தர், கடுத்துவிழி நெருப்பெழலாய்த் தின்று மணிச் செழுங்காத்திற் கணிப்பிலாது, விடுத்தபடைக் கலன் களுயர் விண் ணொடு மண்ணையுமறைத்த வெளியி லென்ன. (19)

குடர்துமிந்த சிலநெடிய வாறுமிந்த சிலவேகங் கொண்டுபாயு; மடிதுமிந்த சிலவுளையின் களந்துமிந்த சிலமணிக்கு ழணியின் வேய்ந்த, வுடறுமிந்த சிலநிமிர்ந்த செவிதுமிந்த மூக்கினுதி ரங்காலமடைதிறந்த தெனச் சொரியத் தலைதுமிந்து கிடந்து சிலவாசி மன்னோ. (20)

கரமறந்து மகடறுந்து முதுகறுந்துங் களமறுந்துங் கருத்தி னோடு, முரமறுந்தும் பதமறுந்தும்புயமறுந்து மருங்கறுந்து மொளிரு மோலிச், சிரமறுந்து முகமறுந்தும் பிடரறுந்துந் துடையறுந்துஞ் சிதைந்து நீண்ட, தரைகிடந்துள் ளுயிர்துறந்து படையெறிந்து மாய்ந் தனர் போர்த் தலைவர் மன்னோ. (21)

கிள்ளையின துடலினும்போர் மைந்தருறப் பிணுஞ்சேந்து கிளந்த சோரி, வெள்ளமெனப் பறந்துகரை யள்ளலெனக் கிடப்பமனம் விரும்பி யீண்டுங், கள்ளமுறு முள்ளனும்வெஞ் சூரனும் வேதாளமும் வீழ் கழு குங் காகப், புள்ளினொடும் பிணங்கிநிணத் தசைகளுண்டு திரிந்தன போர்க் களத்தி னம்ம. (22)

மலையையொத்த பலபிணங்கள்குவிந்தனபன் மீனொடுவானுலவுவேந் தன், கலையையொத்து விளங்கினவெண் சருவந்தமௌலியணி கலன் கள் வாளை,பிலையையொத்த கோடித்திரள் வீழ்ந்திலங்கினசெஞ் சோரி செக்கரெனனத் தோன்று, நிலையையொத்த பணிக்கணிமை யொத்தக ருந் தலைநிவத்தினிறைந்து மனமோ. (23)

இன்னபடி மள்ளரொடு கிள்ளைமடி யப்போரி னிணங்கு மெல்லை, மின்னுகதிர் வாழ்வீழக் கொடிவீழத் திறம்வீழவீரம் வீழத், துன்னு பல வியம்வீழ வோடாதசேனைபல தொடர்ந்துவீழ, மன்னுகுல நெறி வீழ முறிந்தனர்கண் முஸ்தலிக்கு மாந்தர்மன்னோ. (24)

ஓடினர்மெய் முழுகுதிரங் காலவிழி பின்னோக்கி யுழக்கப் பாதந், தேடினர்தம் மனைவிபெருஞ் செய்நிதியந் தேடாது சிலையுங்காணும், பா ணர் செம்மறை வேந்தா பயஹாம்பர் மகிழ்ந்தனர் பாசறையினெங்கு, மாடினபேய் களித்தனதீ னுவந்தனபோரவெனறியொடு மறங்கூத் தாட

வேறு.

போயாறினர் பயமொன்னலர் தமையுண்டு புகழ்ந்து
போயாறின வழலவெம்பசி கவினும்பிறழ் கண்ணின்
றீயாறின செருவாறின சினமாறவுஞ் சினத்தின
வாயாறினர் கையாறினர் தீனின்மறை வல்லோர். (26)

மவரூந்திய படிறும்பெகு பழியந்திய கொலையு
மவமுந்திய மனவெங்குபி ரவர்வெண்கொடி யொளியிற்
றிவள்வெணைகொடை பலபண்மணி சிவிகைத்திர ளெல்லாந்
தவமுந்திய முகலீமனா கொண்டார்பறந் தலையின். (27)

திக்குத்தலை யறியாவகை சிநிச்செலு முஸ்த
லிக்குத்திரள் மறமைந்தர்க ளிணங்காவரை நாளும்
புக்கிப்பல மேயூட்டிய பொருளில்லவ னகரை
ஹக்கன்னருண் முன்சுற்றிட வளைந்தார்குபிர் களைந்தார். (28)

அடுத்தார்மறு கிடத்தேமனை யிடித்தார்பணி யாவு
மெடுத்தாகலை யெடுத்தார்நிதி யெடுத்தாரக ரெங்கு
மடித்தாரடி பெயர்த்தாடிய மருத்தேயனு மாவும்
படுத்தாரெவ டெடுத்தார்சிறை பிடித்தார்மறை படித்தார். (29)

வரைபெட்டொடு பலபெற்பனை வநதேநகரத்திற
றரிபட்டெனு மாடம்பல தரைசெய்தனர் தறையி
னெரிபட்டெழு பொழின்மாமனை யென்னுப்பவை யெல்லா
பெரியிட்டனர் கரிபட்டுக மதிமன்னவ ரெங்கும் (30)

இடபங்கொறி சோகர்பணி பெழுலாடைபன் னிதியத்
திடரும்பல பண்டத்தொடு திருவும்மற வல்வி
மடமைப்பிடி நடைமங்கையர் மழலைச்சிறு தலையா
தொடரச்சிறை கொண்டாரவ ணெழுந்தார்துய ரழுந்தார். (31)

படைதாங்கிய கரத்திற்வல பலதாங்கினர் பண்ட
முடிதாங்கிய சிரத்தினணி முறைதாங்கினர் நாளு
தொடைதாங்கிய புயத்தினணிதிச சுமைதாங்கினர் நாளு
மிடருங்கிய நபிமுன்செல வெழிருங்கிய வீரர். (32)

சேனைகட லோலத்தொடு பாரிற்செல நாப்பண்
மாணிற்கதி போனபெய்யொளி மாயாதொழில் வீசு
நாணப்பொறை யெனுநநபி குளிர நாரமிலாத
வீனச்சுரப் புபிதாவெனு மிடத்தேவரு மளவில். (33)

நறுமேனியி னசுமாவிட மிரவற்கொளு நளினக்
சிறுமெல்லடி மயிலாஷா களமீதினிற் சிறந்த
குறைவின்மணி நிறைமாளிகை குறியாதவன் வீழ்ந்த
தறைமீதினிற் றெரியாதினன் குடபாலினிற் சார்ந்தான். (34)

வையத்தினின் வீழ்கின்றநன் மணிமாளிகை கண்ணி
னெய்தும்மள வுந்தோன்றிய விருட்போதவ னிறுத்தார்
மெய்மைப்புகழ் நபிநாதரு மிருசேனையு மப்பாற்
பையப்பய வவ்வெல்லியும் படக்கீழ்த்திசை விடர்த்த. (35)

தேய்கின்றதிவ் விருளும்வெளி தெரிகின்றது கதிரும்
பாய்கின்றது கலனுங்கணிற் படுகின்றில பனூறு
மாய்கின்றது தொழலிவ்வுழை யெவ்வாறெனை மனத்து
ளாய்கின்றவர் மனையார்துடை யணையேற்றுயில் செய்தார். (36)

மதிமுற்றிய அபுபக்கர்த மகள்பாலவ ணெய்தி
யுதகத்தட மிலவித்தல முறையத்தொழு கையுமே
சிதயத்தவ நபியொடு செறிந்தோரையுந் தகைத்தா
யதியுத்திய ளாயென்றறி வுணரச் குறைசொன்னார். (37)

அடல்கொண்டெழு பரிசோசமற் றவையாவுநற் புனலா
விடர்கொண்டன மறைதீனவர் துயர்கொண்டவ னிருப்ப
முடிவின்றிய யருட்கோர்மனை யெனுமுண்டக விழியிற்
படருந்துயி லொழித்தேயொளிர் பயஹாம்பரும் விழித்தார். (38)

நெஞ்சாகுல மறநீரக மில்லாவிட நியமந்
துஞ்சாவகை தயமும்செய்து தொழமேலவன் வீதியின்
மிஞ்சாரண மொழியாரமு திஃதென்ன விரைந்து
மஞ்சார்வெளி வழியேகொடு வநதார் ஜிபுரீலே. (39)

வாலும்பெறு மகிழ்கொண்டகு மதுதன்புறு மவரோ
டுரைவிண்டன ரவர்கொண்டன ரிவருப்பிற ருளரு
முருகும்படி பிறிதொன்றையு நினையாதொரு பொருளைத்
தருமந்திர நெறியின்படி தயமும்செய்து தொழுதார். (40)

செயிர்தீர்தர வணக்கத்தது செயலாகிய பின்ன
ரயில்வாளணி காத்தோர்மறை யலர்வாண்முக நோக்கித்
தயமும்செய்து தொழக்காண்டது தவைமாதர்க டிலத
மயிலாயிஷா பறக்கத்தென நபிகூறினர் மாதோ. (41)

ஆகத்துவ கையெய்திட விருக்கும்மளை வையினின்
மாகத்துடு வொத்தேமினர்ந் திமைக்கும்மணி வடமுஞ்
சோகத்தக டுள்ளேகிடந் தெடுத்தார்துயர் விடுத்தார்
வேகத்தொடு வெய்யோனெழப் படையும்விரைந் தெழுந்த. (42)

செற்றேகுரு திச்சாறுகு டித்தேமெய் செவக்கு
மெற்றாவுக திர்க்கோணமெ டுத்தேமறை கற்றோர்
விற்றானையொ டுற்றார்பு வித்தானைந டப்ப
வற்றாதருண் மிக்கார்நபி புக்கார்மதி னத்தில். (43)

மதினாவெனு நகரெய்திய வள்ளல்லடை யலர்தம்
மதிமேவிய சிறையாடைபன் மணியாய்பரி சோக
நிதியாவுமங் குறுதீனர்க ணெஞ்சம்மகிழ் மீற
விதமோடவ் ரவர்க்கேயவை பகுந்தேயினி தீந்தார். (44)

தருமந்திகழ் தாயித்தென வருமன்னவர் சார்பின்
வருமந்திகழ் தருஆரிது வாத்தாலவ தரித்த
திருவுங்குண நலனும்பெறு செயலும்பொறை நிறையு
முருவந்தமு முறவந்தனள் சுவைறாவென வொருமான். (45)

அறமேவின ரம்மாதினை யருட்பார்வையி னோக்கித்
தறையாள்வது மிவளேவனி தையரியாவர்கள் கற்புக்
சிறையாவது மிவளேசொலு மொழியாவது மிவளே
சிறையாளவு மொண்ணாதென மனத்திற்றெரு மாந்தர். (46)

பொருளேயென திடமேவரு பொறையோடு மளித்து
மருவேவமரு மணமேவளர் மதியேமதி மாதர்
குருவேதிரு மணியேகுல மயிலேபெறு தாயே
வருவேவடி வொளிவேயும துடன்மீளுதி யென்றார். (47)

கேட்டாள்சிறை மீட்டேகுதி ரென்னுங்கிள வியினைத்
தாட்டாமரை மயிலன்னவ ணலணிதெத் தனியே
பேட்டோதிம முறையுத்தரை நடந்தேயிறழ் கின்ற
தீட்டாவுரு வெய்துந்நபி திருமன்னரின் வந்தாள். (48)

வந்தாள்பணிந் தெழுந்தாளவ ணின்றேவொரு மருங்கிற்
கொந்தார்தரு வெனுநந்நபி குளிர்வாண்முக நோக்கி
யந்தாரணி யரசேயட லரியேயதி ஜயமே
சந்தாடவி வரையேயெனப் புகழ்ந்தேயுரை சாற்றும். (49)

தவமும்பெறு நிறையும்செகு தயவுங்கன தனமுங்
கவினும்பொறை யருளும்மது கையுநாளினு முடையோன்
புவியும்புகழ் தாவல்லவன் பொருவில்லவ ளுரி
தவனில்லவள் பெறும்பந்தனை யடியாள்சுவை ருவை. (50)

தீனோர்களில் தாபித்தெனுந் திறன்மன்னவர் சார்பி
வானோன்றலை விலையீந்தினி நீபோகென வறைந்தார்
வானூர்மதி மனையீர்மன மகிழ்ந்தேகயி ருக
யானேயிவ ளடைந்தேன்சில பொருளீகுமி னையா. (51)

செயிரற்றெனை யீன்றாள் பிரிவைன்னுங்கொடுந் தீயால்
வெயில்பட்டிடு மலரொத்தற மெலிவாளுள மதனு
லயர்வுற்றன னவணேகுவ னெழில்மானவ ரவரி
னுயர்மெய்த்தவ முடையீரரு ளிரங்கீரென வுரைத்தாள். (52)

வடிவுக்கொரு பொருளேபொழின் மழலைச்சிறு குயிலே
கடலுற்றெழு மமுதேவிரி கதிருக்கொரு மணியெ
குடியிற்பெறு சுடரேயதி குலனுக்கரு நிதியே
படியிற்சசி யெனவேயடிக் கடிநோக்கினர் பரிவின். (53)

வெல்லுஞ்சசி முகமும்வளை வில்லின்றர நுதலுஞ்
செல்லும்பிடி நடையுந்துவழ் சின்னஞ்சிறு திடையுஞ்
சொல்லுந்திரு மொழியும்மிணை துள்ளும்மிணை விழியு
மல்லும்பொரு குழலும்மிவை யெல்லாமுட லயர்த்த. (54)

மோகத்துய ருடனேநினை வறியாவகை முழுது
மாகத்தினின் மீறப்புக ழாண்மைத்திற னயினர்
பாகொத்தமெய் மொழியார்முக நோக்கிப்பயமில்லா
நாகத்தொடு பேசுந்திரு வாய் விண்டுரை நவில்வார். (55)

கொலை வாட்கர தாபித்தனெனுங் குலமேலவர் தமக்கே
விலையாநிதி யுளதீந்துன துடல்மீட்குவன விளங்கும்
பலனும்படி நீயும்மினிப் பதிதோறினும் போய்ப்போ
யலையாவகை மகிழ்வாகவில் லவளாகுதி யென்றார். (56)

மறுத்தாள்குபிர் துடைத்தாடியர் மதித்தாளற மதத்தைப்
பொறுத்தாளுட றழைத்தாண் மயிர்பொடித்தாள் புளகிதத்தா
லறுத்தாள் குலத் தினத்தாரொடு மகப்பாசமு மியாவும்
வெறுத்தாணபிமனைப்பாரியென் றுரைத்தாரொனுமவித்ததால் (57)

அறிவும்பொறை யருளுந்தரு மறையுந்திரு வறமு
நிறையும்பத வியுமெய்தின விதியின்படி நிகழா
துறையும்படி மகிழ்வாயும துரையின் படி நலனென்
றிறமென்கொடி யிடையார்நபி யெதிர்நின்றிறை யிசைத்தார். (58)

கொம்பன்னவர் நலனீதென அறிவுக்கொரு குவ்வின்
றம்பம்மென மறையோதிய தாயித்தவர் தமக்கே
செம்பொன்னுள துடனீந்துநந் தீனின்படி சிறப்ப
வம்பங்கய முகத்தார்மனை வியாக்கின யன்றே. (59)

மட்டார்தொடைப் புயத்தாரிது மகளார்சுவை றுவை
யெட்டாதரும் புகழ்மாநபி மணமெய்தலு மெவருங்
கட்டாம்படி சிறையாவையுங் கடிதின்பய னுரிமை
விட்டாரிவர் நகர்மேவிய சுற்றம்மெனும் விருப்பால். (60)

இகன்மன்னவர் சிறையெண்ணில தொலாமினி துரிமை
மிகவெய்திய துன்றெனலன வேண்டுங்நலன் யாவுந்
தொகுமென்கொடி கனிணுந்திய திருவாஞ்சுவை றுவைப்
புகழ்கின்றனர் மகிழ்கொண்டன ரவுபக்கர்தம் புதல்வி. (61)

முறைசீக்குப் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-35க்குத்-திருவிருத்தம்-2110.





## கந்தக்குப் படலம்.



அணியினுக் கணியென் றோது மவிர்மதி முகத்தி றைை
மணமுடித் தினிது வந்து மதீனத்தி னிருக்கு நாளிற்
பணிவிட மனைய வஞ்ச ரறமெனும் பயிரக்கு நாளும்
பிணியெனுந் தகைய காபிர் செய்தவை பேசுவா மால். (1)

நானிலத் திருந்து நாளுந் தேடியே நாசி னெய்து
மீனவன் கருபு கேளி ரென்பவர் சுகுறு நீந்திப்
போனநா ளளவும் ஷாமில் வஞ்சகம் புணர்த்தி நீதித்
தீனவை யிடுக்கண் காண விருந்தனர் திறமை யில்லார். (2)

அவர்களிற் றலைமை மிக்கோ னருத்தபு தனைய னீண்ட
கவர்மன குயையென் றோதும் பெயரினன் கபட மூட்டுஞ்
சுவையறு மொழியா னாளும் பகையினைத் தொடங்கி நின்றோன்
றவிர்கிலா காண மற்றோன் தருமத்தின் றகைமை யில்லோன். (3)

சந்திர னொளியை யோட்டித் தன்னொளி காட்டி மேனிச்
சுந்தரத் தூதர்க் கோற றணிவது விருப்ப முற்றோன்
வெந்தெரி கலுழுங் கண்ணார் வீழ்ந்திடக் கருபு விண்ணி
லுந்தினொ னென்னும் புன்மை நோய்கிடந் துளைப்ப வன்றே. (4)

ஆற்றிலன் றயரங் கள்ள மடங்கில னதிக வேகச்
சீற்றமு மொடுங்கி லன்போர்ச் சிந்தனை யெறிகி லன்றீக்
காற்றெனு முயிர்ப்பு வீக்கங் கழித்திலன் கருதாப் புன்மை
தேற்றில னினைய நாளு மிருந்தனன் செயலை யோரான். (5)

வங்கிடத் தரிய மாந்தர் வழிமுறை நின்ற வேந்தர்
தங்கிய சூழ்ச்சி வல்லோர் போருடைத் தலைவர் மாறா
தெங்கினும் வஞ்ச மூட்டு மெசூதிக ளிவரை நோக்கி
வெங்கடு மனத்தன் வாய்மை யினையன விரிக்க லுற்றான். (6)

தாரணி யதனில் வேறு பொருவிலா சுகுறா வென்னு
மூரிடை யிருந்து வாழ்ந்தா முகம்மதென் றொருவன் றோன்றி
வீரமுந் திறனும் வாய்ந்த கருசையும் வதைத்து வீழ்த்திச்
சீரிலா நமரை யும்மிப் புறநகர் திரிய விட்டான். (7)

புதியதோர் சமயம் பூண்ட திருந்தலர் போரிற் றாக்கித்
கதமுடைத் திறனுங் காட்டி வெற்றியே காண வேண்டு•
மதீவலி ரீதன றென்னில் வாழுயிர் துறப்ப தல்லா
லிதமுற விருத்த னந்தம் விறலினுக் கிழிவ தாமால். (8)

நாட்டினைத் துறந்து சார்ந்த நாணமுந் துறந்து வாழ்ந்த
வீட்டினைத் துறந்து வீர வேடமுந் துறந்து கேளீர்
கூட்டமுந் துறந்தி யாரு மவமொழி கூறும் புன்மைச்
சூட்டையொன் றெடுத்தாம் நம்மைப் போலெவர் துணியவல்லார் (9)

அல்லொடு பகலு மாறா தடிக்கடி பூசை செய்யும்
வில்லுமிழ் சிலையும் போக்கி வேலொடு வாளும் வீழ்த்திக்
கல்லொடு மாமுங் காலி னடிபடக் கடிதி னோடி
வல்லுயிர் காத்து வந்தா மதியினும் வலல ரேயாம். (10)

அருந்தவத் துடையீர் தேர்ச்சி யறிவினிற் பெரிய ராகி
யிந்தநங் குலத்துக் கெல்லா மிழிவொடு சிறுமை நாளும்
பொருந்திட வினைய செய்தோ முலகினிற் புகழீ தன்றித்
திருந்திட வேறு நம்மாற் செய்யவும் வேணு மோதான். (11)

வேலினை வீழ்த்த கையும் வெருண்டுலைந் தோடுங் காலுங்
காலுநீர்க் குருதி பாயக் காட்டிய முதுகும் போரிற்
சாலவும் வெருவித் தேம்பிச் சாற்றிய வாயுந் தக்க
சேலின னிவையுஞ் சொன்னே னணைத்தாற் சிறிய னல்லேன். (12)

இடுக்கணுற் றலைந்தோ ரின்ப மெய்துவ ரெதிரி னின்று
மிடுக்கறத் தோற்று நின்றார் வெற்றியும் பெறுவ ரன்றோ
கொடுநகுமை முகிலி னன்னீர் கோதுறத் தீனர் வெம்போர்
தொடுக்குவன் விஷயங் காணத் திசைகளுந் துணுக்கங் கொள்ள. (13)

குன்றுறழ் வலிய மொய்ம்பின் கொற்றவர் வேந்தன் மிக்க
வென்றிசேர் மடங்க லன்னான் சுகுபெனு வீரர் வீரன்
பொன்றிய பழியும் வாங்கிப் பூவினிற் சீர்த்தி வித்தித்
துன்றிய பகையுந் தீர்த்துத் தீமையுந் துடைப்பன் மன்னோ. (14)

கானெலாஞ் சிரம தாகக் கடலெலாங் குருதி யாக
வானெலா முயிர தாக மண்ணெலாம் பிணம தாக
ஊனெலாம் படைய தாக வுடலெலாங் கவந்த மாக
தீனெலாந் திசையி னோடச் செய்குவன் றிறமை பாரமின். (15)

வெம்பசி தீண்டி நாளு மெலிந்துகண் டுயிலும் வாள்வே
லம்பினுக் குயிரூ னென்னு மாரமு தூட்டி நீண்ட
வும்பரிற் பறவை பாடவுலகினி லலகை யாடச்
சம்பொடு ஞமலி கூடி விருந்துணச் சமைப்பன் மன்னோ. (16)

ஈங்கிவை யுரைந்த பண்பி னியற்றிலே னென்னில் வண்மை
தாங்கிய வீர மென்கொ லாண்மையின் றகைமை யென்கொல்
வீங்கிய சீற்ற மெனகொல் விரித்தலஞ் சினந்தா னென்கொ
லோங்கிய புவியி னெனனைப் பேடியென் றுரைக்க லாமால். (17)

வீரர் முன் னினைய மாற்றம் விளம்பிவிண் ணுருமிற் சீறி
மூரியங கரம்பி சைந்து முனையெயி றிதழி னூன்றிப்
பாரவெஞ் சிலைக்கை பற்றிப் படையொடுங் கலன்க டாங்கிப்
போருடைத் தலைவர் சூழ வெழுந்தன னியங்கள் பொங்க (18)

தழல்சொரி தறுகட் பாந்த ணெடுநிலம் பனிப்பத் தாங்கா
தொழுகுநெய் செறிந்த கவள்வே லுழவர் றானடப்பச் சீறி
யெழுமதி வேகப் பாய்மா வேறிமன் குயையென் றோது
மழகளி றனையான் கஃபா மக்கமா நகரிற் புக்கான். (19)

வந்தொரு பாலிற் றானை யாவையு மிருத்தி வாய்ந்த
வந்தாத் தருமே றன்ன அபாசுபி யானை யெய்திச்
சிந்தையி னுவகை கூரச் செழுங்கையாற் றழுவி வாசக்
கொங்கெறி யலங்கற் றிண்டோள் குயையவ ணிருந்தான் மன்னோ. ()

தீயவன் கொலைசேர் வஞ்சச் சிந்தையன சிதையு மாற்ற
வாயினன் பவத்திற் றோன்று மபூஜகல் மகிழ்வி னீன்ற
சேயனிக் கிரிமா வெண்ணுந் தோன்றலுந் துணைவர் சேர்ந்த
நேயமன் னவர்க டாமு மீண்டவ ணிறைந்தார் மன்னோ. (21)

குறைவியங் காபீர வாய்ந்த குணனுடை மாந்தர் மிக்க
அறமிக வுலக நீதி யாவையு மறிந்த மேலோர்
மறையினைத் தெருண்டு நின்றோ ரியாவரு மருங்கு சூழக்
கறைகெழு மனத்தன் கேண்மீ ரீதெனக் கழறலுற்றான். (22)

சூரமு மிருப்பத் தேருஞ் சூழ்ச்சியு மிருப்பக் காயி
ரியாருமீண் டிருப்ப வென்றி யரசரு மிருப்ப மற்று
நீருமிங் கிருப்ப வெண்போ னேசமி ருப்ப விந்தப்
பாரினிற் சமய மொன்றுந் தேயுமோ பகையி னெல்கி. (23)

காய்ந்திக றொடங்கி நின்ற அபூஜகல் கருபு வேந்தன்
வியந்தும்நா மனங்கொள் ளாது வாழ்வினை விருப்ப முற்றாந்
தோய்ந்தன பழியும் பாருஞ் சொல்லின வசையுந் தோன்றத்
தீய்ந்தன பெருமை நாளும் வளர்ந்தன சிறுமை யன்றோ. (24)

முன்னவ ரியாருங் கூண்டு முரட்படை முகம்ம தானோ
னிந்நக ரதனிற் புக்கா ரீடுபட் டிரியச் செய்தா
ரன்னவர் திறமை நற்றொன் றாயினு மமைத்தா மின்றே
யென்னினிச் செய்ய லாகு மிசையினை யவித்துக் கொண்டாம். (25)

ஆதிநூற் சமயம் வீணிற் றேய்வுற வழுகி லாது
வாதியா வந்த மார்க்கம் விளங்குற வறைந்த தென்னே
நீதியும் பழிய தாகு நீடறம் பவத்தி னெய்தும்
பேதுற மாயின வந்த பெரியருஞ் சிறிய ராவார். (26)

மஞ்சினின் றிழிந்த தாரை மழையெனுஞ் சரங்க ளாலும்
விஞ்சையன் விதத்தி னாலும் வேண்டிய சூழ்ச்சி யானுந்
துஞ்சிடத் தீமை ராவி மண்ணினிற் றொலைப்போ மென்ன
வஞ்சினம் புகன்ற தெல்லா மறந்தியாஞ் சொன்ன தாமால். (27)

மனையிடை பேதை போலக் கிடந்தன முகம்ம தின்னே
சினமுற வருவ னென்னில் வெருவுறத் திறமன் றூழ
னினமொடுந் தானை வீழ்த்தி மரவுரி யிடுப்பிற் சேத்திப்
புனமயிர்ச் சடையுந் தாங்கிப் போவதுங் கானில் வம்மின். (28)

அநூஜகல் போன பின்ன ராருளர் தலைவ ரென்னம்
புவிபுகழ் ஹறுப்பு மைந்த னென்றன புவன மெல்லா
மவையறிந் திவைக ளெல்லா மயர்த்தன மென்னி லையோ
திவளறச் சாலை புக்கத் தெய்வமுங் குடிவிட் டோடும். (29)

குலத்தினிற் கிளையிற் சான்றோர் கொள்கையிற் கோதி லாநந்
தலத்தினிற் சமயந் தன்னிற் றள்ளரு மீன மெய்தி
னுலைத்தடப் புத்தி ரூற்ற தொருவார்க்கோ சிறுமை யன்றே
நலத்தமா மனுடர்க் கெல்லா னணுசிய தன்றோ வென்றான். (30)

என்றலுஞ் சீற்ற மேன்மே லெழுந்தது கரையி லாது
துன்றிய வுரோம மியாவுந் தளிர்த்தன துணையா நின்ற
குன்றெனப் புயங்களோடி வளர்ந்தன புருவங் கோட்டித்
தென்றிக ழரிய கண்கள் செவந்தன தீய தென்ன. (31)

உயிர்த்தன னெடுமுச் சுள்ளம் வெதுப்பின னொளிரு மேனி
வியர்த்தனன் கரிய மீசை துடித்தனன் விழியி னங்கி
பெயர்த்தனன் னிதழை வாயா னென்றனன் பிழைக ளியாவு
மயர்த்தனன் ஹறுப்பு மைந்தன் கோபத்தீ யடங்கி லாதால். (32)

சேரலர் பகையு மாயத் திறமையுஞ் சிதைத்தோ ரன்போ
லாருள ரென்ன வெண்ணி யிருந்தன னெதிரின் வந்து
போரினை மூட்டி னின்றாய் நீயிங்கு புகுந்த போதே
வேரொடுந் தீனை வீழ்த்தி வென்றியும் விளைப்பே னென்றான். (33)

கேட்டமன் குயைமன் றூங்காச் சீற்றமே கிடந்த வாகத்
தூட்டின னுவகை யெய் தாப்புதுக்களிப் புடலங் கொண்டான்
நீட்டுமே லவரை யெல்லாம் போரினிற் சிந்தை யாக்கி
மீட்டெழுந் தயிலா னென்னு மூரிடை விரைவிற் போனான். (34)

ஆண்டினி தமர்ந்த கைசுக் குழுவின ரவரை யெய்தி
வேண்டிய படையின் மக்க மேயது மறமி வேந்தர்
கூண்டுபோர் முடிப்போமென்னக் குறித்ததும் விரித்துச் சொன்னான்
காண்டகாத் திறத்த னோரு மன்னதே கருத்தென் றாரால். (35)

பொருந்தின ரிவர்கொ லென்ன அகுத்தபு புதல்வ னெஞ்சந்
திருந்திட வவிட நீந்திச் சேவகர் மருங்கிற் சூழ
வருந்திட நாகத் தெய்தும் பனிக்குறை லாவென் றோது
மருந்தவ மழித்த மாந்த ருறைநக ரதனிற் சென்றான். (36)

ஆங்கவ ரிறையோன் றாத ரவரொடுந் தீன ரோடும்
பாங்கொடு நட்பி னாரும் வைகுவம் பகையின் றென்ன
நீங்கிலா வாய்மை பேசி லலக்கையு நீட்டிப் பின்னுந்
தீங்கொடு மிருந்தா ரெய்தும் விதியினைத் தெரிகி லாதார். (37)

உறைந்தவர் தம்மை யெய்தி யுற்றவை யனைத்துங் கூறித்
திறந்தா மகிழ்வி பூப்ப வவரையும் போரிற் சேர்த்தி
யறந்திக ழாத நெஞ்சர் மற்றுள வரச ரியாரு
நிறங்களிப் புறத்தன வாய்மை புரையினி னுறுத்தி னால். (38)

வசையிலாக் கத்யா னென்னுமரயமு மதிப்பில்லாத
அசதெனுங் குழிவு மிக்க அவுசெனுங் கணமு மூரித்
திசைபுகழ் தரும்ஹா றூனைச் சங்கமுந் திரட்டி யொன்று
மிசையறு மெகூதிக் காயிர் தம்மொடு மீண்டி னால். (39)

எண்ணிலாச் சேனை வெள்ள மெங்கணும் பரந்து செல்ல
மண்ணெலாம் புகழு மக்க மாநக ரதனி னெய்தி
யுண்ணிறங் களிப்ப வோர்பா லிருந்தன னுலகின் மேவும்
புண்ணிய மவிக்க வந்த பாவத்தைப் பொருவு நீரான். (40)

ஈங்கிவ னினைய தன்மை யியற்றிய தெல்லா மானந்
தாங்கிய தரும மேக மொத்தெனத் தகைமை சான்ற
வோங்கலிற் சிறந்த திண்டோன் முகம்மதாண் டுணரக் கேட்டு
நீங்கிலா துயிரி னேய்ந்த துணைவர்மு னிகழ்த்தி னாரால். (41)

பொருமையி னின்ற சோதிப் பெரியவ னேவ னாரு
மருவிய தீனோ ரியாருங் கேட்டலும் வண்மைத் தக்க
தருவென வுதவுஞ் சலமான் பாரிசிற் றபனன் மானத்
திருவொளி நிறைந்த சிங்கச் செழுமுக நோக்கிச் சொல்வார். (42)

வேறு.

சாய்ந்து போகின்ற அகுத்தபு பெறும்பவத் தனைய
னேய்ந்த தன்குலத் தவரொடு மறபினி லேகி
யோய்ந்து விகின்ற சினத்தினை யவரவர்க் கூட்டித்
தேய்ந்த காபிர்க ளியாரையுந் திரட்டின னன்றே. (43)

மற்றும் வாய்மை யபாசுபி யானொடும் வழங்கிச்
சுற்று வேந்தரை முறைமுறை யொருதொகை சேர்த்திப்
பற்றி லாதபல் குலத்தையுஞ் சூழ்ச்சியுட் படுத்தி
முற்றுஞ் சேனையங் கடனடு விருந்தனன் முரணி. (44)

ஆனதான்மத பேதிய ரளவினி லடங்காச்
சேனையோடுவந் தடருவர் காணினித் திறத்தின்
வானநாயக விஞ்சியாம் வகுத்திட மாட்டேந்
தீனர்சூழ்தர வகமொன்று திருத்துவ மென்றார். (45)

சொல்லும் வாசக நன்கென யாவருந் துணிந்து
செல்லு லாங்கரத் திருநபி யுடன்வரத் திரண்டே
யெல்லை காணிலா வளநகர்ப் புறத்தினி லேகி
யல்ல வின்றியே புவிதொடத் தொடங்கின ரன்றே. (46)

மட்டி லாதகல் வெட்டிய நீண்டகை வாய்ந்த
கொட்டு மேந்துகூந் தாலமும் பலபல கொணர்ந்து
வெட்டு வாரவை யடிக்கடி கூடையின் வீழ்த்தித்
தட்டுவார் பல திடரென முறைமுறை தாங்கி. (47)

ஒருவர்க் கீரிரண் டெனமுழ மகாவுள் ளுவப்பச்
செருகி யீரைந்து மைந்தர்கள் வகைவகை திரண்டங்
கரிய நாயனைப் புகழ்ந்துநல் பயித்துக ளறைந்து
விரிவு மாழமும் பெறமுறை யெடுத்தனர் விரைவின். (48)

ஊறு நீர்ப்புறங் காணுறத் தோண்டலு மொருகற்
பாறை மாமலை முளைத்தெனத் தோன்றின படியின்
வீறு மேவிய கரத்தினர் திடத்தொடும் வெகுண்டு
கூறு செய்திட நின்றன ராங்கது குறுகி. (49)

இடியி டித்தெனக் கல்லெடுத் தேற்றின ரிரும்பின்
மடியத் தாக்கினர் காய்த்திய கூருளி மாட்டி
யடிய டித்தனர் வெட்டின ரெறிந்தன ரறுத்தார்
கடிது கொண்டன பிளந்தில தகாநில கருங்கல். (50)

வெட்டு வெட்டியே கொட்டுவாய் மடிந்ததீ விளைத்த
நெட்டு ருக்குளி முறிந்தகூந் தாலமு நிமிர
வெட்டி யோங்கிடப் பொடிப்பொடி யாயின வேது
பட்ட தன்றியெள் ளளவினு நூறுங்கில பாறை. (51)

கையுஞ் சேந்திடச் சலித்தனர் தோளொடு காலு
மெய்யும் வேர்வெழச் சலித்தனர் வெதும்பினர் மேன்மே
லைய மாமனஞ் சலித்தனர் சலித்ததீ னயந்த
செய்யு மாந்தர்க ளீதென்கொல் காணெனத் தியங்கி. (52)

ஆன காலையி னூதத்தின் முதுகினி லமர்ந்த
வான நாயகம் வையக நாயக மதித்த
தீனர் நாயக மியாவர்க்கு முதலவன் றிருமுன்
போன நாயகம் வந்தன ரறந்தவம் புகழ. (53)

நோக்கி னார்கரும் பாறையை யிறுகநூற் கலையை
வீக்கி னார்செழுங் கரத்தினில் விளங்குகூந் தால
மாக்கி னார்பருப் பதத்தில்வீ ழிடியினு மதிரத்
தாக்கி னார்நெடும்பேரொலி திசைதொறுந் தழைப்ப. (54)

காரெடுத் தெறிதலுங் ககனவெண் முகடும்
வெருவல் கொண்டன பயந்தன வொளித்தன மேக
மரவின் வேந்தனுந் தரையொடு மசைந்தன னென்னிற்
பெரிய பாறையிங் கென்படு மியானெவன் பேசல். (55)

பதலை மேலெறி படப்பிளந்த னவரும் பகுப்பிற்
சிதறித் துண்டங்க ளாயின தீப்பொறி தெறிப்பப்
பிதிர்விட் டோடின தகர்ந்தன நுறுங்கின பெருந்தூ
ளிதெனப் போயின வள்ளறங் கரத்தினா லெல்லாம். (56)

மண்டு தூளென வகுத்தமே லவரடி வயிற்றில்
விண்ட வெம்பசி யாலொரு கல்லினை வீக்கிக்
கொண்டு நின்றன ரன்னது குறிப்பினிய் சாயிர்
கண்டு தேம்பினர் சலித்தனர் நிறைமனங் கலங்கி. (57)

கல்ல கட்டினி லமைத்தது காண்டுமிங் கிருந்தோர்க்
கல்ல லெய்துமென் றுணர்ந்தவ ணீங்கிவா ழழகி
னில்லம் புக்கினர் மனைவியர்க் குரைத்தன ரெளிதி
னல்லை தாம்படி விருந்தொன்று கொடுத்திட நயந்தே. (58)

சிறிய மையொன்று வளர்த்ததங் கிருந்ததத் திறலோர்
குறைவி லாதுற வறுத்திருங் கொழிந்தசை குறைத்து
நிறைய மாவுஞ்சே ரட்டெனக் கொடுத்தவ ணீந்தி
யறிவு மானமுந் தயங்கிய முகம்மதை யடைந்தார். (59)

தீயன் றேழரிற் சிறியவன் வறியவன் றெளியா
வாய னென்மனை யிடத்தினில் வழிமுறை திறம்பாத்
தூய வேந்தனு நீவிரும் பஃதெனுந் தொகையி
னைய மன்னருந் விருந்துண்டு போகவென் றறைந்தார் (60)

தீங்கி லாதவச் சாபிர்தஞ் செழுமுக நோக்கி
வாங்கு வெஞ்சிலை யவரொடு மியான்வரு மளவுந்
தாங்கு வெண்ணிணத் தசை யொடு நுவணியுஞ் சமையா
தாங்கு வைத்திரு மென்றன ராசருக் கரசர் (61)

நன்றெ னத்தனி போயினர் மனையினி னபியும்
வென்றி மன்னவர் சிறியவர் பெரியவர் விளைந்த
வன்றி றத்தவ ரவரையு மருங்கினிற் கூட்டிச்
சென்று புக்கின ரிருந்தனர் வயுன்வாயின் சிறப்ப. (62)

எண்ணி னையிர மாசரு மேலவி னேய்ந்த
திண்ண வீரரு முறைமுறை தெரிதர விருப்ப
விண்ணு மேத்திட வொளிதரு ஹபீபெனு மேலோ
ருண்ணு மாரமு திவ்விடங் கொணர்கென வுரைத்தார் (63)

புலவும் பிண்டிய முன்னரி னமைத்தனர் பொருவாக்
கலைநி லாவொளித் தூதுவர் நோக்கினர் கதிர்வா
யுலவு மாரமு துகுத்தனர் பின்னரி னுவந்து
நிலைமை மன்னவ வீதடு கெனநிகழ்த் தினரால். (64)

இருந்த பார்ப்புடற் றடியினை யரிதிற்கொண் டேகி
மருந்தொ டும்நறுங் கிருதமும் வாசமு மாட்டித்
திருந்த வேமெரி மூட்டலும் பதலையிற் சிறப்ப
வருந்தி லாதருங் கொதிதொறுங் கொதிதொரு மவிந்த. (65)

வெண்ணி றந்தரு நுவணையுஞ் சுடச்சுட மேன்மே
லெண்ணி லாபே ரிலட்டுக மாயின விதனை
நண்ணி வன்கரத் தெடுத்தனர் வைத்தனர் நலத்தி
னுண்ணு நன்கலஞ் சாபிரென் றேகிய வரவோர், (66)

மொய்த்த மாந்தர்க ளியாவருந் தொகைதொகைமுறையின்
கைத்த லத்தெடுத் தருந்துமென றினிதொடு கழறப்
பத்தி பத்தியின் வேந்தருந் தருவொடு பகர்ந்த
வுத்த மக்குண நபியுமங் குணவுணச் சமைந்தார். (67)

அப்ப வர்க்கமு மெடுத்தெடுத் தளித்தலே வேலை
வெப்பு றும்பசி யறவிவ ரருந்தலே வேலை
செம்புந் தாழியிற் கறிநனி சறத்தலே வேலை
தப்பி லாமொழித் தூதர்தங் காட்சியின் றகைமை. (68)

கையும் வாரியுண் டொய்ந்தனர் வயிற்றொடு கமலச்
செய்ய வாயுமங் கோய்ந்தனர் தினபவர் திரிந்த
துய்ய மைந்தரு மளித்தலுந் தோய்ந்தனர் சொரிநத
நெய்யில் வெங்கறி யிலட்டுக மோய்ந்தில நிறைநத. (69)

நிலைமை மன்மவ ராயிரம் பெயரொடு நீண்ட
வலகி லாத்திறன் மைநதருந் தூதெனு மரியும்
புலனுந தேகமுங் களித்தெழில் சிறநதிடப் புசித்தா
பிலனும் வையமும் விசும்புமிக கதிஜயம பிறபப. (70)

சம்ப ரத்தினில வாய்கரம் பூசிநற் சாநதம்
பம்ப மார்பினி லேற்றியங் கிருநதிடப் படியு
மும்ப ரும்புகழ்ந் தேத்திய நபிகொறி புசிதத
கொம்பு தோல்குளம் பெனபவை குவிமினென றுரைத்தா. (71)

சுடுநெ ருப்பினில் வெநதவென் பவையுமுன் றுணித்து
விடும ருப்பையுஞ் சிரத்தையுங் காலையும் விரிநத
வடக மற்றவு மெடுத்தனர் குவித்தனர் வாய்மைத்
திடம டுத்ததீன் விளக்கிய முகம்மது திருமுன. (72)

கள்ள ருச்செழுங் கமலமென் கரத்தினிற் சலில
மள்ளி மேலுறத் தெளித்தருந் தூதுவ ரடங்கா
வெள்ளி மாமறை மேலவன் விதியினுற் கொறியே
யிள்ளங் கூர்தர நீயிவ ணெழுநதிடென் றுரைத்தா. (73)

துண்ட மாகிய தொன்றெனப் பொருநதியூன் றேய்ந்து
பண்டு போலெழு குபிருள்வந துடலினிற பரப்பக்
கண்டி யாவரு மகிழ்வுறக் காலினை மடக்கிக்
கொண்டெ ழுந்துமுன குதித்தது காட்சியின் கொறியே. (74)

திரிகை நீண்டற வளைந்தெழு மருப்பின்மெய் செறிந்து
பெருகு கின்றசெம் மயிருறப் பிணிலெழில பிறங்கும்
கருநி றக்கவைக் குளம்பினீண் டெழுதுளைக் காதி
னுருவின் மிக்கதென் றுரைரநின் றதுகொறி யுழையின். (75)

காலி ஞற்றரை நடந்துடன் முறுக்கியுட் கவிந்த
தோலு டைச்செவி யசைத்தசை போட்டுவாய் துவளும்
வாலி னைப்பைய வாட்டிவா யெனத்தொனி வழங்கிப்
பாலி னின்றது முன்னுருப் போன்றெழும் படிமை. (76)

நின்ற மையினை நடத்தியுட் களிப்பொடு நினது
வென்றி வாழ்மனை யிடத்தினி லேகென விரிப்ப
நன்று நனறெனக் கரத்தினிற் பிடித்தில்ல நாடிச்
சென்று புக்கின ராரண மனைத்தையுந் தெருண்டோர். (77)

வந்த போதினின் மனைமனை வாளனை நோக்கி
யந்த மும்பெறு முயர்ச்சியு நிறமுநீ ளடியு
நநதம் வீட்டினி லிருநதமை யெனத்தனி நணுகி
யுநதி நினறதிங் கேதென வதிசயித் துரைத்தாள். (78)

வடித்த தீனினை வானரு பனமகிழ் வுறவைத்
தெடுத்த தூதுவ ராருயிர் கொறியினுக் கினிதின்
விடுத்தி யாவரு பதிசயம் பெறப்புவி விளங்கக்
கொடுத்த தீனென வுரைத்தனா ரோளரி யனையார். (79)

கூறுநல் லுரை கேட்டகங் குளிர்நதெந்த நாளுந
தேறி லாதியா னிருந்தனன் றிடம்பெற வின்னே
பேறு கொண்டனன் னபியெனத் தெளிந்தனன் பெரியோன
வீறு காணென்ன மதித்துரைத் தனள்விருந் தளையே. (80)

உரிமை யினனனை மகிழ்வுறச் சாபிரென் றுருது
மரிய வேந்தருந் தோழரு மருகினிற் சூழக்
கரிய மைமுகி னிழற்றிடக் காரணங் காட்டும்
பொருவி லாநபி கடலெனு மகழினபாற் புக்கார். (81)

விரைந்து மன்னவ ரவரவா தனித்தனி மேவி
யகநது சூழ்கழக் கிடக்கினை யழகுறத் திருத்தி
சொரிநத நீளகரைப் புடவியும் வரையெனத் தோன்றத்
திருநத வேயமைத் தனா குபாத் திருநதலா திகைப்ப. (82)

ஆயி ரந்தலைச் சேடனுந் தெரிவுற வாழ்ந்த
தூய போக ழியற்றியிங் கிருந்தனர் தொலையா
மாய வெங்குபி ரிடையுழன் றறத்தினை வழுவித்
தேயு மன்னவர் திறத்தினை யீதெனத் தெரிப்பாம். (83)

கந்தக்குப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-36-க்குத்-திருவிருத்தம்-2193.

—[*]—



# உமைவந்த படலம்.



சுற்றுளமோரதர் பல்பெருங் குலத்திற் றோன்றிய வாசருமவரோ, முற்ற வெம்படையும் பனிக்குறை லாவென றோதிய மாநதருங் கபடம், பற்றிய எகூதிக் குழுவின ரவரும் பரிவொமெக்க மாநகரிற், றெற்றினர் வளைந்த முகக்குசைப் பரியுஞ் செறிந்திடத் திரைக்கடல் சிவண. (1)

முறைமுறை யெழுந்த முரணுடைத் தானை முசிறுளைத் தண்ட வான் முகடு, நிறைதர வெழுந்த கதலிகைக்கான நெடும்பதக் கனிகையு மெழுந்த, வறைதரு பலவாசசியந்தொனி யெழுந்தல மொழிவாய் மையு மெழுந்த, குறைவிலா தவனித்தூளியு மெழுந்த விசும்பொடு திசைகளுங் குலவ. (2)

இருகடைவளைப் வுடல்குழைந்திருந்த விருஞ்சிலை காணுதைத் தெறியும், பொருசாத்தூணி முதுகினிற்றூங்கிப் பொங்கியசினத்தொடு மாலிக், கருளவு பென்னு மெறும்வலி யாச னசத்தெனுங் குலத்தவர் சூழ, வருவிசைப்புரவி யாயிரஞ்சூழ வேகினன மலர்க்குடை கவிப்ப ()

கனன்முகந் தெரியுங் கவட்டிலைச்சூலங் கைவிசைத் தெறிகதிர் வேலுங், குனிதருவாளு மருங்கினில விசித்து கத்துபான குழுவினர் சூழப், புனைமயிரப்புரவி யாயிர நடப்ப அசனபெறும் புகல்வன கோளரியின, சினமுறு மனத்த னுயைபிறு வென்னுஞ் செம்மலு மேகினன் சிறப்ப. (4)

செம்புண்ணீ ராட்டிப் புலான் மணங்கமழுந் திறனுனைக் கடுத்தலை தாங்கிக், கும்பியில் வீழும் பனிக்குறை லாவென் றோதிய குழாத்தவர் நாளும், வெம்பிய சீற்றத் தெகூதி ரவரும்வேண்டிய படைகொடு செறியத், தும்பையுஞ்சூடி யகுத்தபு பவத்திற் றோன்றிய குயையுமே கினனல். (5)

அடிபெயர்த்தாகங் கவன வாம்பரியைந் தாயிரஞ்சூழ்தர ஹபஷிர், கடலெனுஞ்சேனை வேந்தர் கனைத் தளத்தினர் கணிப்பிலர் செறிய, மிடலுடைக்கவச முடலிடத் தணிந்து வெண்டலை முனையிற் றோய்ந்த வரிசுடர்த்திகிரி தாங்கியிக் கிரிமா மன்னனு மேகினன் மாதோ. (6)

பண்ணமைப் பரியை யாயிரமலியப் பற்பலதானையு மீண்ட, வெண்ணருங் குறைவித் தலைவருந்துறம வெறிபடைக் கலனவை யேந்தி, வெண்ணிறக் கவிகை நிழற்றிட நீண்ட விரிமறை யெரிதர விளங்கீம், வண்ணவெண்நிலா ஹறுபுவந்தீன்ற மைந்தனும் வாசிமேற்போனன்.

புதையிருட்படல மள்ளிவிட் டெறிந்து பொங்குசெங் கதிர மணித்தாம, மதியொளிபழுதத தாளவெண்டொடையு மார்பகத் தணிபவிண காண்ற, விறுவிளங்கதிரும் பரிதியி னொளியும் விளங்கிய தெனும்படி சிறப்ப, வதிதியாசிவணைப் போயினர் மற்ற வரசர் கனிங்கிவ ரருகின்.

பூண்ட வெந்தானை யறிந்திலர் கழுத்திற் போட்டநன் மணிவட முணரார், நீண்டநட்பினரைக் கண்டுமங் கறியார் நிகழ்த்திய மாற்றமு மறியா, ரீண்டியவேந்த ரியாவரென் றறியா ரெழுகடற் சேனையு மறியார், தூண்டிய சீற்றத் தீயொன்று தாங்கி யேகினர் மிடலுடைச் சூரர்.

தடத்தினுஞ் சாலி விளைதரு மிடத்துஞ் சந்தனக் காவினுமாலை, மிடத்தினுங்குவளை யோடையின் மருங்குமெழி றருகிடங்கனு முயர்ந்த, திடத்தினைச்சார்பு மெங்கணுமற்ற திசையினு மளவிலதானை, விடத்தினுங் கரிய மனத்தினரோடும் விரைவொடுந திரண்டெழுந்தனவால். (10)

வாசியு மொருபான் மன்னரு மொருபால்வயங்கெழு மாந்தர்களொருபால், வீசிய நெடுங்காற் கொடிகளு மொருபால் விண்ணினிற்

செறிகுடை யொருபா, லோசையிற் கலித்த பல்லிய மொருபா லுலவிய சாமரை யொருபாற், றூசியு மொருபா லெனவறி யாது நெருங்கிய தொகுபடைக் கணமால். (11)

ஆறுபட் டெழுந்த கழனியுங் காவு மடிக்கடி சேறலிற் றிடரு, நீறுபட் டெழுந்த பாய்பரி வாயின் விலாழிநீர் நீத்தத்தி னனைந்து, சேறுபட் டெழுந்த மலைமதி னெடும்பார் செங்கதிர்ப் பரிதிவெய் யவ னும் பேறுபட் டெழுந்தான் பூமியி னடைந்து மேகமு நீர்வறந் தன வால். (12)

கோடின புருவ நிமிர்ந்தன புயங்கள் வாவுறக் கொலைசெயுநெடும் போர், தேடின மனங்கள் செவத்தன விழிகள் செறிந்தன மயிர்ப்புளகி யாவு, மோடின பெருமூச் சடைந்தன விதழ்வா யொளிவிரன் முறுக் கின காங்க, ணீடிய மூரித் திறத்தொடும் பிறந்து குயிர் நிலை நின்றமன் னவர்க்கே. (13)

அரும்புவா யொழுகும் பசுந்றுந் தேற லகன்பணை மருதமு நிந்தி, யிரும்பெனச் செறிந்த மோட்டெடற் களிறு முழங்கிய விருவரைகடந்து, கரும்புலி போலக் கதிர்ச்சுடக் காய்ந்த கடும்பாற் பாலையு முல்லைக், குரம்பையுங் குடில்சூழ் முல்லையு நீந்திக் கொடிநகர் மதினரா டடைந் தார். (14)

ஒலித்திரங் கருவிவிமொழி மருத வுருநெனும் பெருவரைப் புறத் திற், கலித்தெழுசேனை யசத்தொடுகற்பான் குழுவினர்செறி தாஅபுஞ், சலித்திளை யாத வீரமுந் துணிவுந்தாங்கிய வுயையிறை வேந்தும், பலித் திட விஷய மெனவவ ணிறங்கிப் பாளையம் வகுத்தன ரன்றே. (15)

செந்தழல் வெதும்பிச் சிறிய சீற்ற வெம்மை யெகூதிக டினமும், புத்தியி னுணர்வு மாறிய பொய்மை பனிக்குறை லேவெனப் புகன்ற, வந்திறலவரு மிருபுறஞ்சூழ வோர்புறத் திறங்கினன்விளைந்த, தந்திரத் தமைந்த அருத்தபு மகிழ்ந்த சந்ததி குயையெனுங் கொடியோன்.(16)

குறைவியங் குழுவும களில்க ளுறைக் கூட்டமுய்ஹபஷிவெம் படையு, மிறுதியில் வேகத் தூசுதம் பதினு யிராமுமீண் டிடவரை கிடை ந்த, திறலரி யேய்ந்த இக்கிரி மாவுந் தீரன பாசுபி யாயினு, முறையொ டும் றாமா வென்னுமத் தலத்தி லிறங்கினர் முனைப்பதி யமைந்தார். ()

உடும்பினையழைத்து மறைமொழியதனு லுலகிருளகற்றிய நபி யும், விடம்புகுபடைக டாங்கிய தரும வேந்தர் மூவாயிரர்குழுவு, முடங் தரு முகப்பாய் பரிபல மலிய மொய்க்கின்ற வானவர் வாழ்த்தத், தடம் பயி னகரச் சுற்றினு மோம்பி யிருந்தனர் தனி யவனருளால். (18)

நெற்றியுங்கருமை யெய்திட வணங்கு நீர்மைய ரெதிரின்வந் தமரி, னுற்றன ரிலரென் ாடங்கிலாச் சீற்ற மோக்கிடக் குபிரவ ரெல்லாஞ், சுற்றுள நகருங் கொள்ளைகொண் டுவந்தார் தொடர்படு குளிர்நிழற் காவு மிற்றுற முறித்தங் கெறித்தன ரொன்றோ வினைபன விடர்பல விளைத்தார். (19)

நெல்லொடு சாமை வரகுசெந் தினையு நீண்டகோ தும்பையு மிறுங்கு, மெல்லையி லீத்தங் கனியுமுந் திரிகைக்கனியுமற் றுள பொரு ளவையுஞ், சொல்லலின் றென்னத் தானைகளனைத்துந் திசையுறக் காத்தனரதனு, லல்லலுற் றழுங்கன் மதீனமா நகரச் சுற்றினு மானது மாதோ. (20)

எவ்வழியிடத்து மூாணுறுங் காபி ரிவுளியுஞ் சேனையுமீண்டப், பவ்வமொத் தகாஞ்சூழ்தா விருப்பப் பான்மதிக் கதிர்முகம் மதுநற், செவ்வியவுணர்வு ஞானமுநாளுந் தெருண்டவர் மஆது தம்வரத்திற், குவ்விளிலுதித்த சகுதினை றமைத்துச் சிலமொழி கூறுவரான்றே.(21)

நஞ்செனுங்கொடிய குபிரொடுங் கூண்ட நட்பிலவெனத்திட வாய் மை, யின்சொலினுவந்த கொடும்பனீக் குறைலா வெனுமற மாந்தர்களி தமில், வஞ்சகம் பயின்ற குயையொடு கூடி யுறுதியை மறுத்தன ரம் போ, யெஞ்சலில்புகழோய் நன்கவை யறிந்துதிடத்தொடு மிவண்வர வேண்டும். (22)

பத்தியி னவைாந்து நம்மொடும் பகர்ந்த பண்பொடு மாங்கு வைகி னரா, லுத்தர மெவர்க்குந தெரிதரவென்றே டுரைத்தருள் குயையொடு முடன்று, சத்தியவாய்மை மறுத்தன ரென்னில் தீனவா சலிப்புறு வண்ண, முத்தம மறையி னிகழ்த்தெனவுரைத் தாருளமகிழ்ந் தவரும் போயினரால். (23)

அறபியங் காபிர் அசத்தெனுமாந்தர் ஹபஷிமன் னவர்கள் கனு ஞத, திறமையர் கத்பான் குழுவின ரிருந்தபாசறை தெரிவுற நோக் கித், துறுமியகபடம் புணர்பனீக் குறைலாச் சூதர்களுறைந தவைவி னவ, வுறுதியில் லவராயிருந்தனர் நாகத் துட்புகுந்தொளித்திடு முணர் வால். (24)

ஆங்கவர் திறமுங் கேளிரு நிதியு மழிதரத் தூடணித் திறையோன், பாங்கினி லிருந் துமனைப்பதி நீந்திப் பயஹராம்ப ரிடத்தினி லணுகித், தீங்குறும் வார்த்தையீதென மறையிற் செப்பினாறத்தொடும் புகழு, மோங்கிய தவமும்பதவியும் பேறு மொழுக்கமு நிறைந்திட வுயர்ந்தோர். (25)

தப்பிய வாய்மை கேட்டுளம் வெகுண்டு தரியல ரொருப்படக்கூறு, மொப்பினை முறிக்கவேண்டுமென் றனனிச் சான்றவரொரு வரைக் கூவி, யிப்படி விளங்கு கீர்த்தியீ ரென்னவித முறப்பேற்றியங்கிருத்தி முப்புவி யவர்க்குந் தூதென வாய்ந்த முகம்மதாங்கி னியன வுரைப்பார்.

கமையுறு கருத்தி லுவந்தவெங் காபிர்காட்டிய பாசறை யிடத்தி, லவுபெனுமாசு முறையினு வெனனு மண்ணலுமிருந்தனராங்கு, பவமொடு படிறும் வெகுளியுந் துடைத்துப் பதவியி னடைந்த மெய்ப்புகயோ, யுவுளியஞ் சேனை மருவல ரறியாதினையவர் மருங்கினி லேகி. ()

குறைஷியங் காபிர்கணத்தையு நீங்கிக்கூறியவாய்மையுமறுத்துத், திறனொடுமன்னோர் போர்த்தொழிலொழிந்தோரா கிசையினி லுறைந் தனரென்னில்,விறல்புரிமதீனு தரு 0 பல பலனில்வேண்டு முப்பகுப்பி லோர்பாக, நிரைதரநாளு மருள்குவோ மென்ன நிகழ்த்துமென்றுரைத் தன ரன்றே. (28)

நன்றென வுவந்து முடிச்சிரந் துளக்கி நாயகக் குரிசிலைவாழ்த்தி, மின்றிடவாட்கை யிடத்தினிற்றுங்கி யரியெனவிரைவினிலேகிப்,பொன் றுடைத் திரடோ ளன்னமன னவர்முன் புகன்றவை யிவையெனப் புகன்று, றொன்றிய குணத்தினன் கெனக்கூறு மிருவரு முளத்திடை மதித்தார். (29)

அனையவ ரிடத்தி னடந்தவையனைத்து மடைந்தவர் சாற்றிய பின்னர், தினையள வெனினு மிறையவ னேவல் சிதைவிலா தியற்றுநந் நயினார், இனையன வார்த்தை மதீனமா நகரத்தலைமையின சகுதிரு வருக்கு, நனிதர வுரைத்திட் டகுவ மென்ன நலனொடும் வரவழைத் தனரால். (30)

---

0 பலபலனில், மதீனத்தினுண் டாகுங் கிழங்கு, காய், கனிகளிவையிற் சேகரமாகும் பொருளிலென் றுணர்க.

வித்தகர் திரளன் சாரியர்க் குவந்த வேந்தர்வெண் புகழினிற்றி ரண்ட, சித்திரத் தமைந்த வடிவினர்வியாத்திடத்தினர் மஜூதும் வந்தி ருப்ப, நித்திய வரம்பெற் றுயர்ந்தநங் நபியு நிகழ்ந்தவை யனைத்தையு முரைத்தார். (31)

இருவருமதனைக் கேட்டுளம்புழுங்கிணைத்துளைநாசியினுயிர்த்துப், பொருவரா தெழுந்த ஹபீபினை நோக்கிப் புண்ணியத் துறையினி லுறைந்த, பெரியவன் செயலோ வன்றிநீர் நினைந்துபே சியமாற்றமோ வருமிக், கருமமே தென்னக் கேட்டனர் நபியுங் கழறின னியாவெனன வுரைத்தார். (32)

கருத்தினுட்டெளிந்து நினைத்தவிச்சூழ்ச்சிகாட்சியீர் நும்பொருட் டோதீ, ரருந்திய வெளியேம் பண்புறும் பொருட்டோவென்றலு மழ குறவுமக்கோர், வருத்தமில் வேண்டியீண்டுவந்தடைந்த காபிர்க ளியா வரு மறுகிச் செறித்தொழில் வீய நினைத்ததென் றுரைத்தார் தீனர்க ளுவனை யிருப்பார். (33)

குறித்திவை யுரைத்த வாசகந் தாங்கிக் குழைந்துநன் மனத்தொ டுமதியு. மறுத்தெதி ருரைப்ப தென்னெனமறுகிமஜூதருள் சஃதொடு சஃது, மறத்துறை விளைந்தபேரொளி மணியே யாநித னருளினிற் றிரண்ட, சிறத்தனிப் பயனே யெங்கள்கண் ணகலாச் செல்வமேயென் றுரை தெரிப்பார். (34)

இயாங்களுங் கத்பான் குலத்தவாவருமென்றுமோர் மார்க்க மாயி ருந்துந், தேங்கமழீந்தின் கனியினொன் றேனுங்கொடுத்திலம் பயத் தொடுந திருந்த, வாங்கிய விலைக்கும் விருந்தெனுமதற்கு மன்றியோரா வரம்பிலா வருளே, தாங்கிய தவத்தின் மேலுளீர் சமயஞ் சலிப்புற யா தினைக் கொடுப்போம். (35)

தருமமுந்தவமுந்துயருறும் வீரத் தகைமையுமயருறும் விஷயம், வெருவுறு மானந் தேய்வுறுந் தீமை விளைவுறுந துணிவுறும் வேதம், பெருகிய கீர்த்தி நொய்துறுஞ் சமயம் பிழைவுறு மழகுறு நீதி, யிரிவு றும் போரிற் றிரண்டெழுங் காபிர்க் கிதமுறவீந்திடி லெமக்கே. (36)

நீங்கிலா மறையு மணங்குறுமிசுலா நெறியுந்தொல் லிறையவனி டத்தில், வாங்கினங் கிடையாப் பதவியு மடைந்தெம் வரத்தினு

யர்ந்ததாதென்ன, வோங்கிய திருப்பேர் நீவிரெம்மிடத்தி லுறையவும் பெற்றன மினிமேற், றீங்குறும் காயிர் வயின்சிறி தெளியேங் கொடுப்பது முடைத்தருந் திறலோய். (37)

எதெனிலுருவொன் றியற்றியே வெறிதீ மானிலை யிகழ்ந்த வருடலிற். கோதுசெய் நெடிய வேலினில் வாளிற் கோலினிற் கொடுத்திடலன்றி, வேதனைபடமற் றௌன்றினி தீயேம் விளிகிலா வாத்திலையுடையீ ராதிதனகிருபை யாலை நம்மாலை யெனறு ரைத்தருளின ரன்றே. (38)

சினத்தொடும் படித்தவறிவொடு முரைத்த செய்கைகேட்டு வமையிலாசா, மனத்தினிற் களிப்புற்றரியா மானவளாத் தவாரமெனப் புகன்று, கனைத்தமும் மதவாரணக்குல மேய்ந்த கந்து பான் குழுவிணரிடத்தி, னினைத்துமுன் னுரைத்த வாய்மையை முறித்தார நிசமுறவொருவரை யேவி. (39)

வே று.

இசையும் வாய்மை முறித்தெழி லேந்திய
வசையி லாப்புகழ் மனனனெனு மாநபி
திசையின் ணேற்ற விருந்தனர் தீநெறி
யசற டுத்த பொழுது மடுத்ததால். (40)

வணங்க முன்ன வெழத்திரள் வாசியு
முணங்கு பல்கொடி யாட வுருமென
விணங்கு பல்லிய மார்ப்ப விகலுராக்
கணங்கொள் சேனையி னீண்டினர் காபிரால். (41)

சிலைவ ளைத்தொழி ஞணிலைச் சோத்திபூன்
மலிவண் டேநதிமின் வாழ்தரு வாளுரீஇத்
தொலைவி லாசசினந் துன்னவந் தார்த்தன
ரலையை யொத்தெதிர்த் தாஅசு ஹாபிகள். (42)

திருந பிக்குயி ரென்னுந திறத்திறோர்
கரிய வன்குபிா மளளருங் காதியே
பொருது கிறைன ரன்றிப் புலாலுணீா
தரவோர் காய மடுத்தில சற்றுமே. (43)

---

0விலைக்கும், விருநதுக்கு மல்லாற் கொடுத்தில மெனக.

இனைய போர்செய் திகலு மளவையிற்
சினமுண் மீறி யபூஜகல் தேடிய
தனைய னும்அமு றுஞ்சில தானையி
னணிய கன்ற வகழினை நண்ணினார். (44)

பாறைப் பற்றி படுசுழி போலக
னூரைச் சுற்றி யெடுத்திங் குறைந்தனர்
காரைப் பற்றுங் கவிகையன் காட்டுதீன்
வேரைப் பற்றி யெழுந்தவவ் வீரரே. (45)

முன்னி லாத கவுத்துவ முற்றுற
வின்ன நாளி லியற்றின ரீங்கிதாற்
பன்னு மாயமே தோவெனப் பாவியோ
ருன்னி மீண்டோ ரிடத்தினி லுற்றனர். (46)

கிடங்க டுத்தணி நிற்பது கேடென
வொடுங்கி யப்புற மெய்தலு மூக்கமூர்
மடங்க லெனனும் அலிவளர் மாமறந
தொடங்கி மீளியர் சூழ்தரத் தோன்றினார். (47)

அபுது வத்தருள் மைந்த னடங்கிலாப்
பபழு டற்ற முறும்வரிப் பாய்புலி
சிவனு மிக்கிரி மாவுஞ் செலும்வழி
கவியக் கட்டினர் நின்றனர் காணவால். (48)

யாதி ரப்புய மன்னவி யுந்திறற்
சாது வேந்தருந தாரையி னீண்டனும்
பேதி யாது மனத்தினிற் பிரியமுற்
றேதி லாத விருவருந் தாக்கினார். (49)

கடலி ரண்டு கலந்தெனக் காதிய
படையி ரண்டு மெதிர்ந்தன பாய்பரி
யுடலி ரண்டு கிடந்த வுகுதலை
யிடமி ரண்டு மலிந்த விமைப்பினே. (50)

தேன்பொ ழிந்த தொடைமுடிக் கீதிலா
மீன்பொ ழிந்தன வெண்முத் துகுத்தன
வூன்பொ ழிந்த வுதிரப் பெருக்கினீர்
வான்பொ ழிந்த மழையெனக்கான்றன. (51)

செயிர் துறந்த திறத்தினர் திண்படைக்
கையில்வி டுப்ப விரைந்தெழு கந்துக
முயிர்து றந்து கிடந்தவுண் மூளையாந்
தயிர்சொ ரிந்து கிடந்தவ தின்றலே. (52)

கண்டெ ரிந்தில சேர்ந்த கடுஞ்சரம்
புண்டெ ரிந்தில போர்த்த வயவரும்
கெண்டெ ரிந்தில பட்ட விவுளிகழ்
விண்டெ ரிந்தில மேவிய புள்ளரோ. (53)

தாங்கி டந்த நெடுஞ்சரந் தாக்கியுள்
ளூறங்கி டந்துபி ருண்டெழுந் தோடலு
மாங்கி டந்துணும் வாளி னறுத்தலு
மாங்கி டந்தென வீழ்ந்தன மள்ளரால். (54)

இருதி றற்படை யின்னன போர்செய
விருது கட்டிய சஃதெனும் வேந்தர்போய்
மருவு மள்ளரை வீழ்த்திவிண் வாவிய
பரியின மேற்கொண்டு நின்றனர் பாலினே. (55)

சேனை யின்னடு நிற்பச சிறந்திலா
வீன வெங்குபி ரெனபல வெண்ணிலா
மான வேன்கழுச் சக்கரம் வாளுட
னூனு டைசசர முள்ளவை யேவினா. (56)

விடுத்த பல்படை யின்னொரு வெஞ்சர
மடுத்த வநதிவ ணின்றவ ரஙகையின
மடுத்து ளோடி வெளியினில வாங்கின
தொடுத்த தாரையிற் சோணிதந் துளளின. (57)

ஸாது வேந்தன் கரத்திற் சரம்பட
வாதி யேவ வியைநத வலிப்புலி
யூதை பிற்பட வுன்னிய வுன்னிய
வீதி விட்டமர் மேவுளர்த் தாக்கினர். (58)

கனைக்கும் வானத் திடியெனக் காபிர்மேன்
முனைக்கு மஙகவர் சோரியின் முற்றுமே
நனைக்கு நேமியை நாற்றிசை யெங்கும்போய்
நினைக்கு முன்னம் வருமுன்னர் நிற்குமால். (59

குதிக்கு மள்ளர் கருந்தலை குப்புற
மிதிக்கு நெஞ்சினில் வெட்டுங் குளம்புறப்
பதிக்கு மாடும் பறக்கு நடக்குமான்
மதிக்கும் வாளலி யேறிய வாசியே. (60)

ஓடுஞ்சேனை யுழக்கு முயிர்ப்பெனச்
சாடுஞ் சென்னி தகர்க்கும் விறலினைச்
சூடு நன்மையிற் றோன்றிய தீனரைக்
கூடு மெய்ப்புலி யேறுங் குதிரையே. (61)

இத்தி றற்பரி தாங்கிய வேந்தலும்
வைத் தடக் கதிர்க் கப்புறும் வாளுரிஇக்
கைத்த தைத்தினி லேந்தியக் காபிரைச்
சித்தி ரக்கொலை செய்யத் துணிந்தனர். (62)

வெட்டி னார்பகு வாளினில் வீரர்கள்
பட்டி னாரெனத் தோன்றில பார்த்திட
னொட்டி னாரெவ ராவியொ டுழறக்
கொட்டி னார்குடற் வீழ்ந்தனர் குவ்விரே. (63)

உநதி யுந்தி வரும்பரி யூணினீர
சிந்தி நந்தி விழுநதன தீயென
வந்து வந்துருத் தார்த்தனர் வாளினுற்
பந்தி பந்தியின் வீழ்நதனர் பாங்கெலாம். (64)

ஓங்கி னார்பினும வாளினி லூக்கமற்
றேங்கி னார்மன மெண்ணி வெருவுறற்
றுங்கி னார்திறந தாங்கிலா பின்னுற
வாங்கி னார்பொரும் காபிர்வ யவரால். (65)

ஊக்க மின்றென வுள்ளுற வபங்கலு
நோக்கி வீசுங் கடுத்தலை நொன்கரத்
தாக்கி மாவொ டமுறும்வந தார்த்தனன
மோக்கு ரைப்தவெங் கோளரி முன்னமே. (66)

நின்ற நின்ற திசைதொறு நீள்படை
கொன்று கொன்று பெருங்களங் கூட்டிய
வென்றி மன்னவ வென்னொடு வென்றிநீ
யொன்று செய்திடு கென்றிவை யோதினன். (67)

ஊதைவாம்பரி யாற்றற வோவுடற்
கோதும் வாளிற் றறவோ கொடுஞ்சரத்
தூதி னாற்றற வோவினிச் சொல்லுநீ
யாதினாற்கொன் றிருஞ்சினந் தீர்குவேன். (68)

சொல்லு சொல்லென் றவியரி னூண்டலு
நில்லு நில்லென் றெதிர்ந்தன னேரலான்
கொல்லு கொல்லென் றிடியெனக் கூறினார்
வல்லை யஞ்சி மனத்துண் மயங்கினான். (69)

மல்லி னாற்கொல்ல வேண்டுமோ வாங்கிய
வில்லி னாற்கொல்ல வேண்டுமோ வெம்பரிச்
செல்லி னாற்கொல்ல வேண்டுமோ திண்ணியன்
சொல்லி னாற்கொல்வ னென்று துணுக்குற்றான். (70)

இடிபெ யர்த்தன வோர்சொ லெறிந்ததா
லடிபெ யர்த்தன சேனைக ளந்தரக்
குடிபெ யர்த்தன மேகங் குலைதரப்
படிபெ யர்த்தன பாந்தள்பெ யர்த்தன. (71)

றிசைந டுங்குமென் றெண்ணிச் சினத்தொடும்
விசையின் வாசி சுழற்றி விண்மேலவன
வசையி லாப்புலி முன்சென்று வாளினா
லிசைய வோங்கி யெறிந்தனன் றிங்கினன். (72)

எறிந்த தானை விலக்கி யிவனுடற்
பிறிந்தி ரண்டெனப் போம்படி பேரெழின்
மறிந்த வாளில் வழங்கின சோரிநீர்
செறிந்து வீழ்தர நங்கினன் றீயவன். (73)

ஆய்ந்த புன்மை யழுறெனு மன்னவன்
வீய்ந்து போயினன் கண்டு வெருவுறச்
சாய்ந்து போயின தானை தரு கண்மை
வாய்ந்த இக்கிரி மாவும்பின் வாங்கினான். (74)

வெருவுற் றோடிய வேந்தரு மள்ளருந்
திருவு லாவிய பாசறை சேர்ந்தன
ரொருவன் மாத்திர மோடத் தவறியே
விரிவி னாழ்ந்த வகழினில் வீழ்ந்தனன். (75)

நவுப லென்னும் பெயரின ளெினும்
பவமிழைத்த படிற னவன்றனைத்
தவிர்கி லாது தடக்கையிற் பற்றியே
திவளுஞ் சென்னி தறித்தனர் தீனரே. (76)

உடைகொண்டாட்டற் பரியொடு மோங்கிய
படைகொண் டேகிப் பரம்பொருள் வேதத்தி
னடைகொண் டேவிளை யாடு நபிமுன
மடல்கொண் டார்க்கு மவிப்புவி நண்ணினார். (77)

அவியை யாரத் தழுவி யருமது
நிலவுகால விருப்ப நிகழ்த்துதீன்
புலவர் பாவமு தம்பொழி வாக்கினர்
கலைகள் யாவு முணர்ந்த கருத்தினர். (78)

மதுர வாய்மைஹஜ்ஜாமெனு மாதவர்
கதிகொள் பேரின ராசறு கல்வியா
முத்தி யங்கரை கண்டவ ரோங்கிய
வதிக கேண்மைய ரன்பின ராங்கவர். (79)

வேறு.

ஓடி னுரையு முடவி னூனுக
வீடி னுரையும் வெருவிப் பாசறை
தேடி னுரையுங் காபிர் தீதுறப்
பாடி னார்வசைப் பண்பி றக்கவே. (80)

கவியிற் கூறிய காபிர் மேல்வசை
செவியிற் கேட்டலுந் தீனர் கோபமி
யவிரு மாமணி யாடை மாநிதி
குவிய வீந்தனர் குறைவி லாமலே. (81)

இன்ன வெல்லையில் தீனரி யாவரு
மன்னு மாமனை யிடத்தின் மேவினார்
மன்னர் சகுதுங் கோன்மடுத்த கையொடும்
பொன்னுள் வாழுமில் விடத்திற் புக்கினர். (82)

வேறு.

மருந்து மற்றவை வாளிப டுங்காம்
பொருந்து புண்ணிடை சேர்த்திலர் போதமுற்

றிருந்து சிந்தையி ரங்கி யிறைவனைத்
திருந்த வாழ்த்தி யினையன செப்புவார். (83)

வேறு.

வானவர்க்கு நின்னுடைய தூதருக்கு மறைதெளித் தமற்றை யோர்க்கு, மூனுடைய பல்லுயிர்க்கு முணர்வரிய பேரொளியா யோங்கி நின்ற, ஞானமென்னும் பரம்பொருளோ யழியாதபெரும் பேறெ நடுநின் றென்று, மூனமறவிளையாடி யெவ்விடத்து மெங்நாளு முறையுங்கோவே. (84)

நன்றியஃ துறைவிடமோ நடுவிடமோ வீறிடமோ நலனுர் போதங், துன்றுதவத் தினனிடமோ பொறையிடமோ வருளிடமோ தொலையாவேத, மன்றிடமோ தருமமெனும் வழியிடமோ பெரியோர்கள் வணங்கிநின்ற, வென்றியிட மோவறியேன் மற்றிடமோ நீயுறைந்த விளக்க மியாதோ. (85)

அருவோநீயருளோநீ யறமோநீ யழகோநீ யடங்கிலாத, மருவோ நீயொளியோநீ மனமோநீ யூறோநீ மறைமாநீன்ற, உருவோநீ யுயிரோநீ யுண்டோநீ யின்றோநீ யுரைத்தவேதத், திருவோநீ செயலோநீ யுன்வடிவமென்கொ லெனத் தெருள்வணியானே. (86)

என்னுடைய புழுக்கூட்டை மலச்சடத்தை வீணேபோமிருக்க வேது, மின்னமெதன வறியாது கிடநதுபுவி யிடத்துழன்ற வெளியே னந்தோ, வுன்னுடைய திருக்கூத்தை யறிவதென் கொல்கிரு பையளித் தெப்பலமுந் தடியவேண்டும். (87)

குறைவியெனுங் குலக்காபிர் பகைநாளுநம் வளரு மெளிற்கோதிலாது, நிறையமென தூடலுயிரைத் தாவேண்டு மெத்தலத்து நீண்ட சோதி, யிறையவனே யக்காபிர் நாடோறுந தேய்வரொணி லிலங்கும்வாளி, புறையுமலர்க் காத்துடனே பீஸபீல் மவுத்தாக்க வுதவி செய்வாய்.

என்றிருகையேந்தி நறுந் துஆவோதியிறையவனை யேத்திவீரந்
துன்றுபுயஸகுதினைய விருப்பநறை கமழ்நதவொளித்தூதராஞே
ரன்றுபகலிகல்குபிர ராலசறு வணக்கங்கலா வான தென்ன
கன்றி மனமற வருந்தி யரியவனைப் புணிநதிவருங் கரைவதானார். (89)

அஞ்சொகுத்துந் தப்பாது கடன்கழிப்ப நாடோறு மளித் தேற்கந்தோ, வஞ்சமுறுங் குபிரவரா லோரவணக்கந தாராதுவருந்திநின்

றேன், மிஞ்சுகதி விளைப்பயனே வுலகமெங்கும் பெருங்காட்சி விரித்த கோவே, தஞ்சமுற வுனையடைந்தே னித்தகைமை பொறுத்திரக்கந் தாங்குவாயே. (90)

தாயளித்த செல்வமென்றுந் தந்தைதருஞ் செல்வமென்றுந் தவத்தி னேய்ந்த, சேயளித்த செல்வமென்றும் பிறரளித்தபலனி தென்றுந் திறமை வேந்தர், கூயளித்த செல்வமென்றுஞ் சிறியோர்கடம்மனத்து னிமிர்ந்து நின்றாய், நீயளித்த செல்வமென வடியேனும் உன் பாத மடைந்திட் டேனே. (91)

காணுத மெரியவனே காண்மதற்கு மெளியவனே கவினுமேனி, யாணுகவலியாகப் பெண்ணுக வமைந்தவனே வவைவுமென்றும், பூணு தகாட்சியனே புணர்வுணர்வுண் டில்லவனே புகலாநின்ற, 0 வாணுளு முடையவனே வல்லவனே வுன்பெருமை மதிப் பாரியாரோ. (92)

பொல்லாத வஞ்சகரைத் தெளியாத மனத்தவரைப் புன்மையோரைக், கல்லாத கயவரெனுங் குபிரவரை வேகமறக் களைந்து நாளு, மெல்லாருந் தொழுமரிய தீனைவளர்த் துறவிஷய மெற்கீந் தாள்வாய், அல்லாவே அல்லாவே யென்றிரங்கிப் புகழ்ந்துபுகழ்ந் தறைந்தார் மன்னே.

இத்தகைமை யிரங்கியிருந் துஆவோதித் தூதர்தனித் திருக்குமெல்லை, சத்துருவா கியகத்பான் குழுவினரி லுண்மையெனுந் தன்மைபூண்ட, வித்தகன்புண் ணியத்துறைந்த மேன்மையுளோர்நாளும் வெளிறில்லாத, புத்தியினன் சூழ்ச்சியின னென்றொருவன் வந்தவணிற் புக்கினுல். (94)

வடிக்கதிர்மெய் சிறந்தொளிர மான்மதமெங் குங்கமழுமறைக ளுவி, னடிக்கவிசை பிறக்கவிறை யேத்தியறத் தோடிருந்த நபிகள் கோமா, னடிக்கமல மிசைவணங்கி யெழுந்தொருபா னின்ற கங்கை யெந்திவானத், திடிக்குமழைகுடைகவித்த வேந்தரியேயெனப்போற்றி யினைய சொல்வான். (95)

அந்தமிலா மாந்தர்பல ரீன்றுபுவி யிடத்தருளு மாதமான, தந்தையது பெருவிரலி லிருந்தபெரும் பேரொளியே தணப்பிலாத, விங்

0 வாழ்நாளென்பது, வாழ் நாளாகி, வாணுளாயது, தேசவழக்கத்தினு மருஉவின் பாந்தியானுஞ், சோழநாடு, சோணுடாணுற்போலென்று கொள்க,

தை தருங் காரணத்தின் மேலுதித்த திருவடிவேமேலோன் றன்னைச்,
சிந்தைதனிற் குடிபுகுத்துஞ் செழுந்தூதே காட்சியுறுந் தேவதேவே.

அடியன்மனப் புத்தியில்லேன் கத்துபான் கேளிருள்ளே னடங்கி லாத, கொடிமையுளன் றருமசிந்தையின னியாவருக்குங் குறைகள்செய் தேன், புடவிதனிற் றிறமைமசு கூதுமக னெனையெவரும் புகழும்வேத, நடையுணர்நா யகநாளுங் குடுத்துரைக்கு நாமமோ நுகைமு வென் போன். (97)

மாருத பகையுடற் றும் பெருங்காபி ரிடத்துறைந்து மயங்கியாகந், தேருது கிடந்துலைந்தே னீமானை நயந்துமனஞ் சிறியேனுளும், விரு ருந் தானையொடுங் கேளிரொடுங் கூண்டுமமர் மேவியிந் நான், பாராரும் வெவேலீர் வந்துமகிழ்ந் துறைந்தனன்பா சறையின் மன்னே. (98)

அப்பெரும்பா சறைநீந்தி யொருவாறி யாதெளியே னறிவிலாத, னிப்பொழுதிங் கினிதடைந்தேன் கண்கள்பெற்ற மேறுமின்னே யெளி திற்கண்டேன், முப்புவியும் விளங்கவரு மெய்ப்பதவியு மடைந்தேன் முழுதுஞ் சூழ்ந்து, வெப்புறுந்தீ மையுந்துலைந் தேன் கிடையாத திருச்சுவன வீடும் பெற்றேன். (99)

அலையிலின்ப மழையுதவு கருமுகிலே ஞானமணி யருளேமோதைச்
சலதியினைச் சிலநிதி தருங்கலத்தைக் கனிப்பதவி தருவா னீண்ட
நலனுடைய காவகத்தை நாவேறுங் கவிமாலை வானமையாற்றை
நிலைபெற யாலுரைத்தருளே கென்றனன கெனவவரு நிகழ்த்தி னால.

தொழுகை யெனவரும் வாலா றெவையுமுணாந் தகமகிழ்ந்து தூதராரோ, பழுதறுசெங் கமலமல ரடிபணிந்து முகநோக்கிப் பகை யின்மேவி, யழிவுறுவெங் காபிரிகல் கெடவொடுக்கி யுட்பகையு மமைத திப்போதே, யிழிவினர் புறங்காட்டச செய்குவ னியாமென வுரைத்தங் கெழுந்தார் மன்னே. (101)

வேறு.

ஈங்குரைத் தெழுதனு மிரவிய யெங்கனு
மோங்கிய கதிர்களை யொடுக்கி மேற்றிசை
வாக்கியங் குறைந்தனன் வளருந் தீனிலை
தாங்கிய வறிஞருந் தகையிற் போயினர். (102)

பாருடைத் தெறியடிப் பரிகண் மேவிய
போருறு முனைப்பதி புக்கு நன்மதி
நீரிலா நெஞ்சினர் நிகழ்த்து முண்மையு
மோரிலா யெகூதிக ளுறைத நண்ணினர். (103)

நவிறெனுங் குழுவினர் சூழ நாப்பணோர்
புலியிருந் தெனத்தனி புழுங்கிச் சீற்றமே
மலிதர விருந்திடுங் குயைமுன மாணுடைத்
தலைவரென் றேத்திப நுகைமு சாரந்தனர். (104)

இருத்தினன் கைகுவித் திருப்ப வஞ்சகம்
பொருத்திய குயையெனும் புனமை மன்னவன்
வருத்தமின் மனத்தினிர வந்த தென்னென
வுரைத்தலு மிவரதற் கெதிரீ றோதுவார். (105)

குலத்தினி லிறந்தனன் கொடிய வெம்பழி
நலத்தொடும் வாங்குதற் கெழுந்த நாயக
நிலைத்தவெம் மொழிசில நிகழ்ந்த துண்டவை
வெலத்தக வுணர்ந்துநீ கேட்க வேண்டுமால். (106)

மல்லலம் படையொடு மிருந்த மாநபி
சொல்லிய சொற்படி யெழுநதொர் றூதுவ
னுலலையம மாசாதம முழைழயில வேநதகே
ளலலினி னொருநனு ளணுகி னனரோ. (107)

ஈண்டிய சேனையோ டிகல்செய் யாவகை
மாண்டர வோரிடம் வாஙகி நீரெனில்
வேணடிய நிதியும தகம்வி ருப்புற
வாண்டுதோ றினுமினி தருள்கு வோமென்றான். (108)

அம்மொழி கேட்டவா பொருந்தி யாடக
மம்மரு றவனொடும் வலக்கை நீட்டினார்
செபமையந திறத்திறைய பினனா மேதய்தரும்
வெம்முனை யறபிக ளிடத்தின மேவினன. (109)

ஆங்கவ ரிடத்தினு மநத வாய்மொழி
நீங்கிலா துரைததன னியாரு நேருறப்
மாஙகொடு மதிததனா தீனா பாலினித்
றீங்குரு தேகினன றூதாச செவ்வியோன். (110)

இன்னன பேசிய பொழுதி னீண்டுறு
மன்னவ ரியாவரும் போர்ம னங்கொளா
ருன்னியங் கவரவ ரூரின் மேவுவா
பின்னர்மாற் றருலனைப் பிடித்திங் கேகுவார். (111)

வந்துநின் படையெடு மலைகில் தீனவ
ரந்தரப் பொரப்படா தாகை யாலரோ
சிந்தையிற் சிறிதுரை சிறிய னெண்ணினேன்
றந்திர மென்னநீ தரிக்க வேண்டுமால். (112)

படைபொர வழைப்பவர் கையிற் பண்புறத்
திடமொடு முனைக்கொடுத் திவர்செல லாவகை
மிடலொடுங் கிரியொன்று விரும்பி வாங்கிநீ
யுடனினி துறைதலே யுபாய மாமரோ. (113)

இத்திற முடித்தியே லிடுக்க ணேகுமெம்
பித்துழன றவர்களும் பிரிந்து போகிலா
மித்துருக் குயிர்தரு வேந்தர் வேந்தவாழ்
சத்திய மென்மொழி யென்னனச் சாற்றினா. (114)

கேட்டனன் மெய்யெனக் கிலேச முற்றனன
போட்டன னுறவினைச் சீற்றம பொங்கெரி
மூட்டினன முற்றினு மூழ்கி நின்றனன
வேட்டலுற் றவிடம்விட் டிவரு மீண்டனா. (115)

திவடரு சிலையினமேற சிந்தை யோட்டிய
கவர்மன னூற்றுப்புரு தீஞற காதல
னவனிட மேவின ரரிய வல்லிருட்
குவிதரு மிரவினிற் றுணைகொள் சூழ்ச்சியார். (116)

வந்தவர் தமையிடத் திருத்தி மாமகிழ்
சிந்தையிற் பூத்தெழில் சிறப்ப நோக்கியே
யந்தமில லறிவினோ யடைந்த தெனனெனத்
தந்திர முண்டென்று ரிவனுஞ் சாற்றெனருன். (117)

சூதுரெ கூதியர்க் காதித் தோன்றலென்
ரோதிய குயையெனு மூன வஞ்சகன
பாதக முடித்தனன பழியும் பூட்டின
னேதென விளம்புகே னிவனறன செய்கையை. (118

முன்னர்நா ளிருவிசைப் போரின் மூழ்கிலா
துன்னிய முகம்மதுக் குடைந்தங் கோடினா
யின்னுநீ தன்னைவிட் டேகி லாவகை
மன்னிய கிரியொன்று வாங்கிக் கொள்ளவும். (119)

உயிரெனுங் கிரியுட னுறையுந் தன்மைபோற்
செயமுறு தீனவர் மகிழத் தீமையோன்
றயவொடக் கிரியினை யீய வுந்தனித்
தயலினி லேகவு மமர்செ யாதரோ. (120)

பிரியமுற் றுன்கிரி கொடுத்த பின்வள
தருசுகு ருவினைச் சார்ந்த தூதுவ
னிருமையின் மகிழ்ந்தினி தீய வும்மிவ
னரிதினி லேகியங் காசி னாளவும். (121)

இன்னன செய்கையு ளிருந்து மாறுபோ
னன்னிலை கெடும்குயை யென்னு நாமத்தான்
பண்ணினன் முடித்தனன் பகையுங் காட்டினன்
மனனவ வுணர்கென வணங்கிக் கூறினார். (122)

தாக்கிய தீமொழி செவியிற் சார்தலு
மூக்கிடை விரலினைச் சோத்தி மாமுடித்
தூக்கினன விழித்துணை தோனற வெஞ்சின
மாக்கினன் பின்னருள் ளடக்கி னானரோ. (123)

மொழிகொடுத் தடல்வலி றுஹைறமு மொய்யிரு
டழுவிய விரலினிற் சார்ந்து கத்துபான்
குழுவொடு மினையன மொழிந்து கோதிறன்
னுழையினி லுறைந்தன ருவமை மற்றிலார். (124)

கட்டுரை பேசின ருறையக் காமத்துண்
முட்டிய விருட்குல முழுதுந் தேய்தர
வெட்டெனுந் திசையினு மிலங்க வெங்கதிர்
விட்டன னெழுந்தனன் செவந்த வெய்யவன். (125)

துன்னிய கதிரரி தோன்ற மாற்றலர்
மன்னன பாசுபி யான்சொல் வாய்மையு
மன்னவர் வாய்மையு மறிய வேண்டுமென்
றுன்னினன் மனத்தினி லொருவற் கூவினான். (126)

விதிமொழி மறுத்தொழுந் தீனர் மேனின்று
கதமொடு மிகல்செயச் சூதர்க் காளைநீ
ரெதிர்பரி யுடன்வர வேண்டு மென்றுபோல்
மதிமன குழையொடுஞ் சொல்லி வாவென்றான். (127)

தூதின னுணர்ந்துபோய்ச் சூதர் கோனிடத்
தோதின னிம்மொழி யுளையக் கேட்டவன்
மாதவ னுறைமுசொல் வாய்மை யுண்மையென்
றீதென வொருமொழி யெடுத்துக் காட்டுவான். (128)

பாரிடை யின்றெமர்க் கினைய பண்பினாள்
வாரமுஞ் சனியென வந்த தன்றியுள்
ளாரெனுங் கேளிரைக் கிரிவைத் தாலல்லா
லீரமுற் றளவளா யிருப்ப தில்லையே. (129)

பாசறை யிடத்தினில் வைத்து பாயமாய்த்
தேசுற வவரவ ரூரிற் செல்குவீர்
கூசுவ தில்லைபா கையினிக் கூற்றினை
வீசின னீயும்போய் விளம்பு கென்றனன். (130)

நன்கென வெழுந்துபோய் நவிலுந் தூதுவன்
பொன்குலை மலிந்ததோட் பொருபின் மன்னவன்
முன்கிலத் தினனவை முடியக் கேட்டனன்
கொன்கொழு வேல்புகுந் தென்னுங் கொள்கைபோல். (131)

நகைதொறு மூச்சுயிர்த் தினிய நாவொடு
தகுநெடு மூக்குமா ருயிருந் தந்தனன்
மிகைமசு ஆதருல் வீர னேயென
வகமுடைந் தெவரொடு மரிதிற் கூறினான். (132)

சொல்லினை யாவரு முணர்ந்து தோமரு
மல்லலந் தளத்தொடு மடிமை கூர்தர
வெல்லையிற் றுயரினுள் ளிடைந்து வாடினர்
வில்லுமிழ் முகம்மதின் துஆவின் மேன்மையால். (133)

மாற்றலர் தனிந்தணி தூனின் மாழ்வுற
நாற்றிசை தொறுங்கதிர் நடத்தி வெம்மையிற்
றேற்றிய கதிரவன் சுடுதன் மாற்றியே
மேற்றிசை போயினா னிருண்ட விண்ணிடம். (134)

## வேறு.

பார்த்த தீக்கினு மந்தரத் தினும்படி முழுதும்.
வார்த்த தாமெனச் செறிந்தன விருட்குல மலிந்த
சூர்த்த டக்குழு வும்பயந் தொளித்திடத் தோன்றி
தீர்த்த வட்டவான் மதியின தொளியையுஞ் சிதைத்த (135)

இருட்டெ னுங்கட லீண்டிய தெனப்பட ரிருவான்
மரிட்டி யோர்கருங் கஞ்சுகி யணிந்தென மதியை
யுருட்டுங் காபிரசெய் பாவம்வந் துதித்தென வுலகந்
தெருட்டு மேலவன் முனிவன நிறைந்தன திமிரம். (136)

தரையுந் தேயன்றில் வானமுந் தோன்றில் தடப்பா
சறையுந் தோன்றில கருபமுந் தோன்றில தகைத்த
மருகுந் தோன்றில வுறைபிடந் தோன்றில மதியா
தறியு மேனியுந் தோன்றில லவரவாக் கிருளாள். (137)

இருந்தி டல்பெயர்ந் தேகினர் மீள்வதற் கேலார்
வருந்தி யெங்கணு மோடின ருலைந்தனர் மருடம்
பொருந்த முட்டியுங் காலினிற் றட்டியுப் புழுங்கித்
தெரிந்தி லாவிழி யந்தரிற் றிரிந்தன ரெவரும். (138)

திங்க ளென்பதுங் கணங்கொன மதும்வெளி கிரிந்த
பொங்கு செங்கதி ரிரவியென் மதுநிலை போக்கி
யெங்கி றந்தன வோவொளி யில்லையோ வேதோ
மங்கி நின்றன வோவென மன்மதி மறந்தார். (139)

மேவி நின்றவல் லிருளலாற் பின்னரு மிகுந்து
தாவிக் கீழ்த்திசை யூதையு மேனினற தனிபோன்
காவி லாக்கொடுங் குளிருமிக காபிரக டம்மே
லேவி ஞனைவை நினைப்பதன் முன்னம்வந் திறுத்த. (140)

கொண்டல் வெகமீக் கொண்டன முனைப்பதி குறுகிச்
சண்ட மாருதம் போல்விசைத் தடிக்கடி தாவிக
கண்ட திக்கினும் பரந்துவெங் குளிரொடுங் காண
வண்ட மும்பெரும் பூமியு நடுங்கிட வடித்த. (141)

பாடி வீடன்றி மற்றிட மிலையெனப் பரந்த
கோடை நீட்ட நீரையும் வாரிக்கொண் டெழுந்து
நீடு வேரொடும் பிடிங்கிச்சே ணிலத்திடை கிடப்ப
வேடு கொண்டபூ மரங்களியா வையுமுறித் தெறிந்த. (142)

பற்றி நீண்டவெண் கயிற்றொடு முளையொடும் பறித்துச்
சுற்றும் வெண்படங் கந்தர்த் தாடிய தோற்ற
மற்ற பட்டங்கள் பறந்தன போலவு மண்டத்
துற்ற மேகங்கள் சுழன்றன போலவு மொளிரும். (143)

குச்சுக் கொட்டகை வீட்டொடு வளைசிறு குடிலும்
பிச்சுக் கண்டதிக் கெங்கணு மெறிந்துவிண் பிணங்கி
யுச்ச நீண்டநி சாணிக ளியானையு மொடித்துக்
கொச்சை மாணிடர் வெருவுற வடித்தன கொண்டல். (144)

திசைக டோறுமொண் டெறிந்தகார்க் குருந்துளித் தில்லை
விசையி னோடுமந் தடித்தலுங் குளிரினன் மெலிந்து
குசைகொள் வாம்பரி யொட்டக மெருதொடு கொடுகி
நசைகொள் பாசறை யிடந்தொறு மடிக்கடி நடுங்கும். (145)

இனைய பற்பல விலங்கின மீடுபட் டிறப்ப
மனுமி குத்தலாற் சிலபரி கயிற்றினை வலிதி
னினையு முன்னுறத் தடுமுளை நிலத்தினிற் பிடுங்கித்
துனியொ டுங்குதிக் தடிபடத் துள்ளியே திரியும். (146)

கையுங் காலும்பே ருடலொடு நடுங்கிடக் கலங்கி
யுவ்வ தில்லென வீரரு மாசரு மொளிரும்
வெய்ய தீயெரித் ததுங்குளிர் காய்ந்தனர் மேன்மே
லைய கோமுனைப் பதிமுற்று மெறிந்ததா மெனவே. (147)

சடிலந் துஞ்சினுங் கேளிர்க டுஞ்சினுந் தரித்த
விடுதி யன்றிமற் றிடம்வரா துளமெலி பவருங்
குடிகள் விட்டுவீ தியினிடம் வந்தவர் குளிரி
னடிபெ யர்த்திடா தங்ஙனங் கிடந்தழி பவரும். (148)

கூதிருங் குறுந் திவலையு மிருட்டொடுங் கொணர்ந்து
ளேதை தாக்கலு மனஞ்சலித் தொருவருக் கொருவ
ராத ரத்தொடுந் தழுவில வினையடைந் தெனவிப்
போது தப்பியாம் போகுது மெனப்புகல வாரும். (149)

மன்ன னாகிய முகம்மது மாயவித் தையினை
லென்கொல் வஞ்சகம் செய்தன னெனவிடை பவரும்
பன்னிக் கூட்டிவந் தொருளிசைக் கொருவனவெம் பழியா
யுன்னி யிச்சணங் கொல்வதென் றுணர்ந்துழை பவரும். (150)

மாக மீதிழித் தென்னிலாவ னவர்வந்து வளைந்து
பாகங் கூர்தரத் தக்குபீர் முழக்கலும் பரந்த
மேக மியாவும்போ யொளித்திட விடிபல வெருவ
வாகு மித்தொனி யேதெனப் பயந்தயர் பவரும். (151)

இளைய பாளைய மலைதர மருவலர்க் கிடியே
றனைய மாநபி காபிர்தம் மிடத்தினி தணுகிக்
துனியில் வேவுபார்த் தடைந்தவர்க் கழிவிலாச் சொர்க்க
மனைக ளிப்புற வுண்டெனத் தோழர்பால் வகுத்தார். (152)

நாவி னுலுரைத் தலுங்குதை பாவெனு நம்பி
வேவு பார்த்தியான் வருகுவன் சணத்தினில் விடைநீ
ராவ லோடுமிங் களித்திடு மென்னலு மவரு
வேவி னார்பதம் பணிந்தனர் பிசுமிலென் றெழுந்தார். (153)

ஊடு வாரணி தூணியும் வெரிநணிந் தொருசிங்
காடி யுந்திருக் கரத்தெடுத் துவகையிற் கடிதி
னுடிப் பாசறை யெய்தினர் நஞ்செனுங் கடலுள்
வாட லில்லதோர் தெள்ளமு தடைந்தது மான. (154)

இருந்த கானினை விடுத்துப்பின் வேறுகா னிடத்துந்
திருந்த வெவ்வரி பயமிலா துலவுதல் சிவண
விரிந்த வீதிக டொறுந்தொறுந் திரிந்தனர் விளைந்த
வருந்த வத்தினர் நாயனுக் குவந்தபே ரடியார். (155)

கடிதின் மற்றொரு மறுகுறக் கதிரவன் றன்னைப்
புடையி னிற்பரி வேடஞ்சூழ் வளைந்தது போலச்
சுடர்கொள் வேலினர் வாளின ரொடுமபா சுபியா
னடுவிற் றீவளர்த் திருந்தனன் குளிரினு னடுங்கி. (156)

ஒல்லை நோக்கினர் பிணைக்குலத் தெதிர்ப்படு முழுவை
புல்லு முள்ளகக் களிப்பெனப் புந்திகூர்ந் துடனே
யல்லல் கூறும பாசுபி யானையிங் கரிதிற்
கொல்லு வேனெனக் சரந்தினைக் கரத்தினிற் கொண்டார். (157)

சிறந்த மாநபி சொல்லிய சொல்லின்றித் தேக
மிறந்து போகினும போர்செய்த குவதென் றெனவுந்
துறந்து கைப்படை யிருந்தன னெனவுமுட் டுளங்கா
வறிந்து நாணியே தூணியிற் சேர்த்தன ரம்பை. (158)

கங்கந் தூணியிற் சேர்த்துவாள் கைகொடு களிப்புற்
றங்கு போயளப் பறிகுவ மென்றெணி யவாபாற்
சிங்கம் போனடந் தேகிவல் லிருட்டினில் தீனோ
ரெங்குங் கீர்த்திகொண் டிலங்கிட வோர்புறத் திருந்தார். (159)

நீட்டும் வேற்கை பாசபி யானெனுந் திறலோன்
கூட்டத் தோர்புறத் துறைதலு மசுகையாக் குறித்து
வேட்ட லுற்றெரி மூட்டிமேல் காய்த்திடும் வீரர்
கேட்டு ளம்பய மெய்திட வொருமொழி யுளத்தும். (160)

ஒன்ன லாரிடத் துளவன்போ லிவணில்வந் தொருவ
னெனமேகால் கவ்வையி னிருந்தன னேயிருக் கின்றான்
மின்னில் வந்தவல் லிருளுமோ வெளிதர விலையாற்
றனனு மாந்தர்தம் முகங்களுந் தோற்றவு மிலையால். (161

திருந்து வாட்கரந் தாங்கிய சேவகத் திறலீர்
கரிந்த புனமன மாற்றலன் காணுற வின்னே
பரிந்த கைகளைப் பிடித்துக்கொண் டவரவர் பக்கத்
திருந்த வீரர்க ளிடுபெயா விணுமின்க ளென்றான். (162)

அரசன் சொல்லிய சொற்படி யாவரு மங்ஙன்
விரைவி னுற்றவர் நாமமே தெரிதர விளம்பப்
பரிவின வேறொரு சூழ்ச்சியால தீனவா பாங்கி
னொருவன கைபிடித தாரெடா நீயென வுரைததா. (163)

வாசகஞ் சொலக் கேட்டலு மந்தமா னுடனும்
பேசு மெனபெயா முறைறபினை வெனறலும பெரிய
பாசமு ளளநம முறைறபினை வோவெனப பகாநது
வீசுங கையினை யிட்டனர் தீனவி டாதா. (164)

உற்ற வீரர்க ளியாவருங் கேட்டலு முணர்நது
மறற மாநதாக ளிலையென வாசனும் வலியக்
கொற்ற வேநதரை யிருததியென னுளத்தினிற குறித்த
பற்றும வசகங கேணமினென றுரைபக ருவனால. (165)

ஏது மாயமென் றறிந்திலங் கூதிக்கர லடித்து
வாதை காணுற வலிபெடுத் தொட்டக மடிநத
தீதி லாதபா டலங்களு நநதியுந் தேரியா
வீதி தோமனு மெழுநதில வீழநதுபி ரிறநத. (166)

படங்கு பற்பல பறந்தன கிழிந்தன பலரு
மொடுங்கு குச்சொடு குடில்களு மழிந்தன வுலவு
நெடுங்கொ டிக்கம்ப மொடிந்தன நெகிழ
திடங்கொள் பந்தரு நிலத்திடை படிந்தன வெங்கும். (167)

அறந்த தும்பிய தென்கொலோ குளிருவந் ததனாற்
சிறந்த வாயொடு மூரலுங் கிட்டியே தேக
மிறந்து போயிலர் சிலர்சில ரிவணிருக் கின்றார்
துறந்தி லாதருந் திறத்தினீ ரேதெனச் சொல்வேன். (168)

பற்றி லாவகுத் தபுமகன் குயையெனும் பாவி
வெற்றி மாநபி யுடனெப்புக் கூடினன் வெருவிச்
சுற்றுங் காட்டிய பெருங்குளி ரெளிதினிற் றொலையா
முற்றுங் கோறலைத் துணிந்திருக் கின்றது மொய்ம்பீர். (169)

கொண்ட பன்றிமற் றிருநதிசை திசைதொறுங் கொடிய
வண்ட மும்வெடத் திடத்தொனி யடிக்கடி யறைந்த
துண்டு மற்றருங் கண்டில மூழ்விதி யதுவு
மிண்டு வல்வினை மூட்டுமோ வறிகில மெய்யா. (170)

ஐய கோவுபி ரிருந்தல்லோ திடத்துட னடும்போர்
செய்ய வேண்டுமிங் கிருப்பது பழுதினிற் றிறத்தீ
ருய்ய லாம்படி யூரினிற் போமினென் றுரைத்தான்
வையம் போற்றிய ஹறுபுவந் தீன்றிடு மதலை. (171)

விடியு முன்னமே யானுமே குவனென விரைவி
னெடிய காற்றனை யவிழ்க்குமுன னெடும்பரி மேற்கொண்
டடிய டித்துமுன் னயித்தின் னடந்தில வதுவுங்
கடிய காலினூற் றிடத்துடன் குதித்தது கண்டான். (172)

பதறி யேறினன் கண்டனன் பின்னர்விண் பாயுங்
குதிரை யின்பதத் தனைவிடுத் தேகினன் குழாத்தோ
டிதென பாவமென் றேகமற் றவருமி தொலலா
மதியி னுலறிந் திவருமா னபிபிடம் வந்தார். (173)

மண்ணின் மீதிருந் தநதரத் தப்புறம் வடிவி
னண்ணும் பாதத்திற் பணிநதன ரொழுநதனர நடந்து
கண்ணிற் காண்டதுங் கேட்டது படிபடி கழறித
துண்ணென் றகமுங் குளிர்தரப் பின்னருஞ் சொல்வார். (174)

அண்ட முங்கிடந் தெங்கணு நடுங்கிடு மலையா
விண்டும் வேரொடு நடுங்கிட விபுலையு நடுங்குங்
கண்டு பேசுநா நடுங்கும்பி னியார்நடுங் காதார்
கொண்டல் காற்றொடு பொறுக்கிலாக் குளிர்வந்தகொடுமை (175)

அன்ன வெங்குளி ருறவென்ற னகத்தி னடுக்க
மின்னுந் தீர்ந்தில நும்பறக் கத்தினு லெளியேன்
மன்னு மாவிகொண் டடைந்தனன் மற்றுண்டோ வைய
மென்ன வேயுரைத் தனர்குதை பாவெனு மிளவல். (176)

ஆடல் வாசகங் கேட்டலு மும்பர்க்கு மாசா
சேடு கொண்டமேற் போர்வையைத் திருக்கரத் தெடுத்து
மூடி னார்குளிர் கலக்கமு நடுக்கமு முழுது
மோடிப்போயின வுவந்தனா களித்தன ருளத்தில். (177)

உள்ளங் கூர்தர மாற்றலர் முனைப்பதி யெவருங்
கொள்ளை கொள்ளுமு னியான்கொளு வேனெனக் குறித்து
தெள்ளும் வெங்கதிர்க் காத்தினை நீட்டியே சிறப்ப
வெள்ளிவெண்டிரைமுகட்டிடை யெழுந்தனனவெய்யோன (178)

மித்தி ரன்குடை திசையெழு வுறுமப ருள்விர
னுத்த ரஞ்சொலா தேகின னியாவரு முளைய
வித்தி ரததினை யறிந்தகுத தபுமக னெனமேபோன
சித்திரத்தைதயொத திருந்தனன சலித்தனன றிலாநததான.(179)

நயனு னைறமுசொல சொறபடி முகம்மதி லளினக
கயில்வெருகூதுடனெனையொபபுக் கொடுத்தனன் காளைன
றயினைம றநதுமற் றரசரும் விட்டுவிட் டாகனை
யுயிரினைபபிழைத் திவனுமயின னோடின னூாக்கே. (180)

கங்கு தப்பிய கத்துபான குழுவுங்க ளுனுங்
சங்க முபெரும் படைக்கட லசத்தெனுஞ் சவையும்
பங்க மெய்தடும் பனீகுறை லாவெனும் படையு
மங்கி ருந்தித சிதரின வோடின வனமே. (181)

இனைய மன்னாநா ளிருபதுஞ சின்னமு மிருந்து
மனமு முனறகம் வெருவியோ டினரெனும் வாய்மை
துனிவின் மாநபி கேட்டுநா யனைப்பல துதித்தா
தனியொ டுஞ்சய வாக்கிய மிடநதொறு நடந்த. (182)

ஒன்றவ் வாண்டினி லப்துல்முத் தலிபுவந் தருளும்
வென்றி வேந்தனை ரீதுசேய் விறலுடை நௌபல்
நன்றி தோன்றமீ மானையுட் கொண்டனர் நபியா
மென்றுந் தீனினை விரும்பினர் குபலையு மிழந்தார். (183)

உமைவந்த படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-37-க்குத்-திருவிருத்தம்-2276

——(*)——



# பனீகுறைலாவதைப் படலம்.

——:*:——

இனையன மகிழ்வு மெய்த விருந்தனர் மற்றை நாளிற்
புனைமலர்த் தடத்தின் மூழ்கிச சிரசிடம் புலர்த்துங் காலைப்
பனியறச சோதி காலும் பரிதியு மதியு மேய்ப்பத்
தனியவ னருளா லொல்லை ஜபுறயீ லவணின் வந்தார். (1)

வேதநந் நபியே மீறு மெய்ப்புகழ் நபியே வாய்ந்த
சீதர மேக நீழல் சிறந்திடு நபியே தீனின்
மாதவ நபியே மனனும் வானவா நபியே யீறி
லாதிதன் னபியே கேண்மி னெனமொழி யருளிக் கூறும். (2)

எல்லையி லமரி யாரு மியானுமிப் ப்லியீ லுக் காக
வல்லவ னருளாற கட்டுங் கசசையும் மடிவே வியாவு
மொல்லையின் மறுத்தி டாதிங் கடைந்தன முமமோ டுறற
வில்லயிற் படையு நீரு மிருந்ததென் வெறிதி னம்மா. (3)

வெவ்விய தொழின டாத்தி நரகிடை வீழும் பாவம்
வவ்விய மனத்தா ரெனனும் பனீகுறை லாவென் போற்பாற்
செவ்விதி னெழுக வேணடு மெனறனா தெளியக் கேட்டுக
குவவினிற் சாமயை யில்லாக் குரிசிலு மழகி தெனறுர, (4)

தீனவர் தம்மை நோக்கிச் சிறந்தபா டலங்க ளோடுஞ்
சேனையு மெழுக வெனனச் செப்பலுங் கேட்டவ் வேந்த
ரானன மலர்ந்து சாறறும வளுநவ னழைத்து நீபோய்
வானதிர் முரசஞ் சாறறென் றுரைத்தலு மகிழ்ந்து போனன். (5)

நீண்டவள் வாரைச் செல்வே நேர்பெறக் கட்டியோதைத்
தூண்டும்பேர் முரசங் கூனற் றொறுவினிமேலேற்றி யேறிக்
காண்டரு முடிவில் லாத கடிமண மறுகு புக்கி
யீண்டின ரியாருங் கேண்மி னெனமொழி கூறிக் கூறும். (6)

வல்லவ னுண்மைத் தூதர் பனீகுறை லாவென் போர்பாற்
பல்லியம் பரம்பப் போருக் கெழுந்தனர் படைக ளோடுஞ்
செல்லுமின் னசறு பாதை வணங்குமின் செறுநர் போரை
வெல்லுமின் கிடையாக் கீர்த்தி வேண்டுமினென்னச் சொன்னான். (7)

மோட்டுமா முரசங் கொட்டி முறைமுறை யினைய சாற்றக்
கேட்டலும் பிரிய முற்றி யாவருங் கிளர்ந்து பொங்க
வாட்டமி னகர மென்னும் வாரியங் குடைத்து மீறி
வேட்டலுற் றெழுந்த தென்ன வெழுந்தது சேனை வெள்ளம் (8)

வீரமுந் தவமும் வாய்த்த மெய்மையு மறிவு நீதி
வாரமு நெஞ்சிற் கொண்டு வரும்புலி யலிமுன் வெற்றி
சாரும்வெண் கொடியொன் றேகச் சார்ந்தனர் தானை சூழ
வாரண நயினார் பின்ன ராகிதன் னருளிற் போனார். (9)

அருமறை யுணருந் தீனன் ஸாரிக ளெவருஞ் சூழக்
கருமுகி லிடியே றென்னப் பல்லியங் கலிப்ப நாளுந்
தரையிடை வணக்கஞ் செய்து நெற்றியுந் தழும்பு கொண்ட
மருமலி வாகைத் திண்டோ னமன்னவர் ஸகுதும் போனார். (10)

வேறு.

தெரிய னீகுறை லாசெறி கூட்டத்தைத் தேடிப்
பொருமஸ் ஹாபிமா ரியாவரு மொருமுகம் போதப்
பெருகுந் தூளியின் படலமுன் பிறங்குவ கண்டு
மருமலர்த் தொடை முகம்மதை விளவினர் மகிழ்ந்தே. (11)

வானவர்க்கர செமக்குமுன் றோன்றினர் வரிசைச்
சேனை யின்றிரள் செலவெழுந் துகளென மொழிந்தார்
கோனு வந்தவ ரகிஜிபித் துளங்களி கூர்ந்தே
யூன மின்றியப் பனீகுறை லாநக ருற்றார். (12)

சென்ற சேனையர் நபியருட் படியினர் சினந்து
மன்றல் சேருமந் நகரினை நெருங்குற வளைந்தார்
துன்று மந்நகர்க் கிறைவர்க டியாமனத் தூற்ற
வென்றி மேவிய ஹபீபினைக் கண்டிமே விளம்ப. (13)

நயமி குந்ததா னுபதி தமையவர் விடுத்தார்
தயவு கூர்தர முகம்மது நபிசாண் சார்ந்தார்
வயமி குத்தஅ பாலுபா னுவைமன் னருளாற்
பயமி குத்தமெந் நகருக்கென் னுடன்வரப் பணிப்பீர் (14)

இருவ ரும்மெங்கள் பனீகுறை லாவிடம் புகுந்து
பெருமை யாகிய மொழிசில பேசுதல் பேசிக்
கரும முற்றியா மீள்குவ மெனவவன் கழறப்
பருவ ரலுறு தாபாலுபா னுதமைப் பணிந்தார். (15)

வண்மை மிக்கஅ பாலுபா னுபனீ குறைலா
தண்மை பெற்றவந் நகரிடை சார்ந்திடக் கண்டு
பெண்மை மிக்கவ ரிளையர்க ளியாவரும் பெருத்த
கண்ம லர்ப்புனல் சொரிதர வழுதுளங் கரைந்தார். (16)

அழுதல் கண்டவர்க் கன்னவ ரன்புமிக் கானார்
குழுவ தாய்நிறை பனீகுறை லாமதி கூர்ந்து
பழுதி லாநபி தமைக்கண்டு நல்லுரை பகர்ந்து
வழுவி லாமொழி கேட்டவர்க் காளென வாழ்வோம். (17)

என்று கூறலுங் கேட்டவ ரிசைந்துநீர் நபியாற்
சென்று கண்டடி தொழுதுநீன் வழிபட றிறனு
மன்றி யுங்களுக் கருள்செய வுவந்திடா ரடாந்து
கொன்று தீர்குவ ரென்றனர் கோதறு மனத்தார். (18)

அன்ன வாசக நினைந்தும்நாம் நபிமொழி யன்றி
முன்ன மேபய முற்றவர் தங்களை முனிந்து
பின்ன மாய்க்கொடுங் கொலைசெய்வ ரெனவுரை பேசங்
னன்ன யத்ததன் றென்றுள நாணமுற் றெழுநதே. (19)

வந்து நின்றிடும் பனீகுறை லாவொடு மொழியா
தந்த மிஞ்சிய நபிபிடத் தணுகவு நாணிக்
கந்த முங்கிய செழூலர்க் கானமது துளிகள்
சிந்து சோலைசூழ் மதீனத்துப் பள்ளியிற் சேர்ந்தார். (20)

நாணும் பொய்யுரைப் பிழையினுற் பள்ளியி னடுவோர்
தூணிற் சாந்தனம் வணமுனு தேழுநாட் சுருதி
பூணு நேயத்தோ டுறுந்தஅ, விரந்திடும் போதிற்
காணு மாயத்தொன றிறங்கிய தெழில்ஹபீ பிடத்தில். (21)

நீது றும்படி றன்றவ ருரைத்தது திடமென்
ருதி நாயகன் மறைமொழி வந்ததாய்ந் தறிந்து
காத லாந்தவு பாக்கபூ லாயதென் றெண்ணிக்
கோதி லாமனத் திருத்தினர் நபியருள் கூர்ந்தே. (22)

எள்ள ருந்திற லபாலுபா ஞவின்ன தாக
வுள்ள நொந்தந்த பனீகுறை லாவொருங் கீண்டிக்
கள்ள மின்றியே ஹறபீற சூலினைக் கண்டு
விள்ள ருந்துயர் கூறிடமீண்டுமொள் விடுத்தார். (23)

வேறு.

இனியசீர் முகம்மதை யிறைஞ்சித் தூதுவன்
பணிநவி றுகளேமுன் வந்த வாண்டினி
னணிநக ரகன்றுகா னனுகு வீரெனுந்
துனியறு மொழியெம்பாற் சொல்ல வேண்டுமே. (24)

உடுத்திடு புடவையொன் றொழிந்தி யாவையுங்
கொடுத்துயிர் வனங்குடி கொள்ளு வோமெமை
விடுத்திடு மென்றவன் விளம்ப வேநபி
தடித்தவர்க் கிவ்வுரை சாற்றுவா ரரோ. (25)

இயாவரும் புகழ்சு லாத்தில் வந்துநீர்
மேவிய பொழுதல்லால் விடுவ தில்லெனத்
தாவரும் வாய்மொழி சாற்றச் சாரணன்
மாவலாய் நாங்களீ மாணி னண்ணலேம் (26)

செய்தகை காண்குவோஞ் சித்த மென்றவ
னுய்திற மின்றியே யுரைக்க அவ்விடத்
தெய்திய பனீஅவு சிவாக ணட்பிறைற்
பைதலுற் றிவ்வுரை பகர்த லாயினா. (27)

வேறு.

ஈர மிக்க நபியைத் தொழு தெம்பால்
வார முற்ற பனீகுறை லாக்கள் செய்
நேர மெங்களுக்காகப் பொறுத்தருள்
கூரு மாவிகொ டுத்திடு மென்னவே (28)

பாங்கு நின்றிவா கேட்ட பரிசிறைற்
றீங்கு கீர்த்தி நபியுமித் தன்மையை

யோங்கு முங்கள் இனையி லொருவர்பா
னீங்கி லாத நெறியினி கழ்த்துவோம். (29)

ஓது மன்னவர் சொல்லெனக் குண்மையாய்ப்
போது முங்கட்கும் போதும தோவெனக்
காத லாயவர் கொள்ள மஷூதுசொல்
லேதில் சஃதொடு சாற்றுவ மென்றனர். (30)

மெத்த நன்றென் றவர்கள் வியப்புக்கோ
தைத்த காயந் திகழ்தா சஃதுவை
முத்த மீன்ற முகம்மத ருட்படி
யத்த லத்தி லழைத்துவந் தார்களே. (31)

மகாது மைந்தர் வாஅுஸ் காபிகா
ளஃது நந்தலை வர்க்கறை வீரென
முகம்ம தோத முரண்டெவ்வர் செய்தியைச
சகுது வுக்கவர் தொற்றுபு சாற்றினர். (32)

சாற்று மம்மொழி கேட்டந்தச் சகுதுவ
மாற்ற மின்றி யீமான்வழி நின்றிலார்க்
கேற்ற மாமுற வேதின மேதவ
ராற்ற லேதரு ளேதற மேதரோ. (33)

அஞ்ச வாடவ ரைக்கொலை செய்தவர்
வஞ்சி மாரை மதலையர் தம்மொடுஞ்
செஞ்ச ஷூழியஞ் செய்வித் தவரொடொரு
ளெஞ்சு மாதுலாக் கிருந்திடல் வேண்டுமே. (34)

செய்யுங் காரிய மீதன்றி யேசெலும்
வைய மீதில் வழக்கொன்று மில்லெனத்
துய்ய சஃது சொலநபி யிவ்வுரைக்
கைய மில்லையல் லாவரு ளீதென்றார். (35)

எர்கு லாஅுஸ் காபிக ஞேக்கியே
வார மற்ற பனீகுறை லாவையிந்
நேர மேகொடு வாருமி னீரெனச்
சீர்கு லாவி திருநபி சேப்பினர். (36)

ஓது நன்மொழி யுட்கொண்டஸ் ஹாபிகள்
வாது செய்யும் பனீகுறை லாநகர்ப்
பேதை யாடவர் பிள்ளைக டம்முட
னேத முற்ற பொருளுங்கொண் டீண்டினார் (37)

அக்க ணத்தசு ஹாபிக ளும்மெழின்
மிக்க வாய்மை விளங்குமி யார்களுந்
தொக்க காபிர் தொகுதியுஞ் சூழ்வர
ஹக்கன் றூதங் கடிதெழுந் தாரரோ. (38)

கான மால்வரை யுங்கடி மாமலா
நான வாசங் கமழு நதிகளு
மீனு லாவு கழனியு மேவும
தீன மாகிய மாநகர் சேர்ந்தனர். (39)

வந்தி ருந்து பனீகுறை லாக்களைப்
பந்த மாய்ச்சிறை பண்ணிமி னென்றலுங்
கந்த டாந்த களிற்றசு ஹாபிகள்
சிந்தை கூர்ந்தறை யிற்சிறை செய்தனா. (40)

சிறைசெய் தோமெனச் சென்றவர் செப்பலு
மிறைகொ ளுங்கடை வீதியிற் சென்றொரு
சிறையி னிற்குழி செய்மினென் றுண்மையே
யிறைவன் றூத ரினிதி னியம்பினா. (41)

அறையுஞ் சோற்றலை மேற்கொண் டருநெறி
மறையி னன்முறை யேசெய மானபியோ
நிறையும் பீடிகை சென்றோர் நிலத்தியோ
குறைவி லாழ்ந்த கொடுங்குழி தொட்டனர். (42

ஆங்க வாறதி யற்றி யருமறை
யோங்கும் வண்மை நபிமு னுரைத்திட
வாங்கு செல்வ பனீகுறை லாக்கண்முன
நீங்கள சென்று நெருக்கப படுத்தியே. (43)

தோகை மாமதிச சூழ்ச்சியின் மைந்தர்கள
போக மற்றப புருடரைக் கூய்ப்பத
பாக மாய்ச்சிலை பத்தஞ்சு மாயகொணாந்
தோகை வேதத்துக் குட்படச சொலலுவீா. (44)

நாட்டும் வேத நவிலு முறைப்படி
வேட்டி டார்களை வெட்டிப் படுகுழிப்
போட்டி டும்மி னெனப்புகன் றெழில்
காட்டு மாமறைக் காரணத் தூதரே. (45)

கூறக் கேட்டுளங் கொண்டு மகிழ்ந்தெழுந்
தீறி லாதசு ஹாபிக ளீண்டியே
மாறு காட்டும் பனீகுறை லாக்களை
மீறு மாவண வீதிகொண் டேகினார். (46)

மாய மும்படி றுங்கொலை வஞ்சமு
மேய காபிரை நோக்கி யிறையவன
றாய வுண்மைச் சுருதி முறைப்படி
நேய மாங்கலி மாநிகழ்த் தும்மென்றார். (47)

மறந்தி கழ்ந்த பனீகுறை லாக்கள்கேட்
டறந்தி றம்பலே மாக்கந திறம்பலேஞ்
சிறந்த வெங்நெறிச் செய்கை தன்றியே
யிறந்து போகினும் வேறொன் றிசைகிலேம். (48)

என்று காபி ரியம்பிடச் சீறெழு
வென்றி செய்வய வீரரு ருத்துளங்
கன்றி நற்கலி மாவுரை யாரகளைக்
கொன்று தீர்த்து கொடுங்குழி வீழ்த்தினார். (49)

கடிந்த பேரைக் கணித்தெழு நீற்றினமேன
முடிந்த தாயிரத் துள்ளென்னு முனணிமேய
யடர்ந்த வாட்படைக் கையசு ஹாபிக
ணடந்த செய்தி நபிக்குறை செய்தனர். (50)

வேறு.

வாய்மைதவ றுதபுகழ் முகம்மதசு ஹாபிகடம் வதனநோக்கித்,
தூயநெறியில்லாத பனிகுறைலாப் பெண்களோடுஞ் சுதருங்கூட,
லேயதொகை யாகியதோ ராயிரத்தைம பதின்மரையு மினியகீர்த்தி,
மேயநசு தெனுந் தலத்தில் விற்றுறைவாட் குதிரைகொ மீண்டுள்ளி
னொன்றார். (51)

அம்மொழியின் படிசிலபே ரச்சிறைகொண் டத்தலத்திலணு கவிப்பாற், செம்மனபி பனீகுறைலாப் பொருணூலு பங்காக்கித் திரிபா றன்னே, வெம்மலைபோல் வாவுபரி நடத்துமவர் தமக்களித்து வீரவாட் கொண், டெம்மருங்குஞ்சூழ்ந்துநிற்குங் காலாள் கட்கோர்கூறு மீந்திட் டாரால். (52)

செல்வமுட னபியுமவர் சேனைகளுஞ் சூழ்ந்திரும்பச் செபுறயீ லும், வல்விரைவி னுடனெழுந்து வந்துசலாஞ் சொலிவணங்கி மறைவ லாய்கேள், சொல்வசனத் துவமையில்லா னறஷைத்தரு சபைசநதநின்று தூய்மை பெற்ற, நலவைாச வைவரோனு மவுததானதினறுளதோ நவி ல்வி ரென்றா. (53)

அன்னவரம் மொழியுரைக்க நபியிறசூல் மனத்தறிவா லாய்ந்து பார்த்தே, யுன்னியரு னுடனெழுந்தி யார்களசு ஹாபிகளு மொருங்கு சூழ, மின்னிலகு மயிலவடிவாள மஆதுமகன சகுது தம்பால் விரை விற் சென்று, மன்னுமிரு விழியானை புடனேக்கிப் பாரக்கவவா மவுத் தானால். (54)

அன்னநடைச் சின்னவிடை யாரநகைச் சாரமக மின்சேர் வாட்கட், கன்னன்மொழிப் பொன்னனையா ளிறைவைத்துக் கண் கழுமந்து மதறி யேங்க, வின்னன்மிகுந் தியாகனா னுறாபிகண் மற்றியாவாகளு மிரங்கி நிற்பப், பின்னமறச் செயுநேரடைக்கு முடிக்க நினைந்த தாரகத்தினை பெற் றியோரே. (55)

ஆரப்பரிசங் கவாதினைப்ப மைத்தாத்தி யிருந்தாந்தி ரமேனக கோடி, யொப்பமுற வந்தனை வருவதிகழ் மலக்குகளவந் துற்றாரேவதஞ், செப்புநெறிப் படியாக மலக்குகளு மசுஹாபித் திரளுஞ்சூழ, மெய்ப் புகழின் ஸஃது தனைத் தொழுவித்தா ரடக்கினித்தா ரேனைமையோரே.

பனீகுறைலாவதைப்படலம்-முற்றிற்று.

ஆகப் படலம் 38-க்கு-திருவிருத்தம்-2332.

———— —



# ஹுமா மீமான்கொண்ட படலம்.

மலக்குகளின்னுடைய நபிபிறசூல் மதீனநகர் வாழுநாளில்,
விலக்கரிய வருடமொரு நான்குநிறைந் தைந்தாண்டு மேவும்போதி,
லலகசுணுருச சுடரொளியா மல்லாவின் பணிவிடையா லவனி மீதிற்,
-றுலக்கமுற வந்த ஹஜ்ஜுபறுலான தினறு முதற்றொழுவீரென்றே.

தள்ளரிய மனத்தறிவுதனையகற்றி மெய்மயக்கந் தந்துநட்பா, யுள்
ளவரைப் பகையாக்கி யுரைப்பதிவை யெனவறியா துரைக்கப்பண்ணுங்
கள்ளுணவும் வெறிமதுவும் ஹறுமெனவா யத்து வரக்கண்டன் பாகி,
விள்ளரிய மறைப்பொருளைச சபிகுகளுக் குரைத்தெவர்க்கும் விளக்கி
னரே. (2)

விளர்பிநெறி முறைதவறு வெதயவணிருபப மிக்க நீதி, வளம்
பலவு முயர்ந்தபுகழ் வளர்ந்தகுண நிறைந்தவுலு மாமாண் டெய்தி,
யுளங்களிகூர்ந் தருளுநபி யெவனெனவே வினவவிரதோ வுற்று ரென்
னக், களங்கமற வருகிருந்தோர் சொலைநிந்துக் கண்டுசில கழறலுற்
றுண. (3)

பேசபுகழ் தோபுதுல் முத்தலிபு தனக்குரிய பேரரே, மாசற
வோர காரியதனைத் துடுக்காக வமைக்கேட்க மதித்தே தெனனமே, நேச
சமுற நீகோப மில்லாமற சொலவேண்டு நியமா மென்னத், தேசுற்ற
மெய் நபியவனை வேண்டுவன தேவொனவே செப்பினுரால. (4)

ஓதுமொழிக் கவருவந்த வுண்மைகண்டு நினறவிய ஹுஹுமாம்
சொல்வான், றீதிலா மறைப்பொருளாய்த் திகழொளியாய் நிறைந்த
அல்லா ஜெகத்தின மேற்றன், றாதரா யுமைபிருக்க வனுப்பினதுங்
காலமைதந் தொழுக வெனறுங், காதலுடன ஸக்காத்து நோன்பு
ஹஜ்ஜும் பறுலெனவே கழறு மைந்தும். (5)

மெய்யாமோசாதமெனி விறையவனைறன் மேலாணைவிளம்பு மென்
னப், பொய்யாத நபிவசன மைந்துக் கைகந்து தாமிறைமேற் புகன்று
ராணை, யையாநீர் சொனனதுண்மை யெனவுஹுமா மீமானிலாகி நெஞ்ச
மையாருங் குபிர்நீக்கிக் கலிமாவு மொழிந்து மறை வழிநின்றுரே. (6)

அன்னவர்தா முகம்மதைப்பார்த் தையாவென் செய்தியைக் கேளி யாரா ரென்னில், முன்னுமக்கு முலைகொடுத்த ஹலிமாவின் கிளையினு ள்ள முல்லைசேரா, மன்னுநெறி முறைதவறா பனீஸகுதுக் கூட்டத்தார் பலருங்கூடி, யென்னையும் துளமகிமை யறிந்துவர விடுத்தனரிய ணி வண்வந் தேனால். (7)

உண்மைநபி யெனவறிந்து கலிமாவோ தித்தொழுகை யுறுதி கொண்டு, தண்மையுறு நெறி முறைமை நன்மைதரு தூயதீன சமயமுற் றேன், றிண்மைபெறும் பனீஸகுதுக் கூட்டத்தா ரிடத்தினியான சென்று மிக்க, வண்மைபெற வவரையெல்லா மீமானில் வழிப்படுத்தி வருவிப் பேனே. (8)

என்பனநன மொழிபலவு மியம்பிநபி பதமலரை யிறைஞ்சி வாழ் த்தி, முன்பிருந்த பதிக்கேகி பனீஸகுதுக் கிளையி லுள்ளோர் முழுதும் வேத, தினபமிகுங் கலிமாவை யோதியிசு லாத்திலுற விணக்கினாருந், துன்பமற வொருபோதுந் தொழுகைவிடா முசிலீமாய்த் துலக்கி வித் தார். (9)

ஸுமாமீமான் கொண்ட படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-39-க்குத்-திருவிருத்தம்-2341.



## ஸையிநபு நாச்சியார் கலியாணப் படலம்.



அரிதுணர் ஸுமாமின் செய்கை யவ்வண மாக நீதி
தெரிதரு மிறசூ லல்லா சிறநதினி திருக்கு நாளிற்
பரிவுட னைந்தா மாண்டிற் பண்புறு ஸகுசென ரோது
முரியவன் மகளை வேட்டற் குற்றதோர் தூது விட்டார். (1)

தூயவர் விடுத்த தூதர் சொலுமுறை தவறி டாம
லேயெனும் பொழுதி னீதி யிலகிய ஸகுசு மாட
வாயிலி னெய்தி யன்னோன் வரத்தினால் வந்து தோன்று
நாயகி தம்மைக் கண்டு நலனுறு மொழின் சொல்வார். (2)

மருமணங் கமழ்ந்த ரூது மதுமழை பொழியுஞ் செய்ய
திருவெழிற் கமலப் போதிற் றிகழ்ச்சிறை யனமே மின்னே
பொருவரு மணியே பொன்னே பூவையே கிளியே மானே
தருமருக் கொழுந்தே தேனே தையலே யெவர்க்குந் தாயே. (3)

அன்பெனும் வித்திற் றோன்றி யறமெனுஞ் சடைகள் விட்டுத்
தன்புகழ் தழைத்துக் கற்பாந் தனிலமர் செறிந்து நாளு
மின்பமாங் காய்கள் காய்த்திட் டிறையருள் பழுத்த கொம்பே
தென்பயில ஸகுசு பெற்ற ஸெயினபு நாச்சி யாரே. (4)

பாரெலாம் புகழ வந்த பாவைமீ ருமதுசித்தந்
தேரலாந் தன்மை காணேஞ் செப்புமுத் தரமொன் றுண்டாற்
காரெழிற் குடையார் நானஞ் சமழ்திரு மெய்யா ரும்மை
வாரமாய் வஃலவைசெய்ய மகிழ்ந்துளம் வியந்தா ரென்றார். (5)

சொல்லுமம் மொழியைக் கேட்டுத் தோகையர் திலத மென்ன
நல்லகற் பலர்ந்த செல்வச் செயினபு நாச்சி யாரும்
வல்லவர் றூதி ரல்லா மறைமொழிப் படியே யன்றிக்
கல்லக ஞாலந் தன்னிற் சடிமணம் விரும்பே னென்றார். (6)

அவரவை யுரைத்து நாய னருள்பெறத் தொழுது வேறு
கவாற விருப்பத் தூதர் ஹபீபிற சூலைக் கண்டு
தவறற நடந்த செய்தி சாற்றிடக் கேட்டி வாது
மூவமையில் லானை யெண்ணி யுளமகிழ்ந் திருக்கும் போதில். (7)

திருந்திய ஜபுற யீலிச் செகதல மனைத்து மொன்றாய்ப்
பொருந்திறை றுகுறை யத்தைப் பொற்புடன் கொண்டு பாரிற்
பரந்திடு மிருளை யோட்டும் பானுவின் கதிர்கள் கோடி
விரிந்தன வென்னச் சோதி விளங்கிட நபிமுன் வந்தார், (8)

தேறிய றுகுறை யத்தின் செய்தியே தென்னி லல்லா
மீறிய அறுஷி லேதான் மிகுமொலி யாக நிறைறு
மாறிலா முதன்மையான மலக்குக ணால்வர் தாமும்
பேறுறுஞ் சாட்சி யாக வைத்தருள் பெருகிப் பின்னும். (9)

தருமமு மறிவு நீதித் தவமும்பெற் றுலகி லெய்தாப்
பெருமையும் பேறும் பெற்ற மலக்குகள் பெரிதாய்க் கூடி
யருமறைப் பொருளா மல்லா வருளிய படியெ வந்து
திருமணம் புரிதற்குள்ள சிறப்பெலா மகிழ்ந்து செய்ய. (10)

கலக்கமில் கடலைச் சீறிக் கடைதுடித் திரண்டு காது
மிலக்கென நடந்து மீண்ட விணைவிழிப் பவளச் செவ்வாய்த்
துவக்குவெண் டாள மூரற் றுடியிடைக் கரிய கூந்தன்
மலக்கமில் கூறல் ஹீன்கள வந்துநின் றேவல் செய்ய (11)

ஸெயினபு நங்கை யார்க்குஞ் செம்மலே யுமக்கும் நிக்கா
குயர்நிலை தனிற்செய் தாரென் றுரைத்தனர் ஜபுற யீனிந்
தயவுடனபியு மன்னோர் தமைமகிழ்ந் தன்பு கூர்ந்தார்
வியனுல கதனிற் சென்றார் விண்ணவர்க் கிறைவர்தாமே. (12)

வானவர்க் கிறைவ ரேக மனமகிழ்ந் துரிமை யான
தேனினு மினிய வின்சொல் ஸெயினபு மனையைநோக்கிப்
போனதோர் தூது மின்றிப் புகும்வழித் தடையு மின்றித்
தீனவர் போற்றும் வேதத் திருநபி யினிதிற் சென்றார். (13)

கந்தரக் குடையுஞ் செய்ய கமலவாண் முகமு மிக்க
சுந்தர விழியு நீண்டு துலங்கியகரமும் வாசக்
கொந்தலர் மரவ மாலை குலவிய புயமும் வாடாச்
செந்தளி ரடியும் பொற்பார் ஸெயினபுநங்கை கண்டார். (14)

அரியவன் றூத ரான அகுமதின் வடிவை நீண்ட
விருவிழி யார நோக்கி யிதயத்தின் மகிழ்ச்சி கூர்ந்து
திருவலர் வதன நோட்டிச் செவ்விய நிறைபோர்த் தல்லா
வொருவனை யெண்ணிக் கற்பி னிலைகியாங் கொருங்கு நின்றார். (15)

தென்றிகழ் மயிலை நோக்கிச் செபுறயீல் கொண்டு வந்த
நன்றிசேர் குருனு யத்தை நவின்றுமா ராயஞ்சொல்ல
வன்றவர் கிருபை யாகி யகமகிழ்ந் திவரோ டென்று
மொன்றிய மனமாய்க் கற்பி லுயர்ந்தவ ரென்ன வாழ்ந்தார். (16)

உற்றவத் தினத்தி லும்மு சலையுமென் றுரைக்கு நங்கை
பெற்றரு ளனசைக் கூவிப் பிரியமாய்த்தயிரு நெய்யும்
பற்றுற வருந்து மீத்தம் பழமுமொன் றாகச் சேர்த்துக்
குற்றமில் பாத்தி ரத்தில் வைத்திவை கூறு கின்றாள் (17)

மைந்தனீ ஸெயின பில்லின் முகம்மது நபிமுன் வைத்து
முந்தவென் சலாஞ்சொ லென்று மொழிந்தவன் றன்னை யேவக்
கந்தமார் மரவ மாலை கமழ்புயத் தனசு சென்று
சுந்தர நபியைக் கண்டு துலங்குபாத் திரத்தை வைத்தே. (18)

அருள் பெறச் சலாமுங் கூறி யன்னைதன் சலாமுஞ் சொல்லித்
திருமிகு புயத்தீர் யாங்கள் கொடுத்தது சிறியதேனும்
பெரியவு ளன்பாற் கொள்ள வேண்டுமென் றுரைத்துப் பின்னர்
அருமையி னொடுங்கி யஞ்சி யதபுட னின்றா னன்றே. (19)

நதியுடன் கனியு நெய்யுஞ் சார்ந்தபாத் திரத்தைக் கண்டு
மதிவலோ னனசைப் பார்த்து மகிழ்ந்தசு ஹாபி மாரைக்
கதுமென வழையென் றோதக் கடிநகர்முழுதுந் தேடிப்
பொதுமனை வீதி யெங்கும் புகுந்துசென் றழைத்து வந்தார். (20)

எய்தினர் செறிந்து முன்றி லிடத்தினிற் குழுஉக் கொண் டண்ட..
மெய்முகம் மதுவுங் கண்டு விருப்புற வனசைக் கூவி
நெய்யனை பலவொன் றாக நிறைத்தபாத் திரத்தைத் தூய
சைலநேர் புயத்தா ரார்க்குந் தறுகிடா தளிப்பா யென்றார் (21)

சொற்படி யவரும் வைத்தார் சுருதிமா நபிமு னின்ற
பற்பல பேரைப் பார்த்துப் பதின்மரோர் குழுவாய்க் கூடி
நற்கனி யருந்து மென்றார் நயந்தவ ருரைதப் பாமற்
பொற்புற செறிந்தி ருந்து புசித்துளங் களித்தெ ழுந்தார். (22)

முறைமுறை பதின்மராக மொய்த்திருந் தருந்தும் போதுங்
குறைவற வளர்ந்த தல்லாற் குறைந்தில கனிக ளொன்றுந்
துறைதவ றுமை லுண்டோர் தொகைதனை விரித்துக் கூறிற்
றிறனுற வருமுற நூற்றின மேலுஞ்சில் வான மென்பா (22)

அனைவரு மருந்தி னோரே மருந்தில ரில்லை யென்ன
மனதறிந் தனசைக் கூவி முகம்மது வரிவண் டார்க்கும்
புனைமலர் மகரந் தேனும் பொருவரா மென்மை நொய்ய
கனியுறு கலத்தை யென்முன் கடிதினிற் கொணர்தி யென்றார். (24)

பாத்திரந் தன்னை வந்து பார்த்துநின் றனசு முன்ன
மாத்திர மல்ல மென்மேல் வளர்ந்தன விதனை தீனர்
கோத்திர முழுது மாந்தக் கொடுப்பினுங் குறையா தென்று
தோத்திரஞ் செய்து வள்ள றனையடிக் கருகில் வைத்தார். (25)

கனிபுசித் துள்ள மெத்தக் களித்தசு ஹாபி மார்க
ளனியவன் றாதைப் போற்றித் தாஞ்செலச் சிறிது பேர்கள்
வனிதையின மனைதன் முன்றில் வாயில்விட் டகலா நிற்ப
வனையதோர் ஸெயின பென்போ ரகநிறை நிறையூண் டுற்றார். (26)

அப்படி யவரு நாணுற் றகத்துளே யிருப்ப மேலோன்
செப்பிய வாயத் தொன்று ஜிபுரியீல் கொணர்ந்தி றங்கி
யொப்பிலான் றாதா முன்ன ருரைத்தவர் விண்ணிற் சேர்ந்தார்
தப்பிலாக் குணத்தின றேஜ்ரா தங்களைத் தவமாய்ப் பார்த்தே. (27)

கோதிலா தொஜீவ னந்தின் றுவந்தவர் கூண்டிராது
போதுக ஸெயின மென்னும் பூங்கொடி மனது நாணி
யேதமுற் றிருந்த தாலே யிருநிலக் கிழமை பூண்ட
மாதர்க ளெவர்க்கு நாண மணியணிப் பூணு மென்றார். (38)

வந்த ஆயத்தின் செய்தி வகையிவை யென்ன வள்ளல்
சிந்தைகூர்ந் துரைப்பக் கேட்டுச் சிறந்தசீர்ச் சகுபி மார்கள்
புந்தியிற் பெரியோன் றன்னைப் போற்றிப்பி னபியை வாழ்த்தித்
தந்தமக் குரிய வில்லிற் புக்கினர் தகைமை சார. (29)

ஸெயினபுநாச்சியார் கலியாணப்படலம்-முற்றிற்று.

ஆகப்படலம் 40-க்குத்-திருவிருத்தம்-2370.



# ஒட்டகை பேசிய படலம்.

விரைதரு மரவ மாலை வெற்பெனத் திரண்ட தோளி
னிரைதரு பவளக் கொத்தி னிறந்தரு கனிவாய் வேத
முறைதரு தீனா வாழ்க்கை யுபாதர விளங்கு நீதி
தனைதர நபிநற் செல்வர் தழைதர விருக்கு நாளில். (1)

திருவளர் மதீனந் தன்னிற் றிகழ்ந்தநம ஸஹுபி மாரி
லொருவர்தம் மகத்து வாழு மொட்டக மதமுற் றென்னப்
பெருவலிக் கயிற்றுற் காலிற் பிணித்ததை யறுத்துச் சீறி
மருமலர் செறியுஞ் சோலை வளாகத்திற் புகுந்த தன்றே. (2)

மாமர முறித்துச் காய்த்த மதுக்குலை யரம்பை தள்ளிக்
காமர முரலத் தேறல் கமழ்மல ரசோகை முட்டிச்
சேமர மசைத்துக் காய்த்துச் செறிந்திடு கமுகை யெற்றித்
தேமரச் செறிந்த சோலை துகள்படத் திரிந்த தன்றே. (3)

செறிவனக் காவ லாளர் செறுக்குமொட் டகையை யாமே
குறுகுற வடுத்துப் பற்றிக் கொள்வமென் றருந்துச் செல்ல

வெறிதரு மதத்தாற் பேழ்வாய் மிகத்திறந் துருத்துப் பொங்கிக்
கறிதா வருதல் கண்டு கலக்கமுற் றியக்க மற்றே. (4)

புடைவரப் பயந்து நொந்து பொருமலுற் றயர்ந்து வாடி
யிடைபடுங் கருத்தி னோடு மிருமாக் காவை யெல்லா
முடைபட முறித்த சோகை யுடற்றுதற் குரிய வியாரென்
றிடருழந் துருகி யஞ்சி யென்செய்வோ மென்ன நின்றார். (5)

வஞ்சனை மதியா வென்றி முகம்மது நபியைப் போற்றிச
செஞ்சரண புகுவோ மன்னோர் தீரப்பாச் சோகி னுற்றற்
றஞ்சலா மஞ்ச லென்னத் துவன்றிமஞ் சுறங்குஞ் சோலை
யெஞ்சலி லாத காவற் கிடருறா தென்ன வுன்னி. (6)

ஓடினா சலாஞ்ச லாமென் றுரைத்தனர் பலரு மொன்றாய்க்
கூடினர் நபியே யேத்துங் கொற்றவா யாங்க ளுளுந
தேடிய பொருளே யென்னச் சென்னிமே லிரண்டு தாளுஞ்
சூடினர் நடந்த செய்தி சொல்லினா மகிழ்ந் தெழுந்தே. (7)

நடந்தனர் பதந்தோ யாம னண்ணினா குடையாய் மேகம்
படர்ந்தன வேதமெங்கும் பரந்தன நான வாசந
தொடர்ந்தனர் ஸகுபி மாரக ளுதித்தன ரமா ரஞ்சிக
கிடந்தன குபிரா சோலை கிட்டின ரிறைவன றூதர். (8)

ஆய்சிறைத் தூவிப் புட்க ளனைத்துமொன் றாகக் கூடி
வாய்திறந் தாற்று மோதை முகம்மது நபியே யெம்மைத்
தாயென வளர்த்த சோலை தனக்குறு மிடரைத் தீர்க்க
வேயருள் செய்வி ரென்ன விளம்புவ போலு மன்றே. (9)

அத்திரி யலைத்த கொம்பி னலர்களி னறவ மார்ந்து
மொய்த்திருந் தெழுந்த தும்பி முரன்றெழுந் தயலிற போதல
சித்தநல குறவே நாளுஞ் செழுநிதிக் குவைக ளலகும்
வித்தகர் தளர வுள்ள மெலிந்தயா சசரைப் போலும். (10)

தளிர்களிற் புனலும் போது தனிலுறு மதுவும் வாடை
வளியலைத திடவே யெங்கும வார்ந்தெழுந் தொழுகுந் தோற்ற
மளியினுக் கிருபபா னையயா வத்திரி யலைத்த தென்று
துளிதுளி யாகக் கண்ணீர் சொரிந்துகா லழுதல் கோலும். (11)

சோகுசென் றலைப்ப மாழ்கித் துயருறும் பொழிலைக் கண்டு
பாகுற விருந்தவ் வாவிப் * பாங்கியா லலக்க ணெய்தி
யேகுறுப் பயங்கொண் டேங்கி யிருஞ்சிறைக் குள்ளா யுள்ள
மாகமுந் தெரியா வண்ண மடைபடக் கிடந்தா லொத்த. (12)

இவ்வண்ணஞ் சோலையெல்லா மெய்திய வருத்தங் கண்டு
மைவண்ணக் குடையா ரந்த மருமலர்த் தடவை புக்குக்
கைவண்ணங் காட்டிச் சோகைக் காத்தருள் செய்து பாரிற்
செவ்வண்ணப் படுத்த வெண்ணிச் சிறப்புடன் வருக வென்றார். (13)

பருப்பத நடக்கக் காலும் படைத்திரு கண்ணுங் கண்ணி
னெருப்புமந் நெருப்புக் கொத்த நெஞ்சமு நெஞ்சில வேறே
விருப்பமும் விருப்ப மில்லா மேனியு மேனிக் கொவ்வாக்
கருப்பிடித் திறையோன் வைத்த கழுத்துங்கொண் 0 டெழுந்த தன்றே

வந்தவர் வதனக் கஞ்ச மலரைக்கொண் டுருகா நின்ற
சிந்தனை யுருகிக் கண்ணீர் சொரிந்திட வழுது நீண்ட
கந்தர மொடுக்கி முன்னங் காலினை மடக்கி வாலை
விந்தையா யசைத்துப் பாத மிசைச்சுழன் றிட்ட தன்றே. (15)

கருத்துற வயர்ந்து நொந்து கவலையுற் றுடம்பு வாடி
வருத்தமு முயிர்ப்பு மெய்தி வணங்குமத் திரியை நோக்கித்
திருத்தகு மிறசூ லுல்லா சேர்ந்துனைப் பிடித்துக் கட்டப்
பொருத்தமாய் வந்த பேரைப் பொருந்தத்தன் னுரைநீ யென்றார். (16)

---

* பாங்கியி னலக்க ணறிந்து தானு மலக்க ணெய்தி வெளிவராம லச்சங்கொண் டிரங்கிப் பெரிய காவலிடத் துள்ளடங்கித் தன்னுள்ளமு முடலு முணாவிற் றேறாத வண்ண மடைத்துக் கொண்டிருந்தவளைப் போலப் பக்கத்திலிருந்த தடாகம், தோப்பினுடைய வுலைதலைக் கண்டு அலைதலுங்கொண்டு மறுப்புறம் பெயராதாய நீத்தன்மையி னொலித்துப் புடைபெயராது கட்டுப் பட்டுள்ளடங்கி வானந் தெரியா வண்ண மொட்டகை பறிதெரிந்த தன்மைகளைப் போதத்துக் கிடந்த தென்று பிறிமொழிச் சிலேடையு முவமையுங் கொள்க.

0 இவ்வனைத்தும் படைத்துக்கொண்டு பருப்பத மெழுந்ததென் றுணர்க.

இடருறு மனத்த தாக வெழுந்தவொட் டகைமெய்ப் பாசத்
துடரறுத் துலக மெல்லாந் துலங்கிய தீனர் வேதப்
படர்கொழுங் கொம்பாய்த் தனமம் பழுத்தநற் றருவா யன்புக்
கடலெனக் கருணை செய்யும் ஹபீபுற சூலைப் பார்த்தே. (17)

ஐயனே யடியேன் றன்னைத் தொண்டவான் டவனுக் கன்பாய்ச்
செய்யுமூ ழியங்க ளோவா தாண்டுநாற் பதுஞ்செய் தெய்த்து
மெய்யெலா மெலிந்து காலின் விரைவற்று நெஞ்சு போகக்
கையற லடைந்து வீழுங் காலமாய்த் தளர்ச்சி யுற்றேன். (18)

அவரது குறித்தி டாம லடித்தடித் தென்னை மேலு
யௌவனகா லத்துத் தாங்கும் பாரமே யேற்றித் தின்னக்
கவர்மரத் திலையும் புல்லுங் கால்வயி றளித்துத் தண்ணீர்த்
தவனமுந் தீரந்தி டாமற் றறுகண்மை செய்ய லுற்றார். (19)

ஈதலா லவர்க ளுள்ள மிரங்கிடா தென்னைக் கொன்று
மேதையை யருந்த வெண்ண மியந்தனா ரியந்து நிறை
காதலை யறிந்து காலிற் கட்டிய பிணிப்பை வீழ்த்திப்
பாதவச் சோலைபுக்குப் பதுமெத முளங்கொண் டேனை. (20)

மண்டிநின் றெதிரே போய வந்தவர் தம்மை யெல்லாந்
திண்டிறல் செயதி யானை நிரிந்தன ரிரிந்த தெல்லாங்
கண்டுத வுலக மீது கலக்கமுண் டாகின் ஞாய
முண்டெனு மவாதனைத் தன்னை யுணர்ந்து தென்றற் றன்றே. (21)

கேட்டவா றனைபு கூர்ந்து கருணைசெய் தத்தனை யாள
வேட்டவர் தம்மைக் கூவி மெலிந்தவொட் டகைதன் மெய்யைப்
போட்டுயிர் போகு மட்டும் புனலுட னிரையு நல்கி
யீட்டிய சுமையு நொய்தாய்ப் பொருத்துவ தியற்கை யென்றே. (22)

பரவுமத் திரியை யனஞோ பாற்செலப் புகுத்தி நின்ற
புரவலர் தமமை நோக்கிப் புள்ளின முரலுந் தாய
மரவமா லிகையு நான வாசமும் விரவி மாறு
விரைகமழ் புயத்தீ ருந்த மேன்மையார் வகுக்க வல்லார். (23)

அறிவிலா நெடுங்க ழுத்தா கறிவளித் ததனைக் காத்தீர்
நெறியுளீ ரெனைப் போற்றி நிசழ்த்தினர் ஸஹாபி மார்கண்
மறிதிரை யுடுத்த பாரில விளம்பெறப் பரந்த வேதங்
குறிகொளாச் சினைகண் மற்றக் கொஞ்சமா னடந மல்லால். (24)

கல்லுடன் மரமும் பூடுங் கருதிய விலங்கும் புள்ளுஞ்
சொல்லிய வெவையு முண்மைத் தூதனென் றறியு மென்னை
மல்லுறழ் புயத்தீ ரென்ன மகிழ்ந்தவர்க் குரைத்து வள்ளல்
செல்லினந் தவழு மாடத் திருநகர் புகுந்தா னன்றே. (25)

ஒட்டகை பேசிய படலம் முற்றிற்று.

ஆகப்படலம் 41-க்குத் திருவிருத்தம் 23-95

——(*)——



# மழை யழைப்பித்த படலம்.



முனிவர ஹலிமா நல்கு முலையுறு நறும்பான் மாந்திடப்
பணிமதிக் கருணை செய்து படவரை யுரைத்துப் பேசுரு
தனிமுதற் றூத ராகு மாண்டினிற் றசைகளைப் பெற்ற
வனைகழல் ஸகுபி மார்கள் வழுத்திட விருக்கு நாளில். (1)

சீர்த்திசேர் வள்ளல் வெள்ளிக் கிழமையிற் குத்து பாவி
ஸார்த்தெழுந் தோதி மின்ப ரதனிடை யிருக்கும் போதிற்
கூர்த்தசீர் ஸகுபி மாரிற் குறைகழ லசுலைக்கு வென்போர்
பார்த்திவர் தம்மைப் பார்த்துப் பரவிநின் றினைய சொன்னார். (2)

மாருநீர் வறந்து சோலை பாயிலை யுதிர்ந்து மிக்க
பாரினி லெழுந்த பைங்கூழ் பசையழக் கருகிக் கானற்
றேரினம் பரந்த பெற்ற சிறாகளுக் குணவு நல்கும்
வாரிள முலைப்பால் வற்ற வருந்தினா மடவா ரெல்லாம். (3)

தருமமுந் தவமு முள்ள தயவும்போ யெவருங் கொஞ்சக்
கருமமுங் களவும் பாக காரிக ளேறவுங் கொண்டு
வருவிருந் தொருவன் வந்தால் வாயிலை யடைத்துத் தூய
வரிவையர் தமக்கு நாணி யாண்மைகெட் டலைந்தா ரன்றே. (4)

கருமைசேர் பெரிய மேதி கபிலையு நறும்பால் வற்றி
யருமையா யீன்ற கன்றும் வாலுகை தனிற் செல்ல
வொருவழி நடப்பக் காலக ளுதைக்கா லடிப்ப மாழ்கித்
தெருவழி கிடக்கும் வாட்டஞ் செப்புதற் கரிய தம்மா. (5)

பறவைகள் பறக்கி லாது பழுவங்க ளடுக்கு மங்கு
நிறைதளி ரிலாமை கண்டு நெட்டுயிர்ப் பெரிந்து பாரச்
சிறகினை விரித்துத் தண்ணீர் தேடிச்சென் றோடி விண்ணி
லுறைதுளி யின்றி நாவு முலர்ந்துமெய் யுலர்ந்த மாதோ. (6)

மருதநன் னிலமு பாலை வனமென வுலர்ந்து வாவி
பெருகிய கூவலோடை பிறங்குநீர் வறந்தி யாதும்
பருகநன் னீரு மின்றிப் பசிமிகுத் தழகு குன்றி
யரிவையர் கற்பு மின்றி யகலிட மெலிந்த தன்றே. (7)

வேறு.

ஊனற மெலிந்து புலால்பொலிந்து திருந்த வுடலமு மென்புரு வாகி. மேனியி ரொளிபோய்க் கரங்கடா ளதைத்து மெலிந்திறந்தனர் சிலர் சிலபேர், கூனியுங் குறைந்துந் திருந்தடை கிழுங்துங் கொணர்ந் தவித் துப்பறப் பிசைந்து, கானினி லலைந்து திரிந்தனர் சாமகாலமு மிருந்தன வென்றே. (8)

வேறு,

திருத்தமா யுரைப்பக் கேட்டுத் திருநபி யிரங்கிப் பாரில்
வருத்தங்க ணீக்க வேண்டி மனத்தினிற் கிருபை மீறிப்
பொருத்தரும் புறக்கான வேதப் பொருளினை யெவருமுள்ளத்
திருத்தரு மொளியை யுன்னித் துஆவிரந் திருகை யேந்தி. (9)

இறைவனே மறையின் வாழ்வே யெங்கணும் பரந்து நின்ற
குறைவிலாப் பொருளே சோதி குலவிய வொளியே நீதி
முறைகுறை வறநின் றோனே முதல்வனே யழிவில் லாம
னிறைசெழுஞ் சுடரே யென்று நிகழ்த்திடக் கிருபை செய்தான் (10)

வேறு.

அகமிரை யிருந்து புயத்திடக் கிடையா தாகுலமிகுத்துளங் கலங்கிச், செகதலமுழுதுந் திரிந்தலைந் தவர்க டிரவியக் குவைபல வெதிர, விகறறவெடுத்து மனைமிசை புதைத்தோரிதயங் கையபங்களிப்பென்ன, மகிதலமுழுதுந் துதிசெயக்கரிய மழைமுகிற் கருவுதித்ததுவே

வேறு.

ஆதியினருளி னல்வந்தருள்செயு முகிலாம்பிள்ளைத்
தீதறு திசையிற் றோன்றிச் செழுங்கிரி தவழ்ந்து விண்ணில்
மீதுற நடந்து காலால் விரைந்துசென றோடிக் கூடிக்
காதல்சேர் நிலத்தை நாளுங் காத்திடச் செறிந்த தன்றே. (12)

வேறு.

அலையொடு தழுவிச்சூன்முதிர்ந் தெழுந்தே யழகுல விளங்குமை மாரி, தலைமக வளிக்கத் தாய்மனைக் குற்ற தனையன் போற்றரைமிசை படுத்துக், குலவிமெய் பதறிப் பயமிகுத் ததிர்ந்தகுர லொடு மின்னி வாய் வெருவித், துலைவற வுறவாண் மகவளித் ததுபோற் சொரிந்தது குளிர்ந்ததந் நிலமே. (13)

மின்னுட னிடியு முழக்கிடத் திகிரி மிசைதிரி கதிரவன்மறைந்து, பின்னிட விரவும் பகலினுமிருளே பிறங்கிடக் கலங்குநீர்பரந்து, முன் னிடநதிக ணிறைந்துமே லெழுந்து மோதிடச் செறுக்கரை தகர்த்து, மன்னிய விருமால் வருத்திடுங் காலை மடையுட னெடுத்தெரிந்தனவே.

வேயினை முறித்து வெடித்தமுத் தனைத்து முல்லையம் புறவினுக் களித்துத், தூயநெய் தயிர்பால் கடத்துட னெடுத்துச்சடுநிலப் பாலை யிற் செறித்து, நேயபைந்நாக மணியினை மருத நிலத்தினிற் றொகுத்து நெற் குவிமேற், போயதை நெய்தனிலத்தினிலிட்டுப் பைப்புணரியிற் புகுத்தின வெள்ளம். (15)

வீடுக டிறந்து வெளியிடை புகுந்துவேண்டுவ திவையென விரும் பித், தேடுவதேடிச் சமைத்துண வரிதாய்ச் சிறார்மனை தொறுமிருந் தல றப், பாடுறு பசிகண் டவரனை மார்கள் பயோதரந் தனைமுனிந் தினி மேற், கேடறு மழைதா னுலகெலாம் பெய்து கெடுத்திட வந்ததென் றுரைப்பார். (16)

நளிர்புனல் பரந்து தலைக்கடை கடந்துநலந்தரு மனைப்புறஞ்செறி யக், குளிருடன் வாடைக் காலுள்வந் தடிப்பக்கொழுந்து விட்டெரிகன றழுவி, வெளிவரவரிதா யிருந்தவரலது மெலிந்தவ ரிளைஞர்களெவரு, மொளிவிடு நகைகள்கிடுகிடென முடிப்பறைற் படபடவென மிடைவார்.

காற்றொடு குளிரு மடிப்பதாற் றொறுக்கள் காடெலாங்கிடந்துயிர் விடுப்ப, வேற்றமா யயங்கள் கயம்புகக் கமலை மிழப்பன வெண்ணிறந் தனவா, லாற்றினைக் கடந்தோ ராறுசெல் லரிதாயாரிரு நாண்மழை பெயலால், வேற்றொரு நகர்க்குஞ் செலவரி தாகி மெலிந்தன வுலகினி லெவையும். (18)

பிறந்ததீ விருட்டிப் பொழிந்தனவுலகம் பேதுறற்றணிப்பதற் கினிமே, லறந்தவா வாய்மை முகம்மதேயன்றி யாற்றுதற் கியாருளரென்

ணச், சிறந்தசு ஹாபிமார்களி லொருவர் சிந்தைகூர்புகர் தினமதனி, னிறைந்திடு மொழிசேர் குத்துபாவோது நேரத்திற்சென்றடி வணங்கி.

தருமமுமறிவு மொழுக்கமும் பொறையுந் தயவுமோர் வடிவென வெடுத்தே, வருதிருநபியேபிருசது தினமாய்மழைபொழி தரநிலவலை யம், வெருவரல் பெரிதாய் மெலிவது தவிரமேன்மையும் வளமையுங் கொடுக்கக், கருமுகிலகத் துஆச்செயு மென்முர் ஹபீபிற சூலவனை செய்தார். (20)

நன்மைநளெவர்க்கு நடந்திடவந்த நபிதுஆச் செய்திடாமுகிலுந், தென்வரை முதலாம் வரைகளிற் புகுந்த தினகான்விசும்பிடை செறிந் தான், புன்மா முதலா மானுட ரீருய்ப்புவியினி லுயிருள வனைத்துந், தன்மமு நெறியுந் தவறிலா தீனர் குலமெனத்த ழைத்துயர்ந் தனவே.

மழையழைப்பித்த படலம்-முற்றிற்று.

ஆகப்படலம்-42-க்குத்-திருவிருத்தம்-2416.

---



# அந்தகன் படலம்

---

தாரணிமுழுதுந் தீனெனும்வழியே தான்வரவருள்புரி வள்ள
லாரணமறைசேர் ஸகுபிகள் பரவ வரசுசெய் திருக்குமந்நாளிற்
காரணமெவருமுணர்த்திடக்கேட்டுக் கருதியோர்பிறவியந்தகனும்
பூரணக்கிருபைக்கடலெனுநபியைப் போற்றிநின்றவரடிபுகழ்ந்தே. (1)

வேறு.

தாயமுக மறியேன் பெற்ற தனயரை யறியேன் றந்தை
மேயதோர் வடிவங் காணேன் மின்னிடை மடவார்முன்னம்
போயவர்நகைக்கப்பெற்றேன் புறத்தொரு பொருளுங்காணேன்
றாயவ வெவையுங் காணத் துணைவிழி தருவி ரென்றான். (2)

வேறு.

கல்லடர்ந்த புயத்து ஹபூபெனும்
நல்ல வாய்மை நபியவன் றன்னைநீ

யொல்லை யிற்சென் றுளுச்செய்து மாமறை
சொல்லி ரண்டிறக் ஆத்துத் தொழுதபின். (3)

வாய்மை நீதி நபிபறக் கத்தினா
னாய னேயென் னயனந் தருதியென்
றேய வண்மை துஆவிரந் தாயெனிற்
றாய கண்க டிலங்குமென் றோதினார். (4)

அந்த நன்மொழி கேட்டிசைந் தந்தகன்
சிந்தை யார மகிழ்ந்துளுச் செய்திறை
தந்த வேத முறைப்படி தான்றொழு
தெந்த நாளு மிலங்குஞ் சுடரினை. (5)

உன்னி யோதித் துஆவிரந துண்மையின்
மன்னு மாநபி தம்பறக் கத்தினா
லினன றீர வினைவிழி யீதியென
றன்ன வாய்மையி னோடறைந் தானரோ. (6)

மற்று வமையில் லானல வரத்தினாற்
குற்ற முற்ற விழியுங் குவளையை
வெற்றி கொண்டு விரைமலாப் பூப்ப
முற்றொரு துங்க வுதித்த தெழுந்ததே. (7)

மனறி லனனை தாவரு நாண்முக
லனற ளவுக்கு மநதக னாவ
னினற கண்வரப் பெற்றெதி ரீங்கிய
கனறு கண்ட கபிலையொல் பாயினான. (8)

பாங்கி னின்று நபிபதத் தாமரை
தாங்கிச் சென்னி தனில்வைத்துக் கைகளா
லோங்கு கினற சலாமுரைத் தன்னவ
னீங்கி டாத நெடுநகர்க் கேகினான். (9)

திரைசெய் வாரித் திசைசெறிந தீண்டிய
வரசர் போற்றிய ஆல நபிமறை
யுரைசெய் தோங்கு முயர்புக ழியாவரும்
பரவ வாழ்வி பரிநதுறு நாளினில. (10)

உந்து தீவினை யூழ்வலி யாலுள
நொந்த யாவுற் றியாதனை நோயினாற்
சிந்தை வாடு மொருவனோர் தேமலர்க்
கொந்து லாவு புயனைமுன் கூவியே. (11)

ஏய நோயிலி யான்படும் பாடெலாந்
தூய ராம்பய ஹாம்பர்க்குச் சொல்லென
மேய தூதன் விரைந்துசென் றன்னவர்
நேய பாத மிறைஞ்சிநின் றேத்தியே (12)

மேக நோவு மிகுத்து வெளுவெளுத்
தாக முற்று மனலெனக் காந்தி நீத்
தாக மீறித் தவிடபு மிளைப்புமாய்த்
சோக மெய்தித் துயரிற் றுளங்கியே. (13)

தடைய ருப்புன றங்கிய வேரியின
மடைதி றந்து வரும்வணம் போலவு
மிடைவி டாது சொரியினு மீடுபட்
டுடையும் பாண்டத்து தகமு மாகியே. (14)

உரதனை யாற்றியுள் ளூனை யுருக்கிக்கா
தரத்தை நலகுளு சலக்கழிச சற்பிணி
வருத்த வைகலும் வாடி மயக்கமுற
றொருத்த ஞாவியுண் டில்லையென றோய்ந்தனன். (15)

வைய மீது மழைகுடை யாய்வரப்
பைய ராவு பகாக் கிருபைசெய்
ஐய னேயவ னுருயிரக் கின்னருள்
செய்ய வேண்டு மெனமொழி செப்பினான். (16)

இன்ன வாசகங் கேட்டித யம்மகிழ்ந்
துன்னி யறப்பமண் ணள்ளி யுமிழ்ந்திதை
யன்ன நோயற கருளென றளித்தனா
பொன்னின வாகழல் போற்றிகொண் டேகினான். (17)

உயிர்த ருபமருந் தாமென் றுதவநோய்
பயிலு மன்னவன பார்த்து மறைநபி
செயிரி ராளினைச் சிந்தித்து நோய்செயுந்
துயர மும்பய முந்துரந் தேகவே. (18)

அண்ணல் வாயுமிழ் நீரோ டளித்திடு
மண்ணை நீரிற் கரைத்து மனத்தில்வே
றெண்ண மின்றி பிசுமி லுரைத்தெடுத்
துண்ண நல்லுரு வெய்தின னுண்மையோன். (19)

அந்தகன் படலம்-முற்றிற்று.

ஆகப்படலம் 43-க்குத் திருவிருத்தம் 2435.



## கவுலத்தை விட்டுக்கூட்டின படலம்.



விள்ளரும் பிணியு நீங்கி வெற்பெனப் புயங்கள் பாரித்
துள்ளமும் வியப்ப தாகி யுற்றவ னிருப்ப விப்பாற்
றெளிய மறையு ளாய திருநபி முகம்ம தென்னும்
வள்ளலதீ னோர்கள் போற்ற மகிழ்ந்தினி திருக்கு நாளில். (1)

வானிடை கிராணந தீண்ட முகம்மது நயினா கண்டு
தீனவர் குழுக்கொண் டண்டச செனறுபள் ளியினவாய் நண்ணி
யீனமி லொளியாய் வேதத் துள்ளுறைப பொருளா யெங்குந்
தானென நின்ற ஹுக்கன் றன்னையே தொழுது நின்றார். (2)

தொழுதபி னவரை நோக்கித் துனிமிகுந் துலக மெல்லா
மழையற வறந்த போதும் வானகத் துதித்தெந் நாளுங்
கிழமைசேர் சுடர்கட் குற்ற கிராணகா லத்து மிக்காய்ப்
பழுதிலா தவனை நோக்கிப் பண்புடன் றொழுமி னென்றார். (3)

அம்மொழி கேட்டெல் லோரு மகமகிழ்ந் திருக்கு நாளிற்
செம்மையு மறிவு மிக்க வாயிஷா வெனனுஞ் செல்வி
மும்மையு முணர வல்ல முழுமதி பிறகு லுல்லா
தம்மைநீ ராட்டும் போதிற் சாரந்தனள் கவுலத் தன்றே. (4)

இறையவன் றூதே செல்வ மிலங்கிய கோவே வேத
மறைபடாக் கொம்பே யென்ன வணங்கிவாய் புதைத்தொ துங்கிக்

கறையற மாளிக் கீன்ற கவுலத்து யானென் றென்னை
யறைகழல் ஷாமித் தீன்ற அவுசினுக் களித்தா ரன்றே. (5)

இளமையு மெழிலுஞ் செல்வத் தியற்கையுங் கிளையு மிக்க
வளமையு முற்று மேனாண் மகிழ்ந்தினி திருந்தோ மன்பா
யுளமகிழ் தனையர் தோன்றி யுரியவா லிபமு மாறி
யளவிடற் கரிய வாழ்வு மழிந்திட மெலிந்த பின்னர். (6)

சீற்றமும் பகையும் பொல்லாச் செய்கையு மன்றி வேறு
மாற்றமொன் றுரையா தில்லின் வருந்தொறும் புலிபோற் சீறிக்
கோற்றொடி யாரை நோக்கிக் கொழுநர்க ளொருகா லத்துஞ்
சாற்றரு முறைகொண் டென்னைத் தாவென வுரைத்தார் மன்னோ. (7)

ஆதலா லவரு மென்னை யகன்றன ரவரை நாளுந்
தீதற வகன்றேன் பெற்ற சிறுவரும் பசியான் மிக்குப்
பேதுற வடைந்து நொந்து பிதாவென் வடுத்தா லுள்ளக்
காதலாற் புரவா ரியானுங் காக்கவோர் வகையு மற்றேன். (8)

மைந்தர்க டுயரு மெனறன் வருத்தமு மவர்சூழ் சொன்ன
பந்தமு மகல யாங்கள் பண்டுபோ லிருந்து வாழத்
தந்திர முளவோ வென்றாள் நபியவ டனை நோக்கிக்
கொந்தலர் குழலா யெம்மாற் கூட்டுத லரிய தென்றார். (9)

அதுமதாண் டுரைத்த வார்த்தை யகமதி னூடே காய
மகவுக டம்மைப் பார்த்து வாய்திறந் தழுது நொந்து
சகதல முழுது நின்ற தனிப்பெரும் பொருளை யுன்னி
யிகலறு மொழிகள் கூறித் துஆவிரந் திரங்கி நின்றாள். (10)

இப்படி யிரங்கி நிற்கு மெல்லையி னுனை வாச
மெய்ப்படு மிறசூ லுல்லா விரும்பிநீ ராடு முன்ன
ரொப்பிலா னருளி னாலே யும்பரி னிருந்து நீதி
செப்பிய வாயத் தொன்று திகழுற விறங்கிற் றன்றே. (11)

அழுதுமெய் பதறி வாடி யலமரல் மிகுத்துக் கண்ணீ
ரொழுகநின் றுருகு வாளை யுவந்தரு களைத்துக் கற்பின்
வழுவிலாக் கொடியே நின்றன் மணமகற் கொணர்தி யென்றார்
தொழுதவள் மகிழ்ந்து சென்று தூதாமுன் கூட்டி வந்தாள். (12)

வரவவர் தம்மை நோக்கி வந்தவூ யத்திலுள்ள
வுரைவழு வாமல் வள்ள லுரைத்தன ரவனி மீதிற்
புரையதரு கோபந் தன்னாற் புருடர்கள் மனைவி மாரை
வரையறத் தாய்நீ யென்று வழுத்துந்தீ தகற்றவேண்டில். (13)

அடிமைகொண் டுரிமை யாக விட்டிட லவையின்றெண்ணி
லிடையறா திரண்டு மாதந் தொடர்ந்துநோன் பிருக்கவேண்டுங்
கடவதற் குரிய ரன்றேற் கருதிய வதிதி மாரென்
றடருகூ ழைய மேற்போ ரறுபது பெயரைக் கூவி. (14)

தலைக்கொரு படியா லுள்ள தவசமு மவருக் கீந்து
விலக்குதற் கடனா மென்று வந்தது வேத மென்று
ரலக்கணுற் றழுகை நின்ற வரிவைதன் மெலிவை யெல்லாஞ்
சொலக்கருத் துன்னி வள்ளற் றூயமுகம் பார்த்துச் சொல்லாள் (15)

ஆளடி மையர்கொண் டேவவருநிதி சிறிது மில்லைச்
சூழுடன் விரதஞ் செய்யுந் துன்புறி கிழவ னெந்த
நாளினு மிரப்போர் கையிற் றவசமே நல்க வேண்டில்
வாளொளி பரந்த மெய்யாய் வகையிறிதில்லையென்றாள் (16)

குறையவ ளிரந்து கூற நபியருள் கூர்ந்து நாமோர்
பறைநிறை நின்ற வீத்தம் பழமுனக் கீது மென்றார்
மறைபுகு மென்னைக் காக்க மகிழ்ந்துநீர் கொடுந்தி லென்பாற்
சிறிதுள பழமென் றன்னாள் செப்பிட வவருஞ் சொல்வார். (17)

ஆசிலாக் கற்பின் மிக்க வரிவையிப் பழத்தை வாங்கித்
தேசயா சகருக் கீந்து செழுமனை யிடத்தி லுன்ற
னேச நாயகனை கூட்டிச் செல்லென நிகழ்த்த யார்க்கு
பாசைகள் கொடுப்பார் போல வழங்கித்தம் மனையிற் புக்கார். (18)

கவுலத்தைவிட்டுக் கூட்டினபடலம்-முற்றிற்று.

ஆகப்படல-44-க்குத்-திருவிருத்தம்-2453.



# உமுருவுக்குப் போன படலம்,

——[*]——

இச்சை யாயவ ரின்புற வாழ்ந்தனர்
நச்ச ராவை நலிந்து தடிந்தெதிர்
மச்ச நல்லுரை கூற மகிழ்ந்துமா
னச்ச நீர்ந்தவ ராண்டுறை நாளினில். (1)

ஆத ரத்தி லுவந்தசு ஹாபிகள்
மாத வத்தொடு சூழ்வர் மக்கத்தி
லோது ஹஜ்ஜுமு ருச்செய்ய வுன்னியே
போதுந் தன்மை புகலலுற் றுமரோ (2)

அருளு மேவல்செய் வோரசு ஹாபியை
வருதி சென்று வலிமிகு மியார்களைச்
செருகு வெஞ்சினச் சேனையைக் கூபிவண்
டருக வென்றுமு கம்மது சாற்றினார் (3)

ஏவு மின்னரு ளாலெளி யேன் செய்த
பாவ மற்றன னென்று பரிந்தடி
சேவை செய்து விரைந்துசென் றந்நகர்
மேவு மனன் ரெவர்க்கும் விம்பினார். (4)

ஏர்கு லாவிய ரார்களு நாண்மலர்த்
தார்கு லாஅலி ஹாபிக டம்மினற்
போருங் கீர்த்தியும் பெற்றுயர் நீதியா
லூரு நாடு முவந்திடு முண்மையார். (5)

ஆற்றன் மிக்கவ ராயிர மேனுநா
னூற்றி லக்க முடையரு நோன்கழ
லேற்ற மிக்க நபியிற சூலினைப்
போற்றி வந்து புடைசெறிந் தீண்டினார். (6)

இமா வெற்பென் றிலங்கிய மாங்க
ளமையுஞ் செல்வ மதீனத்தை யாள்கென்
றமைபி லாவைமின் னேக்கி யுரைத்தவர்
தமைய வூர்க்குத் தனியென வைத்தனர், (7)

ஈன மொன்றற் றெழுபதென் றெண்ணிய
கூன வொட்டகத் தைக்குறு பான்செய
லூன மன்றிக் கொணர்தியென் றேற்றிநற்
றூனை சூழத் தலைக்கடைக் கெய்தவே. (8)

பருப்ப தத்தைச் சினந்து பணைக்கையாற்
றருப்பி டித்தொடித் துத்தறு கண்ணிணை
நெருப்பு குத்து நெருக்குமொரான் றொரயின்
மருப்பி டித்த மதாசலஞ் சூழவே. (9)

தூய மேரு கிரியிணைச் சுற்றிவான்
மேய வாம்பரி வெம்மையை யெய்தவே
வாயு வேகமும் வாதமென் றேய்வுறப்
பாயும் வேகப் பரிபுடை சூழவே. (10)

தான மாரி தரைநிறை யத்திகழ்
மேன மென்ன விலாழிப் பெருக்குற
மான வீரர் கறவின மானவச்
சேனை யங்கடல் வீதி செறிந்தவே. (11)

புடைசெ றிந்து பறந்து புகுந்துற
மிடையிஞ் சேனையிவ் வீதிபொ ருதென
மடைதிறந்த புனலென வாழெழயிற்
கடைக டந்து நடந்து கலிக்கவே. (12)

வாயு வேகமும் வான்முகில் வேகமும்
போய கன்று புறந்தரக் கால்விசை
மேய வத்திரி மீறல் விருப்புறத்
தூய ராமிற சூல்நபி யேறினார். (13)

பேரி பம்பை பெருந்துடி திண்டிமந்
தூரி யங்களு மொன்றித் துவைத்தலின்
வாரி யோசையை மாற்றியவ் வானவ
ரூரு மஞ்சுதற கோஷை யுண் டானதே. (14)

புவனந் தாங்கும் பொருப்புறழ் யானையுங்
கவன வேகக் கலினப் புரவியு
மவனி மீதரி யேறெனும் வீரர்
மெவருஞ் சூழ நபிவிரைந் தேகினார். (15)

அரிய பாலை வனமு மடவியும்
விரிய நீரரு விச்செழுங் குன்றமும்
பிரச மூறு பலர்ப்பெருஞ் சோலையுங்
கரை கொண் மாநதி யுங்கடந் தேகினார். (16)

மக்க மாநகர் நோக்கி வழிகொண்டு
புக்கு காலையிற் பொற்புறும் வான்சிறை
தொக்க மேனி சுடர்விட வெயமுந்
திக்கும் போற்றுஞ் ஜிபுரியீல் வந்தனர். (17)

ஆண்டு சென்ற அருமதை நோக்கிநின்
நீண்டு காலி திபுனு வலீ துதான்
கூட்டு போர்செய் குறைஷிக ளோடெறும்
வேண்டு கின்ற படையொடு வேவியே. (18)

இனைய லாஹமீ மென்னுந் தலத்தின் முன்
னணிய தாக வழிமறித் தாக்கமுட்
டுணிவி னுற்றன னங்கெகச் சொல்லிவான்
நணியும் வேந்தர் பாந்தெழுந் தேசினார். (19)

வேறு.

அந்த நன்மறை வாக்கியங் கேட்டக மகிழ்ந்து
சிந்தை கூர்த்தசு ஹாபிகட் கிவ்வுரை செப்பி
வநதி ருக்குங்கா லிதுக்கு நேர் வலதுபா ரிசமாய்
நநத லிவ்வழி செலுமென நடந்தினர் நபியே. (20)

வேறு.

இனைய செய்கை யுணர்ந்திலன் வஞ்சக
நினையுங் காலிது நீணெறி யாவையு
முனையிற் காப்ப முகம்மதும் வென்றிசே
ரனைவ ரும்வருந் தூளிகண் டையுற்றான். (21)

பார்த்து வேகப் பரியை நடாத்திப்போர்
கூர்த்தி ருந்த குறைஷிகண் முன்புசென்
றார்த்த தூளி விசும்பின ளாவமுன்
போர்த்த சேனை யொடுநபி புக்கினன். (22)

என்று கூற வவரெச்ச ரிக்கை யாய்ச்
சென்று பின்னுற வாங்கித் திரண்டனர்

நன்றி சேர்நபி யும்படை யும்பய
மின்றி யேதனி யாமலைக் கெய்தினார் (23)

அம்மலைக்கணா வாய்வழி யாய்வரின்
செம்மலைக்கொடு செல்கின்ற வத்திரி
மம்மருற்று மனத்தொடு தாழ்ந்துதாள்
பம்மி வீழ்ந்து படுத்தது பாரினே. (24)

அலைத்த தட்டி யெழுப்பினு மாங்கவ
ணிலத்தில் வீழ்ந்த நிலைபெய ராமையாற்
புலத்து வீழிறும் பூதிவை யேதென
மலைத்து நின்று மயங்கின ரியாவரும். (25)

ஆய தன்மை யறிந்தசு ஹாபிக
ளேய நெஞ்சந் துளக்கற வேயிறை
மேய சொற்படி வீழ்ந்தத தன்றிவே
றேய்வ தில்லை யெனநபி செப்பினார் (26)

தறையில் வீழொட்ட கந்தனை நோக்கிநம்
மறைகொ ளாமக்க மாநக ரார்களிம்
முறை தமக்கெம் மொழிசொல் வேண்டுமென்
றறைகி னும்மவர்க் கனபுறக் கூறுவோம். (27)

இறைவ னாணை யிதுதவ றேமெனக்
குறைவி லாத புகழ்நபி கூறியே
நறைகொள் வாய்மொழி கேட்டு நயந்துமெய்ப்
பொறைகொ ளொட்டை பொருக்கென் றெழுநததே (28)

எழுத்த பின்ன ரிறையவன் றூதர்தா
டொழுந்த னிப்படை வீரர்கள் சூழ்வர
வழுந்து பாவக் குபிர ரடர்ந்துறுஞ்
செழுநதி சையைவிட் டோர்வழி செல்குற்றார். (29)

திண்மை மீறிய தீனர்க ளியாவரு
முண்மை சேர்பய ஹாம்பரு மோங்கிய
வண்மை சோமக்க மாநக ருக்கரு
கண்மிச் சேர்ந்தன ராண்டுகு தைபிய்யா. (30)

அத்தலத்தி லிறங்கி யசும்புறப்
பைத்தற் சூழி படுமல ரியாவையு

மொய்த்த டர்ந்து முன்சென்றவ ரார்தா
வெய்த்தி ளைத்துப்பின் னெய்தின ரீண்டியே. (31)

ஆண்டு றாமவ் வலந்தையி னிப்பயந்
தீண்டி னார்க்குஞ் சிடைப்பரி தாலவர்
வேண்டு திக்கும் விரைந்துசென் றெங்கணுங்
காண்ட மின்றி ஹறமீபுமுன் னெய்தியே. (32)

வாய்பு லர்ந்துமெய் வாடி விழியொளி
போய்ம பங்கிப் புலம்பிக் கலங்கியா
மேய தாக மிருத்தன மித்துயர்
நீயி ரன்றெவர் நீக்குவர் நீதியீர். (33)

வேறு.

என்று நின்றவ ரியாவரு மிசைத்திட விரங்கி
நன்றி யோர்வடி வாகிய நாயகர் மகிழ்ந்து
துன்று நாழிகை தனிலொரு தோணியைத் துறந்து
குன்று நேர்புய ஸகுபியி லொருவாகை கொடுத்து (34)

மடுவி னிற்செறி மகலமெய் திடச்சிறை வண்டை
யிடுதி நளினிடை யென்றவ ரேவிட வேனவக்
கொடுசென் றன்னவ ருறவியி னனந்தலை குபிற்றத்
தொடுவ வன்னவப் புழைதிறந் தனவனஞ் சொரிந்தே. (35)

கொடுக்கும்வள்ளியோா மனையினிற் செறிநிதிக்குவைபோல்
வடுப்ப டாதநன் னெறியுறு தீன்வளர் வதுபோ
லடுக்க மன்பருக் குதவிசெய் நபிமனத் தருள்போற்
றடுக்க லாத்துறைப் பெருக்கெனப் பெருகின தாங்கல். (36)

வாவி யோடிய வாசியு மதகரித் திரளுங்
காவ லாளருங் கதமிகு சேனையங் கடலு
நாவ லோர்புகழ் காரண முகமமது நபிபு
மாவி நீருண்டு பாசறை வகுத்தவ ணமைத்தார். (37)

இதய மன்புடன் மகிழ்ந்தினி திவ்விடத் திருப்பத்
ததைய நாண்மலாப் புயநபி தமக்குத்தன் னமையாம்
புதைபி லென்பவன் தன்கிளை சிலரொடும் புகுந்து
கதமிலாப் பயஹுறாம்பரைக் கண்டிவை கழறும். (38)

ஓது மக்கமா நகர்தனில் லுவைவயென்போ னின்ற
காதல் வஞ்சகங் கடிகொண்ட கருபுமா மிறவுங்
கோது றும்பல சிற்றினத் தவரொடுங் குழுமிச்
சீத வண்மலர்ச் சிறைமெலாஞ் சிறைசெறித் தனரால். (39)

அன்றி யுஞ்செழுங் கருபத்துல் லாவிற்சென் றணுகி
நன்றி சேர்ஹஜ்ஜு செய்திடா திடர்சில நடத்தி
நின்று வெஞ்சம ரும்முடன் பொரவென நினைத்துத்
துன்று கின்றன ரென்றனன் ஹபீபெதிர் சொலுவார். (40)

புரிசை சூழ்மக்க மாநகர்க் காபிர்முன் போரில்
வெருவி யோடினர் நாலுந்து விசையவர் மேனுஞ்
செருவி னைத்திட வந்தில மனமகிழ் சிறப்ப
வரிய ஹஜ்ஜுமு ருச்செய வநதன மடுத்தே. (41)

இயைநதி டாதவர் போர்செய்ய வேண்டுமென் றிகலி
னயந்து நாமொரு தலமுறற் றவணைபு நவில்வன்
வியநது காபிர்க ளனைவரு மவனிட மேவி
வயந்த ரப்பொர வருவரேல் வருதிரென் றுரையும். (42)

இருவ ரும்பொரும போரினி லவரிடைத் துடையிற்
சுருதி கூறிசு லாமெனுந் தூயநற் குவத்தி
லொருமை யாய்வரச் சொணிமவர் மறுப்பரே லுடனுய்
பருக வனன வருயிரினை விண்ணிடை படுப்போம். (43)

அதற்கி சைநதந்த நாள்வரை பொருமனின றடர்நது
மதக்கு றும்பிறைச் சொருவரேற் சுற்றினும் வளைந்து
கதக்கொ டுந்தொழிற் காபிரைக் கருவற விரைவிற்
சிதைத்தெந் நாடொறு நீணிலை நிறித்துவோஞ் செகத்தில். ()

ஆதி யாணைதப் பாதென வருணபி யியம்பப்
போத மீறிய புதையில்கேட் டுளங்களி பூண்டு
காதல் கூர்தர மக்கத்துக் காபிருக் கிதனை
யோது வேனென விடைகொண்டு போயின னுடனே. (45)

வநது மக்மா நகருறுங் காபிரமா டணுகிக்
கந்த நாறுமெய் முகம்மதைக் கண்டவ னிருந்து

சிந்தை கூர்சில செய்திகேட் டும்முழை புகுந்தேன்
புந்தி மிக்குளீர் புகலெனி லியானவை புகல்வேன். (46)

என்று கூறலு மவர்களிற் சிறிதுசிற் றினத்தார்
நின்று நீர்சொலுஞ் சொலிற்பொருந் தோமென நிகழ்த்த
வன்றி யுஞ்சில பெயர்மனத் தறிவின்மிக் கவர்க
ளன்று தீதெனக் கேட்டறி வோமென நயந்தே. (47)

சொல்லு வீரெனக் கேட்டலுந் தூதர்முன் னுரைத்த
வல்ல வாசக மனைத்தையும் புதையில்நேர் வழங்கக்
கல்லை நேர்புயன் காபிரி லொருவனற் கருத்தோ
னெல்லை நீதிநற் றுணர்ந்தவன் மஸ்ஊதுசொல் உறவா. (48)

வேறு.

இருந்தவ னெழுந்து காபி ரெவரையும் போற்றி யேத்தித்
திருந்தயான் சொலும் விண்ணப்பஞ் செவித்துணைக் கேறுதேனும்
வருந்திய மழலை வார்த்தை கேட்டதாய் மகிழ்வ போனீர்
பொருந்திடக் கேட்பி ராகி னன்குறப் புகல்வே னென்றான். (49)

அனைவரு மகிழ்ந்து கேட்டு னறிவினுக் கிசைந்த மாற்ற
மெனையன வுளவோ வெல்லா மியம்புதி யென்று சொல்ல
நனைமலர் செறியுந் தாம நறுமணங் கமழ்ந்த மார்பன்
கனைகழ லுறவா வென்னுங் காளைநின் றினைய சொல்வான். (50)

தழைசெறி மரவ மாலை தயங்குதிண் புயத்தார் மிக்க
மழைசெறி கவிகை வண்மை முகம்மது நபிசொல் வாய்மை
பழமையு மறிவும் வேதப் பான்மையு நீதி சேருங்
கிழமையும் பொருந்திற் றாமா லவ்வுரை கேட்ட னன்றாம். (51)

யாவரு மிசைந்தென் றன்னை யவரிடத் தேவு வீரேற்
றாவரு மொழிகள் சொல்லத் தகுவன வுரைத்து மீள்வே
னேவலிற் குணத்தீ ருங்கட் குறுதியே தென்ன வல்லை
போவென விடைகொ டுத்தார் போயவ னபிபாற் புக்கான். (52)

அவ்விடத் துறவா வந்த செய்தியை யறிந்து போற்றாத்
தெவ் வடர்த் திகல்செய் வாட்கைத் திருநபி யவனை நோக்கி
யொவ்விட வுவமை யில்லாப் புதைலொடு முரைத்த தெல்லா
மிவ்விடத் தியம்பி னாமற் றெதிர்மொழி யவனுஞ் சொல்வான். (53)

மறுவிலா நீதி வாய்மை முகம்மது நபியே மக்காக்
குறைஷிக ளெல்லா மும்மைக் குழீ இயின் கிளைக ளன்றே
வறமதோ கிளையுள் ளோரை யறுத்துவேர் களைவ தன்றித்
திறனுறும் வெற்றிப் பாடுஞ் சிறக்குமோ சிறந்தி டாதே. (54)

குலத்திலோர் மதலை தோன்றிக் குலத்தினை வளர்ப்ப தல்லா
லலக்கணுற் றவர்கள் வாட வலைத்துப்போர் நடத்திக் கொன்று
கலக்கலா மென்ன நீதிக் கதையினுங் கேட்ட துண்டோ
துலக்கற வவரை யெல்லாந் துரந்துவே ரறுக்க வெண்ணில். (55)

பலர்களும் மிடத்தி லுற்ற படையினி லவருக் குற்றார்
சிலருள ரடர்ந்து வெட்டிச் சிதைத்திடப் பொருந்தார் சீறிற்
கலகமிட் டகல்வரென்று கருத்துவந் துறுவா வென்போன்
மலர் தலை யுலகம் போற்றும் ஹபீபுமுன் வழுத்தக் கேட்டே. (56)

மஞ்சவிர் குடையின் வந்த முகம்மது நபினார்க் கீமா
னெஞ்சலி லாது புக்கி யிருந்தவ ரகல்வா ரென்ன
வஞ்சலில் லாது சொன்னா யெனமன மழன்று சீறி
மிஞ்சுதூ ஷணங்களாக வெகுண்டபூ பக்கர் சொன்னார். (57)

அசுஹாபி மாரை நோக்கி யாரிவ ருணாபி ரென்ன
வுசாவின னுறவா வன்றே ருண்மையாய் விளங்கி நின்ற
முசுகபின் படியே தீனின் முறைவழு வாத செம்மல்
புசாவலொன் றிலாதுவாழ பூபக்க ரென்று சொன்னார். (58)

அடல்வலி யுறுவா வென்போ னபூபக்கர் தம்மை நோக்கித்
திடமுடன் மதித்த டாதென் செவிசுட வுரைத்தீர் முன்னைத்
தொடர்வுற வெனக்கு நீரோர் நன்றிசெய் சூழ்ச்சி யாலே
யுடனுரை யாது நின்றே னன்றியே லுரைசெய் வேனால். (59)

என்றுரை கூறிப் பின்னு நபியெழில் வதன நோக்கி
நின்றுகை யார்த் தாடி தாங்கிச்சொன் னிழந்தும் வேலை
யின்றிகழ் வடிவா ளேந்து முகைறத்து விறல்செய் வாளா
லனறவன் கரத்தைத் தட்டி யகலநின் றறைதி யென்றார். (60)

இலங்கிய வுறுவா வென்போ னிருந்தவர் தம்மை நோக்கிச்
சலந்தரு மிவனா ரென்ன முகைறத்தென் றவர்கள் சாற்றப்
தலந்தவர் தம்மை நோக்கிக் காபிராய்ப் புகல்சேர் மக்கத்
புலந்தனி லிருக்கு மேனாட் சிலரொடு தகமை கூர்ந்தே. (61)

இருக்கின்ற நாளி லன்னோ ருயிரினுக் கிறுதி செய்து
திருக்கிளர் நிதியும் வவ்வி நீயிவண் சேர்ந்து தீனர்
வருக்கமா யீமான் கொண்டு முகம்மது நபிக்குமெத்த
வுருக்கமா னவர்போ னின்று யுன்னைப்போ லுலகி லுண்டோ. (62)

உனக்குநா னுடந்தை யாக வுற்றவ னிருந்துன் னாலே
யெலக்குறுந் துயரு நெஞ்ச மிடைத்துநான் பட்ட பாடு
மனக்கொளா திருப்பதுண்டோ மறந்துபோ யினையோவென்னச்
சினத்துட னகைத்து நிந்தாஸ் துதிமொழி செப்பி னாறே. (63)

அலங்கலந் தொடையல் வேய்ந்த அருமதின் றிறனும் வீர
மிலங்கிய வடிவாட் செங்கை யார்கள்வா சகமு முள்ளங்
கலங்கலில் லாத வெற்றி ஸகுபிகள் கருத்துங் கண்டு
நலங்கிளர் நபியைப் போற்றி விடைகொடு நகரம் புக்கான். (64)

குலவரை யனைய மாட கூடமு நறைசேர் காவு
மலர்செறி தடமும் வாய்ந்த மக்கமா நகரி னுள்ள
கலைபயி லறிவில் லாத காபிர்பாற் சென்று சற்று
மலைவிலா வுறுவாவென்னு மதிவலோ னுரைக்க லுற்றான். (65)

ஏற்றமா நபிபா லியான்சென் றெய்தினேன் புதையில் வந்து
சாற்றிய மொழியி லொன்றுந் தவறிலா துரையென் றந்த
மாற்றமே யெனக்குஞ் சொன்னாரியானது மனங்கொண்டுற்றேன்
றோற்றமா மவர்தம் மேன்மைத் தொழிலினம் விளம்பக் கேளீர். (66)

நாவினி லூறுமிச்சி லுமிழ்ந்திடி னை வாச
மேவிய தென்னப் பூச விரும்புவர் சிலபேர் பின்பு
மோவறத் தொழுகைக் காலத் துலச்செயும் புனலை வேட்டுத்
தாவறக் கரங்க ளேந்திக் தளர்பலர் சிலபே ரம்ம. (67)

செய்தொழிற் வேக லியாங்கள் செய்ததே பலனே மென்ன
வெய்துவர் சிலபேர் தங்க ளிருகர மொடிக்கி வாயைக்
கையினாற் புதைத்து நின்று காட்டாட்சவீட் சணமாய் நோக்க
மையலங் களிறன் னை வணங்குவ ரனேகம் பேர்கள். (68)

இத்தகை யுடைய வள்ளல் ஹபீபிற சூல்ம கிழ்ந்து
சித்தமன் புறவே நம்மைப் புரந்திடச் செப்பும் வார்த்தை
யுத்தம மவரைப் போற்றி யுறவுகொண் டிருநது வாழ்தன்
மெத்தவும் விழுமி தாகு மென்றன னறிவின் மிக்கான. (69)

அவனது கூறத் தான்கேட் டழன்றாக ஞனி யென்போன்
மனதுற வுறுவா சொன்ன வார்த்தையா ஞங்கு சென்று
வினவியிவ் விடத்தி லொல்லை மீள்குவ னென்னக் காபி
ரனைவர்க ளடக்குங் கூறி நபியிடத் தவனும் வந்தான். (70)

வந்தவ னபியைக் கண்டே யவர்மனத் தியல்புந் தேர்ந்து
விந்தையாய்க் குறுபான் செய்ய வொட்டக மேவ லாலே
பந்தமா யுறுமுச் செய்யப் பரிந்ததே யலது வேறு
சிந்தனை யில்லை யென்று தெளிந்தவன் மக்கஞ் சேர்ந்தான். (71)

சேர்ந்தவன் காபிர் தம்மைச் சிறப்புட னோக்கி தீனர்
வேந்தர்தங் கருத்து முன்னோர் விளம்பிய தெல்லா மெய்யே
யாய்ந்துநான் பார்த்து வந்தேன் களங்கமொன் றில்லை யாமாற்
காய்ந்திடா துமுறாச் செய்து போமெனக் கழற னன்றே. (72)

இவனுமவ் வாறே கூற விடைந்துமெய் நடுங்கித் தங்கள்
கவனம்வே றுகிநின்ற காபிர்க ளுரைத்தார் நம்பாற்
றவனமா யிருந்த வுற்ற சனங்களு நபிபாற் சென்று
லவணியி லவன்றன் மாயைக் கடலில்வீழ்ந் தலைந்தா ரன்றே. (73)

விளம்பிய மாற்றங் கேட்ட மிக்றசு வென்னும் வீர
னுளம்பெறு மதியின் மிக்கோ னெழுந்தியா னுவந்து சென்று
வளம்பெறு நபிபா லேகி விரைந்திவண் வருவ னென்றா
னளந்தறி புகழாய் செல்லென் றனுப்பினர் காபி ரெல்லாம். (74)

சொற்படி யவனுஞ் சென்று சுருதிநேர் நபியைக் கண்டு
முற்பட விருந்து நல்ல மொழிபதர்ந் திருக்கும் வேலை
பற்பல காபிர் தொக்க பாசறை விட்டி னின்று
சொற்பயின் மதியான் மிக்க சுகயிலென் னொருவன் வந்தான். (75)

துதித்தவ னடுத்து நின்ற சுகயிலைக் கண்டு வள்ளான்
மதித்திவன் வருத லாலே காபிர்க்கோர் வருத்த மில்லைப்
பதித்தவ னுமை சாரம் பார்த்திடி லேசாந் தூதாய்க்
கதித்தவன் றன்னை விட்டோர் கருமமு மிலேச தாமே. (76)

சொற்பொருண் முகம்ம தாய்ந்து சொல்லிடச் சுகயி லென்போ
னற்புதர் தம்மை நோக்கி யறைகுவ னிருவ ருக்கும்
விற்பன மாகச் செய்ய வேண்டுகா ரியங்கட் கெல்லா
முற்பன மாகச் சீட்டொன் றெழுதுத லுறுதி யென்றான். (77

ஆமென மகிழ்ச்சி யாகி யகுமது மலியார் தம்மைத்
தாமரு ளுடனே கூவி யெழுதெனச் சாற்று கின்றார்
கோமுறை வழுவா நீதி குலவிய அலியா ரப்போ
தேமநற் புகழீர் சீட்டி லெழுதுவக் கணையே தென்றார். (78)

இன்புறு பிசுமில் லாகிற் றகுமா னிற்ற கீமென்
றன்புறு முதலிற் கோட்டென் றகுமது வந்து கூற
முன்புறு சுகைலென் போனு மொழிகுவன் பிசுமில் லாவின்
றன்பெயர் நடக்கும் வண்ண மறிகுவந் தரணி மீதில். (79)

அற்றகு மானிற்ற கீமென்ன வுரைகின்ற வார்த்தை யாங்க
டிறனுறக் கேட்ட தில்லை யம்மொழி தீட்ட வேண்டா
நிறைபுக ழுடையீ ரென்று சுகைலினி தியம்பக் கேட்டு
மறைபயி லிறசூ லுல்லா மகிழ்ந்தொரு வசனஞ் சொல்வார். (80)

சொல்லிய விறையா மல்லா ஹுதாரா முகம்ம தென்றுங்
கல்விசே ருடைய வள்ளல் கவுலெகொடுத் திட்ட வாறென்
றெல்லையி லெழுது மென்ன வுரைத்தனர் சுகயி லுள்ள
மெல்லவே பொருந்திடாமல் விரைந்தொரு வசனஞ் சொல்வான். (81)

ஆதிதன் றூத ரென்ன வும்மையா மறிந்தோ மாகில்
வேதனைப் படுவ துண்டோ பகைசில விளைவ துண்டோ
காதலா லவையும் வேண்டா மெனவவன் கழற ஹக்கன்
றூதரு மமுத்தோர் மாற்றஞ் சொலநினைந் துறுதி யெண்ணி. (82)

அரியதோர் புகழ்சேர் வண்மை யப்துல்லா முகம்ம தென்போர்
பரிவொடு கவுல்தா மீந்த படியுமு ரூசசெய் தேக
வரிசையாய் மக்கத் துள்ளோர் வழிவிடக் கடவதென்று
தெரிவுறத் தீட்டுகின்றார் சுகயில்பின் சிறிது சொல்வான். (83)

அம்மொழி பொருந்தா திந்த வாண்டினுக் ககன்று போயிச்
செம்மையா யெதிர்ந்த வாண்டின் மீண்டிவண் செறிந்த காலை
யும்மையாஞ் செறுத்தி டாம லுவந்து ஹஜ்ஜுமுறூச் செய்ய
வெம்மையி லாது விட்டு விடலென வெழுது மென்றான். (84)

சொலவரு மொழியைக் கூறுஞ் சுகயிலை நோக்கி வள்ளன்
மலர்செறி மக்கத் துளியாம் ரெத்தடை யாதோ வென்ன
வுலகினி லொருமெய்ம்மை யுமர்குடைந் திடைந்தோ மென்று
சிலகுறை சொல்ல ரென்னு நாணத்தாற் செப்பி னேமால். (85)

ஆகையா லிந்த வாண்டிற் ககன்றுபின் மீள்வீ ரென்ன
வோகைசேர் நபியும் வீழ்ந்த வொட்டக மெழுந்து செல்லச்
சேகற வுரைத்த வார்த்தை தீதுறு வண்ணமெண்ணி
வாகுறச் சுகயில் சொற்ற சொற்படி வரையு மென்றார். (86)

எழுதின ரலியுமன்னோ ரியைந்திடும் படியே சாற்றும்
வழுவறக் கடுதா சின்கண் வரைந்தவுத் தரத்தை யென்றும்
பழுதிலான் றூதர் நல்கப் பரிந்தந்தச் சுகயில் வாங்கி
யெழுகென மிக்க சோதிவ் விருவரு மக்கம புக்கார். (87)

மாயைத்தின் வடிவ தாக வந்தவா போய பின்னைக்
காயத்தி னணம் வீசும் ஹபீபுஹஜ்ஜுமுறுச் செய்ய
நேயத்து நினைந்த தன்மை தடையற நீங்க வேண்டித்
தேயத்தோர் புகழ வொட்டை யறுத்துநற் குறுபான் செய்தே. (88)

தலைமுடி யிறக்கி நீங்கள் சகலரிவ் வொழுங்கு செய்து
மலைவற விருப்பி ரென்றா ரனைவரு மகிழ்ச்சி கூர்ந்து
கலைபயி லிறசூல் சொன்ன கட்டளைப் படியே செய்து
குலவரை யனைய திண்டோட் குரிசிலைப் புகழ்ந்து நின்றார். (89)

அருள்பெறு மிசுலா மான வரிவையர் புதல்வர் மற்றோர்
தெருளுறு கிளைக டம்பாற சேரவே தடையா யுற்றோர்
பருவர லொழித்து வள்ளல் பாசறை புகுந்து பின்னர்
பொருவிலா மாந்த ரெல்லா மதீனத்தை நோக்கிப் போனார். (90)

வடிவுறு கதிர்வாட் செங்கை முகம்மது நபியு மிக்க
படிபுகழ் ஸகுபி மாரும் பாலரு மடந்தை மாருங்
கடிகமழ் பொழிலும் வாவிக் கரைகளு மலையு நீங்கி
யடிநிலம் படரக் காந்து மருந்திறற் பாலை கண்டார். 91)

வேறு.

செம்பென வயங்கியழல் செய்நில மனைத்தும்
வெம்புகை பரந்ததென வேனலக ணிரம்ப
விம்பரி னுலாந்தர வெரிந்தமுரு டாகத்
தம்பொறி யெனக்கதிர தபனகுமணி மின்ன. (92)

தேறரிய தாகவெகு சீழுதிர மோடக்
கூறுபடு புண்ணிலொரு கோலிடுதல் போல

மீறுபா லாலடி மெலிந்தவர்க ளாவி
குறையிடல் போலவழல் சூறைவளி வீச. (93)

சொரிய வறல் வாரிவெகு சோனைபொழி மேகம்
விரியுமழ றுவுதரை மீதுவா வஞ்சு
முரியநில மீதுகரு வென்றுடல் வெதும்பி
யரியகரி யென்றுபெய ரானமத யானை (94)

தேற்றமுற நாயினெடு நாத்திகழு நீரை
மாற்றமற வுண்ணவரு மானுடல் பிறந்த
காற்றினை யருந்தும்விட கட்செவியின் வாயைத்
தோற்றுபுழை யென்றெலி சுழன்றுசெல வெண்ணும். (95)

சிந்துபுனல் வாரிபுடை சேர்த்துமித ஞாலே
யிந்தநில நாலுவகை யாகியதி ருந்த
வந்தாமுயிவ்வழலை யாற்றவரி தாகிக்
கந்தாழு மிக்கபுனல் கங்கையு மடுத்த. (96)

பாக்குமெளி யர்க்கருள் பகுத்தருள நெஞ்சி
லிரக்கமறு லோபியரி டத்திலுறு வாரபோல
சுரத்தழல்வ ருத்தவடி துன்னவரு முன்ன
மரத்தினை யடுத்துளம் வருநதிமெலி வோரும். (97)

ஊறுபுன ஞவற வுலாநதுபசை யற்றுச்
சாறுகள் பிழுநதுசிலா தாம்பருகு வாரும்
கூறுமிரு காலினமிசை கொப்புள நிரம்பத்
தூறுகண் மிதித்தடி துடித்துழலு வாரும். (98)

இவ்வணம் வருத்தமிக வெய்தியற லின்றி
மெய்வணம் வருநதிமிக வெய்துற வுலைந்தே
யுய்வண நபிக்குமு னுரைப்பது நமக்கே
சேய்வண மெனப்பலர் திரண்டவ ணடைந்தார். (99)

வந்துநபி யைத்தொழுது வாழ்த்தியடி யேமு
வநதபுன றேடியரைக் காதவழி சுற்றி
விந்தநில மீபிலரி தெங்கடமக் கும்பா
லந்தமுறும் பாத்திர மமர்ந்தபுன லல்லால். (100)

என்றவ ரடங்கலு மிசைந்துமொழி கூற
நன்றென நினைந்துநபி நன்மொழி பகர்ந்தே
வென்றிதரு பாத்திரம் விரைந்துகொடு வந்தென்
முன்றருதி ரென்றவர் மொழிந்துள மகிழ்ந்தார். (101)

சொன்னபொழு தேகடிகை தன்னையொரு தூதன்
மன்னுமறை யோநபிமுன் வைத்தகல நின்றான்
றென்னுலவு பங்கய மலர்க்கைகொடு தீண்ட
வந்நவமெ னப்புனல்க ளானவிர னான்கும். (102)

பாலவன மெங்குநிறை பானியம தாக
மேலவனை யுன்னியுள மீதினி லிருத்திச்
சீலநபி பாதமிசை சென்னிகொடு சேர்த்தி
யாலமமு தாகவசு ஹாபிக ளயின்றார். (103)

வேறு.

வாசியுங் களிறு மேறும் வரிநெடுங் கழுத்தன் மற்றுங்
காசறப் புனலு முண்டு களித்தெழுந் தார்த்துப் பொங்க
நேசமுற் றஸ்காபி மார்க ணெடுநெறி யதனிற் செல்ல
வீசிய புகழ்சேர் வள்ளல் விருப்பமுற் றெழுந்து போனார், (104)

அடவியுங் குன்று மாறு மருவியு மகன்று பின்னர்
மடிவிலா வுதுமா னென்னும் வள்ளலை யினிதுகூவித்
துடவைசூழ் மக்க மென்னுந் தொன்னகர்க் கேகு மென்னப்
படிபுகழ்ந் தேற்ற வனோரா பரிவுற மகிழ்ந்து போனார். (105)

விரிகடற் சேனை சூழ விரைந்தெழுந் தேகிக் கீத
வரைசெறி மதீன மூதூர் வளநக ரடுக்கும் போதிற்
றரைபுகழ் மக்கநக ரணிற் றகைபெறு முதுமா னென்னுங்
குரைகழற் கோவைக் கொனறா ரெனுமொழி பிறந்த தன்றே. (106)

நனைமலர் ததும்புந் திண்டோ ளபியுளம் வெதும்பக் கேட்டுச்
சினைதரு தருவி னீழற் செறிந்தினி திருந்து மிக்க
மனைசெறி மக்கத் துற்ற வன்குபிர்த் தலைவ ரான
வனைவரை யொருங்கு செற்றிங் கடைவது கரும மம்மா. (107)

ஆகையா லெனது தோழ ரனைவரு மொருமித் தன்பாய்
வாகைசான் பெறுகவெற்கு வாய்மைதம் மின்க ளென்

சாகைநூற் றழும்பு நாவார் கேட்பவர்த் தைப்பா டதென்
றோகைமா றுதசான்றோர் கொடுத்தன ருளம கிழ்ந்தே. (108)

சுரும்படை கிடக்குந் தொங்கற் றூயவர் வாய்மை கேட்டுக்
கரும்படை கிடக்குந் தீஞ்சொற் கதிமறை ஹபீபன பாகி
யரும்படை கிடக்கு மோடை யணிமதின் மக்க மீதி
லிரும்படை கடக்கும்வேலீ ரெழுகவென் றியையுங்காலே. (109)

மறையுண ருதுமா னென்னி மன்னவ ரிறத்தல் பொய்யென்
றறைதரு வசனங் கேட்டங் ககமகிழ்ந் திருந்த பின்னர்
நிறைதரு வாய்மைப்பாடு நிகழ்த்தின போகட் கெல்லா
மிறையவ னருளினாலே யாயத்தொன றிறங்கிற் றன்றே. (110)

வந்தவா யத்தைத் தேர்ந்து தீனவர் வதனநோக்கிப்
பந்தனை வாய்மை யெற்குப் பகர்ந்தநூ யோர்க ளெல்லாம்
விந்தசே ருவனைமீதின மேவுவர் நிறைய மில்லென்
றந்தமி லிறைவன்றூத ரறைந்தன ருளங்க னிந்தே. (111)

மான்மதங் கமழ்ந்து வீச மலர்ப்பதம் பெயாததெழுந்து
தேனுறை யலங்கற றிண்டோட் செலவரோ டேகுங காலை
யீனமிலாயத் தொன்றங் கிறங்கின கயவா மீதில
தீனவ ரெவாக்கு மன்பாய்க் கொடுத்தனஞ் ஜெயபட தனறே. (112)

கதிமறை வசனங் கேட்ட காவலா நபியுலைலாவும்
விதியவன் மொழிமாறுத விரலுடைத் தலைவ ரியாரு
மதியக டுரிஞ்சுங் குனறும் வளர்கழைக் காடுநீந்திப
பதியினுக் கரசாய் வைகும் பனைமதி னுவிறசென்றா. (113)

உமுறாவுக்குப்போன படலம் முற்றிற்று.

ஆகப்படலம்-45க்குத்-திருவிருத்தம்-2566.



# சல்மாபொருத படலம்.

---

விண்ணவர்க் கரசர் நாளும் விரும்பியர்ச் சனைசெய் தேத்த
வெண்ணரு மரசரீண்டி யேவலி னிறைஞ்சி நிற்பப்
பண்ணரு மறையின் றீஞ்சொற் பாவல ரினிதுவாழ்த்த
கண்ணகன் ஞாலம் போற்றுங் காவல ரிருந்தா ரிப்பால். (1)

வரைநிகர் மாடமோங்கு மக்கமா புரத்துள் ளோர்கள்
கரையிலா வளமை சேருங் கடநகர் மதீனத் தெய்தத்
தரைநெறி மருதீனன் ஸாரிகண் மக்கத் தேகப்
புரையறவுள்ள மொன்ருய்ப் பொருந்தின ருறவதாகி. (2)

வேறு.

செருவி னற்பொருத டர்ந்து தீனெறிமுறை மறையின்
மருவி நல்வழி வந்தவர்க் கெண்மடங் காகப்
பரிவி னுவிசு லாத்தினிற் புகவெனும் படியா
லரிய திண்டிறல் வயவர்கள் வந்தன ரவரின் (3)

ஊன்கி டந்தவெற் கரசெனீ துதவுகா லிதுவு
மான்கி டந்தமை விழியின்னா மாலகொளு மழுறுங்
கான்கி டந்தமா லிகையபீத் தாலிபுக் கையிலு
மான்கி டந்தைத் தலத்தல்கா வருளுது மாலும். (4)

வே று.

வரியளி யலம்பிப் பெடையொடுந் துயிலுமாவமுங் கியபுயநபிதங், குரைகழற் பதத்தில் விழியினை வைத்துக் கொழுமணி யனையவாய் முத்திக், கரையிலா வுவகைக் கடலிடை குளித்துக் கரும்பெனு மறைக்கலி மாவை, யுரைதாவோதி தீனிலை நின்ருர் நால்வர் கடவத்தினு லுயர்ந் தோர். (5)

இவர்கள் போலுயர்ந் தவாகணம் பலவெழுந் தேகிக்
கவா றக்கறு மாவினை யுரைத்துளங் களித்துப்
பவம றுந்தெழு கையின்முறை வழிநெறி பயின்றே
யுமை யில்லவன் றாதடி வணங்கியங் குறைந்தார். (6)

வேறு.

வினைபுறங் கண்ட வேற்கை விறலபி மகிழ்ந்தன் பாகிக்
கனைகழல் சல்மா வென்னும் காளை தன் வதன நோக்கி
மனையினுக் குரியனாக வந்தவன் றபாரும் வெற்றிப்
புனைமல ரணியுந் திண்டோட் பொதுவனு நீருமாக. (7)

ஒருகுடங்கவரி சோகமுள்ளவை சாய்த்துக் கொண்டு
தருவுறை காபாவென்னுந் தலத்திடை தன்னின் மேய்த்து
வருவிர்க ணீவிரென்று மறைபிடந் தலம்பும் வாயாற்
றிருவுளம் பற்றினாரிம் மூவருஞ் சென்னி தாழ்த்தார். (8)

தொடை மழைபொழியும் விற்றோட் டுணைவர்க ளிருவர்சூழக்
கடைமணிக் கலினப் பாய்மாக் காவலர் சல்மா வென்னு
மடைசெறி கடகத்தோளார் வரிசிலை யொன்று தாங்கி
யுடைகட லனையகாலே யம்முட னுவந்து போந்தார். (9)

வேறு.

திரை நுகர்கருஞ்சூற் கனங்கிடந் தலறத் திகைத்தெழும்பிடி மடிசுரந்த, புரைசுரை சுவைத்துப் பால்வெடிமருத புனிற்றிளங் கன்று மேய்ந்துறங்கும், வரைபல விறப்ப வுளிகுடைந்தறுத்த தட்டவா யுரற்றலைக் கேழற், பொருகளி றுழக்க விரிகரங்கரிகள் போந்திடும் வனங்களுங் கடந்தார். (10)

மழைசெறிந் திருண்டு கதிரவன் றேன்று வனங்களும் புனங்களுங் கடந்து, தழைசெறிந் திலங்கும் வாவியு மோடைத்தடங்களு நதிகளுங்குறுகி, யுழையின மோடித் தனித்துளைந் தலைந்த வொண்பரற் பாலையுஞ் செங்தேன், பொழிதரு சோலைப் படப்பையுங்கடந்து போயினர் நிரைகண் முன்னேக. (11)

நீங்கருஞ் சேற்றி னீற்றுளைந் தலறி நிலாவெனச் சங்கமுத் துயிர்க்கப், பூங்கருங் குவளை யலர்ந்திடும் விரும்பிப் புள்ளறுகால்படத்தகர்ந்து, தீங்கறும் பெருத்திற் றாங்குதே னுடைத்து சிதறிடும் பணைபுடைசூழ்க், தாங்கல்சேர் வளமை செறிந்திடுங் காபாவென்னுமத் தலத்தினைக்கண்டார். (12)

நிரைநிரை செறிந்த குட்டியுங் கன்று நெடுங்கழுத் தொருத்தலுஞ் சுரந்த, சுரைமடி வீங்கி நடைபெயர்த் தொதுங்குஞ் சுரபியும் புனிற்றிளந் தேனு, விரைமலர்க் குவளை மணமருக்கயவாய் மேதியுங்

கவையடிக்கொறியுந், திரையென வெழுந்து நடந்துபுன்மேய்ந்து திருந் தது திசைதிசை செறிந்தே. (13)

பணர்விரிந் தடைகள் செறிந்திருண் டெழுந்த பாரைப்பா தவ மிடத்து, மணமெழுந் தலர்ந்த முள்ளரைப் பசுந்தாள் வனச மேய்ந்தி லங்குபல் வலத்துந், துணர்வளைந்தோடித் பாசடைகிடக்குந்துய்யதோர் பசும்புவி னிடமும், கணமுடன் ஞெறுக்கை மேய்த்தவ ணுறைந்தார் காளையர் மூவருமன்றே. (14)

ஆண்டுறைந்திருந்த போதினில் கத்பான் கூட்டத்தி லமர்ந்தெ ழுங் கடவர்,மாண்டயங்கியவே லுயைபிறு வெம்போர் மல்கபு துற்றகு மானுந், தாண்டுவாம் பரியின் விறலினர் வெற்றித்தலைவர் நாற் பதின் மரு மாகக், காண்டருங் குன்றுங் கடங்களுங் கடந்து வந்தனர் கடுஞ் சரங் கடுப்ப. (15)

வந்துகாபாலிற் செறிந்திடு நிறையைச சுற்றினர் வளைந்தனர் சோரி, சிந்திடப் பொருவன் றலைகரந் தோட வெட்டினர் செழுந் திறல் வீரர் கந்துக நடத்திக் காலிகளனைத்தும் வவ்வினர் களிந் தலை யாமற், பந்திபந் தியதாய் நடத்தினர் கிடநத பணித்தலை நடுங் கிட வன்றே. (16)

விண்டுகள் பரப்ப நடத்திடும் போதில் விறல்சல்மாவென்னு மவ் வேந்தர், கண்டுளம் வெருண்டு திறலிறபாகைக் கடிதினில் விளித்துத் தானேறிக், கொண்டெழுங் கவனவாமபரி யளித்துக் குருநபிக் கறைதி யென் றோதித், திரணடிறலவரை விடுத்துப்பினனிரையைத் தொடர்ந்த னர் சிலைவய வீரர். (17)

குமினுறைந் தலறும் வரைமிசையேறிக் குன்றறழ் மாடங்க டோன்று, மெயிலுடை மதீன மாநகர்நோக்கி யிடித்தெனக் கூக்குர லிட்டு, மயிர்புளகெழவெங் கணைமழை பொழியும் வாஙகுவிற் றடக்கை மேற்கொண்டு, செயிரறவளைத்து நாணினை யெறிந்தார திசைக்கரி செவி செவிடெடுப்ப. (18)

நறைகம ழலங்கல் அங்குவ தவத்தி னுதித்தெழுநரபதி சல்மா, தொறுவினைக் கவர்ந்த கத்துபான்கூட்டத் தொகைபடைத் தலைவர்க டிகைப்பத், தறையினிற்போரி கொட்டிட வொருவன்றடக்கழற்கா னு

டைந் துழலக், கறுவொடும் வெகுண்டுவெடிக்கணை தெரிந்து விட்டனர் கார்முகங் குழைய. (19)

ஊறுபட் டுரைந்த காளையைக் கண்டங் கொண்டிறற் புரவலர் பின்னும், வேறுபட்டெழுந்த மள்ளர்கள் வியப்ப விறலின்மே ன்பாட்டுரை கூறித், தாறுபட்டெழுந்த மதலைகூசத் தாலங்கீழ் விழப்பணி பணிய, வீறுபட்டெழுந்த கொடுமரங்குழைய விட்டனர் கணைமழை யென்ன. ()

குடைநிழலகலா மன்னவர் புயத்துங் கொய்யுளை மீதினுங்கு ணிலார்ந், தடிபடும்பேரி யிடத்தும் விண் டோய்ந்தவடல்செறிகத லிகை யிடத்தும், பிடியுடையுபய சாமரையிடத்துந் தோன்றிய பீலி கை யிடத்துங், கடிகமழ்மாலை வயவர்கண் மார்பும் பட்டன கடுங்கணை நிறைந்தே. (21)

கோடைபோற் சுழன்று வரும்பரி கடாவிக் கொண்டெழுந் தலைவரிலொருவ, னேடலர் மாலைப் புயன்கரவாளா லெறியுமுன் னோர்மரத் தொதுங்கிப், பாடலர்த்தமர்ந்த கொடியவனைவிபறி படப் பகழியால் வீழ்த்தித், தேடரும்வாகை சூடியே விரைவிற் சென்றன னொருதனிச் சிங்கம். (22)

பாலொருகுடங்கா சத்திரி யீன்ற பறழ்களுங் குட்டியுஞ்செறிந்த, காலிகளனைத்துஞ் சிறைவிலா தடர்ந்த கடும்பாற் பொலி தருசாரன், மேலொருத் தொண்டி னெறியினின் மள்ளர் விரைவொடுங் கொண்டெழுந் தேகச், சாலவு நிவந்த பெருவரை யெருத்திற் சார்ந்தனர் திறல்வய வீரர். (23)

சிலம்பினுற்கிடந்த பருக்கையீருகச் செறிந்திடுஞ் சிரவண மெவையு, முலம்பொரு தோளாற் றவ்வினர் கையா லெரிந்தன ரவையுருண்டோடி, வலஞ்சுழி நெற்றி வாலுளைக் கலினவாம்பரிக் கால்களைத் தகர்த்துக், கலம்படு தடத்தொட்டெவ்வரைவீழ்த்திப் பிதிர்த்தது தொனியொடு மாதோ. (24)

தடஞ்செறிந் திலங்கு மாறுபா யருவி யாயிரந் திளைத்திடுஞ்சார லிடங்களுங், களிற்று முப்மத நாறு மிருங்கழை வனங்களுங் கடந்து, நடஞ்செறிந திடுங்காற் காகுராப் புரவி மன்னர்கணடந்திடத்தொடர்ந்து, கடும்புரி முறுக்கக்கழுத்தினிற் பிணித்தகார்முக மெடுத்தனர் வியப்ப. (25)

இருகடை வளைத்தங் கொருசிலையேந்தி யெதிர்பெருங் காபிரை நோக்கிக், கரியமைமுகிலி னுருமென விட்டார் விட்டவக் கடுஞ்சரஞ் சென்று, பொருதிறல் வயவர் தலைகளைத் தள்ளிப் புரவியின் கட்டினைப் பிளந்து, வருகுடை மன்னர் முடியினை வீழ்த்திப் போயது மறிகடா தன்றே. (26)

சரம்பட வெகுண்டு வயவரெல்லோ ருந்தழலெழ விருவிழி செவந்து, காம்பெறு பாசு கப்பணஞ் சொட்டை கட்டுபத் திரமயி னேமி, யுரம்பெ றம்பால நெட்டிலைச் சூல மோங்குதோ மரங்கதி ரெழுவாள், பாம்பரி நடத்தி யாவுங்கொண் டெறிந்தார் படியுமை முகின்மழை போல. (27)

வேறு.

புடைசெறி கிடுகி னாலும் பொருகணைத் தொழிலி னாலு
மடல்செறி தண்டி னாலு மமைந்திடு சோட்டி னாலும்
படருலைப் புயத்தி னாலும் பருவரைத் தனுவி னாலுந்
தொடைகழல் வீரரொட்டித் தட்டினர் தூள தாக. (28)

சிவைக்கடை போலுஞ் செந்தீத் தழலெழ விழித்தடர்ந்து
பவக்கடற் புகுது மள்ளர் பருவரைப் புயத்தின்மீது
நவைக்கடை வாயின்மீது நகைமுடிச் சென்னி மீதுங்
கவைக்கடைக் கணைகள்பாய விட்டனர் குருதி கால. (29)

ஆண்டுடைந் தூறுபட்ட புறந்தலை யதனின் வந்து
பூண்டருங் கலன்கள்பற்றிப் புனைகலை யுடைமை கொண்டு
சேண்டரு மிடங்க டோறுந் தெரிதரப் போட்டு விட்டுக்
கூண்டரு நிரையின் னேகிச் சென்றனர் கூற்று மஞ்ச. (30)

வேறு.

மலையெழத் திரண்டதோண் மன்ன ரார்த்தெழுந்
தொலியுறழ் கொடுங்கணை யொன்று விட்டனர்
முலைதிகழ் புயங்களின் மூழ்க வெட்சியார்
நிலைபெற வினமையா னிரையை விட்டனர். (31)

தொறுவினை விட்டிழிந் தோடிச் சூன்முகி
னிறைதரு வரைநெறி முழைஞ்சிற சார்ந்தனர்
பிறழ்புறழ் காலிக ளனைத்தும் பின்னர்விட்
டறைகழல் வீரரங் கவர்பின் னேகினார். (32)

கந்தர மடைகிடந் தலறுங் கந்தரத்
துந்துதோ லெருத்தினி லுகளும வெள்ளறு
கிந்துழை வரக்கரு மிரலை யென்றுதா
வந்தர முகட்டினி லமர்ந்து வைகினர். (33)

தடவரைக் குடுமியிற் சார்ந்த மாற்றலர்
புடைபடு மருவியின் வதிந்த பூபமுண்
டிடைபடு மின்னலுற் றிருக்குங் காலையின்
மடமைசேர் காபிரி லொருவன வந்தனன். (34)

மாறுகொண் மனத்தினர் வதன நோக்கிநின்
றேறுகொ ளரியிவ ணொரன் றேறுதிடக்
கூறினர் புலரியிற் றொடுத்துக் கொற்றவெவ்
வீறுடை விற்குனித் தடர்ந்து விட்டனன். (35)

விட்டவக் கணைகளான் மெலிந்து மன்னவர்
பட்டன ரறுவரப் பறந்த லையின்மேல்
மட்டிலாக் காயத்தின வதைக்கின் றாவர்
தொட்டணி கலன்களுந் தொடர்ந்து பற்றினன். (36)

வீரரை வீழ்த்தியந் நிரையுங் கொண்டிவண்
டார்பெறு மெவரையுந் தடிய வென்றுவந்
தேர்பெறு கூற்றென விருக்கின னிவன
சீர்பெறு திறலினைச் செப்ப வல்லதோ. (37)

சொற்றசொ லனைத்தையுங் கேட்டுத் தோமற
விற்றையி னுங்குபே ரெழுமன னென்றலைப்
பற்றியிவ் வுழைவுகப் படுத்து வேறென்று
னற்றமி னுல்வரோ டவனு மெய்தினன். (38)

ஈங்கிவ ணைவரு மெய்துங் காலையில்
வாங்கிய சிலையினா வாய்தி றந்துநின்
றேங்கிய மனததினீ ரென்னை யாரெனத
தாங்கினி ரெனறனர் தவத்தின மேலுளார. (39)

கடனிலம் புரந்திட வந்த காவல
திடமுல வறிகிலோஞ் செப்புவீ ரென்றுரா
மடமைசேர் மனத்தினர் வதன நோக்கியே
தொடைகமழ் புயத்தினர் சொல்ல லுற்றனர். (40)

அருட்கடம் பூண்டவர்க் கன்ப ராகிய
மருக்கமழ் புயத்தசு ஹாபி மாரகளிற்
றிருக்கறும் பெயர்சல்மா வென்னுந கீரனியான்
றருக்குறு மக்வகு தந்த சீயமே. (41)

வே று.

குடைநிழற் கொண்டற் குள்ளே வீற்றிடுங் கொற்ற வர்க்கே
யடிகளா வலங்கொ டுத்த வாண்டவ ஞனை தூங்க
ளுடல்செறி யுயிரை யெல்லா மோட்டுவன் கணையொன் றாலே
நடமுடைப் பரிக டாவி நடத்தினும் பிடிக்க மாட்டீர். (42)

இன்னலுற் றுளமி குந்த பசியினு லிடைந்த தாலே
கன்னவில் புயத்தீர் பாவம் புண்ணியங் கருத்தி லெண்ணி
நென்னலி லடுங்கஞ் சத்தை நுகர்நதிட நேர்நதே னல்லாற்
செங்நெல்சூழ் நகரங் காண்ப தபெனச் செப்பி னூரால். (43)

வே று.

வஞ்சமும் விளளலும் வளரும் பாவமு
நெஞ்சக மாட்டியே நேரு மைவரு
மஞ்சலி லாவுரைக் கஞ்சிப் பிண்டிசேர்
கஞ்சமுண் டாரநதிடுவ கபவாச் சேர்நதனர். (44)

சிலைபொரு தகன்றதோட் சிஙக வேறனுர
கலைநிலாத் தவழுங்கந தரத்தெ ருத்தினின்
மலைவற மனமகிழ்ந் திருக்கு மெல்லையி
னிலைபெறு மனத்தவா செயனி கழ்த்துவாம். (45)

வே று

பணித்தலை மீதிற் கிடநதபா ரனைத்தும் பணிந்திட வெழுமதினு லின், மணிக்தடந் துரநத வாங்குவிற் றடந்தோள் வயவசுஹாபிகள் சூழத், துணித்திரு டொக்குங் கதிரெழு மேனித் தூயவ ரிருக்குங்கா லையினி, லணித்திற பாரு வநதன ரடிகீழ்ப்பணிந்தன ரகமிகமகிழ்ந்தே

இருநில மளக்கு மொருதனிச் செங்கோ லிறையவன் றூதினை நோக்கிப், பொருதிறல் கத்பான கூட்டநாற் பதின்மர் புகுந்து காபா வினை வளைநது, வருவிறற் றெருருவன் றலைதனை வீழ்த்தி யானிரை யனைத்தையும வெளவித், தருதிரைக் கடல்போலேகின ரொன்று சாற்றி னர் பவளவாய் திறந்தே. (47)

உலகமீக் கூறும் பெரும்புகழ்க் குரிசி லுள்ளகம்புழுங் கிடருக்கி, மலை யெனும் புயங்க ளினிதெழுந் தோங்க வருபடைக் கலனெடுத்தணிந்து, முலைதிக ழயில்வேன் மன்னர்கள் சூழ்ந்து மொய்த்திடப்பரியின்மீ தே றிப், பலபல வியங்கண் முழங்கிட நடந்து போயினர் பயமறை நிறுத்த.

வடலர் மாலை புயங்கிடந் திலங்க வொருநபி சகுதினை நோக்கித். தேடரும் பரியு நீருமுன் னணியாய்த் திரண்டெழுந் தொல்லையிற்செ ன்று, கோடுகொண் டெழுந்த நெடுவரைக் குடுமி யிடங்களும் பலபல குறுகி, நேடிய நிரைக ளனைத்தையு மீட்டு வம்மென நிகழ்த்தின ரன்றே. (49)

கடல்கொளக்குறைந்த கண்ணகன ஞாலங் காத்திடு முகம்மதைப் போற்றிப், படவர வுலக மிடிபடத் தாவும் பரிகளுந தானையுஞ் செறிய, வடல்செறி வீரர் சகுதுவெம் பரியை நடத்தின ரதற்குமுன் விரைந்து வடவரை பிதிர்ந்து தூளெழத் தாவும் வாம்பரி அகுசம்போ யினரால்.

வேறு.

கவியிரு ளுடைத்த வேற்கைக் காவலர் சல்மா வென்போ
ரலையென வரும்ப தாதி கண்டுபினரு பாரித
துலைவர மன மகிழ்ந்தா ரொணயுற லகுச மெனனும்
புலியதி ருருமிற் சீறி யெய்தினா புயங்க ளோங்க. (51)

அரிகண்மேற ழாசி போட்டங் கடலெழுப போதில சல்மா
வரிபொரு வயமா வென்ன மகிழ்நதெழுந தோடி வந்து
பரியினைப் பிடித்துக் கொண்டு பறலா மீநிற செனறே
யொருவரா யடர்நது புக்குற் றடத்துத லரிய தாமால. (52)

புனைமயிர்ப் புரவி மீதிற் போந்திடு மள்ளர் தம்மிற்
கனைகழல் வீரர் மிக்குக் கணிபயில ரதனி ருலை
யனையவ ரிடத்திற் சேற லனறெனு வுரைதத தெனறூ
நனைமலர் செறிந்த திண்டோ ளரபதி யுளம கிழ்நதே. (53)

அடுசமர்க் கிடியே றன்ன வடல்சல்மா வதனை நோக்கி
நடுநிலை நினைற நாயக ருனனீா விலக்க லனறெனை
றிடுகழ லகுச மென்போ ரியம்பிட வதனைக் கேட்டு
வடிவுடை வேற்கை வீரா வாசியை விட்டா ரன்றே. (54)

கூற்றொடு பொருதிறற் கொற்ற வீரர்மேற்
காற்றெனச் சுழலும் வாம்பரிக டாவிவந்
தேற்றரு மெனச்சம ரியையுங் காலையிற்
சாற்றபு துற்றகு மானுஞ் சார்ந்தனன். (55)

வடவரை துகளெழ நடத்தும் வாம்பரி
புடையினிற் செறிந்திடப் பொடிப டுந்துகட்
படலையிற் கதிரவன் மறையப் பாரரா
வுடனொளி நெளியவந் துருமிற் சீறினான். (56)

சீறிவாய் மடித்திதழ் கவ்விச் செங்கர
மூறெழப் பிசைந்துவா ளோங்கி வீசினா
னேறரி யெனவரு மகுச மென் பவர்
வீறெழ வாளினா லொட்டி வீசினார். (57)

வீசலுக் கிடுகினா லெற்றி விட்டெழுந்
தாசையுந் திசைகளு மதிர வார்த்திடுந்
தூசியை நடத்தினன் சுற்று வாளெறிந்
தேசினா வையக னிகலுஞ் சிந்தையான். (58)

வெட்டவொண் கிடுகினாற் றாங்கி மன்னவர்
விட்டனா தண்டமொன் றேந்தி வீழ்ந்திடத்
தட்டல கதனிற் றாங்கி வெய்யவன்
மட்டறும படைகளியா வையும்வ ழங்கினான். (59)

வேறு.

எறிந்தவப் படைக ளெல்லா மிடுங்கிடு கதனால் வீழ்த்திச்
செறிந்திடும் வாட்கொண் டோங்கி வெட்டினா பரியின் சென்னி
தறிந்திட வீழ்ந்தெழுந்த பாதகன் றடக்கை வாளா
லிறந்திடப் புயத்தின மீது தாக்கினா னொருவைலகா (60)

திறலுடை யகுச மென்னுஞ் செம்மல்வீழ்ந் திறந்த போதிற்
கறுள்வயப்பரியை வௌவி யேறினன் பரிக டாவி
விறலுடை யபூகு தாதா வென்னுமவ் வீரர் வந்து
மறமுடைக் கயவ றன்னை வீழ்த்தின ரொருங்கு வாளால். (61)

வேறு.

மடமபு துற்றகுமானி றந்திடக்
கடகரி நிகரசல்மா வென்னுங் காவலர்

புடையினிற் செறிந்தடும் புரவி மீதினிற்
றொடைதொடுத் தார்த்தினர் தொடர்ந்து பற்றியே. (62)

தனவுமிழ் சரத்திறற் றடியுஞ் சூலமி
னினமல ரசூகு தாதா நயந்துபின்
மனமகிழ் தரவவை யிடத்தின் வைகினார்
சனைகழ னினர்சல்மா காவி னேகினார். (63)

விரைவொடு மொழுந்துவிற் குனித்துப் பின்றொடர்ந்
திரையுரு மெச்சினத் தெய்யு மம்பெலாம்
பாருரா மீதினிற் படிய விட்டனர்
வரியளி முரலறு மலர்ப்பு யத்தினார் (64)

ஆயிரஞ் செங்கதிர்ப் பரிதி யாதவன்
சாயைமேற் சாய்தரு மளவும் பின்றொடர்ந்
தோய்விலாப் பகழிதொட் டொருமித் தார்த்திடக்
காய்மனக் காபிர்கள் கலைந்து டைந்தனர். (65)

வாட்டிறல் வீரமும் வாம்ப ரித்திரட்
கூட்டமும் விரைந்துபோய்க் கோத்தி ரைக்கணின்
பாட்டுறை யிலஞ்சியுட் படிந்த வூற்றிடை
நாட்டமுற் றுறைந்தனர் நார மார்ந்திட. (66)

மடியினிற் கவலமொண் டருந்து மெல்லையிற்
கடதடக் களிறெனுங் காளை பின்றொடர்ந்
திடிபடு மழைபொழிந் தென்ன றெய்தன
ரடுசாம் புயங்களி லழுந்தித் தைக்கவே. (67)

ஈரமின் மனத்தவ ரிடைந்துபுட்கர
மார்தவில் லாமையா லறித்த வித்தலைந்
தேர் கொள்வாம் பரியினோ டேகி யோர்மலைச்
சார்புறு கடவையிற் சார்ந்திட் டார்களால். (68)

அரியெனப் பின்றொடர்ந் தாண்டோர் வீரன்றன்
வரைபுயங் கிருதர வாளி யெய்தலும்
வெருவியீ ரத்திரி விடுத்திட் டேகினன
வரதிலக் காளையும் வெளவி னாரரோ. (69)

தெள்ளிய வறன்மனச் சிங்க வேறனார்
எள்ளறு மிடைவையி னிருத்தறீதென
விள்ளரு மனத்தொடு மீளு மெல்லையி
னள்ளிலை வேலினு மிருவந் தாரோ. (70)

சிறியதந் தையரெனுஞ் செம்ம லன்புட
னறைபயத் துருத்தியொன் றன்றி நானிலத்
துறவியி னூறிநீர்த் துருத்தி யொன்றுமா
நிறைவுறக் கொடுத்தன ருரிய நீர்மையால். (71)

ஆன்றிரு கரத்தின ராமி றன்புற
ஊன்றிய சலிலத்தி னுலுவுஞ் செய்தபின்
றேன்றரு பயசினைச் சிறப்பி னுண்டனர்
மான்றிகழ் புயசல்மா வென்னு மன்னரே. (72)

வேறு.

மால ளித்திடும் பசியினைப் போக்கிமாற் றலரோ
போல மிட்டெதி ருடன்றிடு முவளக்கத் துழையிற்
சீல முற்றவர் வந்தனர் வந்தனர் திருச்செங்
கோலு யர்த்திமண் ணிலம்புரந் தளித்திடுங் கோமான். (73)

சூன்மு கிற்குடை நிழற்றிடச் சுற்றியெம் மருங்கு
மான்ம தங்கமழ்ந் திடமறை வானவர் வாழ்த்தச்
சேனைவீரர்க ளொடுஞ்செறிந் தெய்துமப் போதி
லூணி றைத்திடும் வேல்சல்மா வந்தன ருவந்தே. (74)

கந்த முங்கிய வரைப்பய வானவர் களித்துச்
சிந்தை கூர்தரப் போற்றிய நாயகர் திருமுன்
வந்து செம்மல் ரடியிணை யிறைஞ்சிவவ் வியதை
முந்த விட்டனர் துதித்தனர் முறைமுறை வாழ்த்தி. (75)

வேறு.

குடவயி றுளைந்து கூப்பிடும் மேழ்வாய்க் கூன்பிடர்ச் சுரிமுகச் சங்க, மடலவிழ் முளரிப் பொகுட்டினி லுயிர்த்த மணியினைப் பவள வா யன்னங். கிடமுறச் சினையென் றிறையினு லணைத்துத் திளைத்தடை கிடக்கும்பல் வலப்பா, னடமுடைக் கவனப் பரிபுடை சூழ வந்தினர் நபிமுகம் மதுவே. (76)

சேயுயர் கடவு ளாவலி னிழற்கீழ்ச் சிறப்புடன் சகமய ருவந்து; பாயிருட் படர்போர்த் துறைந்துகண் வளரப் படர்திரைக்குடதிசை

புகுந்தான், மாயிருட் குடம்மை சீத்துவிட் டெறியும் வாண்மதி வெண் டிரை முகட்டி, ஞயுர மபிதா னம்முடைக் குரிசிலானனம் போலுதித் ததுவே. (77)

மூயலடை கிடக்கும் பானிலா மதிமுன் னீரகட் டிடையுதித்துல விப், புயல்செறிந் தேகா வியோமமீ தெழிந்தான் படையுடுக் கணம்பல மிளிரக். கயவுடைக் கமலந் திளைத்திடும் படுகாக் கடையினிற் கலித் தெழும் வனசஞ், செயிருறக் குவியப் பானலம் விரியத் திகழ்ந்ததந் தாத்திடை செறிநதே. (78)

மாற்றல ரஞ்சவிறல்புரி சல்மா வவ்விமுன் கொணர்ந் தவைதன்னி லூற்றமிக் குளதோ ரொட்டகையதனை யுவப்பொடு பிலாலினி தறுத் துத், தோற்றிய வீரற் றுணிபிடர்த் தசைகள் சுட்டினிதளித்தனர் புகழி, ஞற்றசால் வரிசை நபிநபி ஞருமருந்தின ரகமிக மகிழ்ந்தார.

மற்றுள தெவையும் பலபல விதத்திற் சமைத்தனர் மனமுற வரு ந்தித், துற்றிய மகிழ்வி னியாவரு மருந்தார் துதிதரு முகம்மது நபி ஞர், நற்றுறை விளக்கு மெழினமுக நோக்கி நணிபுகழாரணக் கடலே, கற்றவற் காக்கந் தரும்பெருந தவமே யென்றெதிர கழறுவர் சலமா.

வேறு.

மாண்டலி லமரும் வாவும் வாசியுஞ்
சேண்டனி விறத்தலி விறந்த காவத
மாண்டகை யாறுண்டோ ரகலுட் சேர்ந்தனர்
பாண்டரு மளியினம் படரு மாலையீர். (81)

திசைக்களி றெருத்திலவீற் றுருக்குஞ் சேயிழைக்
கிசைக்கல னெனரு மதீனத் தின்னுறைக்
குசைப்பரிக் கொற்றவ னூறு பேருட
னிசைத்தெனை விட்டிரா லவர்பின் னேகியே. (82)

வல்லையிற் சென்றுபோய் வளைந்து மாற்றலர்
பல்லணப் பரிகளிப் படியில் வீழ்ந்திடக்
கொல்லுலை வேலினற் கோறல் செய்தியா
னெல்லையி லடைகுவ னுண்மை யீதென்றார். (83)

மறைவளம் பழுத்தநா வள்ளல் வாயெயி
றிறையொளி யிருளற விலங்க மூரல்செய்
துறுபரி வீரர்மேற் சேறி யோவென
வறைதா விறல்சல்மா வழங்கி தெற்கென்றார். (84)

சொற்றிடு முறைவினைக் கேட்டுத் தூய்மையி
னற்றவ முடைமையாய் நன்று நன்று நின்
வெற்றியும் வீரமும் விளம்ப ரீதென
முற்றிய தவத்தினர் மொழிந்திட் டாரரோ. (85)

வேறு.

கோரவாம் பயுமேற் செல்லுங் கொற்றவர் தம்மின மிக்க
வீரரா மபூகு தாதா விறலுடை வயவர் தம்மிற்
றூநடை சல்மா வென்னுந் தலைவரிவ் விருவர்க் கொப்பாய்ப்
பாரினி லில்லை யென்று பகர்ந்தனன் முகம்ம தன்றே. (86)

வேறு.

சேனையும் பரியின் மன்னருந் திண்டோட் செம்மலுந் துயின்றனர் செறிந்த, மாநில மீதி லுதித்தபல் லுயிருந் துயின்றிடவெழு பரிவாவிப், பானுவிண்ணேகத் திரைகடலுடுத்த பார்மகளவிழித்தனள் விழித்துச், கோனெறி தவறாக் குரிசிலு மெழுந்தார் குறைகடற் சேனையு மெழுந்த. (87)

வேறு.

பற்றலர் போட்டிறந்த படைக்கலன் பரிக ளியாவும்
வெற்றி கொள் வீரர் வெளவி விரைந்துமுன் கொணர்ந் தளிக்கக்
கற்றைவாற பாய்மாக் காரன் பங்குமோர் காலாட் பங்குங்
கொற்றவேல் சல்மா வுக்குக் கொடுத்தனர் பிரிய மாகி. (88)

ஆட்டிறல் வீரர்க் கெல்லா மருளியச் சுவமீ தேறி
வாட்டிறல் சல்மா வென்னு மன்னரைப் பிறகே வைத்துப்
பூட்டுசெஞ் சிலைக்கை வள்ள னடத்தினர் புயங்கள் விம்ம
நாட்டிய வரித மெல்லாங் கமழ்ந்தன நான வாசம். (89)

உய்யவண்ண மறியாக் காபி ரூரம்மறை கொட்ட வார்த்துப்
பெய்முகி லிடித்த தென்னப் பேரிகை முழங்கி யோங்க
வையக மடந்தை யேறு மதகளி றெருத்தஞ் சாயக்
கொய்சுவற் பரிகள் செல்ல நடந்தது பதாதிக் கூட்டம். (90)

பணைமருப் பிரட்டை வேழப் பகடுதொண் டலத்தி னீண்ட
கணியருப் படைமு றித்துக் கயமுனித் திரளுக் கிந்து
பிணையினை யணைத்துச் சென்று பிலம்படு நிகுஞ்சம் வீழ்த்தி
யணைவுறப் புணருஞ் சார லருவரை யிடமுங் கண்டார். (91)

வேறு.

அலங்குளை யுரல்வாய்க் கவையடிக் கேழ லருவிநீ ராடு மிடமும்,
வலம்பட வெழுந்த நெடுமயிரக்கவரிப் பணைமடுச் சுனைதிறந் தமுத,
நிலம்படத்தாரத் தகமென விளங்கு நெடுவரையிடங்களுங் குறுகிச்,
சலம்புரி மந்தி தாவறி யாததரு விடங்களும்பலகடந்தார். (92)

சலைகறித் தருந்து மௌவலுங் குருந்துங் கடுக்கையுஞ்செறிந்திடு
நிழற்கீழ், நிலைபெறு தலையு நெற்றிவெண் சுட்டுக்குருளையுநெருனலீன்
றலவு, முலைமறாப் பறழும் புனிற்றிளங் கன்று மோட்டிளமேதி யுங்கம
லஞ்சூ, லலைவுறக் கிடந்து மறிந்துளைந் தலறுமானி னம்பலவுங்கண்
டனரால். (93)

உழையநட் பள்ளி யணைமிசை பயில வுவலையின் படற்கத வடை
க்கு, மழைபொரு கூந்தல் வாறயி ருடைத்த மத்திற லுடை படுங்கி
வலை, யிழைபடு மார்பிற் செறிந்திடத் தாள வடங்கிடாதிலங்குவ போற்
றுங், தழைபடு குரம்பை முலைநிலங் கடந்துபோயினர் சலதரக் குடை
யார். (94)

ஊற்றுநீர் வறந்த சேற்றுநீர்க் கூவலுழையிடத் துழைபினமறுகி,
நாற்றிடி நாவா லசும்பினை நக்க நறுநதுளி யொனறிலா தெழுநது,
சாற்றுருத் தெறியுங் கடுநதழற் கானத்திடைவிடர் கான்றெழும் புகை
யைத், தோற்றுநீ ரெனப்பாய்ந் துலவியே திரியுஞ் சுரங்களுங கடநத
னர் தோன்றல். (95)

இரும்பினை வடித்த மோட்டட லெருமை யிருங்கருங் குவலையங்
கறித்துக், கரும்பிண ரெனக்கால் பெயர்த்துக்காயித் திறைஞசுங்கதி
ருடைச் சாலியை யுழக்கி, யருங்கரும் புடைநதுசாறெழக் கயவாயசைத்
தசை போட்டுக்கண் டுயிலச் சுரும்பினங் கடைவாய் தவழ்நதுபண்
ணலம்பிச் சூழ்ந்திடுங் கழனியுங் கண்டார். (96)

இருள்படக் கவிந்து கொண்டல்க டுங்கு மிளமாச சோலையினீங்
காக், கருவிள மலர்கட் கலாபமே காரங் களித்துநின் றுடிட மாவின,
வருங்குயில் குடைந்து தளிரினைக் கறித்து மழலை வாயழற்றிடவிசை
யிற், றிடுமக வகலா தகடுற மநதிச் சாகம்பஞ் செய்வதுங் கண்டார.

வெண்ணிறப் பேழ்வாய்க் கருமுகைச்சங்கம் விளைந்தருள் முதிர்ந்துளைந் தலறிப், பண்ணுறப் புலம்பி மணியினை முயிர்த்தபங் கயவகழி நீருடுத்துக், கண்ணகன் ஞால மொருங்கொரு புடையிற் கவினுற வமைத்துவா னவர்க, ளெண்ணுற நிவந்த புரிசைசூழ் மதினத் தேகின மிடுமுகில் கவிப்ப. (98)

இருவிசும் பூர வலஞ்சுழன் றேகு மெழுபரிப் பரிதி கண்டேங்கி, வெருவறும் வங்கூழாட்டிட நுடங்கும் வெண்கொடி மாடமுஞ் சிறந்த, வருமலை மழலைச் சிறுவிரி னெடுந்தேர் குழித்திடு மணிமறு கிடமுங், கருமுகி லகலாச் சுடுநிலத் தமைத்த சாலையும் பலபல கடந்தார். (99)

சொற்பொருள் சிதாகப் பாயிரம் பாகைச் சுருதிநூல் வல்லவர் தம்பாற், கற்பவரோது நனியறச் சாலை கடைத்தலை மறுகையுங்கடந்து, விற்போதி தவள வெண்ணிலா மணியால் வியனுறத் திருத்திய றவுலா விற்புகுந் திருந்தா ரிமையவர் பணிகேட் டிறைஞ்சிட வருமிற சூலே.

சல்மா பொருதபடலம்-முற்றிற்று.

ஆகபடலம்-45-க்குத்-திருவிருத்தம்-2666.

---



# உறனிக் கூட்டத்தார் படலம்.



மறைவிளை யாடி நாத்தழும் பேறு முகம்மதாண் டிருக்குமந்நாளிற், குறைபடு முறனிக் கூட்டத்தி லெண்மர் வநதனர் குணமுடனேகி, யறைகழ லரசர் பணிபதாம் புயத்தி லதிநதிடச்சிரசினை வைத்து, நிறைவறக் கலிமா விளைப்பகர்ந திருந்தார் நிறைபழற் புகுதுநீர் மையினர்.

கடையளந் தறியாப் பெருநகரதனி லிருநதிடுங் காலையிற் சிறந்த, வுடறடு மாறப் பருவர றேய்வந் தடைநதிட வுடைந்தனா பெரிதாய்ப், படவர வுலகம் பொதுவறப் புரந்த பார்த்திவ ரெண்மரை நோக்கி,மடைசெறி மறைநா வலம்புசெந நாவான் மகிழ்வொடும் பார்த்தரு ளினரால்.

வேறு.

வரிநெடுங் கழுத்த னீரு மருந்தெனு மதனின்பாலும்
புரையற வருந்தி னீரே வியாக்கையிற் பொறுத்துத் தோன்றும்
பருவர லணங்கு நீங்கிப் படிவமார்ந் துறைவி ரென்னச்
சுருதிநூன் மறுத நாவாற் சொற்றன ரவர்கட் கன்றே. (3)

வேறு.

தொடுகடல் ஞால முழுதும்போர் புயத்திற் பரிந்திடுந் தோன்றலை நோக்கிப், பிடர்செறி மதத்த வரிநெடுங் கழுத்தன் மடியினிற் பிலிற்றி யபாலு, முடைசெறி நீருமருந்திடக் கிடையா தெனமொழிந் தனரும் பாவ, மடைகிடந்திருண்ட கொடியபுன் மனத்தராகிய வெண்மருமன்றே

கறைகுடி யிருந்த புலால்வெறி சமழுங் கவரிலை வேலுடைக்குரிசி, லிறைபொறை யறியாக் கமவரை நோக்கி நிகழ்த்துதற் கரியஸக் காத்தின், றொறுவமர்ந் துறையு மவணிட மேவித் தோன்றிடும் பிணியின் னறவிர,வுறைபசும்பாலு முவர்படு நீருமுண்டிடப் போதிரென் றுரைத்தார். (5)

மணிமுடி யிடறி வடுவிருந் தொளிரு மலர்க்கழ லிறைஞ்சிமுட் செறிந்து,பணர்விரிந் தெழுந்த பாதவக் கடத்து னிறைந்திடுந் தொறுவிடமுறைந்து, நிணமுணர் கிடந்து முடைவெடி நாறு நீருடன பாலு முண்டவெம்,பிணியொடு மிடியு முடைந்தன தேகம பெருகதினி திருக்குமந் நாளில். (6)

உடைதிரைக் கடல்கான் றெழுந்தவெவ் விடம்போ லுருவெடுத் திடும்வய வீரர் கடையுக மளவு நின்றிடு மறைநேர் கடந்துபுங்கு பிரிவினைத் தொடர்ந்தங், கடையுடைத் தெறியுங் கோலுடைத் தொறுவ ரனைவரு மெலிதர வீழ்த்தி, நடைபடிந் திடுங்காற் றொறுக்கணங் கவர்ந்து போயினர் நாகிருட் புகுவார். (7)

தருமறை வேத மொழி செவி யறியாத் தறுகணர் கொடியவர் நாளு, மிருளுறு மூறனிக் கூட்டத்தா ரெண்மரியற்றிடும் பாதக மனைத்தும் வரியளியலம்பு மலர்த்தொடை வேய்ந்த மணிக்குடந் தூரந்தோட் செம்ம, றிருமல ரடியின வீழ்ந்துவாய் புதைத்துஞ் செப்பினன் றொறு வரிலொருவன். (8)

கலிபுறந் தூங்கு மொருதனிக் கோலாற் றாத்திடும் கபியுளம் வெதும்பி, மலையென வளர்த்த வுலம்பொருந்திண்டோன் மன்னவர் மதிமுக நோக்கி, நிலையிலா வுறணிக் கூட்டத்தா ரென்னு நீசரைப் பிடித்துவம் மென்ன, வொலிகுரற் பேழ்வாய் மடங்கலே றென்ன வுவந்தெழுந்தனர்சில வீரர். (9)

வரைத்தடத் திண்டோண் முகம்மதுகமல மலரடி யிணையிணையிறைஞ்சி, யிரைத்திடுங் கழற்கால் பூட்டினர்கவச மிட்டனர்தொட்டனர் தொடுதோ, னிறைத்தவிற கதிர்வாட் கனகவண் சூலநேமிதோ மரமழுத் தாங்கி, விரைத்தவ ணேகிவளைந்தனர் நிரையை மீட்டன ரெண்மரும் வெருவ. (10)

தாக்கினர் கரத்தைப் பின்னுறப் பிணித்துத் தளர்வறக் கயிற்றினு விறுக்கி வீக்கினர் நடத்தித் தொறுங்கணஞ் சாய்த்து விரிதலைப்பொரியரைக் கான, நீக்கினர் வேலையறலறப் பருகு நிழன்மறை தவழ்கொடி நுடங்கு, கோக்கடை மறுகுங் கடந்துமா மதமார் குருநப மலரடி தொழுதார். (11)

அருட்கடம் பூண்ட மலர்விழிக்குரிசி லடிதொழு மன்னரைநோக்கி, மருக்கமழ் புயத்தி ரறநிலை தவறும் வன்கணர்க் காக்கினையென வென், றுரைத்தனர் காலை யிறையவ னருளா லுயர்நிலை யிழிந்து வானவர் கோன், றரைத்தலத் திறங்கி யாயத்தொன் றுரைத்துச்சார்ந்தனர் நபியுள மகிழ. (12)

வீறுபெற் றுயர்ந்த வாயத்தின் பொருளை விரித்தெடுத் தியாவர்க்கு மியம்பி, மாறுகொண் டெழுந்த கள்வரெண்மரையும் வருந்திடக் கால்கர மாறாய்க், கோறல்செய் திடுமி னென்றன ரறுகாற்குளித்திடு மிதித்தலிற் பிதிர்ந்து, தேறல்கோப் பிளிக்கு நறுமலர்த்தெரியற் செம்மல் செல் மறைவதழ் வாயால். (13)

சுணங்கணி கருங்கட் டடமுலை யுமிழுந் துணைவரைப் புயத்தினர் கொடுபோய், மணங்கெழு முரச முழங்கிடு மதீன மாநகர்ப் புறத்தினி லிருத்த, நிணங்கமழ் கருவிக் குரம்பைகள் சுமந்த மஞ்சிக னிழல் விரிந்திலங்கும், கணஞ்செறி கத்தியொன்றினை யெடுத்துத் திட்டினன் கனற்பொறி தெறிப்ப. (14)

பிறையென வளைந்த சாணையிற் றீட்டிப் பெருஞ்சுவப் பிரமம் விழ்ந் துலவுங், கறைபடுங் கயவ ரெண்மர்முன் னிருந்து கால்காம்

பொருத்தினை யசைத்துக், குறிவரை கோலிக் கதிர்விசித் திலகுய் கூன்
செறி வாளினு வீர்ந்தான் றறைபிட நனைந்து சேறெழச் செந்நீர்ததும்
பிடப் புலான்முடை கமழ. (15)

கால்கர மாறு யீர்ந்திட புலம்பினர் கதறினர்தேக, மேல்படு பாற்
கல், வழுந்திடவுருண்டு விம்மினர் பதறினர் விழிநீர், சூல்படுமேகம்
பொழிந்தன வென்னச் சொரிந்தனர் வாய்வெரீஇ யினர்நற், சிலமு
மலனுந் தேய்த்தெறி தறுகட் டமைசெய்கொடுங் கொலை மனத்தார்.

கொலைபடு முறனிக் கூட்டத்தி லுறைந்த கொடியவ ரெண்மரைக்
கொடுபோ, யலையொலி யென்னச் சிதடிகை யலப்பும் அற்று வெனுங்
காட்டினுட் படுத்தி, யிலைவடி வேற்கை வயவர்களெழுந்து வந்தன ரவ
ணிடை கிடந்தோர, நிலைவுறமயங்கி வீழ்ந்தனர் சிலர் தம்முயிருடைந்
திறந்தனர் சிலரே. (17)

உறனிக் கூட்டதார் படலம்:முற்றிற்று.

ஆகப் படலம்-47-க்குத் திருவிருத்தம்-2683.

ஹிஜுறத்துக் காண்டம்.

உமறுப்புலவரவர்கள் பாடியதளவு

முற்றுப்பெற்றது

ஆகக்காண்டம்3க்குப்-படலம் 62க்குக்

கூடிய திருவிருத்தம்-5027





பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

# உமறுப் புலவரவர்கள்

# பூர்வீக சரித்திர சுருக்கம்.

---

ஆக்கல், அழித்தல், இரட்சித்தன்முதலான சகல வல்லமைகளும்,
பொருந்திய அல்லாகுத் தஆலாவென்னு முண்மைக்கடவுளி னொளியில்
நின்றுமோ ராணிமுத்துப் பிரமாணந்திரண்டு ருவமைந்து சகலபடைப்
புகளுக்கும் வித்தாகியும், இலச்சித்திருப்பது நான்காயிரம் நபிமார்க
ளுக்கு முத்திராங்கமானவர்களாகியும் முன்னுதித்துப் பின்றோன்றிய
செய்யிதுனா செய்யிதுல் முறுசலீன், ஷபீகுல்முதுனபீன், ஹபீபுறப்
பில் ஆலமீன் முகம்மது முஸ்தபல் முகுத்தார் சல்லல்லாகு அலைகிவ
சல்லமவர்கள் ஹிஜுறத்து எழாம்வருஷம் றஜபுமாதம். இருபத்தா
றுந்தேதி ஞாயிற்றுக் கிழமையன்று திருமதீனமா நகரத்தில் வெள்ளி
மலையு மொவ்வாதபள்ளிவாயிலில் சுகுபு தொழுதபின்னர், நான்கு யார்
களு மற்ற அசுஹாபிமார்களும் பூரணசந்திரனைச் சூழ்ந்தவட்டம்போற்
சூழ்ந்திருக்கத், தாங்கள் நடுவிலிருந்து துப்புரவான கற்பூரவாடைகம
ழும்வாயைத்திறந்து ஹதீதுகௌளு சொல்லிக்கொண்டிருக்கும்போது

அப்துல்லா இபுனுபாகிறென்னும்பாயப்பருவங்கழிந்த வோர்றபி
மகா விரைவாகப் பள்ளிவாயலிற் கூடியிருக்குஞ்சபைமுகதாவில் வந்து
நின்று, நபிநாயக மவர்களைப்பார்த்து (அஸ்ஸலாமு அலைக்கும் யாரசூ
லுல்லா) வென்றுசலாம்சொல்லிப்பின்னர், அல்லாகுத்தஆலாவின் திரு
த்தூதாங்கரே, முகம்மதே, அகுமதே யேழையடி யானுகிய நாடி
வந்த காரியத்தை தேவரீர் தாங்க ளன்புகூர்ந்து கேட்டருள் செய்ய
வேண்டுமென்று மிகவு மிரக்கமாகச்சொன்னர். அதுகேட்டு, றசூல்
நாயக மவர்கள், தாங்கள் செய்யும் ஹதீதுப்பிரசங்கத்தை நிறுத்தி,
அவ்வறபியைச் சபையிலிருக்கச்செய்து, அவரைப்பார்த்து, ஓகே, அப்
துல்லாவே நீ ரென்னகாரியத்தை நாடிவந்தீர்சொல்லு மென்றூர்கள்.
அதற்கறபி, நபிநாயக மவர்களோடும் யாறசூலுல்லாவே, கதீஜாவென்
னும் பெயருள்ள என்மூத்தமகள் பாலீக்கென்னும்ருதுவாகியிரண்டு

மூன்றுவருஷமாயிற்று இப்போது அவனுக்குப் பேசியிருந்த மாப்பிள் ளையாகியசகுசென்பவர், இன்றுதிங்கட் கிழமையாயும், றஜபுமாதம் பிறையிருபத் தேழாயுமிருக்குகின்ற நல்லமுகூர்த்தநாளில், எனக்கு நிக்காசென்னும் விவாகமங்கள பொருத்தத்தைச் செய்யாதிருக்கில் நான் ஷாமு ராச்சியத்திற்குப்போய் இரண்டுமூன்றுவருஷம் நின்று வியாபாரஞ் செய்துகொண்டுவந்து பிறகுளப்படியிருக்குமோ அப்படிப் பார்த்துக்கொள்ளலாமென்று விட்டமனமாகச் சொல்லுகிறார் அதைப் பார்த்தால், நான்பொருளில்லாதஏழையென்றோ, அல்லது, வாஸ்தவமா கத்தான் சொல்லுகிறாரோ யாதோ வெனக்குத்தெரியவில்லை, என்று லுங், குமர்நிமிர்ந்ததாக இருக்கிறபடியால், இப்போதே அந்த நிக்காகு வேலை நிறைவேறிப் போகிறது நல்லதாயிருக்கும், அதற்காகச் செல விடுகிறதற் கென்னிடத்தி லொருக்காசுமில்லைநாயகமே, அறுஷிற் காலி லிட்ட கபுகோடு மேறி ஆண்டவனிடத்திற் பேசிவந்த தாயகமே, அகு மதே, முகம்மதேயன்று போற்றிப் புகழ்ந்து சொன்னார்.

அதுகேட்டு, நபிநாயகமவர்கள், அவ்வப்துல்லா அறபியைப் பார்த்து ஒகே, அப்துல்லாவே யும்முடைய மகள் விவாகத்திற்குத் தேவை யான சாமக்கிரிகைக ளென்னென்னவேண்டும் அவைகளை மறதியில்லா மற்சொல்லுமென்று, தங்கள் கணக்கர்களில்நின்று மொருவரையழைத் து, அவரோடுமிந்த அப்துல்லா அறபிசொல்லுகிற சாமக்கிரிகைகளை விபரமாகக் கேட்டெழுதி யந்தத் தொகையை எனக்குச் சொல்லுமென் றுசொன்னார்கள், அதுபோலேகணக்கர், அப்துல்லா அறபி யொன் றொன்றாகச் சொல்லுகிற சாமக்கிரிகைகளை யெல்லாமெழுதித் தொகை பார்த்து முப்பதுவிராகனென்று நபிநாயகமவர்களிடத்திற் சொன்னார். அவர்கள் மறுபடியும், அப்துல்லா அறபியைப்பார்த்து, ஒகே, அப்துல் லாவே இன்னுஞ் செலவுகளிருக்கில் நன்றாய்நினைத்து பார்த்துச் சொல் லும், பிறகு வீட்டிற்போய் ஏதேனு மொருவஸ்து வில்லையென்று சஞ் சலிக்காதீர், நாளதிகமில்லை யெல்லாவேலையும் பொழுதஸ்தமிக்கா முன் னலாகவேண்டுமென்று சொன்னார்கள். அதற்கப்துல்லா அறபி நாய கமே யெல்லாவஸ்துவும் வேண்டிய படிக்குச் சரியாகச் சொன்னேன், இனி வேறொன்று மில்லை யென்றீ சொன்னார்,

அதுகேட்டு நபிநாயகமவர்கள், பைத்துல்மா லென்னும் பணக்க ளஞ்சிய அதிகாரஸ்தரான உக்காசு றலியல்லாகு அன்கவர்களை யழைத் தவர்களோடும், இந்தப் பட்டியிலெழுதிய தொகைப்பொருளெடுத்து, அப்துல்லா அறபிக்குக் கொடுமென்று சொன்னார்கள், அது போலவர் கள் பொருளெடுத்துக் கொடுத்தார்கள், அப்பொருளை அப்துல்லா அற பிபெற்றுக்கொண்டு றசூல் நாயகமவர்களைப் பார்த்து, யாறசூலுல்லா வே தேவரீர் தாங்கள் ஹஷாத் தொழுத பின்னர் நான் குயாாகளோடு மென்வீட்டில் வந்திருந்து நிக்காகு வேலையை முடித்துத் துஆச் செய் துவிட்டு வரும்படியாய் விரும்புகிறே னென்று சொன்னார், அதற்கவர் கள் நல்தென்றார்கள் அதுகேட் டப்துல்லா அறபி மெத்தவுஞ் சந்தோ ஷமாய்க் கடை வீதிக்குப்போய் பட்டியிலெழுதிய சாமக்கிரிகைகளெல் லாம்வாங்கினார், என்றாலும்-அறபு ராச்சியத்தில் முக்கியமாகக் கலியாண வீட்டுக்கு வாங்கவேண்டிய வாசனைப் பண்டமான அத்தறை மாத்திரம பட்டியி லெழுதவுங் கடையில் வாங்கவு மறந்துவிட்டு மற்றவாங்கின சாமக்கிரிகைகளோடுந தமது வீட்டிற்குபபோய் அங்குசெய்ய வேண்டிய முறைகளெல்லாஞ் செய்து முடித்துத் தயாறாக்கி வைத்துக் கொணடு, மாப்பிள்ளை வீட்டார்களுக்கு, மாப்பிள்ளையுடைய வெண்ணம்போ லின் றையதினம் விவாகஞ்செய்ய, மாப்பிள்ளையைத் தயார செய்துகொண்டு வாருங்களென்று சொல்லிவிட்டு, மற்றபந்துகளுக்கும், நேசாகளுக்கும் சொல்லிவிட் டிருந்தார.

பின்னா, இராவானபோது சகலத்திராக்களும் மாப்பிள்ளையோடும் செய்யவேண்டிய கிரிகைகளைச செய்துகொண்டு அப்துல்லாஅறபி வீட் டில்வந்து நிறைந்திருந்தாாகள, அப்போது ஒப்பற்ற நபிநாயகமவாகள் நான்கு யார்களான அபூபக்கா, உமறு,உதுமான், அலிறலியல்லாகு அன் கும் அவர்களோடும் அப்துல்லா அறபிவீட்டில் வந்திருந்து நிக்காகு வேலையும் செய்து முடிந்து மற்றச் சங்கைகள் யாவும் நடந்த பின்னர், அப்துல்லா அறபியுடைய இனத்திலுள்ள பெரியோாகளெழுந்து, மாப் பிள்ளையைக் கூட்டிக் கொண்டு மறவணை வீட்டிற்குட் புகுந்து பெண் ணைக் கூட்டி வாருங்கள கைபிடித்து விடவென்று சொல்லிக் கொண்டு நிற்கும் போது, அங்கு பெணடுகள் கூடிச் சிங்காரித்த பெண்ணுக்குப் பூசியனுப்ப அத்தறில்லாமல தத்தளித்துப் பாதாபித்துக் கையைப்

பிசைந்து பேசிக்கொள்வதை, அப்துல்லா அறபி யறிந்து, தானுங்கை யைப்பிசைந்து, கருத்தழிந்து நாமென்ன வேலைசெய்தோம், நபிநாயக மவர்கள் நம்மோடு மறதி யில்லாமல் இன்னமெது வேணும் வேண்டிய வஸ்துகளிருந்தால் நினைப்போடு சொல்லும் பிறகுவீட்டிற்போய் அர்த் தாரத்தியிற் சஞ்சலிக்கா தீரென்று சொன்னார்களே, அதுகூட வியாப கத்திற்படாமல் எல்லாவஸ்துவுஞ்சரியென்றுசொன்னோமே,இப்போது முக்கியமாக வேண்டிய மனவஸ்து வில்லையே இதற்கென்ன செய்வோ மென்று நினைந்துருகி நிற்குந் தன்மையை நபிநாயகமவர்கள் தெரிந்து, அவ்வப்துல்லா அறபியையழைத்து நீர் வியாகூலப் படாதீர் பெண் ணை மறவனை வீட்டிற் கொண்டுவரச்சொல்லும் அல்லாகுத் தஆலாவின் கிருபையினால் மணமுண்டாகு மென்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.

அதுகேட்டு அப்துல்லா அறபிநபிநாயகத்தின் திருவாக்குண்டான படியால் மணவஸ்துவு கிடைக்குமென்று மிகுந்தமகிழ்ச்சியாய்ப பெண ணைக் கூட்டிவந்து மறவனை வீட்டில் விட்டுவிட்டு நபிநாயகத்திற்குத் தெரிவித்தார் உடனேயவர்களெழுந்து சென்று முட்டுக்கும் நீண்டதங் கள் வலதுகைச் சுட்டுவிரலாலே திருவாய் உமிழ்நீரை மூன்றுவிசையெ டுத்து (பிசுமிலே) யோதிப் பெண்ணுடைய சிரசியிலும் முகத்திலும் தேகத்திலும் படும்படிக்குச் சுண்டித் தெறித்தார்கள் அதனாலந்தப் பெண்ணுடைய கேசாதி பாதமட்டிலும் வீட்டிலெவ்விடத்திலும், இவ் வுலகத்தி லெங்குங்கிடையாத சுவர்க்கலோகத்து வாசனையாகக் கமக மென்று கமழ்ந்துகொண்டிருந்தன. அப்போது நபிநாயகமவாகள்பெண் ணைக் கைபிடித்துக் கொடுக்கச் சொல்லிவிட்டுத் தங்கள் கைவண்டையும் நெஞ்சுக்கு நேராயுயர்த்தி அல்லாகுத் தஆலாவைத் தியானித்து இந்தப் பெண் வயிற்றிற்பிறக்கும் பிள்ளை பிள்ளைகளாகக் கியாமநாட் பரியந்தம் வாசனை யேர்ப்பாட்டை யுடையவாகளாக இருக்கக் கடவதென்று துஆ ச்செய்துவிட்டு யார்களோடு மெழுந்தருளி யாங்கித் தங்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள் இங்கே பெண்ணு மாப்பிள்ளையு முண்ணிறைந்த மகிழ்ச் சியோடு முண்டுசுகித் துடைய னருளாற் பண்டருடி நபிதுஆ பறக்கத் தினு லென்றென்றும் நன்றாக வாழ்ந்திருந்து மக்களைப் பெற்றார்கள்.

அவர்களில் ஆண்மக்கள் மக்களாக இராஜாக்கள் சக்கரவர்த்திகள் செல்வீகர்கள் முதலிய சகலருமெச்சி யுயர்ந்தவிலை கொடுத்து வாங்கும்படியான அத்தர் முதலிய மணப்பண்டங்களைச் செய்து விற்கிறவர்களாயிருந்தார்கள் அவர்களிற்செய்குபரீதத்தாரென்றொருவர் காரணத்தையுடைய வொலியாகவும்,கல்வியை யுடையவர்களாகவு மிருந்தார்கள். அவர்களந்த மணஞ்செய்யும் வேலையை விர்த்தியாக்கி அதனைச் செய்யும்படியான விஷயங்களுக்குத் தகுந்த வற்பாடும்,யந்திரங்களுஞ் செய்வித்துப் பலவிதமான அத்தா முதலிய மணவஸ்துகளைச் சுமைப்பித்து வூரூர்களுக் கனுப்பிவித்துந், தாங்கள் கொண்டு போயும் விற்பனை செய்தும் வருகையில், அவர்கள் இந்தியா தேசத்திலிருக்க மனமாகிவந்திருந்தார்கள். அப்படியிருக்கையி லவர்களுடைய மக்களாய் வந்தவர்களிற் சிலர் மலையாள தேசத்தில் வந்திராஜ சபையில் மனவர்த்தகஞ் செய்வதில் விசுவாச கீர்த்தி யுடையவர்களாயிருந்தார்கள். அதிலே (ஹிஜுறாத்துத் தொளாயிரம் வருஷத்திற்குமேல், ஆயிரம் வருஷத்தை யெத்துங்காலத்தில் மஷாயி ஹானவர்களுமாய், நுஜூமில் வல்லவர்களுமாய் லைஸையுடையவர்களுமாய். நதுபு, ஸறுபுகொஞ்சந் தெரிந்தவர்களுமாய், சேகு முதலியா சென்னும் பெயரை யுடையவோர் பெரியோர்கள் அவ்விடத்தில் தானே உண்டாகி மகா சிறப்புடனே வாழ்ந்திருந்தார்கள்.

அவர்களுந் தங்கள் முன்னோர்கள் விடாமுயற்சியாக நடத்திவந்த மணத்தொழிலையே செய்தவர்களாயு மிகவுயர்ந்த சரக்குகளைச் செய்துகொண்டு, பாண்டி தேசத்திலிருக்கிற பாளையப்பட்டி ராஜர்களுக்கு விற்கலாமென் றெண்ணா மற்ற மனைசகோதரர்களோடும் பெண்டு பிள்ளைகளோடும் வந்து, திருநெல்வேலியைச்சார்ந்த நாகலாபுரத்திற் குடியிருதுகொண்டு, அதையடுத்திருக்கும் எட்டையாபுரத்து மகாராஜா இடத்தில அத்தா வகைகளைக்கொண்டு விற்கப்போனதில், அந்த மகாராஜா இவர்களுடைய அத்தா முதலிய வாசனைப் பண்டங்களைப்பார்த்து மிகவும் நல்லவஸ்துக ளென்றும், இவர்கள் புத்திசாதுரியமானவர்களென்று மெச்சிக்கொண்டு, அதிகமான வாசனைப் பண்டங்களை நல்லவிலை கொடுத்து வாங்கினதோடும் இவர்களைப் பார்த்து நீங்களிந்தவூரிற் குடிபதியாயிருந்தா லென்னாலாகுமான வுதவியொத் தாசை செய்கிறேனெ

ன்றுறுதியாகச் சொன்னதின் பேரில் அவர்கள் மனமகிழ்ந்து இராஜ ஊைப் பார்த்து நல்லது மகாராஜாவென்றுசொல்லி நாகலாத புரத்திலும் எட்டையா புரத்திலுமாக வாசஞ்செய்து கொண்டு வருங்காலத்தில், அல்லாகுத் தஆலாவினருளிஞ லிவர்களுக்கு நல்ல நேத்தியான சுப லக்கினத்தில், மிகவுமழகு சவுந்தரீகமுள்ள வுமறுப்புலவரவர்கள் பிறந் தார்கள்.

இவ்விதம் பிறந்த, வுமறுப்புலவ ரவர்கட்கு வயதும் எழெட்டான போது, அவ்வெட்டையா புரமுதலான பாலையப்பட்டோர்களில் நமது அறபுப்பாஷையி லுண்டான இலமென்னுங் கல்விப் பயிர்ச்சி யில்லாத காபிரீன்களுராய், அவ்விடங்களிலெல்லாம் தமிழ்ப்பாஷையே பெரு முயற்சியாக வழங்கி வருகின்றமையால், உமறுப்புலவரவர்களை அந்த மிழ்க்கல்வி லிகிதம் படிக்கவோர உபாத்தியாயரிடத்தில் நல்லநாட்பார்த் துப் படிக்க வைத்தார்கள். அவர்களும் அந்த உபாத்தியாயரிடத்தில் இரண்டுமூன்று வருஷகாலமாகப் படித்துக்கொண்டு வரும் நாட்களி லோர்நாட் புதுப்பாடந் துடங்கியவோர் பிள்ளையின் விடுமுறைக்காகப் பள்ளிக்கூடத்திலுள்ள பிள்ளைகள் யாவரையும் நாலுமணி நேரத்தில் விடப்பட்டதில உமறுப் புலவரவர்கள் மற்றுப பிள்ளைகளோடு தாங்கள் படிக்குஞ் சுவடிக்கட்டில் நீண்டகயிறிட்டுத் தோளில் மாட்டிக்கொண்டு வரும்போது எட்டையாபுரத்து இராஜ சமஸ்தானத்திற் சரியிருப்பிருக் குந் தகுதி வந்தாரயும் அங்குள்ள வித்துவானகளுக் கெல்லாம் அதிக சிறப்பையுடையவாரயும இலக்கணத்தில் மிகுநத வல்லமை சாலியாயும் கல்விக்கடலாயும் வயதால் முதிாந்தவராயுமுளள கடிகைமுத்துப் புலவ ரவர்களும் சேகு முதலியா ரவாகளும் இராஜ சமஸ்தானத்திலிருநது பேசிக் கொண்டு வீட்டுக்கு போக வருகிற வழியிற் சிறுவர்களோடு பள் ளிக்கூடம்விட்டுச் சுவடிதூக்கோடு வருகிறவுமறுப்புலவ ரவர் களைக் கடிகைமுத்துப் புலவரவர்கள் கண்டு சேகுமுதலிய ரவர் களைப் பார்த்துத் தம்பி இநதத் துலுக்கப் பிள்ளையாண்டான் யாரென்று கேட்டார் அதற்குச் சேகு முதலியாரவாகள் மிகுந்த தாழ்மை யிரக்கத்தோடும் அணுைவென மகனென்று சொன் ஞர்கள் அதுகேட்டு முத்துப் புலவரவாகள் சேகுமுதலியா ரவர் களைப் பார்த்து அப்படித் தங்கள் பிள்ளையா யிருக்க வனென் ணிடத்திற் படிக்க அனுப்பவில்லை யென்றதற்குச சேகுமுதலியா

ரவர்கள் அப்படியே நாளைமுதற் றங்களிடத்திற் கனுப்பிவைக்கிறேன் அண்ணுவென்று சொல்லிப் பின்னர் வீட்டிற்குவந்து உமறுப்புலவரோடுந் தம்பி உமர் நீ நாளையதினங் காலையிற் சுவடிகளை யெடுத்துக்கொண்டு கடிகைமுத்துப் புலவரவர்கள் வீட்டிற்குப்போய் மரியாதையாக அவர்களைப் பெரியையாவென்றும், அவர்கள் பெண்சாதியைப் பெரியம்மாவென்றும் பிள்ளைகளைப் பிறவிகளென்று முறைசெப்பி அவர்கள் படித்துத்தரும் படிப்புகளை நல்ல கவனமாக படித்துக்கொண்டு வாவென்று சொன்னார்கள்.

அதுபோல் உமறுப்புலவரவர்கள் மறுநாட் காலையில் விழித்தெழுந்துடற் சுத்திசெய் துலுவெடுத்துச் சுபுகுதொழுது பசியாறிக்கொண்டு தாங்கள் படிக்கும் பனையோலைச் சுவடிக் கட்டோடுங் கடிகைமுத்துப் புலவரவர்களின் வீட்டிற்குப்போய் அவர்களைக்கண்டு (தந்தைசொல்மிக்க மந்திரமில்லை) என்னும் பழமொழிபோலே தங்கள் தகப்பனருடைய சொல்லை மனமறக்காமற் றாழ்ச்சியோடு பெரியையாவென்று முறைசெப்பி நின்றார்கள். அதுகேட்டு முத்துப்புலவரவர்கள் மனமகிழ்ந்து பணியாளர்களாற் பாய்விரிக்கச்செய்து அதின்பேரில் உமறுப்புலவரவர்களை யிருக்கச்சொல்லி அவர்களைப் பார்த்து அப்பா உன்பெயரென்னவென்று வினவினார்கள். அதற்கவர்கள் என்பெயர் உமறென்று சொன்னார்கள். அதுகேட்டு முத்துப்புலவரவர்கள் உமறுப்புலவரவர்களைப்பார்த்து அப்பா நீ பள்ளிக்கூடத்திற் படித்தபாடங்கள் மனனமாயிருக்கில் அவைகளிற் சிலவற்றைப் படித்துக்காட்டு நாம் கேட்போம் என்றார்கள். அப்போதுடனே உமறுப்புலவரவர்கள் ஆற்றுச்சுவடி, கொன்றைவேந்தன், மூதுரை, திவாகரம், நிகண்டு, சதகம், கலம்பகம், அந்தாதி, நாலடியார், குறள் இவைகள் முதலாகிய நூற்களிலுங் கொஞ்சங்கொஞ்ச மனனமிருந்தமட்டிலு மாரிகாலம்பெய்யு மழையைப்போலே தடையின்றி மடமடென்று படித்தார்கள். அதுகேட்டுக் கடிகைமுத்துப் புலவரவர்கள் இது படிப்பிற்கான பிள்ளைதானென்று சந்தோஷமுற்றுத் தானுந்தானுன கடவுளைத் தியானித்து இலக்கணமும் அதனமைதிரயகிய இலக்கியமும் படித்துக்கொடுத்துக்கொண்டு வந்தார்கள்,

இவ்விதம் உமறுப்புலவரவர்கள் இரண்டு மூன்று வருஷகாலமாக உபாத்தியாயரான கடிகைமுத்துப் புலவரவர்களின் சொல்லை யனுவளவுங் கடக்காமலிருந்து படித்துக்கொண்டு வரச்சே, இவர்களுக்கும் வயது பதினறு பதினேழாயிற்று. அப்போது வடராச்சியத்திலிருந்து சமஸ்கிரந்தத்திலும் தமிழிலும் மிகுந்த பண்டித சிகாமணியாயும் மந்திரவாதியாயுமுள்ள வாலைவாருதியென்னும் வித்துவான் எவ்விடங்களிலும் பெயர்பெற்றவனைத் தானிருக்கு மூனை விட்டும் அநேக சிஷர்களுடனெழுந்து. இந்தியா தேசத்திலநேக இராஜாகளுடையசமஸ்தானங்களுக்குப்போய்ப்பிரசங்கித்து வாக்குவாதஞ்செய்து அங்கிருக்குமகாவித்துவான்களை யெல்லாம் தோற்கடைச்செய்து விருதுகளும்,வெகுமதிகளும் பெற்றுக்கொண்டு வருகிறபோது, எட்டையாபுரத்து இராஜ சமஸ்தானத்திலும் வந்து இராஜனைக்கண்டு மகா வணக்கத்தோடு மகாராஜாவே தேவரீர தாங்கள் வித்தியாதத்துவத் தருமைதெரிந்து மகா சாஸ்திர வித்துவ பண்டிதாக்களை உங்கள் சமஸ்தானத்தில் வைத்துச் சதாகாலமும் கல்விப்பிரசங்க மறிகின்ற நீங்களாதலால், இவ்வேழையான வென்னுடைய வித்தியாப் பிரசங்கத்தையு மெப்போது வித்துவாமீசர்கள் கூடியிருக்குந் தங்கள் திருச்சபையிற் கேட்டனுக்கிரகித்து அருள்செய்ய வேண்டுமென்று சொன்னன்.

அச்சொல்லிற்கு இராஜனிணங்கி, அவனைப்பார்த்து ஓகோ மகா வித்துவானே உமதெண்ணப் பிரகாரம் இன்றைக் கெட்டாம் நாள் இங் கேவாரும் சபை கூட்டிவைத்து நீர்செய்யும் பிரசங்கத்தைக் கேட்கிறே னென்று நல்வாக்களித்துத் தாம்பூலங்கொடுத்து, அவனைப்படித்தாமு நேமித்தனுப்பிவிட்டுத் தன்வாசல் வித்துவான்களில் முதன்மையாயுள்ள கடிகைமுத்துப் புலவரவர்கள் வந்தபோது,அவர்களோடும் வாலைவாரிதி யென்கிற வித்துவான் தன்னிடத்திற்கு வந்ததும், தான் அவனுடைய பிரசங்கங்கேட்க விரும்பி நாள் நேமித்து, அந்தநாளில் வரச்சொல்லி யனுப்பியிருக்கிறதையுஞ் சொல்லித் தாங்களும் பிரசங்கத்தன்றைக்கு அகத்தியம் வந்திருக்க வேண்டுமென்று மிகவும் பிடிப்பாகச் சொல்லினன். அதுகேட்டு முத்துப்புலவரவர்கள், அந்த வாலைவாருதி மந்திரகாரனுச்சுதே அவனம்மிடத்தி லெதுவேனும் நூல்விஷயங்களைப்பற்றி

வினவுவாளுகிற் கூடியமட்டுங் கடவுளி னனுக்கிரகத்தினால் விடையளிக் கலாம். ஒருவேளை மந்திர விஷயங்களைக்கொண்டு வினவுவாளுகில் நம்மாலே முடியாதே, மேலுமவன் இராஜ சமஸ்தானங்களில் மந்திரத் தைத்தான் முற்படுத்தி வென்றுகொண்டு வருகிறுனென்று மவாவரே சொல்லக் கேட்டுமிருக்கிறேமே, அப்பேர்ப்பட்ட கெர்வி இராஜ சபை க்கு வந்தபோது நாம் போகாமலிருந்தாலும் இராஜனுக்கு நமதுபேரில் மனவருத்த முண்டாகுமேயென்ற எண்ணமே மேலிட்டுச் சரீரத்திற் சூடதிகரித்துக் கொஞ்சம்நலிவுகொண்டவர்களாய் அன்றுமுதல் இராஜ சமஸ்தானத்திற்குப் போகாமல் வீட்டோடு மிருந்தார்கள். இப்படி யிருக்கச்சே,

இராஜனிட்ட தவணைநாள் வந்தபோது, அந்தவாலேவா ருதியென் னும் வித்துவான், தன்பணிவிடை யாளர்களோடு மிராஜ சமஸ்தானத் திற்கு வந்தான் அப்போது இராஜன் ஊரிற்சொல்லவேண்டிய நிதித்த லைவர், படைத்தலைவர், மந்திராலோசனைத்தலைவர் முதலிய சகலருக்குஞ் சொல்லிவிட்டு, முத்துப் புலவாவர்கள் சரீர நலிவாக இருப்பதால் அவர்களைக் கூட்டிவரத் தனது சவாரியாகிய பல்லக்கையும், அரமனைச் சேவர்களி லொருவனையுமனுப்பினுன், அதுகண்டு முத்துப்புலவாவர்கள் நாமெவ்விதம் இராஜசபைக்குப் போகிறதென்று தாங்கள் முன்கொ ண்ட எண்ணமே மேலிட்டவர்களாய்ப் போவதற்கு முன்னும் பின்னும் யோசித்தவர்களாய்க் காலதாமதஞ் செய்துகொண் டிருப்பதை யுமறுப் புலவாவர்கள் தெரிந்து, சரேலென்று வீட்டிற்குள் நுழைந்து முத்துப் புலவ ரவர்களைப் பார்த்துப் பெரியையாவே, இப்பொது தாங்கள் இராஜ சபைக்குப்போகச் சந்தர்ப்பமில்லாதிருக்கில் உங்கள் பயலாகிய இந்த ஏழையை யனுப்புங்களென்று சென்னுர்கள்.

அதுகேட்டு, முத்துப் புலவாவர்கள் குஞ்சிரிப்புக்கொண்டு, உம றுப்புலவ ரவர்களைப்பார்த்து, அப்பா உமர், அங்கே வந்திருக்கிற வித்து வான் மகாபண்டித ஞச்சுதே, நீயின்னும் படிக்கவேண்டிய படிப்புகள் முழுதும் படிக்கவில்லையே, அதிலும், சிறுவயதை யுடையவனுக இருக் கின்றுயே, ஆதலா லெப்படியுன்னை யனுப்புகிறதென்று சொன்னுர்,

அதுகேட் டுமறுப்புலவ ரவர்கள், முத்துப்புலவ ரவர்களைப் பார்த்துப் பெரியையா, ஆண்டவன் போதுமையானவன், ஆதலால் நீங்களென்னை யனுப்புங்கள் நான்போய்ப் பார்க்கிறேனென்று சொன்னார்கள் இவ்வி தம், உமறுப் புலவாவர்கள் சொல்லுகிற திடச்சித்த வாக்கியத்தை முத்துப் புலவாவர்கள் யோசித்துப்பார்த்து, உமறு நம்மிடத்திற் படிக் கவந்த நாள்முத லிதுவரையு மின்றைக்குப் பேசுவதுபோலே ஒருநா ளூந் தயிரியமாகப் பேசினவனல்லவே, இதைப்பார்த்தாலெதுவோ கட வுள்செயல் தெரியவில்லை, மேலுமிவரால் இராஜசபையிலொரு குற்றங் குறை நேரிட்டாலும் சிறுபிள்ளையென்றுபோகும் நமக்குஞ் சரீரத்திற் கிதமில்லா திருக்கிறது இராஜாவுக்குந் தெரிந்துதா னிருக்கிறது, ஆத லாற் பறவாயில்லை, உமறைத்தா னனுப்புவோம் பின்னர் நடக்குஞ் செய்தியைப் பார்ப்போமென் றெண்ணித் தாங்க ளிராஜசபைக்குப் போகும்போ தணிகின்ற சட்டை ஜாமாக்களையும், முத்துமாலை பவள மாலைகளையு மெடுத் துமறுப் புலவாவர்களை யணியச்செய்து பல்லக்கி லேற்றி, அப்பா வுமர்நீ ஆண்டவன் காவலாய்ப் போய்வாவென்று சொல்லிப் பணிவிடை காரரையுங் கூட அனுப்பி, வந்த சேகவனிடத் தில் எனக்குசரீர சவுக்கியக் குறைவினாற் சமஸ்தானத்திற்கு வரக்கூ டாமையால் என்னிடத்திற் படிக்கிற பிள்ளையாண்டானை யனுப்பியிருக் கிறனென் றிராஜாவுக்கு நீ முதலிற்போய்த் தெரியப்படுத்தென்று சொன்னார்கள் அதுபோற் சேவகன்போய் இராஜாவுக்குத் தெரியப்ப டுத்தினன்.

இதற்குள்ளே, இராஜசபையில் யாவர்களும் வந்துநிறைந்து இரா ஜாவுக்கு வலதுபாரிசமாகக், கடிகை முத்துப்புலவ ரவர்களுக்குமாத்தி ரமிருக்க இடமுண்டாயிருந்தது, அப்போ துமறுப்புலவாவர்கள் பல் லக்குச்சவாரியில் தாம்தானென்று போய்ச்சபை முகத்திலிறங்கி அங் கே விரித்திருக்கும் இரத்தினக் கம்பளிக்குமேற் காலிலிட்ட தொடு தோலோடு நடந்து இருப்பிடத்திற் கடுக்கப்போய்ப் பணிவிடைகாரர் களாற் காலிலிருந்த பாதரட்சையை கழட்டச் செய்துவிட்டு, பிசுமில்ச் சொன்னவர்களாய்இராஜாவுக்குப் பக்கத்திலிருந்தார்கள். ஆனால் உம றுப்புலவரவர் களிவ்விதம் துடிதுடித்த மனத்தோடு முன்பின்பாராமல்

வேகமாகப்போயிருந்தது. தங்கள் சுயபுத்தியல்ல, ஜெதிபினலாயிருக்கும், இது தெரியாமல் இராஜன் உமறுப்புலவாவர்கள் போயிருந்த காரணத்தைப்பற்றி இவர் சிறுபிள்ளையாயிருந்தும், நமது சபையைச் சங்கைசெய்யாம லிருப்பிடத்தில்வந்து ஜூத்தாவைக் கழட்டினரே யென்கிற வேகமுண்டாயிற்று என்றாலும் தான் புத்திவானயும், இவர்கள் வித்துவான் முத்துப்புலவருடைய சிஷப்பிள்ளையா யிருப்பதினலும் யோசித்து எப்படியும் இவர் வாலைவாருதி கேட்குங் கேள்விக்குச் சவாபு கொடுக்கமாட்டார். அப்போது நாமிருவருக்குப் புத்திவருத்தி வைக்கலாமென்று நினைத்துத் தான்கொண்ட கோபத்தை யுள்ளடக்கிக்கொண்டு, அந்த வாலைவாருதியைப்பார்த்து முத்துப்புலவரவர்கள் சரீர சவுக்கியக் குறைவினலே தங்கள் சீடரை யனுப்பியிருக்கிருர்கள். ஆதலால் உமது பிரசங்கத்தை யாரம்பியுமென்று சொன்னன்.

அதுகேட்டு, வாலைவாருதி தன் வலதுகையிற் போட்டிருக்குந் தங்கக் கடகத்தை யசைத்து மேலேற்றினன். அந்தக் கடகத்தில் நின்றும் வழமையாக (வாலைவாருதியென் றறியீரோ) வென்றுண்டாகும் வாக்கியமானது அன்றையதினத்தில் வாலைவாருதியென றறியாயோ பிள்ளாயென றுண்டாயிற்று. அப்போது உமறுப்புலவரவர்கள், தங்களுக்குந் தெரியாம லுண்டாயிருக்கிற ஜெதுபோடுந, தங்களிடுப்பில் யானைத்தந்தப் பிடியிட்டிருக்கும் யாழ்ப்பாணத் தெழுத்தாணியைக் கையிலெடுத்துக் கீழே யூண்டிவைத்ததனைப்பார்த் தென்னெழுத்தாணியே இவர்க்கெதிர் பேசென்ருர்கள், அது பேசவில்லை. மறுபடியும் பேசென்ருர்கள், அது பேசவில்லை. இவ்விதம் மூன்றுவிசை அதனைப் பேசுபேசென்று சொல்லியும் அவ்வெழுத்தாணி பேசாதிருந்தமையாற் றங்களிரண்டுகண்களுங் கோவைப்பழத்தைப்போற் செவக்க, முகத்தி லக்கினிபறக்கக் கோபங்கொண்டு கையிலெழுத்தாணியை யெடுத்துப் பேசென்று பெரிய சப்தமிட்டுச் சபையெல்லாந் திகில்கொண்டு நடுங்கும்படியா யோங்கிப் பூமியிலடித்தார்கள். உடனே அவ்வெழுத்தாணியில் நின்றும் அசரீரியாக இவ்வாக்கிய முண்டாயிற்று.

## ஆசிரிய விருத்தம்.

சமாதூா கததுங்க மனருஞ்ச பாசென்று
 சரிசமா சனமீ திலே
அமாவொரு நாகொம்பு தினமுஞ்சு மாசெல்லு
 மமுதகவி ராஜ னுனே
திமிரபகை வளைவென்ற பருதிபெனு மெமதெட்ட
 தீரணணி வாயில் வித்வான்
உமறுருமு ரிடிலண்ட முகடெம்ப டீரொன்று
 முள்ளச்சம் வையும் பிளாய்.

இவ்விதம், அசரீரியிற் கவிதையாக உண்டான வாக்கியத்தைக் கேட்டுச் சபையிலிருந்த இராஜாமுதலிய சகலரும் மனதில் பெரிய அச்சங்கொண்டவர்களாக நடுநடுங்கினார்கள். அந்த வாலைவாருதியென்னும் வித்துவான் கருத்தழிந்தவனாக திகிற்கொண்டு இஃதென்ன ஆச்சரியம் (கிணறுவெட்டப்போன இடத்திற்) பூதம் வெளிப்பட்டதுபோ லிந்தச் சமஸ்தானத்தி லுண்டாயிருக்கிறதென்றும், இனி யேதாகிலும் மந்திர உச்சாடனத்தை நாம்செய்வோமாகி லுயிருக்கே சேதம் வந்துவிடுமென் றெண்ணியும் சபைரலென்றெழுந்து, உமறுப்புலவாவர்களைக் கட்டித்தழுவித் தாழ்ச்சிசெய்து, நீர் ஆண்டவனுடைய விருப்பத்தையுடையவர், நான் வாலையுடைய விருப்பத்தை யுடையவன் ஆதலா லுமக்குநா னீடல்லையென்று சொல்லித் தன்னிடத்தில் இராஜாக்களாற் கிடைத்திருந்த சில விருதுகளையும் வெகுமதியாகக் கொடுத்தான். அப்போது எட்டையாபுரத்து இராஜன் இந்த வாலைவாருதி அனேக இராஜ சபையிலெல்லாம் வித்துவான்களை வெற்றிசெய்து விருது வெகுமதி பெற்றுக்கொண்டு கெருவமிஞ்சி நம்மிடத்திலு மதுபோற் செய்யலாமென்று வந்தவனை, நமது வித்துவானுடைய சிஷப்பிள்ளையானவர் கடவுள் கடாட்சத்தினுற் றோற்கச்செய்த கீர்த்தி யொன்றுமே நமக்குப் போதுமானதென்று பெரிய சந்தோஷத்தோடு சபைரலென்றெழுந்து தான் முன்னர் கொண்டிருந்த கோபாக்கினியை மனமகிழ்ச்சி நீரினு லவித்துவிட்டு, உமறுப்புலவாவர்களை நெஞ்சோடுபுல்லி யாலிங்கனஞ் செய்து, தன் கழுத்திற் பெரிய விலைபெற்றதாய்க் கிடந்த வயிரகண்டியைக் கழ

ட்டி யவர்கள் கழுத்திலிட்டு, இன்னுமனேக வெகுமதிகளுங்கொடுத்துத், தன்கையாலே யவர்களைத்தூக்கிப் பல்லக்கிலேற்றிப் பக்கத்திற் கெட்டெட்டாகப் பதினறுபோய்களையும் போட்டு, ஈட்டி பாலா வல்லையம், சமுதாடு முதலிய ஆயுதவிருதுகளுஞ் சூழவிட்டிவைகளெல்லாமுமக்கேயென்று சொல்லி யனுப்பினன் இது நிற்க.

இங்கே முத்துப்புலவரவர்கள் சிறுபிள்ளையை இராஜ சமஸ்தானத்திற் கனுப்பினேமே அங்கே யென்ன நடக்கிறதோதெரிய வில்லையே நாமும் போகக்கூடாமையா யிருக்கிறதே அங்கிருந் தொருவரையும் வரவுங் காணேமேயென்று முன்னர் வாலைவாருதி வந்திருக்கிறனென்று இராஜன் சொன்னபோது கொண்டவெண்ணத்திற் கெண்மணங் கதிகமாக வெண்ணமுற்று மனங் கெத்துக்கெத்தென்று தெருவைப் பார்த்தகண்ணனக இருக்க உமறுப்புலவரவர்கள் தாம்தாமென்று பல்லக்கில் வருகிற சப்தம் பெரிதாகக்கேட்டு இஃதியாருடைய பல்லக்கு இவ்வளவாளபாரத்தோடு வருகிறதென்று யோசித்துக்கொண்டு நிற்கையிற் றங்கள் வீட்டுவாயிலுக்குமுன் பல்லக்குவந்து கட்டுப்பட்டுப் போனிவிருந்து புலிக்குட்டி குதித்ததுபோற் பல்லக்கில்நின்று முமறுப்புலவரவர்கள் குதித்திறங்கி வருவதைப்பார்த்தார பார்த்தபோது, உமறுப்புலவரவர்களுடையமுகம் சூரியப்பிரகாசமாக பளபளென்றிருக்கக்கண்டிஃதென்ன ஆச்சரியமும் இங்கிருந்துபோன முகநிறம் வேறுகியருளானந்தநிறமுற்று வந்திருக்கிறரே என்று பெருமெண்ணமுற்று நின்றார், அப்போது உமறுப்புலவரவர்கள் பெருமெண்ணமுற்று நிற்கிற முத்துப்புலவரவர்களின் பாதத்தடியிலடுத்து அதபுமரியாதைசெய்து இராஜசமஸ்தானத்தில் நடந்ததெல்லாஞ்சொல்லி, அங்குக் கிடைத்த வெகுமதிகளையுங் கொடுத்தார்கள்.

அதுகண்டு, முத்துப்புலவரவர்கள் மிகுநதசந்தோஷமுற்று, உமறுப்புலவரவர்களை நெஞ்சோடணைத் தாலிங்கனஞ்செய்து, அப்பாவுமர், இன்றையதினம் கடவுள் கடாட்சத்தால் என்மகிமை யுன்னலே காப்பாற்றப்பட்ட படியினுலும் எனக்கு வயது முதிர்ந்துடற் றளர்வடைந்திருப்பதினுலும், நீயெனக்குப் பிள்ளையா யிருப்பதினுலும்இந்த வெகு

மதிகளும் எனது முத்துமாலை பவளமாலைபு முன்னதாகவேகொண்டு இன்றுமுதல் இராஜசமஸ் தானத்திற்கு நீயே வித்துவானாக இருவென் றுமிகவு மன்போடு மாசீர்வதித் தனுப்பினார்கள். அன்றுமுதல் உம றுப்புலவரவர்கள் கண்டசுத்தி பாடுந்திறமையும், அஷ்டாவதானம் பாடுந்திறமையுமுள்ளவர்களாய், இராஜசமஸ்தான வித்துவானாகஇருந் தார்கள்.

உமறுப்புலவரவர்கள் பூர்வீக சரித்திரசுருக்கம்-முற்றிற்று



# சீறாப்புராணஞ் செய்யப்பட்ட

## சரித்திரசுருக்கம்.

சிறப்புப் பொருந்திய தென்தேசத்திலுள்ள டப்பையரண்டு பாளயப்பட்டாசர்களுக்குஞ்சிர கிரீடமாகவும், அவர்களிடத்திற் றிறைவாங்கு முத்தண்டதத்துவ ராயனாகவும், வணங்காமுடி மன்னனாகவும், இராமநாதபுரத்தி லிருந்து நீதிச்செங்கோல் செலுத்திய இரகுநாத சேதுபதிமகாராஜனிடத்திற் கல்விக் கடலாகவும், கடையெழும் வள்ளல்களி லொருவராகவும், செய்கப்துல் காதிறெனனுந் திருநாமத்தை யுடையவராகவுமுள்ள செய்தக் காதிர் மரைக்காயரவர்கள் மந்திரியாக இருக்குங் காலத்தில், அந்த இராமநாதபுரத்தில் ஹிந்துமத சரித்திரங்களான இராமாயணம் பாரதமுதலிய அனேக காப்பிய புராணங்களை, மகாவித்துகளாள் ஆங்காங்கு வைத்துப்படித்துப் பிரசங்கஞ்செய்வதைக், கீழ்க்கரை, ஏறுபாடி முதலிய ஊர்களில் வசிக்கும் நமது பிறவி மார்களான மூமின் முசிலிம்கள் மகா விருப்பத்தோடு போய்க் கேட்டு வியப்படைந்துவருகிறவர்களா யிருந்தார்கள்.

அதுகண்டு, செய்தக்காதிர் மரைக்காய ரவர்கள் மனத்திலே இவ்விதமான புராண காப்பியங்கள் நம்ம லில்லாமையினாலல்லவா நமதுபிறவி மார்களாகிய முசிலிமானவர்கள், காபிரீன்கள்சரித்திரங்களிலுள்ள பாடல்களைக்கேட்டு, வியப்படைகிறார்கள் அப்படி

யான புராணகாப்பியங்கள் நம்மிலுண்டா யிருக்கி லிவ்விதங் காபிரீன்க ளுடைய புராண காப்பியங்களைக் கேட்டு விருப்பங் கொள்ள மாட்டார்கள், ஆதலால் நம்மில்நல்ல இலக்கண விலக்கியம் வாசித்துத் தெளிந்த வித்துவான்களினால், றசூல் நாயகமுகம்மது சல்லல்லாகு அலைகிவ சல்லமவர்களி னியற்கையுஞ் செயற்கையுமாகிய சீறாச் சரித்திரத்தை புராணமாகப் பாடிவைக்க வேண்டு மென்றெண்ணித், தம்மிடத்திலே தியாகம்வாங்க வருகின்ற வித்துவான்களை யெல்லாம் நோட்டமிட்டுக் கொண்டேவந்தார் அதிலே ஹிந்து வித்துவான்கள் பஞ்சலட்சணங்கள் தேர்ந்தவர்களாயும், சாதுரிய மாகப்பாடு மதுரவாக்கை யுடையவர்களாயும்வருகிறார்களே தவிரநமது இசுலா மார்க்கத்திலுள்ள வித்துவான்க ளப்படியாகப் படித்தவர்க ளொருவரும் வரக்காண்கவில்லை, இதைக்குறித்து யோசனையா யிருக்கும்போது ஒருநாள் இராஜ காரியத்தின்பேரில் மரக்கையா எட்டையாபுரத் திராஜனிடம் போனார்கள்.

அந்தச் சமஸ்தானத்தில் உமறுப்புலவரவர்கள் முகமிலங்கச் சிங்கக் குட்டிபோ லிருப்பதையும், அவர்களின் வாக்கிய தடாரிக்க மதுரத்தையு மிவர்கள்கண்டு, நாம்றசூல்நாயக மவர்களி னியற்கையுஞ், செயற்கையுமான சீறாச்சரித்திரத்தைப் புராணமாகப் பாடிவைக்க வேண்டுமென்று நாடியிருக்கின்றோமே யதற்குத்தகுதியான புலவரிக்காலத்தி லிவர்களேயல்லாமல் வேறே நம்மிற் புலவோர்கள் கிடைப்ப தரிதா யிருக்கும், ஆனால் நமதெண்ணம் நிறைவேற இப்போது புலவர்களை யழைத்தால் இராஜன் விடவும்போதும், ஒருவேளை விடாம லெதுவெனுமோர் சாக்குச் சொல்லவும்போதும், அதற்காகவோர் யுத்திசெய்து புலவரவர்களை நம்மூருக்கழைத் தவர்களோடு கலந்துபேசிச் சீறாச்சரித்திரத்தைப் புராணமாகப் பாடும்படி செய்யவேண்டுமென் றெண்ணித், தாங்கள் போன காரியத்தை இராஜனிடத்திற் பேசிமுடிவுசெய்துகொண் டூருக்குவந்து இரண்டொரு மாதங்கழித்துத், தங்கள் வீட்டிலோர் பெரியகளரியை யேற்படுத்தி, அக்களரிக்கு வரும்படியாக, இராஜாக்கள் முதலிய பெரிய கனவான்களுக் கெல்லாஞ் சொல்லியும், எழுதியு மனுப்பினதுபோல் எட்டையாபுரத் திராஜனுக்கும் ஓர்கடிதத்திற் கனதியாகிய

வாசகமெழுதி அதிற்றாங்களும், தங்கள் வாசல் வித்துவானாகிய உமறுப் புலவரவர்களுமற்ற நேசர்களுமாக இந்தமாதம். இந்த தெய்தி. இந்த கிழமையில் நாம் செய்கிற காரியத்திற்கு வந்திருந்தாசீர்வதிக்கும் படியாய் மிகவும் விரும்புகிறேனென் றெழுதி யனுப்பினான்.

அது கண்டு இராஜன், தனக்குவர அசந்தர்ப்ப நேரிட்டிருந்தமையால், உமறுப்புலவ ரவர்களைச் சிறப்பாக அனுப்பிவைத்தான. அவர்களு மிராஜ பாவனையாகக் கீழக்கரை யென்னும் நகரம்வந்து சேர்ந்த போது, செய்தக்காதர் மரைக்காயரவர்கள் மகாமரியாதையாகப் புலவரவர்களை யெதிர்சென் றழைத்துவந்து மேன்மையாகவோரிடத்தி லிருக்க வைத்துத், தாங்கள்நேமித்த களரிவேலையுந்தீர்ந்து சிலநாளைக்குப் பின்னர், புலவரவர்களைப் பார்த்துச், சீறாச் சரித்திரத்தைப் புராணமாகப் பாடவேண்டுமென்று; தாங்கள், கொண்டிருக்குங் கருத்தைத் தெரிவித்தார்கள். அதுகேட்டுப் புலவரவர்கள் முன்பின் பெரிதாக யோசித்து அல்லாறசூல் கிருபையினாலும், கவ்துமுகியித்தீனாண்டகை கடாட்சத்தினாலும் அப்படியே பாடலாமென் றொப்புக் கொண்டார்கள். அதின் பேரில், மரைக்காயரவர்கள், அறபுப் பாஷையிலிருக்கிற அச்சரித்திரத்தைத், தமிழ்ப் பாஷையில் மொழிபெயர்த்துக் கொடுக்கிறதற்குக் காமிலொலி ஷைகு சதகத்துல்லா லப்பை ஆலிம்ஹாஜியார் சாகிபவர்களிடத்திற் கோர்நாட் புலவரவர்களை யழைத்துக் கொண்டுபோய்த் தருலீயோடு சலாம் சொல்லி யிருந்து பின்னர் ஷைகுசதக்கத் துல்லாசாகிபொலியவர்களைப் பார்த்துச், சீறாச் சரித்திரத்தைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொடுத்தீர்களாகில் இவர்கள் புராணம்பாடுகிறதற்குக்கூடுமானவர்களென்று உமறுப்புலவரவர்களைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்கள்.

ஆனால், புலவரவர்கள், பாளயப்பட்டு இராஜசமஸ்தான புழக்கம்போலேகிர்தாமீசைவைத்துத் தாடியை வெட்டியிருப்பதோடு தந்தபந்தியிற் காவியிட்டும், கைகால்நகங்களு மருதாணியிட்டும், கைகளின் முண்டாவில் வாஜுபந்து கட்டியும் பொன்னரை ஞாணிட்டும் சரிகை யினாலாகிய முறுக்குத் தலைப்பாகை கட்டியும், மாறுதாய்ப்பாச்சி யுடையுடுத்துமிருப்பதைநாயகமாகிய ஷைகுசதக்கத்துல்லாசாகிபொலியவர்கள்கண்டு

மிகவுங் கோபமாகிக் காபிரீன்களுடை யுடுத்தியிருக்கிற இவாற நபி நாயகமவர்களி னியற்கை செயற்கைகளான சீறாவைப்பாடுவா ரென்று கடுகடுத்த வார்த்தையாகச் சொன்னார்கள். அதுகேட்டு, மரைக்காயா வர்கள் நம்மாலே புலவரவர்களுக் கபமரியாதை யுண்டாயிற்றென்று வெட்கமடைந்து, புலவரவர்களும் வியாகூல மடைந்து, அவ்விடத்தை விட்டுஞ் சொல்லாதெழுந்து வெளியாகி யொருவரையொருவர் சந்திக் காமற்போனதில் மரைக்காயாவர்கள் வீட்டிற்குப்போனார்கள் புலவரவர் கள் பள்ளிவாயிலிலோர் மூலையிற் போய்த்தாங்கள் கொண்ட வியாகூலத் தோடு மிருந்து (றசூல் நாயகத்தை) யென்று காண்பேனோவென்று முடியில் முடிவிலமைத்துமுதுமணி மாலையென்னு முனாஜாத்தொன் றைப் பாடிக்கொண்டிருந்து பொழுதஸ்தமித்தபோ தெழுந்து மகரி பும் ஹிஷாவுந் தொழுது விட்டுப்பு சிப்புக்கும் போகாமல் மிகவுங் கவலையாய் அன்று வெள்ளிக்கிழமை யிரவாதலால் ஹாஜத்து முதலான தொழுகைகளுந் தொழுது விட்டுப்படுத்து நித்திரை செய்யும்போது.

நபிநாயக முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் கனவில் ஹாலிறுகி உமறென்று பெயர்சொல்லி யழைத்து என்னுடைய சதக்கு உம்முடைய வுள்ளத்தையறியாம லுடுபாவலனையைக்கண்டு கோபமாகச் சொன்னதேயன்றி வேறில்லை நானவரிடத்திலும்மைக் குறித்துச் சொ ல்லுகிறேன் ஆதலாலநீர்சுபுகு தொழுதுவிட்டுமனம் நாணமல வரிடத்திற் போம் உம்மைச் சங்கை செய்து சீறாவுரை யெழுதித்தரு வார் பாடுமென்று சொல்லக் கேட்டுப் புலவரவர்க ளெழுந்து கண்ணை விழித்துப் பார்க்கும் போது உலகத்திற்றோற்று மொளிகள் யாவையு மொன்றுபடுத்தி யொப்பிட்டாலு மொவ்வாத பெரியவொளியென்று தோற்றக்கண்டு (திருவினுந்திருவாய்) என்ற வாக்கியத்தை முதலி லாரம்பித்துக் கடவுள் வாழ்த்தாகச் சில பாட்டுகளைப்பாடி யெழுதிக் கொண்டு சுபுகுந் தொழுதுவிட்டுச் சைகுசதக்கத்துல்லாவொலி சாகிப வர்கள் வீட்டிற்குப் போனார்கள்.

அங்கே, நபிநாயக முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள் ஷைகுசதக்கத்துல்லா சாகிபொலி யவர்கள் கனவில் ஹாலிறுய்ச் சத க்கே, நீயொன்னுமறினுள்ளம் என்னுட்டமுள்ளதென் றறியாமல், அவ ருடையைக் கண்டு கோபித்துப் பேசிவிட்டீர், அவர் காபிரீன்கள் இரா ஜரீகத்தி லிருந்தவராதலால், அந்தப்பாவனையாக வுடைதரித்திருக்கி றார், இனி யபபடி யிருக்கமாட்டார காலையிலும்மிடத்திற்கு வருவார் அதைக்குறித்து விபரிக்காமல் ஷறகைப்போதியும் அதுபோல் நடந்து

கொள்ளுவார், சீறாவையும் பாடுவாரென்று சொல்லிப் போயினார்கள், உடனே ஷைகு சதக்கத்துல்லா சாகிபொலியவர்கள் விழித்தெழுந்து தஜ்ஜத்தும் சுபுகுந்தொழு துவிட்டுப் புலவாவர்களின் வரவைப் பார்த்த கண்ணாக இருக்கையில், அவர்கள் வரக்கண் டிவர்களெழுந் தெதிர் சென்று வாரும் றசூலுல்லாவுடைய சிபாரிசுள்ள புலவரேயென்றழை த்து மாரியாதித், திருக்கச்செய்து, செய்தக்காதிர் மரைக்காயரையும் வரவழைத்து, மூன்றுபேர்களு மொன்றாயிருந் தொஜீபணித்து மனம கிழ்ச்சியா யிருக்கும்போது, ஷைகு சதக்கத்துல்லா சாகிபொலியவர் கள் உமறுப் புலவாவர்களைப் பார்த்து நீர் றசூல்நாயகத்தைக் கனவிற் கண்டெழுந்து பாடிய கடவுள் வாழ்த்தைப் படியுமென்று சொன்னார் கள். புலவாவர்கள் வெங்கலக் கோட்டையில் யானைமுழக்கும் சப்தம் போலே படித்தார்கள் அதுகேட்டுக் கூட இருந்தவர்கள் யாவரும் ஆன ந்த பாஸ்காரமுற்று மகிழ்ச்சிகொண்டார்கள்.

அப்போது ஷைகு சதக்கத்துல்லா சாகிபொலி யவர்கள் கனவில் நபிநயகமவர்கள் வந்து, தங்களுக்குச் சொன்ன யாவையுஞ் சொல்லிப் புலவாவர்களைப்பார்த்து, நாளின்றுமுதல் சீறாவுரையைத் தேடியெடுத் தெழுதித் தருகிறேனே போய்வாருமென்று நல்லவாக்கியஞ் சொல்லி யனுப்பினார்கள் அதுகேட்டுப், புலவாவர்கள் உரையை வாங்கிக்கொண் டு ஊருக்குப்போய் அங்கிருந்து பாடலாமென் றெண்ணமுற் றிருக் கும்போது, செய்தக்காதிர் மரைக்காய ரவர்கள்பேரில் ஒரு வாழ்த்தும் நானூறுகோவையும் பாடினார்கள், இதற்குள் மாதமுமாறுக்குமே லா யிற்று, அப்போதொருநாட் புலவாவர்களும், மரைக்காயரவர்களும் தெருவுத் திண்ணையிற் பேசிக்கொண் டிருக்கும்போது, அந்த வழி யாகச் சிலபெண்பிள்ளைகள் முக்காடிட்டுக் கூட்டமாகக்குடங்களிற்றண் ணீரெடுத்துக் கொண்டு போகிறதைக்கண்டு, அதிலொரு பெண்பிள்ளை யையுமறுப்புலவாவர்கள் மிகவுங் கூர்ப்பாகம் பார்த்தார்கள், அதுதெரி ந்து மரைக்காயரவர்கள் கவனித்துப் பார்த்துப். புலவாவர்கள் பெண் சாதி பிள்ளைகளைவிட்டுப்போட்டு இவ்விடத்திற்கு வந்து மாதம் ஆறுக் குமேலானதால் பெண்ணாட்ட முண்டாயிருக்கின்றதென் றெண்ணிப், புலவாவர்கள் கூர்க்கப்பார்த்தபெண்யாரென்று விசாரிக்கும்போதவள் ஓரேழையான கொடிக்காற் காரனுடைய பெண்சாதியென்று தெரிந்து அவனையழைத்து நீயென்னவேலையி லிருக்கிறாயென்று கேட்டதற்க வன், நாலுரூபாய்ச் சம்பளத்திற்குக் கொடிக்காலுக்குத் தண்ணீ ரிறை க்குகிறேனென்று சொன்னான்.

அவ்வூரிற், குடிபதியாகிய பிரஜைகளில் மிகுந்தகனதிதங்கியஅச
னயினு மரைக்காயரவர்களின் குமாரரான அபுல்காசீ மரைக் காயரவர்
கள், உமறுப்புலவரவர்களை மிகுந்த வார்மை சீர்மையோடு மரியாதித்
துத், தங்கள் வீட்டோடுமுள்ள வேரர் வீட்டையுங் காலியாக்கி யதிலி
ருக்கவைத்து, உண்டி தின்றிகளுந் தங்கள் புறத்தாலேயே பெரிய
அருமையோடு நடப்பித்து, மச்சான், மைத்துனனென்று முறையுஞ்
செப்பிச், செய்தக்காதிர் மரைக்காயரில் நின்று மதிகமான கிருபை நட்
போடு நடந்து வரச்சே புலவரவர்களுக்கு மனச்சந்தோஷம் பெரிதா
யுண்டாகி யொருநாள் அபுல்காசீ மரைக்காயரைப்பார்த்து மச்சான்
சீறாப்புராணத்தைப் படிக்கும்படிசெய்த செய்தக்காதிர் மரைக்காய
ரிறந்துபோனமையால் அப்புராணத்தைத் தங்கள் பேராலேதான் அர
ங்கேற்றிப் போடுகிறேனென்று மிகவு முறுதியாகச் சொன்னார்கள்
அதுகேட்டு, மரைக்கரயர் மனம் பெரியமகிழ்ச்சியாகித் தங்கள் பத்தினி
யாகிய சாப்பாகு பீவியவர்களிடத்தி லிந்தச்செய்தியைச் சொன்னார்கள்
அது கேட்டந்த பீவியவர்கள் புருஷனையகரைப்பார்த்து அல்லாகுத்
தஆலா இந்தப்பேறை நமக்குத் தந்ததே இம்மை மறுமைக்கும் போது
மான பறக்கத் தென்றுமிகுந்த சந்தோஷத்தோடுஞ் சொன்னார்கள்
புலவரவர்களும் சீறாப்புராணத்தைப் பாடிக்கொண்டு வந்தார்கள்.

இப்பாடலுடைய மதுரபாகத்தைச் சிலர்கள் கேட்டும், புறதேசங்
களுக்குப் போனபேது, அவரவர்களுக்குச் சொன்னதின் பேரில் கா
யற்பட்டணம், கீழக்கரை நாகூா, நாகப்பட்டண முதலிய வூர்களிலுள்ள
மரைக்காயர்கள் சீறாப்புராணத்தை யேந்துக் கொள்ள ரூபாய் லட்ச
மட்டிலுங் கொடுக்கிறதாய்ப் புலவரவர்களுக்கு காயிதங்களாலும்,
வாய்ச்சமா சாரங்களாலுந தெரிவித்தார்கள் அதை கேட்டுப் புலவரவர்
களொருநாள், அபுல்காசி மரைக்காயரோடு பள்ளிவாயிலில் அசறு தொ
ழுதுவிட்டு வரும்போது, அவர்களைப்பாாத்து மச்சான் நீங்களும் உபா
யமான பொருளை யுடையவாகள்,நானும் பலவிதத்திலும் வருத்தப்பட்ட
வனாக இருக்கிறேன் ஆதலால் இலட்சம் ரூபாய் மட்டிற்றந்து சீறாப்
புராணத்தை யேந்து கொள்ளுகிறதாய்ச் சில பிரபுக்களசொல்லுகிறார்
கள், நெருக்கிப் பிடிக்கிறகாலத்தி லின்னுங்கூட வரும்போலிருக்கிறது,
அதைவாங்கி யானுக் கரைவாசியாக எடுத்துக்கொள்வோமே யென்று
சொன்னார்கள். அதுகேட்டு அபுல்காசீ மரைக்காயரவர்கள் மனந்திடுக்
கிட்டு,முகம்வாடிப் புலவரவர்களுக்கு யாதொரு ஜவாபுஞ்சொல்லாமல்
வீட்டில்வந்து வியாகூலமாக இருநததைஅவாகளின் பத்தினியாகியசப்
பாகு பீவியவாகள்கண்டு ஏன முகம்வாடிப் பெரிய எண்ணமுற்றவர்க

ளா யிருக்கிறீர்களென்று கேட்டதற்கு மரைக்காயரவர்கள் புலவரவர்கள் சொன்ன செய்தியைச் சொன்னார்கள் அப்போதந்தக் கற்புநாயகியு மொருதிரமேங்கி நெஞ்சந் திடுக்கிட்டு அவர்கள் பாட்டவ்வளவுதா னுக்கு மென்று சொல்லிவிட்டுச் சஞ்சலமா யிருந்தார்கள்.

அன்றிராவிற் புலவரவர்கள் கனவில் றசூல்நாயகமவர்கள் ஹாசிருகி உமறேயிங்கே வாருமென் றழைத்துக் கையைப்பிடித்துக் கூட்டிக்கொண்டு கபறஸ்தா னிருக்கு மிடத்திற்குப்போய் அங்கேநாட்டியிருக்குமீசான்கற்களைகாட்டி இஃதென்னவென்று கேட்டதில்புலவரவர்கள் மீசான்கல்லென்று சொல்ல,அப்போது றசூல்நாயகமவர்கள் புலவரவர்களைப் பார்த்து, உமறே சீறுபாட வேண்டியவர் நீர் உமதுசொற்படிக்கு அதனை யேந்துக்கொள்ள வேண்டியவரென்பேர்கொண்ட அபுல்காசிம், இதை விட்டுப்போட்டு நீர் வேறெண்ணங்கொண்டால் இந்த மீசான்கற்களி லொன்றை யெடுத் துமது நெஞ்சி லூண்டப்படுமென்று சொல் லக்கேட்டுக் கண்விழித்துப் புலவரவர்கள் மனந்திடுக்கிட்டுப்பெரிய பயங்கரங்கொண்டு மறுபடி நித்திரையில்லாதிருந்து சுபுகு தொழுதுவிட்டு, அபுல்காசிமரைக்காயரவர்கள் வீட்டிற்கு வந்து, மரைக்காயரவர்களை மச்சானென் றழைத்து, அவர்களோடும் நபிநாயக முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களி னுத்திரவா யிருக்கிறது சீறாவையுங்கள்போரா லரங்கேற் றுகிறதற்கு, ஆதலால், அதற்காக வேண்டிய முயற்சியைச் செய்துக்கொள்ளுங்க ளென்றார்கள்.

அதுகேட்டு, மரைக்காயரவர்கள் இந்தவுலகத்திற் றங்க ளெப்போதுங்கொள்ளாத பெருமகிழ்ச்சி கொண்டவர்களாய்ச் சீரெலென் றுவீட்டிற்குட்போய்த், தங்கள் பெண்சாதியோடு மிச்செய்தியைச் சொன்ன மாத்திரத்தில்,அந்தக்கற்பு நாயகியவர்கள் திவ்வியமான தங்கள் வாயைத் திறந்து சுபுஹானல்லா ஆண்டவனே இந்த வெழைகளின்பேரில் நீ யிவ்வளவு கிருபை செய்தாயே புகழென்ற புகழெல்லா முனக்காயிருக்குமென்று அலலாகுத்த ஆலாவைப் புகழ்ந்து புருஷனையகரைப்பார்த்துச் சீக்கிரம் அதற் காகவேண்டிய முஸ்திபுகளைச்செய்து பாட்டை யரங்கேற்றுங்களென்று சொன்னார்கள் உடனே மரைக்காய ரவர்கள், ஆங்காங்கிருக்கு மினத்தார்கள் நேசர்கள் முதலிய யாவருக்குந் தெரிவித்துத், தங்கள் வீட்டிற்கு முன்னாலே தெருவிற் பெரிய பந்தற் போடுவித்து யாவரும், வந்தபிறகு நல்லசுபதினத்திற் சீறப்புராணத்தை யரங்கேற்றச் செய்ததிற்,பெண்கட்கென றேற்படுத்திய தானத்திற் பெண்களும்,

புருஷாட்களுக்கென் றேற்படுத்தியதானத்திற் புருஷாட்களு மிருந்து சந்தோஷமாகக் கேட்கும் போது, மரைக்காய ரவர்களின் பத்தினியாவர் கிய சப்பாகு பீவியவர்கள் தங்கள் வீட்டுச்சன்னலிலிருந்து, பார்த்துக்கொண்டிருந்து வணையிற்கிடந்த,காசிமென்னும் பேருடைய தங்கள் சிறுபிள்ளை கண்விழித் தசும்பினதுதெரிந் தப்பிள்ளையை யெடுத்து நெஞ்சோடணைத்துப் பாலூட்டும்போது (நபிநாயகமவர்கள் பிறந்த போது ஜிபுரீலலைகிஸ்ஸலா மவர்களெடுத்துக்கொண்டு போய்ச் சுவர்க்கத்தாற்றில் முழுகாட்டிச் செய்யுமுறைசெய்து, மறுபடியு மவர்களைக் கொண்டுவந்து ஆமினு அம்மாள் வீட்டில் இருந்த, அப்துற்றகுமானிபுனு அவ்பு அவர்களுடைய தாயாராகிய சப்பாகம்மாள்மடிவிபிற் போட்டார்க ளென்பதான பொருளடங்கிய பாட்டின் முடிவில் (சபாதிருமடிமிசை கொண்டார்) என்று வரும் போதுமரைக்காய ரவர்களின் பத்தினியவர்கள் பாட்டின்பேரிலேயே ஞாபகமா யிருந்ததாற் றங்கள் பிள்ளைக்குப் பால் புரைக்கேறப்பட்டு மவுத்தாயிற்று.

அப்போதந்தப், பத்தினியவர்கள், இப்போது பிள்ளைமவுத் தைக் குறித்து வெளிப்படுத்தினால் சபைகலைந்து,புலவர்களுக்குக் கிடைக்கிற வெகுமதிகளுக்குத் தடையுண்டாகுமென்று நினைத்துப் பிள்ளையை யேணையிற் றானேபோட் டாட்டிவிட்டுப் பாட்டுக்கேட்கிறவர்களாயிருந்தார்கள் பின்னர், சீறாப்புராண மரங்கேற்றி முடிந்தபோது, ஆங்காங்கிருந்துவந்த பிரபுக்கள், மரைக்காமார்கள் தங்கள் தங்களுக் கேன்றமட்டிலும் புலவர்களுக்குக் கலைநிதி மணி முதலான வெகுமதிகள் கொடுத்தார்கள் அபுல்காசீ மரைக்காயரவர்கள் தங்களிடத்தில் ரொக்க ஆஸ்தியாயிருந்த இரண்டாயிரம் ரூபாயும், தங்கள் பெண்சாதி யவர்களுடைய வுடமைகளிற் காதிலுள்ள மணியலுக்குத்தும், தாலியும் தவிர மற்றவுடமைகள்யாவுஞ் சுமார் இரண்டாயிரம் ரூபாய்பெறுமதி யானவைகளையு மெடுத்தோர் தாம்பாளத்தில்வைத்துச் சோடசகலைகளோடுங் கொண்டு வந்து புலவரவர்களுக்கு நசர்கொடுத்தார்கள், அதைக்கண்டு. புலவரவர்கள் யோசித்து அந்த நகைகள் முழுமையுந் தங்கள் கைபிலெடுத்து, அபுல்காசீ மரைக்காயரவர்களை மச்சானென்றழைத்து,அவர்களோடும் எங்கள் தங்கச்சியையுங்களுக்குக் கலியாணஞ்செய்து தந்தபோது, நகைகள் நாங்கள் போடவில்லை யாதலா லிப்போதிந்த நகைகளைத் தங்கச்சிக்குக் கொண்டுபோய்ப் போடுங்களென்று சொல்லிக் கொடுத்து விட்

டுப், பணத்தைமாத்திர மெடுத்துக்கொண்டார்கள், அதன்பின்னர், பிள்ளை மவுத்தான செய்தியைச் சப்பாகுபீவியவர்கள் தங்கள் புருஷனு யகாகிய அபுல்காசிமரைக்காயாவர்களுக்குத் தெரியப்படுத்தினார்கள் அவர்கள் சபையோர்களுக்கெல்லாம் தெரியப்படுத்திப் பிள்ளையை நல்ல செய்தார்கள்.

இவ்விதத்தில், உமறுப்புலவாவர்கள் சீறாப்புராணத்தை யரங்கேற் றினதின்பின்னர் மேற்சொன்ன எட்டைபுரத்திற்போயிருந்து மவுத் தாகி அந்த எட்டையா புரத்தின் தெற்குக் கோட்டைவாயிலிலடக்கப் பட்டிருக்கிறார்கள், அதற்காக இராஜனேற் படித்தியபடி செலவுசெய்து வருஷாவருஷந்தோறு மகாசிறப்பாக ஹ—சுறுசு நடப்பித்து கந்தூரி யுஞ் செய்து வருகின்றார்கள் இதுநிற்க.

இன்னு மரைக்காயாவர்களுடைய மற்றப் பிள்ளைகளின் வழிபாக வந்த பேரன்மார்களில் ஒலிசாகிபென்னும் பெயருடையவர்களிடத்தி லிருந்த அரங்கேற்றிய சீறாப்புராணப் புத்தகத்தைக் கொண்டுதான் செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம், ஹதாயிது, காத்திபு, ஹாஜி, மஷாயிகுப் புலவாவர்கள் அச்சிட்டு, அதற்காக ஓர்கவிதையும் பரிசோதித்ததற்காக வோர்கவிதையும் பாடி முதலில் அச்சிட்டிருக்கின் றார்கள் அவ்விரண்டு பாட்டிற்கு மிப்பதிப்பிற் பொருளோடும் போடப் பட்டிருக்கின்றன.

இச்சரித்திரத்தோடு மின்னு மனேக புலவோர்களு டைய சரித்திரங்களையு மொரே சேகரமாகப் புலவோர்கள் சரித்திரத் திரட்டென்று பெயர்கொடுத் தச்சிட முயன் றிருக்கின்றனம். அந்தப்புத்தகத்தில் நமக்குச் சரித்திரங் கிடைத்த வரலாற்றைத் துலக்கமாகச் சொல்லப்படும் அவை கள் நிறைவேறும்படி எமதுடற் பிறந்தான் மார்களாகிய மூமின் முசிலிம்கள் யாவருந்துஆச் செய்வீர்களாக, ஆமீன் ஆமீன் யாறப்பல் ஆலமீன்.

இங்ஙனம்.

காதிரி-சென்னை புத்தகபரிபாலனத்தலைவர்

காதிரி-கண்ணகுமது மகுதூமுகம்மது ப்புலவர்.

---

முன்னர்- ஹிஜ்றத்து-1258ம்-ஹூ புலவர்-நாயகம்.

ஷெய்கப்துல்காதிர் நயினார்லெப்பை

யாலிம்புலவரவர்கள்

; து
ாவர்
இத்
கள்

# விளம்பரம்.

——[*]——

இத்திருத்தலிற் சிலசிலவிடத்திற் சிலவினைகளின் ஆக்கமாகத் தோற்றிய வெழுத்துக்களையும், சில பொருட்பெயர், உரிப்பெயர்கள் திரிவுபட்டும், அங்ஙனந் தோன்றிய வெழுத்துக்களையும், முன்னோர்க ளாற் செய்யப்பட்ட செய்யுட்க ளிடத்தின் எதுகைத் தொடையாகக் கிடந்தமையி யானும், பகுதி வேறுதல் விதியாதலானுந், தென்பாண்டி நாட்டார் வழக்கத்தானும் எடுத்துக் காட்டிலம்-இப்புத்தகங்களைக் கனம்பெற வுவந்து காணிக்கை வைத்துக் கையாட்சி கொள்பவர்கள்- இங்ஙனந் திருத்திய முறைபோல வேண்டாது கிடந்த வொற்றுக்களை யும், கோட்டினும், உயிர்மெய்யினும்போந்த சுழிகளையும், மேல்கீழ் விலங்குகளையும், உயிர்மெய்யெழுத்துக்களையும் கூரிய கருவியி னுனி யானீக்கிக் கோடலும், அன்றியுமிவைகள்வேண்டு மிடங்களின் மை தோய்ந்த துகிலிகை நுனியால் அமைத்துக் கோடலும் யாம்விரும்பு கின்றனம், இவற்றை நன்குணர்ந்துகொள்க.

இஃதுணர்த்து முற்பதிப்பி லச்சுமாறுட்டமாய்க் கிடந்த சில வொற்றுகளை, இப்பதிப்பிற் றிருத்தப்பட்டனவென்று முகப்பிலுமெ ழுதி யிருக்கின்றன-இவற்றை யாவருமுற்றுணர்ந் தறிகயாம் விரும்பு கின்றனம்-அல்லாகுத் தஆலா எல்லாருக்குங் கிருபை றகுமத்துச்செய் வானாகவும்? ஆமீன்-ஆமீன்-யாறப்பல்- ஆலமீன்.

——[*]——